உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முதல் திருமுறை



தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

**திருஞானசம்பந்த சுவாமிகள்**

அருளிச்செய்த

**தேவாரத் திருப்பதிகங்கள்**

# முதல் திருமுறை

**(பண் முறை)**

*பதிப்பாசிரியர்*

**டாக்டர் இராச. வசந்தகுமார்**

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்

Enable | Enlighten | Enrich

KARPAGAM UNIVERSITY

(Under Section 3 of UGC Act 1956)

பன்னிரு திருமுறை ஆய்வுமையம்

**கற்பகம் பல்கலைக்கழகம்**

ஈச்சநாரி, கோவை-21.

பொருளடக்கம்

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த

தேவாரத் திருப்பதிகங்கள்

# முதல் திருமுறை

**(பண் முறை)**





## பதிப்புரை

“தோடுடைய செவியன் பதிகத்திலிருந்து தொடங்கி, தோடு, கூற்று, பித்தா, வேயுறு தோளிபங்கன் என்று பல பதிகங்களைப் பல நாள் பாராயணம் செய்தும் எந்தப்பயனும் கிடைக்கவில்லை. இது ஒரு பயனற்ற செயலோ?” என்று பல நண்பர்கள் என்னை வினவினார்கள். “என்னுடைய அனுபவம் எப்படி இருக்கிறது” என்று கேட்டார்கள். அவர்களுக்குச் சொன்ன பதிலை உங்களோடு பகிர்ந்துகொள்கிறேன். 1990ஆம் ஆண்டு ஜூன் மாதம் முதல் வாரத்தில் அந்நாள் கௌமார மகா சன்னிதானம் சுந்தர சுவாமிகள் அடியேனை திருப்பெருந்துறை குடமுழுக்கு விழாவிற்கு அழைத்துக்கொண்டு சென்று இரண்டு நாட்கள் அவரோடு இருக்கச்செய்து அன்றைய நாள் திருவாசக முற்றோதல் நிகழ்ச்சியில் கலந்துகொள்ளச் செய்தார்கள். “நமச்சிவாய வாழ்க” என்று நான் அன்றுதான் சொன்னேன். “திருச்சிற்றம்பலம்” என்ற சொல்லை என்னுடைய 33 வயதில் அன்றுதான் உச்சரித்தேன். “பாலனாய்க் கழிந்தநாளும்” என்ற அப்பர் சுவாமிகள் பதிகத்துக்கு ஏற்ப இவ்வளவு ஆண்டுகள் போய்விட்டனவே என்று கவலையுற்று என் துணைவியாருடன் கோவில் மகாமண்டபத்திலேயே தூங்கிவிட்டேன். அன்று இரவு எனக்கு இறைவன் உறக்கத்திலேயே தீட்சை கொடுத்துவிட்டாரோ என்று தோன்றுகிறது. ஆனால் அதை அவர் உணர்த்தவில்லை. என்னால் இன்றுவரை அதை உறுதி செய்யவும் முடியவில்லை.

இளம் வயதிலிருந்தே சுவாமி கும்பிடும் வழக்கங்களெல்லாம் இருந்தன. ஆனால் அடியேனை ஆழ்ந்த சைவனாக்கியது அந்த இரவுதான். அதற்குப்பின் ஏராளமான சாத்திர, தோத்திர, புராண, இதிகாச நூல்களைப் படித்துணரும் வாய்ப்பை இறைவன் வழங்கினான். இன்றும் தினமும் ஒன்று இரண்டு மணி நேரங்களைத் திருமுறைகளுக்காக ஒதுக்குகிறேன். இதைச் சற்றுக் கூட்டிக்கொடுக்கும்படி அவரிடம் கேட்டுள்ளேன். விரைவில் திருவருள் கூடும்.

சைவ சித்தாந்த சாத்திர நுட்பங்களின்படி நாமெல்லாம் உயிர்கள். என்றும் உள்ளவர்கள். உடலாகிய சட்டை, காலம் முடிந்தவுடன் அழிந்துவிடும். வாழ்வாவது மாயம். இது மண்ணாவது திண்ணம் என்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் வாக்குப்படி இந்த உயிர் மறுபடியும் மறுபடியும் பிறப்பெடுத்துக் கொண்டே இருக்கும். கடற்கரை மணலின் துகள்களைக்கூட எண்ணிவிடலாம். ஆனால் நமது பிறவிகளை எண்ணவே முடியாது.

“நூறுகோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறுகோடி நாராயணர் அங்ஙனே
ஏறுகங்கை மணல் எண்ணில் இந்திரர்
ஈறுஇல்லாதவன் ஈசன் ஒருவனே” என்பது அப்பர் வாக்கு.

ஒவ்வொரு உயிருக்கும் ஒரு குறுந்தகடு உண்டு. கயிலாய மலையில் மிகப்பெரிய கணினி உள்ளது. அந்தக் குறுந்தகட்டில் ஒவ்வொரு உயிரின் நற்செயல்கள் வரவாகவும், தீச்செயல்கள் செலவாகவும் பதியப்படும். ஒவ்வொரு பிறவி முடிந்ததும் அந்தக் குறுந்தகடு நன்மை செய்திருந்தால் அதிக நன்மை தரும் சுக்கிரன், குரு போன்ற கிரகங்களுடன் சொர்க்கத்துக்குச் செல்லும். அதிக தீமை செய்த உயிரின் குறுந்தகடு இராகு, கேது, சனி போன்ற கோள்களிடம் சென்று நரகத்துக்கு சென்றுவிடும். வினைகளை அனுபவித்து முடித்தபின் எழுவகைப் பிறவிகள் (ஏழு பிறவிகள் அல்ல), நால்வகைத் தோற்றம், 84 லட்சம் யோனி பேதங்கள் என்ற அடிப்படையில் மறுபடியும் ஆணாகவோ, பெண்ணாகவோ, உயர்திணையாகவோ, அஃறிணையாகவோ, தேவராகவோ சுழற்சியாகப் பிறப்பெடுக்கும். உயிரின் தன்மையைப் பொறுத்து உடலிலிருந்து உயிரை எமனோ, எமன் தூதர்களோ கவர்ந்து செல்வார்கள். ஆனால் மறுபிறப்பு என்பதை அந்தத் தூதுவர்கள் செய்யமாட்டார்கள். சைவ சித்தாந்தத்தில் சொல்லப்படும் பஞ்சாக்கினி வித்தை எனப்படும் விண், முகில், தாவரம், ஆண், பெண் என்ற முறையமைப்பு அந்தக் காரியத்தைச் செய்யும். இந்தப் பிறப்பிறப்பு முறை சாதாரண உயிர்களுக்குத்தான் பொருந்தும். அடியார்களுக்கு இது பொருந்தாது.

பல பிறவிகளில் திருநீறு பூசி, திருஉருத்திராக்கம் அணிந்து, ஐந்தெழுத்தோதி, சிவனையே வழிபடும் (மற்றொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாது) அடியார்களிடம் எமதூதர்கள் வரவேமாட்டார்கள். அவர்கள் உயிரைக் கவரச் சிவகணங்கள்தாம் வருவர். சொர்க்கம், நரகம் இவற்றுக்குப் புறவழிச்சாலை ஒன்று உண்டு. அந்தக் கணங்கள் அந்த அடியாரை நேராக அவர் உலகத்துக்கு அந்த புறவழிச்சாலை வழியாக அழைத்துச் சென்று விடுவர். இவர்கள் நல்வினை, தீவினையென்ற இரண்டையும் கடந்து இருவினை ஒப்பு அடைந்து சத்திநிபாதத்துக்காகக் காத்து நிற்பவர்கள்.

எனவே ஒரு பிறவியில் 30/40 ஆண்டுகள் பல வழிகளில் அக, புறப்பூசனைகள் செய்து ஏராளமான சிவத்தொண்டு புரிந்திருந்தாலும் ஊழ்வினை மிக முற்றி வரும் நிலையில் பலமான தாக்கம் இல்லாவிட்டாலும் சற்று லேசான தாக்கம் இருக்கவே செய்யும். வினைப்பயன் + பதிகப்பயன் இரண்டையும் கூட்டித்தான் பலன் காணவேண்டும். முற்பிறவியில் மிகக்குறைவாகத் தீவினைபுரிந்த உயிருக்குப் பதிகப்பயன் மிக வேகமாகக் கிடைக்கும். முற்பிறவிகளில் வல்வினை புரிந்திருந்தால் பதிகம் மெதுவாகத் தான் வேலை செய்யும். ஆனாலும் இழப்புகளைத் தவிர்க்கும். பல்லூழிக்காலம் பயின்று அரனை அர்ச்சிக்கில் நல்லறிவு சற்றே நகும்.

| | | |
|---|---|---|
| பதிகப்பயன் | – | என்றும் நிரந்தரமானது. நன்மைபயப்பது (Constant) |
| வினைப்பயன் | – | அவரவர் வினைக்கேற்ப மாறக்கூடியது (Variable)<br>(நன்மை, தீமை இரண்டையும் பயக்கும்) |

மேற்காண் சமன்பாட்டின் படி பதிகப்பயன் நிரந்தரமாக இருந்த போதிலும் வினைப்பயன் அவரவர் வினைக்கேற்ப மாறுபடுவதால் உயிரின் மொத்தப்பயனும் மாறுபடுகிறது.

| | | |
|---|---|---|
| பதிகப்பயன் + நல்வினைப்பயன் | – | உயிருக்கும் மிக நல்ல மொத்தப்பயன் |
| பதிகப்பயன் + தீவினைப்பயன் | – | உயிருக்கும் குறைந்த பலன் அல்லது தீவினைத் தாக்கத்திலிருந்து சற்று விடுதலை |
| பதிகமே இல்லாத நல்வினைப்பயன் | – | நல்ல பலன் |
| பதிகமே இல்லாத தீவினைப்பயன் | – | மிகப்பெரிய கெடுதல் |

நமது வினை நல்வினை அல்லது தீவினை என்று நமக்கு முன்கூட்டியே தெரியாது. அனுபவித்துத்தான் தெரிந்துகொள்ள வேண்டும்.

நல்வினை – பொன்விலங்கு ; தீவினை – இரும்பு விலங்கு ; விலங்கு விலங்குதான், எனவே இரண்டையும் தவிர்க்க வேண்டும்.

மேற்கண்ட விவரங்களை எல்லாம் அடியேனுடைய நண்பர்களோடு, பகிர்ந்துவிட்டு எனது கோள்நிலை நன்றாக இருக்கும் காலங்களில் சரியான பதிகத்தைத் தேர்ந்தெடுத்து பதிக ஆசிரியர் சொன்னபடி பாராயணம் செய்து ஏராளமான பயன்களையும் பெற்றிருக்கிறேன்.

“வேந்தராய் உலகாள விருப்புறின்
பூந்தராய் நகர் மேயவன் பொற்கழல்
நீதியால் நினைந்தேத்தி உள்கிடச்
சாதியா வினையானதானே”

என்ற திருஞானசம்பந்தரின், "தக்கன் வேள்வி தகர்த்தவன்" எனத் தொடங்குகின்ற திருப்பதிகத்தைப் படித்து வேந்தராகி உள்ளேன்.

"வாசிதீரவே காசுநல்குவீர்
மாசின் மிழலையீர் ஏசல் இல்லையே"

என்ற திருவீழிமிழலைப் பதிகத்தை மனனம் செய்து சுவாமியிடம் ஏராளமான பொருள் பெற்று அக்கோயிலுக்கு இரண்டு கும்பாபிடேகம் செய்துவிட்டேன். வீழிக்கும், காழிக்கும் உள்ள விமானத் தொடர்பு கருதி இரண்டாவது கும்பாபிடேகத்துக்கு, அவர் விமானத்துக்குப் பித்தளைத்தகடு சாற்றி உள்ளேன். மூன்றாவது கும்பாபிடேகத்துக்குப் பொற்தகடு கேட்டுள்ளேன். அவரிடம் பொருள் பெற்றுப் பல கல்வி நிறுவனங்களையும், தொழிற்சாலைகளையும் நிறுவி 1500 பேருக்கு வேலைவாய்ப்புக் கொடுத்துள்ளேன். வருமானத்தில் 5 விழுக்காடும், 24 மணிநேர காலத்தில் 15 விழுக்காடும் அவருக்காக ஒதுக்கியுள்ளேன். முழுப் பொருளும், முழுநேரமும் அவருடையதே. அதைச்சற்று உணர்ந்தபோதும் முழுதாக உணர்ந்து முழுமையாக அமலாக்கத் திருவருள் கூட்டவில்லை.

''பிணக்கில்லாத பெருந்துறைப் பெம்மான்'' என்ற மணிவாசகரின் பதிகம் எனக்கு முழுதும் மனப்பாடம். அதைப்பாடியே திருக்கழுக்குன்றம் குடமுழுக்குச் செய்தேன்.

தற்போது இராமேசுவரப் பதிகம் மனனம் செய்துகொண்டு வடக்கு இராஜகோபுரத் திருப்பணியை திருமாலின் சார்பாகச் செய்துகொண்டிருக்கிறேன்.

"வேயுறு தோளிபங்கன்" பதிகம் படித்துவிட்டு நானும் எனது துணைவியாரும் பல பாழடைந்த கற்கோயில் கருவறைக்குள் வீற்றிருந்த சுயம்பு என்று சொல்லப்பட்ட இலிங்கங்களை வெளியே எடுத்துப் பாலாலயம் செய்துவிட்டுத் திருப்பணி செய்து குடமுழுக்குக் கண்டுள்ளோம். அவ்வளவு தூரம் பாழடையாத கோயில்களில் சுவாமியை மூலாலயத்திலேயே மீண்டும் எழுந்தருளச்செய்து திருமஞ்சன நீராட்டி, 108, 1008 வில்வங்களால் அர்ச்சனை புரிந்துள்ளோம்.

இவையெல்லாம் பதிகங்களின் வலிமையாலும் சற்றுக் குறைந்த ஊழாலும் நிகழ்ந்தன. அடியேனின் வல்வினை குறிப்பிட்ட கோள்களால் வலுப்பெற்ற நிலையில் மந்திரமும், தந்திரமும், மருந்துமாகித் தீரா நோய்த்தீர்த்தருள வல்லான் பதிகமானாலும் சரி, அவ்வினைக் கிவ்வினை ஆனாலும் சரி, துணிவளர் திங்களாகிலும் சரி, முழுமையான பயனைக் கொடுக்க முடியாமல் துன்பப்பட்ட அனுபவமும் உண்டு.

மணிக்கு 20 இருமல் வருவதற்குப் பதில் 10 வரும். அறுவைச் சிகிச்சைக்குப் பதில் மருத்துவத்தில் குணமாகலாம். 10 நாட்களுக்குப்பதில் 5 நாட்களாவது மருத்துவமனையில் இருக்கவேண்டியது வரும். முற்றிலுமாகத் தவிர்க்க முடியவில்லை. மிகக்கடுமையாக 60 நாட்கள் உழைத்து நூலைத் தயாரித்துக் கருத்தரங்குத் தேதியை ஆவலோடு நோக்கும் சில நாட்களில் வல்வினையின் காரணத்தால் அதிலேயே

கலந்துகொள்ள முடியாத சூழ்நிலை ஏற்படுகிறது. பல ஊர்களிலிருந்து திருக்கோயில் புனரமைப்புக்காக வந்திருக்கும் அடியார்களைக் காண்பதற்கும், யோசனைகள் சொல்வதற்கும், பொருளுதவி செய்வதற்கும்கூட அந்த வல்வினை விடுவதில்லை. இவை போன்ற கடின நிலையில் தான் நமது தவ வலிமை போதவில்லை. நம் கோப்பு முதல்வரிடம் போய்ச்சேரவில்லை. இதிலிருந்து விடுபடுவது எப்படி?

"வாளால் மகவரிந்து ஊட்டமுடியுமா?
மாது சொன்ன சூளால் இளமை துறக்க முடியுமா?
நாளாறில் கண்ணிடந்து அப்ப முடியுமா?
நான் இனிச் சென்று ஆளாவது எப்படியோ?
திருக்காளத்தியப்பனுக்கே"

என்ற பட்டினத்தடிகள் பாடல் நினைவுக்கு வந்தது. இம்மை, மறுமை இன்ப, துன்பங்களைப் பற்றிப் பெரிதாக நினைக்காமல் பெருவாழ்வுக்கு முயல வேண்டும்.

**முதலாவதாக நமது நோக்கம்** – வீடுபேறு

**குறிக்கோள்**

1. எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை.
2. பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும் மாதொர் பாகன் மலர்த்தாள் மறப்பிலாமை.
3. யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொர் பாகனார் தாம் வருவார்.

**அடையும் வழிகள்**

1. இக்காலத்தில் 21–ஆம் நூற்றாண்டில் சிவபூசை செய்து சிவனடியை அடைவதற்குரிய வழியைத் தவிர மற்ற வழிகள் மிகவும் கடினமானவை.
2. அடியேனும், துணைவியாரும், திருமகனாரும் தெய்வத்திரு ஆடலரசு அவர்களிடம் சமய விசேட தீக்கைகள் பெற்று மூர்த்தி தாபித அபிடேகங்கள் முறையாகச் செய்து 1008 மலர்களால் தினமும் அர்ச்சனை செய்து வருகிறோம்.
3. எரியோம்புதலுடன் கூடிய நிர்வாண தீக்கைக்குரிய நன்னாள் சிவபெருமானிடமிருந்து என்று வரும் என்று காத்துக் கொண்டிருக்கிறோம்.
4. மாதந்தோறும் முதல் வாரத்தில் சில அடியார்களை அணுகி உதவிபெற்று ரூ.300லிருந்து ரூ.1000/– வரை சுமார் 70 கோயில்களுக்கு நித்திய பூசைகளுக்கு அனுப்பி வருகிறோம்.

5. பாழடைந்த சிவாலயங்களைப் புதுப்பித்து, குடமுழுக்குச் செய்து நித்திய வழிபாட்டிற்கு உதவி வருகிறோம்.

6. சாத்திர தோத்திர நூல்களை வெளியிட உதவி செய்கிறோம்.

7. இரு மாதங்களுக்கு ஒருமுறை ஒரு வழிபாட்டுக் கருத்தரங்கம் நடத்தி உரிய நூலை வெளியிட்டு இரண்டு நாள் கருத்தரங்கம் பல ஆண்டுகளாக நடத்தி வருகிறோம். இந்தப் பணியில் நமக்குப் பெரிய ஊக்கம் கொடுக்கும் பெரியவர் மயிலம் அய்யா மகாவித்துவான் அவர்கள். 87 ஆண்டுகள் ஆன பின்பும் தளராமல் தனி மனிதனாகச் சிவபெருமான் உதவியோடு சென்னையிலிருந்து புகைவண்டி ஏறிவந்து 2 மணிநேரம் பேசச்சொன்னால் 3 மணி நேரம் பேசும் அவரின் பாதங்களைக் கண்ணீரால் கழுவுவதைவிட வேறு நன்றி சொல்லமுடியவில்லை.

எனக்கு மட்டும் அவரிடமும், முதுமுனைவர் சென்னியப்பனாரிடமும் படிக்கும் மாணவன் என்ற பாக்கியத்தைக் கொடுத்திருந்தால் நான் இன்னும் பெரும்பேறு பெற்றிருப்பேன்.

அவரோடு இணைந்து தொடக்க ஆட்டக்காரராகத் தம்மைச் சரி செய்துகொண்டு அவையை அலங்கரிக்கும் ம.வே. பசுபதி, நிறைகுடம் குஞ்சிதபாதம், சென்னியப்பனார், பொற்கிழிக்கவிஞர் சொ.சொ.மீ. சுந்தரம், சிவ. காந்தி, புரிசை. நடராசன் போன்ற அடியார் பெருமக்கள் ஆற்றிவரும் அருந்தொண்டுக்கு இணையேது?

இப்பணியில் தொடர்ச்சியாகப் பல கருத்தரங்குகளைப் பல ஆண்டுகள் நிகழ்த்தியிருந்தாலும் தொடர்ந்து ‘இரண்டு ஆண்டுகள் திருமுறையே நடத்துக‘ என்று திருவருள் ஆணையிட இக்கருத்தரங்கம் வருகின்ற டிசம்பர் 27, 28 தேதிகளில் பிற்கண்ட அட்டவணைப்படி நடைபெறும்.

அடியார்கள் பெருமக்கள் கலந்து கொண்டு உய்தி பெற

அன்புடன் அழைக்கும்...

அன்பன்

**டாக்டர் இராச. வசந்தகுமார்**

வேந்தர், கற்பகம் பல்கலைக்கழகம்.

கோயமுத்தூர் – 21.

2014 - டிசம்பர் மாத வழிபாட்டுக் கருத்தரங்கு

# நிகழ்ச்சி நிரல்

| வ.எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வுப்பொருள் |
|---|---|---|---|
| 1. | 27.12.2014 சனிக்கிழமை காலை 9.00 மணி - 11.00 மணி | மகாவித்துவான் மயிலம் **வே.சிவசுப்பிரமணியம்** அவர்கள் | முதல் திருமுறையில் நட்டபாடையில் உள்ள 22 திருப்பதிகங்கள் |
| 2. | 27.12.2014 சனிக்கிழமை காலை 11.00 மணி - நண்பகல் 01.00 மணி | பேராசிரியர் **ம.வே. பசுபதி** அவர்கள் | முதல் திருமுறையில் தக்கராகப் பண்ணில் 24 பதிகங்கள் |
| 3. | 27.12.2014 சனிக்கிழமை நண்பகல் 02.00 மணி - 4.00 மணி | பேராசிரியர் **புரிசை நடராசன்** அவர்கள் | முதல் திருமுறையில் பழந்தக்கராகப் பண்ணில் 16 பதிகங்கள் |
| 4. | 27.12.2014 சனிக்கிழமை மாலை 4.00 மணி - 07.00 மணி | முனைவர் **கோ.ப.நல்லசிவம்** அவர்கள் | முதல் திருமுறைப் பண்களான நட்டபாடை, தக்கராகம், பழந்தக்கராகம், குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி - ஒவ்வொன்றாக அரை மணி நேரம். தக்கேசி, மேகராகக் குறிஞ்சி இரண்டுக்கும் சேர்த்து அரை மணி நேரம். முதல் திருமுறை இன்னிசை பக்க வாத்தியங்களுடன் |
| 5. | 28.12.2014 ஞாயிற்றுக்கிழமை காலை 9.00 மணி - 11.00 மணி | சைவத்திரு. **சிவ. காந்தி** அவர்கள் | முதல் திருமுறையில் குறிஞ்சிப் பண்ணில் 29 பதிகங்கள் |
| 6. | 28.12.2014 ஞாயிற்றுக்கிழமை காலை 11.00 மணி - நண்பகல் 01.00 மணி | **திரு.சு. குஞ்சிதபாதம்** அவர்கள் | முதல் திருமுறையில் வியாழக்குறிஞ்சியில் 25 பதிகங்கள் |

| வ.எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வுப்பொருள் |
|---|---|---|---|
| 7. | 28.12.2014<br>ஞாயிற்றுக்கிழமை<br>நண்பகல் 02.00 மணி-<br>மாலை 04.00 மணி | முதுமுனைவர்<br>**ந. இரா. சென்னியப்பனார்**<br>அவர்கள் | முதல் திருமுறையில்<br>தக்கேசி - 12,<br>மேகராகக் குறிஞ்சி-7<br>பதிகங்கள் |
| 8. | 28.12.2014<br>ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 04.00 மணி -<br>07.00 மணி | பொள்ளாச்சி<br>**கதிரேசன்**<br>அவர்கள் | நாதஸ்வரம், தவில்<br>மற்றும் வாத்தியங்கள்<br>மட்டும்<br>வைத்துக் கொண்டு<br>முதல் திருமுறை |

# முதல் திருமுறைக்கு இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்

| வ. எண் | ஆண்டு | நூலின் பெயர் | வெளியீட்டாளர் / பதிப்பகத்தார் / அச்சகம் | ஆசிரியர் | கொடையாளர் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | 1864 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | அப்பாவுப்பிள்ளை நமச்சிவாய முதலியார் | திருவாவடுதுறை ஆதினப் பிரதிகள், தேசிகர்கள் எழுதிய ஓலைச்சுவடிகள் ஆதாரம் |
| 2. | 1866 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | ஏழு திருமுறை களாகப் பண்முறையில் வெளியிடப் பட்டது |
| 3. | 1876 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | மறுபதிப்பு |
| 4. | 1881 | தலமுறைத் தேவாரம் | மதுரை இராமசாமிப்பிள்ளை, சென்னை புஷ்பரத செட்டியார் அச்சுக்கூடம் | துறைசை ஆதீன அப்பு ஓதுவார் | பனசை காசிவாசி சீர்வளர்சீர் இராமலிங்கசாமிகள் | மதுரை, துறைசை ஆதீனப் பிரதிகள் ஒப்பு |
| 5. | 1894 | தலமுறைத் தேவாரம் | திருமயிலை செந்தில்வேல் முதலியார் சென்னை விக்டோரியா ஜுபிலி அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் காசிவாசி சீர்வளர்சீர் சாமிநாத சாமிகள் | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 6. | 1898 | பண்முறைத் தேவார அடங்கல் | சண்முகமுதலியார் சென்னை ஆறுமுகவிலாச அச்சுக்கூடம் | வேங்கட நாயுடு | | மூன்றாம் முறை மறுபதிப்பு |
| 7. | 1905 | தலமுறைத் தேவாரம் | சென்னை கலாரத் நாகர அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் காசிவாசி சீர்வளர்சீர் ஸ்ரீமத் சாமிநாத சாமிகள் | |
| 8. | 1906 | பண்முறை தேவார அடங்கல் | எஸ்.பி இராஜாராம், ஸன் ஆப் இந்தியா அச்சகம், சென்னை | திருமயிலை வித்வான் சண்முகம் | | மறுபதிப்பு |
| 9. | 1907 | தேவாரம் | பங்காளம் அப்புபிள்ளை சென்னை நேஷனல் அச்சுக்கூடம் | | | |
| 10. | 1917 | பண்முறை - தேவார அடங்கல் | நமச்சிவாய முதலியார் நிரஞ்சன விலாஸ் அச்சகம், சென்னை | | | மறுபதிப்பு |
| 11. | 1911 | தலைமுறை - மூவர் தேவாரம் | யாழ்ப்பாண வண்ணைநகர்ச் சுவாமிநாத பண்டிதர், சென்னை வித்தியா நுட்பாலன அச்சுக்கூடம் | | | |
| 12. | 1927 | திருஞானசம்பந்தர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| 13. | 1929 – 31 | திருஞானசம்பந்தர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| | | தேவார வேதசாரம் | | செந்தில்நாதய்யர், இலங்கை | | |
| 13-A. | 1931 | திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரத்திருப்பதிகங்கள் 1,2,3 திருமுறைகள் | சைவசித்தாந்த மகாசமாஜம் இலங்கை | | | முதல்பதிப்பு 1931 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 14. | 1953 | திருஞான சம்பந்தர் முதல் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் தருமபுரம், | தண்டபாணி தேசிகர் குருசாமி தேசிகர் | தருமையாதீனம் 26வது குருமகா சன்னிதானம் | பொழிப்புரை, விளக்கக் குறிப்புரை களுடன் |
| 15. | 1961 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 16. | 1968 | மூவர்தேவாரம் (தலமுறை) | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 17. | 1971 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | இரண்டாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 18. | 1972 | பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு தொகுதிகள்) | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் (காசித் திருமட நிதிய வெளியீடு) | வித்துவான க.வெள்ளை வாரணா் | | 2412 பக்கங்கள் கொண்ட பெரிய வரலாற்று நூல் |
| 19. | 1979 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூன்றாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 20. | 1982 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | நான்காம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 21. | 1992 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | ஐந்தாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 22. | 1995 | தேவாரம் முதல் திருமுறை | திருவாவடுதுறை ஆதீனம் | குறிப்புரை – புலவர் ஆதி முருகவேள் | 23-ஆவது சன்னிதானம் சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டார சந்நிதி | |
| 23. | 1996 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | ஆறாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 24. | 1997 | மறுபதிப்பு<br>திருஞான சம்பந்தர்<br>முதல் திருமுறை | ஞானசம்பந்தம்<br>பதிப்பகம், தருமபுரம்,<br>காந்தளகம்,<br>சென்னை | தண்டபாணி<br>தேசிகர்<br>குருசாமி தேசிகர் | தருமையாதீனம்<br>26வது குருமகா<br>சந்நிதானம் | மறுபதிப்பு |
| 25. | 2001 | திருஞானசம்பந்தர்<br>தேவாரம் | திருப்பனந்தாள்<br>காசித்திருமடம் | ஏழாம் பதிப்பு | பன்னிரு<br>திருமுறைப்<br>பதிப்புநிதி | 3000 படிகள்<br>மூலம் மட்டும் |
| 26. | 2003 | திருஞானசம்பந்த<br>சுவாமிகள் தேவாரம் | வர்த்தமானன்<br>பதிப்பக வெளியீடு | வ.த. இராம<br>சுப்பிரமணியம் | அருட்செல்வர்<br>மகாலிங்கம் | ஐந்தாம் பதிப்பு<br>மூலமும்,<br>தெளிவுரையும்<br>12 திருமுறைகள் |
| 27. | 2004 | திருஞானசம்பந்தர்<br>தேவாரம் | திருப்பனந்தாள்<br>காசித்திருமடம் | எட்டாம் பதிப்பு | பன்னிரு<br>திருமுறைப்பதிப்புநிதி | |
| | | திருஞானசம்பந்தர்<br>முதல்திருமுறை | தமிழகச் சைவநெறிக்<br>கழகம், திருச்சிராப்பள்ளி | ஸ்ரீ சரவணபவானந்தர்<br>பதிப்பாசிரியர் | | முதல்பதிப்பு<br>28 - 2 - 2004 |
| 28. | 2006 | திருஞானசம்பந்தர்<br>தேவாரம் | திருப்பனந்தாள்<br>காசித்திருமடம் | ஒன்பதாம் பதிப்பு | பன்னிரு<br>திருமுறைப்<br>பதிப்புநிதி | 3000 படிகள்<br>மூலம் மட்டும் |
| 29. | 2007 | திருஞானசம்பந்தர்<br>சுவாமிகள்<br>திருக்கடைக்காப்பு | கைலாஷ்<br>அச்சகம் | | | மூலம் மட்டும் -<br>2500 படிகள்,<br>1, 2, 3<br>திருமுறைகள்<br>தலமுறை |
| 30. | 2007,<br>2012<br>மறுதிப்பு | பன்னிரு திருமுறை | மெய்யப்பனார்<br>மணிவாசகர்<br>அச்சகம் / பதிப்பகம்<br>வெளியீடு | பதிப்பு ஆசிரியர்<br>முனைவர் ச.வே.<br>சுப்பிரமணியம்<br>தமிழூர் | | மூலம் மட்டும் |
| 31. | 2008 | திருஞானசம்பந்தர்<br>தேவாரம் | திருப்பனந்தாள்<br>காசித்திருமடம் | பத்தாம் பதிப்பு | பன்னிருதிருமுறைப்<br>பதிப்புநிதி | 3000 படிகள்<br>மூலம் மட்டும் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 32. | 2008 | பன்னிரு திருமுறை | சதுரா பதிப்பகம் | தொகுப்பாசிரியர் சதுரா ஜீ. ச. முரளி | | மூலமும், உரையும் ஒன்று முதல் ஆறு திருமுறை வரை |
| 33. | 2008 | தேவாரத்திருப் பதிகங்கள் முதல் திருமுறை | சமூகச்சமயச் சங்கம் திருநெல்வேலி | V. ஆறுமுகம் திருநெல்வேலி | | தொகுதி – I, II. தமிழிலும் ஆங்கிலத்திலும் உரைநடையில் விரிவான விளக்கங்களுடன் |
| 34. | 2008 | மூவர் தேவாரம் | சதுரா பதிப்பகம் | பதிப்பாசிரியர் சதுரா. ஜீ.ச. முரளி | | 7 திருமுறைகள் மூலம் மட்டும் |
| 35. | 2010 | பன்னிரு திருமுறைகள் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | உரைஆசிரியர் வ.த. இராம சுப்பிரமணியம் | அருட் செல்வர் மகாலிங்கம் | மூலமும், உரையும் மறுபதிப்பு |
| 36. | 2014 | முதல்திருமுறை திருஞானசம்பந்தர் தேவாரம் | கற்பகம் பல்கலைக்கழகம் | பன்னிரு திருமுறை ஆய்வு மையம் | கற்பகம் அறக்கட்டளை | மூலமும், உரையும் |

* திருப்பனந்தாள் காசித் திருமடம் பத்துப் பதிப்புகளாக 30,000 படிகளை மூலமாக அடக்க விலையில் வெளியிட்டுப் பெரும்பணி செய்துள்ளார்கள்.
* வர்த்தமானன் பதிப்பகத்தார் சுருக்கமான உரையுடன் மூலத்தை ஏழு பதிப்புகளாகப் பல தொகுதிகளாக 12 திருமுறைகளையும் அருட்செல்வர் மகாலிங்கம் அருட்கொடையுடன் வெளியிட்டுத் திருமுறைகளுக்குச் சிறப்புச் செய்துள்ளார்கள்.
* இதுவரை வெளிவந்துள்ள உரைகளிலேயே மிக விரிவானது, விளக்கமானது 1953, 1997 ஆண்டுகளில் வெளிவந்த தருமையாதீன உரைதான். குருமகா சந்நிதானம் அவர்கள் தண்டபாணி தேசிகர், குருசாமி தேசிகர் போன்ற உரையாசிரியர்களைக் கொண்டு வெளியிட்டருளினார்கள். அவற்றின் மறுபதிப்பு காந்தளகம் அச்சகத்தின் மூலம் வெளியிட்டுள்ளார்கள்.
* நமது முதல்திருமுறை நூலை வெளியிட மேற்காண் நூல்களின் தொகுப்புகள் மிக உதவியாக இருந்தன. அனைத்து குரு மகா சந்நிதானங்களுக்கும், நூல் வெளியிட்டார்களுக்கும், ஆசிரியர்களுக்கும், அப்பதிப்புகளின் கொடையாளர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள்.

# திருஞானசம்பந்தர் (கி.பி. 638 - கி.பி. 654)

## அருள் வரலாறு

வேதநெறி தழைத்தோங்க
மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப்
புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித்
திருஞானசம்பந்தா்
பாதமலா் தலைக்கொண்டு
திருத்தொண்டு பரவுவாம். - சேக்கிழாா்

### முன்னுரை

செந்தமிழும் - சிவநெறியும் நிலைகுலைந்து, தமிழ்நாட்டின் பண்பும், கலைகளும் நிலைதடுமாறி, புறச்சமய இருள் சூழ்ந்து பொல்லாங்கு பரவிய காலத்தே ஞானபானுவாய் அவதரித்து, புறச்சமயத் தூரறுத்து, திருவருள் துணைக்கொண்டு, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய பெருந்தகை ஞானசம்பந்தப் பெருமான். மூன்றாண்டில் சிவஞானப் பாலுண்டு, தேனினும் இனிய தீந்தமிழ்ப் பாடல்களால் தெய்வீக நெறி புதுக்கி, அற்புதங்கள் பல நிகழ்த்தி அரன் நாமம், ஐந்தெழுத்து இவற்றின் பெருமைகளை விரித்துரைத்தாா் சிறிய பெருந்தகையாா்.

அவா் அவதாரத்தால் வேத நெறி தழைத்தது. சைவநெறி ஓங்கிற்று. பண்புகள் மலா்ந்தன. அன்புநெறி தலைஎடுத்து அவனி எலாம் விளங்கிற்று.

### திருவவதாரம்

சோழவள நாட்டிலே, தஞ்சை மாவட்டத்திலே, சீகாழிப் பதியிலே, அந்தணா் மரபிலே, கவுணியா் குலத்திலே சிவபாத இருதயரும் பகவதி அம்மையாரும் வேதநெறி தழைத்தோங்கமிகு சைவத் துறை விளங்க இல்லறம் நடத்தி வந்தனா். அவ்விருவரது பெருந்தவத்தால் கி.பி 7-ஆம் நூற்றாண்டில் அவ்விருவருக்கும் மகவாய்த் தோன்றினாா் திருஞானசம்பந்தா். அவதரித்த நாளோ சிவபெருமானுக்கு உகந்த திருவாதிரைத் திருநாள். அன்று அனைத்துக் கோள்களும் அவ்வவற்றின் உச்சத்தில் இருந்தன.

### ஞானப்பால் உண்டமை

ஞானசம்பந்தப் பிள்ளையாா் மூன்றாண்டு நிறையப் பெற்றாா். நீராடச் சென்ற தந்தையாருடன் தாமும் திருக்குளம் சாா்ந்தாா். சிவபாத இருதயா் மைந்தனைக் கரையில் அமரச்செய்து நீருள் மூழ்கி அகமருட ஜெபம் செய்தாா். தந்தையைக் காணாமையாலும்,

முன்னைத்தவம் தலைக்கூடியதாலும் திருத்தோணிச்சிகரம் பார்த்து அம்மே! அப்பா! என்று அழைத்தருளி அழுதருளினார்.

திருத்தோணிபுரப்பெருமான் உமா தேவியாரோடும் விடைமீதமர்ந்து காட்சி கொடுத்தார். உவமையிலாக் கலை ஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமும் கலந்த திருமுலைப்பால் ஊட்டுவாயாக எனப் பெருமான் பணித்தார். அப்படியே பெருமாட்டியும் எண்ணரிய சிவஞானத்து இன்னமுதம் குழைத்தருளி உண் அடிசில் என ஊட்டினார். ஞானம் உண்ட பிள்ளையார் சிவஞானச் செல்வராய்த் திகழ்ந்தார்.

எண்ணரிய சிவஞானத்
தின்ன முதங்குழைத் தருளி
உண்ணடிசில் எனஊட்ட
உமையம்மை எதிர்நோக்கும்
கண்மலர்நீர் துடைத்தருளிக்
கையிற்பொற் கிண்ணமளித்
தண்ணலைஅங் கழுகைதீர்த்
தங்கணனார் அருள்புரிந்தார்.
சிவனடியே சிந்திக்குந்
திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும்
பாங்கினி லோங்கியஞானம்
உவமையிலாக் கலைஞானம்
உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர்
தாமுணர்ந்தார் அந்நிலையில்

பிரம தீர்த்தத்தில் நீராடிய சிவபாத இருதயர், பால்வழிய நின்ற பிள்ளையைப் பார்த்து யார்கொடுத்த எச்சிற்பாலை உண்டாய் எனக் கோல் கொண்டோங்கினார். உடனே ஞானசம்பந்தர் தமக்குப் பால் கொடுத்த பரம்பொருளை அடையாளங்களுடன் சுட்டித் தோடுடைய செவியன் என்ற திருப்பதிகம் பாடினார்.

## பொற்றாளம் பெறல்

சில நாள் கழித்துத் திருக்கோலக்காவிற்கு எழுந்தருளினார். கையினால் தாளம் இட்டு மடையில் வாளை என்ற திருப்பதிகம் பாடினார். பாட்டிற்கு உருகும் பரமன் கை நோவுமென்று ஐந்தெழுத்து வரையப்பெற்ற பொற்றாளம் அளித்தருளினார். இவர் பெருமை கேட்ட மக்கள் தங்கள் தங்கள் ஊருக்கு எழுந்தருள வேண்டினர். முதலில் தமது தாய் பிறந்த ஊராகிய திருநனிபள்ளி சார்ந்தார், பிள்ளையார் பெருமையைக் கேள்வியுற்ற திருநீலகண்ட யாழ்ப்பாணர்,

தம்முடைய மனைவியோடு சீகாழிக்கு வந்து தரிசித்தார். அவரது பாடல்களுக்குத் தாம் யாழ் வாசித்தார். அது முதல் பிள்ளையாருடனிருந்து பிள்ளையார் பாடல்களையெல்லாம் யாழில் அமைத்து வாசித்து வரலானார்.

### முத்துச்சிவிகை முதலியன பெறல்

திருஞானசம்பந்தர், தில்லை முதலிய பல தலங்களையும் தரிசித்து நடுநாட்டில் உள்ள திருநெல்வாயிலரத்துறை சார்ந்தார். களைப்பினால் மாறன்பாடியில் அமர்ந்து அன்றிரவு நித்திரை செய்தார். அரத்துறைப்பெருமான் முத்துச்சிவிகை, முத்துக்குடை, சின்னம் முதலியவற்றை அருளினார்.

சோதிமுத்தின் சிவிகை
சூழ்வந்துபார்
மீதுதாழ்ந்து வெண்ணீற்றொளி
போற்றிநின்று
ஆதியா ரருளாதலில்
அஞ்செழுத்து
ஓதி ஏறினார்
உய்ய உலகெலாம்

அவற்றை இறையருளெனப் பெற்ற ஞானசம்பந்தர், எந்தை ஈசன் எம்பெருமான் என்ற திருப்பதிகம் பாடிப்பரவினார்.

### உபநயனம்

உபநயனப் பருவத்தில் உலகியலுக்கேற்ப ஞானசம்பந்தருக்கு உபநயனம் நடைபெற்றது. ஓதாதே வேதம் உணர்ந்த உயர் ஞானசம்பந்தர், அங்கு வந்திருந்த மறையோர்கட்கு உள்ள ஐயங்களை அகற்றி, வேத முடிபாகிய ஐந்தெழுத்தின் பெருமையைத் துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும் என்ற திருப்பதிகமாகப் பாடி விளக்கியருளினார்.

### முத்துப் பந்தல் பெறல்

ஞானசம்பந்தரது பெருமையைக் கேள்வியுற்ற திருநாவுக்கரசர், ஞானசம்பந்தரைக் காண்பதற்குச் சீகாழிக்கு எழுந்தருளினார். பிள்ளையாரும் அவரை எதிர்கொண்டழைத்தார். இருவரும் அருட்கடலும் அன்புக் கடலும் ஆம் எனத் திகழ்ந்தனர். பின்னர் ஞானசம்பந்தர் திருப்பாச்சிலாச்சிராமம் பணிந்து கொல்லிமழவன் மகளைப் பிடித்து நின்ற முயலகன் என்னும் நோயைப் போக்கினார். திருச்செங்கோடு என வழங்கும் திருக்கொடிமாடச் செங்குன்றூர் சென்ற போது அடியவர்களை விஷஜுரம் பற்றியது. திருநீலகண்டத் திருப்பதிகம் பாடி அவ்விஷ நோயைப் போக்கினார். பிள்ளையார் பட்டீச்சுரத்தை அடைந்தபோது வெயில் மிகுதியாயிருந்ததால் திருவருளால் சிவபூதம் ஒன்று முத்துப்பந்தல் கொடுத்தது.

## பிற அற்புதங்கள்

பிறகு திருவாவடுதுறை சார்ந்தார். தந்தையார் வேள்வி செய்தற்குப் பொருள் வேண்டினார். ஆவடுதுறை அரனை இடரினும் தளரினும் என்ற பதிகத்தால் போற்றினார். பொற்கிழி பெற்றுச் சிவபாத இருதயரிடம் தீதுநீங்க நல்வேள்விசெய்க எனக்கொடுத்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணரின் தாய் பிறந்த ஊராகிய தருமபுரம் சென்று தரிசித்தார். மாதர்மடப் பிடியும் என்ற பதிகத்தால் பதிக இசை யாழிலடங்காமையை விளக்கியருளினார். திருமருகல் சேர்ந்தார். கணவனாக வர இருந்த வணிகன் விஷந்தீண்டி இறந்ததால் கதறி அழுதாள் ஒரு நங்கை. அந்நங்கையின் துயரைத் துடைக்க எண்ணிச் சடையாய் எனுமால் என்ற திருப்பதிகம் பாடி வணிகனை உயிர்பெற்று எழச்செய்தார்.

## படிக்காசு பெறல்

பிறகு திருச்செங்காட்டங்குடி, திருப்புகலூர் தரிசித்தார். திருநாவுக்கரசரைக் கண்டு அவர் வாயிலாக ஆரூரில் நிகழ்ந்த ஆதிரைச் சிறப்பைக்கேட்டு ஆரூரானைத் தொழுதார். பிறகு அப்பரும், சம்பந்தரும் திருவீழிமிழலை சேர்ந்தனர். அவ்வூர்ப்பெருமான் தோணியப்பரைப் போல் காட்சிதந்தனர். அது கண்ட இருவரும் அவ்வூரிலேயே சிலநாள் தங்கினர். அப்பொழுது நாட்டில் பஞ்சம் உண்டாயிற்று. பரமன் அளித்த படிக்காசு கொண்டு இருவரும் ஆயிரக்கணக்கான அடியார்களுக்குப் பறைசாற்றிச் சோறளித்தனர்.

## திருமறைக்காட்டில் அற்புதம்

பிறகு (வேதாரணியம்) திருமுறைக்காடு சென்றனர். நேரே கும்பிட எண்ணியவர்களாய் மறைகளால் பூசித்து அடைக்கப்பட்டிருந்த கதவினைத் திருநாவுக்கரசர் பாடலால் திறக்கச்செய்து, தாம் அடைக்கப்பாடினார். அது முதல் திறக்கவும் அடைக்கவுமாக இருந்து வருகிறது அக்கதவு.

## பாண்டி நாட்டில் சைவம்

பாண்டி நாட்டில் நெடுமாற பாண்டியன் சமண்சமயம் சார்ந்து இருந்தமையை மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் என்ற இருவர் வாயிலாகத் தெரிந்து மதுரைக்குப் புறப்பட்டார். நாளும் கோளும் நலமில்லாதிருந்தும் உமையொருபாகன் உள்ளத்துவிருப்பத்தால் "அவை நல்ல நல்ல" என ஏகினார். பாண்டியன் வெப்பு நோய் அகற்றினார். அனல் வாதத்தாலும், புனல் வாதத்தாலும் அமணர்களை வென்றார்.

பாண்டிமன்னனையும், பாண்டி நாட்டு மக்களையும் சைவம் தழுவச்செய்தார். பாண்டி நாட்டில் உள்ள தலங்களைத் தரிசித்தார். சோழநாடு மீண்டார். பிறகு பல தலங்களைத் தரிசித்துத் திருப்பூந்துருத்தி அடைந்தார். அப்பர் சுவாமிகள் இவரது சிவிகையைத் தாங்கியமையறிந்து உடனே கீழிறங்கி இருவரும் அளவளாவி இருந்தனர். திருஓத்தூரில் ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கிக் காய்க்கச் செய்தார்.

### எலும்பைப் பெண்ணுருவாக்கல்

மயிலாப்பூர் சிவநேசச் செட்டியாரின் மகள் பூம்பாவை பாம்பு தீண்டி இறக்க, அவளது எலும்பைக் குடத்தில் சேமித்து வைத்தார் சிவநேசர். அதனை அறிந்த ஞானசம்பந்தர் திருக்கோயில்முன் அக்குடத்தைக் கொணர்வித்து மட்டிட்ட புன்னை என்ற பதிகம்பாடி உயிர்ப்பித்தார்.

### சோதியிற் கலத்தல்

பெற்றோர் விருப்பத்திற்கிணங்க, வேத நெறியில் நின்று, நம்பியாண்டார் நம்பிகள் திருமகளை மணமகளாக ஏற்று இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே இவள் தன்னோடும் அந்தமில் சிவன்தாள் சேர்வன் என்ற கருத்தமையக் கல்லூர்ப் பெருமணம் என்ற பதிகம் பாடினார். பெருமானது அசரீரியின்படி மனைவியோடும் உடன் வந்தாரோடும் வைகாசி மூல நன்னாளில் அங்குத் தோன்றிய சோதியில் கலந்தார். இவர் அருளிய திருப்பதிகங்கள் 383. இவை முதல் மூன்று திருமுறைகளாகத் திகழ்கின்றன.

பரசமய கோளரியைப்
பாலறா வாயனைப்பூம்
பழனம் சூழ்ந்த
சிரபுரத்துத் திருஞான
சம்பந்தப் பெருமானைத்
தேய மெல்லாம்
குரவையிடத் தமிழ்வேதம்
விரித்தருளும் கவுணியர்தம்
குலதீ பத்தை
விரவியெமை ஆளுடைய
வென்றிமழ இளங்களிற்றை
விரும்பி வாழ்வாம். - ஸ்ரீ சிவஞான சுவாமிகள்

### திருஞானசம்பந்தர் துதி

பிறவியெனும் பொல்லாப்
பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோற்றோணி (தோல் தோணி)
கண்டீர் - நிறைஉலகில்
பொன்மாலை மார்பன்
புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ் - நம்பியாண்டார் நம்பிகள்

# தேவாரத் திருப்பதிகங்கள்

## பதிகத் தொகுப்பு முறை

### தேவாரப் பதிகங்கள் தொகுக்கப்பட்ட வகைகள்

**1. பண் முறை** பண் வாரியாகத் திரட்டி ஒன்று முதல் ஏழு திருமுறையாக அடைவு செய்துள்ள முறை முதலாவதாகும். இது பண் முறை எனப்படும்.

**2. அடங்கன் முறை** திருத்தலங்கள் வாரியாக மூவர் பாடல்களைத் தொகுத்து அடைவு செய்த முறை இரண்டாவதாகும். இது அடங்கன் முறை எனப்படும்.

**3. தலமுறை** இனி மூவரில் ஒவ்வொருவர் பதிகங்களையும் தனித்தனியாக வைத்துத் தலங்கள் வாரியாகத் தொகுத்து அடைவு செய்த முறை மூன்றாவதாகும். இது தலமுறை எனப்படும்.

**4. பாடியவாறு** பெரியபுராணத்தில் இம்மூவரின் வரலாறுகளைச் சேக்கிழார் கூறி வரும் போது, இன்ன பதிகத்தின் பின் இன்ன பதிகம் - ஊர் எல்லையில் / இறைவன் திருமுன் / வலம் வரும்போது பாடப் பெற்றது என்று கூறி வருவதை அறியலாம். அதன்படி தேவாரம் பாடப்பெற்ற கால முறைப்படி ஒரு தொகுப்பு இருந்தது என்று உறுதி செய்யலாம். சோழர் வரலாற்றில் அக்குறிப்பு உள்ளது. அதற்குப் பாடியவாறு என்று பெயர்.

தேவார ஆசிரியர் மூவருள் இயலிசைத் தமிழாகிய திருப்பதிகங்களை முதன்முதல் அருளிச் செய்தவர், திருஞானசம்பந்தப் பிள்ளையாதலின், அவர் அருளிய திருப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாகவும், அவர்தம் கெழுதகை நண்பராய் விளங்கிய திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்கள் நான்காம் திருமுறை - ஐந்தாம் திருமுறை - ஆறாந்திருமுறை என மூன்று திருமுறைகளாகவும், இவ்விரு பெருமக்களும் வாழ்ந்த காலப்பகுதியையொட்டிச் சில ஆண்டுகள் பிற்பட்டுத் தோன்றிய நம்பியாரூரர் ஆகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருப்பதிகங்கள் ஏழாம் திருமுறையாகவும் தொகுக்கப்பட்டன. இப்பெருமக்கள் மூவருள் முறையே ஒவ்வொருவரும் அருளிச் செய்தத் திருப்பதிகங்களில் அமைந்த பண்களை வகைப்படுத்தி ஒவ்வொரு பண்ணுக்கும் உரிய திருப்பதிகங்களையும் ஏழு திருமுறைகளாக வகுத்தெழுதியது பழைய முறையாகும். தலமுறையென்பது, கோயில், திருவேட்களம் முதலாகத் திருப்பதிகக் கோவையிற் குறித்த முறையையொட்டித் தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களையெல்லாம் தில்லைப் பெருங்கோயில் முதலாக வரிசைப்படுத்தி அவ்வத்தலங்களுக்குரிய தேவாரப் பதிகங்களை முற்குறித்த ஏழு திருமுறைப் பாகுபாட்டிற்கு ஏற்ப முறைபடச் சேர்த்து அமைத்த முறையாகும்.

இவ்விருவகையுள் முற்கூறிய பண்முறையமைப்பே பழைய ஏட்டுச்சுவடிகளில் இடம் பெற்றுள்ளது. மூவர் தேவாரப்பதிகங்களை ஏழு திருமுறைகளாகப் பகுத்து வழங்கும் திருமுறைப்

பகுப்புக்கு அடிப்படையாயமைந்தது இப்பண்முறையமைப்பே எனக் கருதுதல் பொருந்தும். பண்முறையமைப்பாகிய இதனை ஆதாரமாகக் கொண்டு நோக்கினால்தான் மூவர் திருப்பதிகங்களையும் முதல் ஏழு திருமுறைகளாகப் பகுத்து வழங்கிய நம் முன்னோரது பகுப்பு முறை இனிதுவிளங்கும். தேவாரத் திருப்பதிகங்களைத் தலமுறையில் அமைத்துப் பயிலும் வழக்கம் பிற்காலத்தில் தோன்றியதெனவே கருதவேண்டியுள்ளது. மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பவற்றை முறையே கண்டு வழிபடும் விருப்புடைய சிவநேசச்செல்வர்கள், தாம் வழிபட விரும்பிய ஒவ்வொரு தலத்திற்கும் அமைந்த தேவாரத் திருப்பதிகங்கள் முழுவதையும் நாள்தோறும் முறையே பாராயணஞ் செய்தற்கு ஏற்ற வண்ணம் முறைப்படுத்தப்பெற்றதே இத்தலமுறைப் பகுப்பாகும். இப்பகுப்பு தில்லைப்பெருங்கோயிலை முதன்மைத் திருத்தலமாகக் கொண்டு அமைந்திருப்பது தேவார ஆசிரியர் மூவர் திருவுள்ளத்திற்கும் ஏற்புடையதாகும். இது, சிவத்தலங்களெல்லாவற்றிற்கும் முதலில் வைத்துப் போற்றத்தகும் சிறப்புடைய திருத்தலம் என்ற நோக்கத்துடன் தில்லைப் பெருங்கோயிலைப் பற்றி அம் மூவரும் உளமுவந்து பாடிய திருப்பாடற் குறிப்புகளால் நன்கு புலனாகும். இக்குறிப்பினை விளக்கும் முறையில் கோயில், திருவேட்களம், நெல்வாயில், கழிப்பாலை எனத் தொடங்கும் திருப்பதிகக் கோவை அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். மேற்குறித்த பண்முறை, தலமுறை என்னும் இருவகை முறைகளுள் தேவார ஆசிரியர் காலந்தொட்டு இடையீடின்றி வழங்கிவருவதும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டு என்ற பகுப்பிற்கு நிலைக்களமாக அமைந்ததும் பண்முறையே யாதலின் அம்முறையினைப் பின்பற்றித் தேவாரத் திருப்பதிகங்களின் அமைப்பினை நோக்குதல் ஏற்புடையதாகும்.

யாவருக்கும் தாயும் தந்தையுமாகிய அம்மையப்பர் அளித்த ஞானவாரமுதமாகிய பாலைப் பருகிப் பேருணர்விற் பொலிவும் ஆளுடைய பிள்ளையார், உள்நிறைந்து பொழிந்தெழுந்த உயர்ஞானத் திருமொழியால் முதன்முதல் திருவாய்மலர்ந்தருளியது தோடுடைய செவியன் எனும் முதற்குறிப்புடைய பிரமபுரத் திருப்பதிகமாகும். "யாரளித்த பாலடிசில் உண்டனை? எச்சில் மயங்கிட உனக்கு இதனை இட்டாரைக் காட்டுக" என வினவிக் கையிற் சிறியதொரு கோல் கொண்டு சிவபாதவிருதயராகிய தந்தையார் தம்மை அடித்தற்கு ஓங்கியபொழுது, சிவஞானம்பெற்ற பிள்ளையார், தம் கண்ணெதிரே விசும்பில் விடையின்மேல் எழுந்தருளிய அம்மையப்பரைத் தம் தந்தையர்க்கு ஒரு திருவிரலாற் சுட்டிக்காட்டி எம்மை இது செய்த பிரான் பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனே என அடையாளங்களுடன் புலப்படுத்துவதாக அமைந்தது தோடுடைய செவியன் எனும் இத்திருப்பதிகமாதலின், இதனை **மெய்ம்மை மொழித் திருப்பதிகம்** எனச் சேக்கிழாரடிகள் சிறப்பித்துப் போற்றியுள்ளார். எல்லையிலா மறைகளுக்கெல்லாம் முதலாக அமைந்தது ஓமெனும் எழுத்தாகிய பிரணவமாகும். மறைமுதலெழுத்தாகிய ஓம் என்பதிலுள்ள ஓகாரத்தினைத் தமிழ் என்பதன் முதலெழுத்தாக அமைந்த தகரமெய்யுடன் இணைத்துத் தொடங்கிய சிறப்பு தோடுடைய செவியன் எனும் இத்திருப்பதிகத்துக்கு உண்மையால், எல்லையிலா மறைமுதல் மெய்யுடன் எடுத்த எழுதுமுறை, மல்லல்நெடுந் தமிழ் எனப் போற்றப்பெற்று முதற்றிருமுறையில் முதற்றிருப் பதிகமாக முறைப்படுத்தப் பெற்றது மல்லல்நெடுந் தமிழ் எனப் போற்றப்பெற்று முதல்திருமுறையில் முதல்திருப் பதிகமாக முறைப்படுத்தப் பெற்றது.

இத்திருப்பதிகத்திற்குரிய பண் நைவளம் என்பதாகும். இதனை இக்காலத்தார் நட்டபாடை என வழங்குவர். திருஞான சம்பந்தப் பிள்ளையார் முதன் முதற் பாடியருளிய இப்பதிகத்தில் அமைந்த பண் நட்டபாடையாதலின், பிள்ளையார் நட்டபாடைப் பண்ணிற் பாடியருளிய திருப்பதிகங்கள் யாவும் தோடுடைய செவியன் எனும் இத்திருப்பதிகத்தையொட்டி முதற்றிருமுறையில் முதற்கண் வைக்கப்பெற்றன. ஆளுடைய பிள்ளையார்க்குக் காலத்தால் முற்பட்டவர் காரைக்காலம்மையார். அம்மையார் அருளிச் செய்த திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டனுள் கொங்கை திரங்கி என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம், நட்டபாடைப் பண்ணில் அமைந்திருப்பதுபோலவே, பிள்ளையார் அருளிய முதல் திருப்பதிகமும் நைவளம் என்ற நட்டபாடைப் பண்ணில் அமைந்திருத்தல் இங்கு ஒப்பு நோக்கியுணரத்தக்கதாகும்.

மூவாண்டிலேயே சிவஞானம் கைவரப்பெற்ற ஆளுடைய பிள்ளையார் அம்மையப்பரை விடைமேற் கண்டு தம் தந்தையார்க்குக் காட்டும் நிலையில் தோடுடைய செவியன் எனும் இத்திருப்பதிகத்தைப் பாடியபின் அடுத்து நிகழ்ந்த அற்புதச் செயல், திருஞானசம்பந்தர் திருக்கோலக்காவை அடைந்து இறைவனை வணங்கிப்பாடி அப்பெருமானால் அளிக்கப்பட்ட பொற்றாளத்தினைப் பெற்றமையேயாம். உலகவர் கண்டு மகிழ இவ்வியத்தகு செயல் நிகழும் நிலையிற் பாடிய திருப்பதிகம்; மடையில் வாளை பாய என்ற தக்கராகப் பண்ணிற் பாடப்பெற்றதாதலின், தக்கராகப் பண்ணமைந்த திருப்பதிகங்கள் யாவும் இதனைச் சாரவைக்கப்பெற்றன. குறிஞ்சிப் பெரும்பண்ணுக்குரிய நைவளம் என்ற முதல்திறத்தின் அகநிலையாக அமைந்தது நட்டபாடை. அதனையடுத்துப் பாலைப்பெரும் பண்ணுக்குரிய அராகம் என்ற முதல் திறத்தின் அகநிலையாக அமைந்த தக்கராகப் பண் அமைந்திருத்தல் பொருத்தமுடையதேயாம். தக்கராகப் பண்ணுடன் பெயரால் ஒற்றுமையுடையது பழந்தக்கராகம் என்ற பண்ணாகும். எனவே பழந்தக்கராகப் பண்ணமைந்த பதிகங்கள் தக்கராகப் பதிகங்களை அடுத்து வைக்கப்பட்டன. தக்க கைசிகம் என்ற பெயரே தக்கேசி எனத் திரிந்ததென்பர். இப்பெயரொற்றுமை கருதித் தக்கேசிப் பண்ணமைந்த பதிகங்கள் தமிழ்ச் சான்றோர்கள் நானிலத்து ஐந்திணையொழுக்கங்களுக்குச் சிறப்புரிமையுடையவாகப் பகுத்துரைத்த பழைய தமிழ்ப் பண்களுள் குறிஞ்சிப் பண் முதன்மையுடையதாதலின் குறிஞ்சிப் பண்ணிலமைந்த பதிகங்கள் தக்கேசிப் பதிகங்களைச் சாரவைக்கப்பட்டன. குறிஞ்சியொடு பெயரொற்றுமையுடைய பண்கள் வியாழக்குறிஞ்சி, மேகராகக் குறிஞ்சி என்பனவாகும். இவ்விரு பண்களிலும் அமைந்த பதிகங்கள் குறிஞ்சிப் பண்ணுக்குரிய பதிகங்களை அடுத்து முறைப்படுத்தப்பெற்றன. எடுத்த இயலும் இசையும் இடையே முரிந்து மாடுபடுமியல்புடையதாய் அமைந்த இசைப்பாடல் மூரி எனப்படும். இத்தகைய மூரிப் பாடல்களாக அமைந்தது, "மாதர்மடப்பிடி" என்னும் முதற்குறிப்புடைய திருத்தருமபுரப் பதிகமாகும். இயலிசைத் திறத்தால் வேறு பாடுடைமையால் யாழில் இசைத்தற்கு அடங்காத நிலையில் யாழ்மூரி எனப் பெயர் பெற்று இத்திருப்பதிகமாக வைக்கப்பெற்றது. எனவே முதல் திருமுறையாகிய இதன்கண் நட்டபாடை, தக்கராகம், பழந்தக்கராகம், தக்கேசி, குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி, மேகராகக் குறிஞ்சி என்னும் ஏழு பண்களுக்குரிய நூற்றுமுப்பத்தைந்து திருப்பதிகங்களும் யாழமூரி என்ற திருப்பதிகம் ஒன்றும் ஆக நூற்றுமுப்பத்தாறு திருப்பதிகங்கள் இடம் பெற்றிருத்தல் காணலாம்.

## தேவாரம் பாடியவாறு அட்டவணை

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | முதல் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 1 | திருப்பிரமபுரம் (சீர்காழி) பிரம தீர்த்தக்கரையில் | 76 | தோடுடைய செவியன் | 1 |
| 2. | திருப்பிரமபுரம் (புறவம்) (இறைவன் முன்) | 88 | நறவநிறை | 74 |
| 3. | திருக்கோலக்கா (இறைவன் முன்) | 102 | மடையில் வாளை | 23 |
| 4. | திருத்தோணிபுரம் (சீர்காழி) கோயில் திருமுன்பு | 106, 107 | பூவார் கொன்றை | 24 |
| 5. | பல்லவனீச்சரம் | 121 | அடையார்தம்புரங்கள் | 65 |
| 6. | கீழைத்திருக்காட்டுப் பள்ளி | 129 | செய்யருகே | 5 |
| 7. | தில்லை | 162 | கற்றாங்கெரியோம்பி | 80 |
| 8. | திருவேட்களம் | 165 | அந்தமும் ஆதியும் | 39 |
| 9. | எருக்கத்தம் புலியூர் | 179 | படையார் தருபூதம் | 89 |
| 10. | முதுகுன்றம் (ஊரை அடையும்போது) | 181 | மத்தாவரைநிறுவி | 12 |
| 11. | முதுகுன்றம் (கோயில் வலம் வரும்போது) | 182 | நின்றுமலர்தூவி | 93 |
| 12. | முதுகுன்றம் (இறைவன் திருமுன்பு) | 183 | தேவராயும் | 53 |
| 13. | முதுகுன்றம் (சிலநாள் மேவி) | 183 | மெய்த்தாறு | 131 |
| 14. | தூங்கானை மாடம் (இறைவன் முன்) | 184 | ஒடுங்கும் | 59 |
| 15. | சேய்ஞலூர் | 248 | நூலடைந்த | 48 |
| 16. | திருவாழ்கொளிப்புத்தூர் | 251-2 | பொடியுடை | 40 |

| | | | | |
|---|---|---|---|---|
| 17. | புகலி | 275 | ஆடல் அரவசை | 104 |
| 18. | பிரமபுரம் மொழிமாற்று | 276 | காடதணி | 117 |
| 19. | ஏகபாதம் பிரமபுரம் | 276 | பிரமபுரத்துறை | 127 |
| 20. | இருக்குக்குறள் பிரமபுரம் | 276 | அரனை உள்குவீர் | 90 |
| 21. | திருஎழு கூற்றிருக்கை பிரமபுரம் | 276 | ஓருரு வாயினை | 128 |
| 22. | முடுகும் இராகம் கழுமலம் | 277 | பிறையணி | 19 |
| 23. | திருத்தாளச்சதி கழுமலம் | 277 | பந்தத்தால் | 126 |
| 24. | பல்பெயர்ப்பத்து பிரமபுரம் | 277 | எரியார் | 63 |
| 25. | கண்ணார் கோயில் | 285 | தண்ணார் திங்கள் | 101 |
| 26. | கடை முடிநாதர் (கீழையூர்) | 285 | அருத்தனை | 111 |
| 27. | நின்றியூர் | 287 | சூலம்படை | 18 |
| 28. | புன்கூர் | 287 | முந்திநின்ற வினை | 27 |
| 29. | அன்னியூர் | 289 | மன்னியூரிறை | 96 |
| 30. | வியலூர் | 294 | குரவங்கமழ் | 13 |
| 31. | திருப்பழனம் | 299 | வேதமோதி | 67 |
| 32. | ஐயாறு | 130 | புலனைந்தும் | 130 |
| 33. | நெய்த்தானம் | 305 | மையாடிய | 15 |
| 34. | கானூர் | 308 | வானார்சோதி | 73 |
| 35. | அன்பிலாலந்துறை | 308 | கணைநீடெரி | 33 |
| 36. | பாச்சில் ஆச்சிராமம் | 318 | துணிவளர் திங்கள் | 44 |
| 37. | ஈங்கோய் மலை | 323 | வானத்துயர் | 70 |
| 38. | கொடிமாடச் செங்குன்றூர் (இறைவன் திருமுன்பு) | 326 | வெந்தவெண்ணீறு | 107 |
| 39. | கொடிமாடச் செங்குன்றூர் (குளிர்சுரம் போக) | 335 | அவ்வினைக் கிவ்வினை (பொது) | 116 |
| 40. | பராய்த்துறை (கோயிலில் கும்பிட்டு) | 341 | நீறு சேர்வதொர் | 135 |
| 41. | கற்குடி | 343 | வடந்திகழ் | 43 |

| | | | | |
|---|---|---|---|---|
| 42. | சிராப்பள்ளி | 344 | நன்றுடையானை | 98 |
| 43. | பாற்றுறை | 348 | காரார் கொன்றை | 56 |
| 44. | நெடுங்களம் | 349 | மறையுடையாய் | 52 |
| 45. | சோற்றுத்துறை (ஊரை நோக்கி வரும் வழியில்) | 354 | செப்பநெஞ்சே | 28 |
| 46. | புள்ளமங்கை | 364 | பாலுந்துறு | 16 |
| 47. | நல்லூர் | 370 | கொட்டும்பறை | 86 |
| 48. | ஆவூர்ப்பசுபதீச்சரம் | 377 | புண்ணியர் | 8 |
| 49. | திருநிறையூர்ச்சித்தீச்சரம் | 403 | ஊருலாவு | 29 |
| 50. | திருநிறையூர்ச்சித்தீச்சரம் | 403 | பிறைகொள் சடையர் | 71 |
| 51. | சிவபுரம் (திருமுன்நின்று) | 404 | புவம்வளிகனல்புனல் | 21 |
| 52. | சிவபுரம் (திருமுன்நின்று) | 404 | இன்குரலிசை | 112 |
| 53. | சிவபுரம் (திருமுன்நின்று) | 404 | கலைமலியகல | 125 |
| 54. | குடந்தைக்காரோணம் | 490/10 | வாரார் கொங்கை | 72 |
| 55. | திருவிடைமருதூர் (ஊருள்புகும் போது) | 413 | ஓடேகலன் | 32 |
| 56. | திருவிடைமருதூர் (திருமுன்) | 415 | தோடொர் காதினன் | 95 |
| 57. | திருவிடைமருதூர் (திருமுன்) | 415 | மருந்தவன் வானவர் | 110 |
| 58. | திருவிடைமருதூர் (திருமுன்) | 415 | நடைமருதிரிபுரம் | 121 |
| 59. | திருவிடைமருதூர் (திருமுன்) | 415 | விரிதருபுலியுரி | 122 |
| 60. | திருநல்லம் | 434 | கல்லால் நிழல்மேய | 85 |
| 61. | மயிலாடுதுறை | 439 | கரவின்றி | 38 |
| 62. | செம்பொன்பள்ளி | 440 | மருவார் குழலி | 25 |
| 63. | திருப்பறியலூர் | 441-2 | கருத்தன்கடவுள் | 134 |
| 64. | திருத்தருமபுரம் | 447 | மாதர்மடப்பிடி | 136 |
| 65. | திருநள்ளாறு | 447 | போகமார்த்த | 49 |

| | | | | |
|---|---|---|---|---|
| 66. | திருநாகைக் காரோணம் | 466 | புனையும் விரி | 84 |
| 67. | திருச்செங்காட்டங்குடி | 470 | நறைகொண்ட | 61 |
| 68. | திருமருகல் (மருகல் இறைவன்முன் ஒருநாள் கணபதீச்சரக் காட்சிகண்டு) | 486 | அங்கமும் வேதமும் | 6 |
| 69. | இராமனதீச்சரம் | 488 | சங்கொளிர் | 115 |
| 70. | திருவாரூர் (ஊரின் புறத்தே) | 497 / 8 | பாடலன் நான்மறை | 105 |
| 71. | திருவாரூர் (ஊரின் எல்லை சேர்ந்து) | 500 | சித்தம் தெளிவீர்காள் | 91 |
| 72. | வலிவலம் | 515 | ஒல்லையாறி | 50 |
| 73. | வலிவலம் | 515 | பூவியல் புரிகுழல் | 123 |
| 74. | திருக்கோளிலி | 515 | நாளாய போகாமே | 62 |
| 75. | திருப்பனையூர் | 515 | அரவச்சடைமேல் | 37 |
| 76. | திருப்புகலூர் (ஊரில் தங்கியிருக்கும் போது) | 524 | குறிகலந்த இசை | 2 |
| 77. | அம்பர் மாகாளம் | 532 | அடையார்புரம் | 83 |
| 78. | திருப்பாம்புரம் | 538 | சீரணிதிகழ் | 41 |
| 79. | திருவீழிமிழலை (ஊர் எல்லையில்) | 542 | அரையார்விரி | 35 |
| 80. | திருவீழிமிழலை (இறைவனைத் தாழ்ந்து) | 545 | சடையார்புனல் | 11 |
| 81. | பேணுபெருந்துறை | 549 | பைம்மாநாகம் | 42 |
| 82. | திருவீழிமிழலை | 561 | தடநிலவிய | 20 |
| 83. | திருவீழிமிழலை | 561 | இரும்பொன்மலை | 82 |
| 84. | திருவீழிமிழலை | 561 | அலர்மகள்மலிதர | 124 |
| 85. | திருவீழிமிழலை | 561 | ஏரிசையும் | 132 |
| 86. | திருவீழிமிழலை | 557 | மைம்மருபூங்குழல் | 4 |
| 87. | திருவீழிமிழலை | 570 | வாசிதீரவே காசு நல்குவீர் | 92 |
| 88. | கரவீரம் | 573 | அரியும் நம்வினை | 58 |

| | | | | |
|---|---|---|---|---|
| 89. | மறைக்காடு | 575 | சிலைதனை நடு விடை | 22 |
| 90. | இடும்பாவனம் | 623 | மனமார்தரு | 17 |
| 91. | கொடுங்குன்றம் | 630 | வானிற்பொலி | 14 |
| 92. | திருஆலவாய் (திருமுன்) | 667 | நீல மாமிடற்று | 94 |
| 93. | திருப்பரங்குன்றம் | 885 | நீடலர்சோதி | 100 |
| 94. | திருஆப்பனூர் | 885 | முற்றுஞ்சடை | 88 |
| 95. | திருப்புத்தூர் | 885 | வெங்கள் விம்மு | 26 |
| 96. | திருப்பூவணம் | 886 | அறையார் புனலும் | 64 |
| 97. | திருக்குற்றாலம் | 886 | வம்பார் குன்றம் | 99 |
| 98. | திருப்பாதாளீச்சரம் | 896 | மின்னியல் செஞ்சடைமேல் | 108 |
| 99. | திருநள்ளாறு | 902 | பாடகமெல்லடி | 7 |
| 100. | திருவையாறு | 945 | கலையார்மதி | 36 |
| 101. | திருவையாறு | 945 | பணிந்தவர் | 120 |
| 102. | வடுகூர் | 963 | சுடுகூரெரி | 87 |
| 103. | திருவதிகை வீரட்டானம் | 965 | குண்டைக்குறள் | 46 |
| 104. | திருவண்ணாமலை (மலைவலம் தோற்றங் கண்டு) | 970 | உண்ணாமுலை | 10 |
| 105. | திருவண்ணாமலை (திருமுன்) | 972 | பூவார்மலர் | 69 |
| 106. | திருவோத்தூர் (ஆண்பனை பெண் பனையாதற்கு) | 980 | பூத்தேர்ந்தாயன | 54 |
| 107. | குரங்கணில் முட்டம் | 985 | விழுநீர் மழுவாள் | 31 |
| 108. | கச்சியேகம்பம் | 999 | வெந்தவெண்பொடி | 133 |
| 109. | திருமாற்பேறு | 1002 | ஊறியார் தரு | 55 |
| 110. | திருமாற்பேறு | 1002 | குருந்தவன் | 114 |
| 111. | திருவல்லம் | 1003 | எரித்தவன் முப்புரம் | 113 |
| 112. | இலம்பையங்கோட்டூர் | 1004 | மலையினார் | 76 |

| | | | | |
|---|---|---|---|---|
| 113. | திருவூறல் | 1006 | மாறில் அவுணர் | 106 |
| 114. | திருக்கள்ளில் | 1007 | முள்ளின் மேல் | 119 |
| 115. | திருவாலங்காடு | 1010 | துஞ்ச வருவாரும் | 45 |
| 116. | கயிலாயம் | 1026 | பொடிகொளுருவர் | 68 |
| 117. | திருப்பருப்பதம் | 1027 | சுடுமணி உமிழ் | 118 |
| 118. | திருவேற்காடு | 1030 | ஒள்ளிதுள்ள | 57 |
| 119. | வலிதாயம் | 1031 | பத்தரோடு | 3 |
| 120. | திருஇடைச்சுரம் | 1126 | வரிவளர விரொளி | 78 |
| 121. | திருக்கழுக்குன்றம் | 1131 | தோடுடையானொரு | 103 |
| 122. | அச்சிறுபாக்கம் | 1133 | பொன்திரண்டன்ன | 77 |
| 123. | திருச்சோபுரம் | 1135 | வெங்கண் ஆனை | 51 |
| 124. | சீர்காழி (வேணுபுரம்) (ஊரின் தோற்றம்) | 1147 | வண்டார் குழலரிவை | 9 |
| 125. | (புகலி) சீர்காழி இறைவனைப் பாடியது | 1154 | விதியாய் விளைவாய் | 30 |
| 126. | சீர்காழி (வெங்குரு இறைவனைப் பாடியது | 1154 | காலை நன்மாமலர் | 75 |
| 127. | சீர்காழி (தோணிபுரம்) இறைவனைப் பாடியது | 1154 | வண்டரங்க | 60 |
| 128. | சீர்காழி (சிரபுரம்) இறைவனைப் பாடியது | 1154 | பல்லடைந்த | 47 |
| 129. | சீர்காழி (சிரபுரம்) இறைவனைப் பாடியது | 1154 | வாருறுவன | 109 |
| 130. | சீர்காழி (புறவம்) இறைவனைப் பாடியது | 1154 | எய்யாவென்றி | 97 |
| 131. | சீர்காழி (சண்பை) இறைவனைப் பாடியது | 1154 | பங்கமேறு | 66 |
| 132. | சீர்காழி (சண்பை) இறைவனைப் பாடியது | 1154 | அடலேறமரும் | 34 |
| 133. | சீர்காழி (சண்பை) இறைவனைப் பாடியது | 1154 | நல்லார் தீமேவும் | 81 |

| | | | | |
|---|---|---|---|---|
| 134. | சீர்காழி (சண்பை) இறைவனைப் பாடியது | 1154 | உரவார் கலை | 102 |
| 135. | சீர்காழி (கழுமலம்) இறைவனைப் பாடியது | 1154 | அயிலுறு படையினர் | 79 |
| 136. | சீர்காழி (கழுமலம்) இறைவனைப் பாடியது | 1154 | சேவுயரும் | 129 |

## தல அட்டவணை

முதல் திருமுறையில் 136 பதிகங்களும் 88 தலங்களில் பாடப்பட்டுள்ளன. ஒன்று பொதுப் பதிகம்.

| தலம் | பதிகங்கள் |
|---|---|
| காழி | 24 |
| வீழி | 8 |
| இடைமருது | 5 |
| முதுகுன்றம் | 4 |
| ஐயாறு | 3 |
| சிவபுரம் | 3 |
| அண்ணாமலை, ஆரூர், ஆலவாய், நறையூர்ச் சித்தீச்சரம், மாற்பேறு, வலிவலம். ஒவ்வொரு தலத்துக்கும் 2 பதிகங்கள் 6 x 2 | 12 |
| மற்ற தலங்கள் 76க்கு தலா 1 பதிகம் | 76 |
| பொது (அவ்வினைக்கிவ்வினை) | 1 |
| **88 தலங்கள்** | **136 பதிகங்கள்** |

## சொல்லணியிய-ன் மூல இலக்கியம் ஞானசம்பந்தன் செந்தமிழ்

நான்காம் தலப்பயண நிறைவில் திருஞானசம்பந்தப் பெருமான் காழிப்பதியில் தங்கியிருந்த போது நாவரசர் அவரைக்காண வருகிறார். இருவரும் பல நாள் தங்கியிருந்த பின் நாவரசர் சிவபெருமான் எழுந்தருளி இருக்கும் திருப்பதிகளுக்குச் சென்று வணங்க வேண்டும் எனத் திருவுள்ளம் கொள்ளப் பிள்ளையாரும் பிரியா விடை கொடுத்து அனுப்பினார்.

பின்னரும் திருத்தோணிபுரத்து இறைவரை வணங்கிவரும் காலமெல்லாம் செந்தமிழ் மாலையின் வகைகளாக உள்ள

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | திருமொழிமாற்று | வியாழக்குறிஞ்சி | 117 | முதல் திருமுறை |
| 2. | திருஏகபாதம் | வியாழக்குறிஞ்சி | 127 | முதல் திருமுறை |
| 3. | திரு இருக்குக்குறள் | குறிஞ்சி | 90 | முதல் திருமுறை |
| 4. | திரு எழுகூற்றிருக்கை | வியாழக்குறிஞ்சி | 128 | முதல் திருமுறை |
| 5. | திருவிராகம் | நட்டபாடை | 19 | முதல் திருமுறை |
| 6. | திருத்தாளச்சதி | வியாழக்குறிஞ்சி | 126 | முதல் திருமுறை |
| 7. | திருப்பல் பெயர்ப்பத்து | தக்கேசி | 63 | முதல் திருமுறை |

முதலிய பதிகங்களைப் பாடி அருளினார். இவை போன்றே மூன்று திருமுறைகளிலும் மூல இலக்கியப் பதிகங்கள் இடம் பெற்றுள்ளன. இவை இன்றிருக்கும் இவ்வகையான இலக்கியங்களுக்கு மூல இலக்கியங்கள் ஆகும். இவற்றைப் பாணரும் தம் யாழில் இட்டு இசைத்து வந்தனர்.

தமிழுக்குத் திருஞான சம்பந்தர் ஆற்றிய தொண்டினை வர்ணிக்க வார்த்தைகள் கிடையா. அவருடைய திருமுறைகளில் அவர் தமிழ், தமிழ் என்று மொழிந்ததைப் போல மற்ற தமிழ் இலக்கியங்களில் காண்பது அரிது. தன்னைத் தமிழ் ஞானசம்பந்தன் என்று சொல்லிக் கொள்வதில் அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

# இயற்பகுதி

# திருஞானசம்பந்தர்

## முதல் திருமுறையில் அருளிய அற்புதத் திருப்பதிகங்கள்

### அற்புதத் திருப்பதிகங்கள்

தேவாரத்திருப்பதிகங்களில் இறைவனது திருவருட் பெருமையினை உலகமக்கள் உணர்ந்து போற்றும்படி வியப்புடைய செயற்கரிய அருட்செயல்கள் நிகழும் வண்ணம் பாடப்பெற்ற திருப்பதிகங்களை **அற்புதப் பதிகங்கள்** எனச் சான்றோர்கள் வகைப்படுத்தியுள்ளனர். முதல் திருமுறையில் மொத்தம் 136 திருப்பதிகங்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றில் கீழ்க்காணும் ஏழு திருமுறைப்பதிகங்கள் அற்புதப்பதிகங்கள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன.

| பதிக எண் | பதிக முதற்குறிப்பு | சிறப்பு |
|---|---|---|
| 1 | தோடுடைய செவியன் | சீர்காழி பிரமதீர்த்தக் குளக்கரையில் உமையம்மையார் ஞானப்பால் ஊட்டியபின் மூன்று வயதில் பாடப்பட்ட முதற்பதிகம் |
| 23 | மடையில் வாளை | திருக் கோலக்காவில் பொற்றாளம் பெற்றுப் பாடிய பதிகம் |
| 44 | துணிவளர் திங்கள் | திருப் பாச்சிலாச்சிராமத்தில் கொல்லி மழவன் மகளைப் பற்றிய முயலகன் என்னும் நோய்தீரப் பாடிய பதிகம் |
| 116 | அவ்வினைக்கிவ்வினை | கொங்குநாட்டுத் திருச்செங்கோட்டில் சுரநோய் / பனி நோய் நீங்கப்பாடிய திருநீலகண்டப்பதிகம் |
| 49 | போகமார்த்த பூண்முலையாள் | பச்சைப் பதிகம் - மதுரையில் சமணரோடு நிகழ்த்தி வெற்றி பெற்ற அனல் வாதத்தில் தீயிலிட்டும் வேகாது பச்சையாய் ஏடு விளங்கிய ஆற்றல் பெற்ற பதிகம் |
| 54 | பூத்தேர்ந்தாயன | திருவோத்தூரில் ஆண்பனை, பெண் பனையாகும் வண்ணம் பாடிய பதிகம். உயிர்கள் அச்சுமாறிப் பிறப்பதற்கு ஆதாரம் |
| 92 | வாசிதீரவே காசு நல்குவீர் | திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றுப் பஞ்சம் நீக்கப்பாடியது |

**முதல் திருமுறையில் குறிப்பிட்ட பயன்தரும் / சிறப்புக் குறிப்புடைய பதிகங்கள்**

| பதிக எண் | பதிக முதற்குறிப்பு | சிறப்பு |
|---|---|---|
| 52 | மறையுடையாய் | திருநெடுங்களம் - இடர்களையும் திருப்பதிகம் |
| 21 | புவம் வளிகனல்புனல் | பொங்குமிசைத் திருப்பதிகம் - திருச்சிவபுரம் - இம்மைப் பயன்கள் அனைத்தையும் நல்கும் பதிகம் |
| 128 | ஓருரு வாயினை | திருஎழுகூற்றிருக்கை திருஞானசம்பந்தர் அருளிய சித்திரக் கவிகளுள் ஒன்றாகிய இப்பதிகத்தை மட்டுமே பாராயணம் புரிவோர், அவர் அருளிய அனைத்துப் பதிகங்களையும் ஓதிய பயனைப் பெறுவர் |
| 98 | நன்றுடையானைத் தீயதிலானை | நன்றுடையான், தீயதிலான் என்ற 2 தீர்த்தங்களை அறிவித்தருளும் திருச்சிராப்பள்ளித் தேவாரத் திருப்பதிகம், சுகப்பிரசவத்துக்காகப் பாடப்படும் பதிகம் |
| 136 | மாதர் மடப்பிடியும் மடவன்னமும் | தவறான எண்ணத்திலிருந்த திருநீல கண்ட யாழ்ப்பாணரது சுற்றத்தார் உண்மை உணர்ந்து உய்ய வேண்டும் என்ற திருவுள்ளத்தால் திருஞானசம்பந்தர் மக்களது கண்டத்திலும், யாழிலும், இசைநூலில் சொல்லப்பட்ட எல்லா முயற்சியிலும் அடங்காத "மாதர் மடப்பிடி" என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்தார். யாழைக்காட்டிலும் இசைவன்மை வாய்ந்தது "யாழ்மூரி" என்னும் இத்திருப்பதிகமாகும். |
| 132 | ஏரிசையும் வடவாலின் கீழிருந்தது | பண்டிதர்கள் பலகாற் பயிலும் ஓசையைக் கேட்டுக் கிளிகள் வேதப் பொருள் சொல்லும் திருவீழிமிழலை திருமால் 1000 தாமரை மலர்கள் கொண்டு தினமும் பூசித்துச் சக்கரம் பெற்ற கோயில். 300 அந்தணர்கள் தினமும் பூசை செய்த கோயில். |
| 10 | உண்ணாமுலை உமையாளொடும் | திருவண்ணாமலைத் திருப்பதிகம் |

| பதிக எண் | பதிக முதற்குறிப்பு | சிறப்பு |
|---|---|---|
| 11 | பூவார் மலர்கொண்டு அடியார் தொழுவார் | திருவண்ணாமலைத் திருப்பதிகம் |
| 12 | வண்டார் குழலரிவையொடு பிரியாவகை | சீர்காழிக்குரிய 12 திருப்பெயர்களில் ஒன்று வேணுபுரம், அதன் பெருமைகளை விவரிப்பது. |
| 13 | பந்தத்தால் வந்தெப்பால் பயின்று நின்ற | சித்திரக்கவிகளில் ஒன்றான இப்பாடல் திருத்தாளச்சதி என்று சொல்லப்படுகிறது. சம்பந்தரின் பதிகங்கள் இவ்வகைக் கவிதைகளுக்கு மூல இலக்கியங்கள் என்பதற்கு இது எடுத்துக்காட்டு |
| 14 | அங்கமும் வேதமும் ஓதும் நாவர் | மருகற்பெருமான் செங்காட்டங்குடி கணபதி ஈச்சரத்துத் திருவோலக்கத்தைக் காட்டியருள அப்போது பாடியது |

# முதல் திருமுறையில் திருக்கடைக்காப்பு

முதல் திருமுறையின் 136 திருக்கடைக் காப்புகளும் பட்டியலிடப்பட்டு ஞானசம்பந்தர் சொன்ன பதிகப் பயன்களில் எந்தப் பதிகத்துப் பயனுக்கு அவர் மிக அதிக முக்கியத்துவம் கொடுத்துள்ளார் என்று ஆராயப்பட்டு தொகுத்தளிக்கப்பட்டுள்ளது.

| பதிக எண் | திருக்கடைக்காப்பு (பதிகந்தோறும், பண்தோறும்) |
|---|---|
| | **நட்டபாடை** |
| 1. | ஞானசம்பந்தன் உரை செய்த திருநெறிய தமிழ் வல்லவா் தொல்வினை தீா்தல் எளிதாமே (காழி) |
| 2. | இசைபாடிய மாந்தா் பிரமன்னடி சோ்ந்து குற்றமின்றிக் குறைபாடொழியப் புகழோங்கிப் பொலிவாரே (புகலூா்) |
| 3. | ஞானசம்பந்தன் தமிழ்பத்துங் கொண்டுவைகியிசைபாடவல்லாா் குளிா் வானத் துயா்வாரே (வலிதாயம்) |
| 4. | ஞானசம்பந்தன் சொன்ன பண்ணியல் பாடல் வல்லாா்கள் இந்தப் பாரோடு விண்பரிபாலகரே (புகலியும் மிழலையும்) |
| 5. | ஞானசம்பந்தன் நல்ல தன்னிசையாற் சொன்ன மாலைபத்துந் தாங்க வல்லாா் புகழ் தாங்குவாரே (கீழைத்திருக்காட்டுப்பள்ளி) |
| 6. | சூலம் வல்லான் கழலேத்துபாடல் சொல்லவல்லாா் வினையில்லையாமே (மருகலும், செங்காட்டக்குடியும்) |
| 7. | ஞானசம்பந்தன் சொன்ன இன்புடைப் பாடல்கள் பத்தும் வல்லாா் இமையவரேத்த விருப்பா் தாமே (நள்ளாறும், ஆலவாயும்) |
| 8. | ஞானசம்பந்தன் சொன்ன கொண்டினிதாவிசை பாடியாடிக் கூடுமவருடையாா்கள்வானே (ஆவூா்ப்பசுபதீச்சரம்) |
| 9. | இவைபத்தும் இசைவல்லாா் கேதத்தினையில்லாா் சிவகதியைப் பெறுவாரே (வேணுபுரம்) |
| 10. | ஞானசம்பந்தன் தமிழ்வல்லவா் அடிபேணுதல் தவமே (அண்ணாமலை) |
| 11. | தமிழ்பத்தும் யாழின்னிசை வல்லாா் சொலக் கேட்டவரெல்லாம் ஊழின்மலி வினைபோயிட உயா் வானடைவாரே (வீழிமிழலை) |

| | |
|---|---|
| 12. | தமிழ்மாலைகள் இசையோடிவைபத்தும் பகரும் அடியவர்கட்கிடர் பாவமடையாவே. (முதுகுன்றம் ) |
| 13. | ஞானசம்பந்தன் துளங்கில் தமிழ் பரவித் தொழுமடியாரவரென்றும் விளங்கும் புகழதனோடுயர் விண்ணும் உடையாரே (வியலூர்) |
| 14. | சம்பந்தன் நலங்கொள் தமிழ்வல்லார் ஊனத்தொடு துயர்தீர்ந்துலகேத்தும் எழிலோரே (கொடுங்குன்றம்) |
| 15. | பாடல் இவைபத்தும் மிகவல்லார் சிவமல்கிய செல்வன்னடி சேர்வர் சிவகதியே – (நெய்த்தானம்) |
| 16. | ஞானசம்பந்தன் கந்தமலி பாடல் சொலியாடத் தவமாமே (புள்ளமங்கை) |
| 17. | படியாற் சொன்ன பாடல் சொலப்பறையும் வினைதானே (இடும்பாவனம்) |
| 18. | பந்தன் குன்றாத்தமிழ் சொல்லக்குறைவின்றி நிறைபுகழே (நின்றியூர்) |
| 19. | பிணைமொழி யனவொரு பதுமுடன் மருவிய மனமுடையவர் மதியுடையவர் விதியுடையவர்களே (கழுமலம்) |
| 20. | மனகிழ்வொடு பயில்வர் எழின் மலர்மகள் கலைமகள், சயமகள் இனமலிபுகழ் மகளிசைதர இருநிலனிடை யினிதமர்வரே (வீழிமிழலை) |
| 21. | பொங்குமிசைத் திருப்பதிகம் என்று சேக்கிழாரால் போற்றப்பட்டது – நவில்பவர் நிகழ்குலநிலநிறை திருவுருநிகரில கொடைமிகு சயமகள் புகழ்புவி வளர்விழி அடிமையின மிகைபுணர் தரநலமிகுவரே (சிவபுரம்) |
| 22. | தமிழ்விரகனதுரை யியல்வல இசைமலிதமிழொருபதும் வலவவரு லகினில் எழில்பெறுவரே (மறைக்காடு) |
| 23. | **தக்கராகம்**<br>பாடல்வல்ல வாய்மையார் உலங்கொள் வினைபோய் ஓங்கி வாழ்வரே (கோலக்கா) |
| 24. | ஞானசம்பந்தன் சொன்ன பாரார் புகழப் பரவ வல்லவர் ஏரார் வானத் தினிதாவிருப்பரே (சீகாழி) |
| 25.<br>26. | இசையாற் பாடல் இவைபத்தும் உறுமா சொல்ல ஓங்கிவாழ்வாரே (திருச்செம்பொன்பள்ளி)<br>பாடல்வல்லார் தமக்கென்றும் அல்லல் தீருமவல மடையாவே (திருப்புத்தூர்) |

| | |
|---|---|
| 27. | ஞானசம்பந்தன் பாடல் பத்தும் பரவி வாழ்மினே (திருப்புன்கூர்) |
| 28. | சந்தம்பரவு ஞானசம்பந்தன் வந்தவாறே புனைதல் வழிபாடே (சோற்றுத்துறை) |
| 29. | ஞானசம்பந்தன் பத்தும் பாடப்பறையும் பாவமே (திருநறையூர்ச்சித்தீச்சரம்) |
| 30. | தமிழ்ஞானசம்பந்தன் ஒண்மாலை வரைக்குந்தொழில் வல்லவர் நல்லவர்தாமே (திருப்புகலி) |
| 31. | தமிழ்மாலை செவிக்கினிதாக வல்லார்க் கெளிதாம் பிறவாவகைவீடே (குரங்கணில்முட்டம்) |
| 32. | பண்ணோடிசை பாடிய பத்தும் வல்லார்கள் விண்ணோருலகத்தினில் வீற்றிருப்பாரே (திருவிடைமருதூர்) |
| 33. | ஞானசம்பந்தன் பரவார் தமிழ் பத்திசை பாடவல்லார் போய் விரவாகுவர் வானிடை வீடெளிதாமே (அன்பிலாலந்துறை) |
| 34. | காழிநிலையாக நினைந்தவர் பாடல் வலரானவர் வானடைவாரே (சீகாழி) |
| 35. | வீழிம்மிழலை கிளர் பாடல் வல்லார்க்கிலை கேடே (வீழிமிழலை) |
| 36. | ஐயாற்றைச் சொலுமாலைவல்லார் துயர்வீடே (ஐயாறு) |
| 37. | ஆராத சொன்மாலைகள் பத்தாம் ஊரூர் நினைவார் உயர்வாரே |
| 38. | செயலால் உரை செய்தனபத்தும் உயர்வாம் இவைஉற்று உணர்வார்க்கே (திருமயிலாடுதுறை) |
| 39. | வேட்களமேன்மொழிந்த பண்ணியல்பாடல் வல்லார்கள் பழியொடு பாவமிலரே (வேட்களம்) |
| 40. | வல்லவன் வாழ்கொளிப்புத்தூர்ச் சொல்லிய பாடல்கள் வல்லார் துயர்கெடுதல் எளிதாமே (வாழ்கொளிப்புத்தூர்) |
| 41. | சீரணிதிகழ்பதிகம் - சம்பந்தன் செந்தமிழ் வல்லார் சீர்மலிந்தழகார் செல்வம தோங்கிச் சிவனடி நண்ணுவர்தாமே (பாம்புரம்) |
| 42. | பாதம் பரவிய பத்திவை வல்லார் உடையாராகி உள்ளமுமொன்றி உலகினின் மன்னுவர்தாமே (பேணுபெருந்துறை) |
| 43. | ஞானசம்பந்தன் பாமரு செந்தமிழ் மாலை பத்திவை பாடவல்லார்கள் பூமலி வானவரோடும் பொன்னுலகிற் பொலிவாரே (திருக்கற்குடி) |
| 44. | நற்றமிழ் ஞானசம்பந்தன் தகைமலி தண்டமிழ் கொண்டிவை யேத்தச் சாரகிலா வினைதானே (பாச்சிலாச்சிராமம்) |

| | |
|---|---|
| 45. | வேந்தனருளாலே விரித்த பாடலிவை வல்லார் சேர்ந்த விடமெல்லாந் தீர்த்தமாகச் சேர்வாரே (திருவாலங்காடு) |
| 46. | சூழுங்கழலானைச் சொன்ன தமிழ்மாலை வாழுந்துணையாக நினைவார் வினையிலரே (அதிகைவீரட்டம்) |
| | **பழந் தக்கராகம்** |
| 47. | சம்பந்தன் உரை பங்க நீங்கப் பாட வல்ல பத்தர்கள் பாரிதன் மேல் சங்கமோடு நீடி வாழ்வர் தன்மையினாலவரே (சிரபுரம்) |
| 48. | சம்பந்தனின் இன்னுரைகள் வாயடைந்து பாடவல்லார் வானுல காள்பவரே (சேய்ஞலூர்) |
| 49. | பாடல் பத்தும் இவை வல்லார் உண்புநீங்கி வானவரோடுலகில் உறைவாரே (நள்ளாறு) |
| 50. | பொன்னிநாடன் புகலி வேந்தன் ஞானசம்பந்தன் சொன்ன பன்னுபாடல் பத்தும் வல்லார் மெய்த்தவத்தோர் விரும்பும் மன்னு சோதி ஈசனோடே மன்னியிருப்பாரே (வலிவலம்) |
| 51. | ஞானசம்பந்தன் சொன்ன கோலம்மிக்க மாலை வல்லார் கூடுவர் வானுலகே – (சோபுரம்) |
| 52. | ஞானசம்பந்தன் சொன்ன பாடல் பத்தும்<br>பாடவல்லார் பாவம் பறையுமே (நெடுங்களம்) |
| 53. | திருமுதுகுன்றம் - பாடல் நிறைவடையவில்லை |
| 54. | ஞானசம்பந்தன் சொல்விரும்புவார் வினை வீடே (திருவோத்தூர்) |
| 55. | மன்னுகாழியுள் சம்பந்தன்சொல் பன்னவே வினைபாறுமே (மொழிமாலை) (திருமாற்பேறு) |
| 56. | ஞான சம்பந்தனதின்றமிழ் பத்தும் பாடிப்பரவுமே (பாற்றுறை) |
| 57. | ஞானசம்பந்தன் செந்தமிழ் கொண்டுபாடக் குணமாமே (திருவேற்காடு) |
| 58. | ஞானசம்பந்தன் சொல்லிவை பாடுவார்க்கிலை பாவமே (கரவீரம்) |
| 59. | பாடல்பத்துங் கருத்துணரக் கற்றாரும் கேட்டாரும் போய் விண்ணோருலகத்து மேவிவாழும் விதியதுவேயாகும் வினைமாயுமே (தூங்கானைமாடம்) |
| 60. | சம்பந்தன்னுரைசெய்த சீர்மிகுந்த தமிழ்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே (தோணிபுரம்) |
| 61. | மறையிலங்கும் தமிழ் வல்லார் வானுலகத்திருப்பாரே (செங்காட்டங்குடி) |
| 62. | ஞானசம்பந்தன் வண்டமிழ் கொண்டின்பமர வல்லார்கள் எய்துவார்கள் ஈசனையே – (கோளிலி) |

| | |
|---|---|
| | **தக்கேசி** |
| 63. | பல்பெயர்ப்பத்தும் வல்லார்க்கடையா வினைகள் உலகில் நாளும் அமருல காள்பவரே (பிரமபுரம்) பல்பெயர்பத்து 12 பாடல்கள் - சீர்காழியின் 12 பெயர்கள் |
| 64. | பண்ணார் பாடல் பத்தும் வல்லார் பயில்வது வானிடையே (பூவணம்) |
| 65. | ஞானசம்பந்தன் சொல் சித்தஞ்சேர செப்பு மாந்தர் தீவினை நோயிலராய் ஒத்தமைந்த உம்பர்வானில் உயர்வினொடோங்குவரே (காவிரி பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம்) |
| 66. | ஞானசம்பந்தன் சொற் சிந்தை செய்து பாடவல்லார் சிவகதி சேர்வாரே (சண்பைநகர்) |
| 67. | பெருமான் பழனத்தை வாயிற்பொலிந்த மாலைபத்தும் வல்லார் நல்லாரே (பழனம்) |
| 68. | கயிலை மலையார் மேல் செஞ்சொன்மாலை செப்புமடியார் மேல் வாரா பிணிகள் வானோருலகின் மருவு மனத்தாரே (திருக்கயிலாயம்) |
| 69. | அண்ணாமலையாரைக் காழி ஞானசம்பந்தன் சொல்லான் மலிந்த பாடலான பத்துமிவை கற்று வல்லாரெல்லாம் வானோர் வணங்க மன்னி வாழ்வாரே (அண்ணாமலை) |
| 70. | ஈங்கோய் மலைஈசன் கழல்சேர் பாடல் பத்தும் வல்லார் கவலை களைவாரே (ஈங்கோய் மலை) |
| 71. | நறையூர்ச்சித்தீச்சரத்தாரை மயிலார் சோலை சூழ்ந்த காழி மல்கு சம்பந்தன் பயில் வார்க்கினிய பாடல் வல்லார் பாவநாசமே (நறையூர்ச் சித்தீச்சரம்) |
| 72. | சம்பந்தன் உருவார் செஞ்சொன் மாலையிவைபத்துரைப்பாருலகத்துக்குக் கருவாரிடும்பைப் பிறப்பதறுத்துக் கவலை கழிவாரே (குடந்தைக் காரோணம்) |
| 73. | ஞானசம்பந்தன் சொற்பத்தும் பாடியே தொழுது பொழுது தோத்திரங்கள் சொல்லித் துதித்து நின்று அழுது நக்குமன்பு செய்வார் அல்லலறுப்பாரே (கானூர்) |
| 74. | தமிழின் விரகனுரைத்த தமிழ்மாலை பன்னாள் பாடியாடப் பிரியார் பரலோகந் தானே (புறவம்) |

| | |
|---|---|
| | **குறிஞ்சி** |
| 75. | ஞானசம்பந்தன் நவின்ற இவ்வாய்மொழிநலமிகு பத்தும் பண்ணியல் பாகப் பத்திமையாலே பாடியுமாடியும் பயில வல்லார்கள் விண்ணவர் விமானங் கொடுவரவேறிவியனுலகாண்டு வீற்றிருப்பர் தாமே (வெங்குரு) |
| 76. | இலம் பையங்கோட்டூர் இசையோடு கூடிய பத்தும் வல்லார் போய் வெந்துயர் கெடுகிட விண்ணவரோடும் வீடுபெற்று இம்மையின் வீடெளிதாமே (இலம்பையங்கோட்டூர்) |
| 77. | ஞானசம்பந்தன தமிழ் கொண்டச்சிறுபாக்கத்தடிகளை யேத்து மன்புடையடியவர் அரு வினையிலரே (அச்சிறுபாக்கம்) |
| 78. | இடைச்சுரமேத்திய விசையோடு பாடலிவை சொலவல்லவர் பிணியிலர்தாமே – (இடைச்சுரம்) |
| 79. | உரைசெய்த பத்து முண்மையினானினைந் தேத்தவல்லார் மேல் மெலிகெழு துயரடையா வினைசிந்தும் விண்ணவராற்றலின் மிகப் பெறுவாரே (கழுமலம்) |
| 80. | சூலப்படையானைச் சொன்ன தமிழ்மாலை கோலத்தாற் பாடவல்லார் நல்லாரே (கோயில்) |
| 81. | பேசுந்தமிழ் வல்லோர் பெருநீருலகத்துப் பாசந்தனை யற்றுப் பழியில் புகழாரே (சீகாழி) |
| 82. | சம்பந்தன் வாய்மைத்திவை சொல்ல வல்லோர் நல்லோரே (வீழிமிழலை) |
| 83. | உருகா உரைசெய்வார் உயர் வானடைவாரே (அம்பர்மாகாளம்) |
| 84. | தமிழ் மாலை பாடுமவ ரெல்லாம் கரையா வுருவாகிக் கலி வானடைவாரே (நாகை) |
| 85. | தமிழ் ஞானசம்பந்தன் சொன்ன கலைகள் இவை வல்லார் கவலை கழிவாரே (நல்லம்) |
| 86. | வண்ணம் புனைமாலை வைகலேத்துவார் விண்ணும் நிலனுமாய் விளங்கும் புகழாரே (நல்லூர்) |
| 87. | சம்பந்தன் அடிஞானம் வல்லாரடி சேர்வார்களே (வடுகூர்) |
| 88. | ஞானசம்பந்தன் சந்தம் இவை வல்லார் தடுமாற்றறுப்பாரே (ஆப்பனூர்) |
| 89. | மாலை இவை வல்லார் பாராரவரேத்தப் பதிவானுறைவாரே (எருக்கத்தம்புலியூர்) |
| 90. | தொழுமனத்தவர், கழுமலத்துறை பழுதில் சம்பந்தன், மொழிகள் பத்துமே (திருப்பிரமபுரம்) |

| | |
|---|---|
| 91. | சீரூர் சம்பந்தன், ஆருரைச் சொன்ன பாரூர் பாடலார், பேராரின்பமே (ஆரூர்) |
| 92. | காழிமாநகர் வாழிசம்பந்தன் வீழிமிழலை மேல் தாழும் மொழிகளே (வீழிமிழலை) |
| 93. | நின்று முதுகுன்றை, நன்று சம்பந்தன் ஒன்று முரைவல்லார், என்று முயர்வோரே (முதுகுன்றம்) |
| 94. | அடிகளாலவாய்ப் படிகொள் சம்பந்தன் முடிவிலின்றமிழ், செடிகணீக்குமே (ஆலவாய்) |
| 95. | கருதுசம்பந்தன், மருதரடிபாடிப், பெரிதுந்தமிழ் சொல்லப், பொருத வினை போமே (இடைமருது) |
| 96. | பூந்தராய்ப் பந்தன், ஆய்ந்த பாடலால் வேந்தன் அன்னியூர், சேர்ந்து வாழ்மினே (அன்னியூர்) |
| 97. | தன்னியல்பில்லாச் சண்பையர் கோன் சீர்ச்சம்பந்தன் இன்னிசை யீரைந்தேத்த வல்லோர்கட் கிடர்போமே (புறவம்) |
| 98. | ஞானசம்பந்தன் நலமிகு பாடலிவை வல்லார் வானசம்பந்தத் தவரொடு மன்னி வாழ்வாரே (சிராப்பள்ளி) |
| 99. | ஞானசம்பந்தன் பாடல் பத்தும் பாட நம்பாவம் பறையுமே (குற்றாலம்) |
| 100. | தொடைமலி பாடல் பத்தும் வல்லார் தந்துயர் போகி விடமலிகண்ட னருள் பெறுந்தன்மை மிக்கோரே (பரங்குன்றம்) |
| 101. | ஞானசம்பந்தன் பாமருபாடல் பத்தும் வல்லார் மேற் பழிபோமே (கண்ணார் கோயில்) |
| 102. | ஞானசம்பந்தன் படிகொள் பாடல் வல்லவர் தம்மேற் பழிபோமே (சீகாழி) |
| 103. | ஞானசம்பந்தன் தமிழ்மாலை பண்ணியல்பாற் பாடிய பத்துமிவை வல்லார் புண்ணியராய் விண்ணவரோடும் புகுவாரே (கழுக்குன்றம்) |
| 104. | **வியாழக் குறிஞ்சி**<br>ஞானமிகுசம்பந்தன் தமிழ்மாலை நாவில் ஓத வல்லார் உலகில் உறுநோய் களைவாரே (புகலி) |
| 105. | வழிபாடிவைபத்தும் வாய்க்கச் சொல்லுதல் கேட்டல் வல்லார் துன்பந்துடைப்பாரே (ஆரூர்) |
| 106. | நாடலரும் புகழான் மிகுஞானசம்பந்தன் சொன்ன நல்ல பாடல்கள் பத்தும் வல்லார் பரலோகத் திருப்பாரே (ஊறல்) |

| | |
|---|---|
| 107. | கொடிமாடச் செங்குன்றூரேத்தும் நலமலி பாடல் வல்லார் வினையான நாசமே (கொடிமாடச் செங்குன்றூர்) |
| 108. | புகலிந்நகர் மன்னன் தன்னொளி மிக்குயர்ந்த தமிழ் ஞானசம்பந்தன் சொன்ன இன்னிசை பத்தும் வல்லா ரெழில் வானத்திருப்பாரே (பாதாளீச்சரம்) |
| 109. | சிவனடியைப்பரவிய செந்தமிழ் பத்தும் வல்லார் திருவொடு புகழ்மல்கு தேசிகரே (சிரபுரம்) |
| 110. | நலமிகு ஞானசம்பந்தன் சொன்ன பலமிகு தமிழிவை பத்தும் வல்லார் உலகுறு புகழிடனொடோங்குவாரே (இடைமருது) |
| 111. | கடைமுடிச் சிவனடியை நன்றுணர் ஞானசம்பந்தன் சொன்ன இன்றமிழ் இவை சொல வின்பமாமே (கடைமுடி) |
| 112. | காழியர்கோன் தவமல்கு தமிழிவை சொல்ல வல்லார் நவமொடு சிவகதி நண்ணுவரே (சிவபுரம்) |
| 113. | நற்றமிழ் ஞானசம்பந்தன் சொன்ன குற்றமில் செந்தமிழ் கூறவல்லார் பற்றுவரீசன் பொற்பாதங்களே (வல்லம்) |
| 114. | மாற்பேற்றைச் சந்தமின் றமிழ்கள் கொண்டேத்தவல்லார் எந்தை தன்கழலடி எய்துவரே (மாற்பேறு) |
| 115. | திருக்கடைக்காப்பு நிறைவுபெறவில்லை (இராமனதீச்சரம்) |
| 116. | திறம்பயின் ஞானசம்பந்தன் செந்தமிழ் பத்தும் வல்லார் நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே (பொது) |
| 117. | ஞானசம்பந்தன் ஞானத்தமிழ் நன்குணரச் சொல்லிடல் கேட்டல்வல்லோர் தொல்லை வானவர் தங்களொடும் செல்குவர் சீரருளாற் பெறலாம் சிவலோக மதே (திருப்பிரமபுரம்) மொழிமாற்று |
| 118. | ஞானசம்பந்தனல்ல ஒண் சொலினிவைமாலை யுருவெணத் தவமாமே (பருப்பதம்) |
| 119. | கள்ளிலேத்தப் புகழோடும் பேரின்பம் புகுதுமன்றே (கள்ளில்) |
| 120. | தமிழிவை கற்று வல்லார் மிகநலமலி புகழ்மிகு நன்மையர் தாமே (ஐயாறு) |
| 121. | படமலி தமிழிவை பரவ வல்லவர் வினை கெடமலி புகழொடு கிளரொளியினரே (இடைமருது) |
| 122. | இடைமருதினைப் பரவிய வொருபது பயில்வல்லவர் இடர் விரவிலர் வினையொடு வியனுல குறவே (இடைமருது) |

| | |
|---|---|
| 123. | தன்னியல் கலைவல தமிழ் விரகன துறை உன்னிய ஒருபதும் உயர் பொருள் தருமே (வலிவலம்) |
| 124. | தமிழ் விரகனமொழி பத்தியில் வருவன பத்திவை பயில்வொடு கற்று வல்லவருலகினில் அடியவரே (வீழிமிழலை) |
| 125. | எந்தையை யுரைசெய்த விசைமொழிபவர் வினைசிந்தி முனுறவுயர் கதிபெறுவர்களே (சிவபுரம்) |
| 126. | ஏழே ஏழே நாலே மூன்றியலிசை யிசையியல்பா வஞ்சத்தேய்வின்றிக்கே மனங் கொளப் பயிற்றுவோர் மார்பேசேர்வாள் வானோர்சீர் மதிநுதன்மடவரலே (திருக்கழுமலம்) திருத்தாளச்சதி |
| 127. | கழுமல முதுபதி கவுணியன் கட்டுரை – ஏகபாதம் (பிரமபுரம்) |
| 128. | அனையதன்மையை யாதலின் நின்னை நினைய வல்லவர் இல்லை நீணிலத்தே (பிரமபுரம்) (எழுகூற்றிருக்கை) |
| | **மேகராகக்குறிஞ்சி** |
| 129. | இவை வல்லார் தூமலராள் துணைவராகி முற்றுலகமது ஆண்டு முக்கணானடி சேர முயல்கின்றாரே (திருக்கழுமலம்) |
| 130. | ஈசனடியேத்துவார்கள் தன்னிசையோடமருலகில் தவநெறி சென்றெய்துவார் தாழாதன்றே (ஐயாறு) |
| 131. | தமிழ் ஞான சம்பந்தன் சமைத்தபாடல் வழங்குமிசை கூடும்வகை பாடுமவர் நீடுலக மாள்வர்தாமே (முதுகுன்றம்) |
| 132. | பத்துமேத்தி இன்னிசையாற் பாடவல்லார் இருநிலத்தில் ஈசனெனும் இயல்பினோரே (வீழிமிழலை) |
| 133. | தமிழ் ஞானசம்பந்தன் பரவிய பத்தும் வல்லார் சீரினார் புகழோங்கி விண்ணவரோடுஞ் சேர்பவரே (கச்சியேகம்பம்) |
| 134. | பொறிநீடரவன் புனைபாடல் வல்லார்க் கறுநீடவல மறும் பிறப்புத்தானே (பறியலூர் வீரட்டம்) |
| 135. | செல்வன் ஞானசம்பந்தன செந்தமிழ் செல்வமாமிவை செப்பவே (பராய்த்துறை) |
| 136. | பேணுதல் உரியார் இன்னொடு நன்னுல கெய்துவ ரெய்திய போகமு முறுவர்கள் இடர் பிணிதுயரணைவ்விலரே (திருத்தருமபுரம்) |

# முதல் திருமுறையில் திருஞானசம்பந்தரின் திருக்கடைக் காப்புப் பாடல்களின் பயன்களின் தொகுப்பு

| பண் | பதிகப்பயனும் எண்ணிக்கையும் | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | தொல்வினை | வினை | புகழ் / எத்துதல் பெறுவர் | வான் /விண்/ இமையவர் பேறு | சிவகதி | தவம் | இடர் / பாவம் / துயர் கெடும் | மதியுடையார் | மலர் மகள் / செயமகள் | எழில் பெறுவர் | அல்லல் தீரும் | நல்லவர் | கேடில்லை | தீர்த்தம் | சிறப்பு வாழ்வு | வீடு பேறு | செல்வம் | நல்லவர் | உயர்வோர் | சங்கமொடு நீடுவாழ்வார் | குணம் | தடுமாற்றுப்பார் | இன்பம் | நோய் நீங்கும் | அடியவர் | உலகை ஆள்பவர் |
| 1. நட்ட பாடை | 1 | 2 | 5 | 6 | 2 | 2 | 2 | 1 | 2 | 1 | | | | | | | | | | | | | | | | |
| 2. தக்க ராகம் | | 3 | 1 | 5 | | | 4 | | | | 1 | 1 | 1 | 1 | 1 | 3 | 1 | 1 | 2 | | | | | | | |
| 3. பழந்தக்க ராகம் | | 3 | | 5 | | | 2 | | | | | | | | | 3 | | | | 1 | 1 | | | | | |
| 4. தக்கேசி | | 2 | | 4 | 1 | | 2 | | | | 3 | | | | 1 | 1 | | | | | | | | | | |
| 5. குறிஞ்சி | | 4 | 2 | 5 | | | 7 | | 2 | | 1 | 2 | | | 2 | 2 | | | 1 | | | 1 | 1 | | | |
| 6. வியாழக்குறிஞ்சி | | 2 | 5 | 3 | 1 | 1 | 3 | | 3 | | | | | | | 5 | | | 2 | | | | 1 | 1 | 1 | |
| 7. மேகராகக் குறிஞ்சி | | | | 2 | | | | | | | | | | | 1 | 1 | 1 | | 1 | | | | | | | 1 |
| 8. யாழ்முரி | | | | | | | 1 | | | | | | | | | | | | | | | | | | | |
| | 1 | 16 | 13 | 30 | 4 | 3 | 21 | 1 | 7 | 1 | 5 | 3 | 1 | 1 | 5 | 15 | 2 | 1 | 6 | 1 | 1 | 1 | 2 | 1 | 1 | 1 |

| பதிகப்பயன் | பதிகங்களின் எண்ணிக்கை |
|---|---|
| 1. வான், விண், இமையவர் பேறு பெறுவர் | 30 |
| 2. இடர், பாவம், துயர் நீங்குவர் | 21 |
| 3. வீடுபேறு / சிவகதி | 19 |
| 4. வினை நீக்கம் | 16 |

## பெண் வழியே பண்கள் அறிவித்த பெருமான்

(பேராசிரியர் ம.வே. பசுபதி அவர்கள் உவந்தளித்த கட்டுரை)

கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் அருளிச் செய்த, நம்பியாண்டார் நம்பிபுராணம் என்னும் திருமுறை கண்ட புராணத்துள் இறையருளால் திருமுறைகளைக் கண்டெடுத்துத் தொகுத்த வரலாறு 45 செய்யுட்களில் கூறப்பெற்றுள்ளது.

நம்பியாண்டார் நம்பிகள், நம் சமயாசாரியர்கள் திருவாய் மலர்த்திப் பாடியருளிய முறையில் பண்கள் பற்றி அறிய எருக்கத்தம்புலியூர்த் திருக்கோயிலுக்குச் சென்றார். எருக்கத்தம்புலியூர் திருநீலகண்டயாழ்ப்பாணர் அவதரித்த திருத்தலமாகும். அத்திருத்தல இறைவரின் திருப்பெயர் நீலகண்டேசுவரர் என்பதாகும்.

நம்பியாண்டார் நம்பிகள் நீலகண்டேசுவரரிடம் "அரசே! இன்னிசை தந்தருள்" என உருகி வேண்டினார். நம் பெருமானார் "திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த ஒருத்திக்குத் திருமுறைப் பண்களை உணர்த்தியுள்ளோம்" என அருள்பாலித்தார். அவளை அழைத்து ஆசாரியர்கள் பாடியவாறே பாடுவித்துக் கட்டளைகளும் வகுக்கப்பெற்றன.

இச்செய்திகளைக் கீழ்வரும்பனுவல்கள் தெரிவிக்கின்றன.

"சீர் அருள்சேர் அறுபத்து மூவர்தனித் திருக்கூட்டம்
சாரும்அவர் ஒன்பானும் தண்தமிழால் உரைசெய்து
பேரிசையாம் வகைஅடைவு புவியினிடைப் பெருமையினால்
சீர்உலவு திரு எருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார்"

- (தி.மு.க.பு. 30)

"சென்னிஅருள் நம்பிஇவர் அந்நகரைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலம்கொண்டு பணிந்து 'அரனே!
இன்இசை தந்து அருள்' என்ன, இரக்கமுடன் குறைந்து, இரப்பக்
கன்னிஒரு பங்குடையோன், அருள்செய்த கடன்உரைப்பாம்"

- (தி.மு.க.பு. 31)

"நல்இசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லிஒருத்திக்கு இசைகள் வாய்ப்ப அளித்தோம்" என்று
சொல்லஅவள் தனைஅழைத்துச் சுருதிவழிப் பண்தழுவும்
நல்இசையின் வழிகேட்டு நம்பி, இறை, உள்மகிழ்ந்தார்"

- (தி.மு.க.பு. 32)

"ஆங்குஅவளை அம்பலத்துள் ஆடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாடல்
ஓங்கு அருளால் முறைபணித்தற்கு ஒக்கும்" என ஓர் ஓசை
நீங்கரிய வானின்கண் நிகழ, அரசன் கேட்டான்."

- (தி.மு.க.பு. 33)

"மன்னனுக்கும் நம்பிக்கும் மறையவர் மூவாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க்கும் கேட்க
இன்னருள்முன் வியந்துரைத்த இவள்முதலா இசைத்த இசை
தென்நிலமேல் மிகத்தோன்றத் திருவருளால் தோன்றியதாம்"

- (தி.மு.க.பு. 34)

(35-ஆம் பனுவலிலிருந்து 43 வரை பண்களின் கட்டளைகள்)

பதிகம் என்ற பிரபந்த வகையை முதன்முதலாகப் பாடுதற்குக் காரைக்காலம்மையாருக்கும், திருமுறைப் பண்களை முற்றுமாக முதலில் இசைக்க எருக்கத்தம்புலியூர்ப் பாண்மகளுக்கும் இறைவர் அருள்செய்த திறம், நம் சைவம் பெண்மையை முதன்மைப்படுத்தும் சமயம் என்னும் திருக்குறிப்புடையதாகும்.

# இசைப்பகுதி

## இசை பற்றிய கலைச்சொற்கள்

இசை என்பது தமிழ்ச்சொல். பண்டைக் காலத்தில் முத்தமிழ்ப் பகுதியின் இடைப் பகுதியாக உள்ளது. முதலாவது இயல், இயல்வது தானே நடப்பது. இரண்டாவது இசை, இசைவது, உள்ளத்தில் போய்ப் பொருந்துவது. இதையே கொஞ்சம் நீட்டி இறைவனோடு பக்குவமான உள்ளத்தை இசைவிப்பது என்றும் விளக்கம் கொள்ளலாம். வடமொழியில் இதையே சங்கீதம் என்கிறோம். சங்கீதமாவது நன்கு அமைக்கப்பட்ட இசைப்பாட்டு என்பதே பொருளாகும். சங்கீதம் என்ற சொல் பிங்கலத்தில் காணப்படுகிறது. அதற்குப் பண்டைய இலக்கிய ஆட்சி இல்லை.

**சங்கீதம்**

கீதம், அதாவது பாட்டு, வாத்தியம் - இசைக்கருவி, நிருத்தம் - நாட்டியம் என்ற மூன்றும் சேர்ந்தது சங்கீதமென்று சங்கீத ரத்னாகரம் கூறும்.

ஆகவே இசை என்ற கருத்தினுள் மேலாக 3 பகுதிகள் சேர்க்கப்படுகின்றன. இந்த மூன்றுமே கோயில்களில் சுவாமிக்குச் செய்யும் 16 உபசாரங்களில் கடைசி 3 உபசாரங்களாக இன்றும் அமைந்துள்ளன.

**சுருதி**

இது கேட்கப்படுகின்ற ஒலி, சுரங்களின் உறுப்பாய்ச் சொல்லப்படும் முதல் ஒலி, சுருதிகள் 22 என்பது மரபு, சுருதியைத் தமிழில் அலகு என்று சொல்வதுண்டு.

**ச்வரம்**

(சுரம்) இது இசையில் அடிப்படையாக உள்ள ஓசையின் வகை. தானே இது மனத்தில் ரஞ்சகத்தை உண்டு பண்ணும். இராகங்களின் வடிவத்துக்குச் சுரமே அடிப்படை. இதை நரம்பு என்று தமிழில் கூறுவர். யாழ் என்று சொல்லும்போது ஒன்று கருவி மற்றது ஏழிசை. ஏழிசை என்று சொல்லும்போது ஏழு சுரம் என்று பொருளாகும். ஏழிசை என்ற கருத்து சங்கநூல் காலம் தொடங்கித் தமிழில் உண்டு. அதற்கு முன்னும் இருந்தது என்று கொள்ள வேண்டும். இந்த ஏழிசை என்பது குறியீடாக ச ரி க ம ப த நி என்று சொல்லப்படும். இந்த குறியீட்டையும் அதன் விளக்கத்தையும் அதற்குள்ள தமிழ்ப்பெயர், ஒலி முதலியவற்றையும் பின்வரும் அட்டவணையில் காணலாம்.

**ஏழிசைப் பெயர்கள்**

| இசையின் பெயர் | குறியீடு | இசையின் தமிழ்ப்பெயர் | குறியீடு | ஒலி |
|---|---|---|---|---|
| சட்ஜம் | ச | குரல் | ஆ | மயிலின் ஒலி |
| ரிஷபம் | ரி | துத்தம் | ஈ | மாட்டின் ஒலி |
| காந்தாரம் | க | கைக்கிளை | ஊ | ஆட்டின் ஒலி |
| மத்திமம் | ம | உழை | ஏ | கிரவுஞ்சத்தின் ஒலி |
| பஞ்சமம் | ப | இளி | ஐ | குயிலின் ஒலி |
| தைவதம் | த | விளரி | ஓ | குதிரையின் ஒலி |
| நிஷாதம் | நி | தாரம் | ஔ | யானையின் ஒலி |

**ஸ்தாயி**

ச ரி க ம ப த நி என்ற 7 இசைகளும் நிற்கும் இடம் ஸ்தாயி எனப்படும். ஒரு நிலையிலுள்ள ஏழு இசைகளும் உச்சரிக்கப்படுமேயன்றி, அவற்றிலிருந்து ஒன்றையோ, சிலவற்றையோ மாற்றி உச்சரித்தல் இசை ஆகாது. அந்த நிலையே ஸ்தாயி எனப்படும். இந்த ஸ்தாயி என்பது தாரம், மத்யம், மந்தரம் எனப்படும். முறையே வலிவு, சமன், மெலிவு என்ற மூன்று. இது வாய்ப்பாட்டில் அதாவது மிடற்றிசையில் கருவிகளின் ஒலியானது இவற்றின் மிகுந்தும் குறைந்தும் வரக்கூடும். தாரத்தினும் வன்மையாக உள்ளது அதிகாரம் என்றும், மந்தரத்தினும் மென்மையாக உள்ளது அதிமந்திரம் ஆக 5 ஸ்தாயிகள் கூறுவது ஒரு மரபு.

**நாதம்**

நாதம் என்பது இசையின் ஒலி, இசையின் நோக்கமோ சுகமாக காதில் விழுந்து கேட்போர் மனத்தை வசீகரிப்பதாகும். நாதம் என்றாலே நல்ல நாதம் சுகநாதம் என்றுதான் பொருள். சுகநாதம் அல்லாதது நாதம் அன்று. இந்து சமய தத்துவங்களில் நாதமே ஒரு தத்துவம். அதுவே முடிவான பரம்பொருளின் நிலை.

**ஆரோகணம்**

ஏழு இசைகளும் முறையாக உயர்ந்து செல்வது ஆரோகணம். இது ச ரி க ம ப த நி எனப்படும். ஆரோகணத்தைச் சிலப்பதிகார உரை ஆரோசை என்று குறிப்பிடும். சேக்கிழார் இதையே குறிப்பிடுகிறார்.

**அவரோகணம்**

சுரங்கள் முறையாக தம் ஒலியில் இறங்கி வருகின்ற தன்மை அவரோகணம் எனப்படும். இது நி த ப ம க ரி ச என்ற முறையாகும். இந்த முறை தமிழில் அமரோசை என்று சொல்லப்படும். அமர்ந்து வருதல், ஒன்று முதல்படி முறையாகும். 'அத்தகைமை ஆரோசை அமரோசைகளின் அமைத்தார்' (பெரிய. ஆனாய. 24) என்று சேக்கிழார் ஆனாய நாயனாருடைய குழல் வாசிப்பைக் கூறும்போது சொல்கிறார்.

**பண்**

பெரியபுராண காலம் வரையில் இராகத்திற்குத் தமிழில் வழங்கிய சொல் பண் என்பது, ஏழு இசைகளையும் நம்முடைய மனப்பக்குவம்போல் தக்க இடங்களில் நிறுத்திச் சுவை தருகின்ற ஓர் இராகம் (நிறம்) வருமாறு பண்ணுதல் பண் எனப்படும். தொல்காப்பியம் தொடங்கிச் சோழசாம்ராஜ்யம் முடிய இசைத்தமிழ் முழுமையும் பண்ணாகவே இருந்தது. பாடல் என்றால் அதற்குரியது பண் என்று நூல்கள் கூறும். சங்கீத ரத்னாகரம் என்ற வடமொழி இசை இலக்கண நூல் பெருமாட்சி பெற்ற பிறகு, பண் என்ற ஆட்சிச்சொல் குறைந்து, இராகம் என்ற சொல்லின் ஆட்சி ஓங்கிவிட்டது.

**இராகம்**

சுரங்களை அழகுபெற மாறி மாறிக்கலந்து அமைத்துப் பிறப்பிக்கும் ஒலி இராகம் எனப்படும். அதற்கு அடிப்படையாயுள்ள சுரச்சேர்க்கை இசைப்பயிற்சியுடையோருக்கே தெரியும். சுரச்சேர்க்கையே இராகமாக உருவெடுக்கிறது. இது ஒலியால் ஆவது. ஆனால் தான் அறிவதற்காகவும், பிறருக்கு அறிவுறுத்துவதற்காகவும் சுரத்தின் எழுத்துக்களால் இராகம் உணர்த்தப்படும். சுரத்தின் ஏற்றம், இறக்கம் இவை காட்டுவதற்கு எழுத்துக்களைப் பயன்படுத்துவதுண்டு. இது ஆரோகணம் என்றும் அவரோகணம் என்றும் சொல்லப்படும்.

இராகத்தை நிறம் என்று சொல்வது சிலப்பதிகார மரபு. நிறம் கட்புலனாவது. ஆனால் இசையின் நிறம் என்பது செவிப்புலனாவது. எழுத்துக்களால் ஒலி உண்டாகாது. இசையும் உண்டாகாது. இசைச்சுவை என்பது சுரத்தையும் அதன் குறியீடுகளையும் கடந்து நிற்பது.

**சம்பூர்ண இராகம்** (தாய் இராகம்)

ஏழு சுரங்களும் அமைந்து பாடப்பெறும் இராகம் சம்பூர்ண இராகம் எனப்படும். அதாவது எல்லாச் சுரங்களும் முழுமையாகப் பயன்பட்டு வரும் இராகம். தமிழ் இசை இலக்கணத்தில் சிறப்பாகவும், பொதுவாக இராகத்தைப் பண் என்று சொன்னபோதும்கூடச் சிறப்பாகப் பண் என்பது 'சம்பூர்ண இராகம்' ஒன்றுக்கே உரிய பெயர்.

**பண்ணியல்** (சேய் இராகம்)

ஏழு சுரங்களில் ஒரு சுரம் குறைந்து ஆறு சுரத்தோடு பாடப்படும் பண் அல்லது இராகம் பண்ணியல் என்று தமிழ் மரபின்படியும், 'சாடவ இராகம்' என்று வடமொழி மரபின்படியும் சொல்லப்படும்.

**திறத்திறம்** (சேய் இராகம்)

இது ஐந்து சுரங்களில் குறைந்து, நான்கு சுரங்களை மட்டுமே கொண்ட இராகம். வடமொழி மரபில் இதை சதுர்த்தம் என்று சொல்வார்கள். சதுர்த்தமென்றால் நான்கு என்றே பொருள்.

வடமொழி மரபிலும், தமிழ் மரபிலும், நான்கு சுரங்களுக்குக் குறைந்த சுரங்களின் சேர்க்கையால் இராகம் பிறக்காது என்பது கொள்கை.

**பல்லவி**

முளைத்தல் என்ற கருத்துடையது.

பண்ணும் இராகமும் ஒன்றல்ல. பண்ணுக்குப் பொருந்திய அல்லது நேரான இராகம் என்றே பொருள் பண்ணிக் கொள்ளவேண்டும்.

## முதல் திருமுறைப் பதிகங்கள், பண்கள் கட்டளைகள் அட்டவணை

| வ. எண் | பண் | பதிகங்கள் | பதிக எண்கள் | கட்டளைகள் | பண்களின் சுவை (அடைவு) | இராகம் | கால வரையறை (நாழிகை) |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | நட்டபாடை | 22 | 1 - 22 | 8 | உவகை, மருட்கை | நாட்டைக் குறிஞ்சி | 18-21 பகல் |
| 2. | தக்கராகம் | 24 | 23-46, | 7 | பெருமிதம், மருட்கை | கன்னட காம்போதி | 30-33¾ இரவு |
| 3. | பழந்தக்கராகம் | 16 | 47 - 62 | 3 | அவலம், மருட்கை | சுத்த சாவேரி | 33¾-37½ இரவு |
| 4. | தக்கேசி | 12 | 63 - 74 | 2 | அச்சம், உவகை | காம்போதி | 12-15 பகல் |
| 5. | குறிஞ்சி | 29 | 75 - 103 | 5 | உவகை, மருட்கை | பிலகரி | 52½-56¼ இரவு |
| 6. | வியாழக் குறிஞ்சி | 25 | 104 - 128 | 6 | பெருமிதம் | சௌராஷ் டிரம் | 45-48¾ இரவு |
| 7. | மேகராகக் குறிஞ்சி | 7 | 129 - 135 | 4 | உவமை, மருட்கை | நீலாம்பரி | 48¾-52½ இரவு |
| | யாழ் மூரி | 1 | 136 | | உவகை | | |

## முதல் திருமுறை திருப்பதிகங்களின் கட்டளை வகைகள்

I) முதல் திருமுறையின் முதல் பண் - நைவளம் என்ற நட்டபாடை – நட்டபாடையில் 22 பதிகங்கள். 4 கட்டளைகள் - 8 விகற்ப கட்டளைகள் "சொல் நட்டபாடைக்குத் தொகை எட்டு கட்டளையாம்" - திருமுறைகண்ட புராணம். இக்கட்டளைகளை யாப்பு நூலார் 'குழிப்பு' என்பர்,

**கட்டளை – I**

தோடு டையசெவி யன்விடை யேறியோர் தூவெண் மதிசூடி
தான தானதன தானன தானன தானா தனதானா

**கட்டளை – II**

தாணுதல் செய்திறை காணிய மாலொடு தண்டா மரையானும்
தானன தானன தானன தானன தானா தனதானா

**கட்டளை – III**

மைம்மரு பூங்குழற் கற்றைதுற்ற வாணுதல் மான்விழி மங்கையோடும்
தானன தானன தானதான தானன தானன தானதானா

**கட்டளை – IV**

தோலுடையான் வண்ணப் போர்வை யினான் சுண்ணவெண் ணீறுது தைந்தி லங்கு
தானதனா தன தான தானா தானன தானன தான தானா

**கட்டளை – V**

வண்டார்குழ லரிவையொடு பிரியாவகை பாகம்
தானாதன தனனாதன தனனாதன தானன

**கட்டளை – VI**

குரவங் கமழ்நறுமென் குழலரிவை யவள்வெருவ
தனனா தனதனனா தனதனனா தனதனனா

**கட்டளை – VII**

பிறையணி படர்சடை முடியிடை பெருகிய புனலுடை யவனிறை
தனதன தனதன தனதன தனதன தனதன தனதன

**கட்டளை – VIII**

பிறையணிபடர் சடைமுடியிடை பெருகியபுன லுடையவனிறை
தானதனதன தனதனதன தனதனதன தனதனதன

| | | |
|---|---|---|
| கட்டளை எண் 1, 2 | பாட வேண்டிய முதல் திருமுறை நட்டபாடைப் பதிகங்களின் எண்கள் | 1, 2, 3 |
| கட்டளை எண் 3, 4 | பாட வேண்டிய முதல் திருமுறை நட்டபாடைப் பதிகங்களின் எண்கள் | 4, 5, 6, 7, 8 |
| கட்டளை எண் 5, 6 | பாட வேண்டிய முதல் திருமுறை நட்டபாடைப் பதிகங்களின் எண்கள் | 9, 10, 11, 12, 13, 14, 15, 16, 17, 18 |
| கட்டளை எண் 7, 8 | பாட வேண்டிய முதல் திருமுறை நட்டபாடைப் பதிகங்களின் எண்கள் | 19, 20, 21, 22 |

## II) **முதல் திருமுறையின் இரண்டாம் பண் தக்கராகம்**

தக்கராகத்தில் 24 பதிகங்கள் கட்டளைகள் 7. “இன்னிசையால் தருக்க ராகத்துக்கு ஏழ்கட்டளையாம்” - திருமுறை கண்ட புராணம்.

**கட்டளை – I**

மடையில் வாளை பாய மாதரார்
தனனா தானா தானா தானானா

**கட்டளை – II**

விதியாய்விளை வாய்விளை வின்பய னாகிக்
தனனாதன தானன தானன தானா

**கட்டளை – III**

அடலே றமருங் கொடியண்ணல்
தனனா தனனா தனதானா

**கட்டளை – IV**

அந்தமு மாதியு மாகிய அண்ண லாரழலங்கைய மா்ந்திலங்க
தானன தானன தானன தான தானன தானன

**கட்டளை – V**

சீரணி திகழ்தரு மாா்பில்வெண் ணூலா் திரிபுர மெரிசெய்த செல்வா்
தானன தானன தானன தான தனதன தனதன தான

**கட்டளை – VI**

வடந்திகழ் மென்முலை யாளைப் பாகம தாக மதித்து
தானன தானன தானா தானன தான தனனா

**கட்டளை – VII**

குண்டை குறட்பூதங் குழும வனலேந்தி
தானா தனதானா தனன தனதானா

| பதிக எண்கள் பாட வேண்டிய முதல் திருமுறை தக்கராகப் பதிகங்கள் | கட்டளை எண் |
|---|---|
| 23, 24, 25, 26, 27, 28, 29, 30 | 1 |
| 31, 32, 33 | 2 |
| 34, 35, 36, 37, 38 | 3 |
| 39, 40 | 4 |
| 41, 42, 44 | 5 |
| 43 | 6 |
| 46 | 7 |

III) **முதல் திருமுறையில் மூன்றாம் பண் பழந்தக்கராகம்**

பழந்தக்கராகத்தில் 16 பதிகங்கள்- மூன்று கட்டளைகள் - 6 கட்டளை விகற்பங்கள்
“பன்னு பழந்தக்கராகப் பண்ணின் மூன்றுளவாம்” - திருமுறைகண்ட புராணம்

**கட்டளை – I**

பல்லடைந்த வெண்டலையிற் பலிகொள்வ தன்றியும் போய்
தானதான தானதான தனதன தானதான
பாட வேண்டிய பதிக எண்கள் 47, 48, 49, 50, 51

**கட்டளை – II**

மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
தனதனனா தனதனனா தானதனா தனனா
பாட வேண்டிய பதிக எண் 52

**கட்டளை – III**

தேவராயும் அசுரராயுஞ் சித்தர்செழு மறைசேர்
தனதான தனனதான தானாதன தனனா
பாட வேண்டிய பதிக எண் 53

**கட்டளை – IV**

பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி ஏத்தா தாரில்லை யெண்ணுங்கால்
தானா தானன தானன தானன தானா தானன தானானா
பாட வேண்டிய பதிக எண்கள் 54, 66, 56, 57, 58

**கட்டளை – V**

ஒடுங்கும் பிணிபிறவி கேடென்றிவை புடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம்
தனனா தனதனன தானாதனா தனதான தான தனனாதன
பாட வேண்டிய பதிக எண் 59

**கட்டளை – VI**

வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினொடும்
தானதன தனதனன தனதான தனதனன
பாட வேண்டிய பதிக எண்கள் 60, 61, 62

## IV) **முதல்திருமுறையின் நான்காம் பண் தக்கேசி**

12 பதிகங்களும் 2 கட்டளைகளில் பாடப்பட்டுள்ளன
உன்னரிய தக்கேசிக்கு ஓரிரண்டு வருவித்தார் - திருமுறைகண்ட புராணம்

**கட்டளை – I**

எரியார் மழுவொன் றேந்தி மங்கை யிடுதலை யேகலனா
தனனா தனனா தானா தானா தனதன தானதனா
பாட வேண்டிய பதிக எண்கள் 63, 64, 65

**கட்டளை – II**

பூவார் மலர்கொண் டடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கள்
தானா தானா தனனா தனனா தனனா தானனா
பாட வேண்டிய பதிக எண்கள் 66, 67, 68, 69, 70, 71, 72, 73, 74

## V) **முதல் திருமுறையின் ஐந்தாம் பண் குறிஞ்சி**

இப்பண்ணில் 29 பதிகங்கள் ''மேவு குறிஞ்சிக்கு ஐந்து'' என்று திருமுறைகண்ட புராணம் பாடுவதால் இப்பதிகங்களை 5 கட்டளைகளில் பாட வேண்டும்

**கட்டளை – I**

காலைநன் மாமலர் கொண்டடி பொருந்திக்
தானன தனன தானன தனனா

கைதொழு மாணியைக் கறுத்தவெங் காலன்
தானன தானன தனதன தானா
பாட வேண்டிய பதிக எண்கள் 75, 76

## கட்டளை – II

பொன்றிரண் டன்ன புரிசடை புரளப்
தானன தான தனதன தனனா
பொருகடற் பவளமொ டழனிறம் புரையக்

தனதன தனதன தனதன தனனா

பாட வேண்டிய பதிக எண்கள் 77, 78, 79

## கட்டளை – III

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
தானா தனதானா தனனா தானானா

பாட வேண்டிய பதிக எண்கள் 80, 81, 82, 83, 84, 85, 86, 87, 88, 89

## கட்டளை – IV

அரனை யுள்குவீர்
தனன தானனா

பாட வேண்டிய பதிக எண்கள்90, 91, 92, 93, 94, 95, 96

## கட்டளை – V

எய்யா வென்றித் தானவ ரூர்மூன் றெரிசெய்த
தானா தானா தானன தானா தனதனானா

பாட வேண்டிய பதிக எண்கள் 97, 98, 99, 100, 101, 102, 103

## VI) முதல் திருமுறையின் ஆறாம் பண் வியாழக்குறிஞ்சி

"வியாழக்குறிஞ்சிக்கு ஆறு" என திருமுறைகண்ட புராணம் கட்டளையை வரையறுத்துள்ளது. மொத்தப் பதிகங்கள் 25. திருத்தாளச்சதி, திருஏகபாதம், திருவெழுகூற்றிருக்கை போன்ற சிறப்பான யாப்பு விகற்பங்களையும் சேர்த்து ஒன்பது என்றும் கூறுவார்கள்.

## கட்டளை – I (முழுப் பாடலுக்கு விளக்கம்)

ஆடல் அரவசைத்தான் ஆறு மாமறை தான்விரித்தான் கொன்றை
தான தனதனனா தன தானன தானதனா தான

சூடிய செஞ்சடையான் சுடு கா அ டமர்ந்த பிரான்
தானன தானதான தன தான தனதனனா

ஏடவிழ் மாமலையாள் ஒரு பாக மமர்ந்தடியார் ஏத்த
தானன தானதனா தன தான தனதனனா தான

ஆடிய எம்மிறையூா் புகலிப் பதியாமே
தானன தானதனா    தனனா தன தானா
பாட வேண்டிய பதிகங்கள் 104, 105, 106, 107, 108

### கட்டளை – II

வாருறு வனமுலை மங்கைபங்கன்
தானன தனதன    தான தனா
பாட வேண்டிய பதிகங்கள் 109, 110, 111, 112, 113, 114, 115

### கட்டளை – III

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு ம.்.தறிவீா
கூவிளம் கூவிளம் தேமாங்காய் தேமா கருவிளங்காய்
பாடவேண்டிய பதிகங்கள் எண்கள் 116, 117 (கட்டளை கலித்துறை)

### கட்டளை - IV

சுடுமணி யுமிழ்நாகங் சூழ்தர வரைக்கசைத்தான்
கருவிளம் புளிமாங்காய் கூவிளம் கருவிளங்காய்
பாட வேண்டிய பதிகம் எண் 118

### கட்டளை – V

முள்ளின்மேல் முதுகூகை முரலுஞ் சோலை
தேமாங்காய் புளிமாங்காய் புளிமா தேமா
பாட வேண்டிய பதிகம் எண் 119

### கட்டளை – VI (திருவிராகம்)

பணிந்தவ ரருவினை பற்றறுத் தருள்செயத்
தனதன தனதன தனதன தனதன
பாட வேண்டிய பதிக எண்கள் 120, 121, 122, 123, 124, 125

### திருத்தாளச்சதி

பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்ற வும்பரப்
தந்தததா தந்தத்தா தனந்தனந்த தந்தனத்
பாலே சோ்வா யேனோா்க்கான் பயில்கண முனிவா்களும்
தானா தானா தானானா    தனதன    தனன தனா

## நட்டபாடை

இது குறிஞ்சிப் பெரும்பண்ணில் முதல் திறனாகிய நைவளம் என்ற பண்ணில் முதல் பிரிவு அகநிலையாக 37 என்ற எண் கொண்டது. நைவளம் ஏன் எப்படி நட்டபாடையாயிற்று என்பதைச் சுவாமி விபுலானந்தர் நன்கு விளக்கிக் காட்டியிருக்கிறார். அரிகாம்போதி மேளத்தில் பிறந்தது. நைவளம் என்ற அழகான பெயர் பிற்கால இலக்கியங்களிலும் நிரம்ப ஆட்சி பெற்றிருக்கிறது. கம்பரும் நைவளம் மொழியுடையவள் என்று சீதை சுயம்வர மண்டபத்தை நோக்கி வரும்போது குறிப்பிடுகிறார். இது பிற்பகலில் பாடத்தகுந்த பண் என்று சொல்லப்பட்டுள்ளது. இதன் சுவை உவகையும் மருட்கையும் என்று சொல்லப்படும். நைவளம் நட்டபாடையானதற்கு விபுலானந்தர் போன்றோர் ஒரு பொருத்தம் கற்பிப்பார்கள். இப்பண் காலையில் கோயில் பூசையில் பாடப்பட்டு வந்தது. அக்காலத்தில் நட்டுவனார் இசைத்தார்கள். தளிப்பெண்டுகள் பாடியாடினார்கள். அதனால் இது நாட்டிய பாஷை என்று பெயர் பெற்றிருத்தல் கூடும். நாட்டிய பாஷை என்பதே நட்டபாடையாயிற்று. இதெல்லாம் நடந்தது ஒருகால் சிலப்பதிகார காலத்துக்கு நெடுநாள் முன்னமே நிகழ்ந்திருக்கும். நட்டபாடைப் பண் நாட்டைக் குறிஞ்சி என்பதுதான் என்பது முதிய ஓதுவார்கள் கருத்து. ஆயினும் சிலர் இதை நாட்டையாகலாம் என்று சொல்லி நாட்டையிலும் பாடுகிறார்கள். ஆயினும் பொன்னோதுவார் போன்ற பண்டைய ஓதுவார்கள் கையில் தாளமேந்தி இதை நாட்டைக் (நட்டக்) குறிஞ்சியில்தான் பாடினார்கள். நட்டபாடைக்கு 8 கட்டளைகள் புராணத்தில் சொல்லப்பட்டுள்ளது. இனி, அப்பர் இப்பண்ணில் பாடவில்லை. இந்தப் பண்ணில் சம்பந்தர் 1.1.22, சுந்தரர் 78-82, ஆக 27 பதிகங்கள், சம்பந்தர் உமாதேவியார் ஊட்டிய ஞானப்பால் உண்டு முதன்முதல் பாடிய பாடல் தோடுடைய செவியன் விடையேறி என்பது நட்டபாடைப் பண். காரைக்காலம்மையாரும் முதல் பதிகம் நட்டபாடைப் பண்ணில் பாடியிருக்கிறார். காலத்தால் சம்பந்தர் இவருக்கு இருநூறு ஆண்டுகள் பிற்பட்டவர். அம்மை பாடிய பண்ணே இவருடைய முதல் பதிகத்தில் அமைந்தது பொருத்தமானது.

இதுவன்றி, அங்கமும் வேதமும் ஓதுநாவர், வண்டார் குழலரிவையொடு, உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன், மையாடிய கண்டன் மலைமகள் பாகமதுடையான், சில திருவிராகப் பாடல்கள், சம்பந்தருடையவை. சுந்தரர், வாழ்வாவது மாயம், நத்தார்புடை ஞானன் என்ற திருக்கேதீச்சரப் பதிகம் என்ற பதிகங்கள் நட்டபாடை. இப்பாடல்கள் அனைத்திலும் சுந்தரர் இசையைக் குறிப்பிடுவது மிக்க சிறப்பாயுள்ளது. பண்ணின் தமிழ் இசை பாடலின் பழவேய் முழவு அதிர, கிண்ணென்றிசை முரலும், நாவின்மிசை யரையன்னொடு தமிழ் ஞானசம்பந்தன், அரிய சிறைவண்டு யாழ்செயும் மாதோட்டம், சிறையார் பொழில் வண்டியாழ்செயும் கேதீச்சரத்தான், தொழுமின் இன்னிசை பாடியே, பொழிலின் தேன் ஆதரித்து இசை வண்டினம் மிழற்றும்.

நைவளமே நட்டபாடை என்று சொல்வது ஒரு வழக்கமாக இருக்கிறது. நைவளம் என்பது குறிஞ்சியாகிய பெரும்பண்ணின் திறன்கள் எட்டில் முதல் திறன். இதன் நால்வகைப் பிரிவுகளில் முதல் பிரிவே நட்டபாடை என்ற பண். இதுவே நைவளம் என்பது உபகார மாத்திரையே. நைவளம் என்ற பெயர் தமிழ் நூல்களில் அடிக்கடிப் பயில்கின்ற ஓர் இசைப்பெயர். நைவளம் என்ற சொல்லுக்கு கேட்டார், சொன்னார் அனைவரையும் நைவிக்கும்படியான பண் என்று பொருள் கூறுவார்கள். இதை நட்டபாஷை என்று சொல்லி, இது ஒரு பண், லய குண யோகத்தால் நைவளம் என்று பேரிடுகிறது என்று வியாக்கியானக்காரார் (பெரியவாச்சான் பிள்ளை) எழுதுகிறார்.

## 1. திருப்பிரமபுரம்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 1

| | | |
|---|---|---|
| 1. | தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்<br>காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்<br>ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தவருள்செய்த<br>பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | தோடணிந்த திருச்செவியை உடைய உமையம்மையை இடப்பாகத்தே உடையவனாய், விடைமீது ஏறி, ஒப்பற்ற தூய வெண்மையான பிறையை முடிமிசைச் சூடி, சுடுகாட்டில் விளைந்த சாம்பற் பொடியை உடல் முழுவதும் பூசி வந்து என் உள்ளத்தைக் கவர்ந்த கள்வன், இதழ்களைஉடைய தாமரை மலரில் விளங்கும் நான்முகன், படைத்தல் தொழில் வேண்டி முன்னை நாளில் வழிபட அவனுக்கு அருள்புரிந்த பெருமை மிக்க பிரமபுரத்தில் எழுந்தருளியுள்ள பெருமானாகிய இவன் அல்லனோ! |
| 2. | முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு<br>வற்றலோடுகல னாப்ப–தேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்<br>கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால்<br>தொழுதேத்தப்<br>பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | வயது முதிர்ந்த ஆமையினது ஓட்டினையும், இளமையான நாகத்தையும், பன்றியினது முளை போன்ற பல்லையும் கோத்து மாலையாக அணிந்து, தசை வற்றிய பிரம கபாலத்தில் உண்பொருள் கேட்டு வந்து என் உள்ளம் கவர்ந்த கள்வன், கல்வி கேள்விகளிற் சிறந்த பெரியோர்கள் தன் திருவடிகளைக் கைகளால் தொழுது ஏத்த அவர்கட்கு அருளும் நிலையில் விடைமீது காட்சி வழங்கும் பிரமபுரத்தில் விளங்கும் பெருமானாகிய இவனல்லனோ! |
| 3. | நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி<br>ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்<br>ஊர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரிதுவென்னப்<br>பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | கங்கை நீர் நிரம்பி நிமிர்ந்த சிவந்த சடைமுடி மீது ஒரு கலையை உடைய நிலவைப் பொழியும் வெள்ளிய பிறைமதியைச் சூடி வந்து விரகமூட்டிக் கைகளில் அணிந்துள்ள ஒரினமான சங்கு வளையல்கள் கழன்று விழுமாறு செய்து, என் உள்ளத்தைக் கவர்ந்த கள்வன், மகாப்பிரளய காலத்தில் ஊர்கள் மிக்க இவ்வுலகில் அழியாது நிலை பெற்ற ஒப்பற்ற ஊர் இது என்ற புகழைப் பெற்ற பிரமபுரம் மேவிய பெருமானாகிய இவனல்லனோ! |
| 4. | விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்<br>உண்மகிழ்ந்துப– தேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்<br>மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை ம–ந்தவரைமார்பில்<br>பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | வானவெளியில் மகிழ்ச்சிச் செருக்கோடு பறந்து திரிந்த மும்மதில்களையும் கணையொன்றினால் எய்து அழித்தது மல்லாமல், விளங்கிய பிரமகபாலமாகிய தலையோட்டில் மனமகிழ்வோடு ப–யேற்க வந்து எனது உள்ளத்தைக் கவர்ந்த கள்வன் புற்றிடையே வாழும் பாம்பு, கொன்றை மலர் ஆகியவற்றால் நிறைந்த வரை போன்ற மார்பின் இடப்பாகத்தே உமையம்மையை மகிழ்வுடன் கொண்டருளியவனாய்ப் பிரமபுரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன் அல்லனோ! |

| | | |
|---|---|---|
| 5. | ஒருமைபெண்மையுடைய யன்சடையன்விடை யூரும்மிவனென்ன<br>அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்<br>கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததொர் காலம்மிதுவென்னப்<br>பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | ஒரு திருமேனியிலேயே உமையம்மைக்கு இடப்பாகத்தை அளித்தவன் என்றும், சடைமுடியை உடையவன் என்றும், விடையை ஊர்ந்து வருபவன் என்றும் அவனது அழகைத் தோழியர் கூற அவ்வுரைப்படியே வந்து எனது உள்ளத்தைக் கவர்ந்த கள்வன், சர்வசங்கார காலத்தில் கரிய கடல் பொங்கி வந்து உலகைக் கொண்டபோது தோணிபுரமாய் மிதந்த பெருமை பெற்ற பிரமபுரத்தில் மேவிய பெருமானாகிய இவன் அல்லனோ. |
| 6. | மறைகலந்தவொ– பாடலோடாடல ராகிமழுவேந்தி<br>இறைகலந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்<br>கறைகலந்தகடி யார்பொழில்நீடுயர் சோலைக்கதிர்சிந்தப்<br>பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | ஒ– வடிவினதான வேதத்தைப் பாடிக் கொண்டும், ஆடிக் கொண்டும், மழுவாயுதத்தைக் கையில் ஏந்திக் கொண்டும் வந்து எனது முன் கையில்உள்ள ஒரினமான வெள்ளிய வளையல்கள் கழன்று விழ என்னை மெ–வித்து உள்ளத்தைக் கவர்ந்த கள்வன், இருள் செறிந்த, மணமுடைய பொழில்களிடத்தில் நீண்டு வளர்ந்த மரங்களை உடைய சோலைகளிடத்தும் நிலவைப் பொழியும் பிறையைச் சூடியவனாய்ப் பிரமபுரத்தில் மேவிய பெருமானாகிய இவன் அல்லனோ! |
| 7. | சடைமுயங்குபுன லன்அனலன்னெரி வீசிச்சதிர்வெய்த<br>உடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்<br>கடன்முயங்குகழி சூழ்குளிர்கானலம் பொன்னஞ்சிறகன்னம்<br>பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | சடையில் கலந்த கங்கையை உடையவனும், திருக்கரத்தில் அனலை உடையவனும், ஆடையின் மேல் இறுகக் கட்டிய பாம்பினனுமாய் எரிவீசி நடனமாடித் திரிந்து வந்து என் உள்ளம் கவர்ந்த கள்வன், கடலைத் தழுவிய உப்பங்கழிகளால் சூழப் பெற்றதும், குளிர்ந்த கடற்கரைச் சோலைகளையுடையதும், தம்முடைய பெடைகளை முயங்கித் திரியும் அழகிய சிறகுகளோடு கூடிய அன்னங்களை உடையதும் ஆகிய பிரமபுரத்தில் மேவிய பெருமானாகிய இவன் அல்லனோ! |
| 8. | வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த<br>உயரிலங்கையரை யன்வ–செற்றென துள்ளங்கவர்கள்வன்<br>துயரிலங்கும்முல கிற்பலவூழிகள் தோன்றும்பொழுதெல்லாம்<br>பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | கயிலை மலையைப் பெயர்த்துத் தனது பெரு வீரத்தை வெளிப்படுத்திய புகழால் உயர்ந்த இலங்கை மன்னன் இராவணனின் வியர்வை தோன்றும் மலை போன்ற தோள்களின் வ–மையை அழித்த எனது உள்ளம்கவர் கள்வன், துயர் விளங்கும் இவ்வுலகில் பல ஊழிகள் தோன்றும் பொழுதெல்லாம் அழியாது தன் பெயர் விளங்கும் பிரமபுரம் மேவிய பெருமானாகிய இவன் அல்லனோ! |

| | | |
|---|---|---|
| 9. | தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்<br>நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்<br>வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்<br>பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | திருமாலும், தாமரை மலரில் எழுந்தருளியிருக்கும் நான்முகனும், தனது தாளையும் முடியையும் சிறிதே காணுதற் பொருட்டுப் பன்றியாயும், அன்னமாயும் தேடிச் செயலற, அண்ணாமலையாய் நிமிர்ந்தவனாய், என் உள்ளம் கவர் கள்வனாய் விளங்குபவன், ஒளி பொருந்திய நுதலையும் சிவந்த நிறத்தையும் உடைய மகளிர் முதலாக உலகோர் அனைவரும் துதிக்க விரும்புதலைச் செய்யும் பிரமபுரம் மேவிய பெருமானாகிய இவன் அல்லனோ! |
| 10. | புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா<br>ஒத்தசொல்லவுல கம்ப–தேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்<br>மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயம்மிதுவென்னப்<br>பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. | புண்ணியம் இன்மையால் புத்தர்களும் அறிவற்ற சமணர்களும் சைவத்தைப் புறங்கூறச் சான்றோர் வகுத்த நெறியில் நில்லாது, தமக்கு ஏற்புடையவாகத் தோன்றிய பிழைபட்ட கருத்துக்களைச் சொல்–த் திரிய, உலகனைத்தும் சென்று ப– தேர்ந்து எனது உள்ளத்தைக் கவர்ந்த கள்வன், மதயானையை மருளுமாறு செய்து அதன் தோலை உரித்துப் போர்த்தது ஒரு மாயமான செயல் என்னுமாறு செய்து, பித்தனாய் விளங்கும் பிரமபுரம் மேவிய பெருமானாகிய இவன் அல்லனோ! |
| 11. | அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய<br>பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை<br>ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த<br>திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தல்எளிதாமே. | அருமையான நெறிகளை உலகிற்கு வழங்கும் வேதங்களில் வல்ல பிரமனால் படைக்கப்பட்டதும், அகன்ற மலர் வாவியில் தாமரைகளையுடையதும் ஆகிய பிரமபுரத்துள் மேவிய முத்தி நெறி சேர்க்கும் முதல்வனை, ஒருமைப்பாடு உடைய மனத்தைப் பிரியாதே பதித்து உணரும் ஞானசம்பந்தன் போற்றி உரைத்தருளிய திருநெறியாகிய அருநெறியை உடைய தமிழாம் திருப்பதிகத்தை ஓத வல்லவர்களின் பழவினைகள் தீர்தல் எளிதாகும். ஊழ்வினை தீர்வதற்குரிய மார்க்கங்கள் பல இருப்பினும், இத்திருப்பதிகத்தை ஓதுதலே எளிமை வாய்ந்தது என்பது குறிப்பிடத்தக்கது. |



## தோடுடைய செவியன் என்ற முதல் திருமுறை முதல் திருப்பாட்டிற்கு சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முத-யார் எழுதிய உரை

இம்முதல் திருப்பாட்டில் அளவிறந்த அரும்பொருள்களைக் காண்பர் பெரியோர். ''எச்சில் மயங்கிடப் பால் இட்டாரைக் காட்டு'' என்று கேட்ட தாதையார்க்கு ''எம்மை இது செய்த பிரான் இவன்'' என்று அவரை அடையாளங்களுடன் சுட்டிக் காட்டியருளியது. உயிர்களுக்கு இறை உணர்வும் அவரை அடையும் வழிகளையும் அறிவித்து அவர்கள் வினைநீங்கி இன்பமடையும்படி செய்வது ஆசாரிய ரியல்பு என்ற தன்மைக் குறிப்புமாகும்.

தோடு - பெண்கள் காதணி. செவியன் - அன் - ஆண்பால் விகுதி. பெண்ணும் ஆணுமாகக் கூடிவந்து, அருளிநிற்கும் இவன்.

குழவிகள் அன்னையை முன் உணரும்; பின்னரே அத்தன் தன்னை உணரும். ஈண்டுப் பிள்ளையார் முதலில் கண்டு - பால் ஊட்ட உண்டு - அழுகை தீர்க்கப்பெற்றதற்குப் பொருளாவர் உமையம்மையார். இக்கருத்துப் பற்றிய பிள்ளையாரது சீகாழிப் பதிகப்பாட்டுகளுட் பெரும்பான்மையும் அம்மையாரையும் சுட்டி உடன் கூறுவதையும் உணரவேண்டும். இருள் போக்குதலில் ஞாயிற்றின் கதிர் முன்னர்ப் போந்து வர, அதன் பின்னே ஞாயிறு வருதல் போல, அம்மையின் அருள் முன்னை வைக்கப்பட்டது.

செவி - அருள் நோக்கம் பெறுபவன் கண் வளத்தினையும், கொடை பெறுபவன் கை வளத்தினையும் சிறப்பித்துக் கூறுதல் போல, ஈண்டு செவியில் நன்மை பெறக் கருதிச் செவியைச் சிறப்பித்தார். நம் பாடல்களும், குறைகளும் முதலில் இறைவன் திருச்செவியைச் சென்றடைந்தால்தான் பலன் கிடைக்கும். இது தமிழ்ச் சுருதி என்பதும், முதல்வர் சொல்லியருள குருபரம்பரையில் செவி வழியாக, வழிவழி கேட்டு வர வழங்குவது என்பதும் குறிப்பு.

ஏறி - சூடி - பூசி என்பன எச்சங்கள். தூ - வெண் - தூய்மை. அகத்தும் வெண்மை - புறத்தும் சிறப்பு.

காடு உடைய சுடலை - எல்லா உலகங்களும் சங்கரிக்கப்பட்ட நிலை. பொடி - திருநீறு. உள்ளம் - உயிர் உணர்வு - ஆன்மா என்றலுமாம். மலரான் - பிரமன். மலர் - தாமரை. பிரமன் பூசித்த காரணத்தால் பிரமபுரம் என்ற காரணப்பெயரையும் சுட்டுகிறார். மலரான் - ஆன் - கருவிப் பொருளில் வந்த மூன்றனுருபு எனக் கொண்டு உடலாலும், பணிந்து என்றதனால் மனத்தாலும், ஏத்த என்றதனால் வாக்காலும் செய்த வழிபாடுகளைக் குறிப்பாக உரைத்தலுமாம். இதனால் பிள்ளையாரது முன்னிலைத் திருத்தொண்டு குறித்ததாகக் கொள்வதுமுண்டு.

பீடு - குரு, லிங்க, சங்கமம் என்று மூன்றும் உடைய சிறப்பு. குரு - தோணியப்பர். பிரமபுரம் - உயிர்கள் மலம் போக்குதற்கு நித்தியம் முதலியன செய்தற்கும் உரிய உறுப்புகளுடையது.

தோடுடைய செவி - பேரருளுடைமை
விடையேறி - தன் வயத்தனாதல்
மதிசூடி - முற்றறிவுடைமை
பொடிபூசி - வரம்பிலின்பமுடைமை

உள்ளங்கவர் கள்வன் - இயல்பாகவே பாசங்களில் இருந்து நீங்குதல், இயற்கையுணர்வு.

பிரமபுரம் - அளவிலாற்றலுடைமை என்ற எண் குணங்களாய்ச் சிறப்பியல்புகளாகிய இறைமைத்தன்மை முதலியன.

பிரமாபுரம் - நாடும் ஊரும்
விடையேறி - கொடியும், ஊர்தியும்
பொடிபூசி - முரசும், படையும்
மதிசூடி - மலையும், ஆறும்

தோட்டுச்செவி - தாரும் என்றிவ்வாறு இறைவரது தசாங்கம் குறிப்பால் உணர்த்தி நின்றன.

விடையேறி, மதிசூடி - உருவம்
பொடிபூசி, பிரமாபுரம் - அருவுருவம்
உள்ளங்கவர் கள்வன் - அருவம் என்று மூவகை வழிபாட்டுத் திருமேனிகளைக் குறிப்பன.

தோடு - பொருட் பிரபஞ்சம்

செவி - சொற் பிரபஞ்சம் என்ற இவற்றை உணர்த்தவே சிவன் இவ்விரண்டிலும் ஐந்தொழில் புரியும் முதல்வன் என்று நிரூபிக்கப்படுகிறார். இதனால் உடைமைப்பொருளும், உடையானும், அவன் அதை நடத்தும் முறையும் விளக்கப்பட்டன.

அவன் என்று மறைகள் முறையிட்டு ஓதியதனை இவன் என்ற சுட்டியருள்கின்ற முறைமையால் தம்மைப்போல் அதைக்காணுதல் பெறாத தந்தையார்க்கும் அவர் மூலம் உலகுக்கும் இலக்கணமுணர்த்தி, இதன்பின் இலக்கியமுணர்த்தும் போதனைப் பற்றி அங்கங்களை அடையாளங்களுடன் சாற்றி ஓதியருளினார் என்றும், பொடிபூசி - நோய் தீர்க்கும் மருந்தினைக் குழவிகளின் பொருட்டுத் தாய் உண்பதுபோலத் தாம் திருநீறு அணிவர் என்ற குறிப்பு என்றும், உள்ளங்கவர் கள்வன் - எஞ்ஞான்றும் எம்மின் வேறாகாது அகத்தினின்றும் உபகரிக்கும

தமது முதலுபகாரம் உணர்த்தும் குறிப்பு என்றும், பிரமபுரம் மேவிய என்றது சதாசிவ தத்துவமாகிய தமது உயரிய நிலையினின்றும் இறங்கி, உயிர்கள் எளிதில் வழிபட வந்த நிலையின் அருட்பெருக்கின் குறிப்பு என்றும் - செவியன் முதலிய ஆறும் கூறி முடிவில் இவன் என்று கூறுதலால் அறுவகைச் சமயத்தோருக்கும் (சித்தி) என்றபடி ஆறு சமயங்களிலும் விரவி மேம்பட்ட முடிவுகூறும் சைவ முதன்மையும் சிவனது முதன்மையும் குறிப்பிடப்பட்டது என்றும்,

தோடு முதலிய ஆறும், அங்கங்கும் முடிந்து முடிவுபெறாது சென்று முடிக்கும் சொல்லை அவாவி நிற்க. இவன் என்றது ஒன்றனையும் அவாவாமல் முடிபு பெற்று நிற்பதனால், பதமுத்திகள் பலவோடும் சாயுச்சிய முத்திநிலை குறிக்கப்பட்டது என்றும் - தோடு முதலிய 36 மொழிகளால் ஓதுதலான 36 தத்துவ சொரூபமும் அவை கருவியாமாறும், நான்கு அடிகளால் கூறுதலால் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நாற்பதமும், அவற்றின் பயனும், அடிதோறும் ஐஞ்சீரால் ஓதுதலால் ஐவேறு ஐந்தெழுத்தும், ஐந்தொழிலும், தோடு, விடை என்றவை அ∴றிணையும் செவியன் என்று உயர்திணையும் இந்த இரண்டுமாய் நின்ற இறைவன் என்ற குறிப்பு என்றும் பணிந்தேத்த அருள்செய்த - என்றதனால் சாதனமும், பயனும் உணர்த்துவது குறிப்பு என்றும், இவ்வாறு ஞானகண்டம், ஞான பாதநிலைகளில் துணிபுகள் எல்லாம் குறிப்பினால் பெறும்படி கொண்டுணர்த்தி உபதேசித்து எழுதும்மறை இதுவாகும். "**இவன்**" என்று சுட்டிக்காட்டித் தொடங்கிய முதல் திருமுறை முதல் பதிகம் முதல் பாடல்படி இவனதியல்பே திருமுறைகள் முழுதுமாம் என்று இன்னோரன்னவை செப்பறை சிதம்பரம் சுவாமிகள் குறிப்புகள்.

இனி இத்திருப்பாட்டினைப் பிள்ளையார் 1. தம்மை உனக்கீதிட்டாரைக் காட்டு என்று வினவிய தாதையாருக்கு விடைகூறும் முகத்தானும் 2. தாம் பெற்ற அருள் ஞானத்தின் பொருட்டு இறைவரைத் தாம் ஏத்தும் துதி முகத்தானும் 3. உலகுயிர்களுக்கு மெய்ஞ்ஞான நூற்றுணிபினை உபதேசிக்கும் முகத்தானும் என இம்மூன்று பொருளும் நுதலி எடுத்துக்கொண்டனர்.

விடையேறி - சிருட்டி, மதிசூடி - திதி, பொடிபூசி - மகாசங்காரம் - கள்வன் - திரோபவம், அருள்செய்த - அருளால் என்றதனால் இறைவன் ஐந்தொழில் செய்யும் குறிப்பு நிரூபணமாகிறது. இறைவரைத் தாதைக்கும், அவர்மூலம் உலகுக்குக் காட்டி உபதேசிக்கும் ஆசாரியார் குறிப்பு. இன்னோரன்னவை கயப்பாக்கம் சதாசிவம் செட்டியார் திருக்குறிப்புகள் ஆகும்.

தோடுடைய செவியன் - அசுவதரன், கம்பளன் என்ற இரண்டு கந்தருவர்கள் சிவனைப் பாட வரம் பெற்றுக் காதிலே தோடும், குழையுமாகிய உருவுடன் இருக்கப் பெற்றனராதலின் அதுபோலவே தமது பாடலும் இறைவர் திருச்செவி ஏற்றருளுவார் என்று குறிப்பையும் காணலாம். இன்றைய அலைபேசிக் காலத்தில் பல இளைஞர்கள் இரண்டு காதுகளிலும் ஒலிப்பெருக்கிகளை அணிந்து தாம் மட்டும் கேட்டுக் கொண்டே சாலைகளில் நடந்து செல்வதைக் காணும்போதும்

சிவபெருமான் அசுவதரன், கம்பளன் என்ற இருவரைக் காதில் அணிந்துகொண்டே இருக்கும் செயலே நினைவுக்கு வருகிறது.

எழுதும் மறையினைத் தமிழால் ஓத எடுக்கின்றார். ஆதலின் பிரணவம் உரைத்தே தொடங்கும் மரபுப்படி தோடு என்ற முதன்மொழியில் ஓகாரம் புணர்த்தி எடுத்தருளினார். அப்பிரணவநாதம் பூதாகாயத்தினன்றி சிதாகாயமாகிய தகராகாயத்தில் தோன்றும் சுத்த நாதமாதல் குறிக்க தகர மெய்யுடன் கூட்டி உணர்த்தியருளினார். இவ்வாறு முதல் திருமுறை - முதற்பதிகம் - முதலடி - முதன்மொழி - முதலெழுத்தாகிய இவ்வோகாரம் பன்னிரண்டாம் திருமுறையில் ஈற்றுச் சருக்கம் ஈற்றுத் திருமுறை - ஈற்றுச் செய்யுள் - ஈற்றடி - ஈற்றுச் சொல் - ஈற்றெழுத்தாகிய மகரத்தோடு புணர்ந்து ஓம் என்று முடிந்து தமிழ் வேதத்திருமுறைகள் யாவும் பிரணவ பீஜத்தில் தோன்றி அடங்கி நிற்கும் தன்மையும் காணத்தக்கது.

உ
சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 'தோடுடைய செவியன்' என்ற திருப்பாடலுக்கு உமாபதி சிவனாரின் தேவார அருள்முறைத்திரட்டு உரை

மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி.ஏ.,
மாஜி தாசில்தார், சிந்துபூந்துறை, திருநெல்வே–

## பதிமுதுநிலை

தோடுடைய செவியன் விடையேறி யோர்தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடிபூசி என்னுள்ளங் கவர்கள்வ
னேடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த வருள்செய்த
பீடுடைய பிரமா புரமேவிய பெம்மா னிவனன்றே.

(பதவுரை) தோடுடைய செவியன் – தோட்டினை அணிந்த காதை உடையவனாய்' விடையேறி எருதின்மேல் (ஊர்தியாக) ஏறியிருந்து ; ஓர் தூவெண்மதிசூடி – தூய்மையையும் வெண்மையையும் உடைய ஒரு திங்களை (தலையின்மேல்) அணிந்து ; சுடலைக்காடுடைய பொடிபூசி – சுடுகாட்டில் உள்ள திருநீற்றை (திருமேனியில்) அணிந்து ; என் உள்ளம் கவர்கள்வன் ; (இதுவரையும்) எனக்குத் தெரியாமல் என் உள்ளத்தில் இருந்துகொண்டு என்னைத் தன் வயப்படுத்த முயன்று கொண்டிருந்தவனாகிய சிவபெருமான்; ஏடுடைய மலரான் – இதழ்களை உடைய பூக்களால்; முனைநாள் பணிந்து ஏத்த – (நான் அவனை) பண்டைப் பிறவிகள்தோறும் தாழ்ந்து வணங்கிய காரணத்தால் அருள் செய்த – (இன்று உயர் சிவஞானப்பால் கொடுத்து) அடிமையாகக் கொண்டருளின; பீடு உடைய பிரமாபுரம் – சிறப்பினை உடைய சீகாழியில் மேவிய பெம்மான் இவன் – எழுந்தருளியிருக்கிற ஆண்டவன் (இதோ என் கண்முன்) தோன்றுகிற இவனே.

(விளக்கவுரை) திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்க்குச் சீகாழிக்கோயில் பிரமதீர்த்தக் கரையில் தோணியப்பர் உமாதேவியாரோடும் எழுந்தருளிச் சிவஞானங் குழைத்த திருமுலைப்பாலை உண்பிக்க, அவர் வாயி–ருந்து வடிந்த பாலை அவர் பிதாவாகிய சிவபாத இருதயர் அத்தீர்த்தத்தில் முழுகி நியம முடித்து வந்தபொழுது கண்டு, "எச்சில் மயங்க இப்பாலை ஊட்டினவர் யாவர் ?" எனக் கேட்டார். அவ்வாறு கேட்ட காலத்தில், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார், "எனக்குப் பாலை ஊட்டியவர் இதோ வான் வெளியில் எருதின் மேல் உமாதேவியாரோடும் எழுந்தருளியிருக்கிற சிவபெருமானே" என்று தமது சிறுவிரலாற் சுட்டிக்காட்டியபொழுது பாடிய தேவாரப் பதிகத்தில் முதலாவது பாட்டு இது.

தோடு பெண்கள் அணிந்து கொள்கிற காதணி, இங்கே இது சிவபெருமானுடைய இடது காதணியைக் குறிக்கின்றது. சிவஞானம் குழைத்த திருமுலைப்பாலைத் தாம் உண்ணும்படியருளிய உமாதேவியாரது திருஉருவத்தை நாயனார் குறிக்கின்றார். (சிவன் கூட்டி வந்து ஏவிய முறையே நாயனார்க்கு உமாதேவியார் சிவஞானப்பாலை ஊட்டினார்) நாயனார், தமது தந்தையாருக்குத் தம்மைப்பால் உண்பித்தவர் சிவபெருமானே என்று சுட்டிக் காட்டுகிறார்.

இது உண்மை நிகழ்ச்சியாயிருத்தலோடு சிவபெருமானுக்குத் துதியாயுமிருத்த–ணாலே அத்துதியைச் சிவபெருமான் திருச்செவியேற்று அருளுமாறு தோடுடைய செவியன் என நாயனார் சிறப்பித்தார். அருள்வடிவினராகிய உமாதேவியாரே, உயிர்கள் கூறும் குறைகளைக்கேட்டு, அவைகளைப் பிறவித் துன்பத்தினின்றும் நீக்கிச் சிவத்தோடு சேர்த்துப் பேரின்பம் அடையச் செய்தலால், நாயனார் சிவபெருமான் திருமேனியில் இடப்பாதியாகிய உமாதேவியார் பாகத்திலுள்ள இடது காதினைச் சிறப்பித்தார்.

இத்தேவாரம் தமிழ்மறையின் முதலாவது பாட்டு, ஆத–ன், நாயனார், வேதாகமங்கள் முத–ய எல்லாக் கலைகளின் பொருள்களும் அடங்கியுள்ள பிரணவத்தைத் தோடு என்னும் முதல் மொழியிலுள்ள "ஓ" காரமாக முத–ல் அமைத்துக்கூறினார். இப்பிரணவ நாதம் தகராகாசம் எனப்படும். அது அறிவுவெளியிற் றோன்றும் சுத்தநாதம் ஆத–ன், "த" கர ஒற்றுடன் "ஓ" காரத்தைக் கூட்டித் "தோ" என்று உரைக்கப்பட்டது. பிரணவ முதலெழுத்தாகிய இந்த "ஓ" காரமானது பன்னிரண்டாவது திருமுறையாகிய பெரியபுராணத்தின் ஈற்றுச் செய்யுள் ஈற்றடியின் ஈற்றுமொழியின் ஈற்றெழுத்தாகிய மகரஒற்றொடு புணர்ந்து "ஓம்" எனமுடிந்து நிற்கின்றது. இதனால் தமிழ்மறைகளெல்லாமும் பிரணவமாகிய அஞ்செழுத்து மந்திரத்திலே தோன்றி அடங்கிநிற்கும் தன்மை உணர்த்தப்பட்டது.

விடை ஏறி – ஊழிக்காலத்தில் அறக்கடவுள் இறைவனைத் தொழுது பிறப்பு இறப்பு இல்லாது என்றும் நிலவும் தன்மையை வேண்டிய பொழுது, இறைவன் அறக்கடவுளை வெள் விடையாக்கி அதன்மேல் ஊர்ந்தருளுகிறார். இதுவே விடையேறிய நிகழ்வு. இது சிவபெருமானது படைப்புத் தொழிலை உணர்த்தும். இவ்வரலாறு, இறைவன் அறவடிவினன் அறவாழி என்னும் உண்மையையும்; அறவழி நின்று அறம் புரிகிற இயல்பினை உடையவர்களே இறைவனை அடைவர் என்னும் உண்மையையும் உணர்த்துகிறது.

தூவெண் மதிசூடி – தக்கனாலடைந்த சுடு மொழிக்கு (சாபத்துக்கு) ஆற்றாத திங்கள் வானவன், இறைவனைச் சரண் புகுந்து, தனக்குரிய துன்பந் துடைத்தாள வேண்டினான். இறைவன், திங்களின் துன்பந் துடைத்துத் தன் திருமுடியில் அவனை ஏற்றினான். இதுவே திங்கள் சூடியவரலாறு. துன்பத்தினின்றும் காத்த தன்மையால், இது இறைவனது காத்தல் எனும் தொழிலைக் காட்டுவதாகும்.

காடுடைய சுடலைப் பொடிபூசி – மகா சங்கார காலத்தில் நிவர்த்தி கலை முத–ய ஐந்து கலைகளினாலும், அடங்கியுள்ள எல்லாப் புவனங்களை (உலகுகளை)யும் அழித்து நடனஞ் செய்யும் இடமே இங்கு காடுடைய சுடலை எனப்பட்டது. அவ்விடத்துக் கிடந்த சாம்பரே "பொடி" எனப்பட்டது. இந்தப் பொடியே, தன்னைத் தொழுது எழுவார் வினையாவும் நீறு எழ, இறைவன் தனது திருமேனியில் அணியும் திருநீறாகும். சைவர்கள் தம்மைச் சார்ந்து பிணிக்கிற மலத்தை நீறாக்கும் கருத்துக் குறியாக அணிந்து கொள்கிறது இந்தத் திருநீற்றையே, சுடலைப்பொடி இறைவனது அழித்தல் தொழிலைக் குறிக்கின்றது. காடுடைய சுடலைப் பொடி என்பதை சுடலைக்காடு உடைய பொடி என மாற்றுக. சுடு+அல்+ஐ = சுடு–பகுதி, அல்லும் ஐயும் தொழிற் பெயர் விகுதிகள். காடு – இடம். சுடு–காடு–சுடுகின்ற இடம். பிணஞ்சுடுகின்ற இடம் – சுடலை.

என் உள்ளம் கவர்கள்வன் – உள்ளம் என்பது மனம், 'சிந்தை என்பதும் அது உயிர்' என்னும் பொருளும் கொள்ளும். ஆனால் "அந்தமும் ஆதியும் இல்லா அரும்பொருள் சிந்தையில் மேவித்தியக்கு அறுத்தல்" வேண்டும். (திருமந்திரம் 2963) என்பது கூறப்படுத–ன் கட்டு நிலையிலுள்ள உயிர்கட்கு அப்பொருள் பொருந்தாது. உயிர்கள் தன்னை அடைந்து பேரின்பம் நுகரும் பொருட்டுப் பக்குவப்படுத்த வேண்டித் திரோதான மலத்தின் வழிநின்று மறைத்து இறைவன் அவைகள் வேண்டிய போகங்களை ஊட்டி உண்பிக்கிறான். உயிர்களது இந்தக் கட்டுநிலைக் காலத்தில் இறைவன் உயிர்களுடைய உள்ளத்தில் அவைகள் அறியாதவாறு நிறைந்து கலந்திருப்பதால் "கள்வன்" என்று கூறப்பட்டான். "நினைத்தவர்கள் நெஞ்சுளாய வஞ்சக்கள்வர்" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் திருவானைக்காத் திருத்தாண்டகப் பாட்டொன்றிற் கூறியிருத்தல் காண்க. ஆத–ன் "என் உள்ளங்கவர் கள்வன்" என்பது இறைவனுடைய "மறைப்புத் தொழிலைக்" குறிக்கிறது.

கவர்தல் = வயப்படுத்துதல். உயிர்களுடைய பக்குவத்துக்கு ஏற்ப அவைகளின் வினைப்பயனாக, உலக இன்பத்தையும் நுகர்வித்துப் பக்குவப்படுத்தித் தன் வயப்படும்படி இறைவன் செய்கிறான். இவ்வாறு உயிர்கள் அறியாதபடி அவைகளை தன் வயப்பத்துதல் இங்கே 'கவர்தல்' எனப்பட்டது.

'கவர்கள்வன்' என்ற சொற்களினால் அகப்பொருட்டுறை கூறப்பட்டதெனினும் பொருந்தும். அகப்பொருட்டுறையில் உயிர் தலைவியாகவும் இறைவன் தலைவனாகவும் உருவகம் செய்யப்படுகிறார்கள்.

"முனைநாட் பணிந்தேத்த" என்றதனால், வினைப் பயனாலன்றி, சிவபாத இருதயர் கோரியபடி, அருட்பணி செய்யவே திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் அவதரித்தார் என்பது குறிப்பிடப்பட்டது.

அருள் செய்த என்பது இறைவனது "அருளல்" என்னும் தொழிலைக் குறிக்கிறது. இறைவன் உயிர்களுக்கு முடிவில் இந்த "அருளல்" ஆகிய தொழில் செய்யும் பொருட்டே மறைப்புத் தொழிலையும் அதனுள் அடங்கிய படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் தொழில்களையும் அவைகளுக்குப் பக்குவம் வருவிக்கும் பொருட்டே செய்கிறான். "அருள், செய் பெம்மான்" என முடிக்க. பெம்மான் என்பது பெருமான் என்ற சொல்–ன் மரூஉ. பெருமான் – தலைவன் – ஆண்டான் – கணவன், "அன்று, ஏ" அசை நிலைகள். இப்பாட்டில் 'விடையேறி', 'மதிசூடி', 'சுடலைப் பொடிபூசி', 'என் உள்ளங்கவர்கள்வன்', 'அருள் செய்த பெம்மான்' என்ற ஐந்து சொற்றொடர்களாலும் முறையே இறைவனுடைய ஐம்பெருந்தொழில்களும் குறிக்கப்பட்டன. இத்தொழில்கள், திருவருட்பயன் பதிமுது நிலை என்னும் அதிகாரத்தில், "ஆக்கி எவையும் அளித்து, ஆசுடன் அடங்கப், போக்கும் அவன் போகாப்புகல்" என்ற நான்காவது திருக்குறளால் கூறப்பட்டன.

## உ. திருப்புகலூர்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 2

| | | |
|---|---|---|
| 12. | குறிகலந்தவிசை பாட–னான்நசை யா–வ்வுலகெல்லாம்<br>நெறிகலந்ததொரு நீர்மையனாயெரு தேறிப்ப–பேணி<br>முறிகலந்ததொரு தோலரைமேலுடை யானிடமொய்ம்மலரின்<br>பொறிகலந்தபொழில் சூழ்ந்தயலேபுய லாரும்புகலூரே. | சுரத்தானங்களைக் குறிக்கும் இசையமைதியோடு கூடிய பாடல்களைப் பாடுபவன். உயிர்கள் மீது கொண்ட பெருவிருப்பால் இவ்வுலகம் முழுவதும் வாழும் அவ்வுயிர்கள் தம்மை உணரும் நெறிகளை வகுத்து அவற்றுள் கலந்து நிற்பவன். எருதின்மிசை ஏறி வந்து மக்கள் இடும்பிச்சையை விரும்பி ஏற்பவன். இடையில் மான் தோலாடையை உடுத்துபவன். அவன் விரும்பி உறையும் இடம் செறிந்த மலர்கள்மீது புள்ளிகளை உடைய வண்டுகள் மொய்த்துத் தேனுண்ணும் வானளாவிய பொழில் சூழ்ந்த புகலூராகும். |
| 13. | காதிலங்குகுழை யன்னிழைசேர்திரு மார்பன்னொருபாகம்<br>மாதிலங்குதிரு மேனியினான்கரு மானின்னுரியாடை<br>மீதிலங்கவணிந் தானிமையோர்தொழ மேவும்மிடஞ்சோலைப்<br>போதிலங்குநசை யால்வரிவண்டிசை பாடும்புகலூரே. | காதில் விளங்கும் குழையை அணிந்தவன், பூணூல் அணிந்த அழகிய மார்பினன். இடப்பாகமாக உமையம்மை விளங்கும் திருமேனியன். யானையினது தோலை உரித்து மேல் ஆடையாக அணிந்தவன். அத்தகையோன் இமையவர் தொழமேவும் இடம், சோலைகளில் தேனுண்ணும் விருப்பினால் வரிவண்டுகள் இசைபாடும் புகலூராகும். |
| 14. | பண்ணிலாவும்மறை பாட–னான்இறை சேரும்வளையங்கைப்<br>பெண்ணிலாவவுடை யான்பெரியார்கழல்<br>என்றுந்தொழுதேத்த<br>உண்ணிலாவியவர் சிந்தையுள்நீங்கா வொருவன்னிடமென்பர்<br>மண்ணிலாவும்மடி யார்குடிமைத்தொழின் மல்கும்புகலூரே. | இசையமைதி விளங்கும் வேத கீதங்களைப் பாடுபவன் – முன்கைகளில் வளையல்கள் விளங்கும் அழகிய கைகளை உடைய உமையம்மையைத் தனது தேவியாக உடையவன். தன் திருவடிகளை என்றும் தொழுது ஏத்தும் பெரியவர்களின் உள்ளத்தே விளங்குவதோடு அவர்களின் அடிமனத்தில் என்றும் நீங்காதிருப்பவன். அத்தகையோன் விரும்பி உறையுமிடம் நிலவுலகில் வாழும் அடியவர்கள் குடும்பத்துடன் வந்து பணி செய்யும் புகலூராகும். |
| 15. | நீரின்மல்குசடை யன்விடையன்அடை யார்தம்மரண்மூன்றுஞ்<br>சீரின்மல்குமலை யேசிலையாகமு னிந்தானுலகுய்யக்<br>காரின்மல்குகடல் நஞ்சமதுண்ட கடவுள்ளிடமென்பர்<br>ஊரின்மல்கிவளர் செம்மையினாலுயர் வெய்தும்புகலூரே. | கங்கை நீரால் நிறைவுற்ற சடைமுடியை உடையவன். விடையூர்தியன். முப்புரங்களையும் சிறப்புமிக்க மேருமலையை வில்லாகக் கொண்டு முனிந்தவன். உலக உயிர்கள் உய்யக் கருநிறமுடைய கட–டையே தோன்றிய நஞ்சை அமுதமாக உண்ட கடவுள். அத்தகையோன் விரும்பி உறையுமிடம் ஒழுக்கத்தால் உயர்ந்த மக்கள் வாழ்ந்து சிறப்பெய்தும் புகலூராகும். |

| | | |
|---|---|---|
| 16. | செய்யமேனிவெளி யபொடிப்பூசுவர் சேரும்மடியார்மேல்<br>பையநின்றவினை பாற்றுவர்போற்றிசைத் தென்றும்பணிவாரை<br>மெய்யநின்றபெரு மானுறையும்மிட மென்பரருள்பேணிப்<br>பொய்யிலாதமனத் தார்பிரியாது பொருந்தும்புகலூரே. | சிவந்த திருமேனியில் வெண்ணிறமான திருநீற்றைப் பூசுபவர். தம்மை வந்தடையும் அடியவர்களைத் தாக்க வரும் வினைகளை நீக்குபவர். என்றும் தம்மைப் பாடிப் பணிவார்க்கு உண்மையானவர். அவர் விரும்பி உறையும் இடம், அருளையே விரும்பிப் பொய்யில்லாத மனத்தவர் நீங்காது வாழும் புகலூர் என்பர். |
| 17. | கழ–னோசைசிலம் பின்னொ–யோசை க–க்கப்பயில்கானில்<br>குழ–னோசைகுறட் பாரிடம்போற்றக் குனித்தாரிடமென்பர்<br>விழவினோசையடி யார்மிடைவுற்று விரும்பிப்பொ–ந்தெங்கும்<br>முழவினோசைமுந் நீரயர்வெய்த முழங்கும்புகலூரே. | இரண்டு திருவடிகளிலும், விளங்கும் வீரக் கழல், சிலம்பு ஆகியன ஒ–க்கவும், குழல் முத–ய இசைக்கருவிகள் முழங்கவும், குள்ளமான பூதகணங்கள் போற்றவும், பலகாலும் பழகிய இடமாக இடுகாட்டில் முற்றழிப்பு நடனம் புரியும் இறைவனுடைய இடம், திருவிழாக்களின் ஓசையும், அடியவர் மனமகிழ்வோடு எங்கும் முழக்கும் முழவோசையும் கடலோசையைத் தளரச் செய்யும் ஒ–யைத் தரும் புகலூர் என்பர். |
| 18. | வெள்ளமார்ந்துமிளிர் செஞ்சடைதன்மேல் விளங்கும்மதிசூடி<br>உள்ளமார்ந்தவடி யார்தொழுதேத்த வுகக்கும் அருள்தந்தெம்<br>கள்ளமார்ந்துகழி யப்பழிதீர்த்த கடவுள்ளிடமென்பர்<br>புள்ளையார்ந்தவய –ன்விளைவால்வளம் மல்கும்புகலூரே. | கங்கைநீர் அடங்கி விளங்கும் செஞ்சடைமேல் விளக்கமான பிறைமதியைச் சூடி, தம்மிடம் மனம் ஒன்றிய அடியவர் தொழுது ஏத்த அவர்கள் மனம் மகிழும் அருளைப் புரிந்து என்னைப் பற்றிய வினையையும் பழியையும் தீர்த்தருளிய கடவுள் உறையும் இடம், மீன்கொத்தி முத–ய பறவை இனங்கள் மீன்களைக் கவர வந்து தங்கும் வயல்களின் விளைவால் வளம் மல்கிய புகலூராகும். |
| 19. | தென்னிலங்கையரை யன்வரைபற்றி<br>யெடுத்தான்முடிதிண்டோள்<br>தன்னிலங்குவிர லால்நெரிவித்திசை கேட்டன்றருள்செய்த<br>மின்னிலங்குசடை யான்மடமாதொடு மேவும்மிடமென்பர்<br>பொன்னிலங்குமணி மாளிகைமேல்மதி தோயும்புகலூரே. | அழகிய இலங்கை அரசனாகிய இராவணன் கயிலை மலையை இரு கரங்களாலும் பற்றி எடுத்தபோது அவனுடைய தலைகள், திண்ணிய தோள்கள் ஆகியவற்றைத் தன் கால் விரலால் நெரித்துப் பின் அவன் சாமகானம் பாடக்கேட்டு அன்று அவனுக்கு அருள் செய்தவனாகிய தாழ்ந்த சடைமுடி உடைய பெருமான் தன் தேவியோடு மேவும் இடம், மதி தோயும் அழகிய மாளிகைகள் நிறைந்த புகலூராகும். |

| | | |
|---|---|---|
| 20. | நாகம்வைத்தமுடி யானடிகைதொழு தேத்தும்மடியார்கள்<br>ஆகம்வைத்தபெரு மான்பிரமன்னொடு மாலுந்தொழுதேத்த<br>ஏகம்வைத்தவெரி யாய்மிகவோங்கிய எம்மானிடம்போலும்<br>போகம்வைத்தபொழி –ன்னழலான்மது வாரும்புகலூரே. | பாம்பை முடிமிசை வைத்துள்ளவனும், தன் திருவடிகளைப் போற்றும் அடியார்கள், தம் மனத்தின்கண் வைத்துப் போற்றும் தலைவனும், பிரமனும், திருமாலும் தொழுதேத்த ஏகனாய் எரி வடிவில் மிக ஓங்கிய எம்மானுமாகிய இறைவனுக்கு மிக உகந்த இடம், பல்வகைப் பயன்களையும் தருவதோடு நிழலாற் சிறந்ததாய்த் தேன் நிறைந்து விளங்கும் பொழில் சூழ்ந்த புகலூராகும். |
| 21. | செய்தவத்தர்மிகு தேரர்கள்சாக்கியர் செப்பிற்பொருளல்லாக்<br>கைதவத்தர்மொழி யைத்தவிர்வார்கள் கடவுள்ளிடம்போலும்<br>கொய்துபத்தர்மல ரும்புனலுங்கொடு தூவித்துதிசெய்து<br>மெய்தவத்தின்முயல் வாருயர்வானக மெய்தும்புகலூரே. | எண்ணிக்கையில் மிக்கதேரர், சாக்கியர் சமணர்கள் ஆகியவர்களின் உண்மையல்லாத வஞ்சகம் நிறைந்த மொழிகளைக் கேளாதவராய், மிகுதியான தவத்தைச் செய்யும் மெய்யடியார்களின் தலைவராகிய சிவபிரானுக்கு மிக உகந்த இடம், அடியவர்கள் மலர் கொய்து வந்து தூவிப் புனலாட்டித் துதி செய்து தவநெறியில் முயன்று உயர் வானகத்தை எய்துதற்குரிய வழிபாடுகளை ஆற்றும் புகலூராகும். |
| 22. | புற்றில்வாழும்அர வம்மரையார்த்தவன் மேவும்புகலூரைக்<br>கற்றுநல்லவர் காழியுண்ஞானசம் பந்தன்றமிழ்மாலை<br>பற்றியென்றும்இசை பாடியமாந்தர் பரமன்னடிசேர்ந்து<br>குற்றமின்றிக்குறை பாடொழியாப்புக ழோங்கிப்பொ–வாரே. | புற்றில்வாழும் பாம்புகளை இடையிலே கட்டியவனாகிய சிவபிரான் எழுந்தருளிய புகலூர்மீது இறைவனது பொருள்சேர் புகழைக் கற்று வல்லவர்கள் வாழும் சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன்பாடிய தமிழ்மாலை யாகிய இத்திருப்பதிகத்தை, என்றும் இசையோடு பாடி வழிபடும் மாந்தர்கள் இறைவன் திருவடி நீழலை அடைந்து குற்றம் குறைபாடு அகன்று புகழோங்கிப் பொ–வெய்துவார்கள். |

# 3. திருவலிதாயம்

**பண் : நட்டபாடை** **முதல் திருமுறை பதிக எண் : 3**

| | | |
|---|---|---|
| 23. | பத்தரோடுபல ரும்பொ–யம்மலர் அங்கைப்புனல்தூவி<br>ஒத்தசொல்–யுல கத்தவர்தாந்தொழு தேத்தவுயர்சென்னி<br>மத்தம்வைத்தபெரு மான்பிரியாதுறை கின்றவ–தாயம்<br>சித்தம்வைத்தவடி யாரவர்மேலடை யாமற்றிடர்நோயே. | வ–தாயம் சித்தம் வைத்த அடியார்களை இடர் நோய் அடையா என வினை முடிபு கொள்க. சிவனடியார்கள், விளங்குகின்ற அழகிய மலர்களை அகங்கையில் ஏந்தி மந்திரத்தோடு நீர் வார்த்துப் பூசிக்க அவர்களோடு ஒரே இசையில் அம்மந்திரங்களைச் சொல்– உலக மக்கள் தாமும் வெளிநின்று தொழுதேத்துமாறு ஊமத்தை மலரை முடிமிசைச் சூடிய பெருமான் பிரியாதுறையும் வ–தாயம் என்ற தலத்தைத் தம் சித்தத்தில் வைத்துள்ள அடியவர்கள் மேல் துன்பங்களோ நோய்களோ வந்தடைய மாட்டா. |
| 24. | படையிலங்குகர மெட்டுடையான்படி றாகக்கலனேந்திக்<br>கடையிலங்குமனை யிற்ப–கொண்டுணுங் கள்வன்னுறை<br>கோயில்<br>மடையிலங்குபொழி –ன்னிழல்வாய்மது வீசும்வ–தாயம்<br>அடையநின்றவடி யார்க்கடையாவினை யல்லற்றுயர்தானே. | படைக்கலங்களை ஏந்திய எட்டுத் திருக்கரங்களை உடைய பெருமானும், பொய்யாகப் ப–யேற்பது போலப் பிரம கபாலத்தைக் கையில் ஏந்தி வீடுகளின் வாயில்களிற் சென்று ப–யேற்றுண்ணும் கள்வனும் ஆகிய பெருமான் உறையும் கோயிலை உடையதும், நீர்வரும் வழிகள் அடுத்துள்ள பொழில்களின் நீழ–ல் தேன்மணம் கமழ்வதுமாகிய வ–தாயத்தை அடைய எண்ணும் அடியவர்களை வினை அல்லல் துயர் ஆகியன வந்தடைய மாட்டா. |
| 25. | ஐயன்நொய்யன்னணி யன்பிணியில்லவ<br>ரென்றுந்தொழுதேத்தச்<br>செய்யன்வெய்யபடை யேந்தவல்லான்திரு<br>மாதோடுறைகோயில்<br>வையம்வந்துபணி யப்பிணிதீர்த்துயர் கின்றவ–தாயம்<br>உய்யும்வண்ணந்நினை மின்நினைந்தால்வினை தீரும்நலமாமே. | வ–தாயத்தை உய்யும் வண்ணம் நினைமின்; நினைந்தால் பிணி தீரும், இன்பம் ஆம் என வினை முடிபு கொள்க. அழகன், நுண்ணியன், அருகி–ருப்பவன், செந்நிறமேனியன், நெடிய மழுவை ஏந்தும் ஆற்றலன், அவன் பாசங்கள் நீங்கிய அடியவர் எக்காலத்தும் வணங்கித் துதிக்குமாறு உமையம்மையோடு உறையும் கோயில் உலக மக்கள் அனைவரும் வந்து பணிய அவர்களின் பிணிகளைத் தீர்த்து உயரும் திருவ–தாயம் என்ற அத்தலத்தை நீர் உய்யும் வண்ணம் நினையுங்கள். நினைந்தால் வினைகள் தீரும். நலங்கள் உண்டாகும். |
| 26. | ஒற்றையேறதுடை யான்நடமாடியோர் பூதப்படைசூழப்<br>புற்றினாகமரை யார்த்துழல்கின்றவெம் பெம்மான்மடவாளோ<br>டுற்றகோயிலுல கத்தொளிமல்கிட வுள்கும்வ–தாயம்<br>பற்றிவாழும்மது வேசரணாவது பாடும்மடியார்க்கே. | அடியவர்க்கு வ–தாயத்தைப் பற்றி வாழ்வதே சரண் என முடிபு காண்க. ஒற்றை விடையை உடையவன். சிறந்த பூதப்படைகள் சூழ்ந்துவர, புற்றில் வாழும் நாகங்களை இடையில் கட்டி நடனமாடி, உழலும் எம்பெருமான், உமையம்மையோடு உறையும் கோயில் உலகின்கண் ஒளி நிலைபெற்று வாழப் பலரும் நினைந்து போற்றும் வ–தாயமாகும். அடியவர்கட்கு அத்தலத்தைப் பற்றி வாழ்வதே அரணாம். |

| | | |
|---|---|---|
| 27. | புந்தியொன்றிநினை வார்வினையாயின தீரப்பொருளாய<br>அந்தியன்னதொரு பேரொளியானமர் கோயிலயலெங்கும்<br>மந்திவந்துகடு வன்னொடுங்கூடி வணங்கும் வ–தாயஞ்<br>சிந்தியாதவவர் தம்மடும்வெந்துயர் தீர்தலெளிதன்றே. | வ–தாயம் கோயிலைச் சிந்தியாதவர் துயர் தீர்தல் எளிதன்று என முடிபு கொள்க. மனம் ஒன்றி நினைபவர் வினைகளைத் தீர்த்து அவர்க்குத் தியானப் பொருளாய்ச் செவ்வான் அன்ன பேரொளியோடு காட்சி தரும் இறைவன் எழுந்தருளியுள்ள கோயிலாய் அய–ல் மந்தி ஆண்குரங்கோடு கூடி வந்து வணங்கும் சிறப்பை உடைய திருவ–தாயத்தைச் சிந்தியாத அவர்களைத் தாக்கும் கொடிய துன்பம், தீர்தல் எளிதன்று. |
| 28. | ஊனியன்றதலை யிற்ப–கொண்டுல கத்துள்ளவரேத்தக்<br>கானியன்றகரி யின்னுரிபோர்த்துழல் கள்வன்சடைதன்மேல்<br>வானியன்றபிறை வைத்தவெம்மாதி மகிழும்வ–தாயந்<br>தேனியன்றநறு மாமலர்கொண்டுநின் றேத்தத்தெளிவாமே. | வ–தாயத்திறைவனை நறுமாமலர் கொண்டு நின்றேத்தத் தெளிவு ஆம் என வினை முடிபு கொள்க. ஊன் கழிந்த பிரமகபாலத்தில் ப–ஏற்று உலகத்தவர் பலரும் ஏத்தக் காட்டில் திரியும் களிற்றுயானையின் தோலை உரித்துப் போர்த்துத் திரியும் கள்வனும், சடையின்மேல் வானகத்துப் பிறைக்கு அடைக்கலம் அளித்துச் சூடிய எம் முதல்வனும் ஆகிய பெருமான், மகிழ்ந்துறையும் திருவ– தாயத்தைத் தேன்நிறைந்த நறுமலர் கொண்டு நின்று ஏத்தச் சிவஞானம் விளையும். |
| 29. | கண்ணிறைந்தவிழி யின்னழலால்வரு காமன்னுயிர்வீட்டிப்<br>பெண்ணிறைந்தவொரு பான்மகிழ்வெய்திய<br>பெம்மானுறைகோயில்<br>மண்ணிறைந்தபுகழ் கொண்டடியார்கள் வணங்கும்வ–தாயத்<br>துண்ணிறைந்தபெரு மான்கழலேத்தநம் முண்மைக்கதியாமே. | வ–தாய நாதன் கழலை ஏத்தினால் வீட்டின்பத்தை அடையலாம் என வினை முடிபு காண்க. நெற்றி விழியின் அழலால், தேவர் ஏவலால் வந்த காமனது உயிரை அழித்துத் தனது திருமேனியின் பெண்ணிறைந்த இடப் பாகத்தால் மகிழ்வெய்திய பெருமான் உறை கோயிலாய் நிலவுலகெங்கும் நிறைந்த புகழைக்கொண்ட, அடியவர்கள் வணங்கும் திருவ–தாயத்துள் நிறைந்து நிற்கும் பெருமான் திருவடிகளை வணங்கினால் வீடு பேறு அடையலாம். |
| 30. | கட–னஞ்சமமு துண்டிமையோர்தொழு தேத்தநடமாடி<br>அட–லங்கையரை யன்வ–செற்றருள் அம்மான்அமர்கோயில்<br>மட–லங்குகமு கின்பலவின்மது விம்மும்வ–தாயம்<br>உட–லங்குமுயி ருள்ளளவுந்தொழ வுள்ளத்துயர்போமே. | உட–ல் உயிர் உள்ள அளவும் தொழுவாரது மனத் துயரம் கெடும் என வினை முடிபு காண்க. திருப்பாற்கடலைக் கடைந்த போது எழுந்த நஞ்சினை அமுதமாக உண்டு தேவர்கள் தொழுது வாழ்த்த நடனம் ஆடி, வ–மை மிக்க இலங்கை மன்னனின் ஆற்றலை அழித்துப் பின் அவனுக்கு நல்லருள் புரிந்த இறைவன் எழுந்தருளிய கோயிலை உடையதும், மடல்கள் விளங்கும் கமுகு பலாமரம் ஆகியவற்றின் தேன் மிகுந்து காணப்படுவதுமாகிய திருவ–தாயத் தலத்தை நினைக்க மனத்துயர் கெடும். |

| | |
|---|---|
| 31. பெரியமேருவரை யேசிலையாமலை வுற்றாரெயின்மூன்றும்<br>எரியவெய்தவொரு வன்னிருவர்க்கறி வொண்ணாவடிவாகும்<br>எரியதாகியுற வோங்கியவன்வ– தாயந்தொழுதேத்த<br>உரியராகவுடை யார்பெரியாரென வுள்கும்முலகோரே. | வ–தாயத்தை வணங்குவாரைப் பெரியார் என உலகோர் உள்குவர் என முடிபு காண்க. தேவர்களோடு மாறுபட்ட திரிபுர அசுரர்களின் கோட்டைகள் மூன்றையும், மிகப் பெரிய மேரு மலையை வில்லாகக் கொண்டு எரியும்படி அழித்த ஒருவனும், திருமால் பிரமன் ஆகிய இருவராலும் அறிய ஒண்ணாத அழல் வடிவாய் உயர்ந்தோங்கியவனும் ஆகிய சிவபிரானது திருவ–தாயத்தைத் தொழுது ஏத்தலைத் தமக்குரிய கடமையாகக் கொண்ட உலக மக்கள் பலரும் பெரியார் என நினைந்து போற்றப்படுவர். |
| 32. ஆசியாரமொழி யாரமண்சாக்கிய ரல்லாதவர்கூடி<br>ஏசியீரமில ராய்மொழிசெய்தவர் சொல்லைப்பொருளென்னேல்<br>வாசிதீரவடி யார்க்கருள்செய்து வளர்ந்தான்வ–தாயம்<br>பேசுமார்வமுடை யாரடியாரெனப் பேணும்பெரியோரே. | வ–தாயத்தின் புகழைப் பேசுபவர்க்கு யாம் அடியார் எனப் பெரியோர்கள் பேணுவர். மனமார வாழ்த்தும் இயல்பினரல்லாத சமணர் சாக்கியர் ஆகிய புறச்சமயிகள் கூடி இகழ்ந்தும் அன்பின்றியும் பேசும் சொற்களைப் பொருளாகக் கொள்ளாதீர். குற்றம் தீர, அடியவர்கட்கு அருள்செய்து புகழால் ஓங்கிய பெருமானது வ–தாயத்தின் புகழைப் பேசும் ஆர்வம் உடையவர்களே, அடியார்கள் என விரும்பப்படும் பெரியோர் ஆவர். |
| 33. வண்டுவைகும்மண மல்கியசோலை வளரும்வ–தாயத்<br>தண்டவாணனடி யுள்குதலாலருண் மாலைத்தமிழாகக்<br>கண்டல்வைகுகடற் காழியுண்ஞானசம் பந்தன்றமிழ்பத்துங்<br>கொண்டுவைகியிசை பாடவல்லார்குளிர் வானத்துயர்வாரே. | வ–தாய நாதன்மீது பாடிய இத்திருப்பதிகத்தை இசையோடு பாடுவார் குளிர் வானத்துயர்வார் என முடிபு காண்க. வண்டுகள் மொய்க்கும் மணம் நிறைந்த சோலைகள் வளரும் திருவ–தாயத்தில் விளங்கும் அனைத்துலக நாதனின் திருவடிகளைத் தியானிப்பதால், தாழைகள் வளரும் கடற்கரையை அடுத்துள்ள சீகாழிப்பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் தமிழ் மாலையாக அருளிச் செய்த இத்திருப்பதிகத்தைச் சிறந்த தோத்திரமாகக் கொண்டு அமர்ந்திருந்து இசையோடு பாடவல்லார், குளிர்ந்த வானுலக வாழ்க்கையினும் உயர்வு பெறுவர். |

## 4. திருப்புகலியும் திருவீழிமிழலையும்

பண் : நட்டபாடை — முதல் திருமுறை பதிக எண் : 4

| | |
|---|---|
| 34. மைம்மரு பூங்குழற் கற்றைதுற்ற வாணுதன் மான்விழி மங்கையோடும்<br>பொய்ம்மொழி யாமறை யோர்களேத்தப் புக– நிலாவிய புண்ணியனே<br>எம்மிறை யேயிமை யாதமுக்க ணீசவெ னேசவி தென்கொல்சொல்லாய்<br>மெய்ம்மொழி நான்மறை யோர்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. | கற்றையாகச் செறிந்து கருமை மருவி வளர்ந்த அழகிய கூந்தலையும், ஒளி சேர்ந்த நுதலையும், மான் விழி போன்ற விழியையும் உடைய உமையம்மையோடு, பொய் பேசாத அந்தணர்கள் ஏத்தப் புக–யில் விளங்கும் புண்ணியம் திரண்டனைய வடிவினனே, எம் தலைவனே! இமையாத முக்கண்களை உடைய எம் ஈசனே!, என்பால் அன்பு உடையவனே, வாய்மையே பேசும் நான்மறையை ஓதிய அந்தணர் வாழும் திருவீழி மிழலையில் திருமாலால் விண்ணி–ருந்து கொண்டுவந்து நிறுவப்பட்ட கோயி–ல் விரும்பியுறைதற்குரிய காரணம் என்னையோ? சொல்வாயாக! |

| | |
|---|---|
| **35.** கழன்மல்கு பந்தொடம் மானைமுற்றில் கற்றவர் சிற்றிடைக் கன்னிமார்கள்<br>பொழின்மல்கு கிள்ளையைச் சொற்பயிற்றும் புக– நிலாவிய புண்ணியனே<br>எழின்மல ரோன்சிர மேந்தியுண்டோ ரின்புறு செல்வமி தென்கொல்சொல்லாய்<br>மிழலையுள் வேதிய ரேத்திவாழ்த்த விண்ணிழி கோயில் விரும்பியதே. | மகளிர்க்குப் பொருந்திய கழங்கு, பந்து, அம்மானை, முற்றில் ஆகிய விளையாட்டுக்களைக் கற்ற சிற்றிடைக் கன்னிமார்கள், சோலைகளில் தங்கியுள்ள கிளிகட்குச் சொற்களைக் கற்றுக் கொடுத்துப் பேசச் செய்யும் திருப்புக–யில் விளங்கும் புண்ணியனே! அழகிய தாமரை மலரில் விளங்கும் பிரமனது தலையோட்டில் ப–யேற்றுண்டு இன்புறும் செல்வனே! திருவீழி மிழலையில் வேதியர்கள் போற்றித் துதிக்க விண்ணிழி கோயிலை நீ விரும்பியதற்குக் காரணம் என்ன? சொல்வாயாக! |
| **36.** கன்னிய ராடல் கலந்துமிக்க கந்துக வாடை கலந்துதுங்கப்<br>பொன்னியன் மாட நெருங்குசெல்வப் புக– நிலாவிய புண்ணியனே<br>இன்னிசை யாழ்மொழி யாளோர்பாகத் தெம்மிறை யேயிது வென்கொல்சொல்லாய்<br>மின்னிய னுண்ணிடை யார்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. | கன்னிப் பெண்கள் விளையாட்டை விரும்பிப் பந்தாடுதற்குரிய தெருக்களில் கூடியாட உயர்ந்த பொன்னிறமான அழகுடன் விளங்கும் மாடங்கள் நெருங்கும் செல்வப் புக– நிலாவிய புண்ணியனே! யாழினது இனிய இசைபோலும் மொழி பேசும் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்ட எம் தலைவனே! மின்னல் போன்ற நுண்ணிய இடையினை உடைய அழகிய மகளிர் மருவும் திருவீழிமிழலையில் விண்ணிழி விமானத்தை நீ விரும்பியதற்குக் காரணம் என்னையோ? சொல்வாயாக! |
| **37.** நாகப ணந்திக ழல்குன்மல்கு நன்னுதன் மான்விழி மங்கையோடும்<br>பூகவ னம்பொழில் சூழ்ந்தவந்தண் புக– நிலாவிய புண்ணியனே<br>ஏகபெ ருந்தகை யாயபெம்மா னெம்மிறை யேயிது வென்கொல்சொல்லாய்<br>மேகமு ரிஞ்செயில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. | பாம்பின் படம் போன்று திகழும் அல்குலையும், அழகு மல்கும் நுதலையும், மான் விழி போன்ற விழியையும் உடைய பார்வதி அம்மையுடன் வளமான கமுகஞ்சோலைகள் சூழ்ந்து விளங்கும் அழகும் தன்மையும் உடைய சீகாழிப் பதியில் விளங்கும் புண்ணியனே! தன்னொப்பார் இன்றித் தானே முதலாய பெருமானே! எம் தலைவனே! மேகங்கள் தோயும் மதில்கள் சூழ்ந்த திருவீழி மிழலையில் விண்ணிழி விமானக் கோயிலை விரும்பியது ஏன்? சொல்வாயாக. |
| **38.** சந்தள றேறுத டங்கொள்கொங்கைத் தையலொ டுந்தள ராதவாய்மைப்<br>புந்தியி னான்மறை யோர்களேத்தும் புக– நிலாவிய புண்ணியனே<br>எந்தமை யாளுடை யீசவெம்மா னெம்மிறை யேயிது வெண்கொல்சொல்லாய்<br>வெந்தவெண் ணீறணிவார்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. | சந்தனக் குழம்பு பூசிய பெரிதான தனங்களை உடைய உமையம்மையோடு, உண்மையில் தவறாத புத்தியினை உடைய நான்மறை அந்தணர்கள் போற்றும் புக–யில் விளங்கும் புண்ணியனே! எம்மை அநாதியாகவே ஆளாய்க் கொண்டுள்ள ஈசனே! எம் தலைவனே! எமக்குக் கடவுளே! வெந்த திருவெண்ணீற்றை அணிந்த அடியவர் வாழும் திருவீழிமிழலையுள் விண்ணிழி கோயிலை நீ விரும்புதற்குக் காரணம் என்னையோ? சொல்வாயாக! |

| | | |
|---|---|---|
| 39. | சங்கொளி யிப்பி சுறாமகரந் தாங்கி நிரந்து தரங்கமேன்மேற்<br>பொங்கொ– நீர்சுமந் தோங்குசெம்மைப் புக– நிலாவிய புண்ணியனே<br>எங்கள்பி ரானிமை யோர்கள்பெம்மா னெம்மிறை யேயிது வென்கொல்சொல்லாய்<br>வெங்கதிர் தோய்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. | ஒளி உடைய சங்கு, முத்துச் சிப்பிகள், சுறா, மகரம் ஆகிய மீன்கள் ஆகிய இவற்றைத் தாங்கி வரிசை வரிசையாய் வரும் கடல் அலைகளால் மேலும் மேலும் பொங்கும் ஒ–யோடு கூடிய ஓதநீர் ஓங்கும் செம்மையான புக–யில் விளங்கும் புண்ணியனே! எங்கள் தலைவனே! இமையோர் பெருமானே! எம் கடவுளே! கதிரவன் தோயும் பொழில்களாற் சூழப்பெற்ற விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ! சொல்வாயாக! |
| 40. | காமனெ ரிப்பிழம் பாகநோக்கிக் காம்பன தோளியொ டுங்கலந்து<br>பூமரு நான்முகன் போல்வரேத்தப் புக– நிலாவிய புண்ணியனே<br>ஈமவ னத்தெரி யாட்டுகந்த வெம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்<br>வீமரு தண்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. | மன்மதன் தீப்பிழம்பாய் எரியுமாறுகண்ணால் நோக்கி, மூங்கில் போலும் தோளினையுடைய உமையம்மையோடும் கூடி, தாமரை மலரில் விளங்கும் நான்முகன் போல்வார் போற்றப் புக–யில் விளங்கும் புண்ணியனே! சுடுகாட்டில் எரியாடலை விரும்பும் எம்பெருமானே! மலர்கள் மருவிய குளிர்ந்த பொழில்களால் சூழப் பெற்ற திருவீழிமிழலையில் விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ! சொல்வாயாக! |
| 41. | இலங்கையர் வேந்தெழில் வாய்த்ததிண்டோள் இற்றல றவ்விர லொற்றியைந்து<br>புலங்களைக் கட்டவர் போற்றவந்தண் புக– நிலாவிய புண்ணியனே<br>இலங்கெரி யேந்திநின் றெல்–யாடு மெம்மிறை யேயிது வென்கொல்சொல்லாய்<br>விலங்கலொண் மாளிகை சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. | இலங்கையர் தலைவனாகிய இராவணன் அழகிய வ–ய தோள்கள் ஒடிந்து, அலறுமாறு தன் கால் விரலால் சிறிது ஊன்றி, ஐம்புல இன்பங்களைக் கடந்தவர்களாகிய துறவியர் போற்ற, அழகிய தண்மையான புக–யில் விளங்கும் புண்ணியனே! விளங்கும் தீப்பிழம்பைக் கையில் ஏந்தி இரவில் இடுகாட்டில் ஆடும் எம் தலைவனே! மலை போன்ற ஒளி பொருந்திய மாளிகைகளால் சூழப் பெற்ற திருவீழிமிழலையில் விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ! சொல்வாயாக. |
| 42. | செறிமுள ரித்தவி சேறியாறுஞ் செற்றதில் வீற்றிருந் தானுமற்றைப்<br>பொறியர வத்தணை யானுங்காணாப் புக– நிலாவிய புண்ணியனே<br>எறிமழு வோடிள மான்கையின்றி யிருந்தபி ரானிது வென்கொல்சொல்லாய்<br>வெறிகமழ் பூம்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. | மணம் செறிந்த தாமரைத் தவிசில் அறுவகைக் குற்றங்களையும் விலக்கி ஏறி அதில் வீற்றிருக்கும் நான்முகனும், புள்ளிகளையுடைய பாம்பினைப் படுக்கையாகக் கொண்ட திருமாலும் காண இயலாதவனாய்ப் புக–யில் விளங்கும் புண்ணியனே! பகைவரைக் கொல்லும் மழுவாயுதத்தோடும் இளமான் ஆகியன கையின்கண் இன்றி விளங்கும் பெருமானே! மணம் கமழும் அழகிய பொழில்களால் சூழப் பெற்ற திருவீழிமிழலையில் விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ! சொல்வாயாக. |

| | | |
|---|---|---|
| 43. | பத்தர்க ணம்பணிந் தேத்தவாய்த்த பான்மை யதன்றியும் பல்சமணும்<br>புத்தரு நின்றலர் தூற்றவந்தண் புக– நிலாவிய புண்ணியனே<br>எத்தவத் தோர்க்குமி லக்காய்நின்ற வெம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்<br>வித்தகர் வாழ்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. | தன்னிடம் பத்திமையுடையோர் பணிந்து போற்றும் பான்மையோடுகூடச் சமணரும், புத்தரும் அலர் தூற்ற, அழகிய குளிர்ந்த புக–யின்கண் விளங்கும் புண்ணியனே! எவ்வகையான தவத்தை மேற்கொண்டோரும் அடைதற்குரிய இலக்காய் நின்ற எம்பெருமானே! சதுரப்பாடுடைய அறிஞர்கள் வாழும் பொழில்கள் சூழ்ந்த திருவீழிமிழலையில் விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ! சொல்வாயாக. |
| 44. | விண்ணிழி கோயில் விரும்பிமேவும் வித்தக மென்கொ –தென்றுசொல்–ப்<br>புண்ணிய னைப்புக –ந்நிலாவு பூங்கொடி யோடிருந் தானைப் போற்றி<br>நண்ணிய கீர்த்தி நலங்கொள்கேள்வி நான்மறை ஞானசம் பந்தன்சொன்ன<br>பண்ணியல் பாடல்வல் லார்களிந்தப் பாரொடு விண்பரி பாலகரே. | விண்ணிழி கோயில் விரும்பிய புண்ணியனைப் போற்றி ஞானசம்பந்தன் சொன்ன பாடல் வல்லார்கள் பாரொடு விண்ணகத்தையும் பரிபாலனம் புரிவர். புக–ப் பதியில் விளங்கும் புண்ணியனாய், அழகிய இளங்கொடி போன்ற உமையம்மையோடு விளங்குவானைத் துதித்துத் திருவீழிமிழலையில் விண்ணிழி கோயிலை விரும்பிய வித்தகம் என்னையோ சொல்லாய் என்று கேட்டுப் புகழால் மிக்கவனும் நலம்தரும் நூற்கேள்வி உடையவனும் நான்மறை வல்லவனும் ஆகிய ஞானசம்பந்தன் பாடிய பண்ணிறைந்த இப்பதிகத் திருப்பாடல்களை ஓதுபவர் நிலவுலகத்தோடு விண்ணுலகத்தையும் ஆளும் சிறப்புடையவராவர். |

## 5. கீழைத் திருக்காட்டுப்பள்ளி

பண் : நட்டபாடை | முதல் திருமுறை பதிக எண் : 5

| | | |
|---|---|---|
| 45. | செய்யரு கேபுனல் பாயவோங்கிச் செங்கயல் பாயச் சிலமலர்த்தேன்<br>கையரு கேகனி வாழையீன்று கானலெல் லாங்கமழ் காட்டுப்பள்ளிப்<br>பையரு கேயழல் வாயவைவாய்ப் பாம்பணை யான்பணைத் தோளிபாகம்<br>மெய்யரு கேயுடை யானையுள்கி விண்டவ ரேறுவர் மேலுலகே. | வய–ன்கண் நீர் பாய, அதனால் களிந்த செங்கயல்மீன்கள் துள்ள, அதனால் சில மலர்களி–ருந்து தேன் சிந்துதலானும், கைக்கெட்டும் தூரத்தில் வாழை மரங்கள் கனிகளை ஈன்று முதிர்ந்ததனானும், காடெல்லாம் தேன் மணமும் வாழைப்பழ மணமும் கமழும் திருக்காட்டுப்பள்ளியுள், நச்சுப்பையினருகே அழலும் தன்மை உடைய ஐந்து வாயையும் கூரிய நச்சுப் பற்களையும் உடைய ஆதிசேடனை அணையாகக் கொண்ட திருமாலையும் உமையம்மையையும் தனது மெய்யின் இடப்பாகமாகக் கொண்டு (அரியர்த்தர், அர்த்தநாரீசுரர்) விளங்கும் இறைவன் மீது பற்றுக்கொண்டு ஏனைய பற்றுக்களை விட்டவர், வீட்டுலகை அடைவர். |
| 46. | திரைகளெல் லாமல ருஞ்சுமந்து செழுமணி முத்தொடு பொன்வரன்றிக்<br>கரைகளெல் லாமணி சேர்ந்துரிஞ்சிக் காவிரி கால்பொரு காட்டுப்பள்ளி<br>உரைகளெல் லாமுணர் வெய்திநல்ல வுத்தம ராயுயர்ந் தாருலகில்<br>அரவமெல் லாமரை யார்த்தசெல்வர்க் காட்செய வல்ல லறுக்கலாமே. | காவிரியின் வாய்க்கால்கள் எல்லா மலர்களையும் சுமந்தும், செழுமையான மணிகள் முத்துக்கள் பொன் ஆகியவற்றை வாரிக் கொண்டும் வந்து இரு கரைகளிலும் அழகு பொருந்த உராய்ந்து வளம் சேர்க்கும் திருக்காட்டுப்பள்ளியுள் பாம்புகளை இடையில் கட்டிய செல்வராய் எழுந்தருளியிருக்கும் சிவபிரானுக்கு, வேதம் முதலான மேம்பட்ட உரைகள் யாவற்றையும் உணர்ந்த நல்ல உத்தமராய்த் தொண்டு செய்யின் அல்லல் அறுக்கலாம். |

| | | |
|---|---|---|
| 47. | தோலுடை யான்வண்ணப் போர்வையினான் சுண்ண வெண்ணீறு துதைந்திலங்கு<br>நூலுடை யானிமை யோர்பெருமான் நுண்ணறி வால்வழி பாடுசெய்யுங்<br>காலுடை யான்கரி தாயகண்டன் காத–க் கப்படுங் காட்டுப்பள்ளி<br>மேலுடை யானிமை யாதமுக்கண் மின்னிடை யாளொடும் வேண்டினானே. | பு–த்தோலை ஆடையாக உடுத்தவன். யானைத் தோலை அழகிய போர்வையாகப் போர்த்தவன். திருவெண்ணீறாகிய சுண்ணத்தில் செறிந்து விளங்கும் பூணூலை மார்பகத்தே உடையவன். தேவர்கட்குத் தலைவன். பதிஞாலத்தாலே அன்பர்கள் வழிபாடு செய்யும் திருவடிகளை உடையவன். கரிய கண்டத்தை உடையவன். பலராலும் விரும்பப் பெறும் திருக்காட்டுப் பள்ளியில் இமையாத மூன்றாவது கண்ணை நெற்றியில் உடைய அவ்விறைவன் மின்னல் போன்ற இடையினை உடைய உமையம்மையோடு விரும்பி எழுந்தருளியுள்ளான். |
| 48. | சலசல சந்தகி லோடுமுந்திச் சந்தன மேகரை சார்த்தியெங்கும்<br>பலபல வாய்த்தலை யார்த்துமண்டிப் பாய்ந்திழி காவிரிப் பாங்கரின்வாய்க்<br>கலகல நின்றதி ருங்கழலான் காத–க் கப்படுங் காட்டுப்பள்ளிச்<br>சொலவல தொண்டர்க ளேத்தநின்ற சூலம்வல் லான்கழல் சொல்லுவோமே. | சலசல என்னும் ஒ–க் குறிப்போடு சந்தனம் அகில் முத–யவற்றை அடித்துவந்து, சந்தனத்தைக் கரையில் சேர்த்துப் பற்பல வாய்க்கால்களின் தலைப்பில் ஆரவாரித்து ஓடிப் பாய்ந்து வயல்களில் இழிந்து வளம் சேர்க்கும் காவிரியின் தென்பாங்கரில் சலசல என்னும் ஓசையோடு அதிரும் கழல்களை அணிந்த இறைவனால் விரும்பப்படும் திருக்காட்டுப் பள்ளியை அடைந்து இறைவனது பொருள்சேர் புகழ் பேசும் தொண்டர்களால் துதிக்கப்படும் அச்சூல பாணியின் திருவடிப் பெருமையை நாமும் கூறித் தோத்திரிப்போம். |
| 49. | தளையவிழ் தண்ணிற நீலநெய்தல் தாமரை செங்கழு நீருமெல்லாங்<br>களையவி முங்குழ லார்கடியக் காத–க் கப்படுங் காட்டுப்பள்ளித்<br>துளைபயி லுங்குழ –யாழ்முரலத் துன்னிய வின்னிசை யாற்றுதைந்த<br>அளைபயில் பாம்பரை யார்த்தசெல்வர்க் காட்செய வல்ல லறுக்கலாமே. | கட்டவிழ்ந்த குளிர்ந்த நிறத்துடன்கூடிய நீலோற்பலம், நெய்தல், தாமரை, செங்கழுநீர் ஆகிய எல்லா மலர்களையும் அவிழ்ந்து விழும் கூந்தலை உடைய உழத்தியர் களைகளாய்ப் பிடுங்கி எறியும் வளம் உடையதும், பலராலும் விரும்பப்படுவதும் ஆகிய திருக்காட்டுப்பள்ளியில் துளைகளால் ஓசை பயிலப் பெறும் புல்லாங்குழல் யாழ் ஆகியன இடைவிடாமல் ஒ–க்கும் இன்னிசை முழக்கோடு வளையினின்றும் பிரியாத பாம்புகளை இடையிற் கட்டி எழுந்தருளிய செல்வராகிய பெருமானுக்கு ஆளாய்த் தொண்டு செய்யின் அல்லல் அறுக்கலாம். |
| 50. | முடிகையி னாற்றொடு மோட்டுழவர் முன்கைத் தருக்கைக் கரும்பின்கட்டி<br>கடிகையி னாலெறி காட்டுப்பள்ளி காதல்செய் தான்கரி தாயகண்டன்<br>பொடியணி மேனியி னானையுள்கிப் போதொடு நீர்சுமந் தேத்திமுன்னின்<br>றடிகையினாற்றொழ வல்லதொண்ட ரருவினை யைத்துரந் தாட்செய்வாரே. | நாற்று முடியைக் கையால் பறிக்கும் வ–ய உழவர்கள் தங்கள் முன்கைத் தினவை வெல்லக் கட்டியை உடைப்பதால் போக்கிக் கொள்கின்ற திருக்காட்டுப்பள்ளியை விரும்பி உறைபவனும், கரிதான கண்டமுடையவனும், திருநீறணிந்த மேனியனும் ஆகிய பெருமானை நினைந்து அபிடேகநீர் மலர்கள் ஆகியவற்றை எடுத்துச் சென்று துதித்து முன்நின்று அவன் திருவடிகளைக் கையால் தொழ வல்ல தொண்டர்கள் நீக்குதற்கு அரிய வினைகளினின்றும் நீங்கி அவ்விறைவனுக்கு ஆட்செய்வர். |

| | | |
|---|---|---|
| 51. | பிறையுடை யான்பெரி யோர்கள்பெம்மான் பெய்கழ<br>னாடொறும் பேணியேத்த<br>மறையுடை யான்மழு வாளுடையான் வார்தரு மால்கடல்<br>நஞ்சமுண்ட<br>கறையுடை யான்கன லாடுகண்ணாற் காமனைக் காய்ந்தவன்<br>காட்டுப்பள்ளிக்<br>குறையுடை யான்குறட் பூதச்செல்வன் குரைகழ லேகைகள்<br>கூப்பினோமே. | தலையில் பிறையை அணிந்தவனும், பெரியோர்கள் தலைவனும், வேதங்களை அருளியவனும், மழுவாகிய வாளை உடையவனும், நீண்ட கரிய கட–டையே தோன்றிய நஞ்சினை உண்ட கறைக் கண்டவனும், கனல் சேர்ந்த நுதல்விழியால் காமனைக் காய்ந்தவனும், அன்பர்களின் குறைகளைக் கேட்டறிபவனும், குறட்பூதச் செல்வனுமாகிய, திருக்காட்டுப் பள்ளியில் உள்ள இறைவன் திருவடிகளை நாள்தோறும் விரும்பி ஏத்தி அத்திருவடிகளையே கூப்பினோம். |
| 52. | செற்றவர் தம்மர ணம்மவற்றைச் செவ்வழல் வாயெரி<br>யூட்டிநின்றுங்<br>கற்றவர் தாந்தொழு தேத்தநின்றான் காத–க் கப்படுங்<br>காட்டுப்பள்ளி<br>உற்றவர் தாமுணர் வெய்திநல்ல வும்பருள் ளார்தொழு<br>தேத்தநின்ற<br>பெற்றம ரும்பெரு மானையல்லாற் பேசுவதும் மற்றொர்<br>பேச்சிலோமே. | தேவர்க்குப் பகைவராய் திரிபுரத்து அசுரர் தம் அரணங்களைச் செவ்வழலால் எரியூட்டி அழித்துப் பெருவீரத்தோடு கற்றவர்கள் தொழுதேத்த மேம்பட்டு, விளங்கும் இறைவனால் காத–க்கப்படும் திருக்காட்டுப்பள்ளியை அடைந்து, மெய்யுணர்வு பெற்ற தேவர்கள் பலரும் தொழுது ஏத்தும், விடைமீது ஏறி அமரும் அப்பெருமான் புகழல்லால் மற்றோர் பேச்சைப் பேசுவதிலோம். |
| 53. | ஒண்டுவ ரார்துகி லாடைமெய்போர்த் துச்சிகொ ளாமையுண்<br>டேயுரைக்குங்<br>குண்டர்க ளோடரைக் கூறையில்லார் கூறுவதாங்குண<br>மல்லகண்டீர்<br>அண்டம றையவன் மாலுங்காணா ஆதியினா னானுறை<br>காட்டுப்பள்ளி<br>வண்டம ரும்மலர்க் கொன்றைமாலை வார்சடை<br>யான்கழல் வாழ்த்துவோமே. | நிறம் பொருந்திய காவியாடையை மேனியில் போர்த்து, உச்சி வேளையில் வயிறு கொள்ளாத அளவில் தின்று பொய் கூறும் உடல் பருத்த புத்தர், இடையில் உடையில்லாத திகம்பர சமணர் கூறுவன நற்பயனைத் தாராதன என்பதை அறிந்து கொள்ளுங்கள். உலகைப் படைத்த வேதாசாரியனான பிரமனும், மாலுங் காணாத முதல்வன் உறையும் திருக்காட்டுப்பள்ளிக்குச் சென்று வண்டு அமரும் மலர்க்கொன்றை புனைந்த வார் சடையோன் கழல்களை ஏத்தி வாழ்த்துவோம். |
| 54. | பொன்னியல் தாமரை நீலநெய்தல் போதுக ளாற்பொ–<br>வெய்துபொய்கைக்<br>கன்னியர் தாங்குடை காட்டுப்பள்ளிக் காதல னைக்கடற்<br>காழியர்கோன்<br>துன்னிய வின்னிசை யாற்றுதைந்து சொல்–ய ஞானசம்<br>பந்தனல்ல<br>தன்னிசை யாற்சொன்ன மாலைபத்துந் தாங்கவல் லார்புகழ்<br>தாங்குவாரே. | திருமகள் வாழும் தாமரை, நீலம், நெய்தல் ஆகிய மலர்களாலும் பகலும் இரவும் பொ–யவெய்தும் பொய்கைகளில் கன்னிப் பெண்கள் குடைந்தாடும் திருக்காட்டுப்பள்ளியை விரும்பும் இறைவனைக் கடல் சூழ்ந்த காழி மாநகர்த் தலைவனாகிய ஞானசம்பந்தன் பொருந்திய இன்னிசை கூட்டிச் சொன்னதும், தானே தன்னிச்சையால் பாடியவும் ஆகிய இத் திருப்பதிகப் பாடல் மாலை பத்தையும் மனத்திடைத் தரிக்க வல்லவர் புகழ் எய்துவர். |

## 6. திருமருகலும் திருச்செங்காட்டங்குடியும்

பண் : நட்டபாடை — முதல் திருமுறை பதிக எண் : 6

| | | |
|---|---|---|
| 55. | அங்கமும் வேதமும் ஓதும்நாவர் அந்தணர் நாளும் அடிபரவ<br>மங்குன் மதிதவழ் மாடவீதி மருகல் நிலாவிய<br>மைந்தசொல்லாய்<br>செங்கய லார்புனற் செல்வமல்கு சீர்கொள்செங் காட்டங்<br>குடியதனுள்<br>கங்குல் விளங்கெரி யேந்தியாடுங் கணபதி யீச்சரங்<br>காமுறவே. | நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் ஓதும் நாவினராகிய அந்தணர்கள் நாள்தோறும் தன் திருவடிகளை வணங்க, வான மண்டலத்திலுள்ள சந்திரன் தவழ்ந்து செல்லுதற்கு இடமாய் உயர்ந்து விளங்கும் மாட வீதிகளை உடைய திருமருக—ல் எழுந்தருளியுள்ள இறைவனே! செங்கயல்கள் நிறைந்த புனல் சூழ்ந்ததும், செல்வ வளம் நிறைந்ததுமான புகழார்ந்த திருச்செங்காட்டங் குடியில் எரியைக்கையில் ஏந்தி நள்ளிருளில் நட்டம் ஆடுதற்கு இடமாய்க் கணபதியீச்சரத்தைக் காமுறுதல் ஏன்? சொல்வாயாக. |
| 56. | நெய்தவழ் மூவெரி காவலோம்பும் நேர்புரி நூன்மறை<br>யாளரேத்த<br>மைதவழ் மாட ம—ந்தவீதி மருகல் நிலாவிய<br>மைந்தசொல்லாய்<br>செய்தவ நான்மறை யோர்களேத்துஞ் சீர்கொள்செங்<br>காட்டங் குடியதனுள்<br>கைதவழ் கூரெரி யேந்தியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. | அவியாக அளிக்கப்பெறும் நெய் தவழ்ந்து எரியும் முத்தீயைப் பாதுகாப்பாக ஓம்பி வரும் நேர்மையாளரும், முப்புரி நூல் அணிந்த வேத வித்துக்களும் ஆகிய அந்தணர் ஏத்த, கரிய மேகங்கள் தவழும் மாட வீடுகள் நிறைந்த வீதிகளை உடைய திருமருக—ல் எழுந்தருளிய இறைவனே! தவங்கள் பலவும் செய்யும் நான்மறையோர் போற்றும் புகழ் பொருந்திய திருச்செங்காட்டங்குடியில், திருக்கரத்தில் மிக்க தீயை ஏந்தி ஆடுதற்கு இடமாய்க் கணபதி யீச்சரத்தைக் காமுறக் காரணம் என்ன? சொல்வாயாக. |
| 57. | தோலொடு நூ—ழை சேர்ந்தமார்பர் தொகுமறை யோர்கள்<br>வளர்த்தசெந்தீ<br>மால்புகை போய்விம்மு மாடவீதி மருகல் நிலாவிய மைந்த<br>சொல்லாய்<br>சேல்புல்கு தண்வயற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங்<br>குடியதனுள்<br>கால்புல்கு பைங்கழ லார்க்கவாடுங் கணபதி யீச்சரங்<br>காமுறவே. | மான் தோலோடு கூடிய முப்புரி நூல் அணிந்த மார்பினராய்த் திரளாய்நின்று வேதம் வல்ல அந்தணர்கள் வளர்த்த செந்தீயி—ருந்து எழுந்த கரிய புகை போய் மிகவும் மிகுதியாக வெளிப்படும் மாடங்களோடு கூடிய வீதிகளை உடைய திருமருக—ல் விளங்கும் இறைவனே, சேல்கள் நிறைந்த குளிர்ந்த வயல்களை அடுத்த சோலைகளால் சூழப்பட்ட சிறப்புமிக்க திருச்செங்காட்டங்குடியில் கா—ல் கட்டிய கழல்கள் ஆர்க்க ஆடிக் கணபதியீச்சரத்தைக் காமுறுதற்குக் காரணம் என்ன? சொல்வாயாக. |
| 58. | நாமரு கேள்வியர் வேள்வியோவா நான்மறை யோர்வழி<br>பாடுசெய்ய<br>மாமரு வும்மணிக் கோயின்மேய மருகல் நிலாவிய<br>மைந்தசொல்லாய்<br>தேமரு பூம்பொழிற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங்<br>குடியதனுள்<br>காமரு சீர்மகிழ்ந் தெல்—யாடுங் கணபதி யீச்சரங்<br>காமுறவே. | நாவிற் பொருந்தியவாய்ப் பயிலப்பட்டு வரும் வேதங்களை ஓதி உணர்ந்தவர்களும், வேள்விகளை இடைவிடாமல் செய்து வருபவர்களுமாகிய நான்மறையாளர் வழிபடச் செல்வம் மருவிய மணிக்கோயிலை உடைய மருக—ல் விளங்கும் மைந்தனே! தேன் நிறைந்த அழகிய பொழில்களால் சூழப்பெற்ற சிறப்புமிக்க செங்காட்டங்குடியில் விளங்குகின்ற அழகும் பெருமையும் மிக்க கணபதியீச்சரத்தைக் காமுற்று இராப்போதில் நடனம் ஆடுதற்குக் காரணம் யாது? சொல்வாயாக. |

| | | |
|---|---|---|
| 59. | பாடன்முழவும் விழவுமோவாப் பன்மறை யோரவர் தாம்பரவ<br>மாட நெடுங்கொடி விண்டடவும் மருகல் நிலாவிய மைந்தசொல்லாய்<br>சேடக மாமலர்ச் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்<br>காடக மேயிட மாகவாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. | பாடலும், அதற்கிசைந்த முழவு ஒ–யும், திருவிழாக்கள் ஒ–யும், இடைவிடாமல் நிகழ்வதும் மாட வீடுகளில் கட்டிய கொடிகள் வானைத் தடவுவதும் ஆகிய சிறப்புக்களை உடைய திருமருக–ல் வேதங்கள் பலவும் கற்ற அந்தணாளர் பரவ எழுந்தருளிய இறைவனே! உயரமான மணம் மிக்க மலர்ச் சோலைகளால் சூழப் பெற்ற சிறப்புமிக்க செங்காட்டங்குடியில், காட்டிடமே நாடகமாடுதற்கு இடமாக இருக்கவும், ஆடுதற்குரிய இடமாகக் கணபதியீச்சரத்தைக் காமுறக் காரணம் என்ன? சொல்வாயாக. |
| 60. | புனையழ லோம்புகை யந்தணாளர் பொன்னடி நாடொறும் போற்றிசைப்ப<br>மனைகெழு மாட ம–ந்தவீதி மருகல் நிலாவிய மைந்தசொல்லாய்<br>சினைகெழு தண்வயற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்<br>கனைவளர் கூரெரி யேந்தியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. | கிரியைகள் பலவற்றாலும் அழகு செய்யப் பெற்ற முத்தீயை வளர்க்கும் கைகளை உடைய அந்தணர்கள், நாள்தோறும் தன் திருவடிகளைப் போற்ற, இல்லங்களும் விளங்கும் மாடங்களும் நிறைந்த வீதிகளை உடைய திருமருக–ல் விளங்கும் இறைவனே! நெற்பயிர்கள் திளைத்து வளரும் தண் வயல்களையடுத்த சோலைகளால் சூழப்பெற்ற நீர் வளம் மிக் செங்காட்டங்குடியில் எரியேந்திக் கணபதியீச்சரத்தைக் காமுறக் காரணம் என்ன? சொல்வாயாக. |
| 61. | பூண்டங்கு மார்பி னிலங்கைவேந்தன் பொன்னெடுந் தோள்வரை யாலடர்த்து<br>மாண்டங்கு நூன்மறை யோர்பரவ மருகல் நிலாவிய மைந்தசொல்லாய்<br>சேண்டங்கு மாமலர்ச் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்<br>காண்டங்கு தோள்பெயர்த் தெல்–யாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. | கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்ட அணிகலன்கள் பொருந்திய மார்பினை உடைய இலங்கை மன்னன் இராவணனின் அழகிய பெரிய தோள்களை அம்மலையாலேயே அடர்த்து, மாட்சிமை பொருந்திய நான்மறையோர் பரவத் திருமருக–ல் எழுந்தருளி விளங்கும் இறைவனே! வானளாவிய மணமலர்ச்சோலைகளால் சூழப்பெற்ற சீர்மிக்க செங்காட்டங்குடியில் அழகிய உன் திருத்தோள்களை அசைத்து இரவில் நடமிடுதற்கு இடனாய்க் கணபதியீச்சரத்தைக் காமுறக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 62. | அந்தமு மாதியுந் நான்முகனு மரவணை யானு மறிவரிய<br>மந்திர வேதங்க ளோதுநாவர் மருகல்நிலாவிய மைந்தசொல்லாய்<br>செந்தமி ழோர்கள் பரவியேத்துஞ் சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்<br>கந்தம கிற்புகை யேகமழுங் கணபதி யீச்சரங் காமுறவே. | நான்முகனும் அரவணையானும் ஆதியாய முடியையும் அந்தமாகிய அடியையும் அறிதற்கு அரியவனாய், மந்திர வடிவான வேதங்களை ஓதும் நாவினரான அந்தணர் பரவி ஏத்தத் திருமருக–ல் விளங்கும் இறைவனே! செந்தமிழ் வல்லோர் பரவித் துதிக்கும் சிறப்புமிக்க செங்காட்டங்குடியில் அகில் புகை மணமே கமழும் கணபதியீச்சரத்தைக் காமுறக் காரணம் யாதோ? சொல்வாயாக. |

| | |
|---|---|
| 63. இலைமரு தேயழ காகநாளும் இடுதுவர்க் காயொடு சுக்குத்தின்னும்<br>நிலையமண் தேரரை நீங்கிநின்று நீதரல் லார்தொழு மாமருகல்<br>மலைமக டோள்புணர் வாயருளாய் மாசில்செங் காட்டங் குடியதனுள்<br>கலைமல்கு தோலுடுத் தெல்–யாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. | மருத மரத்து இலையின் சாற்றினால் நிறமூட்டிய ஆடைகளை அணிந்த புத்தர், கடுக்காய், சுக்கு இவற்றைத் தின்னும் சமணர் ஆகியோரை விடுத்து, சைவர்கள் தொழத் திருமருக–ல் மலைமகளோடு உறையும் மைந்தனே! குற்றமற்ற செங்காட்டங்குடியில் மான் தோலை உடுத்தி நள்ளிருளில் ஆடுதற்கு இடனாய்க் கணபதி யீச்சரத்தைக் காமுறுதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 64. நாலுங் குலைக்கமு கோங்குகாழி ஞானசம் பந்தன் நலந்திகழும்<br>மா–ன் மதிதவழ் மாடமோங்கும் மருக–ன் மற்றதன் மேன்மொழிந்த<br>சேலும் கயலும் திளைத்தகண்ணார் சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்<br>சூலம்வல் லான்கழ லேத்துபாடல் சொல்லவல் லார்வினை யில்லையாமே. | தொங்குகின்ற குலைகளோடு பாக்கு மரங்கள் ஓங்கி வளரும் சீகாழிப் பதியினனாய ஞானசம்பந்தன், நலம் திகழ்வதும், மேகமும் பிறையும் தவழும் மாடங்கள் ஓங்கியதுமான திருமருகல் இறைவனையும், சேல் கயல் ஆகிய மீன் வகைகளை ஒத்த கண்களை உடைய மகளிர் வாழ்வதும் சிறப்பு மிக்கதும் ஆகிய செங்காட்டங் குடியில் முத்தலைச் சூலம் ஏந்தியவனாய் விளங்கும் பெருமானையும் புகழ்ந்து ஏத்திய பாடல்களைச் சொல்–த் துதிக்க வல்லார் வினைகள் இல்லையாகும். |

## 7. திருநள்ளாறும் திருவாலவாயும்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 7

| | |
|---|---|
| 65. பாடக மெல்லடிப் பாவையோடும் படுபிணக் காடிடம் பற்றிநின்று<br>நாடக மாடும்நள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்<br>சூடக முன்கை மடந்தைமார்கள் துணைவ ரொடுந்தொழு தேத்திவாழ்த்த<br>ஆடகமாடம் நெருங்குகூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. | பாடகம் என்னும் அணிகலன் அணிந்த மென்மையான அடிகளை உடைய உமையம்மையோடு, பிணக்காடாகிய இடுகாட்டைப் பற்றி நின்று நாடகம் ஆடும் நள்ளாற்று நம் பெருமானே! நீ கையில் வளையல் அணிந்த மகளிர் தம் துணைவர்களோடும் கூடி வந்து வழிபடுவதும், பொன் மாளிகைகள் நிறைந்ததுமான கூடல் ஆலவாயின்கண் விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 66. திங்களம் போதுஞ் செழும்புனலும் செஞ்சடை மாட்டயல் வைத்துகந்து<br>நங்கண் மகிழும்நள் ளாறுடைய நம்பெருமானிது வென்கொல் சொல்லாய்<br>பொங்கிள மென்முலை யார்களோடும் புனமயி லாட நிலாமுளைக்கும்<br>அங்கழ கச்சுதை மாடக்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. | பிறைமதி, அழகிய மலர்கள், வளமான கங்கை நதி ஆகியவற்றைத் தன் செஞ்சடையின் மேல் அருகருகே வைத்து மகிழ்ந்து நம் கண்கள் களிக்குமாறு நள்ளாற்றின்கண் எழுந்தருளிய நம் பெருமானே! நீ, பூரித்து எழும் மென்மையான இளைய தனங்களை உடைய மடந்தையரோடு கானகத்தில் வாழும் ஆண் மயில்கள் களித்தாட, பெருமை மிக்க தமிழ்ச் சங்கத்தினையும், நிலவொளி வெளிப்படுமாறு வெண்மையான சுண்ணாம்பினால் கட்டப்பட்ட மாடங்களையும் உடைய கூடல் ஆலவாயின்கண் விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |

| | | |
|---|---|---|
| 67. | தண்ணறு மத்தமும் கூவிளமும் வெண்டலை மாலையும் தாங்கியார்க்கும்<br>நண்ணல ரியநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்<br>புண்ணிய வாணரும் மாதவரும் புகுந்துட னேத்தப் புனையிழையார்<br>அண்ண—ன் பாட லெடுக்குங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. | குளிர்ந்த மணம் வீசும் ஊமத்தை மலர் வில்வம் ஆகியவற்றையும் வெண்மையான தலை மாலையையும் அணிந்து, திருவருள் இருந்தாலன்றி யாராலும் சென்று வழிபடற்கரிய நள்ளாற்றின்கண் எழுந்தருளிய நம் பெருமானே! நீ, புண்ணிய வாணரும் மாதவர்களும் வந்து ஏத்துவதும் அணி கலன்கள் புனைந்த மகளிர் இறைவனது புகழ் சேர்ந்த பாடல்களைப் பாடுவதுமான கூடல் ஆலவாயின்கண் விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 68. | பூவினில் வாசம் புன—ற்பொற்புப் புதுவிரைச் சாந்தினில் நாற்றத்தோடு<br>நாவினிற் பாடல்நள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்<br>தேவர்கள் தானவர் சித்தர்விச்சா தரர்கணத் தோடுஞ் சிறந்துபொங்கி<br>ஆவினில் ஐந்துகந் தாட்டுங்கூடல் ஆலவாயி ன்க ணமர்ந்தவாறே. | பூக்களில் வாசனையாய், நீரில் தண்மையாய், புதிய சந்தனத்தில் மணமாய், நாவில் பாடலாய்க் கலந்து விளங்கும் நள்ளாற்று நம் பெருமானே! நீ, தேவர்களும், அசுரர்களும், சித்தர்களும், வித்யாதரர்களும் ஆகிய கூட்டத்தினரோடு சிறந்து விளங்குபவராய்ப் பசுவினிடம் தோன்றும் பஞ்சகவ்யங்களால் ஆட்டி வழிபடக் கூடல் ஆலவாயின்கண் விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 69. | செம்பொன்செய் மாலையும் வாசிகையும் திருந்து புகையும் அவியும்பாட்டும்<br>நம்பும் பெருமைநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்<br>உம்பரும் நாகரு லகந்தானும் ஒ—கடல் சூழ்ந்த வுலகத்தோரும்<br>அம்புத நால்களால் நீடுங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. | செம்பொன்னால் செய்த மாலைகள், திருவாசி ஆகியவற்றுடன் மணப்புகை நிவேதனம் தோத்திரம் ஆகியவற்றை விரும்பி ஏற்கும் பெருமை உடைய, நள்ளாற்றில் விளங்கும் நம் பெருமானே! நீ, விண்ணவரும், நாகர் உலகத்தவரும், ஒ—க்கும் கடலால் சூழப்பட்ட மண்ணுலக மக்களும் ஏத்த, நான்கு மேகங்களால் சூழப்பட்ட கூடல் ஆலவாயின்கண் விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 70. | பாகமுந் தேவியை வைத்துக்கொண்டு பைவிரி துத்திப் பரியபேழ்வாய்<br>நாகமும் பூண்டநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்<br>போகமும் நின்னை மனத்துவைத்துப் புண்ணியர் நண்ணும் புணர்வுபூண்ட<br>ஆகமு மடையவர் சேருங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. | இடப்பாகமாக உமையம்மையை வைத்துக் கொண்டு, படமும் புள்ளிகளும் பெரிதாகப் பிளந்த வாயும் உடைய நாகத்தைப் பூண்டுள்ள நள்ளாறுடைய நம் பெருமானே! நீ, உன்னை மனத்தில் கொண்டு சிவபோகமும், புண்ணியர்களாம் அடியவர்கள் கூட்டுறவும் கொண்ட மேனியராகிய சான்றோர்கள் சேர்ந்துறையும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்து உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 71. | கோவண வாடையும் நீறுப்பூச்சுங் கொடுமழு வேந்தலுஞ் செஞ்சடையும்<br>நாவணப் பாட்டும்நள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்<br>பூவண மேனி யிளையமாதர் பொன்னும் மணியும் கொழித்தெடுத்து<br>ஆவண வீதியி லாடுங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. | வேதமாகிய கோவண ஆடையும் திருநீற்றுப் பூச்சும் கொடிய மழுவாயுதத்தை ஏந்தலும் சிவந்த சடையும் நாவில் பல்வேறு சந்தங்களில் பாடும் வேதப் பாட்டும் உடையவனாய் இலங்கும் நள்ளாற்றுள் எழுந்தருளிய நம் பெருமானே! நீ பூப்போலும் மெல்—ய மேனியை உடைய இளம் பெண்கள் பொன்மணி முத—யவற்றைக் கொழித்து எடுத்துக் கடைவீதியில் விளையாடும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்து விளங்கக் காரணம் யாதோ? சொல்வாயாக. |

| | | |
|---|---|---|
| 72. | இலங்கை யிராவணன் வெற்பெடுக்க வெழில்விர லூன்றி யிசைவிரும்பி<br>நலங்கொளச் சேர்ந்தநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்<br>புலன்களைச் செற்றுப் பொறியைநீக்கிப் புந்தியி லுந்நினைச் சிந்தைசெய்யும்<br>அலங்க னல்லார்க ளமருங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. | இலங்கை மன்னன் இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தபோது, தனது அழகிய கால் விரலை ஊன்றி அடர்த்துப் பின் அவனது இசையை விரும்பிக்கேட்டு அவனுக்கு நன்மைகள் பலவும் பொருந்துமாறு உளங் கொண்ட நள்ளாறுடைய நம் பெருமானே! நீ, ஐம்புல இன்பங்களை வெறுத்து அவற்றைத் தரும் ஐம்பொறிகளை மடை மாற்றிப் புந்தியில் உன்னையே சிந்தனை செய்யும் தூய வாழ்க்கையையுடைய சிவஞானிகள் வாழும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்துறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 73. | பணியுடை மாலும் மலரினோனும் பன்றியும் வென்றிப் பறவையாயும்<br>நணுகல ரியநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல் சொல்லாய்<br>மணியொ– சங்கொ– யோடுமற்றை மாமுர சின்னொ– யென்றுமோவா<br>தணிகிளர் வேந்தர் புகுதுங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. | பாம்பணையானாகிய திருமாலும் தாமரை மலரில் எழுந்தருளிய நான்முகனும் முறையே பன்றியாயும் பறவை இனங்களில் மேம்பட்ட அன்னமாயும், அடிமுடிகளை மாறித் தேடியும் நணுக முடியாத நள்ளாறுடைய நம் பெருமானே! நீ மணி ஒ–யும், சங்கொ–யும், சிறந்த முரசின் ஒ–யும் என்றும் இடையறவின்றிக் கேட்கும் சிறப்பினதும், மேம்பட்ட வேந்தர்கள் புகுந்து வழிபடும் பெருமையதும் ஆகிய கூடல் ஆலவாயின்கண் எழுந்தருளி விளங்கக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 74. | தடுக்குடைக் கையருஞ் சாக்கியருஞ் சாதியி னீங்கிய வத்தவத்தர்<br>நடுக்குற நின்றநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல் சொல்லாய்<br>எடுக்கும் விழவும் நன்னாள்விழவும் இரும்ப– யின்பினோ டெத்திசையும்<br>அடுக்கும் பெருமைசேர் மாடக்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. | ஓலைத் தடுக்கைக் கையில் ஏந்தித் திரியும் சமணர்களும் சாக்கியர்களும் மரபு நீங்கிய வீண் தவத்தராவர். அவர்கள் மெய்ந் நெறியாகிய சைவ சமயத்தைக் கண்டு அச்சமயிகளின் வழிபடு கடவுளைக் கண்டு நடுக்கம் உறுமாறு திரு நள்ளாற்றுள் விளங்கும் நம் பெருமானே! நீ, நாள் விழாவும், சிறப்பு விழாவும் நன்கு நடைபெற, அவ்விழாவில் வழங்கும் பெருவிருந்தால் விளையும் மகிழ்வு எத்திசையும் பொருந்திப் பெருமை சேர்க்கும் மாடக்கூடல் ஆலவாயின் கண் மகிழ்ந்துறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |
| 75. | அன்புடை யானை யரனைக்கூடல் ஆலவாய் மேவிய தென்கொலென்று<br>நன்பொனை நாதனை நள்ளாற்றானை நயம்பெறப் போற்றி நலங்குலாவும்<br>பொன்புடை சூழ்தரு மாடக்காழிப் பூசுரன் ஞானசம் பந்தன்சொன்ன<br>இன்புடைப் பாடல்கள் பத்தும்வல்லார் இமையவ ரேத்த விருப்பர்தாமே. | எல்லா உயிர்களிடத்தும் அன்புடையவனாம், அரனைக் கூடல் ஆலவாயில் மேவியதற்குக் காரணம் யாதெனக் கேட்டுத் தூய பொன் போன்றவனாகவும், தலைவனாகவும் விளங்கும் திருநள்ளாற்று இறைவனை நயமாகப் போற்றி, நலம் பயக்கும் செம்பொன் நிறைந்த மாட வீடுகளால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் தோன்றிய பூசுரனாகிய ஞானசம்பந்தன் பாடிய இனிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர், இமையவர் ஏத்தத் தேவருலகில் விளங்குவர். |

## 8. திரு ஆவூர்ப்பசுபதீச்சரம்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 8

76. புண்ணியர் பூதியர் பூதநாதர் புடைபடு வார்தம்
மனத்தார்திங்கட்
கண்ணிய ரென்றென்று காதலாளர் கைதொழு தேத்த
விருந்தவூராம்
விண்ணுயர் மாளிகை மாடவீதி விரைகமழ் சோலை
சுலாவியெங்கும்
பண்ணியல் பாடல றாதவாவூர்ப் பசுபதி யீச்சரம்
பாடுநாவே.

அன்புடை அடியவர் புண்ணியம் திரண்டனைய வடிவினர் எனவும், நிறைந்த செல்வம் உடையவர் எனவும், பூதகணங்களின் தலைவர் எனவும், அருகில் வந்து பரவுவாரின் மனத்தார் எனவும், பிறைமதிக் கண்ணியர் எனவும் கைதொழுது போற்றச் சிவபிரான் எழுந்தருளிய ஊர் ஆகிய வானளாவ உயர்ந்த மாடமாளிகைகளோடு கூடியதும், மணம் கமழும் சோலைகளால் சூழப் பெற்றதும், எங்கும் பண்ணியலோடு கூடிய பாடல்கள் இடைவிடாது கேட்கப்படுவதும் ஆகிய ஆவூர்ப்பசுபதியீச்சரத்தை, நாவே தொழுது பாடுவாயாக.

---

77. முத்தியர் மூப்பில ராப்பினுள்ளார் முக்கணர் தக்கன்றன்
வேள்விசாடும்
அத்திய ரென்றென் றடியரேத்தும் ஐயன ணங்கொ
டிருந்தவூராம்
தொத்திய லும்பொழில் மாடுவண்டு துதைந்தெங்குந்
தூமதுப் பாயக்கோயிற்
பத்திமைப் பாடல றாதவாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே.

அடியவர்கள், முத்திச் செல்வத்தை உடையவர் என்றும், மூப்புஇலர் என்றும், மாட்டுத் தறியில் விளங்குபவர் என்றும், முக்கண்ணர் என்றும், தம்மை இகழ்ந்து செய்த தக்கனின் வேள்வியை அழித்தவர் என்றும், போற்றித் துதிக்கும் தலைவராகிய சிவபிரான் உமையம்மையாரோடு எழுந்தருளிய ஊராகிய பொழில்களில் கொத்தாக மலர்ந்த பூக்களில் வண்டுகள் தோய்தலால் எங்கும் தூயதேன்துளிகள் பாய்வதும், கோயி–ல் பத்தி பூண்ட அடியவர் பாடும் பாடல் இடைவிடாது கேட்பதுமாகிய ஆவூர்ப்பசுபதியீச்சரத்தையே நாவே அதனைத் தொழுது பாடுவாயாக.

---

78. பொங்கி வரும்புனல் சென்னிவைத்தார் போம்வழி வந்திழி
வேற்றமானார்
இங்குயர் ஞானத்தர் வானோரேத்தும் இறையவ ரென்றுமி
ருந்தவூராம்
தெங்குயர் சோலைசே ராலைசா– திளைக்கும் விளைவயல்
சேரும்பொய்கைப்
பங்கய மங்கை விரும்புமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே.

சினந்து வந்த கங்கையைத் தம் திருமுடியில் வைத்தவரும், பிறவி போதற்குரிய பிறப்பான மனிதப் பிறவி எடுத்து இழிவடைதற்கும் ஏற்றம் பெறுதற்கும் உரிய மக்களும் அவருள் இப்பிறப்பில் உயர்தற்குரிய சிவஞானத்தைப் பெற்றோரும் வானவரும் துதிக்கச் சிவபிரான் எழுந்தருளிய ஊர், உயரமாக வளர்ந்த தென்னஞ் சோலைகளும், கரும்பாலைகளும், செந்நெற் பயிர்களும் திளைத்து விளைவுதரும் வயல்களை உடையதும், பொய்கைகள் சூழ்ந்ததும், திருமகள் விரும்புவதுமாகிய வளம்சான்ற ஆவூர்ப் பசுபதியீச்சரமாகும். நாவே அதனைப் பாடுவாயாக.

| | | |
|---|---|---|
| 79. | தேவியொர் கூறின ரேறதேறுஞ் செலவினர் நல்குர<br>வென்னைநீக்கும்<br>ஆவிய ரந்தண ரல்லல்தீர்க்கும் அப்பனா ரங்கே<br>யமர்ந்தவூராம்<br>பூவிய லும்பொழில் வாசம்வீசப் புரிகுழ லார்சுவ<br>டொற்றிமுற்றப்<br>பாவியல் பாடல றாதவாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. | உமாதேவியை ஒரு பாதியாக உடையவர், இடப வாகனத்தில் ஏறி வருபவர். வறுமை புகுதாது என்னைக் காப்பவர். எனக்கு உயிர் போன்றவர். கருணையர். என்துயர் போக்குதலால் எனக்குத் தந்தையாக விளங்குபவர். அவர் எழுந்தருளிய ஊர், பூக்கள் நிறைந்த பொழில்களின் வாசனை வீசுவதும் சுருண்ட கூந்தலை உடைய மகளிர் காலாலே தாளமிட்டு ஆடித் தேர்ந்த இசையோடு பாடும் பாடல்கள் இடைவிடாது கேட்கப்படுவதுமான ஆவூர்ப்பசுபதி யீச்சரத்தை நாவே அதனைப் பாடுவாயாக. |
| 80. | இந்தணை யுஞ்சடை யார்விடையார் இப்பிறப் பென்னை<br>யறுக்கவல்லார்<br>வந்தணைந் தின்னிசை பாடுவார்பால் மன்னினர்<br>மன்னி யிருந்தவூராம்<br>கொந்தணை யுங்குழ லார்விழவிற் கூட்ட மிடையிடை<br>சேரும்வீதிப்<br>பந்தணையும் விர லார்தமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. | திங்கள் தங்கும் சடையினரும், விடையை ஊர்தியாக உடையவரும், என்னைப் பற்றிய இப்பிறவியின் வினையை நீக்கி முத்தியளிக்க வல்லவரும், தம்மை வந்தடைந்து இன்னிசையால் பாடி வழிபடுவாரிடம் மன்னியிருப்பவரும் ஆகிய சிவபிரான், நிலைபெற்று விளங்கும் ஊர், பூங்கொத்தணிந்த கூந்தலை உடைய மங்கல மகளிர் வாழ்வதும், திருவிழாக்களில் மக்கள் கூட்டம் இடையிடையே சேரும் அகன்ற வீதிகளை உடையதும், பந்தாடும் கைவிரல்களினராகிய இளம்பெண்கள் நிறைந்ததுமாகிய ஆவூர்ப்பசுபதி யீச்சரம் ஆகும். நாவே அதனைப் பாடுவாயாக. |
| 81. | குற்ற மறுத்தார் குணத்தினுள்ளார் கும்பிடு வார்தமக்<br>கன்புசெய்வார்<br>ஒற்றை விடையினர் நெற்றிக்கண்ணார் உறைபதி யாகுஞ்<br>செறிகொண்மாடம்<br>சுற்றிய வாச–ன் மாதர்விழாச் சொற்கவி பாடநி தானநல்கப்<br>பற்றிய கையினர் வாழுமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. | அடியவர் செய்யும் குற்றங்களை நீக்கியவரும், நற்குணங்களை உடையோரிடம் வாழ்பவரும், தம்மைக் கும்பிடுவார்க்கு அன்பு செய்பவரும், ஓர் எருதைத் தமக்கு ஊர்தியாகக் கொண்டவரும், பிறர்க்கில்லாத நெற்றிக் கண்ணை உடையவரும் ஆகிய சிவபிரான் உறையும் பதி, செறிந்த மாட வீடுகளைச் சார்ந்துள்ள வாச–ல் விழாக் காலங்களில் பெண்கள் புகழ்ந்து கவிபாடக்கேட்டு, அவ்வீடுகளில் வாழும் செல்வர்கள் பொற்காசுகள் வழங்க அதனைப் பற்றிய கையினராய் மகளிர் மகிழ்ந்துறையும் ஆவூர்ப்பசுபதி யீச்சரம் ஆகும். நாவே அதனைப் பாடுவாயாக. |
| 82. | நீறுடை யார்நெடு மால்வணங்கு நிமிர்சடை யார்நினை<br>வார்தமுள்ளம்<br>கூறுடை யாருடை கோவணத்தார் குவலய மேத்தவி<br>ருந்தவூராம்<br>தாறுடை வாழையிற் கூழைமந்தி தகுகனி யுண்டுமின்<br>டிட்டினத்தைப்<br>பாறிடப் பாய்ந்துப யிலுமாவூர்ப் பசுபதி யீச்சரத்தை நாவே. | திருவெண்ணீற்றை அணிந்தவரும், திருமாலால் வணங்கப் பெறுபவரும், நிமிர்த்துக் கட்டிய சடைமுடியுடையவரும், தம்மை நினைவார் உள்ளத்தில் குடி கொண்டிருப்பவரும், கோவண ஆடை தரித்தவரும் ஆகிய சிவபிரான், மண்ணுலக மக்கள் தம்மைப் புகழ்ந்து போற்ற எழுந்தருளிய ஊர், குள்ளமான மந்தி பழுத்துள்ள வாழைத் தாற்றில் உண்ணத் தகுதியான பழங்களை வயிறார உண்டு, எஞ்சியுள்ள பழங்களை உண்ணவரும் குரங்குகளை அஞ்சுமாறு பாய்ந்து விரட்டும் தோட்டங்களை உடைய ஆவூர்ப் பசுபதியீச்சரமாகும் நாவே அதனைப் பாடுவாயாக. |

| | |
|---|---|
| 83. வெண்டலை மாலை விரவிப்பூண்ட மெய்யுடை யார்விற லாரரக்கன்<br>வண்டமர் பூமுடி செற்றுகந்த மைந்தரி டம்வள மோங்கியெங்கும்<br>கண்டவர் சிந்தைக் கருத்தின்மிக்கார் கதியரு ளென்றுகை யாரக்கூப்பிப்<br>பண்டலர் கொண்டு பயிலுமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. | வெண்மையான தலைகளை மாலையாகக் கோத்துப் பிற மாலைகளுடன் அணிந்துள்ள திருமேனியை உடையவரும், வண்டுகள் மொய்க்கும் மலர்களைச் சூடிய வ-ய இராவணனின் முடியை நெரித்து மகிழ்ந்த வ-யரும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள இடம், எங்கும் வளம் ஓங்கியதும், தரிசித்தவர்கள் சித்தத்தால் உயர்ந்தவர்களாய்த் தமக்குக் கதியருள் என்று கைகளைக் கூப்பிப் பழமைதொட்டுச் சிவபெருமானுக்கு உரியனவாகிய மலர்களைச் சாத்தி வழிபடும் இயல்பினதும் ஆகிய ஆவூர்ப்பசுபதியீச்சரமாகும். நாவே அதனைப் பாடுவாயாக. |
| 84. மாலு மயனும் வணங்கிநேட மற்றவ ருக்கெரி யாகிநீண்ட<br>சீல மறிவரி தாகிநின்ற செம்மையி னாரவர் சேருமூராம்<br>கோல விழாவி னரங்கதேறிக் கொடியிடை மாதர்கள் மைந்தரோடும்<br>பாலென வேமொழிந் தேத்துமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. | திருமாலும் பிரமனும் வணங்கித் தேட, அவர்கட்குச் சோதிப் பிழம்பாய் நீண்டு தோன்றிய, அறிதற்கு அரியராய் விளங்கும் செம்மையராகிய சிவபிரான் எழுந்தருளிய ஊர், அழகிய விழாக் காலங்களில் கொடியிடைப் பெண்கள் அரங்கின்கண் ஏறி ஆடவர்களோடு கூடிப் பால்போன்று இனிக்கும் மொழிகளால் இறைவனை ஏத்தும் ஆவூர்ப்பசுபதியீச்சரமாகும். நாவே அதனைப் பாடுவாயாக. |
| 85. பின்னிய தாழ்சடை யார்பிதற்றும் பேதைய ராஞ்சமண் சாக்கியர்கள்<br>தன்னிய லும்முரை கொள்ளகில்லாச் சைவ ரிடந்தள வேறுசோலைத்<br>துன்னிய மாதரும் மைந்தர்தாமுஞ் சுனையிடை மூழ்கித் தொடர்ந்த சிந்தைப்<br>பன்னிய பாடல் பயிலுமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. | பின்னித் தொங்கவிடப்பட்ட சடையை உடையவராய், அறிவின்மையோடு சமணர்கள் சாக்கியர்கள் ஆகியோர் தங்களைப் பற்றியும் தாங்கள் சார்ந்த மதங்களின் சிறப்புக்களைப் பற்றியும் கூற, அவற்றை ஏலாதவராய் விளங்கும் சைவன் விரும்பி உறையும் இடம், முல்லைக் கொடி படர்ந்த சோலைகளில் மாதரும் மைந்தரும் நெருங்கிச் சுனையில் மூழ்கிச் சிவபிரானை மனம் ஒன்றிப் பாடும் ஆவூர்ப்பசுபதியீச்சரமாகும். நாவே அதனைப் பாடுவாயாக. |
| 86. எண்டிசை யாரும்வ ணங்கியேத்தும் எம்பெரு மானையெ ழில்கொளாவூர்ப்<br>பண்டுரி யார்சிலர் தொண்டர்போற்றும் பசுபதி யீச்சரத் தாதிதன் மேல்<br>கண்டல்கண் மிண்டிய கானற்காழிக் கவுணியன் ஞானசம் பந்தன்சொன்ன<br>கொண்டினி தாவிசை பாடியாடிக் கூடும வருடை யார்கள்வனே. | எட்டுத் திசையில் உள்ளவர்களும் வணங்கிப் போற்றும் எம் தலைவரும், அழகிய ஆவூரில் பழ அடியார்களால் போற்றப் பெறுபவரும் ஆகிய பசுபதியீச்சரத்து இறைவர்மேல் தாழை மரங்கள் நிறைந்த கடற்கரைச் சோலைகளால் சூழப்பட்ட சீகாழிப்பதியில் கவுணியர் குடியில் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய பாடல்களை இசையோடு பாடி ஆடி வணங்குபவர்கள், வானகத்தைத் தமது உடைமையாகப் பெறுவர். |

# 9. திருவேணுபுரம்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 9

| | |
|---|---|
| 87. வண்டார்குழ லரிவையொடு பிரியாவகை பாகம்<br>பெண்டான்மிக வானான்பிறைச் சென்னிப்பெரு மானூர்<br>தண்டாமரை மலராளுறை தவளந்நெடு மாடம்<br>விண்டாங்குவ போலும்மிகு வேணுபுர மதுவே. | வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடைய பெண்ணாகிய உமையம்மை, தன்னிற் பிரியாதிருக்கத் தன் திருமேனியில் இடப்பாகத்தை அளித்து, அப்பாகம் முழுதும் பெண் வடிவானவனும், பிறையணிந்த திருமுடியை உடையவனும் ஆகிய பெருமானது ஊர், தாமரை மலரில் விளங்கும் திருமகள் வாழும் வெண்மையான பெரிய மாடங்கள் விண்ணைத் தாங்குவன போல உயர்ந்து விளங்கும் வேணுபுரமாகும். |
| 88. படைப்புந்நிலை யிறுதிப்பயன் பருமையொடு நேர்மை<br>கிடைப்பல்கண முடையான்கிறி பூதப்படை யானூர்<br>புடைப்பாளையின் கமுகின்னொடு புன்னைமலர் நாற்றம்<br>விடைத்தேவரு தென்றன்மிகு வேணுபுர மதுவே. | படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில் புரிவோனும், அவற்றின் முடிந்த பயனாய வீட்டின்ப வடிவாய் விளங்குவோனும், பருமை நுண்மை இவற்றிற்கோர் எல்லையாக இருப்பவனும், வேதங்களை ஓதும் கணங்களை உடையோனும், வஞ்சகமான பூதப்படைகளை உடையவனும் ஆகிய சிவபிரானது ஊர், பக்கங்களில் வெடித்து மலர்ந்திருக்கும் கமுகம் பாளையின் மணத்தோடு புன்னை மலர்களின் மணத்தைத் தாங்கி மெல்லெனப் பெருமிதத்தோடு வரும் தென்றல் காற்று மிகுந்து வீசும் வேணுபுரம் ஆகும். |
| 89. கடந்தாங்கிய கரியையவர் வெருவவுரி போர்த்துப்<br>படந்தாங்கிய வரவக்குழைப் பரமேட்டிதன் பழவூர்<br>நடந்தாங்கிய நடையார்நல பவளத்துவர் வாய்மேல்<br>விடந்தாங்கிய கண்ணார்பயில் வேணுபுர மதுவே. | தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய மதநீர் ஒழுகும் யானையை அம்முனிவர்கள் வெருவுமாறு உரித்துப் போர்த்தவரும், படத்தோடு கூடிய பாம்பைக் குழையாக அணிந்தவரும் ஆகிய சிவபிரானது பழமையான ஊர், நடனத்துக்குரிய சதிகளோடு கூடிய நடையையும், அழகிய பவளம் போன்ற சிவந்த வாயினையும் மேலான விடத்தன்மையோடு கூடிய கண்களையும் உடைய அழகிய மகளிர் பலர் வாழும் வேணுபுரம் ஆகும். |
| 90. தக்கன்றன சிரமொன்றினை யரிவித்தவன் றனக்கு<br>மிக்கவ்வர மருள்செய்தவெம் விண்ணோர்பெரு மானூர்<br>பக்கம்பல மயிலாடிட மேகம்முழ வதிர<br>மிக்கம்மது வண்டார்பொழில் வேணுபுர மதுவே. | தக்கனது தலையை வீரபத்திரக் கடவுளைக் கொண்டு அரியச் செய்து, பிழையை உணர்ந்து அவன் வேண்டிய போது அவனுக்கு மிகுதியான வரங்கள் பலவற்றை அளித்தருளிய வானோர் தலைவனாகிய சிவபெருமானது ஊர், மேகங்கள் முழவாக ஒ–க்க, நாற்புறமும் மயில்கள் ஆடுவதும், மிகுதியான தேனை வண்டுகள் அருந்தும் வளமுடையதுமான பொழில்கள் சூழ்ந்த வேணுபுரமாகும். |

| | | |
|---|---|---|
| 91. | நானாவித வுருவானமை யாள்வானணு காதார்<br>வானார்திரி புரமூன்றெரி யுண்ணச்சிலை தொட்டான்<br>தேனார்ந்தெழு கத-க்கனி யுண்பான்றிகழ் மந்தி<br>மேனோக்கிநின் றிரங்கும்பொழில் வேணுபுர மதுவே. | அன்போடு வழிபடும் நாம் எவ்வுருவில் நினைக்கின்றோமோ அவ்வுருவில் தோன்றி நம்மை ஆட்கொள்பவனும், தன்னை நணுகாதவராகிய அசுரர்களின் வானில் திரிந்த மூன்றுபுரங்கள் வெந்தழியுமாறு வில்லை வளைத்துக் கணை தொடுத்து எரியூட்டியவனும் ஆகிய சிவபிரானது ஊர், மரங்களில் அமர்ந்த மந்திகள் தேனின் சுவை பொருந்தியனவாய்ப் பழுத்துத் தோன்றிய வாழைப் பழங்களைக் கண்டு அவற்றை உண்ணுதற் பொருட்டு மேல் நோக்கியவாறே தாம் ஏறிப்பறிக்க இயலாத தம் நிலைக்கு வருந்தும் பொழில்கள் சூழ்ந்த வேணுபுரம் ஆகும். "வாழை மரத்தில் குரங்கு ஏறாதன்றோ". |
| 92. | மண்ணோர்களும் விண்ணோர்களும் வெருவிம்மிக வஞ்சக்<br>கண்ணார்சல மூடிக்கட லோங்கவ்வுயர்ந் தானூர்<br>தண்ணார்நறுங் கமலம்மலர் சாயவ்விள வாளை<br>விண்ணார்குதி கொள்ளும்வியன் வேணுபுர மதுவே. | மண்ணுலக மக்களும் விண்ணகத்தேவரும் கண்டு நடுங்கி மிகவும் அஞ்சுமாறு நிலமெல்லாம் நிறைந்த நீர் மூடிக் கடல் ஊழி வெள்ளமாய் ஓங்க, அவ்வெள்ளத்திலும் அழியாது உயர்ந்து தோணியாய்த் தோன்றுமாறு செய்த சிவபிரானது ஊர், தண்ணிய மணம் கமழும் தாமரை மலர்கள் சாயுமாறு இளவாளை மீன்கள் வானிடை எழுந்து குதிக்கும் நீர்வளம் சான்ற பெரிய வேணுபுரம் ஆகும். |
| 93. | மலையான்மக ளஞ்சவ்வரை யெடுத்தவ்வ- யரக்கன்<br>தலைதோளவை நெரியச்சர ணுகிர்வைத்தவன் றன்னூர்<br>கலையாறொடு சுருதித்தொகை கற்றோர்மிகு கூட்டம்<br>விலையாயின சொற்றேர்தரு வேணுபுர மதுவே. | மலையரையன் மகளாகிய பார்வதி தேவி அஞ்சுமாறு கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த வ-மை சான்ற இராவணனின் தலைகள் தோள்கள் ஆகியவை நெரியுமாறு கால் விரலை ஊன்றிய சிவபிரானது ஊர், ஆறு அங்கங்களோடு வேதங்களின் தொகுதியைக் கற்றுணர்ந்தோர் தம்முள் கூடும் கூட்டத்தில் விலை மதிப்புடைய சொற்களைத் தேர்ந்து பேசும் கல்வி நலம் சான்றவர் வாழும் வேணுபுரம் ஆகும். |
| 94. | வயமுண்டவ மாலும்மடி காணாதல மாக்கும்<br>பயனாகிய பிரமன்படு தலையேந்திய பரனூர்<br>கயமேவிய சங்கத்தரு கழிவிட்டுயர் செந்நெல்<br>வியன்மேவிவந் துறங்கும்பொழில் வேணுபுர மதுவே. | உலகை உண்ட திருமாலும் தன் அடிகளைக் காணாது அலமருமாறு செய்தவனும், மக்கள் அடையத்தக்க பயன்களில் ஒன்றான பிரமலோகத்தை உடைய பிரமனது கிள்ளப்பட்ட தலையோட்டினை ஏந்தியவனுமாகிய சிவபிரானது ஊர், ஆழ்ந்த நீர் நிலைகளில் வாழும் சங்குகள், கடல் தரும் உப்பங்கழியை விடுத்துச் செந்நெல் விளைந்த அகன்ற வய-ல் வந்து உறங்கும் வேணுபுரமாகும். |

| | | |
|---|---|---|
| 95. | மாசேறிய வுடலாரமண் குழுக்கள்ளொடு தேரர்<br>தேசேறிய பாதம்வணங் காமைத்தெரி யானூர்<br>தூசேறிய வல்குற்றுடி யிடையார்துணை முலையார்<br>வீசேறிய புருவத்தவர் வேணுபுர மதுவே. | அழுக்கேறிய உட–னை உடையவர்களாகிய சமணர் கூட்டத்தினரோடு, புத்த மதத்தினராகிய தேரர்களும் ஒளிபொருந்திய திருவடிகளை வணங்காமையால் அவர்களால் அறியப்பெறாத சிவபிரானது ஊர்; அழகிய ஆடை தோயும் அல்குலையும், உடுக்கை போன்ற இடையையும், பருத்த தனங்களையும், ஆடவர் மேல் தம் குறிப்பு உணர்த்தி நெரியும் புருவங்களையும் உடைய அழகிய மகளிர் வாழும் வேணுபுரம் ஆகும். |
| 96. | வேதத்தொ– யானும்மிகு வேணுபுரந் தன்னைப்<br>பாதத்தினின் மனம்வைத்தெழு பந்தன்றன பாடல்<br>ஏதத்தினை யில்லாவிவை பத்தும்மிசை வல்லார்<br>கேதத்தினை யில்லார்சிவ கெதியைப்பெறு வாரே. | ஞானசம்பந்தரின் ஏதம் இல்லாத இப்பத்துப் பாடல்களையும் இசையோடு பாடுவார் சிவகதி பெறுவார் என வினை முடிபு கொள்க. மங்கல ஒ–கள் பலவற்றோடு வேத ஒ–யாலும் மிக்குத் தோன்றும் வேணுபுரத்துப் பெருமானின் பாதங்களை மனத்துட் கொண்டு பாடப்பெற்ற ஞானசம்பந்தரின் துன்பந்தரல் இல்லாத இப்பதிகப் பாடல்களை இசையோடு பாடவல்லவர் துயர் நீங்குவர்; முடிவில் சிவகதியைப் பெறுவர். |

## 10. திருவண்ணாமலை

**பண் : நட்டபாடை** **முதல் திருமுறை பதிக எண் : 10**

| | | |
|---|---|---|
| 97. | உண்ணாமுலை யுமையாளொடும் உடனாகிய வொருவன்<br>பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ<br>மண்ணார்ந்தன வருவித்திரண் மழலைம்முழ வதிரும்<br>அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ண<br>மறுமே. | உண்ணாமுலை என்னும் திருப்பெயருடைய உமையம்மையாரோடு உடனாக எழுந்தருளிய வரும், தம் இடப்பாகம் முழுவதும் பெண்ணாகியவருமாகிய சிவபிரானது மலை, அடித்து வரும் அழகிய மணிகள் சுடர்விட மண்ணை நோக்கி வருவனவாகிய அருவிகள் பொருள் புரியாத மழலை ஒ–யோடு கூடிய முழவு போல ஒ–க்கும் திருவண்ணாமலையாகும். அதனைத் தொழுவார் வினைகள் தவறாது கெடும். |
| 98. | தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடு தீண்டீத்<br>தூமாமழை துறுகன்மிசை சிறுநுண்டுளி சிதற<br>ஆமாம்பிணை யணையும்பொழி லண்ணாமலை யண்ணல்<br>பூமாங்கழல் புனைசேவடி நினைவார்வினை யிலரே. | கிளைகளை வளைத்து இனிய மாங்கனிகளை உண்ட ஆண் குரங்குகள் விடுத்த அக்கொம்புகள் வேகமாகத் தீண்டப்படுதலால் தூய மழை மேகங்கள் மலைப் பாறைகளில் சிறிய நுண்ணியவான மழைத்துளிகளைச் சிதறுவதால் காட்டுப்பசுக்கள் மழை எனக் கருதி மரநிழலை அடையும் பொழில்களை உடைய அண்ணாமலை இறைவனின் அழகிய மலர் போன்றனவும் வீரக்கழல் அணிந்தனவுமான சிவந்த திருவடிகளை நினைவார் வினை இலராவர். |

| | |
|---|---|
| 99. பீ–ம்மயில் பெடையோடுறை பொழில்சூழ்கழை முத்தம்<br>சூ–ம்மணி தலைமேனிறை சொரியும்விரி சாரல்<br>ஆ–ம்மழை தவழும்பொழி லண்ணாமலை யண்ணல்<br>காலன்வ– தொலைசேவடி தொழுவாரன புகழே. | தோகைகளோடு கூடிய ஆண்மயில்கள் பெண் மயில்களோடு உறையும் பொழில் சூழ்ந்ததும், மூங்கில்கள் சூல் கொண்டு உதிர்க்கும் முத்துக்கள் நிறைந்து சொரிவதும், விரிந்த மலைப் பகுதிகளில் நீர்த்துளிகளோடு கூடிய மழை மேகங்கள் தவழும் பொழில்களை உடையதுமாகிய அண்ணாமலை, இறைவனின் காலனது வ–மையைத் தகர்த்த சிவந்த திருவடிகளைத் தொழுவார் மேலன புகழ். (தொழுவார் புகழ் பெறுவர் என்பதாம்) |
| 100. உதிரும்மயி ரிடுவெண்டலை கலனாவுல கெல்லாம்<br>எதிரும்ப– யுணலாகவு மெருதேறுவ தல்லால்<br>முதிருஞ்சடை யிளவெண்பிறை முடிமேல்கொள வடிமேல்<br>அதிருங்கழ லடிகட்கிடம் அண்ணாமலை யதுவே. | உட––ருந்து பிரிக்கப்பட்ட மயிர் நீங்கிய பிரமனது வெண்மையான தலையோட்டை உண்கலனாக் கொண்டு உலகெலாம் திரிந்து ஏற்கும் ப–யை உணவாகக் கொள்ளுதற்கு எருது ஏறி வருவதோடு முதிர்ந்த சடைமுடியின் மீது வெண்பிறையைச் சூடித் திருவடிகளில் அதிரும் வீரக் கழல்களோடு விளங்கும் சிவபிரானுக்குரிய இடம் திருவண்ணாமலை யாகும். |
| 101. மரவஞ்சிலை தரளம்மிகு மணியுந்துவெள் ளருவி<br>அரவஞ்செய முரவம்படும் அண்ணாமலை யண்ணல்<br>உரவஞ்சடை யலவும்புன லுடனாவது மோரார்<br>குரவங்கமழ் நறுமென்குழல் உமைபுல்குதல் குணமே. | வெண் கடம்பமரம், சிலை, முத்து, மிக்க மணிகள் ஆகியவற்றை உந்திவரும் வெண்மையான அருவிகள் பறைபோல ஆரவாரம் செய்யும் திருவண்ணாமலையில் விளங்கும் அண்ணலாகிய சிவபிரான், சடையில் பாம்பும் கங்கையும் உடனாயிருந்து உலவுவதை ஓராமல், குராமணம் கமழும் மென்மையான கூந்தலை உடைய உமையம்மையாரைத் தழுவுதல் நன்றோ ? |
| 102. பெருகும்புன லண்ணாமலை பிறைசேர்கடல் நஞ்சைப்<br>பருகுந்தனை துணிவார்பொடி யணிவாரது பருகிக்<br>கருகும்மிட றுடையார்கமழ் சடையார்கழல் பரவி<br>உருகும்மன முடையார்தமக் குறுநோயடை யாவே. | பெருகிவரும் அருவி நீரை உடைய திருவண்ணாமலையில் பிறைமதி தோன்றிய பாற்கட–டைத் தோன்றிய நஞ்சை உட்கொள்ளும் அளவிற்குத் துணிபுடையவரும், அந்நஞ்சினை உண்டு கண்டம் கறுத்தவரும், திருவெண்ணீற்றை அணிந்தவரும், மணம் கமழும் சடைமுடியை உடையவரும் ஆகிய சிவபிரானின் திருவடிகளை வாழ்த்தி உருகும் மனம் உடையவர்கட்கு மிக்க நோய்கள் எவையும் வாரா. |
| 103. கரிகாலன குடர்கொள்வன கழுதாடிய காட்டில்<br>நரியாடிய நகுவெண்டலை யுதையுண்டவை யுருள<br>எரியாடிய விறைவர்க்கிட மினவண்டிசை முரல<br>அரியாடிய கண்ணாளொடும் அண்ணாமலை யதுவே. | கரிந்த கால்களை உடையனவும், குடரைப் பிடுங்கி உண்பனவும் ஆகிய பேய்கள் ஆடும் இடுகாட்டில், நரிகள் உருட்டி விளையாடும் சிரிக்கும் வெண்டலை ஓடுகள் உதைக்கப்பட்டு உருள, கையில் எரி ஏந்தி ஆடும் சிவபெருமான், வண்டுக் கூட்டங்கள் இசைபாடச் செவ்வரி பரந்த கண்களை உடைய உமையம்மையோடு எழுந்தருளிய இடம், திருவண்ணாமலை. |

| | |
|---|---|
| 104. ஒளிறூபு– யதளாடையன் உமையஞ்சுதல் பொருட்டால் பிளிறூகுரன் மதவாரண வதனம்பிடித் துரித்து வெளிறூபட விளையாடிய விகிர்தன்னிரா வணனை அளறூபட வடர்த்தானிடம் அண்ணாமலை யதுவே. | ஒளி செய்யும் பு–த்தோலை ஆடையாகக் கொண்டவனும், உமையம்மை அஞ்சுமாறு பிளிறும் குரலை உடைய மதம் பொருந்திய யானையின் தலையைப் பிடித்து அதன் தோலை உரித்து எளிதாக விளையாடிய விகிர்தனும், இராவணனை மலையின்கீழ் அகப்படுத்தி இரத்த வெள்ளத்தில் அடர்த்தவனும் ஆகிய சிவபெருமானது இடம் திருவண்ணாமலை. |
| 105. விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும் வேதக் கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புக ழோனும் அளவாவண மழலாகிய அண்ணாமலை யண்ணல் தளராமுலை முறுவல்லுமை தலைவன்னடி சரணே. | விள மரத்தின் கனியை உகுப்பது போல அம்மரவடிவாய் நின்ற அரக்கனை அழித்த கருங்கடல் வண்ணனாகிய திருமாலும், நீரில் கிளர்ந்து தோன்றிய தாமரை மலர்மேல் உறையும் குற்றம் அற்ற புகழாளனாகிய வேதாவும் அடிமுடிகளை அளவிட்டுக் காண இயலாதவாறு அழல் வடிவாய் நின்ற தலைவனும், தளராத தன பாரங்களையும் மலர்ந்த சிரிப்பையும் உடைய உமையம்மையின் கணவனும் ஆகிய சிவபிரானின் திருவடிகளே நமக்குக் காப்பு. |
| 106. வேர்வந்துற மாசூர்தர வெயினின்றுழல் வாரும் மார்பம்புதை ம–சீவர மறையாவரு வாரும் ஆரம்பர்த முரைகொள்ளன்மின் அண்ணாமலை யண்ணல் கூர்வெண்மழுப் படையானல்ல கழல்சேர்வது குணமே. | உட–ல் வியர்வை தோன்றவும், அழுக்கேறவும் வெயி–ல் நின்று உழல்வதைத் தவமாகக் கொள்வோராகிய சமணரும், மரவுரியால் மார்பை மிகவும் மறைத்து வருபவர் ஆகிய புத்தரும் போதிய பயிற்சியின்றித் தொடக்க நிலையில் உள்ளவர்கள் ஆத–ன், அவர்களுடைய உரைகளைக் கொள்ளாதீர். திருவண்ணா மலையில் உறையும் தலைவனும் கூரிய வெண்மையான மழுவாயுதத்தைக் கைக்கொண்டவனும் ஆகிய சிவபெருமானது நன்மைதரும் திருவடிகளை அடைதலே மேலான குணம். |
| 107. வெம்புந்திய கதிரோனொளி விலகும்விரி சாரல் அம்புந்திமூ வெயிலெய்தவன் அண்ணாமலை யதனைக் கொம்புந்துவ குயிலாலுவ குளிர்காழியுண் ஞான சம்பந்தன தமிழ்வல்லவர் அடிபேணுதல் தவமே. | வெம்மை மிக்க கதிரவன் ஒளிபுகாதவாறு தடுக்கும் விரிந்த சாரலை உடையதும், அம்பைச் செலுத்தி முப்புரங்களை அழித்த சிவபிரான் எழுந்தருளியதுமான அண்ணாமலையைக் கொம்பு என்னும் வாத்தியங்களின் ஒ–யைக் கேட்டு குயில்கள் எதிர்ஒ–க்கும் குளிர்ந்த காழிப் பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய இத்திருப்பதிகத் தமிழை ஓதவல்லவர்களின் திருவடிகளை வணங்குதல் சிறந்த தவமாம். |

## 11. திருவீழிமிழலை

பண் : நட்டபாடை | முதல் திருமுறை பதிக எண் : 11

| | |
|---|---|
| 108. சடையார்புன லுடையானொரு சரிகோவண முடையான்<br>படையார்மழு வுடையான்பல பூதப்படை யுடையான்<br>மடமான்விழி யுமைமாதிட முடையானெனை யுடையான்<br>விடையார்கொடி யுடையானிடம் வீழிம்மிழ லையே. | சடைமுடியில் கங்கையைத் தரித்தவனும், இடையினின்று சரிந்து நழுவும் ஒப்பற்ற கோவண ஆடையை அணிந்தவனும், மழுப் படையை உடையவனும், பலவகையான பூதங்களைப் படையாகக் கொண்டவனும், மடமைத் தன்மை பொருந்திய மான்விழி போன்ற விழிகளை உடைய உமையம்மையாகிய பெண்ணை இடப்பாகத்தே கொண்டவனும், என்னை ஆளாக உடையவனும், விடைக்கொடி உடையவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய இடம் திருவீழிமிழலை. |
| 109. ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்<br>மாறாமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்<br>ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்<br>வேறாயுட னானானிடம் வீழிம்மிழ லையே. | ஊழிக் காலத்தில் அனைத்தையும் ஒடுக்குவோனாய், ஒடுங்கிய உடலைத் தானொருவனே முதற்பொருளாய் நின்று தோற்றுவிப்பவனாய், சக்தி சிவம் என இருவகைப்பட்டவனாய், முக்குண வடிவினனாய், எக்காலத்தும் மாறுபடாத நான்மறை வடிவினனாய், ஐம்பெரும் பூதங்கள், ஆறுசுவை, ஏழு ஓசை, எட்டுத்திசை ஆகியவற்றில் நிறைந்தவனாய் உயிரோடு ஒன்றாகியும், வேறாகியும், உடனாகியும் விளங்கும் இறைவனது இடம் திருவீழிமிழலை. |
| 110. வம்மின்னடி யீர்நாண்மல ரிட்டுத்தொழு துய்ய<br>உம்மன்பினொ டெம்மன்புசெய் தீசன்னுறை கோயில்<br>மும்மென்றிசை முரல்வண்டுகள் கெண்டித்திசை யெங்கும்<br>விம்மும்பொழில் சூழ்தண்வயல் வீழிம்மிழ லையே. | அன்றலர்ந்த மலர்களைச் சாத்தி வணங்கி உய்தி பெற அடியவர்களே வாருங்கள். உயர்ந்த உம் அன்போடு எம் அன்பையும் ஏற்றருளும் இறைவன் உறையும் கோயில், மும் என்ற ஒ-க்குறிப்போடு இசைபாடும் வண்டுகள் மலர்களைக் கிளறுவதால் திசையெங்கும் மணம் கமழும் பொழில்கள் சூழ்ந்ததும், தண்ணிய வயல்களைக் கொண்டதுமாகிய திருவீழிமிழலை. |
| 111. பண்ணும்பத மேழும்பல வோசைத்தமி ழவையும்<br>உண்ணின்றதொர் சுவையும்முறு தாளத்தொ- பலவும்<br>மண்ணும்புன லுயிரும்வரு காற்றுஞ்சுடர் மூன்றும்<br>விண்ணும்முழு தானானிடம் வீழிம்மிழ லையே. | இசையும், அதற்கு அடிப்படையான ஏழு சுரங்களும் வல்லோசை, மெல்லோசை முத-யனவற்றை யுடைய தமிழும் உள்ளத்துணர்வாகிய சுவையும், பொருந்திய தாள வேறு பாட்டு ஒ-களும், மண், புனல், உயிர், காற்று, நெருப்பு, சூரியன், சந்திரன், விண் ஆகிய எண்வகை வடிவங்களும் ஆகிய இறைவனது இடம் திருவீழிமிழலை. |
| 112. ஆயாதன சமயம்பல வறியாதவன் நெறியின்<br>தாயானவ னுயிர்கட்குமுன் தலையானவன் மறைமுத்<br>தீயானவன் சிவனெம்மிறை செல்வத்திரு வாரூர்<br>மேயானவ னுறையும்மிடம் வீழிம்மிழ லையே. | சுருதி, யுக்தி, அநுபவங்களால் ஆராய்ச்சி செய்யாத பல சமயங்களால் அறியப் பெறாதவன், அறநெறிகளின் தாயாய் விளங்குவோன், எல்லா உயிர்கட்கும் அநாதியாகவே தலைவன். வேத வேள்விகளில் முத்தீ வடிவினன். சிவன் எனும் திருப் பெயருடையவன். எங்கட்குத் தலைவன். செல்வம் நிறைந்த திருவாரூரில் எழுந்தருளியிருப்பவன். அத்தகையோன் உறையுமிடம் திருவீழிமிழலை. |

| | | |
|---|---|---|
| 113. | கல்லானிழற் கீழாயிடர் காவாயென வானோர்<br>எல்லாமொரு தேராயயன் மறைபூட்டிநின் றுய்ப்ப<br>வல்லாயெரி காற்றீர்க்கரி கோல்வாசுகி நாண்கல்<br>வில்லாலெயி லெய்தானிடம் வீழிம்மிழ லையே. | சிவபிரான் கல்லால மரநிழற்கீழ் யோகியாய் வீற்றிருந்த காலத்து அசுரர்களால் இடருழந்த வானோர் காவாய் என வேண்ட, சூரிய சந்திரராகிய சக்கரம் பூட்டிய பூமியைத் தேராகக் கொண்டு நான்முகன் வேதங்களாகிய தேரிற் பூட்டிய குதிரைகளைச் செலுத்த, அக்கினிதேவனை வ–ய வாயாகவும், வாயுதேவனை இறகாகவும் கொண்ட திருமால் ஆகிய அம்பை வாசுகி என்னும் பாம்பினை நாணாகப் பூட்டி மேருமலையாகிய வில்லால் செலுத்தித் திரிபுரங்களை எய்து அழித்த சிவபிரானது இடம் திருவீழிமிழலை. |
| 114. | கரத்தான்ம– சிரத்தான்கரி யுரித்தாயதொர் படத்தான்<br>புரத்தார்பொடி படத்தன்னடி பணிமூவர்கட் கோவா<br>வரத்தான்மிக வளித்தானிடம் வளர்புன்னைமுத் தரும்பி<br>விரைத்தாதுபொன் மணியீன்றணி வீழிம்மிழ லையே. | பிரமகபாலம் பொருந்திய திருக்கரத்தினன். யானையை உரித்ததால் கிடைத்ததொரு மேற்போர்வையினன். முப்புர அரசர் அழியத் தன்னடி பணிந்த அம்முப்புரத்தலைவர் மூவர்கட்கும் மிக்க வரங்களை அழித்தவன். அப்பெருமானது இடம், வளர்ந்தோங்கிய புன்னை மரங்கள் முத்துக்கள் போல் அரும்பி மலர்ந்து பொன் தாதுக்களை ஈன்று பச்சை மணிகளைப் போல் காய்த்து அழகு செய்கின்ற திருவீழிமிழலையாகும். |
| 115. | முன்னிற்பவ ரில்லாமுர ணரக்கன்வட கயிலை<br>தன்னைப்பிடித் தெடுத்தான்முடி தடந்தோளிற வூன்றிப்<br>பின்னைப்பணிந் தேத்தப்பெரு வாள்பேரொடுங் கொடுத்த<br>மின்னிற்பொ– சடையானிடம் வீழிம்மிழ லையே. | தன்னை எதிர்த்து நிற்பார் யாரும் இல்லாத வ–மை பெற்ற அரக்கனாகிய இராவணன் வடதிசையிலுள்ள கயிலாய மலையைப் பற்றித் தூக்கினான். அவன் தலைகள் தோள்கள் ஆகியன நெரிய ஊன்றி அதனால் இடருழந்த அவன் பின்னர்ப் பணிந்தேத்த அவனுக்குப் பெரிதாகிய வாள், இராவணன் என்ற பெயர் ஆகியனவற்றைக் கொடுத்தருளிய மின்னல் போலப் பொ–யும் சடைமுடியை உடைய சிவபிரானது இடம் திருவீழிமிழலையாகும். |
| 116. | பண்டேழுல குண்டானவை கண்டானுமுன் னறியா<br>ஒண்டீயுரு வானானுறை கோயின்னிறை பொய்கை<br>வண்டாமரை மலர்மேன்மட வன்னந்நடை பயில<br>வெண்டாமரை செந்தாதுதிர் வீழிம்மிழ லையே. | முன்னொரு காலத்து ஏழுலகையும் தன் வயிற்றில் அடக்கிக்காட்டிய திருமாலும், அவ்வுலகங்களைப் படைத்தருளிய நான்முகனும் தன்னை அறியாதவாறு ஒளி பொருந்திய தீயுருவான சிவபிரான் உறையும் கோயில்; நீர் நிறைந்த பொய்கைகளில் பூத்த செழுமையான தாமரை மலர்மீது இள அன்னம் நடை பயில வெண்தாமரை சிவந்த தாதுக்களை உதிர்க்கும் திருவீழிமிழலையாகும். அன்னத்தின் நிறத்தால் செந்தாமரை வெண்தாமரை ஆயிற்று. அதன் கால்களின் செம்மையால் பொன்னிறத் தாதுக்கள் செந்தாதுக்கள் ஆயின. |

| | |
|---|---|
| 117. மசங்கற்சமண் மண்டைக்கையர் குண்டக்குண மி–கள்<br>இசங்கும்பிறப் பறுத்தானிடம் இருந்தேன்களித் திரைத்துப்<br>பசும்பொற்கிளி களிமஞ்ஞைகள் ஒளிகொண்டெழு பகலோன்<br>விசும்பைப்பொ– விக்கும்பொழில் வீழிம்மிழ லையே. | மயக்க உணர்வுடையவரும், பிச்சை ஏற்கும் மண்டை என்னும் பாத்திரத்தைக் கையின்கண் ஏந்தியவரும், நற்குணங்கள் இல்லாதவர்களும் ஆகிய சமணர், புத்தர்கள் நிற்கத் தன்னை வழிபடும் அன்பர்கட்கு வினைவயத்தாற் பொருந்திய பிறப்பினைப் போக்கியவன் எழுந்தருளிய இடம், மிகுதியான தேனீக்கள் தேனை உண்டு களித்து ஒ– செய்யவும், பசுமை நிறமேனியும் பொன் நிறக்காலும் உடைய கிளிகளும், களிப்புற்ற மயில்களும் நிறைந்ததும் ஒளியோடு தோன்றும் கதிரவன் இருக்கும் வான மண்டலத்தை அழகுறுத்துவதும் ஆகிய பொழில் சூழ்ந்த திருவீழிமிழலையாகும். |
| 118. வீழிம்மிழ லைம்மேவிய விகிர்தன்றனை விரைசேர்<br>காழிந்நகர் கலைஞானசம் பந்தன்றமிழ் பத்தும்<br>யாழின்னிசை வல்லார்சொலக் கேட்டாரவ ரெல்லாம்<br>ஊழின்ம– வினைபோயிட வுயர்வானடை வாரே. | வீழிமிழலையுள் எழுந்தருளிய விகிர்தனாகிய இறைவனைப்பற்றி மணம் பொருந்திய சீகாழிப் பதியில் தோன்றிய கலைவல்ல ஞானசம்பந்தன் பாடியருளிய பாடல்கள் பத்தினையும் யாழிசையில் பாட வல்லார்களும் சொல்லக் கேட்டார்களும் ஆகிய அனைவரும் ஊழாக அமைந்த வினைகள் நீங்கச் சிவப்பேறு எய்துவர். |

## 12. திருமுதுகுன்றம்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 12

| | |
|---|---|
| 119. மத்தாவரை நிறுவிக்கடல் கடைந்தவ்விட முண்ட<br>தொத்தார்தரு மணிநீண்முடிச் சுடர்வண்ணன திடமாம்<br>கொத்தார்மலர் குளிர்சந்தகி லொளிர்குங்குமங் கொண்டு<br>முத்தாறுவந் தடிவீழ்தரு முதுகுன்றடை வோமே. | மந்தர மலையை மத்தாக நட்டுக் கடலைக் கடைந்தபோது, கொடிது எனக் கூறப்பெறும் ஆலகால விடம் தோன்ற, அதனை உண்டவனும், பூங்கொத்துக்கள் சூடிய அழகிய நீண்ட சடை முடியினனும், எரிசுர் வண்ணனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளிய இடம்; மலர்க் கொத்துக்கள் குளிர்ந்த சந்தனம் அகில் ஒளிதரும் குங்கும மரம் ஆகியவற்றை அலைக்கரங்களால் ஏந்திக் கொண்டு வந்து மணிமுத்தாறு அடிவீழ்ந்து வணங்கும் திருமுதுகுன்றமாகும். அதனை அடைவோம். |
| 120. தழையார்வட வியவீதனில் தவமேபுரி சைவன்<br>இழையாரிடை மடவாளொடும் இனிதாவுறை விடமாம்<br>மழைவானிடை முழவவ்வெழில் வளைவாளுகி ரெரிகண்<br>முழைவாளரி குமிறும்முயர் முதுகுன்றடை வோமே. | தழைகளுடன் கூடிய ஆலமர நீழ–ல் யோகியாய் வீற்றிருந்து தவம் செய்யும் சிவபிரான், போகியாய் நூ–ழை போன்ற இடையினை உடைய உமையம்மையோடு மகிழ்ந்துறையும் இடம், மேகங்கள் வானின்கண் இடித்தலைக் கேட்டு யானையின் பிளிறல் எனக்கருதி அழகிதாய் வளைந்த ஒளி பொருந்தி விளங்கும் நகங்களையும் எரிபோலும் கண்களையும் உடையனவாய்க் குகைகளில் வாழும் சிங்கங்கள் கர்ச்சிக்கும் உயர்ந்த திருமுதுகுன்றமாகும். அதனை வழிபடச் செல்வோம். |

| | | |
|---|---|---|
| 121. | விளையாததொர் பரிசில்வரு பசுபாசவே தனையொண்<br>தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்பாம்<br>களையார்தரு கதிராயிரம் உடையவ்வவ னோடு<br>முளைமாமதி தவழும்முயர் முதுகுன்றடை வோமே. | உயிர்களுடன் அநாதியாகவே வருகின்ற வேதனைகளைத் தரும் பாசங்களாகிய ஒள்ளிய தளைகள் நீங்குமாறு அருள்புரிதற்கு எழுந்தருளிய சிவபிரானது இடம், ஒளி பொருந்திய கிரணங்கள் ஆயிரத்தைக் கொண்ட கதிரவனும் முளைத்தெழுந்து வளரும் சந்திரனும் தவழும் வானளாவிய மலையாகிய திருமுதுகுன்றமாகும். அதனை அடைவோம். |
| 122. | சுரர்மாதவர் தொகுகின்னர ரவரோதொலை வில்லா<br>நரரானபன் முனிவர்தொழ விருந்தானிட நலமார்<br>அரசார்வர வணிபொற்கல னவைகொண்டுபன் னாளும்<br>முரசார்வரு மணமொய்ம்புடை முதுகுன்றடை வோமே. | தேவர்களும், சிறந்த தவத்தை மேற்கொண்டவர்களும், கின்னரி மீட்டி இசை பாடும் தேவ இனத்தவரான கின்னரரும், மக்களுலகில் வாழும் மாமுனிவர்களும் தொழுமாறு சிவபிரான் எழுந்தருளிய இடம், அழகிய அரசிளங்குமாரர்கள் வர அவர்களைப் பொன் அணிகலன்கள் கொண்டு வரவேற்கும் மணமுரசு பன்னாளும் ஒ–த்தலை உடைய திருமுதுகுன்றமாகும். அதனை அடைவோம். |
| 123. | அறையார்கழ லந்தன்றனை அயின்மூவிலை யழகார்<br>கறையார்நெடு வே–ன்மிசை யேற்றானிடங் கருதில்<br>முறையாயின பலசொல்–யொண் மலர்சாந்தவை கொண்டு<br>முறையான்மிகு முனிவர்தொழு முதுகுன்றடை வோமே. | ஒ–க்கின்ற வீரக்கழல் அணிந்த அந்தகாசுரனைக் கூரிய மூவிலை வடிவாய் அமைந்த குருதிக் கறைபடிந்த அழகிய நீண்ட வே–ன் முனையில் குத்தி ஏந்திய சிவபெருமானது இடம் யாதெனில், முனிவர்கள் பலரும் வேதங்கள் பலவும் சொல்– நறுமலர் சந்தனம் முதலான பொருள்களைக் கொண்டு முறைப்படி சார்த்தி வழிபடுகின்ற திருமுதுகுன்றமாகும். அதனை நாம் அடைவோம். |
| 124. | ஏவார்சிலை யெயினன்னுரு வாகியெழில் விசயற்<br>கோவாதவின் னருள்செய்தவெம் மொருவற்கிட முலகில்<br>சாவாதவர் பிறவாதவர் தவமேமிக வுடையார்<br>மூவாதபன் முனிவர்தொழு முதுகுன்றடை வோமே. | அம்புகள் பூட்டிய வில்லை ஏந்திய வேட உருவந்தாங்கி வந்து போரிட்டு அழகிய அருச்சுனனுக்கு அருள்செய்த எம் சிவபெருமானுக்கு உகந்த இடம், சாவாமை பெற்றவர்களும், மீண்டும் பிறப்பு எய்தாதவர்களும், மிகுதியான தவத்தைப் புரிந்தவர்களும், மூப்பு எய்தாத முனிவர் பலரும் வந்து வணங்கும் திருமுதுகுன்றமாகும். நாமும் அதனைச் சென்றடைவோம். |
| 125. | தழல்சேர்தரு திருமேனியர் சசிசேர்சடை முடியர்<br>மழமால்விடை மிகவேறிய மறையோனுறை கோயில்<br>விழவோடொ– மிகுமங்கையர் தகுமாடக சாலை<br>முழவோடிசை நடமுன்செயு முதுகுன்றடை வோமே. | தழலை ஒத்த சிவந்த திருமேனியரும், பிறைமதி அணிந்த சடைமுடியினரும், இளமையான திருமாலாகிய இடபத்தில் மிகவும் உகந்தேறி வருபவரும், வேதங்களை அருளியவருமாகிய சிவபிரான் எழுந்தருளிய கோயில், விழாக்களின் ஓசையோடு அழகு மிகு நங்கையர் தக்க நடனசாலைகளில் முழவோசையோடு பாடி நடனம் ஆடும் திருமுதுகுன்றம் ஆகும். அதனை நாமும் சென்றடைவோம். |

| | |
|---|---|
| 126. செதுவாய்மைகள் கருதிவ்வரை யெடுத்ததிற லரக்கன்<br>கதுவாய்கள்பத் தலறீயிடக் கண்டானுறை கோயில்<br>மதுவாயசெங் காந்தண்மலர் நிறையக்குறை வில்லா<br>முதுவேய்கண்முத் துதிரும்பொழின் முதுகுன்றடை வோமே. | பொல்லா மொழிகளைக் கருதிக் கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த வ-ய இராவணனின் வடுவுள்ள வாய்கள் பத்தும் அலறும்படி கால்விரலால் ஊன்றி அடர்த்த சிவபிரானது கோயில் விளங்குவதும், தேன் நிறைந்த இடம் உடைய செங்காந்தள் மலர்களாகிய கைகள் நிறையும்படி முதிய மூங்கில்கள் குறைவின்றி முத்துக்களை உதிர்க்கும் பொழில்களால் சூழப்பட்டதுமாகிய திருமுதுகுன்றை நாம் அடைவோம். |
| 127. இயலாடிய பிரமன்னரி யிருவர்க்கறி வரிய<br>செயலாடிய தீயாருரு வாகியெழு செல்வன்<br>புயலாடுவண் பொழில்சூழ்புனற் படப்பைத்தடத் தருகே<br>முயலோடவெண் கயல்பாய்தரு முதுகுன்றடை வோமே. | தற்பெருமை பேசிய பிரமன் திருமால் ஆகிய இருவராலும் அறிதற்கரிய திருவிளையாடல் செய்து எரியுருவில் எழுந்த செல்வனாகிய சிவபிரான் எழுந்தருளியதும், மேகங்கள் தோயும் வளமையான பொழில்கள், நீர்வளம் மிக்க நிலப்பரப்புகள், நீர் நிலைகட்கு அருகில் வரும் முயல்கள் ஓடுமாறு வெள்ளிய கயல் மீன்கள் துள்ளிப் பாயும் குளங்கள் இவற்றின் வளமுடையதும் ஆகிய திருமுதுகுன்றத்தை நாம் அடைவோம். |
| 128. அருகரொடு புத்தரவ ரறியாவரன் மலையான்<br>மருகன்வரு மிடபக்கொடி யுடையானிட மலரார்<br>கருகுகுழன் மடவார்கடி குறிஞ்சியது பாடி<br>முருகன்னது பெருமைபகர் முதுகுன்றடை வோமே. | சமணர்களாலும் புத்தர்களாலும் அறியப்பெறாத அரனும், இமவான் மருகனும், தோன்றும் இடபக் கொடி உடையோனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய இடம், மலர் சூடிய கரிய கூந்தலை உடைய இளம் பெண்கள் தெய்வத்தன்மை வாய்ந்த குறிஞ்சிப் பண்ணைப் பாடி முருகப் பெருமானின் பெருமைகளைப் பகரும் திருமுதுகுன்றமாகும். அதனை நாம் அடைவோம். |
| 129. முகில்சேர்தரு முதுகுன்றுடை யானைம்மிகு தொல்சீர்ப்<br>புக-ந்நகர் மறைஞானசம் பந்தன்னுரை செய்த<br>நிகரில்லன தமிழ்மாலைக ளிசையோடிவை பத்தும்<br>பகரும்மடி யவர்கட்கிடர் பாவம்மடை யாவே. | மேகங்கள் வந்து தங்கும் திருமுதுகுன்றத்தில் விளங்கும் பெருமானைப் பழமையான மிக்க புகழையுடைய புக- நகரில் தோன்றிய மறைவல்ல ஞானசம்பந்தன் உரைத்த ஒப்பற்ற தமிழ்மாலைகளாகிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் இசையோடு பகர்ந்து வழிபடும் அடியவர்களைத் துன்பங்களும் அவற்றைத் தரும் பாவங்களும் அடையா. |

## 13. திருவியலூர்

**பண் : நட்டபாடை** **முதல் திருமுறை பதிக எண் : 13**

| | |
|---|---|
| 130. குரவங்கமழ் நறுமென்குழல் அரிவையவள் வெருவப்<br>பொருவெங்கரி படவென்றதன் உரிவையுட லணிவோன்<br>அரவும்மலை புனலும்மிள மதியும்நகு தலையும்<br>விரவுஞ்சடை யடிகட்கிடம் விரிநீர்விய லூரே. | குரா மலரின் மணம் கமழ்வதும், இயற்கையிலேயே மணமுடையதுமான மென்மையான கூந்தலையுடைய உமையம்மை அஞ்ச, தன்னோடு பொருதற்கு வந்த சினவேழத்தைக் கொன்று, அதன் தோலைத் தன் திருமேனியில் போர்த்தவனும், அரவு, கங்கை, பிறை, வெண்தலை ஆகியவற்றை அணிந்த சடையை உடையவனுமாய சிவபிரானுக்குரிய இடம் நீர்வளம் மிக்க வியலூராகும். |

| | |
|---|---|
| 131. ஏறார்தரு மொருவன்பல வுருவன்னிலை யானான்<br>ஆறார்தரு சடையன்அனல் உருவன்புரி வுடையான்<br>மாறார்புர மெரியச்சிலை வளைவித்தவன் மடவாள்<br>வீறார்தர நின்றானிடம் விரிநீர்விய லூரே. | எருதின்மேல் வருபவனும், பல்வேறு மூர்த்தங்களைக் கொண்டவனும், என்றும் நிலையானவனும், கங்கையாற்றைச் சடையில் நிறுத்தியவனும், அனல் போன்ற சிவந்த மேனியனும், அன்புடையவனும், பகைவராய் வந்த அசுரர்தம் முப்புரங்கள் எரியுமாறு வில்லை வளைத்தவனும், உமையம்மை பெருமிதம் கொள்ளப் பல்வகைச் சிறப்புக்களோடு நிற்பவனுமாய சிவபிரானுக்குரிய இடம் நீர்வளம் மிக்க வியலூராகும். |
| 132. செம்மென்சடை யவைதாழ்வுற மடவார்மனை தோறும்<br>பெய்ம்மின்ப– யெனநின்றிசை பகர்வாரவ ரிடமாம்<br>உம்மென்றெழு மருவித்திரள் வரைபற்றிட வுரைமேல்<br>விம்மும்பொழில் கெழுவும்வயல் விரிநீர்விய லூரே. | சிவந்த மென்மையான சடை தாழத் தாருகாவன முனிவர்களின் மனைவியர் வாழ்ந்த இல்லங்கள் தோறும் சென்று உணவிடுங்கள் என்று இசை பாடியவனாய சிவபிரானது இடம், உம் என்ற ஒ–க் குறிப்போடு அருவிகள் குடகு மலை முகடுகளி–ருந்து காவிரியாய் வர அந்நீர் வளத்தால் புகழோடு செழித்து வளரும் பொழில்களையும் பொருந்திய வயல்களையும் உடைய நீர்வளம் மிக்க வியலூராகும். |
| 133. அடைவாகிய வடியார்தொழ வலரோன்றலை யதனில்<br>மடவாரிடு ப–வந்துண லுடையானவ னிடமாம்<br>கடையார்தர வகிலார்கழை முத்தம்நிரை சிந்தி<br>மிடையார்பொழில் புடைசூழ்தரு விரிநீர்விய லூரே. | அடியவர்கள் தத்தம் அடைவின்படி தொழப் பிரம கபாலத்தில் மகளிர் இட்ட உணவை உண்பவனாகிய சிவபிரான் விரும்பி உறையும் இடம், பள்ளர்கள் வயல்களில் நிறையவும் நிறைந்த மூங்கில்கள் முத்துக்களை வரிசையாகச் சொரியவும் ஆற்றில் வரும் அகில் மரங்களைக் கொண்டதும் நெருங்கிய மரங்களைக் கொண்ட பொழில் சூழ்ந்ததுமாகிய நீர்வளம் மிக்க வியலூராகும். |
| 134. எண்ணார்தரு பயனாயய னவனாய்மிகு கலையாய்ப்<br>பண்ணார்தரு மறையாயுயர் பொருளாயிறை யவனாய்க்<br>கண்ணார்தரு முருவாகிய கடவுள்ளிட மெனலாம்<br>விண்ணோரொடு மண்ணோர்தொழும் விரிநீர்விய லூரே. | தியானத்தின் பயனாய் இருப்பவனும், நான்முகனாய் உலகைப் படைப்போனும், எண்ணற்ற கலைகளாய்த் திகழ்வோனும் சந்த இசையோடு கூடிய வேதங்களாய் விளங்குவோனும், உலகில் மிக உயர்ந்த பொருளாய் இருப்போனும், எல்லோர்க்கும் தலைவனானவனும், கண்ணிறைந்த பேரழகுடையோனும் ஆகிய கடவுளது இடம் விண்ணவராகிய தேவர்களும் மண்ணவராகிய மக்களும் வந்து வணங்கும் நீர்வளம் நிரம்பிய வியலூர் ஆகும். |
| 135. வசைவிற்கொடு வருவேடுவ னவனாய்நிலை யறிவான்<br>திசையுற்றவர் காணச்செரு மலைவானிலை யவனை<br>அசையப்பொரு தசையாவண மவனுக்குயர் படைகள்<br>விசையற்கருள் செய்தானிடம் விரிநீர்விய லூரே. | வளைந்த வில்லை ஏந்தி வேட்டுவ வடிவம் கொண்டு வந்து தன்னை நோக்கித் தவம் இயற்றும் விசயனின் ஆற்றலை அறிதற்பொருட்டு எண்திசையிலுள்ளோரும் காண ஒரு கா–ல் நின்று தவம் செய்த அவன் வருந்தும்படி, அவனோடு செருமலைந்து அவனது ஆற்றலைப் பாராட்டி அவன் அழியாதவாறு அவனுக்குப் பாசுபதம் முத–ய படைக்கலங்களை அருளியவனாகிய சிவபிரானது இடம், நீர்வளம் மிக்க வியலூராகும். |

| | |
|---|---|
| 136. மானார்அர வுடையானிர வுடையான்பகல்நட்டம்<br>ஊனார்தரு முயிரானுயர் விசையான்விளை பொருள்கள்<br>தானாகிய தலைவன்னென நினைவாரவ ரிடமாம்<br>மேனாடிய விண்ணோர்தொழும் விரிநீர்விய லூரே. | தலைமையான அரவை அணிந்தவனும், தலையோட்டில் இரத்தல் தொழில் புரிகின்றவனும், பக–ல் நட்டம் ஆடுபவனும், ஊனிடை உயிராய் விளங்குபவனும், உயரிய வீரம் உடையவனும், அனைத்து விளை பொருள்களாய் நிற்கும் தலைவன் என நினைத்தற்குரியவனுமாகிய சிவபிரானது இடம், புண்ணியப் பயனால் மேல் உலகை நாடிய விண்ணவர்களால் தொழப் பெறும் நீர் வளம் சான்ற வியலூராகும். |
| 137. பொருவாரெனக் கெதிராரெனப் பொருப்பையெடுத் தான்றன்<br>கருமால்வரை கரந்தோளுரங் கதிர்நீண்முடி நெரிந்து<br>சிரமாயின கதறச்செறி கழல்சேர்திரு வடியின்<br>விரலாலடர் வித்தானிடம் விரிநீர்விய லூரே. | எனக்கெதிராகச் சண்டையிடுவார் யார் என்ற செருக்கால் கயிலை மலையை எடுத்த இராவணனின் வ–ய பெரிய மலைபோலும் கைகள் தோள்கள் மார்பு ஆகியனவும் ஒளி பொருந்திய நீண்ட மகுடங்களுடன் கூடிய தலைகளும் நெரிதலால் அவன் கதறுமாறு, செறிந்த கழல்களுடன் கூடிய திருவடியின் விரலால் அடர்ந்த சிவபிரானது இடம், நீர்வளம் மிக்க வியலூராகும். |
| 138. வளம்பட்டலர் மலர்மேலயன் மாலும்மொரு வகையால்<br>அளம்பட்டறி வொண்ணாவகை யழலாகிய வண்ணல்<br>உளம்பட்டெழு தழற்றூணதன் நடுவேயொரு வுருவம்<br>விளம்பட்டருள் செய்தானிடம் விரிநீர்விய லூரே. | வளமையோடு அலர்ந்த தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும், திருமாலும் தமக்குள் முடி அடி காண்பவர் பெரியவர் என்ற ஒரு வகையான உடன்பாட்டால் அன்னமும் பன்றியுமாய் வருந்தி முயன்றும் அறிய வொண்ணாதவாறு அழலுருவாகி நின்ற அண்ணலும், அவ்விருவர்தம் முனைப்பு அடங்கி வேண்டத் தழல் வடிவான தூணின் நடுவே ஒருருவமாய் வெளிப்பட்டு அருள் செய்தவனுமாகிய சிவபிரானது இடம், நீர்வளம் மிக்க வியலூராகும். |
| 139. தடுக்காலுடன் மறைப்பாரவர் தவர்சீவர மூடிப்<br>பிடக்கேயுரை செய்வாரொடு பேணார்நமர் பெரியோர்<br>கடல்சேர்தரு விடமுண்டமு தமரர்க்கருள் செய்த<br>விடைசேர்தரு கொடியானிடம் விரிநீர்விய லூரே. | ஓலைப்பாயால் உடலை மறைப்பவராகிய சமண முனிவர்களுடனும், பொன்னிற ஆடையால் உடலை மூடிப்பிடகம் என்னும் நூலைத் தம் மத வேதமாக உரைக்கும் புத்த மதத் தலைவர்கள் உடனும் நம் பெரியோர் நட்புக் கொள்ளார். கட–ல் தோன்றிய நஞ்சைத் தான் உண்டு, அமுதை அமரர்க்களித்தருளிய விடைக்கொடியை உடைய சிவபிரானது இடம் நீர்வளமிக்க வியலூராகும். அதனைச் சென்று வழிபடுமின். |
| 140. விளங்கும்பிறை சடைமேலுடை விகிர்தன்விய லூரைத்<br>தளங்கொண்டதொர் பு–த்தகு தமிழ்ஞானசம் பந்தன்<br>துளங்கில்தமிழ் பரவித்தொழு மடியாரவ ரென்றும்<br>விளங்கும்புக ழதனோடுயர் விண்ணும்முடை யாரே. | விளங்கும் பிறையைச் சடைமேலுடைய விகிர்தனாகிய சிவபிரானது வியலூரை, இடமகன்ற ஊராகிய புக–யில் தோன்றிய தக்க தமிழ் ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய துளக்கமில்லாத இத்தமிழ் மாலையைப் பாடிப் பரவித் தொழும் அடியவர், எக்காலத்தும் விளங்கும் புகழோடு உயரிய விண்ணுலகையும் தமதாக உடையவராவர். |

# 14. திருக்கொடுங்குன்றம்

பண் : நட்டபாடை | முதல் திருமுறை பதிக எண் : 14

| | |
|---|---|
| 141. வானிற்பொ– வெய்தும்மழை மேகங்கிழித் தோடிக்<br>கூனற்பிறை சேருங்குளிர் சாரற்கொடுங் குன்றம்<br>ஆனிற்பொ– யைந்தும்அமர்ந் தாடியுல கேத்தத்<br>தேனிற்பொ– மொழியாளொடு மேயான்திரு நகரே. | வளைந்த பிறைமதி வானின்கண் விளங்கும் மழை மேகங்களைக் கிழித்து ஓடிச்சென்று சேரும் குளிர்ந்த சாரலை உடைய கொடுங்குன்றம், பசுவிடம் விளங்கும் பால் நெய் தயிர் கோமயம் கோசலம் ஆகிய ஐந்து பொருள்களையும் மகிழ்ந்தாடி உலகம் போற்றத் தேன்போலும் மொழியினைப் பேசும் உமையம்மையோடு சிவபிரான் மேவிய திருத்தலமாகும். |
| 142. மயில்புல்குதண் பெடையோடுட னாடும்வளர் சாரல்<br>குயி–ன்னிசை பாடுங்குளிர் சோலைக்கொடுங் குன்றம்<br>அயில்வேன்ம– நெடுவெஞ்சுடர் அனலேந்திநின் றாடி<br>எயில்முன்பட எய்தானவன் மேயவ்வெழில் நகரே. | ஆண்மயில்கள் தண்ணிய தம் பெடைகளைத் தழுவித் தோகை விரித்தாடும் விரிந்த சாரலையும், குயில்கள் இன்னிசை பாடும் குளிர்ந்த சோலைகளையும் உடைய கொடுங்குன்றம், கூரிய வேல்போலும் நெடிய வெம்மையான ஒளியோடு கூடிய அனலைக் கையில் ஏந்தி நின்றாடி முப்புரங்களைக் கணை தொடுத்து அழித்த சிவபிரான் எழுந்தருளிய திருத்தலமாகும். |
| 143. மிளிரும்மணி பைம்பொன்னொடு விரைமாமல ருந்திக்<br>குளிரும்புனல் பாயுங்குளிர் சாரற்கொடுங் குன்றம்<br>கிளர்கங்கையொ டிளவெண்மதி கெழுவுஞ்சடை தன்மேல்<br>வளர்கொன்றையும் மதமத்தமும் வைத்தான்வள நகரே. | அருவிகள், ஒளிவீசும் மணிகள், பசும்பொன், மணமுள்ள மலர்கள் ஆகியவற்றைத் தள்ளிக்கொண்டு வந்து நீரைச் சொரிதலால், குளிர்ந்துள்ள மலைச்சாரலை உடைய கொடுங்குன்றம், பொங்கி எழும் கங்கையோடு, வெள்ளிய பிறைமதி பொருந்திய சடை, முடிமேல், மணம் வளரும் கொன்றை மலரையும் மதத்தை ஊட்டும் ஊமத்தை மலரையும் அணிந்துள்ள சிவபிரானது வளமையான நகராகும். |
| 144. பருமாமத கரியோடரி யிழியும்விரி சாரல்<br>குருமாமணி பொன்னோடிழி யருவிக்கொடுங் குன்றம்<br>பொருமாவெயில் வரைவில்தரு கணையிற்பொடி செய்த<br>பெருமானவ னுமையாளொடு மேவும்பெரு நகரே. | பெரிய கரிய மத யானைகளும் சிங்கங்களும் இரை தேடவும், நீர் பருகவும் இறங்கிவரும் பெரிய மலைச்சாரலையும், நிறம் பொருந்திய பெரிய மணிகளைப் பொன்னோடு சொரியும் அருவிகளையும் உடைய கொடுங்குன்றம், தன்னோடு பொரவந்த பெரிய முப்புரக் கோட்டைகளை மலை வில்–ல் தொடுத்த கணையால் பொடியாக்கிய சிவபிரான் உமையம்மையோடு எழுந்தருளிய பெருநகராகும். |
| 145. மேகத்திடி குரல்வந்தெழ வெருவிவ்வரை யிழியும்<br>கூகைக்குல மோடித்திரி சாரற்கொடுங் குன்றம்<br>நாகத்தொடும் இளவெண்பிறை சூடிந்நல மங்கை<br>பாகத்தவ னிமையோர்தொழ மேவும்பழ நகரே. | மேகத்திடம் இடிக்குரல் தோன்றக் கேட்டுக் கோட்டான் என்னும் பறவை இனங்கள் அஞ்சி மலையினின்றும் இறங்கி வந்து ஓடித் திரியும் மலைச்சாரலை உடைய கொடுங்குன்றம், நாகத்தோடு இளவெண்பிறையை முடியிற் சூடி அழகிய உமை நங்கையை ஒருபாகமாகக் கொண்டுள்ள சிவபிரான், தேவர்கள் தன்னை வணங்குமாறு எழுந்தருளும் பழமையான நகராகும். |

| | |
|---|---|
| 146. கைம்மாமத கரியின்னின மிடியின்குர லதிரக்<br>கொம்மாமலர்ச் சோலைபுக மண்டுங்கொடுங் குன்றம்<br>அம்மானென வுள்கித்தொழு வார்கட்கருள் செய்யும்<br>பெம்மானவ னிமையோர்தொழ மேவும்பெரு நகரே. | துதிக்கையை உடைய கரிய மதயானைகளின் கூட்டம் இடிக்குரல் அதிரக்கேட்டு அஞ்சிக் கொய்யத்தக்க மணமலர்களை உடைய சோலைகளில் புகுந்து ஒளிதற்குச் செறிந்து வரும் கொடுங்குன்றம். இவரே நம் தலைவர் என இடைவிடாது நினைந்து தொழும் அடியவர்கட்கு அருள் செய்யும் சிவபெருமான் விண்ணோர் தன்னைத் தொழ வீற்றிருந்தருளும் பெருநகராகும். |
| 147. மரவத்தொடு மணமாதவி மௌவல்லது விண்ட<br>குரவத்தொடு விரவும்பொழில் சூழ்தண்கொடுங் குன்றம்<br>அரவத்தொடு மிளவெண்பிறை விரவும்மலர்க் கொன்றை<br>நிரவச்சடை முடிமேலுடன் வைத்தானெடு நகரே. | கடம்பு, குருக்கத்தி, முல்லை ஆகியவற்றின் நாள் அரும்புகள் குரவமலர்களோடு விண்டு மணம் விரவும் பொழில் சூழ்ந்த தண்ணிய கொடுங்குன்றம், அரவு, வெள்ளிய இளம்பிறை, மணம் விரவும் கொன்றை மலர் ஆகியவற்றை நிரம்பத் தன் முடிமேல் அணிந்துள்ள சிவபிரானது நெடுநகராகும். |
| 148. முட்டாமுது கரியின்னின முதுவேய்களை முனிந்து<br>குட்டாச்சுனை யவைமண்டிநின் றாடுங்கொடுங் குன்றம்<br>ஒட்டாவரக் கன்றன்முடி யொருபஃதவை யுடனே<br>பிட்டானவ னுமையாளொடு மேவும்பெரு நகரே. | யானைக் கூட்டங்கள் யாரும் தடுப்பார் இன்றி முதிய மூங்கில்களை உண்டு வெறுத்துப் பிறரால் அகழப்படாத இயற்கையிலேயே ஆழமாக உள்ள சுனைகளில் இறங்கிநின்று நீராடும் கொடுங்குன்றம், தன்னோடு மனம் பொருந்தாது கயிலை மலையை எடுத்த அரக்கனாகிய இராவணனின் முடியணிந்த பத்துத் தலைகளையும் அடர்த்து ஒடித்தவனாகிய சிவபெருமான் உமையம்மையோடு மேவும் பெருநகராகும். |
| 149. அறையும்மரி குரலோசையை யஞ்சியடு மானை<br>குறையும்மன மாகிம்முழை வைகுங்கொடுங் குன்றம்<br>மறையும்மவை யுடையானென நெடியானென விவர்கள்<br>இறையும்மறி வொண்ணாதவன் மேயவ்வெழில் நகரே. | சிங்கத்தின் கர்ச்சனை ஓசையைக் கேட்டு அஞ்சிக் கொல்லும் தன்மையினவாகிய யானைகள் மன எழுச்சி குன்றி மலையிடையே உள்ள குகைப் பகுதிகளில் மறைந்து வைகும் கொடுங்குன்றம், வேதங்களுக்கு உரியவனாய நான்முகன் திருமால் ஆகிய இருவரும் சிறிதும் அறிய முடியாதவனாய் நின்ற சிவபிரான் மேவிய அழகிய நகராகும். |
| 150. மத்தக்களி றாளிவ்வர வஞ்சிம்மலை தன்னைக்<br>குத்திப்பெரு முழைதன்னிடை வைகுங்கொடுங் குன்றம்<br>புத்தரொடு பொல்லாமனச் சமணர்புறங் கூறப்<br>பத்தர்க்கருள் செய்தானவன் மேயபழ நகரே. | மதம் பொருந்திய யானைகள் தம்மின் வ–ய சிங்கம் வருதலைக் கண்டு அஞ்சி மலையைக் குத்திப் பெருமுழையாக்கி, அதனிடை வைகும் கொடுங்குன்றம், புத்தர்களும் பொல்லா மனமுடைய சமணர்களும் புறங்கூறத் தன் பக்தர்கட்கு, அருள் செய்பவனாகிய சிவபிரான் மேவிய பழமையான நகராகும். |

| | |
|---|---|
| 151. கூனற்பிறை சடைமேன்மிக வுடையான்கொடுங் குன்றைக்<br>கானற்கழு மலமாநகர் தலைவன்னல கவுணி<br>ஞானத்துயர் சம்பந்தன நலங்கொள்தமிழ் வல்லார்<br>ஊனத்தொடு துயர்தீர்ந்துல கேத்தும்மெழி லோரே. | வளைந்த பிறைமதியைச் சடைமுடிமீது அழகு மிகுமாறு அணிந்த சிவபிரானது திருக்கொடுங்குன்றைக் கடற்கரைச் சோலைகளால் சூழப்பட்ட கழுமலமாநகரின் தலைவனும் நல்ல கவுணியர் கோத்திரத்தில் தோன்றியவனுமாகிய ஞானசம்பந்தன் பாடிய தமிழ்மாலைகளை ஓதி வழிபட வல்லவர் தம்மிடமுள்ள குறைபாடுகள் நீங்கித் துன்பங்கள் அகன்று உலகம் போற்றும் புகழுடையோராவர். |

## 15. திருநெய்த்தானம்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 15

| | |
|---|---|
| 152. மையாடிய கண்டன்மலை மகள்பாகம துடையான்<br>கையாடிய கேடில்கரி யுரிமூடிய வொருவன்<br>செய்யாடிய குவளைம்மலர் நயனத்தவ ளோடும்<br>நெய்யாடிய பெருமானிடம் நெய்த்தானமெ னீரே. | கருநிறம் அமைந்த கண்டத்தை உடையவனும், மலை மகளாகிய பார்வதியை இடப்பாகமாகக் கொண்டவனும், துதிக்கையோடு கூடியதாய்த் தன்னை எதிர்த்து வந்ததால் அழிவற்ற புகழ் பெற்ற யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்த, தன்னொப்பார் இல்லாத் தலைவனுமாகிய சிவபிரான் வயல்களில் முளைத்த குவளை மலர் போலும் கண்களை உடைய உமையம்மையோடும் நெய்யாடிய பெருமான் என்ற திருப்பெயரோடும் விளங்குமிடமாகிய நெய்த்தானம் என்ற திருப்பெயரைச் சொல்வீராக. |
| 153. பறையும்பழி பாவம்படு துயரம் பலதீரும்<br>பிறையும்புன லரவும்படு சடையெம்பெரு மானூர்<br>அறையும்புனல் வருகாவிரி யலைசேர்வட கரைமேல்<br>நிறையும்புனை மடவார்பயில் நெய்த்தானமெ னீரே. | காவிரி வடகரை மேல் உள்ள எம்பெருமான் ஊராகிய நெய்த்தானம் என்ற பெயரைச் சொல்லுமின் பழி பாவம் தீரும் என வினை முடிபு காண்க. ஆரவாரத்துடன் வரும் புனலின் அலைகள் சேரும் காவிரி வடகரையில் விளங்குவதும், பிறை கங்கை அரவம் ஆகியவற்றுடன் கூடிய சடைமுடியை உடைய எம்பெருமான் எழுந்தருளியதும், மனத்தைக் கற்பு நெறியில் நிறுத்தும் நிறை குணத்துடன் தம்மை ஒப்பனை செய்து கொள்ளும் மகளிர் பயில்வதுமாகிய நெய்த்தானம் என்ற ஊரின் பெயரைச் சொல்லுமின்; பழிநீங்கும், பாவங்கள் துன்பங்கள் அனைத்தும் தீரும். |
| 154. பேயாயின பாடப்பெரு நடமாடிய பெருமான்<br>வேயாயின தோளிக்கொரு பாகம்மிக வுடையான்<br>தாயாகிய வுலகங்களை நிலைபேறுசெய் தலைவன்<br>நேயாடிய பெருமானிடம் நெய்த்தானமெ னீரே. | ஊழிக்காலத்து, பேய்கள் பாட, மகாநடனம் ஆடிய பெருமானும், மூங்கில் போலத் திரண்ட தோள்களை உடைய உமையம்மைக்குத் தனது திருமேனியின் ஒரு பாகத்தை வழங்கியவனும், அனைத்து உலகங்களிலும் வாழும் உயிர்களை நிலைபேறு செய்தருளும் தாய்போன்ற தலைவனும், அன்பர்களின் அன்பு நீரில் ஆடுபவனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளிய நெய்த்தானம் என்ற திருப்பெயரைப் பலகாலும் சொல்வீராக. |

| | |
|---|---|
| 155. சுடுநீறணி யண்ணல்சுடர் சூலம்மன லேந்தி<br>நடுநள்ளிருள் நடமாடிய நம்பன்னுறை யிடமாம்<br>கடுவாளிள வரவாடுமிழ் கடனஞ்சம துண்டான்<br>நெடுவாளைகள் குதிகொள்ளுயர் நெய்த்தானமெ னீரே. | சுடப்பட்ட திருநீற்றை அணியும் தலைமை யானவனும் ஒளிபொருந்திய சூலம் அனல் ஆகியவற்றைக் கைகளில் ஏந்தி இருள் செறிந்த இரவின் நடுயாமத்தே நடனம் ஆடும் நம்பனும், கொடிய ஒளி பொருந்திய இளைய வாசுகியாகிய பாம்பு உமிழ்ந்த நஞ்சோடு கட–ல் தோன்றிய நஞ்சினை உண்டவனுமாகிய சிவபிரான் உறையும் இடமாகிய நீண்ட வாளை மீன்கள் துள்ளி விளையாடும் நீர்வளம் மிக்க நெய்த்தானம் என்ற ஊரின் பெயரைச் சொல்வீராக. |
| 156. நுகராரமொ டேலம்மணி செம்பொன்னுரை யுந்திப்<br>பகராவரு புனல்காவிரி பரவிப்பணிந் தேத்தும்<br>நிகரான்மண –டுதண்கரை நிகழ்வாயநெய்த் தான<br>நகரானடி யேத்தந்நமை நடலையடை யாவே. | நுகரத்தக்க பொருளாகிய சந்தனம், ஏலம், மணி, செம்பொன் ஆகியவற்றை நுரையோடு உந்தி விலை பகர்வதுபோல ஆரவாரித்து வரும் நீரை உடைய காவிரி பரவிப் பணிந்தேத்துவதும், ஒருவகையான மணல் சேர்க்கப்பெற்ற அவ்வாற்றின் தண்கரையில் விளங்குவதுமாகிய நெய்த்தானத்துக் கோயி–ல் விளங்கும் சிவபிரான் திருவடிகளை ஏத்தத் துன்பங்கள் நம்மை அடையா. |
| 157. விடையார் கொடி யுடையவ்வணல் வீந்தார்வெளை<br>யெலும்பும்<br>உடையார்நறு மாலைசடை யுடையாரவர் மேய<br>புடையேபுனல் பாயும்வயல் பொழில்சூழ்ந்தநெய்த் தானம்<br>அடையாதவ ரென்றும்அம ருலகம்அடை யாரே. | இடபக் கொடியை உடைய அண்ணலும், மணம் கமழும் மாலைகளைச் சடைமேல் அணிந்தவனும் ஆகிய சிவபிரான் மேவியதும், அருகிலுள்ள கண்ணிகளிலும் வாய்க்கால்களிலும் வரும் நீர் பாயும் வயல்கள் பொழில்கள் சூழ்ந்ததும் ஆகிய நெய்த்தானம் என்னும் தலத்தை அடையாதவர் எக்காலத்தும் வீட்டுலகம் அடையார். |
| 158. நிழலார்வயல் கமழ்சோலைகள் நிறைகின்றநெய்த் தானத்<br>தழலானவ னனலங்கையில் ஏந்தியழ காய<br>கழலானடி நாளுங்கழ லாதேவிட –ன்றித்<br>தொழலாரவர் நாளுந்துய ரின்றித்தொழு வாரே. | பயிர் செழித்து வளர்தலால் ஒளி நிறைந்த வயல்களும் மணம் கமலும் சோலைகளும் நிறைகின்ற நெய்த்தானத்தில், தழல் உருவில் விளங்குபவனும் அனலைத் தன் கையில் ஏந்தியவனும் அழகிய வீரக் கழல்களை அணிந்தவனும் ஆகிய சிவபிரானது திருவடிகளை நாள்தோறும் தவறாமலும் மறவாமலும் தொழுதலை உடைய அடியவர் எந்நாளும் துயரின்றி மற்றவர்களால் தொழத்தக்க நிலையினராவர். |
| 159. அறையார்கட –லங்கைக்கிறை யணிசேர்கயி லாயம்<br>இறையாரமு னெடுத்தானிரு பதுதோளிற வூன்றி<br>நிறையார்புனல் நெய்த்தானன்நல் நிகழ்சேவடி பரவக்<br>கறையார்கதிர் வாளீந்தவர் கழலேத்துதல் கதியே. | அழகிய கயிலாய மலையைத் தன் இருபது முன் கரங்களாலும் பெயர்த்து எடுத்த ஓசை கெழுமிய கடல் சூழ்ந்த இலங்கைக்குரிய மன்னனாகிய இராவணன் இருபது தோள்களும் நெரியுமாறு காலை ஊன்றிப் பின் அவன் புனல் நிறைந்த நெய்த்தானப் பெருமானது விளங்கும் திருவடிகளைப் பரவ அவனுக்கு முயற்கறையை உடைய சந்திரனின் பெயரைப் பெற்ற சந்திரகாசம் என்ற வாளை ஈந்த அப்பெருமான் திருவடிகளை ஏத்துதலே, ஒருவற்கு அடையத்தக்க கதியாம். |

| | |
|---|---|
| 160. கோலம்முடி நெடுமாலொடு கொய்தாமரை யானும்<br>சீலம்மறி வரிதாயொளி திகழ்வாயநெய்த் தானம்<br>காலம்பெற மலர்நீரவை தூவித்தொழு தேத்தும்<br>ஞாலம்புக ழடியாருடல் உறுநோய்ந– யாவே. | அழகிய முடியை உடைய திருமாலும், கொய்யத்தக்க தாமரைமலர் மேல் விளங்கும் நான்முகனும் தன் இயல்பை அறிதற்கியலாத நிலையில் ஒளிவடிவாய்த் திகழ்ந்த நெய்த்தானப் பெருமானை விடியற் பொழுதிலே நீராட்டி மலர் சூட்டித் தொழுதேத்தும் உலகு புகழ் அடியவரை உடலுறும் நோய்கள் ந–யா. |
| 161. மத்தம்ம– சித்தத்திறை மதியில்லவர் சமணர்<br>புத்தரவர் சொன்னம்மொழி பொருளாநினை யேன்மின்<br>நித்தம்பயில் நிமலன்னுறை நெய்த்தானம தேத்தும்<br>சித்தம்முடை யடியாருடல் செறுநோயடை யாவே. | சித்தத்தில் செருக்குடையவரும், சிறிதும் மதியில்லாதவரும் ஆகிய சமணர்களும், புத்தர்களும் கூறும் பொருளற்ற உரைகளை ஒரு பொருளாக நினையாதீர். நாள்தோறும் நாம் பழகி வழிபடுமாறு, குற்றமற்ற சிவபிரான் உறையும் நெய்த்தானத்தை வணங்கிப் போற்றும் சித்தத்தை உடைய அடியவர் உடலைத் துன்புறுத்தும் நோய்கள் அடையா. |
| 162. தலமல்கிய புனற்காழியுட் டமிழ்ஞானசம் பந்தன்<br>நிலமல்கிய புகழான்மிகு நெய்த்தானனை நிகரில்<br>பலமல்கிய பாடல்–வை பத்தும்மிக வல்லார்<br>சிலமல்கிய செல்வன்னடி சேர்வர்சிவ கதியே. | தலங்களில் சிறந்த புனல் சூழ்ந்த காழிப்பதியுள் தோன்றிய தமிழ் ஞானசம்பந்தன் உலகெங்கும் பரவிய புகழால் மிக்க நெய்த்தானத்துப் பெருமான் மீது பாடிய ஒப்பற்ற பயன்கள் பலவற்றைத் தரும் பாடல்களாகிய இவற்றைக் கற்றுப் பலகாலும் பரவ வல்லவர் சீலம் நிறைந்த செல்வன் அடியாகிய சிவகதியைச் சேர்வர். |

## 16. திருப்புள்ளமங்கை

**பண் : நட்டபாடை** **முதல் திருமுறை பதிக எண் : 16**

| | |
|---|---|
| 163. பாலுந்துறு திரளாயின பரமன்பிர மன்றான்<br>போலுந்திற லவர்வாழ்தரு பொழில்சூழ்புள மங்கைக்<br>காலன்றிற லறச்சாடிய கடவுள்ளிடங் கருதில்<br>ஆலந்துறை தொழுவார்தமை யடையாவினை தானே. | பா–னின்று மிதந்து வரும் வெண்ணெய்த் திரள் போல்பவரும், காலனது வ–மை முழுவதையும் அழித்தவரும், வேதப் புலமையில் நான்முகன் போன்ற அந்தணர் வாழும் பொழில்கள் சூழ்ந்த திருப்புள்ளமங்கையில் விளங்குபவரும் ஆகிய இறைவனை நினைந்து வழிபடுபவர்களை வினைகள் அடையா. |
| 164. மலையான்மகள் கணவன்ம– கடல்சூழ்தரு தண்மைப்<br>புலையாயின களைவானிடம் பொழில்சூழ்புள மங்கைக்<br>கலையான்ம– மறையோரவர் கருதித்தொழு தேத்த<br>அலையார்புனல் வருகாவிரி யாலந்துறை யதுவே. | இமவான் மகளாகிய பார்வதி தேவியின் கணவனும் நீர் நிறைந்த கடல் சூழ்ந்த குளிர்ந்த இவ்வுலகில் உடலோடு பிறக்கும் பிறப்பைக் களைபவனும் ஆகிய சிவபெருமானது இடம், கலைகள் பலவற்றை அறிந்த அறிவால் நிறைந்த மறையவர்கள் மனத்தால் கருதிக் காயத்தால் தொழுது வாயால் ஏத்தி வழிபடுவதும், பொழில் சூழ்ந்ததும் அலைகளோடு கூடி நீர்பெருகி வரும் காவிரிக் கரையிலுள்ளதும் ஆகிய ஆலந்துறை என்னும் தலத்திலுள்ள புள்ளமங்கை என்னும் கோயிலாகும். |

| | |
|---|---|
| **165.** கறையார்மிட றுடையான்கமழ் கொன்றைச்சடை முடிமேல்<br>பொறையார்தரு கங்கைப்புன லுடையான்புள மங்கைச்<br>சிறையார்தரு களிவண்டறை பொழில்சூழ்திரு வாலந்<br>துறையானவ னறையார்கழல் தொழுமின்துதி செய்தே. | விடக்கறை பொருந்திய கண்டத்தை உடையவனும், மணம் கமழும் கொன்றை மலர் அணிந்த சடைமுடியின் மீது சுமையாக அமைந்த கங்கையாற்றை அணிந்தவனுமாகிய சிவபிரானுக்குரியது, சிறகுகளுடன்கூடிய மதுவுண்ட வண்டுகள் ஒ-க்கும் பொழில்களால் சூழப்பட்ட ஆலந்துறையிலுள்ள புள்ளமங்கை என்னும் கோயிலாகும். அக்கோயிலுக்குச் சென்று அப்பெருமானது திருவடிகளை துதி செய்து தொழுவீராக. |
| **166.** தணியார்மதி யரவின்னொடு வைத்தானிட மொய்த்தெம்<br>பணியாயவ னடியார்தொழு தேத்தும்புள மங்கை<br>மணியார்தரு கனகம்மவை வயிரத்திர ளோடும்<br>அணியார்மண லணைகாவிரி யாலந்துறை யதுவே. | தண்ணிய பிறைமதியைப் பாம்போடு முடிமிசை வைத்துள்ள சிவபெருமானது இடம், அடியவர்கள் எமது தொண்டுகளுக்குரியவன் எனத் தொழுது ஏத்துவதும், மணிகளோடு கூடிய பொன்னை வயிரக்குவைகளோடும், அழகிய மணலோடும் கொணர்ந்து சேர்க்கும் காவிரியின் தென்கரையிலுள்ளதுமான ஆலந்துறையில் அமைந்த புள்ளமங்கையாகும். |
| **167.** மெய்த்தன்னுறும் வினைதீர்வகை தொழுமின்செழு மலரின்<br>கொத்தின்னொடு சந்தாரகில் கொணர்காவிரிக் கரைமேல்<br>பொத்தின்னிடை யாந்தைபல பாடும்புள மங்கை<br>அத்தன்நமை யாள்வானிடம் ஆலந்துறை யதுவே. | உயிர் உடலை அடுத்தற்குக் காரணமான வினைகள் நீங்கும் வகையில் பெருமானை நீவிர் வணங்குவீர்களாக. செழுமையான மலர்க் கொத்துக்களை உடைய சந்தனம், அகில் முத-யவற்றைக் கொண்டு வரும் காவிரியாற்றின் கரைமேல் உள்ளதும் பொந்துகளில் ஆந்தைகள் பல தங்கிப் பாடுவதும் ஆகிய ஆலந்துறையில் அமைந்த புள்ளமங்கை என்னும் கோயிலை இடமாகக் கொண்டுள்ள தலைவனாகிய சிவபெருமான் நம்மை ஆள்வான். |
| **168.** மன்னானவ னுலகிற்கொரு மழையானவன் பிழையில்<br>பொன்னானவன் முதலானவன் பொழில்சூழ்புள மங்கை<br>என்னானவ னிசையானவ னிளஞாயிறின் சோதி<br>அன்னானவ னுறையும்மிடம் ஆலந்துறை யதுவே. | உலகிற்குத் தான் ஒருவனே மன்னனாய் விளங்குபவனும், மழையாய்ப் பயிர்களை விளைவிப்பவனும், குற்றமற்ற பொன்னானவனும், உயிர்களுக்கு வாழ்முதலாக உள்ளவனும், எனக்குத் தலைவனாய் இசை வடிவாக விளங்குபவனும், இளஞாயிற்றின் ஒளியைப் போன்ற ஒளியினனுமாகிய சிவபெருமான் உறையும் இடம், ஆலந்துறையிலள்ள புள்ளமங்கையாகும். |
| **169.** முடியார்தரு சடைமேன்முளை யிளவெண்மதி சூடிப்<br>பொடியாடிய திருமேனியர் பொழில்சூழ்புள மங்கைக்<br>கடியார்மலர் புனல்கொண்டுதன் கழலேதொழு தேத்தும்<br>அடியார்தமக் கினியானிடம் ஆலந்துறை யதுவே. | தலைமேல் விளங்கும் சடைமிசை முளை போன்ற இளம்பிறையைச் சூடி வெள்ளிய திருநீறு அணிந்த திருமேனியனாய், மணம் கமழும் மலர்களையும் நீரையும் கொண்டு தன் திருவடிகளை வணங்கி ஏத்தும் அடியார்களுக்கு இனியனாய் விளங்கும் சிவபெருமான் விரும்பி உறையும் இடம் பொழில் சூழ்ந்த ஆலந்துறையிலுள்ள புள்ளமங்கை என்னும் கோயிலாகும். |

| | |
|---|---|
| 170. இலங்கைமனன் முடிதோளிற வெழிலார்திரு விரலால்<br>விலங்கல்–டை யடர்த்தானிடம் வேதம்பயின் றேத்திப்<br>புலன்கள்தமை வென்றார்புக ழவர்வாழ்புள மங்கை<br>அலங்கல்ம– சடையானிடம் ஆலந்துறை யதுவே. | இலங்கை மன்னனாகிய இராணவனின் தலைகளும் தோள்களும் நெரிய, எழுச்சி பொருந்திய அழகிய கால்விரலால் கயிலை மலையிடை அகப்படுத்தி அவனை அடர்த்த சிவபெருமானது இடம், வேதங்களை முறையாகக் கற்றறிந்து ஓதித் துதித்தலோடு புலன்களை வென்ற புகழுடைய அந்தணர் வாழ்வதும் மாலை அணிந்த சடைமுடி உடைய சிவபிரானுக்கு இடமாயிருப்பதும் ஆகிய ஆலந்துறையிலுள்ள புள்ளமங்கையாகும். |
| 171. செறியார்தரு வெள்ளைத்திரு நீற்றின்றிரு முண்டப்<br>பொறியார்தரு புரிநூல்வரை மார்பன்புள மங்கை<br>வெறியார்தரு கமலத்தயன் மாலுந்தனை நாடி<br>அறியாவகை நின்றானிடம் ஆலந்துறை யதுவே. | வெண்மையான திருநீறு மூன்று பட்டைகளாய்ச் செறிய உத்தம இலக்கணம் ஆகிய மூன்று வரி பொருந்திய, முப்புரிநூல் அணிந்த மலை போன்ற திண்ணிய மார்பினை உடையவனும் மணம் கமழும் தாமரை மலர்மேல் உறையும் நான்முகன், திருமால் ஆகியோர் தன்னைத் தேடி அறியாவகை ஓங்கி நின்றவனுமாகிய சிவபெருமானுக்கு உரிய இடம், ஆலந்துறையிலுள்ள புள்ள மங்கையாகும். |
| 172. நீதியறி யாதாரமண் கையரொடு மண்டைப்<br>போதியவ ரோதும்முரை கொள்ளார்புள மங்கை<br>ஆதியவர் கோயில்திரு வாலந்துறை தொழுமின்<br>சாதிம்மிகு வானோர்தொழு தன்மைபெற லாமே. | நீதி அறியாத அமணராகிய கீழ் மக்களும் பிச்சைப் பாத்திரத்தைக் கையில் ஏந்திப் போதிமரத்தடியில் உறையும் புத்த மதத்தினரும் கூறும் உரைகளை மெய்ம்மை எனக் கொள்ளாது எல்லாப் பொருள்கட்கும் ஆதியானவனாகிய ஆலந்துறைப் புள்ளமங்கைக் கோயி–ல் உறையும் இறைவனைத் தொழுமின்; பல்வேறு பிரிவினராகிய தேவர்கள் தொழும் தன்மை பெறலாம். |
| 173. பொந்தின்னிடைத் தேனூறிய பொழில்சூழ்புள மங்கை<br>அந்தண்புனல் வருகாவிரி யாலந்துறை யானைக்<br>கந்தம்ம– கமழ்காழியுட் கலைஞானசம் பந்தன்<br>சந்தம்ம– பாடல்சொ– யாடத்தவ மாமே. | மரப்பொந்துகளில் தேனீக்கள் சேகரித்த தேன் மிகுதியான அளவில் கிடைக்கும் பொழில்கள் சூழ்ந்ததும், அழகிய தண்மையான நீரைக் கொணர்ந்துதரும் காவிரிக்கரையில் உள்ளதும் ஆகிய ஆலந்துறைப் புள்ளமங்கை இறைவனை, மணம் நிறைந்து கமழும் காழிப்பதியில் தோன்றிய கலை நலம் உடைய ஞானசம்பந்தன் பாடிய சந்தம் நிறைந்த இத்திருப்பதிகப் பாடல்களை ஓதிப் பரவசமாய் ஆடத் தவம் கைகூடும். |

## 17. திரு இடும்பாவனம்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 17

| | |
|---|---|
| 174. மனமார்தரு மடவாரொடு மகிழ்மைந்தர்கள் மலர்தூய்த்<br>தனமார்தரு சங்கக்கடல் வங்கத்திர ளுந்திச்<br>சினமார்தரு திறல்வாளெயிற் றரக்கன்மிகு குன்றில்<br>இனமாதவ ரிறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே. | மனத்தால் விரும்பப்பெற்ற மனைவியரோடு மகிழ்ச்சிமிக்க இளைஞர்களால் மலர்தூவி வழிபட்டுச் செல்வம் பெறுதற்குரியதாய் விளங்குவதும், சங்குகளை உடைய கட–ல் உள்ள கப்பல்களை அலைகள் உந்தி வந்து சேர்ப்பிப்பதும் ஆகிய இடும்பாவனம், சினம் மிக்க வ–ய ஒளிபொருந்திய பற்களை உடைய இடும்பன் என்னும் அரக்கனுக்குரிய வளம்மிக்க குன்றளூர் என்னும் ஊரில் முனிவர் குழாங்களால் வணங்கப் பெறும் சிவபிரானுக்குரிய இடம் ஆகும். |

| | |
|---|---|
| 175. மலையார்தரு மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி<br>நிலையார்தரு நிமலன்வ– நிலவும்புக ழொளிசேர்<br>கலையார்தரு புலவோரவர் காவன்மிகு குன்றில்<br>இலையார்தரு பொழில்சூழ்தரு மிடும்பாவன மிதுவே. | இமவான் மகளாய் மலையிடைத் தோன்றி வளர்ந்த பார்வதி தேவியை ஒரு பாகமாகக் கொண்டு மகிழ்ந்து நிலையாக வீற்றிருந்தருளும் குற்றமற்ற சிவபிரானது வென்றி விளங்குவதும், புகழாகிய ஒளி மிக்க கலை வல்ல புலவர்கள் இடைவிடாது பயில்வதால் காவல்மிக்கு விளங்குவதுமான குன்றளூரை அடுத்துள்ள இலைகள் அடர்ந்த பொழில் சூழ்ந்த இடும்பாவனம் இதுவேயாகும். |
| 176. சீலம்மிகு சித்தத்தவர் சிந்தித்தெழு மெந்தை<br>ஞாலம்மிகு கடல்சூழ்தரு முலகத்தவர் நலமார்<br>கோலம்மிகு மலர்மென்முலை மடவார்மிகு குன்றில்<br>ஏலங்கமழ் பொழில்சூழ்தரும் இடும்பாவன மிதுவே. | தவ ஒழுக்கத்தால் மேம்பட்ட முனிவர்களால் சிந்தித்து வணங்கப்பெறும் எம் தந்தையாகிய சிவபிரான் எழுந்தருளிய தலம், நிலப்பரப்பினும் மிக்க பரப்புடைய கடலால் சூழப்பட்ட இவ்வுலகச் சான்றோர்களும், நற்குணங்களும் அழகும் மலர் போலும் மென்மையான தனங்களும் உடைய பெண்களும் மிக்குள்ள குன்றளூரைச் சார்ந்த ஏல மணங்கமழும் பொழில் சூழ்ந்த இடும்பாவனம் எனப்படும் தலம் இதுவேயாகும். |
| 177. பொழிலார்தரு குலைவாழைக ளெழிலார்திகழ் போழ்தில்<br>தொழிலான்மிகு தொண்டரவர் தொழுதாடிய முன்றில்<br>குழலார்தரு மலர்மென்முலை மடவார்மிகு குன்றில்<br>எழிலார்தரு மிறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே. | குலைகள் தள்ளிய வாழைகள் செழித்துள்ள பொழில்கள் சூழப் பெற்றதும், அழகு திகழும் காலை மாலைப் பொழுதுகளில் பணி செய்வதால் சிறப்பு மிகுந்து விளங்கும் தொண்டர்கள் தொழுது ஆடி மகிழும் முன்றிலை உடையதும் மலர் சூடிய கூந்தலை உடைய மென்முலை மடவார் சூழ்ந்துள்ளதுமான குன்றளூரை அடுத்துள்ள இடும்பாவனம் அழகுக்கு அழகு செய்யும் இறைவர்க்குரிய இடமாகும். |
| 178. பந்தார்விர லுமையாளொரு பங்காகங்கை முடிமேல்<br>செந்தாமரை மலர்மல்கிய செழுநீர்வயற் கரைமேல்<br>கொந்தார்மலர் புன்னைமகிழ் குரவங்கமழ் குன்றில்<br>எந்தாயென விருந்தானிடம் இடும்பாவன மிதுவே. | பந்தாடும் கை விரல்களை உடைய உமையவள் பங்கனே எனவும், கங்கை அணிந்த சடைமுடியோடு செந்தாமரை மலர்கள் நிறைந்த நீர் நிரம்பிய வளமான வயல்களின் கரைமேல் கொத்துக்களாக மலர்ந்த புன்னை, மகிழ், குரா ஆகியவற்றின் மணம் கமழ்கின்ற குன்றளூரில் எழுந்தருளிய எந்தாய் எனவும், போற்ற இருந்த இறைவனது இடம், இடும்பாவனம். |
| 179. நெறிநீர்மையர் நீள்வானவர் நினையுந்நினை வாகி<br>அறிநீர்மையி லெய்தும்மவர்க் கறியும்மறி வருளிக்<br>குறிநீர்மையர் குணமார்தரு மணமார்தரு குன்றில்<br>எறிநீர்வயல் புடைசூழ்தரு மிடும்பாவன மிதுவே. | தவ ஒழுக்கத்தால் சிறந்த முனிவர்கள், உயர்ந்த தேவர்கள் ஆகியோர் நினையும் நினைவுப் பொருளாகி, ஞானத்தால் தொழும் மேலான ஞானியர்கட்குத் தன்னை அறியும் அறிவை நல்கிச் சிவ–ங்கம் முதலான குறிகளில் இருந்து அருள் புரிபவனாகிய சிவபெருமான் இடம், தூய சிந்தனையைத் தரும் மணம் கமழ்கின்ற குன்றளூரில் வரப்பை மோதும் நீர் நிரம்பிய வயல்கள் புடை சூழ்ந்து விளங்கும் இடும்பாவனமாகிய இத்தலமேயாகும். |

| | |
|---|---|
| 180. நீறேறிய திருமேனியர் நிலவும்முல கெல்லாம்<br>பாறேறிய படுவெண்டலை கையிற்ப– வாங்காக்<br>கூறேறிய மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி<br>ஏறேறிய விறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே. | நீறணிந்த திருமேனியராய், விளங்கும் உலகெங்கணும் சென்று, பருந்து உண்ணவரும் தசையோடு கூடிய காய்ந்த பிரமகபாலத்தைக் கையில் ஏந்தி அன்பர்கள் இடும் உணவைப் பெற்று உமையம்மையைத் தன் மேனியில் ஒரு கூறாகிய இடப்பாகமாக ஏற்று மகிழ்ந்து விடைமீது வரும் சிவபெருமானுக்குரிய இடமாகிய இடும்பாவனம் இதுவேயாகும். |
| 181. தேரார்தரு திகழ்வாளெயிற் றரக்கன்சிவன் மலையை<br>ஓராதெடுத் தார்த்தான்முடி யொருபஃதவை நெரித்துக்<br>கூரார்தரு கொலைவாளொடு குணநாமமுங் கொடுத்த<br>ஏரார்தரு மிறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே. | வானவெளியில் தேர்மிசை ஏறிவந்த ஒளி பொருந்திய வாளையும் பற்களையும் உடைய அரக்கனாகிய இராவணன், சிவபிரான் எழுந்தருளிய கயிலை மலையின் சிறப்பை ஓராது, தன் தேர் தடைப்படுகிறது என்ற காரணத்திற்காக மலையைப் பெயர்த்துச் செருக்கால் ஆரவாரம் செய்ய, அவன் பத்துத் தலைமுடிகளையும் நெரித்தபின் அவன் வருந்திவேண்ட, கருணையோடு கூரிய கொலைவாள், பிற நன்மைகள், இராவணன் என்ற பெயர் ஆகியவற்றைக் கொடுத்தருளிய அழகனாகிய இறைவற்கு இடம் இடும்பாவனம். |
| 182. பொருளார்தரு மறையோர்புகழ் விருத்தர்பொ–ம–சீர்த்<br>தெருளார்தரு சிந்தையொடு சந்தம்மலர்பலதூய்<br>மருளார்தரு மாயன்னயன் காணார்மயலெய்த<br>இருளார்தரு கண்டர்க்கிடம் இடும்பாவனமிதுவே. | தருக்கு மிகுந்த மாயனும் அயனும் காணாது மயங்கப் பொருள் நிறைந்த வேதங்களைக் கற்றுணர்ந்த அந்தணர்களால் புகழ்ந்து போற்றப் பெறும் பழமையானவரும், புகழ்மிக்க அம்மறையோர்களால் தெளிந்த சிந்தையோடு பல்வகை நிறங்களுடன் கூடிய மலர்களைத் தூவி வழிபடப் பெறுபவரும் ஆகிய அருள் நிறைந்த கண்டத்தை உடைய சிவபிரானுக்குரிய இடமாக விளங்கும் இடும்பாவனம், இதுவேயாகும். |
| 183. தடுக்கையுட னிடுக்கித்தலை பறித்துச்சமண் நடப்பார்<br>உடுக்கைபல துவர்க்கூறைகள் உடம்பிட்டுழல் வாரும்<br>மடுக்கண்மலர் வயல்சேர்செந்நெல் ம–நீர்மலர்க் கரைமேல்<br>இடுக்கண்பல களைவானிடம் இடும்பாவன மிதுவே. | பனை ஓலையால் செய்த தடுக்கைத் தம் கையில் இடுக்கிக்கொண்டு தலையிலுள்ள உரோமங்களைப் பறித்து முண்டிதமாக நடக்கும் சமணரும், உடுத்துவதற்குரிய காவியுடைகளை அணிந்து திரியும் புத்தரும் அறிய இயலாதவனாய், துன்பம் நீக்கி இன்பம் அருளும் இறைவனது இடம், தாமரை செங்கழுநீர் போன்ற மலர்களை உடைய மடுக்களும், செந்நெல் வயல்களும் சூழ்ந்த, நீர்மலர் மிக்க நீர்நிலைகளின் கரைமேல் விளங்கும் இடும்பாவனம் இதுவேயாகும். |

| | |
|---|---|
| 184. கொடியார்நெடு மாடக்குன்ற ளூரிற்கரைக் கோல<br>இடியார்கட லடிவீழ்தரு மிடும்பாவனத் திறையை<br>அடியாயுமந் தணர்காழியுள் அணிஞானசம் பந்தன்<br>படியாற்சொன்ன பாடல்சொலப் பறையும் வினை தானே. | கொடிகள் கட்டிய நீண்ட மாடங்களோடு கூடிய குன்றளூரில் கரைமீது இடியோசையோடு கூடிய அழகிய கடல் தன் அலைகளால் அடிவீழ்ந்து இறைஞ்சும் இடும்பாவனத்து இறைவனை, திருவடிகளையே சிந்தித்து ஆய்வு செய்யும் அந்தணர்கள் வாழும் காழிப் பதிக்கு அணியாய ஞானசம்பந்தன் முறையோடு அருளிய இப்பாடல்களை ஓத, வினைகள் நீங்கும். தானே அசை. |

## 18. திருநின்றியூர்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 18

| | |
|---|---|
| 185. சூலம்படை சுண்ணப்பொடி சாந்தஞ்சுடு நீறு<br>பாலம்மதி பவளச்சடை முடிமேலது பண்டைக்<br>காலன்வ– கா–ன்னொடு போக்கிக்கடி கமழும்<br>நீலம்மலர்ப் பொய்கைநின்றி யூரின்னிலை யோர்க்கே. | முன்னொரு காலத்தில் காலனின் வ–மையைக் காலால் உதைத்துப் போக்கி, மணம் கமழும் நீல மலர்கள் மலர்ந்த பொய்கைகளை உடைய திருநின்றியூரில் நிலையாக எழுந்தருளியுள்ள இறைவற்குப் படைக்கலன் சூலம், சுண்ணப்பொடியும், சாந்தமும், திருநீறே பால் போலும் வெண்மையான பிறைமதி அவரது செந்நிறச் சடைமுடியின் மேலது. |
| 186. அச்சம்மிலர் பாவம்மிலர் கேடும்மில ரடியார்<br>நிச்சம்முறு நோயும்மிலர் தாமுந்நின்றி யூரில்<br>நச்சம்மிட றுடையார்நறுங் கொன்றைநயந் தாளும்<br>பச்சம்முடை யடிகள்திருப் பாதம்பணி வாரே. | நஞ்சை மிடற்றிலே நிறுத்தித் தேவர்களைக் காத்தருளியவரும், மணம் கமழும் கொன்றை மலர்களை விரும்பிச் சூடியவரும், தம்மை வழிபடும் அடியவர்களை ஆட்கொண்டருளும் அன்புடையவரும் ஆகிய நின்றியூரில் விளங்கும் இறைவரது பாதம் பணிவார் அச்சம், பாவம், கேடு, நாள்தோறும் வரும் நோய் ஆகியன இலராவர். |
| 187. பறையின்னொ– சங்கின்னொ– பாங்காரவு மார<br>அறையும்மொ– யெங்கும்மவை யறிவாரவர் தன்மை<br>நிறையும்புனல் சடைமேலுடை யடிகள்நின்றி யூரில்<br>உறையும்மிறை யல்லதென துள்ளம் உணராதே. | பறையடிக்கும் ஒ–, சங்கு முழங்கும் முழக்கம், பக்கங்களிலெல்லாம் மிகவும் ஒ–க்கும் ஏனைய ஒ–கள் ஆகியவற்றில் இறைவனது நாத தத்துவத்தை அறிவோர் உணர்வர். நிறைந்த கங்கைப் புனலைச் சடைமிசை உடையவராய் நின்றியூரில் உறையும் அவ்விறைவரை அல்லது என் உள்ளம் பிறபொருள்களுள் ஒன்றனையும் உணராது. |
| 188. பூண்டவ்வரை மார்பிற்புரி நூலன்விரி கொன்றை<br>ஈண்டவ்வத னோடும்மொரு பாலம்மதி யதனைத்<br>தீண்டும்பொழில் சூழ்ந்ததிரு நின்றியது தன்னில்<br>ஆண்டகழல் தொழலல்லது அறியாரவ ரறிவே. | அணிகலன்களைப் பூண்ட மலைபோன்ற மார்பில் முப்புரி நூலை அணிந்து, விரிந்த கொன்றை மலர் மாலையையும் அதனோடும் பொருந்தப் பால் போன்ற வெண்மையான திங்களையும் சூடி, வானத்தைத் தீண்டும் பொழில்கள் சூழ்ந்த திருநின்றியூரில் எழுந்தருளி, நம்மை ஆண்டருளிய அவ்விறைவன் திருவடிகளைத் தொழுதல் அல்லது, அவன் இயல்புகளை அடியவர் எவரும் அறியார். |

| | |
|---|---|
| 189. குழ–ன்னிசை வண்டின்னிசை கண்டுகுயில் கூவும்<br>நிழ–ன்னெழில் தாழ்ந்தபொழில் சூழ்ந்தநின்றி யூரில்<br>அழ–ன்வல னங்கையது வேந்தியன லாடும்<br>கழ–ன்னொ– யாடும்புரி கடவுள்களை கண்ணே. | குழ–சை வண்டிசை ஆகியவற்றைக் கேட்டுக் குயில்கள் கூவுவதும், நிழ–ன் அழகு தங்கியதுமாகிய பொழில்களால் சூழப்பட்ட நின்றியூரிடத்து அழலை வலத் திருக்கரத்தில் ஏந்தி அன–டை நின்று கழல்களின் ஒ–கள் கேட்குமாறு ஆடும் இறைவன் நமக்குக் களைகண் ஆவான். |
| 190. மூரன்முறு வல்வெண்ணகை யுடையாளொரு பாகம்<br>சாரன்மதி யதனோடுடன் சலவஞ்சடை வைத்த<br>வீரன்ம– யழகார்பொழில் மிடையுந்திரு நின்றி<br>யூரன்கழ லல்லாதென துள்ளம்முண ராதே. | புன்முறுவலைத் தரும் வெண்மையான பற்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு, சடைமுடியில் சார்ந்துள்ள பிறைமதியோடு கங்கையை வைத்துள்ள வீரனும் அழகு ம–ந்த பொழில்கள் செறிந்த திருநின்றியூரில் எழுந்தருளியவனுமாகிய சிவபிரான் திருவடிகளை அல்லாது எனது உள்ளம் வேறு ஒன்றையும் உணராது. |
| 191. பற்றியொரு தலைகையினி லேந்திப்ப– தேரும்<br>பெற்றியது வாகித்திரி தேவர்பெரு மானார்<br>சுற்றியொரு வேங்கையத ளோடும்பிறை சூடும்<br>நெற்றியொரு கண்ணார்நின்றி யூரின்னிலை யாரே. | பிரமனது தலைகளில் ஒன்றைப் பறித்து அதனைக் கையினில் ஏந்திப் ப–கேட்கும் இயல்பினராய்த் திரிகின்ற தேவர் தலைவரும் பு–த்தோலை இடையில் சுற்றியிருப்பதோடு முடியில் பிறைமதியைச் சூடியவரும், நெற்றியில் ஒரு கண்ணை உடையவரும் ஆகிய பெருமானார் திருநின்றியூரின்கண் நிலையாக எழுந்தருளியுள்ளார். |
| 192. நல்லம்மலர் மேலானொடு ஞாலம்மது வுண்டான்<br>அல்லரென வாவரென நின்றும்மறி வரிய<br>நெல்–ன்பொழில் சூழ்ந்தநின்றி யூரின்னிலை யாரெம்<br>செல்வரடி யல்லாதென சிந்தையுண ராதே. | நல்ல தாமரை மலர்மேல் உறையும் நான்முகனோடு உலகைத் தன் வயிற்றகத்து அடக்கிக் காட்டிய திருமாலும், சிவபிரானே முழுமுதற் பொருள் ஆவர் எனவும் அல்லர் எனவும் கூறிக்கொண்டு தேடிக் காணுதற்கரியவராய் நின்றவரும் நெல்வயல்களால் சூழப்பட்ட நின்றியூரில் நிலையாக எழுந்தருளிய எம் செல்வருமாகிய சிவபிரான் திருவடிகளை அல்லது என் சிந்தை வேறொன்றையும் உணராது. |
| 193. நெறியில்வரு பேராவகை நினையாநினை வொன்றை<br>அறிவில்சமண் ஆதருரை கேட்டும்மய ராதே<br>நெறியில்லவர் குறிகள்நினை யாதேநின்றி யூரில்<br>மறியேந்திய கையானடி வாழ்த்தும்மது வாழ்த்தே. | சமய நெறியில் பயில்வதால் பேராமலும் மறவாமலும் நினைக்கும் முழுமுதற்பொருளை அறியும் அறிவற்ற சமணர்களாகிய நெறியற்ற கீழ்மக்களின் உரைகளைக் கேட்டு மயங்காமலும், தமக்கென்று உண்மை நெறியல்லாத புறச் சமயிகளின் அடையாளங்களைக் கருதாமலும் நின்றியூரில் மான் ஏந்திய கையனாய் விளங்கும் இறைவன் திருவடிகளை வாழ்த்துவதே வாழ்த்தாகும். |

| | |
|---|---|
| 194. குன்றம்மது வெடுத்தானுடல் தோளுந்நெரி வாக<br>நின்றங்கொரு விரலாலுற வைத்தானின்றி யூரை<br>நன்றார்தரு புக—த்தமிழ் ஞானம்மிகு பந்தன்<br>குன்றாத்தமிழ் சொல்லக்குறை வின்றிநிறை புகழே. | கயிலைமலையை எடுத்த இராவணனின் உடல் தோள் ஆகியன நெரியத் தன் கால்விரல் ஒன்றால் ஊன்றியவனது நின்றியூர் மீது, நன்மைகளையே செய்யும் புக—ப் பதியில் தோன்றிய தமிழ் ஞானசம்பந்தன் உரைத்த திருவருள் நலம் குன்றாத இத்திருப்பதிகப் பாடல்களை உரைப்பதனால் குறைவின்றிப் புகழ் நிறையும். |

## 19. திருக்கழுமலம்

பண் : நட்டபாடை

முதல் திருமுறை பதிக எண் : 19

| | |
|---|---|
| 195. பிறையணி படர்சடை முடியிடை பெருகிய புனலுடை யவனிறை<br>இறையணி வளையிணை முலையவள் இணைவன தெழிலுடை யிடவகை<br>கறையணி பொழினிறை வயலணி கழுமல மமர்கன லுருவினன்<br>நறையணி மலர்நறு விரைபுல்கு நலமா— கழல்தொழன் மருவுமே. | பிறை அணிந்த விரிந்த சடைமுடியின்கண் பெருகிவந்த கங்கையை உடைய இறைவனும், முன்கையில் அழகிய வளையலை அணிந்த உமையம்மையின் இரண்டு தனபாரங்களோடு இணைபவனும், அழகிய இடவகைகளில் ஒன்றான நிழல்மிக்க பொழில்கள் நிறைந்ததும் நெல் வயல்கள் அணி செய்வதுமாகிய திருக்கழுமலத்தில் எழுந்தருளியுள்ள அழல் போன்ற சிவந்த மேனியனுமாகிய சிவபிரானின் தேன்நிறைந்த மலர்களின் நறுமணம் செறிந்த அழகிய திருவடிகளைத் தொழுதல் செய்மின்கள். |
| 196. பிணிபடு கடல்பிற விகளறல் எளிதுள ததுபெரு கியதிரை<br>அணிபடு கழுமல மினிதமர் அனலுரு வினனவிர் சடைமிசை<br>தணிபடு கதிர்வள ரிளமதி புனைவனை யுமைதலை வனைநிற<br>மணிபடு கறைமிட றனைநலம் ம—கழ —ணைதொழன் மருவுமே. | இடைவிடாமல் நம்மைப் பிணிக்கும் கடல் போன்ற பிறவிகள் நீங்குதல் எளிதாகும். அப்பிறவிக்கடல் மிகப் பெரிதாகிய துன்ப அலைகளை உடையது. ஆத—ன் அழகிய கழுமலத்துள் இனிதாக அமர்கின்ற அழலுருவினனும் விரிந்த சடைமீது குளிர்ந்த கிரணங்களை உடைய பிறைமதியைச் சூடியவனும், உமையம்மையின் மணாளனும், நீலமணிபோலும் நிறத்தினை உடைய கறைக் கண்டனும் ஆகிய சிவபிரானின் நலம் நிறைந்த திருவடிகளைத் தொழுதல் செய்மின். |
| 197. வரியுறு பு—யத ளுடையினன் வளர்பிறை யொளிகிளர் கதிர்பொதி<br>விரியுறு சடைவிரை புரைபொழில் விழவொ— ம—கழு மலமமர்<br>எரியுறு நிறவிறை வனதடி யிரவொடு பகல்பர வுவர்தம<br>தெரியுறு வினைசெறி கதிர்முனை யிருள்கெட நனிநினை வெய்துமதே. | கோடுகள் பொருந்திய பு—யின் தோலை ஆடையாக உடுத்தவனாய், ஒளி மிக்குத் தோன்றும் கிரணங்களையுடைய வளர்பிறையை அணிந்த சடையை உடையவனாய், மணம் பொருந்திய பொழில்கள் சூழ்ந்ததும் திருவிழாக்களின் ஒ— நிறைந்ததும் ஆகிய கழுமலத்துள் அழல் வண்ணனாய் விளங்கும் இறைவன் திருவடிகளை, இரவும் பகலும் பரவுகின்றவர்களின் வருத்துகின்ற வினைகள் மிக்க ஒளியை உடைய ஞாயிற்றின் முன் இருள் போலக் கெட்டொழியும். ஆதலால், அப்பெருமான் திருவடிகளை நன்றாக நினையுங்கள். |

| | |
|---|---|
| 198. வினைகெட மனநினை வதுமுடி கெனில்நனி தொழுதெழு குலமதி<br>புனைகொடியிடைபொருள் தருபடு களிறின துரிபுதை யுட–னன்<br>மனைகுட வயிறுடை யனசில வருகுறள் படையுடை யவன்ம–<br>கனைகட லடைகழு மலமமர் கதிர்மதி யினனதிர் கழல்களே. | உயர்ந்த பிறை மதி, கொடிபோன்ற இடையையுடைய கங்கை, மந்திரப்பொருளால் உண்டாக்கப்பட்டுத் தோன்றிய யானையின் தோல் இவற்றை உடைய உட–னனும், வீட்டுக் குடம் போலும் வயிற்றினை உடைய பூதங்கள் சிலவற்றின் படையை உடையவனும், ஆரவாரம் நிறைந்த கடற்கரையை அடுத்த கழுமலத்துள் ஞாயிறு திங்கள் ஆகியவற்றைக் கண்களாகக் கொண்டு அமர்ந்தவனுமாகிய சிவபெருமானின் ஒ–க்கும் கழற் சேவடிகளை, வினைகள் கெடவும் மனத்தில் நினைவது முடியவும் வேண்டின் நன்கு தொழுதெழுக. |
| 199. தலைமதி புனல்விட வரவிவை தலைமைய தொருசடை யிடையுடன்<br>நிலைமரு வவொரிட மருளின னிழன்மழு வினொடழல் கணையினன்<br>மலைமரு வியசிலை தனின்மதி லெரியுண மனமரு வினனல<br>கலைமரு வியபுற வணிதரு கழுமல மினிதமர் தலைவனே. | நல்ல கலைமான்கள் பொருந்திய சிறுகாடுகள் புறத்தே அழகு பெறச் சூழ்ந்துள்ள கழுமலத்தில் இனிதாக எழுந்தருளிய இறைவன், ஒரு நாட்பிறை, கங்கை, நஞ்சு பொருந்திய பாம்பு ஆகியவற்றுக்குத் தன் தலைமையான சடைக் காட்டின் நடுவில் ஒன்றாக இருக்குமாறு இடம் அருளியவன். ஒளி பொருந்திய மழுவோடு அழல் வடிவான அம்பினை மேருமலையாகிய வில்–ல் பூட்டி எய்தலால் திரிபுரங்கள் எரியுண்ணுமாறு மனத்தால் சிந்தித்தவன். |
| 200. வரைபொரு திழியரு விகள்பல பருகொரு கடல்வரி மண–டை<br>கரைபொரு திரையொ– கெழுமிய கழுமல மமர்கன லுருவினன்<br>அரைபொரு பு–யத ளுடையினன் அடியிணை தொழவரு வினையெனும்<br>உரைபொடி படவுறு துயர்கெட வுயருல கெய்தலொரு தலைமையே. | மலைகளைப் பொருது இழிகின்ற அருவிகள் பலவற்றைப் பருகுகின்ற பெரிய கட–னை அடுத்துள்ள வரிகளாக அமைந்த மணற் பரப்பில் அமைந்ததும், கரையைப் பொரும் கடல் அலைகளின் ஓசை எப்போதும் கேட்கின்றதுமாகிய கழுமலத்துள் எழுந்தருளியுள்ளவனும், கனல் போலும் சிவந்த திருமேனியனும், இடையிலே கட்டிய பு–த்தோலை உடையவனுமாகிய சிவபிரானின் இணை அடிகளைத் தொழின், போக்குதற்கு அரியனவாகிய வினைகள் என்னும் வார்த்தையும் பொடிபட, மிக்க துயர்கள் நீங்க உயர்ந்த உலகமாகிய வீட்டுலகத்தைப் பெறுதல் நிச்சயமாகும். |
| 201. முதிருறி கதிர்வள ரிளமதி சடையனை நறநிறை தலைதனில்<br>உதிருறு மயிர்பிணை தவிர்தசை யுடைபு– யதளிடை யிருள்கடி<br>கதிருறு சுடரொளி கெழுமிய கழுமல மமர்மழு ம–படை<br>அதிருறு கழலடி களதடி தொழுமறி வலதறி வறியமே. | மலர்கள் சூடுவதால் தேன் நிறைந்துள்ள திருமுடியில் உலகிற் பயிர்களை முதிர்விக்கும் கிரணங்கள் வளர்கின்ற மதியைச் சூடிய சடையை உடையவனாய், உதிரத்தக்க மயிர் பிணைந்து தசை தவிர்ந்துள்ள பு–த்தோலை உடுத்த இடையை உடையவனாய், இருளை நீக்கும் கதிரவனின் சுடரொளி பொருந்திய மழுவாகிய படையை ஏந்திக் கழுமலத்துள் அமர்கின்ற பெருமானின் கழல்கள் அணிந்த திருவடிகளைத் தொழும் அறிவல்லது பிறவற்றை அறியும் அறிவை அறியோம். |

| | |
|---|---|
| **202.** கடலென நிறநெடு முடியவன் அடுதிறல் தெறவடி சரணென<br>அடனிறை படையரு ளியபுகழ் அரவரை யினனணி கிளர்பிறை<br>விடநிறை மிடறுடை யவன்விரி சடையவன் விடையுடை யவனுமை<br>உடனுறை பதிகள்தன் மறுகுடை யுயர்கழு மலவிய நகரதே. | கடல் போன்ற கரிய நிறத்தினனும், நீண்ட முடியை அணிந்தவனும் ஆகிய இராவணனின் வ–மை கெடுமாறு செய்து பின் அவன் திருவடிகளே சரண் என வேண்ட அவனுக்கு வ–மை மிக்க வாட்படை அருளிய புகழுடையவனும், பாம்பை இடையில் கட்டியவனும், அழகுமிக்க பிறையை அணிந்தவனும், விடம் தங்கிய கண்டத்தை உடையவனும், விரித்த சடையை உடையவனும், விடை ஊர்தியனும் ஆகிய பெருமான் உமையம்மையோடு உறையும் பதி, கடல் அலைகளையுடைய உயர்ந்த கழுமலம் எனப்படும் பெரிய நகராகும். |
| **203.** கொழுமல ருறைபதி யுடையவன் நெடியவ னெனவிவர் களுமவன்<br>விழுமையை யளவறி கிலரிறை விரைபுணர் பொழிலணி விழவமர்<br>கழுமல மமர்கன லுருவினன் அடியிணை தொழுமவ ரருவினை<br>எழுமையுமிலநில வகைதனில் எளிதிமை யவர்விய னுலகமே. | செழுமையான தாமரை மலரை உறையும் இடமாகக் கொண்ட பிரமன், திருமால் ஆகிய இவர்களும் சிவபெருமானது சிறப்பைச் சிறிதும் அறியார். அப்பெருமான், மணம் பொருந்திய பொழில்கள் சூழப் பெற்றதும் அழகிய விழாக்கள் பல நிகழ்வதுமாகிய கழுமலத்துள் எழுந்தருளிய அழல் உருவினன். அப்பெருமானுடைய திருவடி இணைகளைத் தொழுபவர்களின் நீங்குதற்கரிய வினைகள் இப்பூவுலகில் ஏழு பிறப்பின்கண்ணும் இலவாகும். இமையவர்களின் பெரிய உலகத்தை அடைதல் அவர்கட்கு எளிதாகும். |
| **204.** அமைவன துவரிழு கியதுகில் அணியுடை யினரம ணுருவர்கள்<br>சமையமு மொருபொரு ளெனுமவை சலநெறி யனவற வுரைகளும்<br>இமையவர் தொழுகழு மலமமர் இறைவன தடிபர வுவர்தமை<br>நமையல வினைநல னடைத–ல் உயர்நெறி நனிநணு குவர்களே. | தமக்குப் பொருந்துவனவாகிய மருதந்துவர் ஊட்டின ஆடையை அணிந்தவர்களாகிய புத்தர்களும், ஆடையற்ற சமணர்களும் ஒரு பொருள் எனக்கூறும் சமய நெறிகளும் அறவுரைகளும் ஆகிய அவை வஞ்சனை மார்க்கத்தை வகுப்பன என உணர்ந்து தேவர்களால் தொழப்படுகின்ற கழுமலத்துள் எழுந்தருளிய இறைவன் திருவடிகளைப் பரவுவார்களை வினைகள் வருத்தா. நலன் அடைத–ன் உயர்நெறிகளை அவர்கள் அடைவார்கள். |
| **205.** பெருகிய தமிழ்விர கினன்ம– பெயரவ னுறைபிணர் திரையொடு<br>கருகிய நிறவிரி கடலடை கழுமல முறைவிட மெனநனி<br>பெருகிய சிவனடி பரவிய பிணைமொழி யனவொரு பதுமுடன்<br>மருவிய மனமுடை யவர்மதி யுடையவர் விதியுடை யவர்களே. | பரந்துபட்ட நூல்களைக் கொண்டுள்ள தமிழ் மொழியை ஆழ உணர்ந்தவனும், மிக்க புகழாளனும் ஆகிய ஞானசம்பந்தன் நீர்த்துளிகளோடு மடங்கும் அலைகளுடன் கருமை நிறம் வாய்ந்த கட–ன் கரையில் விளங்கும் கழுமலம் இறைவனது உறைவிடம் என மிகவும் புகழ் பரவிய சிவபெருமானின் திருவடிகளைப் போற்றிப் பாடிய அன்பு பிணைந்த இப்பத்துப் பாடல்களையும் ஓதி மனம் பொருந்த வைக்கும் அன்பர்கள், நிறைந்த ஞானமும் நல்லூழும் உடையவராவர். |

## 20. திருவீழிமிழலை

பண் : நட்டபாடை — முதல் திருமுறை பதிக எண் : 20

| | |
|---|---|
| 206. தடநில வியமலை நிறுவியொர் தழலுமிழ் தருபட வரவுகொ<br>டடலசு ரரொடம ரர்களலை கடல்கடை வுழியெழு மிகுசின<br>விடமடை தருமிட றுடையவன் விடைமிசை வருமவ<br>னுறைபதி<br>திடமலி தருமறை முறையுணர் மறையவர் நிறைதிரு<br>மிழலையே. | பெரியதாகிய மந்தரமலையை மத்தாக நிறுத்தி, அழல் போலும் கொடிய நஞ்சை உமிழும் படத்தோடு கூடிய வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகக் கட்டி வலிய அசுரர்களோடு தேவர்கள் அலைகள் பொருந்திய திருப்பாற்கடலைக் கடைந்த விடத்துத் தோன்றிய உக்கிரமான ஆலகாலம் என்னும் நஞ்சு அடைந்த கண்டத்தை உடையவனும், விடையின்மீது வருபவனும் ஆகிய சிவபிரான் உறையும் தலம், நான்மறைகளை முறையாக ஓதி உணர்ந்த உறுதி வாய்ந்த மறையவர் நிறைந்துள்ள திருவீழிமிழலையாகும். |
| 207. தரையொடு திவிதல நலிதரு தகுதிற லுறுசல தரனது<br>வரையன தலைவிசை யொடுவரு திகிரியை யரிபெற<br>வருளினன்<br>உரைமலி தருசுர நதிமதி பொதிசடை யவனுறை பதிமிகு<br>திரைமலி கடன்மண லணிதரு பெறுதிடர் வளர்திரு<br>மிழலையே. | மண்ணுலகத்தோடு விண்ணுலகையும் நலிவுறுத்துகின்ற வலிமை பொருந்திய சலந்தராசுரனின் மலை போன்ற தலையை வேகமாக அறுத்து வீழ்த்திய சக்கராயுதத்தைத் திருமால் வேண்ட அவர்க்கு அருளியவனும், புகழால் மிக்க கங்கை நதி, மதி ஆகியன பொதிந்த சடைமுடியை உடையவனுமாகிய சிவபெருமான் உறையும் தலம், பெரிய அலைகளை உடைய கடற்கரை, மணலால் அழகுபெறும் மணல் மேடுகள் நிறைந்த திருவீழிமிழலையாகும். |
| 208. மலைமக டனையிகழ் வதுசெய்த மதியறு சிறுமன வனதுயர்<br>தலையினொ டழலுரு வனகர மறமுனி வுசெய்தவ னுறைபதி<br>கலைநில வியபுல வர்களிடர் களைதரு கொடைபயில்<br>பவர்மிகு<br>சிலைமலி மதிள்புடை தழுவிய திகழ்பொழில் வளர்திரு<br>மிழலையே. | மலைமகளாகிய பார்வதிதேவியை இகழ்ந்த அறிவற்ற அற்ப புத்தியையுடைய தக்கனுடைய தலையோடு அழலோனின் கை ஒன்றையும் அரிந்து, தன் சினத்தை வெளிப்படுத்திய சிவபிரான் உறையும் தலம், கலை ஞானம் நிரம்பிய புலவர்களின் வறுமைத் துன்பம் நீங்க நிறைந்த செல்வத்தை வழங்கும் கொடையாளர்கள் வாழ்வதும் பெரிய மதில்களால் சூழப் பெற்றதும் விளங்குகின்ற பொழில்கள் வளர்வதுமாய திருவீழிமிழலையாகும். |
| 209. மருவலர் புரமெரி யினின்மடி தரவொரு கணைசெல நிறுவிய<br>பெருவலி யினனல மலிதரு கரனுர மிகுபிண மமர்வன<br>இருளிடை யடையுற வொடுநட விசையுறு பரனினி துறைபதி<br>தெருவினில் வருபெரு விழவொலி மலிதர வளர்திரு<br>மிழலையே. | பகைமை பாராட்டிய திரிபுராதிகளின் முப்புரங்களும் எரியில் அழியுமாறு கணை ஒன்றைச் செலுத்திய பெரு வலி படைத்தவனும், நன்மைகள் நிறைந்த திருக்கரங்களை உடையவனும், வலிய பிணங்கள் நிறைந்த சுடுகாட்டில் நள்ளிருட்போதில் சென்று அங்குத் தன்னை வந்தடைந்த பேய்களோடு நடனமாடி இசை பாடுபவனுமாகிய பரமன் மகிழ்வோடு உறையும் பதி, தெருக்கள் தோறும் நிகழும் பெருவிழாக்களின் ஆரவாரம் நிறைந்து வளரும் திருவீழிமிழலையாகும். |

| | |
|---|---|
| 210. அணிபெறு வடமர நிழ–னில் அமர்வொடு மடியிணை யிருவர்கள்<br>பணிதர வறநெறி மறையொடும் அருளிய பரனுறை விடமொளி<br>மணிபொரு வருமர கதநில ம–புன லணைதரு வயலணி<br>திணிபொழி றருமண மதுநுகர் அறுபத முரல்திரு மிழலையே. | அழகிய கல்லால மரநிழ–ல் எழுந்தருளியிருந்து தம் திருவடி இணைகளைச் சனகர், சனந்தனர் ஆகிய இருவர் ஒருபுறமும், சனாதனர், சனற்குமாரர் ஆகிய இருவர் மறுபுறமும் பணிய அவர்கட்கு அறநெறியை வேதங்களோடும் அருளிச் செய்த சிவபிரான் உறையும் இடம், ஒளி பொருந்திய மணிகள் ஒப்பில்லாத மரகதம் ஆகியவற்றை அடித்துவரும் ஆற்றுநீர் நிலமெல்லாம் நிறைந்து வளங்களால் அணி செய்யப் பெறுவதும் செறிந்த பொழில்கள்தரும் மணத்தை நுகரும் வண்டுகள் முரல்வதுமான திருவீழிமிழலையாகும். |
| 211. வசையறு வ–வன சரவுரு வதுகொடு நினைவரு தவமுயல்<br>விசையன திறன்மலை மகளறி வுறுதிற லமர்மிடல் கொடுசெய்து<br>அசைவில படையருள் புரிதரும் அவனுறை பதியது மிகுதரு<br>திசையினின் மலர்குல வியசெறி பொழின்ம– தருதிரு மிழலையே. | குற்றமற்ற வ–ய வேடர் உருவைக் கொண்டு, நினைதற்கும் அரிய கடுந்தவத்தைச் செய்யும் விசயனுடைய வ–மையை உமையம்மைக்கு அறிவுறுத்தும் வகையில் அவனோடு வ–ய போரைத் தன் வ–மை தோன்றச் செய்து அவ்விசயனுக்குத் தோல்வி எய்தாத பாசுபதக்கணையை வழங்கி அருள்புரிந்த சிவபிரான் உறையும் பதி, செறிந்த மரங்கள் திசைகள் எங்கும் மலர்கள் பூத்துக் குலாவும் செறிந்த பொழில்கள் நிறைந்துள்ள திருவீழிமிழலையாகும். |
| 212. நலம– தருமறை மொழியொடு நதியுறு புனல்புகை யொளிமுதல்<br>மலரவை கொடுவழி படுதிறன் மறையவ னுயிரது கொளவரு<br>சலம– தருமற –தனுயிர் கெடவுதை செய்தவ னுறைபதி<br>திலகமி தெனவுல குகள்புகழ் தருபொழி லணிதிரு மிழலையே. | நன்மைகள் பலவும் நிறைந்த வேத மந்திரங்களை ஓதி, ஆற்று நீர், மணப்புகை, தீபம், மலர்கள் ஆகியனவற்றைக் கொண்டு பூசை புரிந்து வழிபடும் மறையவனாகிய மார்க்கண்டேயனின் உயிரைக் கவரவந்த வஞ்சகம் மிக்க இயமனின் உயிர் கெடுமாறு உதைத்தருளிய சிவபிரான் உறையும்பதி, உலக மக்கள் திலகம் எனப் புகழ்வதும் பொழில்கள் சூழ்ந்துள்ளதுமான திருவீழிமிழலையாகும். |
| 213. அரனுறை தருகயி லையைநிலை குலைவது செய்ததச முகனது<br>கரமிரு பதுநெரி தரவிரல் நிறுவிய கழலடி யுடையவன்<br>வரன்முறை யுலகவை தருமலர் வளர்மறை யவன்வழி வழுவிய<br>சிரமது கொடுப– திரிதரு சிவனுறை பதிதிரு மிழலையே. | சிவபிரான் எழுந்தருளிய கயிலை மலையை நிலைகுலையச் செய்து அதனைப் பெயர்த்த பத்துத் தலைகளை உடைய இராவணனுடைய இருபது கரங்களும் நெரியுமாறு தன் கால் விரலை ஊன்றிய வீரக்கழல் அணிந்த திருவடிகளை உடையவனும், வரன் முறையால் உலகைப் படைக்கும் பூவின் நாயகனான பிரமன் வழி வழுவியதால் ஐந்தாயிருந்த அவன் சிரங்களில் ஒன்றைக் கிள்ளி எடுத்து அதன்கண் ப–யேற்றுத் திரிபவனுமாகிய சிவபிரான் உறையும் பதி திருவீழிமிழலையாகும். |

| | |
|---|---|
| **214.** அயனொடு மெழிலமர் மலர்மகள் மகிழ்கண னளவிட லொழியவொர்<br>பயமுறு வகைதழ னிகழ்வதொர் படியுரு வதுவர வரன்முறை<br>சயசய வெனமிகு துதிசெய வெளியுரு வியவவ னுறைபதி<br>செயநில வியமதின் மதியது தவழ்தர வுயர்திரு மிழலையே. | நான்முகனும் அழகிய மலர்மகள் கேள்வனாகிய கண்ணனும் அளவிடமுடியாது அஞ்சி நிற்க, ஒரு சோதிப் பிழம்பாய்த் தோன்ற அவ்விருவரும் முறையாக சயசய எனப் போற்றித் துதி செய்யுமாறு அண்டங்கடந்த அச்சிவபிரான் உறையும் பதி, வெற்றி விளங்கும் மதில்களில் மதி தோய்ந்து செல்லுமாறு உயர்ந்து தோன்றும் திருவீழிமிழலையாகும். |
| **215.** இகழுரு வொடுபறி தலைகொடும் இழிதொழின் ம–சமண் விரகினர்<br>திகழ்துவ ருடையுடல் பொதிபவர் கெடவடி யவர்மிக வருளிய<br>புகழுடை யிறையுறை பதிபுனல் அணிகடல் புடைதழு வியபுவி<br>திகழ்சுரர் தருநிகர் கொடையினர் செறிவொடு திகழ்திரு மிழலையே. | பிறரால் இகழத்தக்க உருவோடும் உரோமங்களைப் பறித்தெடுத்தலால் முண்டிதமான தலையோடும் இழி தொழில் மிகுதியாகப் புரியும் சமணர்களாகிய தந்திரசா–களும், விளங்கும் மருதந்துவராடையை உட–ல் போர்த்துத் திரியும் சாக்கியர்களும் அழிந்தொழியத் தன் அடியவர்களுக்கு மிகவும் அருள் புரிபவனும் புகழாளனுமாகிய இறைவன் உறையும் பதி நீர்வளம் மிக்கதும் கடலாற் சூழப்பட்ட இவ்வுலகில் விளங்கும் சுரர் தருவாகிய கற்பகம் போன்ற கொடையாளர் மிக்கு விளங்குவதுமாகிய திருவீழிமிழலையாகும். |
| **216.** சினம– கரியுரி செய்தசிவ னுறைதரு திருமிழ லையைமிகு<br>தனமனர் சிரபுர நகரிறை தமிழ்விர கனதுரை யொருபதும்<br>மனமகிழ் வொடுபயில் பவரெழின் மலர்மகள் கலைமகள் சயமகள்<br>இனம– புகழ்மக ளிசைதர இருநில னிடையினி தமர்வரே. | சினவேகத்தோடு வந்த யானையை உரித்துப் போர்த்த சிவபிரான் எழுந்தருளிய திருவீழிமிழலையை, மிக்க செல்வங்களால் நிறைந்த மனமகிழ்வுடையவர் வாழும் சிவபுர நகரின் மன்னனும் தமிழ் விரகனுமாகிய ஞானசம்பந்தன் உரைத்த இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் மனமகிழ்வோடு பயில்பவர் அழகிய திருமகள், கலைமகள், சயமகள், அவர்க்கு இனமான புகழ்மகள் ஆகியோர் தம்பால் பொருந்த, பெரிய இவ்வுலகின்கண் இனிதாக வாழ்வர். |

## 21. திருச்சிவபுரம்

**பண் : நட்டபாடை** — **முதல் திருமுறை பதிக எண் : 21**

| | |
|---|---|
| **217.** புவம்வளி கனல்புனல் புவிகலை யுரைமறை திரிகுண மமர்நெறி<br>திவம– தருசுரர் முத–யர் திகழ்தரு முயிரவை யவைதம<br>பவம– தொழிலது நினைவொடு பதுமநன் மலரது மருவிய<br>சிவனது சிவபுர நினைபவர் செழுநில னினில்நிலை பெறுவரே. | விண், காற்று, தீ, நீர், மண் ஆகிய ஐம்பெரும் பூதங்களையும், எண்ணெண் கலைகளை உரைத்தருளும் வேதங்களையும், முக்குணங் களையும், விரும்பத்தக்க மார்க்கங்களையும், வானுலகில் வாழும் தேவர்கள் முத–யவர்களாய் விளங்கும் உயிர்களையும், தம்முடைய படைப் பாற்றல் நினைவோடு நல்ல தாமரை மலரில் விளங்கும் நான்முகனை அதிட்டித்து நின்று உலகைத் தோற்றுவித்தருளும் சிவபெருமானது சிவபுரத் தலத்தை நினைப்பவர் வளமையான இவ்வுலகில் நிலைபெற்று வாழ்வர். |

| | |
|---|---|
| 218. மலைபல வளர்தரு புவியிடை மறைதரு வழிம– மனிதர்கள் நிலைம– சுரர் முத லுலகுகள் நிலைபெறு வகைநினை வொடுமிகும்<br>அலைகட னடுவறி துயிலமர் அரியுரு வியல்பர னுறைபதி<br>சிலைம– மதிள்சிவ புரநினை பவர்திரு மகளொடு திகழ்வரே. | மலைகள் பல வளரும் இம்மண்ணுலகில் வேத விதிகளின்படி நடக்கும் மிகுதியான மக்கள், விண்ணில் நிலைபேறுடையவராய் வாழும் தேவர்கள் ஆகியோரும் மற்றுமுள்ள உலக உயிர்களும் நிலைபெற்று வாழ்வதற்குரிய காத்தல் தொழில் நினைவோடு, மிகுந்துவரும் அலைகளை உடைய திருப்பாற்கடல் நடுவில் அறிதுயில் அமர்ந்துள்ள திருமாலை அதிட்டித்துநின்று காத்தல் தொழிலைச் செய்தருளும் சிவபிரான் உறையும் பதி, கற்களால் கட்டப்பட்ட மதில்கள் சூழ்ந்த சிவபுரமாகும். அதனை நினைப்பவர் திருமகளொடு திகழ்வர். |
| 219. பழுதில கடல்புடை தழுவிய படிமுத –யவுல குகள்ம– குழுவிய சுரர்பிறர் மனிதர்கள் குலம– தருமுயி ரவையவை<br>முழுவது மழிவகை நினைவொடு முதலுரு வியல்பர னுறைபதி<br>செழுமணி யணிசிவ புரநகர் தொழுமவர் புகழ்மிகு முலகிலே. | பழுதுபடாத, கடலால் சூழப்பட்ட நிலவுலகம் முத–ய எல்லா உலகங்களையும், அவ்வுலகங்களில் நிறைவுடன் குழுமிவாழும் தேவர்கள் நரகர்கள் மற்றும் மனிதர்கள் ஏனையோர் ஆகிய அனைவர் உயிர்களையும் அழிக்கும் வகையான நினைவோடு உருத்திரனை அதிட்டித்து அவனுருவில் அழித்தலைச் செய்தருளும் சிவபிரான் உறையும் பதியாகிய செழுமையான மணிகள் அழகு செய்யும் சிவபுர நகரைத் தொழுவோரின் புகழ் உலகில் மிகும். |
| 220. நறைம– தருமள றொடுமுகை நகுமலர் புகைமிகு வளரொளி<br>நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும் வழிபடு மடியவர்<br>குறைவில பதமணை தரவருள் குணமுடை யிறையுறை வனபதி<br>சிறைபுன லமர்சிவ புரமது நினைபவர் செயமகள் தலைவரே. | மணம் மிகுந்த சந்தனம், அரும்புகள், இதழ் விரிந்த மலர்கள், குங்கி–யம், சீதாரி முத–ய தூபம், ஒளி வளர் தீபங்கள், நிறைந்த நீர் ஆகியவற்றைக் கொண்டு நீராட்டியும், மலர் சூட்டியும் ஒளி காட்டியும் தன்னை நாள்தோறும் நினைவோடு வழிபடும் அடியவர், குறைவிலா நிறைவான சாமீபம் முதலான முத்திகளை அடைய அருள்செய்யும் குணம் உடைய இறைவன் உறையும் அழகிய பதி, நீர் நிலைகள் பலவற்றாலும் வளம் நிரம்பி விளங்கு சிவபுரமாகும். அதனை நினைபவர் சயமகள் தலைவராவர். |
| 221. சினம– யறுபகை மிகுபொறி சிதைதரு வகைவளி நிறுவிய மனனுணர் வொடுமலர் மிசையெழு தருபொரு ணியதமு முணர்பவர்<br>தனதெழி லுருவது கொடுவடை தகுபர னுறைவது நகர்மதிள்<br>கனமரு வியசிவ புரநினை பவர்கலை மகள்தர நிகழ்வரே. | காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் எனப்படும் ஆறு பகைகளையும் வென்று மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளையும் அடக்கும் வகையில், காற்றை நிறுத்தியும் விடுத்தும் செய்யப்படும் பிராணாயாமத்தைப் புரிந்தும், தியானித்தலால் உள்ளத்தில் தோன்றியருளும் ஒளிப்பொருளாகிய சிவபெருமானை நாள்தோறும் உணர்பவராகிய யோகியர்கட்குத் தனது எழிலுருவாகிய சாரூபத்தைத் தந்தருளும் சிவபிரான் உறைந்தருளும் நகர், மேகந்தவழும் மதில்கள் சூழ்ந்த சிவபுரமாகும். அதனை நினைபவர், கலைமகள் தன் அருளைத் தர வாழ்வர். |

| | |
|---|---|
| 222. சுருதிகள் பலநல முதல்கலை துகளறு வகைபயில் வொடுமிகு<br>உருவிய லுலகவை புகழ்தர வழியொழு குமெயுறு பொறியொழி<br>அருதவ முயல்பவர் தனதடி யடைவகை நினையர னுறைபதி<br>திருவருள் சிவபுர நினைபவர் திகழ்குல னிலனிடை நிகழுமே. | வேதங்களையும், பலவாகிய நன்மைகளைத் தரும் தலைமையான கலைகளையும், குற்றம் அறப் பயின்று, உலகிய–ல் பழி பாவங்களுக்கு அஞ்சித் தூய ஒழுக்க சீலராய் உலகம் புகழ விளங்கி உட–ன்கண் உள்ள பொறிகள்வழி ஒழுகாது அரிய தவத்தை மேற்கொண்ட அடியவர்கள் தன் திருவடிகளை அடையும் வகை சங்கற்பிக்கும் சிவபிரான் உறையும் பதி திருவருள் தேங்கிய சிவபுரமாகும். அத்தலத்தை நினைவோர்தம் விளக்கமான குலம் உலகிடை நின்று நிகழும். |
| 223. கதமிகு கருவுரு வொடுவுகி ரிடைவட வரைகண கணவென<br>மதமிகு நெடுமுக னமர்வளை மதிதிக ழெயிறத னுதிமிசை<br>இதமமர் புவியது நிறுவிய வெழிலரி வழிபட வருள்செய்த<br>பதமுடை யவனமர் சிவபுர நினைபவர் நிலவுவர் படியிலே. | திருமால் வராக அவதாரத்தில் சினம்மிக்க கரிய உருவோடு, தனது நகங்களிடையே வடக்கின்கண் உள்ள மேருமலை கணகண என ஒ– செய்ய, மதம் மிக்க நீண்ட அவ்வராகத்தின் முகத்திற் பொருந்திய வளைந்த பிறை போன்ற எயிற்றின் முனைக்கண் பூமி இதமாக அமர்ந்து விளங்க, அப்பூமியை உலகின்கண் அவியாது நிறுத்திக் காத்த அழகிய திருமால் வழிபட, அவர்க்கு அருள்புரிந்த திருவடிகளை உடையவனாகிய சிவபெருமான் எழுந்தருளிய சிவபுரத்தை நினைப்பவர் உலகிற் புகழோடு விளங்குவர். |
| 224. அசைவுறு தவமுயல் வினிலயன் அருளினில் வருவ–கொடுசிவன்<br>இசைகயி லையையெழு தருவகை யிருபது கரமவை நிறுவிய<br>நிசிசரன் முடியுடை தரவொரு விரல்பணி கொளுமவ னுறைபதி<br>திசைம– சிவபுர நினைபவர் செழுநில னினில்நிகழ் வுடையரே. | உடல் வருத்தத்தைத் தரும் கடுமையான தவத்தைச் செய்து நான்முகன் அருளினால் வரமாகக் கிடைக்கப் பெற்ற வ–மையைக் கொண்டு சிவபிரான் எழுந்தருளிய கயிலைமலையை அது பெயரும்வகையில் இருபது கரங்களை அம்மலையின் கீழ்ச்செலுத்திய இராவணனின் பத்துத் தலைகளில் உள்ள முடிகள் சிதறுமாறு தனது ஒரு கால் விரலால் அடர்த்துத் தன் வ–மையை அவனுக்கு உணர்த்தி அவனைப் பணி கொண்டருளும் சிவபிரான் உறையும் பதி, எண் திசைகளிலும் புகழ் நிறைந்த சிவபுரமாகும். அத்தலத்தை நினைபவர் வளமான இவ்வுலகில் எஞ்ஞான்றும் வாழ்வர். |
| 225. அடன்ம– படையரி யயனொடு மறிவரி யதொரழன் ம–தரு<br>சுடருரு வொடுநிகழ் தரவவர் வெருவொடு துதியது செயவெதிர்<br>விடம– களநுத லமர்கண துடையுரு வெளிபடு மவனகர்<br>திடம– பொழிலெழில் சிவபுர நினைபவர் வழிபுவி திகழுமே. | வ–மை மிக்க சக்கராயுதத்தைப் படைக்கலனாகக் கொண்ட திருமாலும் நான்முகனும் அறிதற்கரிய வகையில் அழல்மிக்க பேரொளிப் பிழம்பாய் வெளிப்பட்டருள அதனைக் கண்ட அவர்கள், அச்சங் கொண்டு துதி செய்த அளவில் அவர்கட்கு எதிரே விடம் பொருந்திய கண்டமும் நெற்றிக் கண்ணும் உடைய தனது உருவத்தோடு காட்சி நல்கிய சிவபிரான் எழுந்தருளிய தலம், உறுதியான மரங்கள் செறிந்த பொழில்கள் சூழ்ந்த எழில் பெற்ற சிவபுரமாகும். அதனை நினைபவரும் அவர் மரபினரும் உலகில் புகழோடு விளங்குவர். |

| | |
|---|---|
| 226. குணமறி வுகணிலை யிலபொரு ளுரைமரு வியபொருள் களுமில<br>திணமெனு மவரொடு செதுமதி மிகுசம ணரும– தமதுகை<br>உணலுடை யவருணர் வருபர னுறைதரு பதியுல கினினல<br>கணமரு வியசிவ புரநினை பவரெழி லுருவுடை யவர்களே. | குணங்களும் அறிவும் நிலையில்லாதன எனவும், காணப்படும் உலகப் பொருள்களும், உரைக்கும் உரையால் உணர்த்தப்படும் ஏனைய பொருள்களும், அவ்வாறே அழிந்து தோன்றுமியல்பின. இது திண்ணம் எனவும், கணபங்க வாதம் புரியும் கேட்டிற்குக் காரணமான அறிவினராகிய புத்தர்களும், தமது கையில் நிறைந்த உணவை வாங்கி உண்ணும் சமணர்களும், உணர்தற்கரிய சிவபிரான் உறையும் பதி, இவ்வுலகில் நல்லவர்கள் திரளாய் வாழும் சிவபுரமாகும். அதனை நினைபவர் அழகிய உருவோடு விளங்குவர். |
| 227. திகழ்சிவ புரநகர் மருவிய சிவனடி யிணைபணி சிரபுர<br>நகரிறை தமிழ்விர கனதுரை நலம– யொருபது நவில்பவர்<br>நிகழ்குல நிலநிறை திருவுரு நிகரில கொடைமிகு சயமகள்<br>புகழ்புவி வளர்வழி யடிமையின் மிகைபுணர் தரநல மிகுவரே. | இவ்வுலகில் புகழால் விளங்கும் சிவபுரநகரில் எழுந்தருளிய சிவபெருமானின் திருவடி இணைகளைப் பணிகின்ற சிரபுர நகர்த் தலைவனும், தமிழ் விரகனுமாகிய ஞானசம்பந்தன் பாடிய உரைச்சிறப்பு வாய்ந்த இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தினையும் ஓதி வழிபடுபவர் குலம், நிலம், நிறைந்த செல்வம், அழகிய வடிவம், ஒப்பற்ற கொடை வண்மை, மிக்க வெற்றித் திரு, இவ்வுலகிடை தொடர்ந்து வரும் சந்ததி, இறைவனடியார் என்ற பெருமிதம் ஆகியன தம்பால் விளங்க எல்லா நலங்களும் மிகப் பெறுவர். |

## 22. திருமறைக்காடு

**பண் : நட்டபாடை** — **முதல் திருமுறை பதிக எண் : 22**

| | |
|---|---|
| 228. சிலைதனை நடுவிடை நிறுவியொர் சினம– யரவது கொடுதிவி<br>தலம– சுரரசு ரர்களொ– சலசல கடல்கடை வுழிமிகு<br>கொலைம– விடமெழ வவருடல் குலைதர வதுநுகர் பவனெழில்<br>மலைம– மதில்புடை தழுவிய மறைவன மமர்தரு பரமனே. | மந்தரமலையை மத்தாக நடுவே நிறுத்தி, சினம் மிக்க ஒப்பற்ற வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகக் கொண்டு, விண்ணுலகில் வாழும் தேவர்களும் அசுரர்களும் சலசல என்னும் ஒ– தோன்றுமாறு திருப்பாற்கடலைக் கடைந்த காலத்துக் கொல்லும் தன்மை வாய்ந்த ஆலகால விடம் அக்கட–ல் தோன்ற, அதனால் தேவாசுரர்கள் அஞ்சி நடுங்கித் தன்னை நோக்கி ஓலமிட்ட அளவில் அந்நஞ்சை உண்டு அவர்களைக் காத்தருளியவன் அழகிய மலை போன்ற மதில்களால் சூழப்பட்ட மறைவனத்தில் எழுந்தருளிய பரமன் ஆவான். |
| 229. கரமுத –யவவ யவமவை கடுவிட வரவது கொடுவரு<br>வரன்முறை யணிதரு மவனடல் வ–மிகு பு–யத ளுடையினன்<br>இரவலர் துயர்கெடு வகைநினை யிமையவர் புரமெழில் பெறவளர்<br>மரநிகர் கொடைமனி தர்கள்பயில் மறைவன மமர்தரு பரமனே. | கைகள் முத–ய அவயவங்களில், கொடிய விடம் பொருந்திய பாம்புகளைத் தொன்றுதொட்டுவரும் வரன் முறைப்படி, வளை கேயூரம் முத–யனவாக அணி செய்து கொள்பவனும், கொலைத் தொழி–ல் வல்லமை மிக்க பு–யைக் கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்தவனுமாகிய பெருமான், இரவலர்களின் வறுமைத் துயர் போக எல்லோரும் நினைக்கும் தேவருலகம் அழகு பெற வளரும் கற்பகமரம் போன்ற கொடையாளர்கள் வாழும் மறைவனம் அமர்பரமன் ஆவான். |

| | |
|---|---|
| 230. இழைவளர் தருமுலை மலைமகள் இனிதுறை தருமெழி லுருவினன்<br>முழையினின் மிகுதுயி லுறுமரி முசிவொடு மெழமுள ரியொடெழு<br>கழைநுகர் தருகரி யிரிதரு கயிலையின் ம–பவ னிருளூறும்<br>மழைதவழ் தருபொழி னிலவிய மறைவன மமர்தரு பரமனே. | அணிகலன்கள் பொருந்திய தனங்களை உடைய மலைமகள் இடப்பாகமாக இனிதாக உறையும் அழகிய திருமேனியை உடையவனும், குகைகளில் நன்கு உறங்கும் சிங்கங்கள், பசி வருத–னாலே மூரி நிமிர்ந்து எழ, தாமரை மலர்களோடு வளர்ந்து செழித்த கரும்புகளை உண்ணும் யானையினங்கள் அஞ்சி ஓடுகின்ற கயிலை மலையில் எழுந்தருளியவனும் ஆகிய பெருமான் கரிய மழை மேகங்கள் தவழும் பொழில்களை உடைய மறைவனத்தில் அமரும் பரமனாவான். |
| 231. நலமிகு திருவித ழியின்மலர் நகுதலை யொடுகன கியின்முகை<br>பலசுர நதிபட வரவொடு மதிபொதி சடைமுடி யினன்மிகு<br>தலநில வியமனி தர்களொடு தவமுயல் தருமுனி வர்கடம்<br>மலமறு வகைமன நினைதரு மறைவன மமர்தரு பரமனே. | அணிவிப்பவர்க்கு நலம் மிகுவிக்கின்ற அழகிய கொன்றை மலர், கபாலம், ஊமத்தை, கங்கை நதி, பட அரவு, பிறை ஆகியனவற்றைச் சூடிய சடைமுடியினனாகிய பெருமான், பெரிதாய இவ்வுலகில் வாழும் மனிதர்கள், தவம் முயலும் முனிவர்கள் ஆகியோர் தன்னை வழிபட அவர்கள் மலம் அகன்று உய்யும் வகையை நினையும் மறைவனம் உறையும் பரமன் ஆவான். |
| 232. கதிம– களிறது பிளிறிட வுரிசெய்த வதிகுண னுயர்பசு<br>பதியதன் மிசைவரு பசுபதி பலகலை யவைமுறை முறையுணர்<br>விதியறி தருநெறி யமர்முனி கணனொடு மிகுதவ முயல்தரும்<br>அதிநிபு ணர்கள்வழி படவளர் மறைவன மமர்தரு பரமனே. | நடை அழகுடன் தன்னை எதிர்த்து வந்த களிறு அஞ்சிப் பிளிற, அதனை உரித்தருளிய மிக்க குணாளனும், உயர்ந்த பசுக்களின் நாயகனாகிய விடையின்மீது வரும் ஆருயிர்களின் தலைவனும் ஆகிய பெருமான், பல கலையும் முறையாகக் கற்று உணர்ந்தவர்களும், விதிகளாகத் தாம் கற்ற நெறிகளில் நிற்போரும் ஆகிய முனிவர் குழாங்களும், மிக்க தவத்தை மேற்கொண்டொழுகும் அதி நிபுணர்களும், தன்னை வழிபடுமாறு வளங்கள் பலவும் வளரும் மறைவனத்தில் அமர்ந்தருளும் பரமன் ஆவான். |
| 233. கறைம– திரிசிகை படையடல் கனன்மழு வெழுதர வெறிமறி<br>முறைமுறை யொ–தம ருகமுடை தலைமுகிழ் ம–கணி வடமுகம்<br>உறைதரு கரனுல கினிலுய ரொளிபெறு வகைநினை வொடுமலர்<br>மறையவன் மறைவழி வழிபடு மறைவன மமர்தரு பரமனே. | குருதிக் கறைபடிந்த முத்தலைச் சூலம், வருத்தும் தழல் வடிவினதாகிய மழுவாயுதம், கையினின்று எழுவது போன்ற வெறித்த கண்களை உடைய மான், முறைமுறையாக ஒ– செயும் உடுக்கை, முடைநாறும் பிரம கபாலம், முகிழ் போலும் கூரிய கணிச்சி, வடவை முகத்தீ ஆகியன உறையும் திருக்கரங்களை உடையவனும், தாமரை மலரில் எழுந்தருளிய வேதாவாகிய நான்முகனால் உலகில் உயர்ந்த புகழோடு விளங்கும் நினைவோடு வேத விதிப்படி வழிபடப் பெறுபவனுமாகிய சிவபிரான் மறை வனத்தில் உறையும் பரமன் ஆவான். |

| | |
|---|---|
| 234. இருநில னதுபுன –டைமடி தரவெரி புகவெரி யதுமிகு<br>பெருவெளி யினிலவி தரவளி கெடவிய னிடைமுழு வதுகெட<br>இருவர்க ளுடல்பொறை யொடுதிரி யெழிலுரு வுடையவ னினமலர்<br>மருவிய வறுபத மிசைமுரன் மறைவன மமர்தரு பரமனே. | பேரூழிக் காலத்தில் பெரிய இந்நிலமாகிய மண் புன–ல் ஒடுங்க, நீர் எரியில் ஒடுங்க, எரி வளியில் ஒடுங்க, வளி ஆகாயத்தில் ஒடுங்க, பரந்துபட்ட இவ்வுலகமும் உலகப் பொருள்களும் ஆகிய அனைத்தும் அழிய, அதுபோது பிரம விட்டுணுக்களது முழு எலும்புக் கூட்டை அணிந்து, தான் ஒருவனே தலைவன் எனத் திரியும் அழகுடையவன், வண்ண மலர்க் கூட்டங்களில் வண்டுகள் இசை முரலும் மறைவனம் அமரும் பரமன் ஆவான். |
| 235. சனம்வெரு வுறவரு தசமுக னொருபது முடியொடு மிருபது<br>கனமரு வியபுய நெரிவகை கழலடி யிலொர்விர னிறுவினன்<br>இனம– கணநிசி சரன்மகிழ் வுறவருள் செய்தகரு ணையனென<br>மனமகிழ் வொடுமறை முறையுணர் மறைவன மமர்தரு பரமனே. | மக்கள் அஞ்சுமாறு வருகின்ற இராவணனின் பத்துத் தலைகளோடு பெரிதாய இருபது தோள்களும் நெரியுமாறு வீரக்கழல் அணிந்த திருவடியில் உள்ளதொரு விரலை ஊன்றி அடர்த்தவன். அவன் பிழை உணர்ந்த அளவில் அரக்கர் கூட்டமுடைய அவ்இராவணன் மனம் மகிழ்வுறுமாறு பேர், வாழ்நாள், தேர், வாள் முத–யன அளித்தருளிய கருணையாளன் என நான்மறைகளை முறையாக உணர்ந்த வேதியர் மனமகிழ்வோடு புகழும் மறைவனத்தில் அமர்ந்தருளும் பரமன் அவான். |
| 236. அணிமலர் மகள்தலை மகன்அயன் அறிவரி யதொர்பரி சினிலெரி<br>திணிதரு திரளுரு வளர்தர வவர்வெரு வுறலொடு துதிசெய்து<br>பணியுற வெளியுரு வியபர னவனுரை ம–கட நிரளெழும்<br>மணிவள ரொளிவெயின் மிகுதரு மறைவன மமர்தரு பரமனே. | அழகிய மலர்மகள் கேள்வனும், அயனும் அறிதற்கு அரியதொரு தன்மையில் அனல் செறிந்த பிழம்புருவத்தோடு தோன்ற அதனைக் கண்டு அவ்விருவரும் அஞ்சித் துதி செய்து பணிய, வானவெளியைக் கடந்த பேருருவத்தோடு காட்சி நல்கிய பரனாகிய அவன் நுரைமிக்க கடல் திரட்சியில் தோன்றும் மணிகளின் வளர் ஒளியினால் வெயிலொளி மிகுந்து தோன்றும் மறைவனத்தில் அமரும் பரமன் ஆவான். |
| 237. இயல்வழி தரவிது செலவுற வினமயி –றகுறு தழையொடு<br>செயன்மரு வியசிறு கடமுடி யடைகையர் தலைபறி செய்துதவம்<br>முயல்பவர் துவர்பட முடல்பொதி பவரறி வருபர னவனணி<br>வய–னில் வளைவள மருவிய மறைவன மமர்தரு பரமனே. | உலக இயல்பு கெடுமாறு நடை உடை பாவனைகளால் வேறுபடத் தோன்றிப் பல மயில்களின் தோகைகளைக் கொண்டு வழிகளை உயிரினங்களுக்கு ஊறு வாராதபடி தூய்மை செய்து நடத்தலைச் செய்து சிறிய குண்டிகை வைக்கப்பட்ட உறியை ஏந்திய கையராய்த் தலையைப் பறித்து முண்டிதமாக்கிக் கொண்டு தவம் முயலும் சமணர்களும், துவராடையால் உடலை மூடியவர்களாகிய புத்தர்களும் அறிதற்கரிய பரனாகிய அவன், அழகிய வய–ல் சங்கீன்ற முத்துக்கள் நிறைந்துள்ள மறைவனத்தில் அமர்ந்துறையும் பரமன் ஆவான். |

| | |
|---|---|
| 238. வசையறு மலர்மக ணிலவிய மறைவன மமர்பர மனைநினை<br>பசையொடு மிகுகலை பலபயில் புலவர்கள் புகழ்வழி வளர்தரு<br>இசையமர் கழுமல நகரிறை தமிழ்விர கனதுரை யியல்வல<br>இசைம– தமிழொரு பதும்வல வவருல கினிலெழில் பெறுவரே. | குற்றமற்ற திருமகள் நிலவும் மறைவனத்தில் அமர்ந்துள்ள பரமனை அன்போடு நினையும் மிகுந்த கலைகளில் வல்ல புலவர்களின் புகழோடு வளரும் கழுமலநகர்த் தலைவனும் தமிழ் விரகனும் ஆகிய ஞானசம்பந்தனுடைய இயற்றமிழிலும் மேம்பட்ட இசை ம–ந்த இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் வல்லவர் உலகினில் அழகெய்துவர். |

# தக்கராகம்

இது பாலை யாழ் என்ற பெரும்பண்ணின் முதல் திறமாகிய அராகத்தில் அகநிலைப் பண்ணாக 17 என்ற எண் பெறுகிறது. இது பெருமிதம் மருட்கை வெகுளி என்னும் சுவைகளையுடையது. இப்பண்ணைச் சம்பந்தரும், சுந்தரரும் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 1.23 – 46, சுந்தரர் 12 – 16, ஆக 28 பதிகங்கள். இதில் 7 கட்டளைகள் உள்ளன. சம்பந்தர் திருத்தாளம் பெற்ற திருக்கோலாக்காப் பதிகம், மடையில் வாளை பாய மாதரார், அந்தமும் ஆதியும் ஆகிய அண்ணல் என்ற திருவேட்களப் பதிகம், முயலகன் நோய் நீங்கிய துணிவளர் திங்கள் துளங்கி விளங்க என்ற பதிகம், துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் என்ற திருஆலங்காட்டுப் பதிகம் முதலாயின இப்பண்ணில் அமைந்தன. சுந்தரர் இப்பண்ணில் பாடிய நான்கு பதிகங்களும் சிறப்புடையன. துறையூரில் தவநெறி வேண்டிக் கொள்வேன் என்பது, இவரலா தில்லையோ பிரானார் என்ற திருப்பாச்சிலாச்சிராமப் பதிகம், நாட்டியத்தான் குடி நம்பி, இயற்கை வருணனை நிரம்பிய குரும்பைமுலை மலர்குழலி என்ற திருக்கானாட்டு முள்ளூர்ப் பதிகம். இந்த இராகம் காம்போதிக்கு நேரானது என்று கொள்வார்கள். இது இரவுப் பண் என்று சொல்லப்பெறும். பொழுது சாய்ந்தவுடன் பாடத்தக்கது.

## 23. திருக்கோலக்கா

**பண் : தக்கராகம்** — **முதல் திருமுறை பதிக எண் : 23**

| | |
|---|---|
| 239. மடையில் வாளை பாய மாதரார்<br>குடையும் பொய்கைக் கோலக் காவுளான்<br>சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீள்<br>உடையுங் கொண்ட வுருவ மென்கொலோ. | நீரைத் தேக்கி வெளிவிடும் மடையில் வாளை மீன்கள் துள்ளிப் பாயுமாறு பெண்கள் கையால் குடைந்து நீராடும் பொய்கைகளை உடைய திருக்கோலக்காவில் எழுந்தருளியுள்ள இறைவன், சடைமுடியையும், அதன்கண் பிறையையும், திருமேனி முழுவதும் திருநீற்றுப் பூச்சையும் இடையில் ஆடையாகக் கீள் உடையையும் கொண்ட உருவம் உடையவனாய் இருப்பது ஏனோ ? |

| | |
|---|---|
| 240. பெண்டான் பாக மாகப் பிறைச்சென்னி<br>கொண்டான் கோலக் காவு கோயிலாக்<br>கண்டான் பாதங் கையாற் கூப்பவே<br>உண்டா னஞ்சை யுலக முய்யவே. | உமையம்மையைத் தன் திருமேனியில் இடப் பாதியாகக் கொண்டு, கலைகள் ஒன்றொன்றாகக் குறைந்து வந்த இளம் பிறையைச் சடைமுடி மீது ஏற்றுக் கொண்டவனாகிய சிவபிரான், கோலக்காவிலுள்ள கோயிலைத் தன் இருப்பிடமாகக் கொண்டவன். திருப்பாற்கட–ல் நஞ்சு தோன்றியபோது காவாய் என அனைவரும் கைகூப்பி வணங்க உலகம் உய்யுமாறு அந்நஞ்சினை உண்டு அருளியவன். |
| 241. பூணற் பொறிகொ ளரவம் புன்சடை<br>கோணற் பிறையன் குழகன் கோலக்கா<br>மாணப் பாடி மறைவல் லானையே<br>பேணப் பறையும் பிணிக ளானவே. | அழகிய புள்ளிகளை உடைய பாம்பை அணிகலனாகக் கொண்டு, சிவந்த சடையின்மேல் வளைந்த பிறைமதியைச் சூடிய, என்றும் மாறா இளமைத் தன்மை உடைய சிவபிரான் எழுந்தருளி விளங்கும் திருக்கோலக்காவை மாட்சிமை தங்கப் பாடி, வேதங்களை அருளிய அப்பெருமானைப் பேணித் தொழப் பிணிகளானவை நீங்கும். |
| 242. தழுக்கொள் பாவந் தளர வேண்டுவீர்<br>மழுக்கொள் செல்வன் மறிசே ரங்கையான்<br>குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா<br>இழுக்கா வண்ண மேத்தி வாழ்மினே. | பல்வேறு சமயங்களிலும் செய்த பாவங்கள் நீங்க வேண்டும் என்று விரும்புகின்றவர்களே! மழுவாயுதத்தைப் படைக்கலனாகக் கொண்ட செல்வனும், மானை ஏந்திய அழகிய கையை உடையவனும், பூதங்களின் குழுக்களை உடையவனும் ஆகிய சிவபிரானது கோலக்காவைத் தவறாமல் சென்று தரிசித்து வாருங்கள். நும் பாவங்கள் அகலும். |
| 243. மயிலார் சாயன் மாதோர் பாகமா<br>எயிலார் சாய வெரித்த வெந்தைதன்<br>குயிலார் சோலைக் கோலக் காவையே<br>பயிலா நிற்கப் பறையும் பாவமே. | ஆண்மயில் போலும் கட்புலனாகிய மென்மையை உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவனும், அசுரர்களின் முப்புரங்கள் கெடுமாறு அவற்றை எரித்தவனும் ஆகிய எம் தந்தையாகிய சிவபிரானது, குயில்கள் நிறைந்து வாழும் சோலைகளை உடைய திருக்கோலக்காவைப் பலகாலும் நினைக்கப் பாவங்கள் நீங்கும். |
| 244. வெடிகொள் வினையை வீட்ட வேண்டுவீர்<br>கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்<br>கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்<br>அடிகள் பாத மடைந்து வாழ்மினே. | ஒன்றி–ருந்து பிறிதொன்று கிளைக்கும் வினைப்பகையை நீக்கிக் கொள்ள விரும்புகின்றவர்களே! மணம் பொருந்திய கொன்றை மலர் விரவிய சென்னியை உடையோனும் கொடிகள் கட்டப்பெற்று விழாக்கள் பலவும் நிகழ்த்தப்பெறும் கோலக்காவில் விளங்கும் எம் தலைவனும் ஆகிய பெருமான் திருப்பாதங்களை அடைந்து வாழ்வீர்களாக. |

| | |
|---|---|
| 245. நிழலார் சோலை நீல வண்டினங்<br>குழலார் பண்செய் கோலக் காவுளான்<br>கழலான் மொய்த்த பாதங் கைகளால்<br>தொழலார் பக்கல் துயர மில்லையே. | நிழல் செறிந்த சோலைகளில் நீலநிறம் பொருந்திய வண்டினங்கள் வேய்ங்குழல் போல இசை வழங்கும் திருக்கோலக்காவில் விளங்கும் சிவபிரானுடைய வீரக்கழல் செறிந்த திருவடிகளைக் கைகூப்பித் தொழுபவர் பக்கம் துயரம் வாராது. |
| 246. எறியார் கடல்சூ ழிலங்கைக் கோன்றனை<br>முறியார் தடக்கை யடர்த்த மூர்த்திதன்<br>குறியார் பண்செய் கோலக் காவையே<br>நெறியாற் றொழுவார் வினைகள் நீங்குமே. | அலைகள் எறியும் கடலால் சூழப்பட்ட இலங்கை மன்னனாகிய இராவணனை, அவன் நீண்ட கைகள் முரிதலைப் பொருந்துமாறு அடர்த்த சிவபிரானைச் சுரத்தானங்களைக் குறித்த பண்ணிசையால் கோலக்காவில் சிவாகம நெறிகளின்படி வழிபடுவார் வினைகள் நீங்கும். |
| 247. நாற்ற மலர்மே லயனு நாகத்தில்<br>ஆற்ற லணைமே லவனுங் காண்கிலாக்<br>கூற்ற முதைத்த குழகன் கோலக்கா<br>ஏற்றான் பாத மேத்தி வாழ்மினே. | மணம் பொருந்திய தாமரை மலர் மேல் விளங்கும் நான்முகனும், ஆற்றல் பொருந்திய ஆதிசேடனாகிய அணையில் உறங்கும் திருமாலும் காணுதற்கு இயலாத, இயமனை உதைத்த குழகன் ஆகிய கோலக்காவில் விளங்கும் ஆன்ஏற்றை வாகனமாகக் கொண்ட இறைவன் திருவடிகளைப் போற்றி வாழ்வீர்களாக. |
| 248. பெற்ற மாசு பிறக்குஞ் சமணரும்<br>உற்ற துவர்தோ யுருவி லாளருங்<br>குற்ற நெறியார் கொள்ளார் கோலக்காப்<br>பற்றிப் பரவப் பறையும் பாவமே. | நீராடாமல் தம் உட—ற் சேர்ந்த மாசுடன் தோன்றும் சமணரும், தம் உட—ற் பொருந்திய கல்லாடையால் தம் உருவை மறைத்துக் கொள்ளும் புத்தர்களும், குற்றமுடைய சமய நெறியை மேற்கொண்டவராவர். அவர்கள் தம் தெய்வம் என்று ஏற்றுக் கொள்ளாத கோலக்கா இறைவனைப் பற்றிப் போற்றப் பாவம் தீரும். |
| 249. நலங்கொள் காழி ஞானசம் பந்தன்<br>குலங்கொள் கோலக் காவு ளானையே<br>வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்<br>உலங்கொள் வினைபோ யோங்கி வாழ்வரே. | இயற்கை நலங்கள் யாவும் நிறைந்த சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், பண்பால் உயர்ந்த குலத்தினரைக் கொண்டுள்ள கோலக்காவில் விளங்கும் இறைவனைப் பாடிய திருவருள் வென்றியைக் கொண்ட இத்திருப் பதிகப் பாடல்களை ஓதி வழிபடவல்ல வாய்மையாளர், மலை போலும் திண்ணிய வினைகள் நீங்கப்பெற்றுச் சிறந்து வாழ்வர். |

## 24. சீகாழி

பண் : தக்கராகம் — முதல் திருமுறை பதிக எண் : 24

| | |
|---|---|
| 250. பூவார் கொன்றைப் புரிபுன் சடையீசா<br>காவா யெனநின் றேத்துங் காழியார்<br>மேவார் புரமூன் றட்டா ரவர்போலாம்<br>பாவா ரின்சொற் பயிலும் பரமரே. | பாடல்களின் சொற்பொருளாய்க் கலந்து நிற்கும் பரமர், பக்தர்கள், 'கொன்றைப் பூக்கள் பொருந்திய முறுக்கேறிய செஞ்சடை ஈசா காவாய்'! என நின்று துதித்துப்போற்றும் சீகாழிப் பதியினராவார். மனம் ஒன்றாத அசுரர்களின் மூன்று புரங்களை அழித்தவரும் அவரேயாவார். |
| 251. எந்தை யென்றங் கிமையோர் புகுந்தீண்டிக்<br>கந்த மாலை கொடுசேர் காழியார்<br>வெந்த நீற்றர் விமல ரவர்போலாம்<br>அந்தி நட்ட மாடும் மடிகளே. | அந்திக் காலத்தில் நடனம் ஆடும் அடிகளாகிய இறைவர், தேவர்கள் எந்தையே என் அன்போடு அழைத்து ஆலயத்துட் புகுந்து குழுமி மணம்மிக்க மாலைகளை அணிவித்தற் பொருட்டுச் சேரும் சீகாழிப் பதியினராவார். அவரே நன்றாகச் சுட்டு எடுத்த திருநீற்றை அணிந்தவரும், குற்றம் அற்றவருமாவார். |
| 252. தேனை வென்ற மொழியா ளொருபாகங்<br>கான மான்கைக் கொண்ட காழியார்<br>வான மோங்கு கோயி லவர்போலாம்<br>ஆன வின்ப மாடும் மடிகளே. | முற்றிய இன்பத்தோடு ஆடுகின்ற சிவபிரான், இனிப்பில் தேனை வென்று விளங்கும் மொழிகளைப் பேசுகின்ற உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு காட்டில் திரியும் இயல்பினதாகிய மானைக் கையின்கண் ஏந்தி விளங்கும் காழிப் பதியினராவார். அவர் வானளாவ உயர்ந்த திருக்கோயி–ல் விளங்குபவர் ஆவார். |
| 253. மாணா வென்றிக் காலன் மடியவே<br>காணா மாணிக் களித்த காழியார்<br>நாணார் வாளி தொட்டா ரவர்போலாம்<br>பேணார் புரங்க ளட்ட பெருமானே. | தம்மைப் பேணி வழிபடாத அசுரர்களின் முப்புரங்களை அழித்த பெருமான், மாட்சிமையில்லாத வெற்றியை உடைய காலனை மடியுமாறு செய்து, தம்மையன்றி வேறொன்றையும் காணாத மார்க்கண்டேய முனிவருக்கு என்றும் பதினாறாண்டோடு விளங்கும் வரத்தை அளித்தருளிய காழிப் பதியினர் ஆவார். முப்புரங்களை அழித்தற்பொருட்டு நாணிற் பூட்டிய அம்பைத் தொடுத்தவருமாவார். |
| 254. மாடே யோத மெறிய வயற்செந்நெற்<br>காடே றிச்சங் கீனுங் காழியார்<br>வாடா மலராள் பங்க ரவர்போலாம்<br>ஏடார் புரமூன் றெரித்த விறைவரே. | குற்றம் பொருந்திய அசுரர்களின் புரங்கள் மூன்றையும் எரித்தருளிய இறைவர். அருகில் கடல் நீரின் அலைகள் எறிந்த சங்குகள் வயல்களில் விளைந்த செந்நெற் பயிர்களின் செறிவில் ஏறி முத்துக்களை ஈனும் சீகாழிப் பதியினர். அவர் வாடா மலர்களைச் சூடி விளங்கும் பார்வதி தேவியைத் தம் திருமேனியின் ஒரு பங்காக உடையவராவார். |

| | |
|---|---|
| 255. கொங்கு செருந்தி கொன்றை மலர்கூடக்<br>கங்கை புனைந்த சடையார் காழியார்<br>அங்க ணரவ மாட்டு மவர்போலாஞ்<br>செங்க ணரக்கர் புரத்தை யெரித்தாரே. | சிவந்த கண்களை உடைய அரக்கர் மூவரின் திரிபுரங்களை எரித்தவராகிய இறைவர், கோங்கு, செருந்தி, கொன்றை மலர் இவற்றுடன் கங்கையை அணிந்துள்ள சடைமுடியினர். அக்காழியர் தாம் அணிந்துள்ள பாம்புகளை அவ்விடத்தே தங்கி ஆட்டுபவராகவும் உள்ளார். |
| 256. கொல்லை விடைமுன் பூதங் குனித்தாடுங்<br>கல்ல வடத்தை யுகப்பார் காழியார்<br>அல்ல விடத்து நடந்தா ரவர்போலாம்<br>பல்ல விடத்தும் பயிலும் பரமரே. | எல்லா இடங்களிலும் நிறைந்து விளங்கும் பரமராகிய பெருமானார், முல்லை நிலத்துக்குரிய ஆன் ஏற்றை ஊர்ந்து அதன் முன்னே பூத கணங்கள் வளைந்து நெளிந்து ஆடிச்செல்லக் கல்லவடம் என்னும் பறையை விரும்புபவர். அக்காழியார் தம்மை அறிந்து போற்றுநர் அல்லாதார் இடங்களிலும் தோன்றி அருள் வழங்கும் இயல்பினர். |
| 257. எடுத்த வரக்க னெரிய விரலூன்றிக்<br>கடுத்து முரிய வடர்த்தார் காழியார்<br>எடுத்த பாடற் கிரங்கு மவர்போலாம்<br>பொடிக்கொள் நீறு பூசும் புனிதரே. | பொடியாக அமைந்த திருநீற்றைப் பூசும் தூயவராகிய பெருமானார், கயிலைமலையை எடுத்த இராவணனின் முடிகள் நெரியுமாறு தம் கால் விரலை ஊன்றிச் சினந்து அவனது ஆற்றல் அழியுமாறு அடர்த்தவர். அக்காழியார் இராவணன் எடுத்த பாடலாகிய சாமகானத்துக்கு இரங்கி அருள் செய்தவராவார். |
| 258. ஆற்ற லுடைய வரியும் பிரமனுந்<br>தோற்றங் காணா வென்றிக் காழியார்<br>ஏற்ற மேறங் கேறு மவர்போலாங்<br>கூற்ற மறுகக் குமைத்த குழகரே. | வாழ்நாளைக் கூறுபடுத்திக் கணக்கிட்டு உயிர்கொள்ளும் இயமன் அஞ்சுமாறு அவனை உதைத்து, மார்க்கண்டேயர்க்கு அருள்செய்த குழகராகிய சிவபிரானார், ஆற்றல் உடைய திருமாலும் பிரமனும் தம் அடிமுடிகள் தோன்றுமிடங்களைக் காணாதவாறு வானுற ஓங்கிய வெற்றியை உடையவராய்க் காழிப்பதியில் எழுந்தருளியுள்ளார். அவர் மிக உயர்ந்த ஆன்ஏற்றில் ஏறி உலா வந்து அருள்பவராவார். |
| 259. பெருக்கப் பிதற்றுஞ் சமணர் சாக்கியர்<br>கரக்கு முரையை விட்டார் காழியார்<br>இருக்கின் ம–ந்த விறைவ ரவர்போலாம்<br>அருப்பின் முலையாள் பங்கத் தையரே. | தாமரை அரும்பு போன்ற தனபாரங்களை உடைய உமையம்மையை ஒருபங்காகக் கொண்டுள்ள தலைவராகிய சிவபிரான், உண்மையின்றி மிகப் பிதற்றுகின்ற சமணர் சாக்கியர்களின் வஞ்சக உரைகளைக் கொள்ளாதவராய்க் காழியில் எழுந்தருளியுள்ளார். அவரே இருக்கு வேதத்தில் நிறைந்துள்ள இறைவரும் ஆவார். |
| 260. காரார் வயல்சூழ் காழிக் கோன்றனைச்<br>சீரார் ஞான சம்பந் தன்சொன்ன<br>பாரார் புகழப் பரவ வல்லவர்<br>ஏரார் வானத் தினிதா விருப்பரே. | நீர்வளத்தால் கருஞ்சேறுபட்டு விளங்கும் வயல்களால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் விளங்கும் கோமகனாகிய சிவபிரான்மீது, சிறப்புப் பொருந்திய ஞானசம்பந்தன் அருளிச்செய்த பாடல்களை ஓதி உலகோர் போற்றத் துதிக்க வல்லவர், அழகிய வானகத்தில் இனிதாக இருப்பர். |

## 25. திருச்செம்பொன்பள்ளி

பண் : தக்கராகம் — முதல் திருமுறை பதிக எண் : 25

261. மருவார் குழ– மாதோர் பாகமாய்த்
திருவார் செம்பொன் பள்ளி மேவிய
கருவார் கண்டத் தீசன் கழல்களை
மருவா தவர்மேன் மன்னும் பாவமே.

மணம் பொருந்திய கூந்தலை உடையவளாகிய பார்வதிதேவியை ஒரு பாகமாக உடையவராய்த் திருமகள் வாழும் செம்பொன்பள்ளி என வழங்கும் திருத்தலக் கோயி–ல் எழுந்தருளிய, கருநீலம் பொருந்திய கண்டத்தை உடைய ஈசன் திருவடிகளை வணங்கி அவற்றைத் தம் மனத்தே பொருந்த வையாதவர்களைப் பாவங்கள் பற்றும்.

262. வாரார் கொங்கை மாதோர் பாகமாய்ச்
சீரார் செம்பொன் பள்ளி மேவிய
ஏரார் புரிபுன் சடையெம்மீசனைச்
சேரா தவர்மேற் சேரும் வினைகளே.

கச்சணிந்த தனங்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவராய், சிறப்புப் பொருந்திய செம்பொன் பள்ளியில் எழுந்தருளிய அழகிய முறுக்கேறிய சிவந்த சடைமுடியை உடைய எம் ஈசனாகிய சிவபிரானைச் சென்று வணங்கி இடைவிடாது மனத்தில் நினையாதவர்களிடம் வினைகள் சேரும்.

263. வரையார் சந்தோ டகிலும் வருபொன்னித்
திரையார் செம்பொன் பள்ளி மேவிய
நரையார் விடையொன் றூரும் நம்பனை
உரையா தவர்மே லொழியா வூனமே.

மலைகளில் செழித்து வளர்ந்த சந்தன மரங்களோடு, அகில் மரங்களையும் அடித்துக் கொண்டு வருகின்ற பொன்னி நதிக்கரையில் விளங்கும் செம்பொன்பள்ளியில் எழுந்தருளிய வெண்ணிறம் பொருந்திய விடை ஒன்றை ஊர்ந்து வருபவனாகிய சிவபெருமான் புகழை உரையாதவர்களைப் பற்றியுள்ள குற்றங்கள் ஒழியா.

264. மழுவா ளேந்தி மாதோர்பாகமாய்ச்
செழுவார் செம்பொன் பள்ளி மேவிய
எழிலார் புரிபுன் சடையெம் மிறைவனைத்
தொழுவார் தம்மேற் றுயர மில்லையே.

மழுவாகிய வாளை ஏந்தி உமையொரு பாகனாய் வளம் பொருந்திய செம்பொன் பள்ளியில் எழுந்தருளிய அழகு பொருந்திய முறுக்கேறிய சிவந்த சடைமுடியை உடைய எம் இறைவனைத் தொழுபவர்கட்குத் துயரம் இல்லை.

265. மலையான் மகளோ டுடனாய் மதிலெய்த
சிலையார் செம்பொன் பள்ளி யானையே
இலையார் மலர்கொண் டெல்– நண்பகல்
நிலையா வணங்க நில்லா வினைகளே.

மலையரையன் மகளாகிய பார்வதி தேவியோடு உடனாய் விளங்குபவனும், அசுரர்களின் மும்மதில்களை எய்தழித்த மலை வில்லை உடையவனுமாகிய செம்பொன் பள்ளியில் விளங்கும் சிவபிரானையே, இலைகளையும் மலர்களையும் கொண்டு இரவிலும் நண்பக–லும் மனம் நிலைத்து நிற்குமாறு வணங்குவார் மேல் வினை நில்லா.

| | |
|---|---|
| 266. அறையார் புனலோ டகிலும் வருபொன்னிச்<br>சிறையார் செம்பொன் பள்ளி மேவிய<br>கறையார் கண்டத் தீசன் கழல்களை<br>நிறையால் வணங்க நில்லா வினைகளே. | பாறைகளிற் பொருந்திவரும் நீரில் அகில் மரங்களையும் அடித்துவரும் பொன்னியாற்றின் கரையில் அமைந்த செம்பொன்பள்ளியில் எழுந்தருளிய விடக்கறை பொருந்திய கண்டத்தை உடைய ஈசன் திருவடிகளை மன ஒருமைப்பாட்டோடு வணங்க வினைகள் நில்லா. |
| 267. பையா ரரவே ரல்கு லாளொடும்<br>செய்யார் செம்பொன் பள்ளி மேவிய<br>கையார் சூல மேந்து கடவுளை<br>மெய்யால் வணங்க மேவா வினைகளே. | அரவின் படம் போன்ற அழகிய அல்குலை உடைய உமையம்மையோடு வயல்கள் சூழ்ந்த செம்பொன்பள்ளியில் வீற்றிருக்கின்ற கையில் பொருந்திய சூலத்தை ஏந்தி விளங்கும் கடவுளை உடம்பால் வணங்க வினைகள் மேவா. |
| 268. வானார் திங்கள் வளர்புன் சடைவைத்துத்<br>தேனார் செம்பொன் பள்ளி மேவிய<br>ஊனார் தலையிற் ப–கொண் டுழல்வாழ்க்கை<br>ஆனான் கழலே யடைந்து வாழ்மினே. | வானத்தில் விளங்கும் பிறை மதியை, வளர்ந்துள்ள சிவந்த தன் சடைமீது வைத்து, இனிமை பொருந்திய செம்பொன் பள்ளியில் எழுந்தருளியவனும், புலால் பொருந்திய பிரமனது தலையோட்டில் ப–யேற்று உழல்வதையே தன் வாழ்வின் தொழிலாகக் கொண்டவனும் ஆகிய சிவபிரான் திருவடிகளையே அடைந்து வாழ்மின். |
| 269. காரார் வண்ணன் கனக மனையானும்<br>தேரார் சொம்பொன் பள்ளி மேவிய<br>நீரார் நிமிர்புன் சடையெந் நிமலனை<br>ஓரா தவர்மே லொழியா வூனமே. | நீலமேகம் போன்ற நிறமுடையோனாகிய திருமாலும், பொன்னிறமேனியனாகிய பிரமனும், தேடிக் காணொணாதவனும் செம்பொன் பள்ளியில் எழுந்தருளிய கங்கை அணிந்த நிமிர்த்துக் கட்டிய சிவந்த சடைமுடியை உடையவனுமாகிய குற்றமற்ற எம் இறைவனை மனம் உருகித் தியானியாதவர் மேல் உளதாகும் குற்றங்கள் நீங்கா. |
| 270. மாசா ருடம்பர் மண்டைத் தேரரும்<br>பேசா வண்ணம் பேசித் திரியவே<br>தேசார் செம்பொன் பள்ளி மேவிய<br>ஈசா வென்ன நில்லா விடர்களே. | அழுக்கேறிய உட–னராகிய சமணரும், மண்டை என்னும் உண்கலத்தை ஏந்தித் திரிபவர்களாகிய புத்தரும், பேசக் கூடாதவைகளைப் பேசித் திரிய அன்பர்கள் ''ஒளி பொருந்திய செம்பொன் பள்ளியில் மேவிய ஈசா!'' என்று கூற அவர்களுடைய இடர்கள் பலவும் நில்லா. |
| 271. நறவார் புக– ஞான சம்பந்தன்<br>செறுவார் செம்பொன் பள்ளி மேயானைப்<br>பெறுமா றிசையாற் பாட –வைபத்தும்<br>உறுமா சொல்ல வோங்கி வாழ்வரே. | தேன் நிறைந்த பொழில்களால் சூழப்பட்ட புக–ப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் வயல்கள் சூழ்ந்த செம்பொன் பள்ளி இறைவன் அருளைப் பெறுமாறு பாடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் இசையோடு தமக்குவந்த அளவில் ஓதவல்லவர் ஓங்கி வாழ்வர். |

## 26. திருப்புத்தூர்

பண் : தக்கராகம் | முதல் திருமுறை பதிக எண் : 26

| | |
|---|---|
| 272. வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலை<br>திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்க்<br>கங்கை தங்கு முடியா ரவர்போலும்<br>எங்க ளுச்சி யுறையு மிறையாரே. | விரும்பத்தக்க தேன் விம்மிச் சுரந்துள்ள, மணம் பொருந்திய சோலைகள் வானளாவ உயர்ந்து, அங்குத் தவழும் திங்களோடு பழகித் திளைக்கும் வளம் உடைய திருப்புத்தூரில் எழுந்தருளிய கங்கை தங்கிய சடைமுடியினராகிய பெருமானார் எங்கள் சிரங்களின்மேல் தங்கும் இறைவர் ஆவார். |
| 273. வேனல் விம்மு வெறியார் பொழிற்சோலைத்<br>தேனும் வண்டுந் திளைக்குந் திருப்புத்தூர்<br>ஊனமின்றி யுறைவா ரவர்போலும்<br>ஏன முள்ளு மெயிறும் புனைவாரே. | தேவர்களின் வேண்டுகோளை ஏற்றுப் பன்றி வடிவமெடுத்த திருமால் உலகை அழிக்கத் தொடங்கிய காலத்து, அதனை அடக்கி, அதன் பல்லையும் கொம்பையும் பறித்துத் தன் மார்பில் அணிந்தவர். வேனிற் காலத்தில் வெளிப்படும் மணம் நிறைந்துள்ள பொழில்களிலும் சோலைகளிலும் வாழும் வண்டுகள் தேனை உண்டு திளைத்து ஒ– செய்யும் திருப்புத்தூரில் குறையின்றி உறையும் பெருமானார் ஆவர். |
| 274. பாங்கு நல்ல வரிவண் டிசைபாடத்<br>தேங்கொள் கொன்றை திளைக்குந் திருப்புத்தூர்<br>ஓங்கு கோயி லுறைவா ரவர்போலும்<br>தாங்கு திங்கள் தவழ்புன் சடையாரே. | தம்மை அடைக்கலமாக அடைந்த திங்கள் தவழும் செந்நிறச் சடைமுடியினை உடைய இறைவர், நல்ல வரிகளை உடைய வண்டுகள் பாங்கரி–ருந்து இசைபாடத் தேன் நிறைந்த கொன்றை மலர்கள் முடிமிசைத் திளைத்து விளங்கத் திருப்புத்தூரில் ஓங்கி உயர்ந்த கோயி–ல் எழுந்தருளிய பெருமானார் ஆவார். கொன்றை – திருப்புத்தூர் தல விருட்சம். |
| 275. நாற விண்ட நறுமா மலர்கவ்வித்<br>தேறல் வண்டு திளைக்குந் திருப்புத்தூர்<br>ஊறல் வாழ்க்கை யுடையா ரவர்போலும்<br>ஏறு கொண்ட கொடியெம் மிறையாரே. | ஆன் ஏற்றுக் கொடியைத் தனதாகக் கொண்ட எம் இறைவர், மணம் வீசுமாறு மலர்ந்த சிறந்த நறுமலர்களைத் தம் வாயால் கவ்வி வண்டுகள் தேனை உண்டு திளைக்கும் திருப்புத்தூரில் பலகாலம் தங்கிய வாழ்க்கையினை உடையவர் ஆவார். |
| 276. இசைவி ளங்கு மெழில்சூழ்ந் தியல்பாகத்<br>திசைவி ளங்கும் பொழில்சூழ் திருப்புத்தூர்<br>பசைவி ளங்கப் படித்தா ரவர்போலும்<br>வசைவி ளங்கும் வடிசேர் நுதலாரே. | கங்கையாகிய பெண் விளங்கும் அழகிய சென்னியினராகிய இறைவர், புகழால் விளக்கம் பெற்றதும், இயல்பாக அழகு சூழ்ந்து விளங்குவதும், நாற்றிசைகளிலும் பொழில்கள் சூழ்ந்ததுமான திருப்புத்தூரில், தம்மை வழிபடுவார்க்கு அன்பு வளருமாறு பழகும் பெருமானார் ஆவார். |
| 277. வெண்ணி றத்த விரையோ டலருந்தித்<br>தெண்ணி றத்த புனல்பாய் திருப்புத்தூர்<br>ஒண்ணி றத்த வொளியா ரவர்போலும்<br>வெண்ணி றத்த விடைசேர் கொடியாரே. | வெண்மை நிறமுடைய விடை உருவம் எழுதிய கொடியை உடைய இறைவர், வெள்ளிய நிறமுடையனவாய் மணம் பொருந்திய மலர்களை அடித்துக் கொண்டு தெளிந்த தன்மை உடையதாய்த் தண்ணீர் பாயும் திருப்புத்தூரில் எழுந்தருளிய ஒண்மை பொருந்திய ஒளியை உடைய பெருமானார் ஆவார். |

| | |
|---|---|
| 278. நெய்த லாம்பல் கழுநீர் மலர்ந்தெங்கும்<br>செய்கண் மல்கு சிவனார் திருப்புத்தூர்த்<br>தையல் பாக மகிழ்ந்தா ரவர்போலும்<br>மையு ணஞ்ச மருவு மிடற்றாரே. | கருமை பொருந்திய நஞ்சு மருவும் மிடற்றினராய இறைவர், நெய்தல், ஆம்பல், செங்கழுநீர் ஆகிய மலர்கள் வயல்கள் எங்கும் மலர்ந்து நிறைந்து விளங்கும் திருப்புத்தூரில் எழுந்தருளிய உமையொரு பாகம் மகிழ்ந்த சிவனாராவார். |
| 279. கருக்க மெல்லாங் கமழும் பொழிற்சோலைத்<br>திருக்கொள் செம்மை விழவார் திருப்புத்தூர்<br>இருக்க வல்ல விறைவ ரவர்போலும்<br>அரக்க னொல்க விரலா லடர்த்தாரே. | இராவணனாகிய அரக்கனைக் கால் விரலால் தளர அடர்த்தவராகிய பெருமானார், மேகங்களிலும் பரவிக் கமழும் மணமுடைய பொழில்களாலும் சோலைகளாலும் சூழப்பெற்றதும், செல்வம் நிறைந்ததும், செம்மையாளர் வாழ்வதும், திருவிழாக்கள் பல நிகழ்வதுமாய திருப்புத்தூரில் எழுந்தருளியிருக்க வல்லவராய இறைவராவார். |
| 280. மருவி யெங்கும் வளரும் மடமஞ்ஞை<br>தெருவு தோறுந் திளைக்குந் திருப்புத்தூர்ப்<br>பெருகி வாழும் பெருமா னவன்போலும்<br>பிரமன் மாலு மறியாப் பெரியோனே. | பிரமனும் திருமாலும் அறிய முடியாத பெரியோனாகிய இறைவன், எங்கும் பொருந்தியனவாய் வளரும் இள மயில்கள் தெருக்கள் தோறும் உலவிக் களிக்கும் திருப்புத்தூரில் பெருமை பெருகியவனாய் வாழும் பெருமானாவான். |
| 281. கூறை போர்க்குந் தொழிலா ரமண்கூறல்<br>தேறல் வேண்டா தெளிமின் றிருப்புத்தூர்<br>ஆறு நான்கு மமர்ந்தா ரவர்போலும்<br>ஏறு கொண்ட கொடியெம் மிறையாரே. | மேல் ஆடையைப் போர்த்துத் திரிதலைத் தொழிலாகக் கொண்ட பௌத்தர் சமணர் ஆகியவருடைய உரைகளை நம்பாதீர்கள். ஆனேறு எழுதிய கொடியினை உடையவராய்த் திருப்புத்தூரில் நான்கு வேதங்களாகவும், ஆறு அங்கங்களாகவும் விளங்கும் பெருமானாராகிய அவரைத் தெளிமின். |
| 282. நல்ல கேள்வி ஞான சம்பந்தன்<br>செல்வர் சேட ருறையுந் திருப்புத்தூர்ச்<br>சொல்லல் பாடல் வல்லார் தமக்கென்றும்<br>அல்லல் தீரு மவல மடையாவே. | நன்மை தரும் வேதங்களை உணர்ந்த ஞானசம்பந்தன், செல்வரும் உயர்ந்தவருமான சிவபெருமான் உறையும் திருப்புத்தூரை அடைந்து வழிபட்டுச் சொல்–ய பத்துப் பாடல்களையும் சொல்லவல்லவர்கட்குத் துன்பங்கள் நீங்கும். எக்காலத்தும் அவலம் அவர்களை அடையா. |

## 27. திருப்புன்கூர்

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 27**

| | |
|---|---|
| 283. முந்தி நின்ற வினைக ளவைபோகச்<br>சிந்தி நெஞ்சே சிவனார் திருப்புன்கூர்<br>அந்த மில்லா வடிக ளவர்போலும்<br>கந்த மல்கு கமழ்புன் சடையாரே. | நெஞ்சே! பல பிறவிகளிலும் செய்தனவாய சஞ்சித, ஆகாமிய வினைகளுள் பக்குவப்பட்டுப் பிராரத்த வினையாய்ப் புசிப்பிற்கு முற்பட்டு நின்ற வினைகள் பலவும் நீங்க, திருப்புன்கூரில் ஆதி அந்தம் இல்லாத தலைவராய், மணம் நிறைந்து கமழும் செந்நிறச் சடைமுடி உடையவராய் எழுந்தருளிய சிவபிரானாரைச் சிந்தனை செய்வாயாக. |

| | |
|---|---|
| 284. மூவ ராய முதல்வர் முறையாலே<br>தேவ ரெல்லாம் வணங்குந் திருப்புன்கூர்<br>ஆவ ரென்னு மடிக ளவர்போலும்<br>ஏவி னல்லா ரெயின்மூன் றெரித்தாரே. | பகைமை பூண்டவராய அசுரர்களின் மூன்று அரண்களைக் கணையொன்றால் எரித்தழித்த இறைவர், பிரமன், மால், உருத்திரன் ஆகிய மூவராயும் அவர்களுக்கு முதல்வராயும், தேவர்கள் எல்லோரும் முறையாக வந்து வணங்குபவராயும் விளங்கும் திருப்புன்கூரில் எழுந்தருளிய அடிகள் ஆவர். |
| 285. பங்க யங்கண் மலரும் பழனத்துச்<br>செங்க யல்கள் திளைக்குந் திருப்புன்கூர்க்<br>கங்கை தங்கு சடையா ரவர்போலும்<br>எங்க ளுச்சி யுறையும் மிறையாரே. | எங்கள் தலைகளின் மேல் தங்கி விளங்கும் இறைவர், தாமரை மலர்கள் மலரும் வயல்களில் சிவந்த கயல் மீன்கள் திளைத்து மகிழும் திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள கங்கை தங்கிய சடைமுடியினராகிய சிவபெருமானாராவர். |
| 286. கரையு லாவு கதிர்மா மணிமுத்தம்<br>திரையு லாவு வயல்சூழ் திருப்புன்கூர்<br>உரையி னல்ல பெருமா னவர்போலும்<br>விரையி னல்ல மலர்ச்சே வடியாரே. | மணத்தால் மேம்பட்ட தாமரைமலர் போலும் சிவந்த திருவடிகளை உடைய இறைவர், ஒளி பொருந்திய சிறந்த மாணிக்கங்கள் கரைகளில் திகழ்வதும், முத்துக்கள் நீர்த் திரைகளில் உலாவுவதும் ஆகிய வளம்மிக்க வயல்கள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளிய புகழ்மிக்க நல்ல பெருமானாராவார். |
| 287. பவள வண்ணப் பரிசார் திருமேனி<br>திகழும் வண்ண முறையுந் திருப்புன்கூர்<br>அழக ரென்னு மடிக ளவர்போலும்<br>புகழ நின்ற புரிபுன் சடையாரே. | உலகோர் புகழ நிலைபெற்ற, முறுக்கிய சிவந்த சடைமுடியை உடைய இறைவர், பவளம் போலும் தமது திருமேனியின் செவ்வண்ணம் திகழுமாறு திருப்புன்கூரில் உறையும் அழகர் என்னும் அடிகளாவார். |
| 288. தெரிந்தி லங்கு கழுநீர் வயற்செந்நெல்<br>திருந்த நின்ற வயல்சூழ் திருப்புன்கூர்ப்<br>பொருந்தி நின்ற வடிக ளவர்போலும்<br>விரிந்தி லங்கு சடைவெண் பிறையாரே. | விரிந்து விளங்கும் சடைமுடியில் வெண்பிறை அணிந்த இறைவர், கண்களுக்குப் புலனாய் அழகோடு திகழும் செங்கழுநீர் மலர்ந்த வயல்களாலும், செந்நெற் கதிர்கள் அழகோடு நிறைந்து நிற்கும் வயல்களாலும் சூழப்பெற்ற திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள அடிகள் ஆவார். |
| 289. பாரும் விண்ணும் பரவித் தொழுதேத்தும்<br>தேர்கொள் வீதி விழவார் திருப்புன்கூர்<br>ஆர நின்ற வடிக ளவர்போலும்<br>கூர நின்ற வெயின்மூன் றெரித்தாரே. | கொடியனவாய்த் தோன்றி இடர் விளைத்து நின்ற முப்புரங்களையும் எரித்தழித்த இறைவர், மண்ணக மக்களும் விண்ணகத் தேவரும் பரவித் தொழுதேத்துமாறு தேரோடும் திருவீதிகளை உடையதும், எந்நாளும் திருவிழாக்களால் சிறந்து திகழ்வதுமான திருப்புன்கூரில் பொருந்தி நின்ற அடிகளாவார். |
| 290. மலைய தனா ருடைய மதின்மூன்றும்<br>சிலைய தனா வெரித்தார் திருப்புன்கூர்த்<br>தலைவர் வல்ல வரக்கன் றருக்கினை<br>மலைய தனா லடர்த்து மகிழ்ந்தாரே. | வ–மை பொருந்திய இராவணன் செருக்கைப் போக்க, அவனைக் கயிலை மலையாலே அடர்த்துப் பின் அவன் வேண்ட மகிழ்ந்து அருள் வழங்கிய இறைவர், தேவர்களோடு சண்டையிட்டு அவர்களை அழிக்கும் குணம் உடையவராய அசுரர்களின் முப்புரங்களை வில்லால் எரித்தழித்தவராகிய திருப்புன்கூர்த் தலைவர் ஆவார். |

**291.** நாட வல்ல மலரான் மாலுமாய்த்
தேட நின்றா ருறையுந் திருப்புன்கூர்
ஆட வல்ல வடிக ளவர்போலும்
பாட லாடல் பயிலும் பரமரே.

பாடல் ஆடல் ஆகிய இரண்டிலும் வல்லவராய் அவற்றைப் பழகும் மேலான இறைவர், எதனையும் ஆராய்ந்தறித–ல் வல்ல நான்முகனும், திருமாலும் தேடி அறிய இயலாதவராய் ஓங்கி நின்றவர். அப்பெருமான் திருப்புன்கூரில் உறையும் ஆடல்வல்ல அடிகள் ஆவார்.

**292.** குண்டு முற்றிக் கூறை யின்றியே
பிண்ட முண்ணும் பிராந்தர் சொற்கொளேல்
வண்டு பாட மலரார் திருப்புன்கூர்க்
கண்டு தொழுமின் கபா– வேடமே.

கீழாந்தன்மை மிகுந்து ஆடையின்றி வீதிகளில் வந்து பிச்சை கேட்டுப் பெற்று, அவ்வுணவை விழுங்கி வாழும் மயக்க அறிவினராகிய சமணர்கள் கூறும் சொற்களைக் கேளாதீர். தேனுண்ண வந்த வண்டுகள் பாடுமாறு மலர்கள் நிறைந்து விளங்கும் திருப்புன்கூர் சென்று அங்கு விளங்கும் கபா–யாகிய சிவபிரானின் வடிவத்தைக் கண்டு தொழுவீர்களாக.

**293.** மாடமல்கு மதில்சூழ் காழிமன்
சேடர் செல்வ ருறையுந் திருப்புன்கூர்
நாட வல்ல ஞான சம்பந்தன்
பாடல் பத்தும் பரவி வாழ்மினே.

மாடவீடுகளால் நிறையப் பெற்றதும் மதில்கள் சூழ்ந்ததுமான சீகாழிப் பதிக்குத் தலைவனாய், எதையும் நாடி ஆராய்த–ல் வல்ல ஞானசம்பந்தன், பெரியோர்களும் செல்வர்களும் வாழும் திருப்புன்கூர் இறைவர்மீது பாடிய பாடல்கள் பத்தையும் பரவி வாழ்வீர்களாக.

## 28. திருச்சோற்றுத்துறை

**பண் : தக்கராகம்** — **முதல் திருமுறை பதிக எண் : 28**

**294.** செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்ப னென்னா தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமா னொளிவெண்ணீற்
றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே.

நெஞ்சே, முறையான சிற்றின்பத்தைத் தன் முனைப்போடு ''யான் துய்ப்பேன்'' என்னாது, "அருளே துணையாக நுகர்வேன்" என்று கூற, இறைவர் அதனை ஏற்பர். அத்தகைய பெருமானார், ஒளி பொருந்திய திருவெண்ணீறு அணிந்த மேனியராய்த் தலைவராய் விளங்கும், திருச்சோற்றுத் துறையைச் சென்றடைவோம்.

**295.** பாலு நெய்யுந் தயிரும் பயின்றாடித்
தோலு நூலுந் துதைந்த வரைமார்பர்
மாலுஞ் சோலை புடைசூழ் மடமஞ்ஞை
ஆலுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே.

பாலையும் நெய்யையும் தயிரையும் விரும்பி யாடிப் பு–த்தோலும் முப்புரி நூலும் பொருந்திய மலை போன்று விரிந்த மார்பினராய் விளங்கும் சிவபிரான் எழுந்தருளிய, மயக்கும் சோலைகளால் சூழப்பெற்ற, இள மயில்கள் ஆரவாரிக்கும் திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

**296.** செய்யர் செய்ய சடையர் விடையூர்வர்
கைகொள் வேலர் கழலர் கரிகாடர்
தைய லாளொர் பாக மாயவெம்
ஐயர் சோற்றுத் துறைசென் றடைவோமே.

சிவந்த திருமேனியரும், செம்மை நிறமுடைய சடைமுடியினரும், விடையூர்ந்து வருபவரும், கையில் பற்றிய சூலத்தினரும், வீரக்கழல் அணிந்தவரும், இடுகாட்டில் விளங்குபவரும், உமையம்மையைத் தன்மேனியில் ஒரு கூறாகக் கொண்டவருமான எம் தலைவராய சிவபிரான் எழுந்தருளிய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

| | |
|---|---|
| 297. பிணிகொ ளாக்கை யொழியப் பிறப்புளீர்<br>துணிகொள் போரார் துளங்கு மழுவாளர்<br>மணிகொள் கண்டர் மேய வார்பொழில்<br>அணிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே. | நோய்கட்கு இடமான இவ்வுடலுடன் பிறத்தல் ஒழியுமாறு இப்பிறப்பைப் பயன்படுத்த எண்ணும் அறிவுடையவர்களே, துணித்தலைச் செய்வதும், போர் செய்தற்கு உரியதுமான விளங்கும் மழுவாயுதத்தைக் கையில் ஏந்தியவரும், நீலமணி போன்ற கண்டத்தை உடையவருமான, சிவபெருமான் மேவிய நீண்ட பொழில்கள் சூழ்ந்த அழகிய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோமாக. |
| 298. பிறையு மரவும் புனலுஞ் சடைவைத்து<br>மறையு மோதி மயான மிடமாக<br>உறையுஞ் செல்வ முடையார் காவிரி<br>அறையுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. | இளம் பிறையையும் பாம்பையும் கங்கையையும் சடையில் அணிந்து, நான்மறைகளை ஓதிக் கொண்டு, சுடுகாட்டைத் தமது இடமாகக் கொண்டு உறையும், வீடு பேறாகிய செல்வத்தை உடைய இறைவரின் காவிரி நீர் ஒ– செய்யும் திருச்சோற்றுத் துறையைச் சென்றடைவோம். |
| 299. துடிக ளோடு முழவம் விம்மவே<br>பொடிகள் பூசிப் புறங்கா டரங்காகப்<br>படிகொள் பாணி பாடல் பயின்றாடும்<br>அடிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே. | உடுக்கைகள் பலவற்றோடு முழவங்கள் ஒ–க்கத் தம் மேனி மீது திருநீற்றுப் பொடி பூசி, புறங்காடாகிய சுடுகாட்டை அரங்காகக் கொண்டு, பொருத்தமான தாளச் சதிகளோடு பாடல்கள் பாடி ஆடும் அடிகள் எழுந்தருளிய திருச்சோற்றுத்துறையைச் சென்று அடைவோம். |
| 300. சாடிக் காலன் மாளத் தலைமாலை<br>சூடி மிக்குச் சுவண்டாய் வருவார்தம்<br>பாடி யாடிப் பரவு வாருள்ளத்<br>தாடி சோற்றுத் துறைசென் றடைவோமே. | காலன் அழியுமாறு அவனைக் காலால் உதைத்துத் தலைமாலைகளை அணிந்து, பொருத்தம் உடையவராய் வருபவரும், பாடி ஆடிப் பரவுவார் உள்ளங்களில் மகிழ்வோடு நடனம் புரிபவருமான சிவபிரான் எழுந்தருளிய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம். |
| 301. பெண்ணோர் பாக முடையார் பிறைச்சென்னிக்<br>கண்ணோர் பாகங் கலந்த நுத–னார்<br>எண்ணா தரக்க னெடுக்க வூன்றிய<br>அண்ணல் சோற்றுத் துறைசென் றடைவோமே. | ஒருபாகமாக உமையம்மையை உடையவரும், பிறையணிந்த சென்னியரும், தமது திருமேனியில் ஒரு பாகமாக விளங்கும் நெற்றி விழியை உடையவரும், இராவணன் பின்விளையும் தீமையை எண்ணாது கயிலை மலையைப் பெயர்க்க, அவனது முனைப்பை அடக்கக் கால் விரலை ஊன்றிய தலைமைத் தன்மை உடையவருமாகிய சிவபிரானது திருச்சோற்றுத் துறையைச் சென்றடைவோம். |
| 302. தொழுவா ரிருவர் துயர நீங்கவே<br>அழலா யோங்கி யருள்கள் செய்தவன்<br>விழவார் மறுகில் விதியான் மிக்கவெம்<br>எழிலார் சோற்றுத் துறைசென் றடைவோமே. | தம் செருக்கடங்கித் தம்மைத் தொழுத திருமால் பிரமன் ஆகிய இருவர்க்கும், அழலுருவாய் ஓங்கி நின்று அருள்களைச் செய்தவன், விரும்பி உறையும் விழாக்கள் நிகழும் வீதிகளில் வேத விதியோடு வாழும் மக்களை உடைய சோற்றுத்துறையைச் சென்றடைவோம். |

| | |
|---|---|
| 303. கோது சாற்றித் திரிவா ரமண்குண்டர்<br>ஓது மோத்தை யுணரா தெழுநெஞ்சே<br>நீதி நின்று நினைவார் வேடமாம்<br>ஆதி சோற்றுத் துறைசென் றடைவோமே. | நெஞ்சே! குற்றங்களையே பலகாலும் சொல்–த்திரிபவராகிய சமண் குண்டர்கள் ஓதுகின்ற வேதத்தை அறிய முயலாது, சிவாகம நெறி நின்று, நினைப்பவர் கருதும் திருவுருவோடு வெளிப்பட்டருளும் முதல்வனாகிய சிவபிரானது சோற்றுத்துறையை நாம் சென்றடைவோம். |
| 304. அந்தண் சோற்றுத் துறையெம் மாதியைச்<br>சிந்தை செய்ம்மி னடியா ராயினீர்<br>சந்தம் பரவு ஞான சம்பந்தன்<br>வந்த வாறே புனைதல் வழிபாடே. | அடியவர்களாக உள்ளவர்களே! அழகு தண்மை ஆகியவற்றோடு விளங்கும் திருச்சோற்றுத் துறையில் எழுந்தருளிய எம் முதல்வனை மனத்தால் தியானியுங்கள். சந்த இசையால் ஞானசம்பந்தன் பாடிய இத்திருப்பதிகத்தைத் தமக்கு வந்தவாறு பாடி வழிபடுதலே அவ்விறைவற்கு நாம் செய்யும் வழிபாடாகும். |

## 29. திருநறையூர்ச்சித்தீச்சரம்

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 29**

| | |
|---|---|
| 305. ஊரு லாவு ப–கொண் டுலகேத்த<br>நீரு லாவு நிமிர்புன் சடையண்ணல்<br>சீரு லாவு மறையோர் நறையூரில்<br>சேருஞ் சித்தீச் சரஞ்சென் றடைநெஞ்சே. | நெஞ்சே! ஊர்கள்தோறும் உலாவுவதால் கிடைக்கும் உணவைப் பெற்று, உலகம் பரவக் கங்கை நீரைத் தன் திருமுடியில் ஏற்று, அக்கங்கை நீர் உலாவும் மேல்நோக்கின் சிவந்த சடைமுடியினை உடைய தலைமைத் தன்மை உடைய சிவபிரான் எழுந்தருளிய, சீருடைய மறையவர் வாழும் நகரான நறையூரில் விளங்கும் சித்தீச்சரத்தைச் சென்றடைவாயாக. |
| 306. காடு நாடுங் கலக்கப் ப–நண்ணி<br>ஓடு கங்கை யொளிர்புன் சடைதாழ<br>வீடு மாக மறையோர் நறையூரில்<br>நீடுஞ் சித்தீச் சரமே நினைநெஞ்சே. | நெஞ்சே! காட்டின்கண் முனிவர் குடில்களிலும், நாட்டின்கண் இல்லறத்தார் வீடுகளிலும் விரும்பிப் ப–யேற்று, ஓடி வரும் கங்கை தங்கிய ஒளிவீசும் சிவந்த சடைகள் தாழ, தம் உடல்களை விடுத்து, முத்திப்பேற்றை அடைய விரும்பும் அந்தணர் வாழும் நறையூரில், புகழால் நீடிய சித்தீச்சரத்தில் விளங்கும் பெருமானை நினைவாயாக. |
| 307. கல்வி யாளர் கனகம் மழன்மேனி<br>புல்கு கங்கை புரிபுன் சடையானூர்<br>மல்கு திங்கட் பொழில்சூழ் நறையூரில்<br>செல்வர் சித்தீச் சரஞ்சென் றடைநெஞ்சே. | நெஞ்சமே! பொன்னையும் தீயையும் ஒத்த திருமேனியராய், கங்கை தங்கும் முறுக்கேறிய சிவந்த சடையினை உடையவராய் விளங்கும் சிவபிரானது ஊர், கல்வியாளர் நிறைந்ததாய், திங்கள் தங்கும் பொழில்கள் சூழ்ந்ததாய் விளங்கும் நறையூராகும். அவ்வூரில் செல்வர் வணங்கும் சித்தீச்சரத்தைச் சென்றடைவாயாக. |
| 308. நீட வல்ல நிமிர்புன் சடைதாழ<br>ஆட வல்ல வடிக ளிடமாகும்<br>பாடல் வண்டு பயிலு நறையூரில்<br>சேடர் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. | நெஞ்சே! மேல்நோக்கிய நீண்டு வளரவல்ல செஞ்சடைகள் தாழுமாறு ஆடுத–ல் வல்ல அடிகளாகிய சிவபிரானது இடம் ஆகிய பாடுத–ல் வல்ல வண்டுகள் நிறைந்து வாழும் சோலைவளம் உடைய நறையூரில் பெரியோர் வணங்கித் துதிக்கும் சித்தீச்சரத்தைத் தெளிவாயாக. |

| | |
|---|---|
| 309. உம்ப ராலு முலகின் னவராலும்<br>தம்பெ ருமைய ளத்தற் கரியானூர்<br>நண்பு லாவு மறையோர் நறையூரில்<br>செம்பொன் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. | நெஞ்சே! தேவர்களாலும், உலகிடை வாழும் மக்களாலும் தனது பெருமைகளை அளவிட்டுக் கூறுவதற்கு அரியவனாகிய சிவபிரானது ஊராய், நட்புத் தன்மையால் மேம்பட்ட மறையவர்கள் வாழும் திருநறையூரில் சிவபிரான் எழுந்தருளிய செம்பொன் மயமான சித்தீச்சரத்தையே தெளிவாயாக. |
| 310. கூரு லாவு படையான் விடையேறி<br>போரு லாவு மழுவா னனலாடி<br>பேரு லாவு பெருமா னறையூரில்<br>சேருஞ் சித்தீச் சரமே யிடமாமே. | கூர்மைமிக்க சூலப்படையை உடையவனாய், விடை மீது ஏறிப் போருக்குப் பயன்படும் மழுவாயுதத்தை ஏந்தி, அனல்மிசை நின்றாடி, ஏழுலகிலும் தன் புகழ் விளங்க நிற்கும் சிவபெருமான் திருநறையூரில் விளங்கும் சித்தீச்சரமே நாம் வழிபடற்குரிய இடமாகும். |
| 311. அன்றி நின்ற வவுணர் புரமெய்த<br>வென்றி வில்– விமலன் விரும்புமூர்<br>மன்றில் வாச மணமார் நறையூரில்<br>சென்று சித்தீச் சரமே தெளிநெஞ்சே. | நெஞ்சே! தன்னோடு வேறுபட்டு நிற்கும் அவுணர்களின் முப்புரங்களையும் எய்தழித்த வெற்றியோடு கூடிய வில்லை உடைய குற்றமற்றவன் விரும்பும் ஊர் ஆகிய, மணம் நிலைபெற்று வீசும் பொது மன்றங்களை உடைய திருநறையூருக்குச் சென்று, அங்குப் பெருமான் எழுந்தருளிய சித்தீச்சரத்தைத் தெளிந்து வழிபடுக. |
| 312. அரக்க னாண்மை யழிய வரைதன்னால்<br>நெருக்க வூன்றும் விரலான் விரும்புமூர்<br>பரக்குங் கீர்த்தி யுடையார் நறையூரில்<br>திருக்கொள் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. | நெஞ்சே! இராவணனது வ–மை கெடுமாறு கயிலை மலையால் ஊன்றி அடர்த்த கால் விரலை உடைய சிவபிரான் விரும்புவது, பரவிய புகழாளர் வாழ்வது ஆகிய திருநறையூரில் விளங்கும் சிவபிரானது சித்தீச்சரத்தைத் தெளிவாயாக. |
| 313. ஆழி யானு மலரி னுறைவானும்<br>ஊழி நாடி யுணரார் திரிந்துமேல்<br>சூழு நேட வெரியா மொருவன்சீர்<br>நீழல் சித்தீச் சரமே நினைநெஞ்சே. | நெஞ்சே! சக்கராயுதத்தை உடைய திருமாலும், தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும், உணராதவனாய், ஓர் ஊழிக்காலம் அளவும் திரிந்து சுற்றும் முற்று மேலும் கீழுமாய்த் தேட எரியுருவாய் ஓங்கி நின்ற சிவபெருமானது சிறப்புமிக்க இடமாகிய திருநறையூர்ச் சித்தீச்சரத்தை நினைவாய். |
| 314. மெய்யின் மாசர் விரிநுண் டுகி–லார்<br>கையி லுண்டு கழறு முரைகொள்ளேல்<br>உய்ய வேண்டி –றைவன் னறையூரில்<br>செய்யுஞ் சித்தீச் சரமே தவமாமே. | உடம்பின்கண் அழுக்குடையவர்களும், விரித்துக் கட்டும் நுண்ணிய ஆடைகளை அணியாத வர்களும், கைகளில் ப– ஏற்று உண்டு திரிபவர்களுமாகிய சமணர்கள் இடித்துக் கூறும் உரைகளைக் கொள்ளாதீர். நீர் இப்பிறப்பில் உய்தி பெற விரும்பினால், சிவபிரான் எழுந்தருளிய திருநறையூரில் செய்தமைத்த சித்தீச்சரத்தைச் சென்று வழிபடுமின். அதுவே சிறந்த தவமாம். |

| | |
|---|---|
| 315. மெய்த்து லாவு மறையோர் நறையூரில்<br>சித்தன் சித்தீச் சரத்தை யுயர்காழி<br>அத்தன் பாத மணிஞான சம்பந்தன்<br>பத்தும் பாடப் பறையும் பாவமே. | வாய்மையே பேசி வாழும் மறையவர் வாழும் திருநறையூரின்கண் சித்தன் என்ற திருநாமத்தோடு விளங்கும் சிவபெருமானது சித்தீச்சரத்தை, மேலான காழி மாநகரில் விளங்கும் சிவபிரானது திருப்பாதங்களைத் தனது திருமுடிக்கு அணியாகக் கொண்ட ஞானசம்பந்தன் பாடிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாடிப் பரவப் பாவங்கள் நீங்கும். |

## 30. திருப்புகலி

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 30**

| | |
|---|---|
| 316. விதியாய் விளைவாய் விளைவின் பயனாகிக்<br>கொதியா வருகூற் றையுதைத் தவர்சேரும்<br>பதியா வதுபங் கயநின் றலரத்தேன்<br>பொதியார் பொழில்சூழ் புக–ந் நகர்தானே. | மார்க்கண்டேயருக்கு வயது பதினாறு என விதித்த விதியாகவும், அதன் காரணமாக வந்த மரணமாய், அவர் இறை வழிபாடு செய்ததன் காரணமாகத்தானே விதியின் பயனாய் வெளிப்பட்டுச் சினந்துவந்த கூற்றுவனை உதைத்தருளிய சிவபிரான் எழுந்தருளிய தலம், தாமரை மலர்கள் மலர்ந்த நீர்நிலைகளும், தேன்கூடுகள் நிறைந்த பொழில்களும் சூழ்ந்த புக–நகராகும். |
| 317. ஒன்னார் புரமூன்று றுமெரித் தவொருவன்<br>மின்னா ரிடையா ளொடுங்கூ டியவேடந்<br>தன்னா லுறைவா வதுதண் கடல்சூழ்ந்த<br>பொன்னார் வயற்பூம் புக–ந் நகர்தானே. | பகைவராய் மாறிய அசுரர்களின் முப்புரங்களையும் எரித்தழித்த சிவபிரான் மின்னல் போன்ற இடையினை உடைய உமையம்மையோடு கூடிய திருவுருவத்தோடு எழுந்தருளிய இடம், குளிர்ந்த கடல் ஒருபுறம் சூழ, பொன் போன்ற நெல்மணிகள் நிறைந்த வயல்களை உடைய புக– நகராகும். |
| 318. வ–யின் மதிசெஞ் சடைவைத் தமணாளன்<br>பு–யின் னதள்கொண் டரையார்த் தபுனிதன்<br>ம–யும் பதிமா மறையோர் நிறைந்தீண்டிப்<br>பொ–யும் புனற்பூம் புக–ந் நகர்தானே. | கலைகளாகிய வ–மை குறைந்த பிறை மதியைச் செஞ்சடைமீது வைத்துள்ள மணாளனும், பு–யின் தோலை இடையிற் கட்டிய புனிதனும் ஆகிய சிவபெருமான் விரும்பும் பதி மேம்பட்ட வேதியர் நிறைந்து செறிந்து பொ–யும் நீர்வளம் சான்ற அழகிய புக– நகராகும். |
| 319. கயலார் தடங்கண் ணியொடும் மெருதேறி<br>அயலார் கடையிற் ப–கொண் டவழகன்<br>இயலா லுறையும் மிடமெண் டிசையோர்க்கும்<br>புயலார் கடற்பூம் புக–ந் நகர்தானே. | கயல்மீன் போன்ற பெரிய கண்களை உடைய உமையம்மையோடும் விடைமீது ஏறி, அயலார் இல்லங்களில் ப– கொண்டருளும் அழகனாகிய சிவபிரான் எண்திசையிலுள்ளாரும் செவிசாய்த்து இடி ஓசையைக் கேட்கும் கார் மேகங்கள் தங்கும் கடலை அடுத்துள்ள அழகிய புக– நகராகும். |

| | |
|---|---|
| 320. காதார் கனபொற் குழைதோ டதிலங்கத்<br>தாதார் மலர்தண் சடையே றமுடித்து<br>நாதா னுறையும் மிடமா வதுநாளும்<br>போதார் பொழிற்பூம் புக–ந் நகர்தானே. | காதுகளில் அணிந்துள்ள கனவிய பொன்னால் இயன்ற குழை, தோடு ஆகியன இலங்க மகரந்தம் மருவிய மலர்களைத் தண்ணிய சடையின்கண் பொருந்தச்சூடி, எல்லா உயிர்கட்கும் நாதனாக விளங்கும் சிவபிரான் உறையுமிடம் நாள்தோறும் புதிய பூக்கள் நிறைந்து விளங்கும் பொழில்கள் சூழ்ந்த புக– நகராகும். |
| 321. வலமார் படைமான் மழுவேந் தியமைந்தன்<br>கலமார் கடனஞ் சமுதுண் டகருத்தன்<br>குலமார் பதிகொன் றைகள்பொன் சொரியத்தேன்<br>புலமார் வயற்பூம் புக–ந் நகர்தானே. | வெற்றி பொருந்திய சூலப்படை, மான், மழு ஆகியவற்றை ஏந்திய வ–மையுடையோனும், மரக்கலங்கள் உலாவும் கட–டைத் தோன்றிய நஞ்சினை அமுதாக உண்டவனும் ஆகிய சிவபிரான், அடியார் குழாத்தோடு உறையும் பதி, கொன்றை மலர்கள், பொன் போன்ற இதழ்களையும் மகரந்தங்களையும் சொரிய, தேன் நிலத்தில் பாயும் வயல்களை உடைய புக– நகராகும். |
| 322. கறுத்தான் கனலான் மதின்மூன் றையும்வேவச்<br>செறுத்தான் றிகழுங் கடனஞ் சமுதாக<br>அறுத்தா னயன்றன் சிரமைந் திலுமொன்றைப்<br>பொறுத்தா னிடம்பூம் புக–ந் நகர்தானே. | மும்மதில்களும் கனலால் வெந்தழியுமாறு சினந்தவனும், கட–டை விளங்கித் தோன்றிய நஞ்சை அமுதாக உண்டு கண்டத்தில் தரித்தவனும், பிரமனது ஐந்து தலைகளில் ஒன்றை அறுத்து அதனைக் கையில் தாங்கிய சிவபிரான் எழுந்தருளிய இடம் அழகிய புக– நகராகும். |
| 323. தொழிலான் மிகதொண் டர்கள்தோத் திரஞ்சொல்ல<br>எழிலார் வரையா லன்றரக் கனைச்செற்ற<br>கழலா னுறையும் மிடங்கண் டல்கண்மிண்டிப்<br>பொழிலான் ம–பூம் புக–ந் நகர்தானே. | தாம் செய்யும் பணிகளால் மேம்பட்ட தொண்டர்கள் தோத்திரம் சொல–ப் போற்ற, அழகிய கயிலைமலையால் முன்னொரு காலத்தில் இராவணனைச் செற்ற திருவடிகளை உடைய சிவபிரான் உறையும் இடம், தாழைமரங்கள் செறிந்து விளங்கும் பொழில்கள் சூழ்ந்த புக– நகராகும். |
| 324. மாண்டார் சுடலைப் பொடிபூ சிமயானத்<br>தீண்டா நடமா டியவேந் தல்தன்மேனி<br>நீண்டா னிருவர்க் கெரியா யரவாரம்<br>பூண்டா னகர்பூம் புக–ந் நகர்தானே. | இறந்தவர்களை எரிக்கும் சுடலையில் விளையும் சாம்பலை உட–ற் பூசிக் கொண்டு, அம்மயானத்திலேயே தங்கி நடனமாடும் தலைவரும், திருமால் பிரமர் பொருட்டுத் தம் திருமேனியை அழலுருவாக்கி ஓங்கி நின்றவரும் பாம்பை மாலையாகத் தரித்தவருமான சிவபிரானது நகர் அழகிய புக–ப் பதியாகும். |
| 325. உடையார் துகில்போர்த் துழல்வார் சமண்கையர்<br>அடையா தனசொல் லுவரா தர்களோத்தைக்<br>கிடையா தவன்றன் னகர்நன் ம–பூகம்<br>புடையார் தருபூம் புக–ந் நகர்தானே. | கீழ் உடையோடு மெல–ய ஆடையைப் போர்த்துத் திரியும் புத்தரும், சமணர்களும் ஆகிய கீழ்மக்கள் பொருந்தாதவற்றைக் கூறுவார்கள். அக்கீழோரின் ஓத்திற்கு அகப்படாதவன் சிவபிரான். அப்பெருமானது நன்னகர், நன்கு செறிந்த பாக்கு மரச்சோலைகள் சூழ்ந்த புக– நகராகும். |

| | |
|---|---|
| 326. இரைக்கும் புனல்செஞ் சடைவைத் தவெம்மான்றன்<br>புரைக்கும் பொழிற்பூம் புக–ந் நகர்தன்மேல்<br>உரைக்குந் தமிழ்ஞான சம்பந் தனொண்மாலை<br>வரைக்குந் தொழில்வல் லவர்நல் லவர்தாமே. | ஆரவாரிக்கும் கங்கை நீரைத் தமது சிவந்த சடைமீது வைத்த எம் தலைவனாகிய சிவபிரானின், உயர்ந்த சோலைகளால் சூழப்பட்ட அழகிய புக–ப் பதியைக் குறித்துத் தமிழ் ஞான சம்பந்தன் உரைத்த அழகிய இப்பதிகமாலையைத் தமதாக்கி ஓதும் தொழில் வல்லவர் நல்லவர் ஆவர். |

## 31. திருக்குரங்கணின் முட்டம்

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 31**

| | |
|---|---|
| 327. விழுநீர் மழுவாட் படையண் ணல்விளங்கும்<br>கழுநீர் குவளைம் மலரக் கயல்பாயும்<br>கொழுநீர் வயல்சூழ்ந் தகுரங் கணின்முட்டம்<br>தொழுநீர் மையர்தீ துறுதுன் பமிலரே. | பெருமைக்குரிய கங்கையை முடிமிசை அணிந்த வரும், மழுவாட்படையைக் கையில் ஏந்தியவரும் ஆகிய சிவபிரான் உறைவது கழுநீர், குவளை ஆகியன மலர்ந்து, கயல்மீன்கள் துள்ளுமாறு விளங்கும் நீர் நிலைகளை உடையதும், செழுமையான வயல்களால் சூழப்பட்டதுமாகிய திருக்குரங்கணில் முட்டம் ஆகும். இத்தலத்தைத் தொழுபவர் தீமையால் வரும் துன்பம் இலராவர். |
| 328. விடைசேர் கொடியண் ணல்விளங் குயர்மாடக்<br>கடைசேர் கருமென் குளத்தோங் கியகாட்டில்<br>குடையார் புனல்மல் குகுரங் கணின்முட்டம்<br>உடையா னெனையா ளுடையெந் தைபிரானே. | உயர்ந்து விளங்கும் மாடங்களின் கடை வாயிலைச் சேர்ந்துள்ள கரிய மெல்–ய காட்டிடையே அமைந்த குடைந்து ஆடுதற்குரிய நீர் நிலைகள் நிறைந்த குரங்கணில் முட்டத்தை உடையானும் விடைக்கொடி அண்ணலுமாகிய சிவபிரான் என்னை ஆளாக உடைய தலைவன் ஆவான். |
| 329. சூலப் படையான் விடையான் சுடுநீற்றான்<br>காலன் றனையா ருயிர்வவ் வியகாலன்<br>கோலப் பொழில்சூழ்ந் தகுரங் கணின்முட்டத்<br>தேலங் கமழ்புன் சடையெந் தைபிரானே. | அழகிய சோலைகளால் சூழப் பெற்ற குரங்கணில் முட்டத்தில் எழுந்தருளிய மணம்கமழும் சடைமுடியை உடையோனாகிய எந்தை பிரான் சூலப்படையையும் விடை ஊர்தியையும் உடையவன். திருவெண்ணீறு பூசியவன். காலனின் உயிரை வவ்வியதால் கால காலன் எனப்படுபவன். |
| 330. வாடா விரிகொன் றைவலத் தொருகாதில்<br>தோடார் குழையா னலபா லனநோக்கி<br>கூடா தனசெய் தகுரங் கணின்முட்டம்<br>ஆடா வருவா ரவரன் புடையாரே. | வாடாது விரிந்துள்ள கொன்றை மாலையைச் சூடியவனும், வலக் காதில் குழையையும் இடக்காதில் தோட்டையும் அணிந்துள்ளவனும், நன்றாக அனைத்துயிர்களையும் காத்தலைத் திருவுளம் கொண்டு தேவர் எவரும் செய்ய முடியாத அரிய செயல்களைச் செய்பவனுமாகிய குரங்கணில் முட்டத்துள் திருநடனம் புரியும் இறைவன் எல்லோரிடத்தும் அன்புடையவன். |

| | |
|---|---|
| **331.** இறையார் வளையா ளையொர்பா கத்தடக்கிக்<br>கறையார் மிடற்றான் கரிகீ றியகையான்<br>குறையார் மதிசூ டிகுரங் கணின்முட்டத்<br>துறைவா னெமையா ளுடையொண் சுடரானே. | இறையார் வளையாள் என்னும் திருப்பெயர் கொண்ட உமையம்மையை ஒருபாகத்தே கொண்டவனும், நீலகண்டனும், யானையின் தோலை உரித்துப் போர்த்த கையினனும் ஆகிப் பிறைமதியை முடியில் சூடிக் குரங்கணில் முட்டத்தில் உறையும் இறைவன் எம்மை ஆளாக உடைய ஒண் சுடராவான். |
| **332.** பலவும் பயனுள் ளனபற் றுமொழிந்தோம்<br>கலவும் மயில்கா முறுபே டையொடாடிக்<br>குலவும் பொழில்சூழ்ந் தகுரங் கணின்முட்டம்<br>நிலவும் பெருமா னடிநித் தல்நினைந்தே. | தோகைகளை உடைய ஆண் மயில்கள் தாம் விரும்பும் பெண் மயில்களோடு கூடிக் களித்தாடும் பொழில்களால் சூழப்பட்ட குரங்கணில் முட்டத்தில் உறையும் பெருமான் திருவடிகளை நாள்தோறும் நினைந்து உலகப் பொருள்கள் பலவற்றிலும் இருந்த பற்றொழிந்தோம். |
| **333.** மாடார் மலர்க்கொன் றைவளர் சடைவைத்துத்<br>தோடார் குழைதா னொருகா தி–லங்கக்<br>கூடார் மதிலெய் துகுரங் கணின்முட்டத்<br>தாடா ரரவம் மரையார்த் தமர்வானே. | சிவபிரான் பொன்னையொத்த கொன்றை மலர் மாலையைச் சடைமீது அணிந்து, காதணியாகிய குழை ஒரு காதில் இலங்கத் திரிபுரத்தை எரித்தழித்து, ஆடும் பாம்பை இடையிலே வரிந்துகட்டிக் குரங்கணில் முட்டத்தில் எழுந்தருளியுள்ளான். |
| **334.** மையார் நிறமே னியரக் கர்தங்கோனை<br>உய்யா வகையா லடர்த்தின் னருள்செய்த<br>கொய்யார் மலர்சூ டிகுரங் கணின்முட்டம்<br>கையாற் றொழுவார் வினைகாண் டலரிதே. | கரிய மேனியை உடைய அரக்கர் தலைவனாகிய இராவணனைப் பிழைக்க முடியாதபடி அடர்த்துப் பின் அவனுக்கு இனிய அருளை வழங்கியவனும், அடியவர் கொய்தணிவித்த மலர் மாலைகளுடன் குரங்கணில் முட்டத்தில் எழுந்தருளியுள்ளவனுமாகிய சிவபெருமானைக் கைகளால் தொழுபவர் வினைப்பயன்களைக் காணுதல் இலராவர். |
| **335.** வெறியார் மலர்த்தா மரையா னொடுமாலும்<br>அறியா தசைந்தேத் தவோரா ரழலாகும்<br>குறியா னிமிர்ந்தான் றன்குரங் கணின்முட்டம்<br>நெறியாற் றொழுவார் வினைநிற் ககிலாவே. | மணம் கமழும் தாமரை மலரில் உறையும் நான்முகனும், திருமாலும் அடிமுடி அறிய முடியாது வருந்தி வணங்க அழல் உருவாய் ஓங்கி நின்றருளிய சிவபிரான் விளங்கும் குரங்கணில் முட்டத்தை முறையாக வணங்குவார் வினைகள் இலராவர். |
| **336.** கழுவார் துவரா டைகலந் துமெய்போர்க்கும்<br>வழுவாச் சமண்சாக் கியர்வாக் கவைகொள்ளேல்<br>குழுமின் சடையண் ணல்குரங் கணின்முட்டத்<br>தெழில்வெண் பிறையா னடிசேர் வதியல்பே. | தோய்க்கப்பட்ட துவராடையை உட–ற் போர்த்துத் திரியும் புத்தர், தம் கொள்கையில் வழுவாத சமணர் ஆகியோர் உரைகளைக் கொள்ளாதீர். மின்னல்திரள் போலத் திரண்டு உள்ள சடைமுடியை உடையவனும், அழகிய வெண்பிறையை அணிந்தவனும் ஆகிய குரங்கணில் முட்டத்து இறைவன் திருவடிகளைச் சென்று வணங்குவதே நம் கடமையாகும். |

| | |
|---|---|
| 337. கல்லார் மதிற்கா ழியுண்ஞான சம்பந்தன்<br>கொல்லார் மழுவேந் திகுரங் கணின்முட்டம்<br>சொல்லார் தமிழ்மா லைசெவிக் கினிதாக<br>வல்லார்க் கெளிதாம் பிறவா வகைவீடே. | கருங்கல்லால் இயன்ற மதில்களால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், கையில் கொல்லனது தொழில் நிறைந்த மழுவாயுதம் ஏந்திய குரங்கணில் முட்டத்து இறைவன்மீது பாடிய சொல்மாலையாகிய இத்திருப்பதிகத்தைச் செவிக்கு இனிதாக ஓதி ஏத்த வல்லார்க்குப் பிறவா நெறியாகிய வீடு எளிதாகும். |

## 32. திருவிடைமருதூர்

பண் : தக்கராகம் — முதல் திருமுறை பதிக எண் : 32

| | |
|---|---|
| 338. ஓடே கலனுண் பதுமூ ரிடுபிச்சை<br>காடே யிடமா வதுகல் லானிழற்கீழ்<br>வாடா முலைமங் கையுந்தா னுமகிழ்ந்<br>தீடா வுறைகின் றவிடை மருதீதோ. | உண்ணும் பாத்திரம் பிரம கபாலமாகும். அவர் உண்ணும் உணவோ ஊர் மக்கள் இடும் பிச்சையாகும். அவர் வாழும் இடமோ இடுகாடாகும். அத்தகைய சிவபிரான் கல்லால மரநிழற்கீழ் நன்முலைநாயகியும் தானுமாய் மகிழ்ந்து பெருமையோடு விளங்கும் திருத்தலமாகிய இடைமருது இதுதானோ ? |
| 339. தடங்கொண்ட தொர்தாமரைப் பொன்முடிதன்மேல்<br>குடங்கொண் டடியார் குளிர்நீர் சுமந்தாட்டப்<br>படங்கொண் டதொர்பாம் பரையார்த்த பரமன்<br>இடங்கொண் டிருந்தான் றனிடை மருதீதோ. | தடாகங்களிற் பறித்த பெரிய தாமரை மலரைச் சூடிய அழகிய திருமுடியில், அடியவர் குடங்களைக் கொண்டு குளிர்ந்த நீரைமுகந்து சுமந்து வந்து அபிடேகிக்குமாறு, படம் எடுத்தாடும் நல்ல பாம்பை இடையிலே கட்டிய பரமன் தான் விரும்பிய இடமாகக் கொண்டுறையும் இடைமருது இதுதானோ ? |
| 340. வெண்கோ வணங்கொண் டொரு வெண்டலையேந்தி<br>அங்கோல் வளையா ளையொர்பா கமமர்ந்து<br>பொங்கா வருகா விரிக்கோ லக்கரைமேல்<br>எங்கோ னுறைகின் றவிடை மருதீதோ. | வெண்மையான கோவணத்தை அணிந்து ஒப்பற்ற வெள்ளிய பிரம கபாலத்தைக் கையில் ஏந்தி அழகியதாய்த் திரண்ட வளையல்களை அணிந்த உமாதேவியை ஒருபாகமாக விரும்பி ஏற்று பொங்கிவரும் காவிரி நதியின் அழகிய கரைமீது எம் தலைவனாயுள்ள சிவபிரான் எழுந்தருளிய இடைமருதூர் இதுதானோ ? |
| 341. அந்தம் மறியா தவருங் கலமுந்திக்<br>கந்தங் கமழ்கா விரிக்கோ லக்கரைமேல்<br>வெந்த பொடிப்பூ சியவே தமுதல்வன்<br>எந்தை யுறைகின்ற விடைமரு தீதோ. | அரிய அணிகலன்களைக் கரையில் வீசி மணம் கமழ்ந்துவரும் காவிரி நதியின் அழகிய கரைமீது திருவெண்ணீறு அணிந்தவனாய், முடிவறியாத வேத முதல்வனாய் விளங்கும் எம் தந்தையாகிய சிவபிரான் உறைகின்ற இடைமருதூர் இதுதானோ ? |
| 342. வாசங் கமழ்மா மலர்ச்சோ லையில்வண்டே<br>தேசம் புகுந்தீண் டியொர்செம் மையுடைத்தாய்ப்<br>பூசம் புகுந்தா டிப்பொ–ந் தழகாய<br>ஈச னுறைகின் றவிடை மருதீதோ. | மணம் கமழும் சிறந்த மலர்களை உடைய சோலைகளில் வண்டுகளைக் கொண்டதும், உலக மக்கள் பலரும் கூடிச் செம்மையாளராய்த் தைப்பூசத் திருநாளில் நீராடி வணங்குவதும், பொ–வும் அழகும் உடையவனாய் ஈசன் எழுந்தருளி விளங்குவதுமான இடைமருது என்னும் தலம் இதுதானோ ? |

| | |
|---|---|
| 343. வன்புற் றிளநா கமசைத் தழகாக<br>என்பிற் பலமா லையும்பூண் டெருதேறி<br>அன்பிற் பிரியா தவளோ டுமுடனாய்<br>இன்புற் றிருந்தான் றனிடை மருதீதோ. | வ–ய புற்றுக்களில் வாழும் இளநாகங்களை இடையிலே அழகாகக் கட்டிக் கொண்டு, எலும்பால் இயன்ற மாலைகள் பலவற்றையும் அணிகலன்களாய்ப் பூண்டு, அன்பிற் பிரியாத உமையம்மையோடும் உடனாய் எருதேறிச் சிவபிரான் இன்புற் றுறையும் இடைமருது என்பது இதுதானோ? |
| 344. தேக்குந் திமிலும் பலவுஞ் சுமந்துந்திப்<br>போக்கிப் புறம்பூ சலடிப் பவருமால்<br>ஆர்க்குந் திரைக்கா விரிக்கோ லக்கரைமேல்<br>ஏற்க விருந்தான் றனிடை மருதீதோ. | தேக்கு, வேங்கை, பலா ஆகிய மரங்களைச் சுமந்து வந்து இருகரைகளிலும், அம்மரங்களை எடுத்து வீசி, ஆரவாரித்து வரும் அலைகளையுடையதாய காவிரி நதியின் அழகிய கரைமீது சிவபெருமான் பொருந்த உறையும் இடைமருது என்னும் தலம் இதுதானோ? |
| 345. பூவார் குழலா ரகில்கொண் டுபுகைப்ப<br>ஓவா தடியா ரடியுள் குளிர்ந்தேத்த<br>ஆவா வரக்கன் றனையாற் றலழித்த<br>ஏவார் சிலையான் றனிடை மருதீதோ. | மலர் சூடிய கூந்தலை உடைய மங்கல மகளிர் அகில் தூபம் இட, அடியவர் இடையீடின்றித் திருவடிகளை மனம் குளிர்ந்து ஏத்த, கண்டவர் ஆஆ என இரங்குமாறு இராவணனது ஆற்றலை அழித்த, அம்பு பொருத்தற்கேற்ற மலைவில்லைக் கையில் கொண்ட, சிவபெருமானின் இடைமருது என்னும் தலம் இதுதானோ? |
| 346. முற்றா ததொர்பான் மதிசூ டுமுதல்வன்<br>நற்றா மரையா னொடுமால் நயந்தேத்தப்<br>பொற்றோ ளியுந்தா னும்பொ–ந் தழகாக<br>எற்றே யுறைகின் றவிடை மருதீதோ. | முற்றாத பால் போன்ற இளம்பிறையை முடிமிசைச் சூடிய முதல்வனாய் நல்ல தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும், திருமாலும் விரும்பித் தொழ, உமையம்மையும் தானுமாய்ச் சிவபிரான் அழகாகப் பொ–ந்து உறைகின்ற இடைமருது என்னும் தலம் இதுதானோ? |
| 347. சிறுதே ரருஞ்சில் சமணும் புறங்கூற<br>நெறியே பலபத் தர்கள்கை தொழுதேத்த<br>வெறியா வருகா விரிக்கோ லக்கரைமேல்<br>எறியார் மழுவா ளனிடை மருதீதோ. | சிறுமதியாளராகிய தேரர்களும், சிற்றறிவினை ராகிய சமணர்களும், புறங்கூறித் திரிய, சிவபக்தர்கள் பலர் முறையாலே கைகளால் தொழுது துதிக்கப் பகைவரைக் கொன்றொழிக்கும் மழுவை ஏந்திய சிவபிரான் எழுந்தருளிய, மணம் கமழ்ந்துவரும் காவிரிநதியின் அழகிய கரைமேல் உள்ள இடைமருது என்னும் தலம் இதுதானோ? |
| 348. கண்ணார் கமழ்கா ழியுண்ஞா னசம்பந்தன்<br>எண்ணார் புகழெந் தையிடை மருதின்மேல்<br>பண்ணோ டிசைபா டியபத் தும்வல்லார்கள்<br>விண்ணோ ருலகத் தினில்வீற் றிருப்பாரே. | இடமகன்றதும் மணம் கமழ்வதுமான சீகாழிப் பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் எண்ணத்தில் நிறைந்துள்ள புகழை உடைய எம்பெருமானுடைய இடைமருது மீது பண்ணோடியன்ற இசையால் பாடிய பத்துப் பாடல்களையும் வல்லவர்கள் விண்ணோர் உலகில் வீற்றிருக்கும் சிறப்பைப் பெறுவார்கள். |

## 33. திருஅன்பிலாலந்துறை

பண் : தக்கராகம் — முதல் திருமுறை பதிக எண் : 33

| | |
|---|---|
| 349. கணைநீ டெரிமா லரவம் வரைவில்லா<br>இணையா வெயின்மூன் றுமெரித் தவிறைவர்<br>பிணைமா மயிலுங் குயில்சேர் மடவன்னம்<br>அணையும் பொழிலன் பிலாலந் துறையாரே. | நீண்டு எரிகின்ற தீயையும் திருமாலையும் அம்பாகக் கொண்டு பூட்டி வாசுகி என்னும் பாம்பை நாணாகக் கட்டிய மேருமலையை வில்லாக வளைத்து முப்புரங்களையும் எரித்த இறைவர், தத்தம் பெடைகளோடுகூடிய பெரிய மயில்களும், குயில்களும் சேர்ந்து வாழும் அன்னங்களும் உறையும் பொழில் சூழ்ந்த அன்பிலாலந்துறையார் ஆவார். |
| 350. சடையார் சதுரன் முதிரா மதிசூடி<br>விடையார் கொடியொன் றுடையெந் தைவிமலன்<br>கிடையா ரொ–யோத் தரவத் திசைகிள்ளை<br>அடையார் பொழிலன் பிலாலந் துறையாரே. | சடைமுடிகளோடு கூடிய சதுரப்பாடு உடையவராய் இளம்பிறையை முடிமிசைக் சூடி இடபக்கொடி ஒன்றை உடைய எந்தையாராகிய விமலர், வேதம் பயிலும் இளஞ்சிறார்கள் கூடியிருந்து ஓதும் வேத ஒ–யைக் கேட்டு அவ்வோசையாலேயே அவற்றை இசைக்கின்ற கிளிகள் அடைதல் பொருந்திய சோலைகளால் சூழப்பட்ட அன்பிலாலந்துறை இறைவராவார். |
| 351. ஊரும் மரவஞ் சடைமே லுறவைத்துப்<br>பாரும் ப–கொண் டொ–பா டும்பரமர்<br>நீருண் கயலும் வயல்வா ளைவராலோ<br>டாரும் புனலன் பிலாலந் துறையாரே. | ஊர்ந்து செல்லும் பாம்பைச் சடைமுடி மேல் பொருந்த அணிந்து உலகம் முழுதும் சென்று ப–யேற்று, இசை பாடி மகிழும் பரமராகிய பெருமானார், நீரின்வழி உணவுண்ணும் கயல் மீன்களை வயல்களிடத்துள்ள வாளை வரால் ஆகிய மீன்கள் உண்ணும் புனல்வளம் மிக்க அன்பிலாலந்துறையாராவார். |
| 352. பிறையும் மரவும் முறவைத் தமுடிமேல்<br>நறையுண் டெழுவன் னியுமன் னுசடையார்<br>மறையும் பலவே தியரோ தவொ–சென்<br>றறையும் புனலன் பிலாலந் துறையாரே. | பிறைமதி, பாம்பு ஆகியவற்றைப் பகை நீக்கி ஒருங்கே பொருந்த வைத்த முடிமீது, நறுமணத்துடன் தோன்றும் வன்னித் தளிர்களும் மன்னிய சடையினர், வேதியர் பலர் வேதங்களை ஓத அவ்வொ– பல இடங்களிலும் ஒ–க்கும் நீர்வளம்மிக்க அன்பிலாலந்துறை இறைவராவார். |
| 353. நீடும் புனற்கங் கையுந்தங் கமுடிமேல்<br>கூடும் மலையா ளொருபா கமமர்ந்தார்<br>மாடும் முழவம் மதிரம் மடமாதர்<br>ஆடும் பதியன் பிலாலந் துறையாரே. | முடிமேல் பெருகிவரும் நீரை உடைய கங்கை நதியையும் தங்குமாறு அணிந்து, ஒருபாகமாகத் தம்மைத் தழுவிய மலைமகளைக் கொண்டுள்ள பெருமானார், பல இடங்களிலும் முழவுகள் ஒ–க்க, இளம் பெண்கள் பலர் நடனங்கள் புரியும் அன்பிலாலந்துறை இறைவராவார். |
| 354. நீறார் திருமே னியரூ னமிலார்பால்<br>ஊறார் சுவையா கியவும் பர்பெருமான்<br>வேறா ரகிலும் மிகுசந் தனமுந்தி<br>ஆறார் வயலன் பிலாலந் துறையாரே.<br>. | திருநீறு அணிந்த திருமேனியரும், குற்றம் அற்றவர்களின் உள்ளங்களில் பொருந்திய சுவையாக இனிப்பவருமாகிய தேவர் தலைவர், வேறாகப் பெயர்ந்து வரும் அகில் மரங்களையும் உயர்ந்த சந்தன மரங்களையும் அடித்துவரும் ஆற்று நீர் பாயும் வயல்களை உடைய அன்பிலாலந்துறை இறைவர் ஆவார். |

| | |
|---|---|
| 355. செடியார் தலையிற் ப–கொண் டினிதுண்ட<br>படியார் பரமன் பரமேட் டிதன்சீரைக்<br>கடியார் மலரும் புனல்தூ விநின்றேத்தும்<br>அடியார் தொழுமன் பிலாலந் துறையாரே. | முடை நாற்றமுடைய தலையோட்டில் ப–யேற்று அதனை இனிதாக உண்டருளும் தன்மையினைக் கொண் பரமனாகிய பரம்பொருள், மணம் பொருந்திய மலர்களையும் நீரையும் தூவி நின்று தன்புகழைத் துதிக்கும் அடியவர்களால் தொழப்படும் அன்பிலாலந்துறை இறைவராவார். |
| 356. விடத்தார் திகழும் மிடறன் னடமாடி<br>படத்தா ரரவம் விரவுஞ் சடையாதி<br>கொடித்தே ரிலங்கைக் குலக்கோன் வரையார<br>அடர்த்தா ரருளன் பிலாலந் துறையாரே. | ஆலகால விடக்கறை விளங்கும் கரிய கண்டத்தினரும், நடனமாடியும், படத்தோடு கூடிய அரவம் விரவும் சடையினை உடைய முதற்கடவுளும், கொடித் தேரைக் கொண்ட இலங்கையர் குலத் தலைவனாகிய இராவணனை மலையின்கீழ் அகப்படுத்தி அடர்த்தவரும் ஆகிய சிவபிரான், அன்பர்கள் அருள் பெறுதற்குரிய இடமாக விளங்கும் அன்பில் ஆலந்துறை என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளார். |
| 357. வணங்கிம் மலர்மே லயனுந் நெடுமாலும்<br>பிணங்கி யறிகின் றிலர்மற் றும்பெருமை<br>சுணங்கும் முகத்தம் முலையா ளொருபாகம்<br>அணங்குந் நிகழன் பிலாலந் துறையாரே. | தாமரை மலர்மேல் விளங்கும் அயனும் திருமாலும், சிவபிரானின் பெருமையை வணங்கி அறியாது, தம்முட் பிணங்கித் தேடி அறியாதவராயினர். அப்பெருமான், சுணங்கு பொருந்திய முகப்பினை உடைய அழகிய தனத்தவளாய உமையம்மையை ஒரு பாகத்தே அணங்காகக் கொண்டுள்ள அன்பிலாலந்துறை இறைவராவார். |
| 358. தறியார் துகில்போர்த் துழல்வார் சமண்கையர்<br>நெறியா வுணரா நிலைக்கே டினர்நித்தல்<br>வெறியார் மலர்கொண் டடிவீ ழுமவரை<br>அறிவா ரவரன் பிலாலந் துறையாரே. | தறிபோல ஆடையின்றி உள்ள சமணர்கள், நெய்த ஆடையினை உட–ல் போர்த்து உழலும் புத்தர்கள், பரம்பொருளை முறையாக உணராததோடு, நிலையான கேடுகளுக்கு உரியவர்களாய் உள்ளனர். அவர்களைச் சாராது நாள்தோறும் மணமலர்களைச் சூட்டித் தம் திருவடிகளில் வீழ்ந்து தொழும் அடியவர்களை நன்கறிந்தருளும் பெருமானார் அன்பிலாலந்துறை இறைவராவார். |
| 359. அரவார் புனலன் பிலாலந் துறைதன்மேல்<br>கரவா தவர்கா ழியுண்ஞா னசம்பந்தன்<br>பரவார் தமிழ்பத் திசைபா டவல்லார்போய்<br>விரவா குவர்வா னிடைவீ டெளிதாமே. | பாம்புகள் வாழும் நீர் வளம் உடைய அன்பில் ஆலந்துறை இறைவர்மேல் வஞ்சனையில்லாத மக்கள் வாழும் சீகாழிப் பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் பரவிப்பாடிய இப்பத்துப் பாடல்களையும் இசையோடு பாட வல்லவர் மறுமையில் வானக இன்பங்களுக்கு உரியவர்கள் ஆவர். அவர்களுக்கு வீட்டின்பமும் எளிதாம். |

## 34. சீகாழி

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 34**

| | |
|---|---|
| 360. அடலே றமருங் கொடியண்ணல்<br>மடலார் குழலா ளொடுமன்னுங்<br>கடலார் புடைசூழ் தருகாழி<br>தொடர்வா ரவர்தூ நெறியாரே. | வ–மை பொருந்திய இடபம் பொறிக்கப்பட்ட கொடியைத் தனதாகக் கொண்ட தலைவனாகிய சிவபிரான், மலர் சூடிய கூந்தலை உடைய உமையம்மையோடு எழுந்தருளியிருப்பதும், கடலால் புடை சூழப்பட்டதுமான சீகாழிப் பதியை இடைவிடாது சென்று வழிபடுபவர் தூய நெறியில் நிற்பவராவர். |

| | |
|---|---|
| 361. திரையார் புனல்சூ டியசெல்வன்<br>வரையார் மகளோ டுமகிழ்ந்தான்<br>கரையார் புனல்சூழ் தருகாழி<br>நிரையார் மலர்தூ வுமினின்றே. | அலைகளோடு கூடிய கங்கையை முடிமிசைச் சூடிய செல்வனாகிய சிவபிரான் மலைமகளோடு மகிழ்ந்து எழுந்தருளியிருப்பதும், கரையை உடைய நீர்நிலைகளால் சூழப்பட்டதுமான சீகாழிப் பதியை வரிசையான பூக்களைக் கொண்டு நின்று தூவி வழிபடுமின். |
| 362. இடியார் குரலே றுடையெந்தை<br>துடியா ரிடையா ளொடுதுன்னுங்<br>கடியார் பொழில்சூழ் தருகாழி<br>அடியா ரறியா ரவலம்மே. | இடியை ஒத்த குரலையுடைய இடபத்தைத் தனது வாகனமாகக் கொண்ட எம் தந்தையாகிய இறைவன், துடி போலும் இடையினை உடைய உமையம்மையோடு எழுந்தருளியிருப்பதும், மணம் பொருந்திய பொழில்களால் சூழப்பட்டதுமான சீகாழிப் பதியை வணங்கும் அடியவர்கள் துன்பத்தை அறியார்கள். |
| 363. ஒளியார் விடமுண் டவொருவன்<br>அளியார் குழன்மங் கையொடன்பாய்க்<br>களியார் பொழில்சூழ் தருகாழி<br>எளிதா மதுகண் டவரின்பே. | நீலநிற ஒளியோடு கூடிய ஆலகால விடத்தை உண்டருளிய ஒப்பற்றவனாகிய சிவபிரான், வண்டுகள் மணத்தைத் தேடிவந்து நாடும் கூந்தலை உடைய உமையம்மையோடு, அன்புடன் களிக்கும், பொழில்கள் சூழ்ந்த காழிப்பதியைக் கண்டவர்க்கு இன்பம் எளிதாம். |
| 364. பனியார் மலரார் தருபாதன்<br>முனிதா னுமையோ டுமுயங்கிக்<br>கனியார் பொழில்சூழ் தருகாழி<br>இனிதா மதுகண் டவரீடே. | தன்மை பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகளை உடைய சிவபெருமான் உமையம்மையோடு கூடி உலக உயிர்கட்குப் போகத்தைப் புரிந்தருளினும், தான் முனிவனாக விளங்குவோன். அத்தகையோன் எழுந்தருளியதும் கனிகள் குலுங்கும் பொழில்கள் சூழ்ந்ததுமான சீகாழிப் பதியைச் சென்று கண்டவர்க்குப் பெருமை எளிதாம் வந்தமையும். |
| 365. கொலையார் தருங்கூற் றமுதைத்து<br>மலையான் மகளோ டுமகிழ்ந்தான்<br>கலையார் தொழுதேத் தியகாழி<br>தலையாற் றொழுவார் தலையாரே. | கொலைத் தொழில் நிறைந்த எமனை உதைத்து அழித்து மலையரையன் மகளாகிய உமையம்மையோடு மகிழ்ந்து உறைபவனாகிய சிவபெருமான் விரும்புவதும், மெய்ஞ்ஞானியர் தொழுதேத்துவதுமாகிய சீகாழிப் பதியைத் தலையால் வணங்குவார் தலையாயவராவார். |
| 366. திருவார் சிலையா லெயிலெய்து<br>உருவா ருமையோ டுடனானான்<br>கருவார் பொழில்சூழ் தருகாழி<br>மருவா தவர்வான் மருவாரே. | அழகிய வில்லால் மூவெயில்களை எய்தழித்து எழில் தவழும் உமையம்மையோடு உடனாய் விளங்கும் சிவபெருமான் எழுந்தருளியிருப்பதும், கருநிறம் பொருந்திய சோலைகளால் சூழப் பெற்றதுமான சீகாழிப் பதியை அடையாதவர் விண்ணுலக இன்பங்களை அடையாதவராவர். |

| | |
|---|---|
| 367. அரக்கன் வ–யொல் கவடர்த்து<br>வரைக்கும் மகளோ டுமகிழ்ந்தான்<br>சுரக்கும் புனல்சூழ் தருகாழி<br>நிரக்கும் மலர்தூ வுநினைந்தே. | இராவணனது வ–மை சுருங்குமாறு அவனைத் தளர்ச்சியெய்த அடர்த்து மலைமகளோடு மகிழ்ந்த சிவபிரான் விளங்குவதும் மேலும் மேலும் பெருகிவரும் நீர் சூழ்ந்ததுமான சீகாழிப் பதியை நினைத்து வரிசையான மலர்களைத் தூவுமின். |
| 368. இருவர்க் கெரியா கிநிமிர்ந்தான்<br>உருவிற் பெரியா ளொடுசேருங்<br>கருநற் பரவை கமழ்காழி<br>மருவப் பிரியும் வினைமாய்ந்தே. | திருமால் பிரமன் ஆகிய இருவர் பொருட்டு எரி உருவாகி நிமிர்ந்த சிவபிரான் அழகிற்சிறந்த பெரியநாயகி அம்மையோடு எழுந்தருளி யிருப்பதும் கரிய நல்ல கட–ன் மணம் கமழ்வதுமான சீகாழிப் பதியை மனத்தால் நினைய நம் வினைகள் மாய்ந்து பிரியும். |
| 369. சமண்சாக் கியர்தா மலர்தூற்ற<br>அமைந்தா னுமையோ டுடனன்பாய்க்<br>கமழ்ந்தார் பொழில்சூழ் தருகாழி<br>சுமந்தார் மலர்தூ வுதல்கொண்டே. | சமணர்களும் சாக்கியர்களும் புறங்கூற, உமையம்மையோடு ஒருசேர அன்பாய்ச் சிவபிரான் எழுந்தருளியிருப்பதும், மணம் கமழ்ந்து நிறையும் பொழில்கள் சூழ்ந்ததுமான சீகாழிப் பதியைத்தம் மனத்தே தியானித்து, மலர் தூவித் தொழுதலே சிறந்த தொண்டாகும். |
| 370. நலமா கியஞா னசம்பந்தன்<br>கலமார் கடல்சூழ் தருகாழி<br>நிலையா கநினைந் தவர்பாடல்<br>வலரா னவர்வா னடைவாரே. | நன்மையை மக்கட்கு நல்குவதும் மரக்கலங்களை உடைய கடலால் சூழப் பெற்றதுமான சீகாழிப் பதியை உறுதியாக நினைந்தவர்களும், ஞானசம்பந்தரின் பாடல்களில் வல்லவராய் ஓதி வழிபட்டவர்களும் விண்ணக இன்பங்களை அடைவர். |

## 35. திருவீழிமிழலை

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 34**

| | |
|---|---|
| 371. அரையார் விரிகோ வணவாடை<br>நரையார் விடையூர் திநயந்தான்<br>விரையார் பொழில்வீ ழிம்மிழலை<br>உரையா லுணர்வா ருயர்வாரே. | இடையிற் கட்டிய விரிந்த கோவண ஆடையையும், வெண்மை நிறம் பொருந்திய விடை ஊர்தியையும் விரும்பி ஏற்றுக் கொண்ட சிவபிரான் உறைவதும், மணம் பொருந்திய பொழில்களால் சூழப்பட்டதுமாகிய திருவீழிமிழலையின் புகழை நூல்களால் உணர்வார் உயர்வடைவர். |
| 372. புனைதல் புரிபுன் சடைதன்மேல்<br>கனைதல் லொருகங் கைகரந்தான்<br>வினையில் லவர்வீ ழிம்மிழலை<br>நினைவில் லவர்நெஞ் சமுநெஞ்சே. | மலரால் அலங்கரிக்கப்பட்ட முறுக்குக்களை உடைய சிவந்த சடைமுடி மீது ஆரவாரித்து வந்த ஒப்பற்ற கங்கை நதியை மறைத்து வைத்துள்ள சிவபிரான் உறையும், தீவினை இல்லாத மக்கள் வாழும் திருவீழிமிழலையை நினையாதவர் நெஞ்சமும் ஒரு நெஞ்சமோ? |

| | |
|---|---|
| 373. அழவல் லவரா டியும்பாடி<br>எழவல் லவரெந் தையடிமேல்<br>விழவல் லவர்வீ ழிம்மிழலை<br>தொழவல் லவர்நல் லவர்தொண்டே. | அழவல்லவரும், ஆடியும் பாடியும் எழவல்லவரும் எந்தையாகிய இறைவன் திருவடிமேல் விழ வல்லவருமாய் அடியவர் நிறைந்துள்ள திருவீழிமிழலையைத் தொழ வல்லவரே நல்லவர். அவர் தொண்டே நற்றொண்டாம். |
| 374. உரவம் புரிபுன் சடைதன்மேல்<br>அரவம் மரையார்த் தவழகன்<br>விரவும் பொழில்வீ ழிம்மிழலை<br>பரவும் மடியா ரடியாரே. | வ–மையை வெளிப்படுத்தி நிற்கும் சிவந்த சடைமுடி மீதும் இடையிலும், பாம்பை அணிந்தும் கட்டியும் உள்ள அழகனாகிய சிவபிரான் எழுந்தருளியதும், பொழில்கள் விரவிச் சூழ்ந்ததுமான திருவீழிமிழலையைப் பரவித் துதிக்கும் அடியவரே அடியவராவர். |
| 375. கரிதா கியநஞ் சணிகண்டன்<br>வரிதா கியவண் டறைகொன்றை<br>விரிதார் பொழில்வீ ழிம்மிழலை<br>உரிதா நினைவா ருயர்வாரே. | கரியதாகிய நஞ்சினை உண்டு அதனை அணியாக நிறுத்திய நீலகண்டன் எழுந்தருளியதும், வரிகளை உடைய வண்டுகள் ஒ– செய்யும் கொன்றை மரங்கள் விரிந்த மாலைபோலக் கொத்தாக மலரும் சோலைகளால் சூழப்பெற்றதும் ஆகிய திருவீழிமிழலையைத் தமக்கு உரிய தலமாகக் கருதுவோர் சிறந்த அடியவராவர். |
| 376. சடையார் பிறையான் சரிபூதப்<br>படையான் கொடிமே லதொர்பைங்கண்<br>விடையா னுறைவீ ழிம்மிழலை<br>அடைவா ரடியா ரவர்தாமே. | சடைமிசைச்சூடிய பிறைமதியை உடையவனும், இயங்கும் பூதப் படைகளை உடையவனும், கொடிமேல் பசிய கண்களை உடைய ஒற்றை விடையேற்றை உடையவனுமாகிய சிவபெருமான் உறையும் திருவீழிமிழலையை அடைபவர்கள் சிறந்த அடியவர்கள் ஆவர். தாம், ஏ அசைநிலை. |
| 377. செறியார் கழலுஞ் சிலம்பார்க்க<br>நெறியார் குழலா ளொடுநின்றான்<br>வெறியார் பொழில்வீ ழிம்மிழலை<br>அறிவா ரவலம் மறியாரே. | கால்களிற் செறிந்த கழல், சிலம்பு ஆகிய அணிகள் ஆர்க்கச் சுருண்ட கூந்தலை உடைய உமையம்மையோடு நின்றருளும் சிவபிரான் எழுந்தருளியதும் மணம் கமழும் பொழில்களால் சூழப் பெற்றதுமான திருவீழிமிழலையைத் தியானிப்பவர் அவலம் அறியார். |
| 378. உளையா வ–யொல் கவரக்கன்<br>வளையா விரலூன் றியமைந்தன்<br>விளையார் வயல்வீ ழிம்மிழலை<br>அளையா வருவா ரடியாரே. | மிக வருந்திக் கயிலை மலையைப் பெயர்த்த இராவணனது வ–மை கெடுமாறு தன் காலை வளைத்து விரலால் ஊன்றிய வ–மை வாய்ந்த சிவபிரான் எழுந்தருளியதும், விளைவு மிகுந்த வயல்களை உடையதுமான திருவீழிமிழலையை நினைந்து வருபவர் சிறந்த அடியவராவர். |
| 379. மருள்செய் திருவர் மயலாக<br>அருள்செய் தவனா ரழலாகி<br>வெருள்செய் தவன்வீ ழிம்மிழலை<br>தெருள்செய் தவர்தீ வினைதேய்வே. | திருமால், பிரமன் ஆகிய இருவரும் அஞ்ஞானத்தினால் அடிமுடிகாணாது மயங்க, அரிய அழலுருவாய் வெளிப்பட்டு நின்று வெருட்டியவனும் பின் அவர்க்கு அருள் செய்தவனுமான சிவபிரான் எழுந்தருளிய திருவீழிமிழலையைச் சிறந்த தலம் என்று தெளிந்தவர்கள் தீவினைகள் தேய்தல் உறும். |

| | |
|---|---|
| 380. துளங்குந் நெறியா ரவர்தொன்மை<br>வளங்கொள் என்மின்புல் லமண்டேரை<br>விளங்கும் பொழில்வீ ழிம்மிழலை<br>உளங்கொள் பவர்தம் வினையோய்வே. | தடுமாற்றமுறும் கொள்கைகளை மேற்கொண்டுள்ள அற்பமானவராய அமணர் தேரர் ஆகியோரின் சமயத்தொன்மைச் சிறப்பைக் கருதாதீர். விளங்கும் பொழில்கள் சூழ்ந்த திருவீழிமிழலையை நினைப்பவர்களின் வினைகள் ஓய்தலுறும். |
| 381. நளிர்கா ழியுண்ஞா னசம்பந்தன்<br>குளிரார் சடையா னடிகூற<br>மிளிரார் பொழில்வீ ழிம்மிழலை<br>கிளர்பா டல்வல்லார்க் கிலைகேடே. | குளிர்ந்த காழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் தண்மையான சடைமுடியை உடைய சிவபிரானுடைய திருவடிப் பெருமைகளைக் கூறத் தொடங்கி விளக்கமான பொழில்கள் சூழ்ந்த திருவீழிமிழலைப் பெருமான் புகழ்கூறும் இப்பதிகப் பாடல்களை ஓத வல்லவர்கட்குக் கேடு இல்லை. |

## 36. திருவையாறு

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 36**

| | |
|---|---|
| 382. கலையார் மதியோ டுரநீரும்<br>நிலையார் சடையா ரிடமாகும்<br>மலையா ரமுமா மணிசந்தோ<br>டலையார் புனல்சே ருமையாறே. | ஒரு கலைப் பிறைமதியோடு வ–ய கங்கை நீரும் நிலையாகப் பொருந்திய சடையை உடைய சிவபிரானது இடம், மலையி–ருந்து கொணர்ந்த முத்துக்கள் சிறந்த மணிகள் சந்தனம் ஆகியவற்றை அள்ளி வரும் அலைகளை உடைய காவிரிபாயும் திருவையாறு ஆகும். |
| 383. மதியொன் றியகொன் றைவடத்தான்<br>மதியொன் றவுதைத் தவர்வாழ்வு<br>மதியின் னொடுசேர் கொடிமாடம்<br>மதியம் பயில்கின் றவையாறே. | பிறைமதி பொருந்திய சடையில் கொன்றை மாலையை அணிந்தவனும், தக்க யாகத்தில் வீரபத்திரரை ஏவிச் சந்திரனைக் காலால் பொருந்த உதைத்தவனுமான சிவபெருமான் வாழுமிடம், மதியோடு சேரும் கொடிகளைக் கொண்டதும் மதி தங்குமாறு உயர்ந்த மாடவீடுகளை உடையதுமான திருவையாறு ஆகும். |
| 384. கொக்கின் னிறகின் னொடுவன்னி<br>புக்க சடையார்க் கிடமாகும்<br>திக்கின் னிசைதே வர்வணங்கும்<br>அக்கின் னரையா ரதையாறே. | கொக்கிறகு என்னும் மலரோடு வன்னிப் பச்சிலைகளும் பொருந்திய சடைமுடியை உடையவர்க்கு உரிய இடம், எண் திசைகளிலும் வாழும் தேவர்களால் வணங்கப் பெறுபவரும், சங்கு மணிகள் கட்டிய இடையினை உடையவருமான அப்பெருமானின் திருவையாறாகும். |
| 385. சிறைகொண் டபுரம் மவைசிந்தக்<br>கறைகொண் டவர்கா தல்செய்கோயில்<br>மறைகொண் டநல்வா னவர்தம்மில்<br>அறையும் மொ–சே ருமையாறே. | சிறகுகளோடு கூடிய முப்புரங்களும் அழியச் சினந்தவராகிய சிவபிரான் விரும்பும் கோயில், மக்கள் கண்களுக்குப் புலனாகாது மறைந்து இயங்கும் நல்ல தேவர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளும் ஒ– நிறைந்துள்ள திருவையாறு ஆகும். |

| | |
|---|---|
| 386. உமையா ளொருபா கமதாகச்<br>சமைவா ரவர்சார் விடமாகும்<br>அமையா ருடல்சோர் தரமுத்தம்<br>அமையா வருமந் தணையாறே. | உமையம்மை ஒருபாகத்தே விளங்கப் பொருந்தியவராகிய சிவபெருமான் சாரும் இடம், மலையிடையே உள்ள மூங்கில்கள் முத்துக்களைச் சொரிய அவை காவிரியாற்றில் பொருந்தி வரும் குளிர்ந்த திருவையாறாகும். |
| 387. தலையின் றொடைமா லையணிந்து<br>கலைகொண் டதொர்கை யினர்சேர்வாம்<br>நிலைகொண் டமனத் திவர்நித்தம்<br>மலர்கொண் டுவணங் குமையாறே. | தலையோட்டினால் தொகுக்கப்பட்டுள்ள மாலையை அணிந்து மானைக் கையின்கண் கொண்டவராகிய சிவபிரானது இடம், இறைவன் திருவடிக்கண் நிலைத்த மனமுடையவராகிய அடியவர் நாள்தோறும் மலர்கொண்டு தூவி வழிபாடு செய்யும் திருவையாறாகும். |
| 388. வரமொன் றியமா மலரோன்றன்<br>சிரமொன் றையறுத் தவர்சேர்வாம்<br>வரைநின் றிழிவார் தருபொன்னி<br>அரவங் கொடுசே ருமையாறே. | வரங்கள் பல பெற்ற தாமரை மலர்மேல் விளங்கும் பிரமனின் தலைகளில் ஒன்றை அறுத்த சிவபிரானது இடம், மலையினின்று இழிந்து பெருகி வரும் காவிரி நதி ஆரவாரித்து வரும் திருவையாறு ஆகும். |
| 389. வரையொன் றதெடுத் தவரக்கன்<br>சிரமங் கநெரித் தவர்சேர்வாம்<br>விரையின் மலர்மே தகுபொன்னித்<br>திரைதன் னொடுசே ருமையாறே. | கயிலை மலையைப் பெயர்த்த இராவணனின் சிரங்களும் பிற அங்கங்களும் சிதறுமாறு நெரித்த சிவபிரான் எழுந்தருளிய இடம், மணம் பொருந்திய மலர்களைக் கொண்டு புண்ணிய நதியாகிய காவிரி அலைகளோடு கூடிப் பாய்ந்து வளம் சேர்க்கும் திருவையாறு ஆகும். |
| 390. சங்கக் கயனு மறியாமைப்<br>பொங்குஞ் சுடரா னவர்கோயில்<br>கொங்கிற் பொ–யும் புனல்கொண்டு<br>அங்கிக் கெதிர்காட் டுமையாறே. | சங்கத்தைக் கையின்கண் கொண்ட திருமாலும் அறியாதவாறு பொங்கி எழும் சுடராகத் தோன்றிய சிவபிரான் உறையும் கோயில், காவிரி, மகரந்தம், தேன் ஆகியன பொ–யும் நீரைக்கொண்டு வந்து, அழல் வடிவான இறைவன் திருமுன் அர்க்கியமாகக் காட்டும் திருவையாறாகும். |
| 391. துவரா டையர்தோ லுடையார்கள்<br>கவர்வாய் மொழிகா தல்செய்யாதே<br>தவரா சர்கள்தா மரையானோ<br>டவர்தா மணையந் தணையாறே. | துவராடை தரித்த புத்தர், ஆடையின்றித் தோலைக் காட்டும் சமணர் ஆகியவரின் மாறுபட்ட வாய்மொழிகளை விரும்பாது, தவத்தால் மேம்பட்டவர்கள், பிரமன் முத–ய தேவர்களோடு வந்தணைந்து வழிபடும் தலம் திருவையாறாகும். அதனைச் சென்று வழிபடுமின். |
| 392. கலையார் க–க்கா ழியர்மன்னன்<br>நலமார் தருஞா னசம்பந்தன்<br>அலையார் புனல்சூ ழுமையாற்றைச்<br>சொலுமா லைவல்லார் துயர்வீடே. | கலைவல்லவர்களின் ஆரவாரம் மிக்க சீகாழிப் பதியில் உள்ளார்க்குத் தலைவனாகிய நன்மை அமைந்த ஞானசம்பந்தன் அலைகளை உடைய காவிரியால் சூழப்பட்ட திருவையாற்றைப் போற்றிப் பாடிய இத்தமிழ் வல்லவர்களின் துயர்கள் நீங்கும். |

## 37. திருப்பனையூர்

பண் : தக்கராகம் — முதல் திருமுறை பதிக எண் : 37

| | |
|---|---|
| 393. அரவச் சடைமேன் மதிமத்தம்<br>விரவிப் பொ–கின் றவனூராம்<br>நிரவிப் பலதொண் டர்கள்நாளும்<br>பரவிப் பொ–யும் பனையூரே. | சடைமுடிமேல் அரவம், மதி, ஊமத்தம் மலர் ஆகியன கலந்து விளங்குமாறு அணிந்த சிவபிரானது தலம் தொண்டர்கள் பலரும் கலந்து நாள்தோறும் வணங்கி மகிழ்வுறும் திருப்பனையூராகும். |
| 394. எண்ணொன் றிநினைந் தவர்தம்பால்<br>உண்ணின் றுமகிழ்ந் தவனூராம்<br>கண்ணின் றெழுசோ லையில்வண்டு<br>பண்ணின் றொ–செய் பனையூரே. | மனம் ஒன்றி நினைந்த அடியார்களின் உள்ளத்துள்ளே இருந்து அவர்தம் வழிபாட்டை ஏற்று மகிழ்கின்ற சிவபெருமானது தலம், தேன் பொருந்திய மலர்களோடு உயர்ந்துள்ள சோலைகளில் வண்டுகள் பண்ணொான்றிய ஒ– செய்யும் பனையூராகும். |
| 395. அலரும் மெறிசெஞ் சடைதன்மேல்<br>மலரும் பிறையொன் றுடையானூர்<br>சிலரென் றுமிருந் தடிபேணப்<br>பலரும் பரவும் பனையூரே. | விளங்கும் எரிபோலச் சிவந்த சடைமுடிமீது வளரும் பிறையொன்றை உடைய சிவபெருமானது ஊர், அடியவர்களில் சிலர் என்றும் இருந்து திருவடிகளைப் பரவிப் பூசனை செய்து போற்றவும், பலர் பலகாலும் வந்து பரவ விளங்கும் திருப்பனையூராகும். |
| 396. இடியார் கடனஞ் சமுதுண்டு<br>பொடியா டியமே னியினானூர்<br>அடியார் தொழமன் னவரேத்தப்<br>படியார் பணியும் பனையூரே. | கரைகளை மோதுதல் செய்யும் கட–டைத் தோன்றிய நஞ்சை அமுதாக உண்டு, மேனி மீது திருநீற்றுப் பொடியை நிரமப் பூசிய சிவபெருமானது ஊர், அடியவர்கள் தொழ, மன்னவர்கள் ஏத்த உலகில் வாழும் பிற மக்கள் பணியும் திருப்பனையூராகும். |
| 397. அறையார் கழன்மே லரவாட<br>இறையார் ப–தேர்ந் தவனூராம்<br>பொறையார் மிகுசீர் விழமல்கப்<br>பறையா ரொ–செய் பனையூரே. | ஒ–க்கின்ற வீரக்கழல் மேல் அரவு ஆட முன்கைகளில் ப–யேற்றுத் திரியும் பிட்சாடனராகிய சிவபெருமானது ஊர், மண்ணுலகில் சிறந்த புகழை உடைய திருவிழாக்கள் நிறையப் பறைகளின் ஒ– இடைவிடாது பயிலும் திருப்பனையூராகும். |
| 398. அணியார் தொழவல் லவரேத்த<br>மணியார் மிடறொன் றுடையானூர்<br>தணியார் மலர்கொண் டிருபோதும்<br>பணிவார் பயிலும் பனையூரே. | தம்மைப் பூசனை செய்து தொழவல்ல அடியவர்கள் அண்மையில் இருப்பவராய், அருகிருந்து ஏத்துமாறு உள்ள நீலமணிபோலும் கண்டத்தை உடைய சிவபெருமானது ஊர், தன்னைப் பணியும் அடியவர் குளிர்ந்த மலர்களைக் கொண்டு இருபோதும் தூவி வழிபடும் இடமான திருப்பனையூராகும். |
| 399. அடையா தவர்மூ வெயில்சீறும்<br>விடையான் விறலார் கரியின்றோல்<br>உடையா னவனெண் பலபூதப்<br>படையா னவனூர் பனையூரே. | தன்னை வணங்காத பகைவர்களான அசுரர்களின் மூன்று அரண்களையும் அழித்த விடையூர்தியனும், வ–ய யானையை உரித்து அதன் தோலை மேல் ஆடையாகக் கொண்டவனும் எண்ணற்ற பல பூதப் படைகளை உடையவனுமான சிவபெருமானது ஊர் திருப்பனையூராகும். |

| | |
|---|---|
| 400. இலகும் முடிபத் துடையானை<br>அலல்கண் டருள்செய் தவெம்மண்ணல்<br>உலகில் லுயிர்நீர் நிலமற்றும்<br>பலகண் டவனூர் பனையூரே. | விளங்கும் முடி பத்தை உடைய இராவணனை அடர்த்து அவன்படும் அல்லல் கண்டு அவனுக்கு அருள் செய்த எம் அண்ணலும், உலகின்கண் உயிர்கட்கு நீர் நிலம் முதலான பலவற்றையும் படைத்தளித்தவனும் ஆகிய சிவபெருமானது ஊர் திருப்பனையூர். |
| 401. வரமுன் னிமகிழ்ந் தெழுவீர்காள்<br>சிரமுன் னடிதா ழவணங்கும்<br>பிரமன் னொடுமா லறியாத<br>பரமன் னுறையும் பனையூரே. | சிவபெருமானிடம் வரங்களைப் பெறுதலை எண்ணி மகிழ்வோடு புறப்பட்டு வரும் அடியவர்களே, அப்பெருமான் திருமுன் தலை தாழ்த்தி வணங்குங்கள்; எளிதில் நல்வரம் பெறலாம். பிரமனும் திருமாலும் அறியாத அப்பரமன் உறையும் ஊர் திருப்பனையூராகும். |
| 402. அழிவல் லமண ரொடுதேரர்<br>மொழிவல் லனசொல் –யபோதும்<br>இழிவில் லதொர்செம் மையினானூர்<br>பழியில் லவர்சேர் பனையூரே. | அழித–ல் வல்ல அமணர்களும் பௌத்தர்களும் வாய்த்திறனால் புறங்கூறிய போதும் குறைவுறாத செம்மையாளனாகிய சிவபெருமானது ஊர் பழியற்றவர் சேரும் திருப்பனையூராகும். |
| 403. பாரார் விடையான் பனையூர்மேல்<br>சீரார் தமிழ்ஞா னசம்பந்தன்<br>ஆரா தசொன்மா லைகள்பத்தும்<br>ஊரூர் நினைவா ருயர்வாரே. | மண்ணுலகிற் பொருந்தி வாழ்தற்கு ஏற்ற விடை ஊர்தியைக் கொண்ட சிவபெருமானது திருப்பனையூரின் மேல் புகழால் மிக்க தமிழ் ஞானசம்பந்தன் மென்மேலும் விருப்பத்தைத் தருவனவாகப் போற்றிப் பாடிய சொன்மாலைகளான இப்பத்துப் பாடல்களையும் ஒவ்வோரூரிலும் இருந்துகொண்டு நினைவார் உயர்வெய்துவர். |

## 38. திருமயிலாடுதுறை

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 38**

| | |
|---|---|
| 404. கரவின் றிநன்மா மலர்கொண்டு<br>இரவும் பகலுந் தொழுவார்கள்<br>சிரமொன் றியசெஞ் சடையான்வாழ்<br>வரமா மயிலா டுதுறையே. | நெஞ்சிற் கரவின்றி மணம் மிக்க சிறந்த மலர்கள் பலவற்றையும் பறித்துக் கொண்டு வந்து இரவும் பகலும் தொழும் அடியார்களுக்கு, தலைமாலை பொருந்தும் செஞ்சடை உடைய சிவபெருமான் வாழும் பதியாகிய மயிலாடுதுறை மேம்பட்ட தலமாகும். வள்ளன்மை யுடையான் உகந்தருளும் இடமுமாம். |
| 405. உரவெங் கரியின் னுரிபோர்த்த<br>பரமன் னுறையும் பதியென்பர்<br>குரவஞ் சுரபுன் னையும்வன்னி<br>மருவும் மயிலா டுதுறையே. | வ–மை பொருந்திய கொடிய யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்த பரமன் உறையும் பதி, குராமரம், சுரபுன்னை, வன்னி ஆகிய மரங்கள் செறிந்த திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| 406. ஊனத் திருணீங் கிடவேண்டில்<br>ஞானப் பொருள்கொண் டடிபேணும்<br>தேனொத் தினியா னமருஞ்சேர்<br>வானம் மயிலா டுதுறையே. | இப்பிறப்பில் நமக்குள்ள குறைபாடாகிய ஆணவம் என்னும் இருள் நம்மை விட்டு நீங்க வேண்டில், ஞானப் பொருளாய் உள்ள சிவபெருமான் திருவடிகளை வணங்குங்கள். தேனை ஒத்து இனியனாய் விளங்கும் அப்பெருமான் தனக்குச் சேர்வான மயிலாடுதுறையில் விரும்பி உறைகிறான். |
| 407. அஞ்சொண் புலனும் மவைசெற்ற<br>மஞ்சன் மயிலா டுதுறையை<br>நெஞ்சொன் றிநினைந் தெழுவார்மேற்<br>றுஞ்சும் பிணியா யினதானே. | ஐம்பொறிகளைப் பற்றும் ஒள்ளிய புலன்களாகிய அவைகளைக் கெடுத்த பெருவீரனாகிய சிவபெருமான் எழுந்தருளிய மயிலாடுதுறையை மனம் ஒன்றி நினைந்து வழிபட எழுவார் மேல் வரும் பிறவி முதலாகிய பிணிகள் அழிந்தொழியும். |
| 408. தணியார் மதிசெஞ் சடையான்றன்<br>அணியார்ந் தவருக் கருளென்றும்<br>பிணியா யினதீர்த் தருள்செய்யும்<br>மணியான் மயிலா டுதுறையே. | குளிர்ந்த பிறைமதியை அணிந்துள்ள சிவந்த சடைமுடியை உடையவனாகிய சிவபெருமானை அணுகியவருக்கு என்றும் அருள் உளதாம். பிணி முதலானவற்றைப் போக்கி அருள்புரியும் மணி போன்றவனாய் அப்பெருமான் மயிலாடுதுறையில் உள்ளான். |
| 409. தொண்ட ரிசைபா டியுங்கூடிக்<br>கண்டு துதிசெய் பவனூராம்<br>பண்டும் பலவே தியரோத<br>வண்டார் மயிலா டுதுறையே. | தொண்டர்களாயுள்ளவர்கள் கூடி இசை பாடியும், தரிசித்தும் துதிக்கும் சிவபெருமானது ஊர் முற்காலத்தும் இக்காலத்தும் வேதியர்கள் வேதங்களை ஓதித் துதிக்க, வண்டுகள் ஒ–க்கும் சோலைகள் சூழ்ந்த மயிலாடுதுறையாகும். |
| 410. அணங்கோ டொருபா கமமர்ந்து<br>இணங்கி யருள்செய் தவனூராம்<br>நுணங்கும் புரிநூ லர்கள்கூடி<br>வணங்கும் மயிலா டுதுறையே. | உமையம்மையை ஒரு பாகமாக விரும்பி ஏற்று வீற்றிருந்து அருள் புரிபவன் ஊர், முப்புரி நூல் துவளும் அந்தணர்கள் கூடி வணங்கும் திருமயிலாடுதுறை ஆகும். |
| 411. சிரங்கை யினிலேந் தியிரந்த<br>பரங்கொள் பரமேட் டிவரையால்<br>அரங்கவ் வரக்கன் வ–செற்ற<br>வரங்கொண் மயிலா டுதுறையே. | பிரமகபாலத்தைக் கையில் ஏந்திப் பலர் இல்லங்களிலும் சென்று இரந்த மேன்மை கொண்டவன் சிவபிரான். கயிலை மலையால் இராவணனை நெரியுமாறு அடர்த்த நன்மை யாளனாகிய அப்பெருமானை அடியவர் வணங்கி நன்மைகளைப் பெறும் தலம் திருமயிலாடுதுறை. |
| 412. ஞாலத் தைநுகர்ந் தவன்றானும்<br>கோலத் தயனும் மறியாத<br>சீலத் தவனூர் சிலர்கூடி<br>மாலை தீர்மயிலா டுதுறையே. | உலகை விழுங்கித் தன் வயிற்றகத்தே வைத்த திருமாலும், அழகிய நான்முகனும் அறியாத தூயவனாகிய சிவபெருமானது ஊர், அடியவர் ஒருங்கு கூடி வழிபட்டுத் தம் அறியாமை நீங்கப் பெறும் சிறப்புடைய திருமயிலாடுதுறை ஆகும். |

| | |
|---|---|
| 413. நின்றுண் சமணுந் நெடுந்தேரர்<br>ஒன்றும் மறியா மையுயர்ந்த<br>வென்றி யருளா னவனூராம்<br>மன்றன் மயிலா டுதுறையே. | நின்றுண்பவர்களாகிய சமணர்களும் நெடிதுயர்ந்த புத்தர்களும் ஒரு சிறிதும் தன்னை அறியாதவர்களாய் ஒழியத் தான் உயர்ந்த வெற்றி அருள் இவைகளைக் கொண்டுள்ள சிவபெருமானது ஊர் நறுமணம் கமழும் திருமயிலாடுதுறை ஆகும். |
| 414. நயர்கா ழியுண்ஞா னசம்பந்தன்<br>மயல்தீர் மயிலா டுதுறைமேல்<br>செயலா லுரைசெய் தனபத்தும்<br>உயர்வா மிவையுற் றுணர்வார்க்கே. | ஞானத்தினால் மேம்பட்டவர் வாழும் சீகாழிப் பதியுள் வாழும் ஞானசம்பந்தன், தன்னை வழிபடுவாரின் மயக்கத்தைத் தீர்த்தருளும் மயிலாடுதுறை இறைவனைப் பற்றித் திருவருள் உணர்த்தும் செயலால் உரைத்தனவாகிய இத்திருப்பதிகப் பாடல்களாகிய இவை பத்தும் உற்றுணர்வார்க்கு உயர்வைத் தரும். |

## 39. திருவேட்களம்

பண் : தக்கராகம் — முதல் திருமுறை பதிக எண் : 39

| | |
|---|---|
| 415. அந்தமுமாதியு மாகியவண்ணல் ஆரழலங்கை<br>யமர்ந்ததிலங்க<br>மந்தமுழவ மியம்ப மலைமகள் காணநின்றாடிச்<br>சந்தமிலங்கு நகுதலைகங்கை தண்மதியம் மயலேததும்ப<br>வெந்தவெண் ணீறுமெய்பூசும் வேட்கள நன்னகராரே. | உலகங்களைப் படைப்பவரும், இறுதி செய்பவருமாகிய, தலைமைத் தன்மையுடைய சிவபிரான் பிறரால் பொறுத்தற்கரிய தீ கையின்கண் விளங்க, மெல்லென ஒ–க்கும் முழவம் இயம்ப, மலைமகளாகிய பார்வதிதேவி காணுமாறு திருநடம் புரிந்து, அழகு விளங்கும் கபாலமாலை, கங்கை, தண் பிறை ஆகியன தலையின்கண் விளங்க, வெந்த வெண்ணீறு மெய்யில் பூசியவராய்த் திருவேட்கள நன்னகரில் எழுந்தருளியுள்ளார். |
| 416. சடைதனைத்தாழ்தலு மேறமுடித்துச் சங்கவெண்டோடு<br>சரிந்திலங்கப்<br>புடைதனிற் பாரிடஞ்சூழப் போதருமா றிவர்போல்வார்<br>உடைதனினால்விரற் கோவணவாடை யுண்பதுமூரிடு<br>பிச்சைவெள்ளை<br>விடைதனை யூர்திநயந்தார் வேட்கள நன்னகராரே. | திருவேட்கள நன்னகர் இறைவன், தாழ்ந்து தொங்கும் சடைமுடியை எடுத்துக்கட்டிச் சங்கால் இயன்ற வெள்ளியதோடு காதிற் சரிந்து விளங்கவும், அருகில் பூதங்கள் சூழ்ந்து வரவும், போதருகின்றவர். அவர்தம் உடையோ நால்விரல் அகலமுடைய கோவண ஆடையாகும். அவர் உண்பதோ ஊரார் இடும் பிச்சையாகும். அவர் விரும்பி ஏறும் ஊர்தியோ வெண்ணிறமுடைய விடையாகும். |
| 417. பூதமும்பல்கண மும்புடைசூழப் பூமியும்விண்ணு<br>முடன்பொருந்தச்<br>சீதமும்வெம்மையு மாகிச் சீரொடுநின்றவெஞ் செல்வர்<br>ஓதமுங்கானலுஞ் சூழ்தருவேலை யுள்ளங்கலந்திசை<br>யாலெழுந்த<br>வேதமும்வேள்வியு மோவா வேட்கள நன்னகராரே. | கடல்நீர்ப் பெருக்கும் சோலையும் சூழ்ந்ததும், அந்தணர்கள் மனங்கலந்து பாடும் இசையால் எழுந்த வேத ஒ–யும், அவர்கள் இயற்றும் வேள்விகளும் இடையறாது நிகழும் இயல்பினதும் ஆகிய திருவேட்கள நன்னகர் இறைவர், பூதங்களும் சிவகணங்களும் அருகில் சூழ்ந்து விளங்க, விண்ணும் மண்ணும் தம்பால் பொருந்தத் தண்மையும் வெம்மையும் ஆகிப் புகழோடு விளங்கும் எம் செல்வராவார். |

| | |
|---|---|
| 418. அரைபுல்குமைந்தலை யாடலரவ மமையவெண்கோவணத் தோடசைத்து<br>வரைபுல்குமார்பி லொராமை வாங்கியணிந் தவர்தாந்<br>திரைபுல்குதெண்கடல் தண்கழியோதந் தேனலங்கானல் வண்டுபண்செய்ய<br>விரைபுல்குபைம்பொழில் சூழ்ந்த வேட்கள நன்னகராரே. | இடையிற் பொருந்திய ஐந்து தலைகளையுடைய தாய், ஆடும் பாம்பை வெண்மையான கோவணத்தோடு பொருந்தக்கட்டி, மலை போன்று அகன்ற மார்பின்கண் ஒப்பற்ற ஆமை ஓட்டை விரும்பி அணிந்தவராய் விளங்கும் சிவபெருமானார் அலைகளையுடைய தெளிந்த கடல்நீர் பெருகிவரும் உப்பங்கழிகளை உடையதும், வண்டுகள் இசைபாடும் தேன்பொருந்திய கடற்கரைச் சோலைகளை உடையதும், மணம் கமழும் பைம்பொழில் சூழ்ந்ததுமாகிய திருவேட்கள நன்னகரில் எழுந்தருளி உள்ளார். |
| 419. பண்ணுறுவண்டறை கொன்றையலங்கல் பால்புரைநீறுவெண் ணூல்கிடந்த<br>பெண்ணுறுமார்பினர் பேணார் மும்மதிலெய்த பெருமான்<br>கண்ணுறுநெற்றி கலந்தவெண்டிங்கட் கண்ணியர்விண்ணவர் கைதொழுதேத்தும்<br>வெண்ணிறமால்விடை யண்ணல் வேட்கள நன்னகராரே. | திருவேட்கள நன்னகர் இறைவர், இசைபாடும் வண்டுகள் சூழ்ந்த கொன்றை மாலையை அணிந்தவராய், பால் போன்ற வெண்ணீறு பூசியவராய், முப்புரி நூலும் உமையம்மையும் பொருந்திய மார்பினராய்ப் பகைவர்களாகிய அசுரர்களின் மும்மதில்களையும் எய்து அழித்த தலைவராய், நெற்றிக் கண்ணராய், பிறைமதிக் கண்ணியராய் விண்ணவர் கைதொழுது ஏத்தும் வெண்மையான பெரிய விடை மீது ஊர்ந்து வருபவராய் விளங்கும் தலைவராவார். |
| 420. கறிவளர்குன்ற மெடுத்தவன்காதற் கண்கவரைங்கணை யோனுடலம்<br>பொறிவள ராரழலுண்ணப் பொங்கிய பூதபுராணர்<br>மறிவளரங்கையர் மங்கையொர்பங்கர் மைஞ்ஞிறமானுரி தோலுடையாடை<br>வெறிவளர்கொன்றையந் தாரார் வேட்கள நன்னகராரே. | திருவேட்கள நன்னகர் இறைவர், மிளகுக் கொடிகள் வளர்ந்து செறிந்த கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்த திருமால்ன் அன்பு மகனும், அழகு மிக்கவனும், ஐங்கணை உடையவனுமாகிய மன்மதனின் உடல், பொறி பறக்கும் அரிய அழல் உண்ணும்படி சினந்த பழையோரும், மான் ஏந்திய கரத்தினரும், மங்கை பங்கரும், கருநிறமுடைய யானையின் தோலை உரித்து ஆடையாகப் போர்த்தவரும், மணங்கமழும் கொன்றை மாலையை அணிந்தவருமாவார். |
| 421. மண்பொடிக்கொண்டெரித் தோர்சுடலை மாமலைவேந்தன் மகள்மகிழ<br>நுண்பொடிச்சேர நின்றாடி நொய்யன செய்யலுகந்தார்<br>கண்பொடிவெண்டலை யோடுகையேந்திக் காலனைக்காலாற் கடிந்துகந்தார்<br>வெண்பொடிச் சேர்திருமார்பர் வேட்கள நன்னகராரே. | திருவேட்கள நன்னகர் இறைவர் மண்ணும் பொடியாகுமாறு உலகை அழித்து, ஒப்பற்ற அச்சுடலையில் சிறப்புத் தன்மையை உடைய இமவான் மகளாகிய பார்வதிதேவி கண்டு மகிழ, சுடலையின் நுண்பொடிகள் தம் உடற் படிய நின்று ஆடி, அத்திருக்கூத்து வாயிலாக நுட்பமான பஞ்ச கிருத்தியங்கள் செய்தலை உகந்தவரும், கண் பொடிந்து போன வெள்ளிய தலையோட்டினைக் கையில் ஏந்தியவரும், காலனைக் காலால் கடிந்துகந்தவரும் வெள்ளிய திருநீறு சேர்ந்த அழகிய மார்பினரும் ஆவார். |

| | |
|---|---|
| 422. ஆழ்தருமால்கட னஞ்சினையுண்டார் அமுதமமரர்க் கருளிச்<br>சூழ்தருபாம்பரை யார்த்துச் சூலமோடொண் மழுவேந்தித்<br>தாழ்தருபுன்சடை யொன்றினைவாங்கித் தண்மதியம்மய லேததும்ப<br>வீழ்தருகங்கை கரந்தார் வேட்கள நன்னகராரே. | திருவேட்கள நன்னகர் இறைவர், ஆழமான பெரிய கட–டத்துத் தோன்றிய அமுதத்தைத் தேவர்க்கு அளித்தருளி நஞ்சினைத் தாம் உண்டவரும், சுற்றிக்கொள்ளும் இயல்பினதாய பாம்பினை இடையிற்கட்டி, சூலம், ஒளி பொருந்திய மழு ஆகியவற்றை கைகளில் ஏந்தியவரும், உலகையே அழிக்கும் ஆற்றலோடு பெருகி வந்த கங்கை நீரைத் தம் பிறை அய–ல் விளங்கத் தலையி–ருந்து தொங்கும் மெல்–ய சடை ஒன்றினை எடுத்து அதன்கண் சுவருமாறு செய்தவரும் ஆவார். |
| 423. திருவொளிகாணிய பேதுறுகின்ற திசைமுகனுந் திசைமேலளந்த<br>கருவரையேந்திய மாலுங் கைதொழ நின்றதுமல்லால்<br>அருவரையொல்க வெடுத்தவரக்க னாடெழிற்றோள்க ளாழத்தழுந்த<br>வெருவுறவூன்றிய பெம்மான் வேட்கள நன்னகராரே. | திருவேட்கள நன்னகர் இறைவர், அழகிய பேரொளிப் பிழம்பைக் காணும்பொருட்டு மயங்கிய நான்முகனும், எண்திசைகளையும் அளந்தவனாய்ப் பெரிதான கோவர்த்தன மலையைக் குடையாக ஏந்திய திருமாலும், அடிமுடி காண இயலாது கைதொழுது நிற்க, கயிலைமலை தளருமாறு அதனை எடுத்த இராவணனின் வெற்றியும் அழகு மிக்க தோள்களும் ஆழத் தழுந்தவும் அவன் அஞ்சி நடுங்கவும் தம் கால் விரலை ஊன்றிய பெருமான் ஆவார். |
| 424. அத்தமண்டோய்துவ ரார்அமண்குண்டர் யாதுமல்லாவுரை யேயுரைத்துப்<br>பொய்த்தவம் பேசுவதல்லாற் புறனுரையாதொன்றுங் கொள்ளேல்<br>முத்தனவெண்முறு வல்லுமையஞ்ச மூரிவல்லானையி னீருரிபோர்த்த<br>வித்தகர்வேத முதல்வர் வேட்கள நன்னகராரே. | செந்நிறமான காவி மண் தோய்ந்த ஆடைகளை அணிந்த பௌத்தர்கள், சமண குண்டர்கள் ஆகியோர் பொருளற்ற வார்த்தைகளை உரைத்துப் பொய்த்தவம் பேசுவதோடு சைவத்தைப் புறனுரைத்துத் திரிவர். அவர்தம் உரை எதனையும் கொள்ளாதீர். முத்துப் போன்ற வெண் முறுவல் உடைய உமையம்மை அஞ்சுமாறு வ–ய யானையின் தோலை உரித்துப் போர்த்த வித்தகரும் வேத முதல்வருமாகிய வேட்கள நன்னகர் இறைவரை வணங்குமின். |
| 425. விண்ணியன்மாடம் விளங்கொளிவீதி வெண்கொடியெங்கும் விரிந்திலங்க<br>நண்ணியசீர்வளர் காழி நற்றமிழ் ஞானசம்பந்தன்<br>பெண்ணினல்லாளொரு பாகமமர்ந்து பேணியவேட்கள மேன்மொழிந்த<br>பண்ணியல்பாடல் வல்லார்கள் பழியொடு பாவமிலாரே. | விண்ணுற வோங்கிய மாட வீடுகளையும், வெண்மையான கொடிகள் எங்கும் விரிந்து விளங்கும் ஒளி தவழும் வீதிகளையும் உடையதும், பொருந்திய சீர்வளர்வதும் ஆகிய சீகாழிப் பதியுள் தோன்றிய நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் பெண்ணில் நல்லவளான நல்ல நாயகியை ஒரு பாகமாக விரும்பி ஏற்று எழுந்தருளியுள்ள திருவேட்களத்து இறைவர்மீது பாடியருளிய பண்பொருந்திய இப்பதிகப் பாடல்களை ஓத வல்லவர் பழி பாவம் இலராவர். |

## 40. திருவாழ்கொளிபுத்தூர்

பண் : தக்கராகம் முதல் திருமுறை பதிக எண் : 40

| | |
|---|---|
| 426. பொடியுடைமார்பினர் போர்விடையேறிப் பூதகணம் புடைசூழக்<br>கொடியுடையூர்திரிந் தையங் கொண்டு பலபலகூறி<br>வடிவுடைவாணெடுங் கண்ணுமைபாக மாயவன்வாழ்கொளி புத்தூர்க்<br>கடிகமழ் மாமலரிட்டுக் கறைமிடற்றானடி காண்போம். | திருநீறு அணிந்த மார்பினராய், வீரம் மிக்க விடை மீது ஏறி, பூத கணங்கள் புடைசூழ்ந்து வர, கொடிகள் கட்டிய ஊர்களில் திரிந்து பற்பல வாசகங்களைக் கூறிப் ப–யேற்று, அழகிய வாள் போன்ற நெடிய கண்களையுடைய உமையொரு பாகராகிய சிவபிரானார் எழுந்தருளிய வாழ்கொளிபுத்தூர் சென்று மணம் கமழும் சிறந்த மலர்களால் அருச்சித்து அக்கறைமிடற்றார் திருவடிகளைக் காண்போம். |
| 427. அரைகெழுகோவண வாடையின்மேலோர் ஆடரவம்மசைத் தையம்<br>புரைகெழுவெண்டலை யேந்திப் போர்விடை யேறிப்புகழ<br>வரைகெழுமங்கைய தாகமொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்<br>விரைகமழ் மாமலர்தூவி விரிசடையானடி சேர்வோம் | இடையில் கட்டிய கோவண ஆடையின்மேல் ஆடும் அரவம் ஒன்றைக் கட்டிக் கொண்டு, துளை பொருந்திய வெண்தலையோட்டைக் கையில், ஏந்திப் ப–யேற்று, சினம் பொருந்திய விடை மீது ஏறிப் பலரும் புகழ, இமவான் மகளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனாகிய சிவபிரான் எழுந்தருளிய திருவாழ்கொளிபுத்தூர் சென்று, மணம் கமழும் சிறந்த மலர்களைத் தூவி அவ்விரிசடையான் திருவடிகளைச் சேர்வோம். |
| 428. பூணெடுநாக மசைத்தனலாடிப் புன்றலையங்கையி லேந்தி<br>ஊணிடுபிச்சையூ ரையம் முண்டியென்று பலகூறி<br>வாணெடுங்கண்ணுமை மங்கையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்த்<br>தாணெடு மாமலரிட்டுத் தலைவனதாணிழல் சார்வோம். | நெடிய பாம்பை அணிகலனாகப் பூண்டு, அனலைக் கையின்கண் ஏந்தி, ஆடிக்கொண்டும், பிரமனது தலையோட்டை அழகிய கையொன்றில் ஏந்திப் பல ஊர்களிலும் திரிந்து மக்கள் உணவாகத் தரும் பிச்சையைத் தனக்கு உணவாக ஏற்றுப் பற்பலவாறு கூறிக்கொண்டும், வாள் போன்ற நீண்ட கண்களையுடைய உமையம்மையை ஒரு பாகமாக ஏற்று விளங்கும் சிவபிரான் எழுந்தருளிய திருவாழ்கொளிபுத்தூர் சென்று அப்பெருமான் திருவடிகளில் சிறந்த மலர்களைத் தூவித் தலைவனாக விளங்கும் அவன் தாள் நிழலைச் சார்வோம். |
| 429. தாரிடுகொன்றையொர் வெண்மதிகங்கை தாழ்சடை மேலவைசூடி<br>ஊரிடுபிச்சைகொள் செல்வ முண்டியென்ற பலகூறி<br>வாரிடுமென்முலை மாதொருபாக மாயவன்வாழ்கொளி புத்தூர்க்<br>காரிடு மாமலர்தூவிக் கறைமிடற்றானடி காண்போம். | கொன்றை மாலையையும், வெண்மதியையும், கங்கையையும், தாழ்ந்து தொங்கும் சடைமுடியில் சூடி, ஊர் மக்கள் இடும் பிச்சையை ஏற்றுக் கொண்டு, அதுவே தனக்குச் செல்வம், உணவு என்று பலவாறு கூறிக்கொண்டு கச்சணிந்த மென்மையான தனங்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்ட சிவபிரான் எழுந்தருளிய திருவாழ்வொளிபுத்தூர் சென்று, கார்காலத்தே மலரும் சிறந்த கொன்றை மலர்களைத் தூவிக் கறைமிடற்றானாகிய அப்பெருமான் திருவடிகளைக் காண்போம். |

| | |
|---|---|
| 430. கனமலர்க்கொன்றை யலங்க–லங்கக் காதிலொர் வெண்குழையோடு<br>புனமலர்மாலை புனைந்தூர் புகுதியென்றே பலகூறி<br>வனமுலைமாமலை மங்கையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்<br>இனமல ரேய்ந்தனதூவி யெம்பெருமானடி சேர்வோம். | கார்காலத்து மலராகிய கொன்றை மலர்மாலை தன் திருமேனியில் விளங்க, ஒரு காதில் வெண்குழையணிந்து, முல்லை நிலத்து மலர்களால் தொடுக்கப்பெற்ற மாலைகளைச் சூடிப் பல ஊர்களுக்கும் சென்று பற்பல கூறிப் ப–யேற்று அழகிய தனங்களையுடைய மலைமகளாகிய பார்வதியை ஒருபாகமாகக் கொண்ட எம்பிரான் எழுந்தருளிய திருவாழ்கொளிபுத்தூர் சென்று நமக்குக் கிட்டிய இனமான மலர்களைத் தூவி அவன் அடிகளைச் சேர்வோம். |
| 431. அளைவளர்நாக மசைத்தனலாடி யலர்மிசை யந்தணனுச்சிக்<br>களைதலை யிற்ப–கொள்ளுங் கருத்தனே கள்வனேயென்னா<br>வளையொ–முன்கை மடந்தையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்த்<br>தளையவிழ் மாமலர்தூவித் தலைவனதாளிணை சார்வோம். | புற்றின்கண் வாழும் பாம்பினை இடையில் கட்டி, சுடுகாட்டில் ஆடி, தாமரை மலர் மேல் உறையும் பிரமனின் உச்சித் தலையைக் கொய்து, அத்தலையோட்டில் ப–கொள்ளும் தலைவனே, நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கள்வனே என்று வளையல் ஒ–க்கும் மன் கையையுடைய பார்வதி தேவியை ஒருபாகமாகக் கொண்ட சிவபெருமான் உறையும் திருவாழ் கொளிபுத்தூர் சென்று, மொட்டவிழ்ந்த நறுமலர்களைத் தூவி அப்பெருமானின் தாளிணைகளைச் சார்வோம். |
| 432. அடர்செவிவேழத்தி னீருரிபோர்த்து வழிதலையங்கையி லேந்தி<br>உட–டுபிச்சையோ டைய முண்டியென்று பலகூறி<br>மடனெடுமாமலர்க் கண்ணியொர்பாக மாயவன்வாழ்வொளி புத்தூர்த்<br>தடமல ராயினதூவித் தலைவனதாணிழல் சார்வோம். | பரந்த காதுகளையுடைய யானையைக் கொன்று, அதன் உதிரப் பசுமை கெடாத தோலை உரித்துப் போர்த்து, கிள்ளிய பிரமன் தலையோட்டைக் கையில் ஏந்தி, தாருகாவன முனிவர் மகளிர் தம் கைகளால் இட்ட பிச்சையோடு ஐயம், உண்டி என்று பல கூறப் ப–யேற்ற மடப்பம் வாய்ந்த நீண்ட நீல மலர் போன்ற கண்களையுடைய உமையொரு பாகனாக உள்ள திருவாழ்கொளிபுத்தூர் இறைவனை விரிந்த மலர்கள் பலவற்றால் அருச்சித்து அப்பெருமான் தாள்நிழலைச் சார்வோம். |
| 433. உயர்வரையொல்க வெடுத்தவரக்க னொளிர்கடகக்கை யடர்த்து<br>அய–டுபிச்சையோ டைய மார்தலையென்றடி போற்றி<br>வயல்விரிநீல நெடுங்கணிபாக மாயவன்வாழ்வொளி புத்தூர்ச்<br>சயவிரி மாமலர்தூவித் தாழ்சடையானடி சார்வோம். | உயர்ந்த கயிலைமலையை அசையுமாறு பெயர்த்த இராவணனது ஒளி பொருந்திய கடகத்தோடு கூடிய தோள் வ–மையை அடர்த்தவனே என்றும், ஊர் மக்கள் இடும் பிச்சை, ஐயம் ஆகியவற்றை உண்ணும் தலைவனே என்றும், வய–ன்கண் தோன்றி மலர்ந்த நீலமலர் போன்ற நீண்ட கண்களையுடைய உமையம்மை பாகனே என்றும் திருவாழ்கொளிபுத்தூர் இறைவனே, என்றும் வெற்றியோடு மலர்ந்த சிறந்த மலர்களைத் தூவி அத்தாழ் சடையான் அடிகளைச் சார்வோம். |

| | |
|---|---|
| 434. கரியவனான்முகன் கைதொழுதேத்தக் காணலுஞ்சாரலு மாகா<br>எரியுருவாகியூ ரைய மிடுப–யுண்ணியென் றேத்தி<br>வரியரவல்குன் மடந்தையொர்பாக மாயவன்வாழ்வொளி புத்தூர்<br>விரிமல ராயினதூவி விகிர்தனசேவடி சேர்வோம். | திருமாலும் நான்முகனும் கைகளால் தொழுதேத்திக் காணவும் சாரவும் இயலாத எரி உரு ஆகியவனே என்றும், பல ஊர்களிலும் திரிந்து ஐயம், பிச்சை ஆகியவற்றை உண்பவனே என்றும் போற்றிப் பொறிகளோடு கூடிய பாம்பின் படம் போன்ற அல்குலை உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவனாகிய வாழ்கொளி புத்தூர் இறைவனை விரிந்த மலர்களைத் தூவி வழிபட்டு விகிர்தனாகிய அவன் சேவடிகளைச் சேர்வோம். |
| 435. குண்டமணர்துவர்க் கூறைகண்மெய்யிற் கொள்கையினார் புறங்கூற<br>வெண்டலையிற்ப– கொண்டல் விரும்பினையென்று விளம்பி<br>வண்டமர்பூங்குழன் மங்கையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்த்<br>தொண்டர்கண் மாமலர்தூவத் தோன்றிநின்றானடி சேர்வோம். | கொழுத்த அமணர்களும், துவராடைகள் போர்த்த புத்தர்களும், புறம் பேசுமாறு வெண்மையான தலையோட்டின்கண் ப–யேற்றலை விரும்பியவனே என்று புகழ்ந்து போற்றி, வண்டுகள் மொய்க்கும் அழகிய கூந்தலையுடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவன் எழுந்தருளிய வாழ்கொளிபுத்தூர் சென்று அடியவர்கள் சிறந்த மலர்களைத் தூவி வழிபட அவர்கட்குக் காட்சி அளிப்பவனாகிய சிவனடிகளைச் சேர்வோம். |
| 436. கல்லுயர்மாக்கட னின்றுமுழங்குங் கரைபொரு காழியமூதூர்<br>நல்லுயர் நான்மறை நாவின் நற்றமிழ் ஞானசம்பந்தன்<br>வல்லுயர்சூலமும் வெண்மழுவாளும் வல்லவன்வாழ்கொளி புத்தூர்ச்<br>சொல்–யபாடல்கள் வல்லார் துயர்கெடுதல்லெளி தாமே. | மலைபோல உயர்ந்து வரும் அலைகளை உடைய பெரியகடல், பெரிய கரையோடு மோதி முழங்கும் காழிப்பழம்பதியில் தோன்றிய, உயர்ந்த நான்மறைகள் ஓதும் நாவினை உடைய நற்றமிழ் ஞானசம்பந்தன், வ–தாக உயர்ந்த சூலம், வெண்மையான மழு, வாள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதில் வல்லவனாகிய சிவபிரான் விளங்கும் வாழ்கொளிபுத்தூரைப் போற்றிச் சொல்–ய பாடல்களை ஓத வல்லவர் துயர் கெடுதல் எளிதாம். |

## 41. திருப்பாம்புரம்

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 41**

| | |
|---|---|
| 437. சீரணிதிகழ்திரு மார்பிவெண்ணூலர் திரிபுரமெரிசெய்த செல்வர்<br>வாரணிவனமுலை மங்கையோர்பங்கர் மான்மறியேந்திய மைந்தர்<br>காரணிமணிதிகழ் மிடறுடையண்ணல் கண்ணுதல் விண்ணவரேத்தும்<br>பாரணிதிகழ்தரு நான்மறையாளர் பாம்புர நன்னகராரே. | விண்ணவர் போற்றும் திருப்பாம்புர நன்னகர் இறைவர் சிறந்த அணிகலன்கள் விளங்கும் அழகிய மார்பில் முப்புரி நூல் அணிந்தவர். திரிபுரங்களை எரித்த வீரச் செல்வர். கச்சணிந்த அழகிய தனங்களையுடைய உமையம்மையை ஒரு பாகமாகப் பொருந்திய நீலமணிபோலும் திகழ்கின்ற கண்டத்தையுடைய தலைவர். உலகில் அழகிய புகழோடு விளங்கும் மறைகளை அருளியவர். நெற்றிக்கண்ணர். |

| | |
|---|---|
| 438. கொக்கிறகோடு கூவிளமத்தங் கொன்றையொ டெருக்கணிசடையர்<br>அக்கினொடாமை பூண்டழகாக அனலதுவாடுமெம் மடிகள்<br>மிக்கநல்வேத வேள்வியுளெங்கும் விண்ணவர்விரைமலர் தூவப்<br>பக்கம்பல்பூதம் பாடிடவருவார் பாம்புர நன்னகராரே. | திருப்பாம்புர நன்னகர் இறைவர், கொக்கிறகு என்னும் மலர், வில்வம், ஊமத்தம்பூ, கொன்றைமலர், எருக்க மலர் ஆகியவற்றை அணிந்த சடைமுடியினர். சங்கு மணிகளோடு ஆமை ஒட்டைப் பூண்டு அழகாக அன–ன்கண் ஆடும் எம் தலைவர் மிக்க நல்ல வேதவேள்விகளில் விண்ணோர்கள் மணம் கமழும் மலர்கள் தூவிப் போற்ற அருகில் பூதங்கள் பல பாடவும் வருபவர். |
| 439. துன்ன–னாடை யுடுத்ததன்மேலோர் சூறைநல்லரவது சுற்றிப்<br>பின்னுவார்சடைகள் தாழவிட்டாடிப் பித்தராய்த்திரியுமெம் பெருமான்<br>மன்னுமாமலர்கள் தூவிடநாளும் மாமலையாட்டியுந் தாமும்<br>பன்னுநான்மறைகள் பாடிடவருவார் பாம்புர நன்னகராரே. | திருப்பாம்புர நன்னகர் இறைவர் தைத்த கோவண ஆடையை அணிந்து அதன் மேல் காற்றை உட்கொள்ளும் நல்ல பாம்பு ஒன்றைச் சுற்றிக் கொண்டு பின்னிய நீண்ட சடைகளைத் தாழ விட்டுக் கொண்டு, பித்தராய் ஆடித் திரியும் எமது பெருமான். அவர் மணம் நிறைந்த சிறந்த மலர்களைத் தூவி நாளும் நாம் வழிபட மலையரசன் மகளாகிய பார்வதியும், தாமுமாய்ப் புகழ்ந்து போற்றும் நான்மறைகளை அடியவர் பாடிக்கொண்டு வர, நம்முன் காட்சி தருபவர். |
| 440. துஞ்சுநாள்துறந்து தோற்றமுமில்லாச் சுடர்விடுசோதியெம் பெருமான்<br>நஞ்சுசேர்கண்ட முடையவென்னாதர் நள்ளிருள்நடஞ்செயுந் நம்பர்<br>மஞ்சுதோய்சோலை மாமயிலாட மாடமாளிகைதன்மே லேறிப்<br>பஞ்சுசேர் மெல்லடிப் பாவையர்பயிலும் பாம்புர நன்னகராரே. | மேகங்கள் தேயும் சோலைகளிற் சிறந்த மயில்கள் ஆடவும், மாடமாளிகைகளில் ஏறி, செம்பஞ்சு தோய்ந்த சிவந்த மெல்–ய அடிகளை உடைய பெண்கள் பாடவும், ஆகச் சிறந்து விளங்கும் திருப்பாம்புர நன்னகர் இறைவர், இறக்கும் நாள் இல்லாதவராய், தோற்றமும் இல்லாதவராய், ஒளி பெற்று விளங்கும் சோதிவடிவனிராய்த் திகழும் எம் பெருமான், விடம் பொருந்திய கண்டத்தை உடைய எம் தலைவர், நள்ளிருளில் நடனம் புரியும் கடவுளாவார். |
| 441. நதியதனயலே நகுதலைமாலை நாண்மதிசடைமிசை யணிந்து<br>கதியதுவாகக் காளிமுன்காணக் கானிடைநடஞ்செய்த கருத்தர்<br>விதியதுவழுவா வேதியர்வேள்வி செய்தவரோத்தொ– யோவாப்<br>பதியதுவாகப் பாவையுந்தாமும் பாம்புர நன்னகராரே. | விதிமுறை வழுவா வேதியர்கள், வேள்விகள் பல செய்தலால், எழும் வேத ஒ– நீங்காதபதிஅது என உமையம்மையும் தாமுமாய்த் திருப்பாம்புர நன்னகரில் விளங்கும் இறைவர், சடைமுடி மீது கங்கையின் அயலே சிரிக்கும் தலைமாலை, பிறை மதி ஆகியவற்றை அணிந்து நடனத்திற்குரிய சதி அதுவே என்னும்படி காளி முன்னே இருந்து காண இடுகாட்டுள் நடனம் செய்த தலைவர் ஆவார். |

| | |
|---|---|
| 442. ஓதிநன்குணர்வார்க் குணர்வுடையொருவ ரொளிதிகழுரு வஞ்சே ரொருவர்<br>மாதினையிடமா வைத்தவெம்வள்ளல் மான்மறியேந்திய மைந்தர்<br>ஆதிநீயருளென் றமரர்கள்பணிய அலைகடல்கடையவன் றெழுந்த<br>பாதிவெண்பிறைசடை வைத்தவெம்பரமர் பாம்புர நன்னகராரே. | திருப்பாம்புர நன்னகர் இறைவர், கல்வி கற்றுத் தெளிந்த அறிவுரையோரால் அறியப்படும் ஒருவராவார். ஒளியாக விளங்கும் சோதி உருவினராவார். உமையம்மையை இடப்பாகமாகக் கொண்ட எம் வள்ளலாவார். இளமான் மறியைக் கையில் ஏந்திய மைந்தராவார். திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது எழுந்த ஆலகால விடத்திற்கு அஞ்சிய தேவர்கள் ஆதியாக விளங்கும் தலைவனே. நீ எம்மைக் காத்தருள் என வேண்ட, நஞ்சினை உண்டும், கட–னின்றெழுந்த பிறைமதியைச் சடையிலே வைத்தும் அருள்புரிந்த எம் மேலான தலைவராவார். |
| 443. மா–னுக்கன்று சக்கரமீந்து மலரவற்கொருமுக மொழித்து<br>ஆ–ன்கீழறமோர் நால்வருக்கருளி யனலதுவாடுமெம் மடிகள்<br>காலனைக்காய்ந்து தங்கழலடியாற் காமனைப்பொடிபட நோக்கிப்<br>பாலனுக்கருள்கள் செய்தவெம்மடிகள் பாம்புர நன்னகராரே. | திருப்பாம்புர நன்னகர் இறைவர் முன்பு திருமாலுக்குச் சக்கராயுதம் அளித்தவர். தாமரை மலர் மேல் உறையும் பிரமனது ஐந்தலைகளில் ஒன்றைக் கொய்தவர். சனகாதி நால்வருக்குக் கல்லா–ன் கீழிருந்து அறம் அருளியவர். தீயில் நடனமாடுபவர். தமது கழலணிந்த திருவடியால் காலனைக் காய்ந்தவர். காமனைப் பொடிபட நோக்கியவர். உபமன்யு முனிவருக்குப் பாற்கடல் அளித்து அருள்கள் செய்த தலைவர் ஆவார். |
| 444. விடைத்தவல்லரக்கன் வெற்பினையெடுக்க மெல்–யதிருவிர லூன்றி<br>அடர்த்தவன்றனக்கன் றருள்செய்தவடிக ளனலதுவாடுமெம் மண்ணல்<br>மடக்கொடியவர்கள் வருபுனலாட வந்திழியரிசி–ன் கரைமேல்<br>படப்பையிற்கொணர்ந்து பருமணிசிதறும் பாம்புர நன்னகராரே. | இளங்கொடி போன்ற பெண்கள் நீராட வந்து இழியும் அரிசிலாறு தோட்டங்களில் சிதறிக் கிடக்கும் பெரிய மணிகளை அடித்து வந்து கரைமேல் சேர்க்கும் திருப்பாம்புர நன்னகர் இறைவர், செருக்குற்ற வ–ய இராவணன் கயிலை மலையைப் பெயர்த்து எடுத்த போது மெல்–ய திருவடி விரல் ஒன்றை ஊன்றி அவனை அடர்த்துப் பின் அவன் பிழையுணர்ந்து வருந்திப் போற்ற அருள் பல செய்த தலைவர் ஆவார். |
| 445. கடிபடுகமலத் தயனொடுமாலுங் காதலோடடிமுடி தேடச்<br>செடிபடுவினைக டீர்த்தருள்செய்யுந் தீவணரெம்முடைச் செல்வர்<br>முடியுடையமரர் முனிகணத்தவர்கள் முறைமுறையடிபணிந் தேத்தப்<br>படியதுவாகப் பாவையுந்தாமும் பாம்புர நன்னகராரே. | முடி சூடிய அமரர்களும் முனிகணத்தவர்களும் முறையாகத் தம் திருவடிகளைப் பணிந்து ஏத்துதற்கு உரிய தகுதி வாய்ந்த இடமாகக் கொண்டு உமையம்மையும் தாமுமாய்த் திருப்பாம்புர நன்னகரில் விளங்கும் இறைவர் மணம் பொருந்திய தாமரை மலர் மேல் விளங்கும் பிரமனும் திருமாலும் அன்போடு அடிமுடி தேடத் தீவண்ணராய்க் கிளைத்த வினைகள் பலவற்றையும் தீர்த்து அருள் செய்பவராய் விளங்கும் எம் செல்வர் ஆவார். |
| 446. குண்டர்சாக்கியருங் குணமிலாதாருங் குற்றுவிட்டுடுக்கையர் தாமுங்<br>கண்டவாறுரைத்துக் கானிமிர்த்துண்ணுங் கையர்தாமுள்ளவா றறியார்<br>வண்டுசேர்குழ– மலைமகணடுங்க வாரணமுரிசெய்து போர்த்தார்<br>பண்டுநாஞ்செய்த பாவங்கள்தீர்ப்பார் பாம்புர நன்னகராரே. | திருப்பாம்புர நன்னகர் இறைவர் குண்டர்களாகிய சமணர்களாலும் புத்தர்களாலும் மிகச் சிறிய ஆடையை அணிந்து, கண்டபடி பேசிக் கொண்டு நின்றுண்ணும் சமணத் துறவியராலும் உள்ளவாறு அறியப் பெறாதவர். வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடைய மலைமகளாகிய பார்வதி தேவி நடுங்க யானையை உரித்துப் போர்த்தவர். முற்பிறவிகளில் நாம் செய்த பாவங்களைத் தீர்ப்பவர். |

| | |
|---|---|
| 447. பார்ம–ந்தோங்கிப் பருமதில்சூழ்ந்த பாம்புரநன்னக ரானரைக்<br>கார்ம–ந்தழகார் கழனிசூழ்மாடக் கழுமலமுதுபதிக் கவுணி<br>நார்ம–ந்தோங்கு நான்மறைஞான சம்பந்தன்செந்தமிழ் வல்லார்<br>சீர்ம–ந்தழகார் செல்வமதோங்கிச் சிவனடி நண்ணுவர்தாமே. | உலகில் புகழ் நிறைந்து ஓங்கியதும் பெரிய மதில்களால் சூழப் பெற்றதுமான திருப்பாம்புர நன்னகர் இறைவனை, மழை வளத்தால் சிறந்து அழகியதாய் விளங்கும் வயல்கள் சூழப் பெற்றதும், மாட வீடுகளை உடையதுமான, கழுமலம் என்னும் பழம்பதியில் கவுணியர் கோத்திரத்தில், அன்பிற் சிறந்தவனாய்ப் புகழால் ஓங்கி விளங்கும் நான்மறைவல்ல ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய இச்செந்தமிழ்ப் பதிகத்தை ஓதவல்லவர். புகழும் அழகும் மிகுந்தவராய்ச் செல்வத்தால் சிறந்து வாழ்ந்து முடிவில் சிவனடியை அடைவர். |

## 42. திருப்பேணுபெருந்துறை

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 42**

| | |
|---|---|
| 448. பைம்மா நாகம் பன்மலர் கொன்றை பன்றிவெண் கொம்பொன்று பூண்டு<br>செம்மாந் தையம் பெய்கென்று சொல்–ச் செய்தொழில் பேணியோர் செல்வர்<br>அம்மா னோக்கிய வந்தளிர் மேனி யரிவை யோர் பாக மமர்ந்த<br>பெம்மா னல்கிய தொல்புக ழாளர் பேணுபெ ருந்துறை யாரே. | திருப்பேணு பெருந்துறை இறைவர், படம் பொருந்திய பெரிய நாகம், பல மலர்களோடு இணைந்த கொன்றை மலர், வெண்மையான பன்றிக் கொம்பு ஆகியவற்றை அணிந்து செம்மாப்பு உடையவராய்ப் பலர் இல்லங்களுக்கும் சென்று 'ஐயம் இடுக' என்று கேட்டு, ஐயம் இட்ட கடமையாளர்களுக்குச் செல்வமாய் இருப்பவர்; அழகிய மான்விழி போன்ற விழிகளையும், தளிர் போன்ற மேனியையும் உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்ட தலைவர்; நிலைத்த பழமையான புகழையுடையவர். |
| 449. மூவரு மாகி யிருவரு மாகி முதல்வனு மாய்நின்ற மூர்த்தி<br>பாவங்கள் தீர்தர நல்வினை நல்கிப் பல்கண நின்று பணியச்<br>சாவம தாகிய மால்வரை கொண்டு தண்மதிண் மூன்றுமெ ரித்த<br>தேவர்கள் தேவ ரெம்பெரு மானார் தீதில்பெ ருந்துறை யாரே. | குற்றமற்ற பேணு பெருந்துறையில் விளங்கும் எம் பெருமானார், அரி அயன் அரன் ஆகிய முத்தொழில் செய்யும் மூவருமாய், ஒடுங்கிய உலகை மீளத் தோற்றும் சிவன், சக்தி ஆகிய இருவருமாய், அனைவர்க்கும் தலைவருமாய் நின்ற மூர்த்தி ஆவார். நம் பாவங்கள் தீர நல்வினைகளை அளித்துப் பதினெண் கணங்களும் நின்று பணிய மேரு மலையை வில்லாகக் கொண்டு, மும்மதில்களையும் எரித்தழித்த தேவதேவராவார். |
| 450. செய்பூங் கொன்றை கூவிள மாலை சென்னியுட் சேர்புனல் சேர்த்திக்<br>கொய்பூங் கோதை மாதுமை பாகங் கூடியோர் பீடுடை வேடர்<br>கைபோ னான்ற கனிகுலை வாழை காய்குலை யிற்கமு கீனப்<br>பெய்பூம் பாளை பாய்ந்திழி தேறல் பில்குபெ ருந்துறை யாரே. | யானையின் கை போன்ற நீண்ட வாழைக் குலையில் பழுத்த பழங்களிலும், காய்த்த குலைகளிலும், கமுக மரங்களின் பூம்பாளைகளில் ஒழுகும் தேன் பாய்ந்து பெருகும் பெருந்துறை இறைவர், கொன்றைப் பூமாலை, கூவிளமாலை அணிந்த தலையில் கங்கையை ஏற்று, பூமாலை சூடிய உமையைத் தம் உட–ன் ஒரு பாகமாகக் கொண்டு அதனால் ஒப்பற்ற அம்மையப்பர் என்ற பெருமையுடைய உருவினராவார். |

| | |
|---|---|
| 451. நிலனொடு வானும் நீரொடு தீயும் வாயுவு மாகியோ ரைந்து<br>புலனொடு வென்று பொய்ம்மைகள் தீர்ந்த புண்ணியர் வெண்பொடிப் பூசி<br>நலனொடு தீங்குந் தானல தின்றி நன்கெழு சிந்தைய ராகி<br>மலனொடு மாசு மில்லவர் வாழும் மல்குபெ ருந்துறை யாரே. | நிலம், வானம், நீர், தீ, காற்று ஆகிய ஐம்பூதங்களின் வடிவாய், ஐந்து புலங்களை வென்றவராய், பொய்ம்மைகள் இல்லாத புண்ணியராய் வாழும் இறைவர், திருவெண்ணீறு அணிந்து நன்மையும் தின்மையும் சிவனாலன்றி வருவதில்லை என்ற நல்லுள்ளங் கொள்பவராய், மல மாசுக்கள் தீர்ந்தவராய் வாழும் அடியவர்கள் நிறைந்த பேணு பெருந்துறையார் ஆவர். |
| 452. பணிவா யுள்ள நன்கெழு நாவின் பத்தர்கள் பத்திமை செய்யத்<br>துணியார் தங்க ளுள்ளமி லாத சுமடர்கள் சோதிப் பரியார்<br>அணியார் நீல மாகிய கண்டர் அரிசிலு ரிஞ்சுக ரைமேல்<br>மணிவாய் நீலம் வாய்கமழ் தேறன் மல்குபெ ருந்துறை யாரே. | அரிசிலாற்றின் அலைகள் மோதும் கரையில் அமைந்ததும், நீல மணி போலும் நிறம் அமைந்த குவளை மலர்களின் வாயி–ருந்து வெளிப்படும் தேன் கமழ்ந்து நிறைவதுமாகிய பேணு பெருந்துறை இறைவர். பணிவுடைய துதிப்பாடல்கள் பாடும் நன்மை தழுவிய நாவினையுடைய பக்தர்கள் அன்போடு வழிபட எளியர். துணிவற்றவர்களாய்த் தங்கள் மனம் பொருந்தாத அறியாமை உடையவர்களாய் உள்ளவர்கள் பகுத்தறிவதற்கு அரியவர். அழகிய நீலநிறம் பொருந்திய கண்டத்தை உடையவர். |
| 453. எண்ணார் தங்கள் மும்மதில் வேவ ஏவலங் காட்டிய வெந்தை<br>விண்ணோர் சாரத் தன்னருள் செய்த வித்தகர் வேத முதல்வர்<br>பண்ணார் பாட லாட லறாத பசுபதி யீசனோர் பாகம்<br>பெண்ணா ணாய வார்சடை யண்ணல் பேணுபெ ருந்துறை யாரே. | திருப்பேணுபெருந்துறை இறைவர் தம்மை மதியாதவரான, அசுரர்களின் முப்புரங்கள் எரிந்தழியுமாறு வில்வன்மை காட்டிய எந்தையாராவர். தேவர்கள் வழிபட அவர்கட்கு தமது அருளை நல்கிய வித்தகராவர். வேதங்களின் தலைவராவர். இசை நலம் கெழுமிய பாடல்களோடு, ஆடி மகிழும் பசுபதியாய ஈசனும் ஆவர். ஒரு பாகம் பெண்ணுமாய், ஒரு பாகம் ஆணுமாய் விளங்கும் நீண்ட சடைமுடியுடைய தலைவராவர். |
| 454. விழையா ருள்ள நன்கெழு நாவில் வினை கெடவேதமா றங்கம்<br>பிழையா வண்ணம் பண்ணிய வாற்றாற் பெரியோ ரேத்தும் பெருமான்<br>தழையார் மாவின் றாழ்கனி யுந்தித் தண்ணரி சில்புடை சூழ்ந்து<br>குழையார் சோலை மென்னடை யன்னங் கூடுபெ ருந்துறையாரே. | தழைத்த மாமரத்தி–ருந்து உதிர்ந்த பழங்களை உருட்டிவரும் தண்ணிய அரிசிலாற்றின் கரையருகே சூழ்ந்து விளங்கும் தளிர்கள் நிறைந்த சோலைகளில் மெல்–ய நடையையுடைய அன்னங்கள் கூடி விளங்கும் திருப்பேணுபெருந்துறை இறைவர், விருப்பம் பொருந்திய உள்ளத்தோடு நன்மை அமைந்த நாவின்கண் தம் வினை கெட, நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் பிழையின்றி முன்னோர் ஓதிவரும் முறையில் பெரியோர் ஓதி ஏத்தும் பெருமானார் ஆவர். |

| | |
|---|---|
| 455. பொன்னங் கானல் வெண்டிரை சூழ்ந்த பொருகடல் வே–யிலங்கை<br>மன்ன னொல்க மால்வரை யூன்றி மாமுர ணாகமுந் தோளும்<br>முன்னவை வாட்டிப் பின்னருள் செய்த மூவிலை வேலுடை மூர்த்தி<br>அன்னங் கன்னிப் பேடை யொடாடி யணவுபெ ருந்துறை யாரே. | ஆண் அன்னம் கன்னிமையுடைய பெண் அன்னத்தோடு ஆடியும், கூடியும் மகிழும் பேணு பெருந்துறை இறைவர், அழகிய கடற்கரைச் சோலைகளும், வெண்மையான கடல் அலைகளும் சூழ்ந்துள்ளதும், நாற்புரங்களிலும் கடலையே வே–யாக உடையதுமான இலங்கை மாநகர் மன்னனாகிய இராவணன் தளர்ச்சி அடையுமாறு பெரிய கயிலை மலையைக் கால் விரலால் ஊன்றி, அவனுடைய சிறந்த வ–மையுடைய, மார்பும், தோள்களும் வ–மை குன்றுமாறு செய்து பின் அவனுக்கு அருள்கள் பல செய்த மூவிலை வேலையுடைய மூர்த்தியாவார். |
| 456. புள்வாய் போழ்ந்து மாநிலங் கீண்ட பொருகடல் வண்ணனும் பூவின்<br>உள்வா யல்– மேலுறை வானு முணர்வரி யானுமை கேள்வன்<br>முள்வாய் தாளின் தாமரை மொட்டின் முகமலரக் கயல் பாயக்<br>கள்வாய் நீலங் கண்மல ரேய்க்குங் காமர்பெ ருந்துறை யாரே. | முட்களையுடைய தண்டின்மேல் தாமரை மொட்டு இனிய முகம் போல் மலர, அதன்கண் கயல்மீன் பாயத் தேனையுடைய நீல மலர் கண்மலரை ஒத்துள்ளதால், இயற்கை, மாதர்களின் மலர்ந்த முகங்களைப் போலத் தோற்றந்தரும் பேணு பெருந்துறையில் உள்ள இறைவர், கொக்கு வடிவங் கொண்ட பகாசுரனின் வாயைப் பிளந்தும், நிலவுலகைத் தோண்டியும் விளங்கும் கடல் வண்ணனாகிய திருமாலும், தாமரை மலரின் அக இதழ்கள் மேல் உறையும் நான்முகனும் உணர்ந்து அறிதற்கரியவர்; உமையம்மையின் கணவர். |
| 457. குண்டுந் தேருங் கூறைக ளைந்துங் கூப்பிலர் செப்பில ராகி<br>மிண்டும் மிண்டர் மிண்டவை கண்டு மிண்டு செயாது விரும்பும்<br>தண்டும் பாம்பும் வெண்டலை சூலந் தாங்கிய தேவர் தலைவர்<br>வண்டுந் தேனும் வாழ்பொழிற் சோலை மல்குபெ ருந்துறை யாரே. | இறைவரைக் குண்டர்களாகிய சமணர்களும், தேரர்களாகிய புத்தர்களும் தம் ஆடைகளைக் களைந்தும் பல்வகை விரதங்களை மேற்கொண்டும் கைகூப்பி வணங்காதவர் களாய்த் திருப்பெயர்களைக் கூறாதவர்களாய், வம்பு செய்யும் இயல்பினராய் வீண் தவம் புரிகின்றனர். அவர்களின் மாறான செய்கைகளைக் கண்டு அவற்றை மேற்கொள்ளாது சிவநெறியை விரும்புமின், யோக தண்டம், பாம்பு, தலைமாலை, சூலம் ஆகியவற்றை ஏந்திய தேவர் தலைவராகிய நம் இறைவர், வண்டுகளும், தேனும் நிறைந்து வாழும் பொழில்களும், சோலைகளும் நிறைந்த பேணு பெருந்துறையில் உள்ளார். |
| 458. கடையார் மாட நன்கெழு வீதிக் கழுமல வூரன் கலந்து<br>நடையா ரின்சொல் ஞானசம் பந்தன் நல்லபெ ருந்துறை மேய<br>படையார் சூலம் வல்லவன் பாதம் பரவிய பத்திவை வல்லார்<br>உடைய ராகி உள்ளமு மொன்றி உலகினின் மன்னுவர் தாமே. | வாயில்களையுடைய மாட வீடுகள் நன்கமைந்த வீதிகளையுடைய கழுமலம் என்னும் ஊரில் தோன்றியவனும், அன்பொடு கலந்து இன்சொல் நடையோடு பாடுபவனுமாகிய ஞானசம்பந்தன் நல்ல பேணுபெருந்துறை மேவிய வ–ய சூலப்படையையுடைய இறைவன் திருவடிகளைப் பரவிப் போற்றிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதுபவர், எல்லா நன்மைகளும் உடையவராய் மனம் ஒன்றி உலகில் நிலையான வாழ்வினைப் பெறுவர். |

## 43. திருக்கற்குடி

பண் : தக்கராகம் | முதல் திருமுறை பதிக எண் : 43

| | |
|---|---|
| 459. வடந்திகழ் மென்முலை யாளைப் பாகம தாக மதித்துத்<br>தடந்திரை சேர்புனன் மாதைத் தாழ்சடை வைத்த சதுரர்<br>இடந்திகழ் முப்புரி நூலர் துன்பமொ டின்பம தெல்லாம்<br>கடந்தவர் காத–ல் வாழுங் கற்குடி மாமலை யாரே. | திருக்கற்குடி மாமலையை விரும்பி அதன்கண் வாழும் இறைவர், முத்துவடம் விளங்கும் மெல்–ய தனங்களை உடைய உமையம்மையை மதித்து இடப்பாகமாகக் கொண்டு பெரிய அலைகள் வீசும் கங்கை நங்கையைத் தாழ்கின்ற சடைமிசை வைத்துள்ள சதுரப்பாடுடையவர்: திருமேனியின் இடப்பாகத்தே விளங்கும் முப்புரிநூலை அணிந்தவர். இன்ப துன்பங்களைக் கடந்தவர். |
| 460. அங்கமொ ராறுடை வேள்வி யான வருமறை நான்கும்<br>பங்கமில் பாடலோ டாடல் பாணி பயின்ற படிறர்<br>சங்கம தார்குற மாதர் தங்கையின் மைந்தர்கள் தாவிக்<br>கங்கு–ன் மாமதி பற்றுங் கற்குடி மாமலை யாரே. | சங்கு வளையல்கள் அணிந்த குறப் பெண்களின் கைகளில் விளங்கும் பிள்ளைகள் இரவு நேரத்தில் தாவிப்பெரிய மதியைக் கைகளால் பற்றும் திருக்கற்குடி மாமலை இறைவர் வேள்விகட்குரிய விதிகளை விளக்கி ஆறு அங்கங்களுடன் கூடிய, அரிய வேதங்கள் நான்காகிய குற்றமற்ற பாடல், ஆடல், தாளச் சதிகள் ஆகியவற்றைப் பழகியவர். |
| 461. நீரக லந்தரு சென்னி நீடிய மத்தமும் வைத்துத்<br>தாரகை யின்னொளி சூழ்ந்த தண்மதி சூடிய சைவர்<br>போரக லந்தரு வேடர் புனத்திடை யிட்ட விறகில்<br>காரகி –ன்புகை விம்முங் கற்குடி மாமலை யாரே. | போர் செய்தற்கு ஏற்ற அகலமான மார்பினைக் கொண்டுள்ள வேடர்கள் காடுகளி–ருந்து வெட்டிக் கொணர்ந்து எரிக்கும் விறகுகளில் கரிய அகி–ன் புகை மணம் வீசும் திருக்கற்குடி மாமலை இறைவர் பரந்து விரிந்து வந்த கங்கை நீரை உடைய முடி மீது நீண்டு மலர்ந்த ஊமத்தை மலரை அணிந்து விண்மீன்களின் ஒளி சூழ்ந்து விளங்கும் குளிர்ந்த பிறைமதியைச் சூடிய சைவராவர். அம்மலையில் மரமானவை அகிலன்றிப் பிறிதில்லை என்பதாம். |
| 462. ஒருங்களி நீயிறை வாவென் றும்பர்க ளோல மிடக்கண்<br>டிருங்கள மார விடத்தை யின்னமு துண்ணிய ஈசர்<br>மருங்களி யார்பிடி வாயில் வாழ்வெதி ரின்முளை வாரிக்<br>கருங்களி யானை கொடுக்குங் கற்குடி மாமலை யாரே. | மதம் கொண்ட கரிய களிறு அருகில் அன்பு காட்டி வரும் பெண் யானையின் வாயில், பசுமையோடு முளைத்து வரும் மூங்கில் முளைகளை வாரிக் கொடுத்து ஊட்டும் திருக்கற்குடி மாமலை இறைவர், தேவர்கள் பெருமானே, அனைவரையும் ஒருங்கு காத்தளிப்பாயாக என ஓலமிடுவதைக் கேட்டுப் பாற்கட–டை எழுந்த நஞ்சைத் தமது மிடறு கருமைக்கு இடமாகுமாறு இனிய அமுதமாகக் கருதி உண்டு காத்த ஈசராவார். |
| 463. போர்ம– திண்சிலை கொண்டு பூதக ணம்புடை சூழப்<br>பார்ம– வேடுரு வாகிப் பண்டொரு வர்க்கருள் செய்தார்<br>ஏர்ம– கேழல் கிளைத்த வின்னொளி மாமணி எங்கும்<br>கார்ம– வேடர் குவிக்குங் கற்குடி மாமலை யாரே. | அழகிய பன்றிகள் நிலத்தைக் கிளைத்தலால் வெளிப்பட்ட இனிய ஒளியோடு கூடிய சிறந்த மணிகளைக் கரிய நிறமுடைய வேடர்கள் பல இடங்களிலும் குவித்துள்ள திருக்கற்குடி மாமலை இறைவர், போர் செய்யத்தக்க வ–ய வில்லைக் கையில் கொண்டு, பூத கணங்கள் புடை சூழ்ந்து வர மண்ணுலகில் தாமொரு வேடர் உருத் தாங்கி, முற்காலத்தில் அருச்சுனனுக்கு அருள் செய்தவராவார். |

| | |
|---|---|
| **464.** உலந்தவ ரென்ப தணிந்தே ஊரிடு பிச்சைய ராகி<br>விலங்கல்வில் வெங்கன லாலே மூவெயில் வேவ<br>முனிந்தார்<br>நலந்தரு சிந்தைய ராகி நாம– மாலையி னாலே<br>கலந்தவர் காத–ல் வாழுங் கற்குடி மாமலை யாரே. | நன்மை அமைந்த மனமுடையவராய் நாவினால் புகழும் சொல் மாலைகளாகிய தோத்திரங் களினாலே இறைவன் திருவருளில் கலந்த மெய்யடியார்கள் அன்போடு வாழும் திருக்கற்குடி மாமலை இறைவர். இறந்தவர்களின் எலும்பை அணிந்து, ஊர் மக்கள் இடும் பிச்சையை ஏற்கும் பிட்சாடனராய் மேருமலையாகிய வில்–டைத் தோன்றிய கொடிய கனலால் முப்புரங்களும் வெந்தழியுமாறு முனிந்தவர். |
| **465.** மானிட மார்தரு கையர் மாமழு வாரும் வலத்தர்<br>ஊனிடை யார்தலை யோட்டி லுண்கல னாக வுகந்தார்<br>தேனிடை யார்தரு சந்தின் திண்சிறை யாற்றினை வித்திக்<br>கானிடை வேடர் விளைக்குங் கற்குடி மாமலை யாரே. | தேனடைகள் பொருந்திய சந்தன மரங்களுக் கிடையே வ–ய கரைகளைக் கட்டி தினைகளை விதைத்துக் கானகத்தில் வேடர்கள் தினைப்பயிர் விளைக்கும் திருக்கற்குடி மாமலை இறைவர் மானை இடக் கையிலும், மழுவை வலக் கையிலும் தரித்தவர். ஊன்பொருந்திய தலையோட்டை உண்கலனாக உகந்தவர். |
| **466.** வாளமர் வீர நினைந்த விராவணன் மாமலை யின்கீழ்த்<br>தோளமர் வன்றலை குன்றத் தொல்விர லூன்று துணைவர்<br>தாளமர் வேய்தலை பற்றித் தாழ்கரி விட்ட விசைபோய்க்<br>காளம தார்முகில் கீறுங் கற்குடி மாமலை யாரே. | அடிமரத்தோடு கூடிய மூங்கி–னது தழையைப் பற்றி வளைத்து உண்ட களிறு, அதனை வேகமாக விடுதலால் அம்மூங்கில், விசையோடு சென்று, கரிய நிறம் பொருந்திய மேகங்களைக் கீறும், திருக்கற்குடி மாமலை இறைவர், வாட்போரில் வல்ல தனது பெருவீரத்தை நினைந்த இராவணனைப் பெருமை பொருந்திய கயிலை மலையின்கீழ் அவன் தோள்களும், வ–ய தலைகளும் நெரியுமாறு தமது பழம்புகழ் வாய்ந்த கால் விரலால் ஊன்றிய துணைவராவார். |
| **467.** தண்டமர் தாமரை யானுந் தாவியிம் மண்ணை யளந்து<br>கொண்டவ னும்மறி வொண்ணாக் கொள்கையர்<br>வெள்விடையூர்வர்<br>வண்டிசை யாயின பாட நீடிய வார்பொழில் நீழல்<br>கண்டமர் மாமயி லாடுங் கற்குடி மாமலை யாரே. | வண்டுகள் இசை பாட, நீண்ட பொழி–ன் நீழலைக் கண்டு மகிழும் சிறந்த மயில்கள் ஆடும் திருக்கற்குடி மாமலை இறைவர் குளிர்ந்த தாமரை மலர்மேல் உறையும் நான்முகனாலும் உயர்ந்த இவ்வுலகை அளந்த திருமாலாலும் அறிய ஒண்ணாத இயல்பினர். வெண்ணிறமான விடையை ஊர்ந்து வருபவர். |
| **468.** மூத்துவ ராடையி னாரும் மூசு கடுப்பொடி யாரும்<br>நாத்துவர் பொய்ம்மொழி யார்கள் நயமில ராமதி வைத்தார்<br>ஏத்துயர் பத்தர்கள் சித்தர் இறைஞ்ச வவரிட ரெல்லாம்<br>காத்தவர் காமரு சோலைக் கற்குடி மாமலை யாரே. | காவியாடையணிந்த புத்தர்களும், கடுக்காய்ப் பொடியை நிரம்ப உண்ணும் சமணர்களும், நாவிற்கு வெறுப்பை உண்டாக்கும் பொய்ம்மொழி பேசுபவராய் நேயமற்ற அறிவுடையவராய் இருப்போராவர். அவர்களை விடுத்துத் தம்மை ஏத்தி வாழ்த்தி உயரும் பக்தர்களும், சித்தர்களும் வணங்க அவர்கட்கு வரும் இடர்களை அகற்றிக் காத்தவர், அழகிய சோலைகள் சூழ்ந்த திருக்கற்குடி மாமலை இறைவர். |

| | |
|---|---|
| 469. காமரு வார்பொழில் சூழுங் கற்குடி மாமலை யாரை<br>நாமரு வண்புகழ்க் காழி நலந்திகழ் ஞானசம் பந்தன்<br>பாமரு செந்தமிழ் மாலை பத்திவை பாடவல் லார்கள்<br>பூம– வானவ ரோடும் பொன்னுல கிற்பொ– வாரே. | அழகிய நீண்ட பொழில்களால் சூழப்பட்ட திருக்கற்குடி மாமலை இறைவரை, நாவிற் பொருந்திய வண்புகழால் போற்றப்பெறும் சீகாழிப் பதியில் தோன்றிய நன்மையமைந்த ஞானசம்பந்தன் பாடிய செந்தமிழ் மாலையாகிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓத வல்லவர்கள் பொ–வுடன் கூடிய தேவர்களோடும் பொன்னுலகின்கண் பொ–வோராவர். |

## 44. திருப்பாச்சிலாச்சிராமம்

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 44**

| | |
|---|---|
| 470. துணிவளர்திங்கள் துளங்கிவிளங்கச் சுடர்ச்சடை<br>சுற்றிமுடித்துப்<br>பணிவளர்கொள்கையர் பாரிடஞ்சூழ வாரிடமும் ப–தேர்வர்<br>அணிவளர்கோல மெலாஞ்செய்துபாச்சி லாச்சிரா<br>மத்துறைகின்ற<br>மணிவளர்கண்டரோ மங்கையைவாட மயல்செய்வதோ<br>விவர்மாண்பே. | முழுமதியினது கீற்றாக விளங்கும் பிறைமதியை விளங்கித் திகழுமாறு அதனைத் தம் ஒளி பொருந்திய சடையினைச் சுற்றிக் கட்டி, பாம்புகளை அணிந்தவராய்ப் பூதங்கள் தம்மைச் சூழ எல்லோரிடமும் சென்று ப–யேற்பவராய், அழகிய தோற்றத்துடன் விளங்கும் திருப்பாச்சிலாச்சிராமத்தில் உறைகின்ற நீலமணி போலும் கண்டத்தவராகிய இறைவர், கொல்–மழவன் மகளாகிய இப்பெண்ணை மயல் செய்வது மாண்பாகுமோ ? |
| 471. கலைபுனைமானுரி தோலுடையாடை கனல்சுட<br>ரா–வர்கண்கள்<br>தலையணிசென்னியர் தாரணிமார்பர் தம்மடிகள் ளிவரென்ன<br>அலைபுனல்பூம்பொழில் சூழ்ந்தமர்பாச்சி லாச்சிரா<br>மத்துறைகின்ற<br>இலைபுனைவேலரோ வேழையைவாட விடர்செய்வதோ<br>விவரீடே. | மான்தோலை இடையில் ஆடையாகப் புனைந்து, கனல், ஞாயிறு, திங்கள் ஆகியன கண்களாக விளங்கத் தலையோடு அணிந்த முடியினராய், மாலை அணிந்த மார்பினராய், உயிர்கட்குத் தலைவரிவர் என்று சொல்லத் தக்கராய், நீர்வளம் நிரம்பிய பொழில்கள் சூழ்ந்த பாச்சிலாச்சிரமத்தில் உறைகின்ற இலை வடிவமான வேலை ஏந்திய இறைவர், இம்மழவன் மகளை வாடுமாறு இடர் செய்தல் இவர் பெருமைக்குப் பொருந்து வதாமோ ? |
| 472. வெஞ்சுடராடுவர் துஞ்சிருண்மாலை வேண்டுவர்பூண்பது<br>வெண்ணூல்<br>நஞ்சடைகண்டர் நெஞ்சிடமாக நண்ணுவர் நம்மைநயந்து<br>மஞ்சடைமாளிகை சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற<br>செஞ்சுடர்வண்ணரோ பைந்தொடிவாடச் சிதைசெய்வதோ<br>விவர்சீரே. | உலகமெல்லாம் அழிந்தொழியும் ஊழிக் காலத்து இருளில் கொடிய தீயில் நடனம் ஆடுபவரும், தலைமாலை முத–யவற்றை விரும்புபவரும், வெண்ணூல் பூண்பவரும், நஞ்சுடைய கண்டத்தவரும், அன்போடு தம்மை நினைத்த நம்மை விரும்பி நம் நெஞ்சை இடமாகக் கொண்டு எழுந்தருள்பவரும், மேகங்கள் தோயும் மாளிகைகள் சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்து எழுந்தருளிய செந்தீவண்ணரும் ஆகிய சிவபெருமான் பைந்தொடி அணிந்த மழவன் மகளாகிய இப்பெண்ணை வருத்துவது இவர் புகழுக்குப் பொருந்துவதோ ? |

| | |
|---|---|
| 473. கனமலர்க்கொன்றை யலங்க–லங்கக் கனறரு தூமதிக்கண்ணி<br>புனமலர்மாலை யணிந்தழகாய புனிதர்கொ லாமிவரென்ன<br>வனம–வண்பொழில் சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற<br>மனம–மைந்தரோ மங்கையைவாட மயல்செய்வதோ விவர்மாண்பே. | கார்காலத்தில் மலரும் கொன்றை மலரால் இயன்ற மாலை திருமேனியில் விளங்க, பிரிந்தவர்க்குக் கனலைத் தரும் தூய பிறைமதியைக் கண்ணியாகச் சூடி, வனங்களில் மலர்ந்த மலர்களால் ஆகிய மாலையைச் சூடி, அழகிய புனிதர் என்று சொல்லும்படி எழிலார்ந்த வண்பொழில்கள் சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிரமத்து அடியவருக்கு, மனநிறைவு தருபவராய் உறையும் சிவபெருமான், இம்மங்கையை வாடும்படி செய்து மயக்குறுத்துவது மாண்பாகுமோ? |
| 474. மாந்தர்தம்பானறு நெய்மகிழ்ந்தாடி வளர்சடை மேற்புனல்வைத்து<br>மோந்தைமுழாக்குழல் தாளமொர்வீணை முதிரவோர் வாய்மூரிபாடி<br>ஆந்தைவிழிச்சிறு பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற<br>சாந்தணிமார்பரோ தையலைவாடச் சதுர்செய்வதோ விவர்சார்வே. | மண்ணுலகில் அடியவர்கள் ஆட்டும் பால் நறுநெய் ஆகியவற்றை விரும்பியாடி, வளர்ந்த சடைமுடிமேல் கங்கையைச் சூடி, மொந்தை, முழா, குழல், தாளம், வீணை ஆகியன முழங்க வாய் மூரி பாடி ஆந்தை போன்ற விழிகளையுடைய சிறு பூதங்கள் சூழ்ந்தவராய்த் திருப்பாச்சிலாச் சிராமத்து உறைகின்ற சந்தனக் கலவையை அணிந்த மார்பினையுடைய சிவபிரான் இத்தையலை வாடும்படி செய்து இப்பெண்ணிடம் தம் சதுரப்பாட்டைக் காட்டல் ஏற்புடையதோ? |
| 475. நீறுமெய்பூசி நிறைசடைதாழ நெற்றிக்கண் ணாலுற்றுநோக்கி<br>ஆறதுசூடி யாடரவாட்டி யைவிரற் கோவணவாடை<br>பாறருமேனியர் பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற<br>ஏறதுவேறிய ரேழையைவாட விடர்செய்வதோ விவரீடே. | திருநீற்றை உடல் முழுதும் பூசியவராய், நிறைந்த சடைகள் தாழ்ந்து விளங்க, தமது நெற்றி விழியால் மறக்கருணை காட்டிப் பாவம் போக்கி, கங்கையைத் தலையில் அணிந்து, ஆடுகின்ற பாம்பைக் கையில் எடுத்து விளையாடிக் கொண்டு, ஐவிரல் அளவுள்ள கோவண ஆடை அணிந்து, பால் போன்ற வெள்ளிய மேனியராய், பூதகணங்கள் தம்மைச் சூழ்ந்தவராய்த் திருபாச்சிலாச்சிராமத்தில் உறைகின்ற விடை ஊர்தியராகிய சிவபிரான் இப்பெண்ணை வாடுமாறு செய்து இவளுக்கு இடர் செய்வது பெருமை தருவது ஒன்றா? |
| 476. பொங்கிளநாகமோ ரேகவடத்தோ டாமைவெண் ணூல்புனைகொன்றை<br>கொங்கிளமாலை புனைந்தழகாய குழகர்கொ லாமிவரென்ன<br>அங்கிளமங்கையோர் பங்கினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற<br>சங்கொளிவண்ணரோ தாழ்குழல்வாடச் சதிர்செய்வதோ விவர்சார்வே. | சினம் பொங்கும் இளநாகத்தைப் பூண்டு, ஒற்றையாடை அணிந்து ஆமை ஓட்டையும், வெண்மையான பூணூலையும் அணிந்து, தேன்நிறைந்த புதிய கொன்றை மலர்மாலை அணிந்த அழகிய இளைஞர் இவர் என்று சொல்லும்படி இளநங்கையான உமையம்மையை ஒருபாகமாக உடைய திருப்பாச்சிலாச்சிராமத்து உறையும் சங்கொளி போல நீறு அணிந்த திருமேனியை உடைய இறைவரோ இத்தாழ்குழலாள் வருந்தச் சாமர்த்தியமான செயல் செய்வது. இது இவர் பெருமைக்குப் பொருத்தப்படுவதோ? |

| | |
|---|---|
| 477. ஏவலத்தால்விச யற்கருள்செய்து இராவண னையீடழித்து<br>மூவரிலும்முத லாய்நடுவாய மூர்த்தியை யன்றிமொழியாள்<br>யாவர்களும்பர வும்மெழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற<br>தேவர்கள்தேவரோ சேயிழைவாடச் சிதைசெய்வதோ<br>விவர்சேர்வே. | அம்பின் வ–மையால் விசயனோடு போரிட்டு வென்று அவனுக்குப் பாசுபதாஸ்திரம் வழங்கி, அருள் செய்தவரும் இராவணன் பெருவீரன் என்ற புகழை அழித்தவரும், மும்மூர்த்திகளுக்கும் தலைவராய் அவர்கட்கு நடுவே நின்று படைத்தல், காத்தல், அழித்தல் தொழிலைப் புரிபவராய் எல்லோராலும் துதிக்கப் பெறும் திருப்பாச் சிலாச்சிராமத்தில் உறையும் மகாதேவராய சிவபிரான் திருப்பெயரையன்றி வேறு வார்த்தைகள் பேசுவதறியாத இப்பெண்ணை வாடச் சிதைவு செய்தல் இவருடைய தொடர்புக்கு அழகிய செயல் ஆகுமோ? |
| 478. மேலதுநான்முக னெய்தியதில்லை கீழது சேவடிதன்னை<br>நீலதுவண்ணனு மெய்தியதில்லை யெனவிவர்<br>நின்றதுமல்லால்<br>ஆலதுமாமதி தோய்பொழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற<br>பாலதுவண்ணரோ பைந்தொடிவாடப் பழிசெய்வதோ<br>விவர்பண்பே. | மேலே உள்ள திருமுடியை நான்முகன் தேடிக் கண்டான் இல்லை. கீழே உள்ள திருவடியை நீல நிறத்தை உடைய திருமால் தேடி அடைந்ததுமில்லை என்று உலகம் புகழுமாறு ஒங்கி அழலுருவாய் நின்றவரும், பெரிய முழுமதியை ஆலமரங்கள் சென்று தோயும் பொழில்கள் சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்து உறையும் பால்வண்ணருமாகிய சிவபிரான் இப்பைந்தொடியாள் வாடுமாறு வஞ்சித்தல் இவர் பண்புக்கு ஏற்ற செயல் ஆகுமோ? |
| 479. நாணொடுகூடிய சாயினரேனு நகுவ ரவரிருபோதும்<br>ஊணொடுகூடிய வுட்குநகையா லுரைக<br>ளவைகொளவேண்டா<br>ஆணொடுபெண்வடி வாயினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற<br>பூணெடுமார்பரோ பூங்கொடிவாடப் புனைசெய்வதோ<br>விவர்பொற்பே. | நாணத்தொடு கூடிய செயல்களை இழந்து ஆடையின்றித் திரிதலால் எல்லோராலும் பரிகசிக்கத் தக்கவராகிய சமணரும், இருபொழுதும் உண்டு அஞ்சத்தக்க நகையோடு திரியும் புத்தரும் ஆகிய புறச் சமயத்தவர் உரைகளை மெய்யெனக் கொள்ள வேண்டா. அன்பர்கள் வழிபடும் திருப்பாச்சிலாச்சிராமத்தில் மாதொருபாகராய் அணிகலன்கள் பூண்ட திருமார்பினராய் விளங்கும் இறைவர் இப்பூங்கொடியாளை வாடச் செய்து பழிப்புரை கொள்ளல் இவரது அழகுக்கு ஏற்ற செயலா? |
| 480. அகமம–யன்பொடு தொண்டர்வணங்க வாச்சிரா<br>மத்துறைகின்ற<br>புகைமம–மாலை புனைந்தழகாய புனிதர்கொ லாமிவரென்ன<br>நகைமம–தண்பொழில் சூழ்தருகாழி நற்றமிழ் ஞானசம்பந்தன்<br>தகைமம–தண்டமிழ் கொண்டிவையேத்தச் சாரகி<br>லாவினைதானே. | உள்ளம் நிறைந்த அன்போடு தொண்டர்கள் வழிபட ஆச்சிராமம் என்னும் ஊரில் உறைகின்றவரும், அன்பர் காட்டும் நறுமணப்புகை நிறைந்த மாலைகளைச் சூடியவரும், அழகும் தூய்மையும் உடையவருமான சிவபெருமானை, மலர்ந்த தண்பொழில்கள் சூழ்ந்த சீகாழிப் பதியில் தோன்றிய நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய, நோய்தீர்க்கும் மேன்மை மிக்கதும் உள்ளத்தைக் குளிர்விப்பதுமான இத்தமிழ் மாலையால், ஏத்திப் பரவி வழிபடுவோரை வினைகள் சாரா. |

## 45. திருவாலங்காடு

பண் : தக்கராகம் — முதல் திருமுறை பதிக எண் : 45

| | |
|---|---|
| 481. துஞ்சவருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்<br>நெஞ்சம்புகுந்தென்னை நினைவிப்பாரு முனைநட்பாய்<br>வஞ்சப்படுத்தொருத்தி வாணாள்கொள்ளும் வகைகேட்<br>டஞ்சும்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | உறங்கும்போது கனவிடை வருபவரும், தம்மைத் தொழுமாறு செய்பவரும், முனைப்புக் காலத்து மறைந்து, அன்பு செய்யும் காலத்து என் நெஞ்சம் புகுந்து நின்று, நினையுமாறு செய்பவரும் ஆகிய இறைவர், முற்பிறவியில் நட்பாய் இருப்பதுபோலக் காட்டித் தன்னை வஞ்சனை செய்து கொன்ற கணவனை மறுபிறப்பில் அடைந்து அவனது வாழ்நாளைக் கவர்ந்த பெண்ணின் செயலுக்குத் துணைபோன வேளாளர்கள் அஞ்சி உயிர்த்தியாகம் செய்த திருவாலங்காட்டில் உறையும் எம் அடிகளாவார். |
| 482. கேடும்பிறவியு மாக்கினாருங் கேடிலா<br>வீடுமாநெறி விளம்பினாரெம் விகிர்தனார்<br>காடுஞ்சுடலையுங் கைக்கொண்டெல்-க் கணப்பேயோ<br>டாடும்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | பிறப்பு இறப்புக்களை உயிர்கட்குத் தந்தருளிய வரும், அழிவற்ற வீட்டு நெறியை அடைதற்குரிய நெறிகளை உயிர்கட்கு விளம்பியவரும் ஆகிய நம்மின் வேறுபட்ட இயல்பினராகிய சிவபிரான், இடுகாடு சுடலை ஆகியவற்றை இடமாகக் கொண்டு இராப்போதில் பேய்க்கணங்களோடு நடனமாடும் பழையனூரைச் சேர்ந்த திருவாலங்காட்டு எம் அடிகள் ஆவார். |
| 483. கந்தங்கமழ்கொன்றைக் கண்ணிசூடிக் கனலாடி<br>வெந்தபொடிநீற்றை விளங்கப்பூசும் விகிர்தனார்<br>கொந்தண்பொழிற்சோலை யரவிற்றோன்றிக் கோடல்பூத்<br>தந்தண்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | மணம் கமழும் கொன்றை மலர் மாலை சூடிக் கன-டை நின்று ஆடி சுடுகாட்டில் 'வெந்த சாம்பலை' உடல் முழுதும் விளங்கப் பூசும் வேறுபட்ட இயல்பினராகிய சிவபிரான், கொத்துக்கள் நிறைந்த பொழில்களிலும் சோலைகளிலும் பாம்பின் படம் போலக் காந்தள் மலர் மலரும் அழகிய குளிர்ந்த பழையனூரைச் சேர்ந்த திருவாலங்காட்டு எம் அடிகள் ஆவார். |
| 484. பாலமதிசென்னி படரச்சூடி பழியோராக்<br>காலனுயிர்செற்ற காலனாய கருத்தனார்<br>கோலம்பொழிற்சோலைப் பெடையோடாடி மடமஞ்ஞை<br>ஆலும்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | இளம்பிறையை முடிமீது பொருந்தச் சூடி, தனக்கு வரும் பழியை நினையாத காலனது உயிரைச் செற்ற காலகாலராய இறைவர் அழகிய பொழில்களிலும் சோலைகளிலும் இள மயில்கள் பெண் மயில்களோடு கூடிக் களித்து ஆரவாரிக்கும் பழையனூரைச் சேர்ந்த திருவாலங்காட்டு எம் அடிகள் ஆவார். |
| 485. ஈர்க்கும்புனல்சூடி யிளவெண்திங்கள் முதிரவே<br>பார்க்குமரவம்பூண் டாடிவேடம் பயின்றாரும்<br>கார்க்கொள்கொடிமுல்லை குருந்தமேறிக் கருந்தேன்மொய்த்<br>தார்க்கும்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | ஈர்த்துச் செல்லுத-ல் வ-ய கங்கை நீரை முடிமிசைத் தாங்கி, இளம்பிறையை விழுங்க அதனது வளர்ச்சி பார்த்திருக்கும் பாம்பை அணிகலனாகப் பூண்டு, நடனம் ஆடிப் பல்வேறு வேடங்களில் தோன்றி அருள்புரிபவர், கார்காலத்தே மலரும் முல்லைக்கொடிகள் குருந்த மரங்களில் ஏறிப் படர அம்மலர்களில் உள்ள தேனை உண்ணவரும் கரிய வண்டுகள் மலரை மொய்த்து ஆரவாரிக்கும் பழையனூரைச் சேர்ந்த திருவலங்காட்டு எம் அடிகள் ஆவார். |

| | |
|---|---|
| 486. பறையுஞ்சிறுகுழலும் யாழும்பூதம் பயிற்றவே<br>மறையும்பலபாடி மயானத்துறையும் மைந்தனார்<br>பிறையும்பெரும்புனல்சேர் சடையினாரும் பேடைவண்<br>டறையும்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | பறை, சிறுகுழல், யாழ் முத–ய கருவிகளைப் பூதங்கள் ஒ–க்க வேதங்களைப் பாடிக் கொண்டு மயானத்தில் உறையும் மைந்தராய், பிறை, பெருகி வரும் கங்கை ஆகியவற்றை அணிந்த சடைமுடியினர் ஆகிய சிவபெருமான் பெடைகளோடு கூடிய ஆண் வண்டுகள் ஒ–க்கும் சோலைகள் சூழ்ந்த பழையனூரைச் சேர்ந்த திருவாலங்காட்டு எம் அடிகள் ஆவார். |
| 487. நுணங்குமறைபாடி யாடிவேடம் பயின்றாரும்<br>இணங்குமலைமகளோ டிருகூறொன்றா யிசைந்தாரும்<br>வணங்குஞ்சிறுத்தொண்டர் வைகலேத்தும் வாழ்த்துங்கேட்<br>டணங்கும்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | நுட்பமான ஒ–க் கூறுகளை உடைய வேதங்களைப் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் பல்வேறு திருவுருவங்களைக் கொள்பவரும், தம்மோடு இணைந்த பார்வதி தேவியுடன் இருவேறு உருவுடைய ஒருருவாக இசைந்தவரும் ஆகிய பெருமானார் தம்மை வணங்கும் அடக்கமுடைய தொண்டர்கள் நாள்தோறும் பாடும் வாழ்த்துக்களைக் கேட்டு தெய்வத் தன்மை மிகுந்து தோன்றும் பழையனூரைச் சேர்ந்த திருவாலங்காட்டு எம் அடிகள் ஆவார். |
| 488. கணையும்வரிசிலையு மெரியுங்கூடிக் கவர்ந்துண்ண<br>இணையிலெயின்மூன்று மெரித்திட்டாரெம் மிறைவனார்<br>பிணையுஞ்சிறுமறியுங் கலையுமெல்லாங் கங்குல்சேர்ந்<br>தணையும்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | அம்பு வில் நெருப்பு ஆகியன கூடிக் கவர்ந்து உண்ணுமாறு ஒப்பற்ற முப்புரங்களை எரித்தவராகிய எம் இறைவர், பெண் மான் ஆண்மான் அவற்றின் குட்டிகள் ஆகியன இரவிடைச் சென்றணையும் பழையனூரைச் சேர்ந்த ஆலங்காட்டு எம் அடிகள் ஆவார். |
| 489. கவிழமலைதரளக் கடகக்கையா லெடுத்தான்தோள்<br>பவழநுனைவிரலாற் பையவூன்றிப் பரிந்தாரும்<br>தவழுங்கொடிமுல்லை புறவஞ்சேர நறவம்பூத்<br>தவிழும்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | கயிலை மலை நிலை குலையுமாறு முத்துக்கள் பதித்த வீரக் கடகம் அணிந்த தன் கைகளால் எடுத்த இராவணனின் தோள் வ–யைத் தம் பவழம் போன்ற கால்விரல் நுனியால் மெல்ல ஊன்றி அடர்த்துப் பின் அவனுக்கு இரங்கி அருள்புரிந்த சிவபிரானார் முல்லைக்கொடிகள் முல்லை நிலத்தின்கண் தவழ்ந்து படர நறவக் கொடிகள் மலர்களைப் பூத்து விரிந்து நிற்கும் பழையனூரைச் சேர்ந்த ஆலங்காட்டு எம் அடிகள் ஆவார். |
| 490. பகலுமிரவுஞ்சேர் பண்பினாரும் நண்போரா<br>திகலுமிருவர்க்கு மெரியாய்த்தோன்றி நிமிர்ந்தாரும்<br>புகலும்வழிபாடு வல்லார்க்கென்றுந் தீயபோய்<br>அகலும்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | பகல் இரவு போன்ற வெண்மை கருமை நிறங்களைக் கொண்ட நான்முகனும் திருமாலும் தங்களிடையே உள்ள உறவு முறையையும் கருதாது யார் தலைவர் என்பதில் மாறுபட்டு நிற்க அவ்விருவர்க்கும் இடையே எரியுருவாய்த் தோன்றி ஓங்கி நின்றவரும் ஆகம நூல்கள் புகலும் வழிபாடுகளில் தலைநிற்கும் அடியவர்க்குத் தீயன போக்கி அருள்புரிபவரும் ஆகிய பெருமான் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகள் ஆவார். |

| | |
|---|---|
| 491. போழம்பலபேசிப் போதுசாற்றித் திரிவாரும்<br>வேழம்வருமளவும் வெயிலேதுற்றித் திரிவாரும்<br>கேழல்வினைபோகக் கேட்பிப்பாருங் கேடிலா<br>ஆழ்வர்பழையனூ ராலங்காட்டெம் அடிகளே. | மாறுபட்ட சொற்களைப் பேசியும், காலத்துக்கு ஏற்றவாறு உண்மையல்லாதவைகளைச் சொல்–யும் திரியும் புறச்சமயத்தவரும், நன்மையல்லாதவற்றை உபதேசங்களாகக் கூறுபவரும், யானைத் தீ வரும் அளவும் வெயி–டை உண்டு திரியும் மதவாதிகளுமாகிய புறச்சமயிகளைச் சாராது தம்மைச் சார்ந்த அடியவர்களைப் பற்றிய வினைகள் அகலுமாறு அவர்கட்கு உபதேசங்களைப் புரியச் செய்பவராகிய அழிவற்ற ஆளுமையுடையவர் ஆலங்காட்டு எம்அடிகள் ஆவார். |
| 492. சாந்தங்கமழ்மறுகிற் சண்பைஞான சம்பந்தன்<br>ஆந்தண்பழையனூ ராலங்காட்டெம் மடிகளை<br>வேந்தனருளாலே விரித்தபாட –வைவல்லார்<br>சேர்ந்தவிடமெல்லாந் தீர்த்தமாகச் சேர்வாரே. | சந்தனம் கமழும் திருவீதிகளை உடைய சண்பைப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் அழகிய தண்ணிய ஆலங்காட்டு வேந்தனாக விளங்கு அவ்விறைவன் திருவருளாலே போற்றி விரித்தோதிய இத்திருப்பதிகப் பாடல்களை வல்லவர்கள் சேர்ந்த இடங்களெல்லாம் புனிதமானவைகளாகப் பொருந்தப் பெறுவர். |

## 46. திருவதிகைவீரட்டானம்

**பண் : தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 46**

| | |
|---|---|
| 493. குண்டைக் குறட்பூதங் குழும வனலேந்திக்<br>கெண்டைப் பிறழ்தெண்ணீர்க் கெடில வடபக்கம்<br>வண்டு மருள்பாட வளர்பொன் விரிகொன்றை<br>விண்ட தொடையலா னாடும்வீரட் டானத்தே. | பருத்த குள்ளமான பூத கணங்கள் தன்னைச் சூழ்ந்து நிற்கக் கையில் அனலை ஏந்தியவனாய், வண்டுகள் மருளிந்தளப் பண்பாட, பொன் போன்று விரிந்து மலர்ந்த கொன்றை மலர் மாலை அணிந்தவனாய்ச் சிவபிரான் கெண்டை மீன்கள் பிறழ்ந்து விளையாடும் தெளிந்த நீரை உடைய கெடில நதியின் வடகரையில் உள்ள திருவதிகை வீரட்டானத்து ஆடுவான். |
| 494. அரும்புங் குரும்பையு மலைத்த மென்கொங்கைக்<br>கரும்பின் மொழியாளோ டுடன்கை யனல்வீசிச்<br>சுரும்புண் விரிகொன்றைச் சுடர்பொற் சடைதாழ<br>விரும்பு மதிகையு ளாடும்வீரட் டானத்தே. | சிவபிரான் தாமரை அரும்பு, குரும்பை ஆகியவற்றை அழகால் வென்ற மென்மையான தனங்களையும், கரும்பு போன்ற இனிய மொழிகளையும் உடைய உமையம்மையோடு கூடிக் கையில் அனல் ஏந்தி வீசிக்கொண்டு, வண்டுகள் தேனுண்ணும் இதழ் விரிந்த கொன்றை மாலை அணிந்த ஒளிமயமான பொன் போன்ற சடைகள் தாழத் தன்னால் பெரிதும் விரும்பப்படும் அதிகை வீரட்டானத்து ஆடுவான். |
| 495. ஆடலழனாக மரைக்கிட் டசைத்தாடப்<br>பாடன் மறைவல்லான் படுதம் ப–பெயர்வான்<br>மாட முகட்டின்மேன் மதிதோ யதிகையுள்<br>வேடம் பலவல்லா னாடும்வீரட் டானத்தே. | வென்றியையும் அழல் போலும் கொடிய தன்மையையும் கொண்ட நாகத்தை இடையில் பொருந்தக் கட்டி ஆடுமாறு செய்து, பாடப்படும் வேதங்களில் வல்லவனாய், 'படுதம்' என்னும் கூத்தினை ஆடிக்கொண்டு, ப– தேடித் திரிபவனாய சிவபிரான் மதிதோய்ந்து செல்லுமாறு உயர்ந்த மாடவீடுகளை உடைய திருவதிகை யிலுள்ள வீரட்டானத்தில் பல்வேறு கோலங்களைக் கொள்ளுத–ல் வல்லவனாய் ஆடுவான். |

| | |
|---|---|
| 496. எண்ணா ரெயிலெய்தா னிறைவ னனலேந்தி<br>மண்ணார் முழவதிர முதிரா மதிசூடிப்<br>பண்ணார் மறைபாடப் பரம னதிகையுள்<br>விண்ணோர் பரவநின் றாடும்வீரட் டானத்தே. | பகைவரது திரிபுரங்களை எய்து அழித்த இறைவன் அனலைக் கையில் ஏந்தி மார்ச்சனை இடப்பட்ட முழவு முழங்க இளம்பிறையை முடியில் சூடிப் பண்ணமைப்புடைய வேதங்களை அந்தணர் ஓதத் திருவதிகை வீரட்டானத்தே தேவர்கள் போற்ற நின்று ஆடுவான். |
| 497. கரிபுன் புறமாய கழிந்தா ரிடுகாட்டில்<br>திருநின் றொருகையாற் றிருவா மதிகையுள்<br>எரியேந் தியபெருமா னெரிபுன் சடைதாழ<br>விரியும் புனல்சூடி யாடும்வீரட் டானத்தே. | கரிந்த புல்–ய ஊர்ப்புறமாய இறந்தவர்களை எரிக்கும் சுடுகாட்டில், ஒரு திருக்கரத்தில் எரி ஏந்தி ஆடும் பெருமான் திருமகள் நிலைபெற்ற திருவதிகையில் உள்ள வீரட்டானத்தில் எரி போன்று சிவந்த தன் சடைகள் தாழ்ந்து விரிய தலையில் கங்கை சூடி ஆடுவான். |
| 498. துளங்குகுஞ் சுடரங்கைத் துதைய விளையாடி<br>இளங்கொம் பனசாய லுமையோ டிசைபாடி<br>வளங்கொள் புனல்சூழ்ந்த வயலா ரதிகையுள்<br>விளங்கும் பிறைசூடி யாடும்வீரட் டானத்தே. | அசைந்து எரியும் அனலை அழகிய கையில் பொருந்த ஏந்தி விளையாடி, இளங்கொம்பு போன்ற உமையம்மையோடு இசை பாடி, வளமை உள்ள புனல் சூழ்ந்த வயல்களை உடைய திருவதிகையில் வீரட்டானத்தே முடிமிசை விளங்கும் பிறைசூடி ஆடுவான். |
| 499. பாதம் பலரேத்தப் பரமன் பரமேட்டி<br>பூதம் புடைசூழப் பு–த்தோ லுடையாகக்<br>கீத முமைபாடக் கெடில வடபக்கம்<br>வேத முதல்வன்நின் றாடும்வீரட் டானத்தே. | பரம்பொருளாகிய பரமன் தன் திருவடிகளைப் பலரும் பரவி ஏத்தி வணங்கவும், பூத கணங்கள் புடை சூழவும், பு–த்தோலை உடுத்து, உமையம்மை கீதம் பாடக் கெடில நதியின் வடகரையில் வேதமுதல்வனாய் வீரட்டானத்தே ஆடுவான். |
| 500. கல்லார் வரையரக்கன் றடந்தோள் கவின்வாட<br>ஒல்லை யடர்த்தவனுக் கருள்செய் ததிகையுள்<br>பல்லார் பகுவாய நகுவெண் டலைசூடி<br>வில்லா லெயிலெய்தா னாடும்வீரட் டானத்தே. | கற்கள் பொருந்திய கயிலை மலையை எடுத்த இராவணனின் பெரிய தோள்களின் அழகு வாடுமாறு அடர்த்துப் பின் அவனுக்கு அருள் பல செய்தும், முப்புரங்களை வில்லால் எய்து அழித்தவனும், தனது பெருவீரத்தைப் புலப்படுத்திய இறைவன் பற்கள் பொருந்திய பிளந்தவாயை உடைய வெள்ளிய தலைமாலையைச் சூடித்திருவதிகை வீரட்டானத்தே ஆடுவான். |
| 501. நெடியா னான்முகனு நிமிர்ந்தானைக் காண்கிலார்<br>பொடியாடு மார்பானைப் புரிநூ லுடையானைக்<br>கடியார் கழுநீலம் மலரும் மதிகையுள்<br>வெடியார் தலையேந்தி யாடும்வீரட் டானத்தே. | பேருருக்கொண்ட திருமாலும், நான்முகனும், அழலுருவாய் ஓங்கி நிமிர்ந்தவனை, திருநீறணிந்த மார்பினனை, முப்புரி நூல் அணிந்தவனைக் காண்கிலார்: அப்பெருமான் மணம் கமழும் நீலப்பூக்கள் மலரும் திருவதிகையிலுள்ள வீரட்டானத்தே முடைநாற்றமுடைய தலை ஓட்டைக் கையில் ஏந்தி ஆடுகின்றான். |
| 502. அரையோ டலர்பிண்டி மருவிக் குண்டிகை<br>சுரையோ டுடனேந்தி யுடைவிட் டுழல்வார்கள்<br>உரையோ டுரையொவ்வாதுமையோடுடனாகி<br>விரைதோ யலர்தாரா னாடும்வீரட் டானத்தே. | அரச மரத்தையும் தழைத்த அசோக மரத்தையும் புனித மரங்களாகக் கொண்டு குண்டிகையாகச் சுரைக்குடுக்கையை ஏந்தித் திரியும் புத்தர்கள், ஆடையற்றுத் திரியும் சமணர்கள் ஆகியவர்களின் பொருந்தாத வார்த்தைகளைக் கேளாதீர். மணம் கமழும் மாலை அணிந்த சிவபிரான் உமையம்மையோடு உடனாய் அதிகை வீரட்டானத்தே ஆடுவான். அவனை வணங்குங்கள். |
| 503. ஞாழல் கமழ்காழி யுண்ஞான சம்பந்தன்<br>வேழம் பொருதெண்ணீ ரதிகைவீரட் டானத்துச்<br>சூழுங் கழலானைச் சொன்ன தமிழ்மாலை<br>வாழுந் துணையாக நினைவார் வினையிலரே. | ஞாழற் செடிகளின் மலர்கள் மணம் கமழும் சீகாழியுள் தோன்றிய ஞானசம்பந்தன், நாணல்களால் கரைகள் அரிக்கப்படாமல் காக்கப்படும் தெளிந்த நீர்வளம் உடைய திருவதிகை வீரட்டானத்தில், ஆடும் கழல் அணிந்த அடிகளை உடைய சிவபிரானைப் போற்றிப் பாடிய இத்தமிழ் மாலையை, வாழ்வுத் துணையாக நினைபவர் வினையிலராவர். |

## பழந்தக்கராகம்

இது குறிஞ்சிப் பெரும்பண்ணின் ஐந்தாவது திறமான மருளின் புறநிலைப்பண் 54 என்ற எண்ணுக்குரியது. இதன் பழைய உருவம் இன்னதென்று திட்டமாய்த் தெரியவில்லை. ஆயினும் இதற்கு நேரான இராகம் சுத்தசாவேரி என்பது மரபு. இதைச் சிலர் ஆரபியிலும் சிலர் தேவகாந்தாரியிலும் பாடுவதும் உண்டு. இதன் சுவை அவலமும் மருட்கையும். இது இராப்பண்களில் ஒன்று. இப்பண்ணில் சம்பந்தரும் அப்பருமே பாடியுள்ளனர். சம்பந்தர் முதல் திருமுறை 47–62, 16 பதிகங்கள், அப்பர் 4,12–13 ஆகிய இரு பதிகங்கள். போகமார்த்த பூண்முலையாள் என்று சம்பந்தர் மதுரையில் ஓலையை நெருப்பிலிட்ட பதிகமும், மறையுடையாய் தோலுடையாய் என்ற பதிகமும், வண்டரங்கப் புனற்கமலம் என்ற அகத்துறைப் பதிகமும், நாளாய போகாமே என்ற திருக்கோளிலிப் பதிகமும் இப்பண்ணில் அமைந்தவையே. சம்பந்தர். அப்பர் சுவாமிகளுடைய அரிய அகத்துறைப் பதிகம் சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் என்பதும் இப்பண்ணுக்குரியது.

## 47. திருச்சிரபுரம்

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 47**

504. பல்லடைந்த வெண்டலையிற் ப–கொள்வ தன்றியும்போய்
வில்லடைந்த புருவநல்லாண் மேனியில் வைத்தலென்னே
சொல்லடைந்த தொன்மறையோ டங்கங் கலைகளெல்லாஞ்
செல்லடைந்த செல்வர்வாழுஞ் சிரபுர மேயவனே.

பொருள் பொதிந்த சொற்கள் நிரம்பிய பழமையான வேதங்களையும், அவற்றின் அங்கங்களையும், பிற கலைகளையும் கற்றுணர்ந்த செல்வந்தர்கள் வாழும் சிரபுரம் என்னும் சீகாழிப் பதியுள் எழுந்தருளிய இறைவனே! பற்கள் பொருந்திய வெண்மையான தலையில் பல இடங்களுக்கும் போய்ப் ப–யேற்பதோடு வில் போன்ற புருவத்தை உடைய உமையம்மையை உன் திருமேனியில் கொண்டுள்ள காரணம் யாதோ?

505. கொல்லைமுல்லை நகையினாளோர் கூறதுவன் றியும்போய்
அல்லல்வாழ்க்கைப் ப–கொண்டுண்ணு மாதரவென்னைகொலாஞ்
சொல்லநீண்ட பெருமையாளர் தொல்கலை கற்றுவல்லார்
செல்லநீண்ட செல்வமல்கு சிரபுர மேயவனே.

சொல்லச்சொல்ல நீண்டு செல்லும் பெருமையாளரும், பழமையான கலைகளைக் கற்று வல்லவர்களுமாகிய அறிஞர்கள் வாழ்வதும், வழங்கத் தொலையாத செல்வ வளத்தை உடையதுமான சிரபுரம் மேவிய இறைவனே! முல்லை நிலத்தே தோன்றிய முல்லையரும்பு போன்ற பற்களை உடைய உமையம்மை ஓர் கூற்றில் விளங்கவும் சென்று அல்லற்படுவோர் ஏற்கும் ப– உணவை ஏற்று உண்ணுத–ல் விருப்பம் கொள்வது ஏனோ?

| | |
|---|---|
| 506. நீரடைந்த சடையின்மேலோர் நிகழ்மதி யன்றியும்போய்<br>ஊரடைந்த வேறதேறி யுண்ப– கொள்வதென்னே<br>காரடைந்த சோலைசூழ்ந்து காமரம் வண்டிசைப்பச்<br>சீரடைந்த செல்வமோங்கு சிரபுர மேயவனே. | வண்டுகள் சீகாமரம் என்னும் பண்ணைப் பாடி மகிழ்ந்துறைவதும், மேகங்கள் தவழும் சோலைகளால் சூழப்பெற்றதும், அறநெறியில் விளைந்த செல்வம் பெருகி விளங்குவதுமாகிய சிரபுரம் மேவிய இறைவனே! கங்கையை அணிந்த சடைமுடியின் மேல் விளங்கும் பிறைமதி ஒன்றை அணிந்து, பல ஊர்களையும் அடைதற்கு ஏதுவாய ஆனேற்றில் ஏறிச் சென்று, பலரிடமும் ப– கொள்வது ஏனோ? |
| 507. கையடைந்த மானினோடு காரர வன்றியும்போய்<br>மெய்யடைந்த வேட்கையோடு மெல்–யல் வைத்தலென்னே<br>கையடைந்த களைகளாகச் செங்கழு நீர்மலர்கள்<br>செய்யடைந்த வயல்கள்சூழ்ந்த சிரபுர மேயவனே. | களையெடுப்போர் கைகளில், மிக அதிகமான களைகளாகச் செங்கழுநீர் மலர்கள் வந்தடையும் அழகிய வயல்களால் சூழப்பட்ட சிரபுரம் மேவிய இறைவனே! கைகளில் மான், கரிய பாம்பு ஆகியவற்றைக்கொண்டு உனது திருமேனியில் பெரு விருப்போடு உமையம்மையை இடப்பாகமாகக் கொண்டுள்ளது ஏனோ? |
| 508. புரமெரித்த பெற்றியோடும் போர்மத யானைதன்னை<br>கரமெடுத்துத் தோலுரித்த காரண மாவதென்னே<br>மரமுரித்த தோலுடுத்த மாதவர் தேவரோடுஞ்<br>சிரமெடுத்த கைகள் கூப்புஞ் சிரபுர மேயவனே. | மரத்தை உரித்ததால் ஆன மரவுரி என்னும் ஆடையை அணிந்த முனிவர்களும் தேவர்களும் கைகளைத் தலைமிசை கூப்பி வணங்கும் சிரபுரம் மேவிய இறைவனே! திரிபுரங்களை எரித்தழித்த பெரு வீரத்தோடு போர் செய்ய வந்த மத யானையைக் கையால் தூக்கி அதன் தோலை உரித்துப் போர்த்த, காரணம் யாதோ? |
| 509. கண்ணுமூன்று முடையதன்றிக் கையினில் வெண்மழுவும்<br>பண்ணுமூன்று வீணையோடு பாம்புடன் வைத்தலென்னே<br>எண்ணுமூன்று கனலுமோம்பி யெழுமையும் விழுமியராய்த்<br>திண்ணமூன்று வேள்வியாளர் சிரபுர மேயவனே. | ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்று எண்ணப்படும் முத்தீயையும் வேட்பதுடன் எழு பிறப்பிலும் தூயவராய் உறுதிப்பாட்டுடன் தேவ யாகம், பிதிர் யாகம், இருடி யாகம் ஆகிய மூன்று வேள்விகளையும் புரியும் அந்தணாளர் வாழும் சிரபுரம் மேவிய இறைவனே; முக்கண்களை உடையவனாய்க் கைகளில் வெண்மழு, பண் மூன்றுடைய வீணை, பாம்பு ஆகியன கொண்டுள்ள காரணம் யாதோ? |

| | |
|---|---|
| 510. குறைபடாத வேட்கையோடு கோல்வளை யாளொருபாற்<br>பொறைபடாத வின்பமோடு புணர்தரு மெய்ம்மையென்னே<br>இறைபடாத மென்முலையார் மாளிகை மே–ருந்து<br>சிறைபடாத பாடலோங்கு சிரபுர மேயவனே. | சிறிதும் சாயாத மெல்–ய தனங்களை உடைய இள மகளிர் மாளிகைகளின் மேல் இருந்து குற்றமற்ற பாடல்களைப் பாடும் மகிழ்ச்சி மிகுந்துள்ள சிரபுரம் மேவிய இறைவனே, குன்றாத வேட்கையோடு திரண்ட கை வளைகளை உடைய உமையம்மையை ஒரு பாகமாக அளவற்ற இன்பத்துடன் புணர்தற்குக் காரணம் என்னையோ. |
| 511. மலையெடுத்த வாளரக்க னஞ்சவொ ருவிரலால்<br>நிலையெடுத்த கொள்கையானே நின்மல னேநினைவார்<br>துலையெடுத்த சொற்பயில்வார் மேதகு வீதிதோறுஞ்<br>சிலையெடுத்த தோளினானே சிரபுர மேயவனே. | கயிலை மலையை எடுத்த வாள்வ– உடைய இராவணன் அஞ்சுமாறு கால் விரல் ஒன்றினால் அடர்த்துத் தன் நிலையை எடுத்துக் காட்டிய செயலைப் புரிந்தவனே, குற்றமற்றவனே, தன்னை நினைவாரும் இருவினையொப்புடன் தோத்திரிக்கும் அன்பர்களும் மேன்மை மிக்க வீதி தொறும் வாழ விசயனுக்காக வில்லைச் சுமந்த தோளினை உடையவனே! சிரபுரம் மேவியவனே! |
| 512. மா–னோடு மலரினானும் வந்தவர் காணாது<br>சாலுமஞ்சப் பண்ணிநீண்ட தத்துவ மேயதென்னே<br>நாலுவேத மோதலார்கள் நந்துணை யென்றிறைஞ்சச்<br>சேலுமேயுங் கழனிசூழ்ந்த சிரபுர மேயவனே. | நான்கு வேதங்களையும் ஓதும் அந்தணர்கள் நம் துணைவனே என்று போற்றி இறைஞ்சச் சேல் மீன்கள் மேயும் வயல்கள் சூழ்ந்த சிரபுரம் மேவிய இறைவனே! தாமே பெரியர் என வந்த திருமாலும் தாமரை மலரில் உறையும் நான்முகனும் இயலாது மிகவும் அஞ்சுமாறு செய்து மிக நீண்ட திருவுருவைக் கொண்டது ஏன்? |
| 513. புத்தரோடு சமணர்சொற்கள் புறனுரை யென்றிருக்கும்<br>பத்தர்வந்து பணியவைத்த பான்மைய தென்னைகொலாம்<br>மத்தயானை யுரியும்போர்த்து மங்கையொடும்முடனே<br>சித்தர்வந்து பணியுஞ்செல்வச் சிரபுர மேயவனே. | மதம் பொருந்திய யானையின் தோலைப் போர்த்து உமையம்மையாருடன் சித்தர்கள் பலரும் பணியச் செல்வச் சிரபுரநகரில் மேவிய இறைவனே! புத்தர்கள் சமணர்கள் ஆகிய புறச்சமயிகளின் வார்த்தைகள் புறனுரை என்று கருதும் பத்தர் வந்து பணியுமாறு செய்த பான்மையாதோ? உரியும் – உம்மை இசைநிறை. |
| 514. தெங்குநீண்ட சோலைசூழ்ந்த சிரபுர மேயவனை<br>அங்கநீண்ட மறைகள்வல்ல வணிகொள்சம் பந்தனுரை<br>பங்கநீங்கப் பாடவல்ல பத்தர்கள் பாரிதன்மேற்<br>சங்கமோடு நீடிவாழ்வர் தன்மையி னாலவரே. | தென்னைகள் நீண்டு வளர்ந்து பயன்தரும் சோலைகள் சூழ்ந்த சிரபுரம் மேவிய இறைவனை ஆறு அங்கங்களுடன் விரிந்துள்ள வேதங்களை அறிந்துணர்ந்த அழகிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய இப்பதிக வாசகங்களைத் தம் குற்றங்கள் நீங்கப் பாடவல்ல பக்தர்கள் இவ்வுலகில் அடியவர் கூட்டங்களோடு வாழும் தன்மையினால் வாழ்நாள் பெருகி வாழ்வர். |

# 48. திருச்சேய்ஞலூர்

பண் : பழந்தக்கராகம் முதல் திருமுறை பதிக எண் : 48

| | |
|---|---|
| 515. நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு<br>மாலடைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை<br>ஆலடைந்த நீழன்மேவி யருமறை சொன்னதென்னே<br>சேலடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே. | சேல் மீன்கள் நிறைந்த குளிர்ந்த வயல்களால் சூழப்பட்ட திருச்சேய்ஞலூரில் மேவிய இறைவனே! வேதம் முத–ய நூல்களில் விதிக்கப்பட்ட முறைகளினால் உன் திருவடிகளை அடைதற்கு முயன்றும் அஞ்ஞானம் நீங்காமையால் சனகாதி முனிவர்களாகிய நால்வர் உன்னை அடைந்து உண்மைப் பொருள் கேட்க, அவர்கள் தெளிவு பெறுமாறு கல்லால மரநிழ–ல் வீற்றிருந்து அருமறை நல்கிய நல்லறத்தை எவ்வாறு அவர்கட்கு உணர்த்தியருளினாய்? கூறுவாயாக. |
| 516. நீறடைந்த மேனியின்க ணேரிழை யாளொருபால்<br>கூறடைந்த கொள்கையன்றிக் கோல வளர்சடை மேல்<br>ஆறடைந்த திங்கள்சூடி யரவம ணிந்ததென்னே<br>சேறடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே. | சேறு மிகுந்த குளிர்ந்த வயல்களால் சூழப்பட்ட திருச்சேய்ஞலூரில் எழுந்தருளிய இறைவனே! திருநீறணிந்த தன் திருமேனியின்கண் உமையம்மை ஒருபால் விளங்க அழகியதாய் நீண்டு வளர்ந்த சடைமேல் கங்கையையும் தன்னைச் சரணாக அடைந்த திங்களையும் சூடிப் பாம்பையும் அணிந்துள்ள காரணம் யாதோ? |
| 517. ஊனடைந்த வெண்டலையி னோடுப –திரிந்து<br>கானடைந்த பேய்களோடு பூதங்க லந்துடனே<br>மானடைந்த நோக்கிகாண மகிழ்ந்தெரி யாடலென்னே<br>தேனடைந்த சோலைமல்கு சேய்ஞலூர் மேயவனே. | வண்டுகள் நிறைந்த சோலைகள் செறிந்த திருச்சேய்ஞலூரில் எழுந்தருளிய இறைவனே! ஊன் பொருந்திய வெண்மையான தலையோட்டைக் கையில் ஏந்தி, உண் ப–க்குத் திரிந்து காட்டில் வாழும் பேய்களோடு பூதகணங்களும் கலந்து சூழ, மான் போன்ற கண்ணை உடைய உமையம்மை காண மகிழ்வோடு இடுகாட்டில் எரியாடுவது ஏன்? |
| 518. வீணடைந்த மும்மதிலும் வின்மலை யாவரவின்<br>நாணடைந்த வெஞ்சரத்தா னல்லெரி யூட்டலென்னே<br>பாணடைந்த வண்டுபாடும் பைம்பொழில் சூழ்ந்தழகார்<br>சேணடைந்த மாடமல்கு சேய்ஞலூர் மேயவனே. | பண்ணிசையோடு வண்டுகள் பாடும் பசுமையான பொழில் சூழ்ந்ததும், அழகியதாய் உயர்ந்த மாட வீடுகள் நிறைந்ததுமான திருச்சேய்ஞலூரில் எழுந்தருளிய இறைவனே! மும்மதில்களும் வீணடையுமாறு மலையை வில்லாகவும் அரவை அவ்வில்–ன் நாணாகவும் கொண்டு கொடிய அம்பால் பெரிய எரியை அம்முப்புரங்களுக்கு ஊட்டியது ஏன்? |

| | |
|---|---|
| 519. பேயடைந்த காடிடமாப் பேணுவ தன்றியும்போய்<br>வேயடைந்த தோளியஞ்ச வேழமுரி த்ததென்னே<br>வாயடைந்த நான்மறையா றங்கமோ டைவேள்வித்<br>தீயடைந்த செங்கையாளர் சேய்ஞலூர் மேயவனே. | வாயினால் ஓதப்பெற்ற நான்மறைகளோடு ஆறு அங்கங்களையும் கற்று, ஐவகை வேள்விகளை இயற்றி, தீப் பொருந்திய சிவந்த கையினராய் விளங்கும் அந்தணர் வாழும் சேய்ஞலூர் மேயவனே! சுடுகாட்டை இடமாகக் கொண்டு ஆடி உகப்பதோடு அன்றியும் சென்று மூங்கில் போன்ற தோளினை உடைய உமையம்மை அஞ்ச யானையை உரித்தது ஏனோ? |
| 520. காடடைந்த வேனமொன்றின் காரண மாகிவந்து<br>வேடடைந்த வேடனாகி விசயனொ டெய்ததென்னே<br>கோடடைந்த மால்களிற்றுக் கோச்செங்க ணாற்கருள்செய்<br>சேடடைந்த செல்வர்வாழுஞ் சேய்ஞலூர் மேயவனே. | கோடுகளோடு கூடிய பெரிய யானைப் படைகளை உடைய கோச்செங்கட் சோழனுக்கு அருள் செய்வதனும், பெருமை பொருந்திய செல்வர்கள் வாழும் திருச்சேய்ஞலூரில் மேவியவனுமாகிய இறைவனே! வில்லடிபட்டுக் காட்டுள் சென்று பதுங்கிய பன்றி ஒன்றின் காரணமாக, தான் வேடன் உருத்தாங்கி வந்து அருச்சுனனோடு போர் புரிந்தது ஏனோ? |
| 521. பீரடைந்த பாலதாட்டப் பேணாத வன்றாதை<br>வேரடைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந் தான்றனக்குத்<br>தாரடைந்த மாலைசூட்டித் தலைமைவ குத்ததென்னே<br>சீரடைந்த கோயின்மல்கு சேய்ஞலூர் மேயவனே. | சிறப்புமிக்க மாடக் கோயிலாய் விளங்கும் திருச்சேய்ஞலூரில் விளங்கும் இறைவனே! பசுவின் முலைக்காம்பின் வழிச்சுரந்து நின்ற பாலைச் சண்டீசர் மணலால் தாபித்த இ–ங்கத்துக்கு ஆட்டி வழிபட, அதனை விரும்பாது சினந்து பாற்குடத்தை இடறிய தன் தந்தையின் காலைத் தடிந்த சண்டீசரின் பக்தியை மெச்சி உன் தாரையும் மாலையையும் சூட்டி அவரைச் சிவகணங்களின் தலைவர் ஆக்கியது ஏனோ? |
| 522. மாவடைந்த தேரரக்கன் வ– தொலை வித்தவன்றன்<br>நாவடைந்த பாடல்கேட்டு நயந்தருள் செய்ததென்னே<br>பூவடைந்த நான்முகன்போற் பூசுரர் போற்றிசெய்யும்<br>சேவடைந்த வூர்தியானே சேய்ஞலூர் மேவியனே. | தாமரை மலரில் விளங்கும் நான்முகன் போன்ற அந்தணர்கள் போற்றும், விடையை ஊர்தியாகக் கொண்டவனே! திருச்சேய்ஞலூரில் மேவிய இறைவனே! குதிரைகள் பூட்டப்பட்ட தேரை உடைய இராவணனது வ–மையை அழித்து அவன் நாவினால் பாடிய பாடலைக் கேட்டு விரும்பி அவனுக்கு அருள்கள் பல செய்தது ஏனோ? |
| 523. காரடைந்த வண்ணனோடு கனகம னையானும்<br>பாரடைந்தும் விண்பறந்தும் பாதமு டிகாணார்<br>சீரடைந்து வந்துபோற்றச் சென்றருள் செய்ததென்னே<br>தேரடைந்த மாமறுகிற் சேய்ஞலூர் மேயவனே. | தேர் ஓடும் அழகிய வீதிகளை உடைய திருச்சேய்ஞலூர் மேவிய சிவனே! கருமை நிறம் பொருந்திய திருமால் பொன் வண்ணனாகிய பிரமன் ஆகியோர் உலகங்களை அகழ்ந்தும் பறந்தும் சென்று அடிமுடிகளைக் காணாராய்த் தம் தருக்கொழிந்து பின் அவர்கள் போற்ற அவர்பால் சென்று அருள் செய்தது ஏனோ? |

| | |
|---|---|
| 524. மாசடைந்த மேனியாரு மனந்திரி யாதகஞ்சி<br>நேசடைந்த வூணினாரு நேசமிலாததென்னே<br>வீசடைந்த தோகையாட விரைகம ழும்பொழில்வாய்த்<br>தேசடைந்த வண்டுபாடுஞ் சேய்ஞலூர் மேயவனே. | வீசி ஆடுகின்ற தோகைகளை உடைய மயில்கள் ஆடுவதும், மணம் கமழும் பொழில்களில் ஒளி பொருந்திய வண்டுகள் பாடுவதும் செய்யும் திருச்சேய்ஞலூரில் மேவிய இறைவனே! அழுக்கேறிய உட-னரும், மனத்தில் வெறுப்பின்றிக் கஞ்சியை விரும்பி உணவாகக் கொள்வோரும் ஆகிய சமண புத்தர்கள் உன்பால் நேசம் இலாததற்குக் காரணம் யாதோ? |
| 525. சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன சீர்பரவித்<br>தோயடைந்த வண்வயல்சூழ் தோணிபு ரத்தலைவன்<br>சாயடைந்த ஞானமல்கு சம்பந்தனின்னுரைகள்<br>வாயடைந்து பாடவல்லார் வானுல காள்பவரே. | முருகப் பெருமான் வழிபட்ட சிறப்பினதாகிய திருச்சேய்ஞலூரில் விளங்கும் செல்வனாகிய சிவபிரானது புகழைப் போற்றி நீர்வளம் சான்ற, வளமையான வயல்களால் சூழப்பட்ட தோணிபுரத்தின் தலைவனும், நுட்பமான ஞானம் மிக்கவனுமாகிய சம்பந்தனுடைய இன்னுரைகளை வாயினால் பாடி வழிபட வல்லவர் வானுலகு ஆள்வர். |

## 49. திருநள்ளாறு

பண் : பழந்தக்கராகம் — முதல் திருமுறை பதிக எண் : 49

| | |
|---|---|
| 526. போகமார்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன்னகலம்<br>பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி<br>ஆகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்<br>நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே. | இன்பத்துக்கு நிலைக்களனாயுள்ளனவும் அணிகலன்கள் பொருந்தியனவுமான தனங்களை உடைய உமையம்மையைத் தன்னோடு அழகிய திருமேனியின் இடப்பாகமாக ஒன்றாக இருக்கச் செய்தவனும், பசிய கண்களையும் வெண்மையான நிறத்தையும் உடைய ஆனேற்றைத் தனது ஊர்தியாகக் கொண்ட தலைவனும், மேலானவனும், திருமேனியின் மேல் போர்த்த தோலாடையுடையவனும், இடையிற் கட்டிய கோவண ஆடையின் மேல் நாகத்தைக் கச்சாக அணிந்தவனுமான நம் பெருமான் எழுந்தருளி இருக்கும் தலம் திருநள்ளாறு. |
| 527. தோடுடைய காதுடையன் தோலுடை யன்தொலையாப்<br>பீடுடைய போர்விடையன் பெண்ணுமோர் பாலுடையன்<br>ஏடுடைய மேலுலகோ டேழ்கட லுஞ்சூழ்ந்த<br>நாடுடைய நம்பெருமான் மேயது நள்ளாறே. | அம்மை பாகத்தே உள்ள இடச் செவியில் தோடணிந்த காதினை உடையவனும் தோலை ஆடையாகக் கொண்டவனும், குன்றாப்புகழ் உடையதும் போர் செய்த-ல் வல்லதுமான விடை ஊர்தியனும் மலைமகளை ஒரு பாகமாகக் கொண்டவனும், அடுக்குகளாக அமைந்த மேல் உலகங்களோடு ஏழ்கடலாலும் சூழப்பட்ட நாடு என்னும் இந்நிலவுலகமும் உடையவனுமாகிய எம்பெருமான் விரும்பிய தலம் திருநள்ளாறு ஆகும். |

| | |
|---|---|
| 528. ஆன்முறையா லாற்றவெண்ணீ றாடி யணியிழையோர்<br>பான்முறையால் வைத்தபாதம் பத்தர் பணிந்தேத்த<br>மான்மறியும் வெண்மழுவுஞ் சூலமும் பற்றியகை<br>நான்மறையான் நம்பெருமான் மேயது நள்ளாறே. | பசுவிடமிருந்து முறையாக எடுக்கப்பட்ட திருவெண்ணீற்றை மேனி முழுதும் பூசி அழகிய அணிகலன்களைப் புனைந்த உமையம்மையை ஒரு பாகமாக வைத்துள்ள, தன் திருவடிகளைப் பக்தர்கள் பணிந்து போற்ற, இளமான், வெண்மையான மழு, சூலம் ஆகியவற்றை ஏந்திய கையினனாய் நான்மறைகளையும் அருளிய நம் பெருமான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும். |
| 529. புல்கவல்ல வார்சடைமேற் பூம்புனல் பெய்தயலே<br>மல்கவல்ல கொன்றைமாலை மதியோ டுடன்சூடிப்<br>பல்கவல்ல தொண்டர்தம்பொற் பாதநி ழற்சேர<br>நல்கவல்ல நம்பெருமான் மேயது நள்ளாறே. | பொருந்திய நீண்ட சடையின் மேல் கங்கையை அணிந்து, அதன் அருகில் கொன்றை மாலையையும் பிறைமதியையும் ஒருசேரச் சூடித் தன்னைச் சார்ந்து வாழும் தொண்டர்கட்குத் தனது திருவடி நிழலைச் சேரும் பேற்றை நல்கும் பெருமான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும். |
| 530. ஏறுதாங்கி யூர்திபேணி யேர்கொள் இளமதியம்<br>ஆறுதாங்குஞ் சென்னிமேலோர் ஆடர வஞ்சூடி<br>நீறுதாங்கி நூல்கிடந்த மார்பினில் நிரைகொன்றை<br>நாறுதாங்கு நம்பெருமான் மேயது நள்ளாறே. | ஆன்ஏற்றைக் கொடியாகத் தாங்கியும் அதனையே ஊர்தியாக விரும்பி ஏற்றும் அழகிய இளம்பிறை கங்கை ஆகியன பொருந்திய சடைமுடியின்மேல் ஆடும் பாம்பைச் சூடியும் திருநீறு பூசிப் பூணூலோடு விளங்கும் மார்பில் கொன்றை மாலையின் மணம் கொண்டவனுமான நம் பெருமான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும். |
| 531. திங்களுச்சி மேல்விளங்குந் தேவன் இமையோர்கள்<br>எங்களுச்சி யெம்மிறைவன் என்றடி யேயிறைஞ்சத்<br>தங்களுச்சி யால்வணங்குந் தன்னடி யார்கட்கெல்லாம்<br>நங்களுச்சி நம்பெருமான் மேயது நள்ளாறே. | திங்கள் திருமுடியின் உச்சி மீது விளங்கும் தேவனாய், தேவர்கள் எங்கள் உச்சியாய் உள்ள எம் பெருமானே! என்று அடிபரவவும், தலையால் தன்னை வணங்கும் அடியவர்களும் எங்கள் முடிமீது விளங்கும் நம் பெருமான் என்று போற்றவும் விளங்கும் சிவபிரான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும். |
| 532. வெஞ்சுடர்த்தீ யங்கையேந்தி விண்கொண் முழவதிர<br>அஞ்சிடத்தோ ராடல்பாடல் பேணுவ தன்றியும்போய்ச்<br>செஞ்சடைக்கோர் திங்கள்சூடித் திகழ்தரு கண்டத்துள்ளே<br>நஞ்சடைத்த நம்பெருமான் மேயது நள்ளாறே. | கொடிய ஒளி பொருந்திய நெருப்பைக் கையில் ஏந்தி விண்ணளவும் ஒ–க்கும் முழவு முழங்கப் பலரும் அஞ்சும் சுடுகாட்டில் ஆடல் பாடலுடன் ஓர் இளம்பிறையைச் சூடி, விளங்கும் கண்டத்தில் நஞ்சினை நிறுத்திய நம் பெருமான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும். |
| 533. சிட்டமார்ந்த மும்மதிலுஞ் சிலைவரைத் தீயம்பினால்<br>சுட்டுமாட்டிச் சுண்ணவெண்ணீ றாடுவ தன்றியும்போய்ப்<br>பட்டமார்ந்த சென்னிமேலோர் பான்ம தியஞ்சூடி<br>நட்டமாடும் நம்பெருமான் மேயது நள்ளாறே. | பெருமை மிக்க முப்புரங்களையும் வரை சிலையில் பொருந்திய தீயாகிய அம்பினால் சுட்டு அழித்து, திருவெண்ணீற்றுப் பொடியில் திளைத்து ஆடி, பட்டம் என்னும் அணிகலன் பூட்டிய சென்னியின் மேல் பால் போலும் நிறமுடையதொரு பிறைமதியைச் சூடி நடனம் ஆடும் நம் பெருமான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும். |

| | |
|---|---|
| 534. உண்ணலாகா நஞ்சுகண்டத் துண்டுடனே யொடுக்கி<br>அண்ணலாகா வண்ணல்நீழல் ஆரழல் போலுருவம்<br>எண்ணலாகா வுள்வினையென் றெள்க வ-த்திருவர்<br>நண்ணலாகா நம்பெருமான் மேயது நள்ளாறே. | யாராலும் உண்ணமுடியாத நஞ்சினை உண்டு அதனைத் தம் கண்டத்தில் நிறுத்தியவரும், யாராலும் அணுக இயலாத தலைவரும் ஒளி பொருந்திய அழல் போன்ற திருவுருவினரும் அநாதியாகவே உள்ள வினையால் எண்ண இயலவில்லையே என மனம் வருந்திய திருமால் பிரமர்களால் நணுக முடியாதவருமான நம் பெருமான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும். |
| 535. மாசுமெய்யர் மண்டைத் தேரர் குண்டர்கு ணமி-கள்<br>பேசும்பேச்சை மெய்யென்றெண்ணி யந்நெறி செல்லன்மின்<br>மூசுவண்டர் கொன்றைசூடி மும்மதி ளும் முடனே<br>நாசஞ்செய்த நம்பெருமான் மேயது நள்ளாறே. | அழுக்கேறிய உட-னராகிய சமணரும், கையில் மண்டை என்னும் உண்கலத்தை ஏந்தித் திரியும் புத்தர்களும் ஆகிய குண்டர்களும் நற்குணங்கள் இல்லாதவர்கள். அவர்கள் பேசும் பேச்சை மெய்யென்று எண்ணி அவர்கள் சமயங்களை சாராதீர். வண்டுகள் மொய்த்துப் பொருந்தும் கொன்றை மலர் மாலையைச்சூடி மும்மதில்களையும் ஒருசேர அழித்துத் தேவர்களைக்காத்தருளிய நம்பெருமான் மேவிய திருநள்ளாற்றைச் சென்று வழிபடுமின். |
| 536. தண்புனலும் வெண்பிறையுந் தாங்கிய தாழ்சடையன்<br>நண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தன்நல்ல<br>பண்புநள்ளா றேத்துபாடல் பத்தும் இவைவல்லார்<br>உண்புநீங்கி வானவரோ டுலகில் உறைவாரே. | நட்புக்கு ஏற்ற நல்லோர் வாழும் சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், குளிர்ந்த கங்கையையும் வெண்மையான பிறையையும் தாங்கிய தாழ்ந்த சடைமுடியை உடைய சிவபிரான் எழுந்தருளிய, நல்-யல்பு வாய்ந்தோர் வாழும் திருநள்ளாற்றைப் போற்றிப் பாடிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஒத வல்லவர் பிராரத்த கன்ம வ-மை குறையப் பெற்று வானவர்களோடு தேவருலகில் வாழ்வர். |

## 50. திருவலிவலம்

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 50**

| | |
|---|---|
| 537. ஒல்லையாறி யுள்ளமொன்றிக் கள்ளமொழிந் துவெய்ய<br>சொல்லையாறித் தூய்மைசெய்து காமவினை யகற்றி<br>நல்லவாறே யுன்றனாமம் நாவில்நவின் றேத்த<br>வல்லவாறே வந்துநல்காய் வ-வலமே யவனே. | திருவ-வம் மேவிய இறைவனே! பரபரப்பு அடங்கி, மனம் ஒன்றி, வஞ்சம் வெஞ்சொல் தவிர்ந்து தூய்மையோடு, காமம் முத-ய குற்றங்களைக் கடிந்து, நல்ல முறையில் உன் நாமமாகிய திருவைந்தெழுத்தை என் வல்லமைக்குத் தக்கவாறு நான் ஓதி வழிபடுகின்றேன், வந்து அருள்புரிவாயாக. |
| 538. இயங்குகின்ற விரவிதிங்கண் மற்றுநற் றேவரெல்லாம்<br>பயங்களாலே பற்றிநின்பாற் சித்தந்தெளி கின்றிலர்<br>தயங்குசோதீ சாமவேதா காமனைக்காய்ந் தவனே<br>மயங்குகின்றேன் வந்துநல்காய் வ-வலமே யவனே. | வானவெளியில் இயங்குகின்ற ஞாயிறு, திங்கள் மற்றும் நல்ல தேவர்கள் எல்லோரும் அச்ச மேலீட்டினால் உன்னைப் பரம்பொருள் என்று தம் சித்தம் தெளியாதவராயுள்ளனர். விளங்கும் சோதி வடிவினனே, சாம வேதம் பாடி மகிழ்பவனே, காமனைக் காய்ந்தவனே, எவ்வாறு உன்னைத் தெளிவது என்று யானும் மயங்குகின்றேன். வந்து அருள்புரிவாயாக. |

| | |
|---|---|
| 539. பெண்டிர்மக்கள் சுற்றமென்னும் பேதைப்பெருங் கடலை<br>விண்டுபண்டே வாழமாட்டேன் வேதனைநோய் ந–யக்<br>கண்டுகண்டே யுன்றனாமங் காத–க்கின்ற துள்ளம்<br>வண்டுகிண்டிப் பாடுஞ்சோலை வ–வலமே யவனே. | வண்டுகள் தேனுண்ணற் பொருட்டு மலர்களைக் கிண்டி இசைபாடும் சோலைகள் சூழ்ந்த திருவ–வலத்துள் மேவிய இறைவனே, மனைவி மக்கள் சுற்றம் முதலான பாசப் பெருங்கடலை இளைய காலத்திலேயே கடந்து வாழ்ந்தேன் அல்லேன். வேதனை நோய் ஆகியன ந–ய உலகியற் பாசங்கள் துன்பம் தருவன என்பதைக் கண்டு உன் திருநாமம் சொல்வதொன்றே இன்பமாவது என்பதைக் கண்டு அதனை ஓத உள்ளம் விரும்புகிறது. அருள் புரிவாயாக. |
| 540. மெய்யராகிப் பொய்யைநீக்கி வேதனையைத் துறந்து<br>செய்யரானார் சிந்தையானே தேவர்குலக் கொழுந்தே<br>நைவனாயே னுன்றனாமம் நாளும்நவிற் றுகின்றேன்<br>வையமுன்னே வந்துநல்காய் வ–வலமே யவனே. | பொய்மையை விலக்கி, உண்மையை மேற்கொண்டு பந்த பாசங்களாகிய வேதனைகளைத் துறந்து செம்மையான மனமுடையோராய் வாழும் அன்பர்களின் சிந்தையுள் இருப்பவனே, தேவர்களின் குலக்கொழுந்தே! நான் வருந்தி நிற்கிறேன். உன்றன் திருநாமத்தை நாள்தோறும் ஓதி வருகிறேன். வ–வலம் மேவிய இறைவனே வையகத்தே பலரும் காண வந்து அருள்புரிவாயாக. |
| 541. துஞ்சும்போதுந் துற்றும்போதுஞ் சொல்லுவனுன் றிறமே<br>தஞ்சமில்லாத் தேவர்வந்துன் றாளிணைக்கீழ்ப் பணிய<br>நஞ்சையுண்டாய்க் கென்செய்கேனோ நாளும்நினைந் தடியேன்<br>வஞ்சமுண்டென் றஞ்சுகின்றேன் வ–வலமே யவனே. | திருவ–வம் மேவிய இறைவனே, உறங்கும் போதும் உண்ணும்போதும் உன்றன் புகழையே சொல்லுவேன். தேவர்கள் வேறு புக–டம் இல்லாது உன்பால் வந்து உன் தாளிணைகளின் கீழ்ப்பணிய அவர்களைக் காத்தற்பொருட்டு நஞ்சை உண்ட உன் கருணையை நாளும் நினைதலையன்றி வேறு என் செய வல்லேன்? உன் அருள் பெறுதற்குத் தடையாக என்பால் வஞ்சம் உண்டென்று அஞ்சுகின்றேன். அதனைப் போக்கி எனக்கு அருள். |
| 542. புரிசடையாய் புண்ணியனே நண்ணலார்மூ வெயிலும்<br>எரியவெய்தா யெம்பெருமா னென்றிமையோர் பரவும்<br>கரியுரியாய் காலகாலா நீலமணி மிடற்று<br>வரியரவா வந்துநல்காய் வ–வலமே யவனே. | திருவ–வம் மேவிய இறைவனே! முறுகிய சடையை உடையவனே, புண்ணிய வடிவினனே! பகைவர் தம் முப்புரங்களும் எரியுமாறு அம்பெய்தவனே என்று தேவர்கள்பரவும், யானையின் தோலை அணிந்தவனே, காலனுக்குக் காலனே! நீலமணி போலும் கண்டத்தையும் வரிந்து கட்டப் பெற்ற பாம்பினையும் உடையவனே! என்பால் வந்து அருள்புரிவாயாக. |

| | |
|---|---|
| 543. தாயும்நீயே தந்தையும்நீயே சங்கரனே யடியேன்<br>ஆயும்நின்பா லன்புசெய்வா னாதரிக்கின் றதுள்ளம்<br>ஆயமாய காயந்தன்னு ளைவர்நின்றொன் றலொட்டார்<br>மாயமேயென் றஞ்சுகின்றேன் வ–வலமே யவனே. | திருவ–வலம் மேவிய இறைவனே! சங்கரனே எனக்குத் தாயும் தந்தையும் நீயேயாவாய். அடியேன் உள்ளம் சிவஞானிகளால் ஆய்ந்துணரப்படும். நின்பால் அன்பு செய்ய விரும்புகின்றது. எனக்குப் படைத்தளிக்கப்பட்ட இவ்வுட–டைப் பொருந்திய ஐம்பொறிகள் உன்னைப் பொருந்தவொட்டாமல் தடுக்கின்றன. இம்மாயத்தைக் கண்டு யான் அஞ்சுகின்றேன். அருள்புரிவாயாக. |
| 544. நீரொடுங்குஞ் செஞ்சடையாய் நின்னுடையபொன் மலையை<br>வேரொடும்பீழ்ந் தேந்தலுற்ற வேந்தனிரா வணனைத்<br>தேரொடும்போய் வீழ்ந்தலறத் திருவிரலா லடர்த்த<br>வாரொடுங்குங் கொங்கைபங்கா வ–வலமே யவனே. | திருவ–வலம் மேவிய இறைவனே! தருக்கி வந்த கங்கை செயல் இழந்து ஒடுங்கிய செஞ்சடையை உடையவனே, உன்னுடைய பொன்மயமான கயிலை மலையை வேரோடும் பிடுங்கி ஏந்தத் தொடங்கிய இலங்கை வேந்தன் இராவணனைத் தேரோடும் வீழ்ந்து அலறுமாறு உன் கால் திருவிரலால் அடர்த்தவனே, கச்சு அணிந்த பெருத்த தனங்களை உடைய உமைபங்கனே! வந்து நல்காய். |
| 545. ஆதியாய நான்முகனும் மாலுமறி வரிய<br>சோதியானே நீதியில்லேன் சொல்லுவனின் றிறமே<br>ஓதிநாளு முன்னையேத்து மென்னைவினை யவலம்<br>வாதியாமே வந்துநல்காய் வ–வலமே யவனே. | திருவ–வலம் மேவிய இறைவனே, உலகங்களைப் படைத்துக் காத்த–ல் ஆதியானவர்களாகிய நான்முகனும். திருமாலும் அறிதற்கரிய சோதிப் பிழம்பாய்த் தோன்றியவனே! யான் நீதியில்லாதேன் ஆயினும் உன் புகழையே சொல்லுகின்றேன். நாள்தோறும் உன் புகழையே ஓதி உன்னையே ஏத்தும் என்னை வினைகளும் அவற்றின் பயனாய துன்பங்களும் வந்து தாக்காமல் வந்து அருள் புரிவாயாக. |
| 546. பொதியிலானே பூவணத்தாய் பொன்றிகழுங் கயிலைப்<br>பதியிலானே பத்தர்சித்தம் பற்றுவிடா தவனே<br>விதியிலாதார் வெஞ்சமணர் சாக்கியரென் றிவர்கள்<br>மதியிலாதா ரென்செய்வாரோ வ–வலமே யவனே. | திருவ–வலம் மேவிய இறைவனே! பொதிய மலையைத் தனக்கு இடமாகக் கொண்டவனே, திருப்பூவணம் என்னும் தலத்தில் உறைபவனே, தன்பால் பக்தி செய்யும் அன்பர்களின் சித்தங்களில் எழுந்தருளி இருப்பவனே, கொடிய சமணர்களும் சாக்கியர்களும் உன்னை அடையும் புண்ணியம் இல்லாதவர்கள். அறிவற்ற அவர்கள் தங்கள் சமய நெறியில் என்ன பயனைக் காண்பார்களோ ? |
| 547. வன்னிகொன்றை மத்தஞ்சூடும் வ–வலமே யவனைப்<br>பொன்னிநாடன் புக–வேந்தன் ஞானசம்பந்தன் சொன்ன<br>பன்னுபாடல் பத்தும்வல்லார் மெய்த்தவத்தோர் விரும்பும்<br>மன்னுசோதி யீசனோடே மன்னியிருப் பாரே. | வன்னி கொன்றை மலர், ஊமத்தை மலர் ஆகியவற்றைச் சூடும் திருவ–வலம் மேவிய இறைவனைக் காவிரி நாட்டிலுள்ள புக– என்னும் சீகாழிப் பதிக்கு வேந்தனாய ஞானசம்பந்தன் புகழ்ந்து ஓதியனவும் எக்காலத்தும் ஓதத்தக்கனவும் ஆகிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓத வல்லவர், உண்மைத் தவமுடையோர் விரும்பும் நிலை பெற்ற, சோதி வடிவான ஈசனோடு மன்னியிருப்பர். |

## 51. திருச்சோபுரம்

பண் : பழந்தக்கராகம் | முதல் திருமுறை பதிக எண் : 51

| | |
|---|---|
| 548. வெங்கணானை யீருரிவை போர்த்துவிளங் கும்மொழி<br>மங்கைபாகம் வைத்துகந்த மாண்பதுவென் னைகொலாம்<br>கங்கையோடு திங்கள்சூடிக் கடிகமழுங் கொன்றைத்<br>தொங்கலானே தூயநீற்றாய் சோபுரமே யவனே. | கங்கை திங்கள் ஆகியவற்றை முடிமிசைச் சூடி மணம் கமழும் கொன்றை மலர் மாலையை அணிந்து தூய திருநீறு பூசித் திருச்சோபுரத்தில் விளங்கும் இறைவனே! கொடிய யானையை உரித்து அதன் தோலைப் போர்த்திய, விளக்கமான மொழிகளைப் பேசும் மலைமங்கையை இடப்பாகத்தே கொண்டு மகிழும் உனது செய–ன் மாண்பு எத்தகையதோ? |
| 549. விடையமர்ந்து வெண்மழுவொன் றேந்திவிரிந் திலங்கு<br>சடையொடுங்கத் தண்புனலைத் தாங்கியதென்<br>னைகொலாம்<br>கடையுயர்ந்த மும்மதிலுங் காய்ந்தனலுள் ளழுந்தத்<br>தொடைநெகிழ்ந்த வெஞ்சிலையாய் சோபுரமே யவனே. | வாயில்களாற் சிறந்த முப்புரங்களும் அனலுள் அழுந்துமாறு சினத்தோடு அம்பு செலுத்திய கொடிய மலை வில்லை உடையவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! விடைமீது அமர்ந்து வெண்மையான மழு ஒன்றைக் கையில் ஏந்தி விரிந்து விளங்கும் சடையின்கண் ஒடுங்குமாறு குளிர்ந்த நீரைத் தடுத்துத் தாங்கி இருத்தற்குக் காரணம் என்னையோ? |
| 550. தீயராய வல்லரக்கர் செந்தழலுள் ளழுந்தச்<br>சாயவெய்து வானவரைத் தாங்கியதென் னைகொலாம்<br>பாயும்வெள்ளை யேற்றையேறிப் பாய்பு–த்தோலுடுத்த<br>தூயவெள்ளை நீற்றினானே சோபுரமே யவனே. | பாய்ந்து செல்லும் வெண்ணிறமான விடையேற்றின் மீது ஏறி, பாயும் பு–யினது தோலை உடுத்துத் தூய வெண்ணீற்றை அணிந்துள்ளவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! கொடியவர்களாகிய வ–ய அரக்கர் சிவந்த அழலுள் அழுந்துமாறு கணை எய்து தேவர்களை வாழ்வித்தது என்ன காரணம் பற்றியோ? |
| 551. பல்–லோடு கையிலேந்திப் பல்கடையும் ப–தேர்ந்<br>தல்லல்வாழ்க்கை மேலதான வாதரவென் னைகொலாம்<br>வில்லைவென்ற நுண்புருவ வேனெடுங்கண் ணியொடும்<br>தொல்லையூழி யாகிநின்றாய் சோபுரமே யவனே. | வில்லை வென்ற வளைந்த நுண்புருவத்தையும், வேல் போன்ற நீண்ட கண்ணையும் உடைய உமையம்மையோடும், பழமையான பல ஊழிக் காலங்களாக நிற்பவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! பல் இல்லாத மண்டையோட்டைக் கையிலேந்திப் பலர் இல்லங்களுக்கும் சென்று ப–ஏற்கும் அல்லல் பொருந்திய வாழ்க்கையின்மேல் நீ ஆதரவு காட்டுதற்குக் காரணம் என்னவோ? |
| 552. நாற்றமிக்க கொன்றைதுன்று செஞ்சடைமேன் மதியம்<br>ஏற்றமாக வைத்துகந்த காரணமென் னைகொலாம்<br>ஊற்றமிக்க காலன் றன்னை யொல்கவுதைத் தருளி<br>தோற்றமீறு மாகிநின்றாய் சோபுரமே யவனே. | வ–மை பொருந்திய காலனை அழியுமாறு உதைத்தருளி, எல்லாப் பொருள்கட்கும் தோற்றமும் ஈறுமாகி நிற்பவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! மணம் மிக்க கொன்றை மலர்கள் நிறைந்த செஞ்சடையின்மேல் பிறைமதியை அழகு பெற வைத்து மகிழ்தற்குக் காரணம் என்னையோ? |

| | |
|---|---|
| 553. கொன்னவின்ற மூவிலைவேற் கூர்மழுவாட் படையன்<br>பொன்னைவென்ற கொன்றைமாலை சூடும்பொற்பென்<br>னைகொலாம்<br>அன்னமன்ன மென்னடையாள் பாகமமர்ந் தரைசேர்<br>துன்னவண்ண ஆடையினாய் சோபுரமே யவனே. | அன்னம் போன்ற மெல்–ய நடையினையுடைய உமையம்மையை ஒரு பாகமாகப் பொருந்தி, இடையில் அழகிய கோவண ஆடையை அணிந்தவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! கொல்லும் தொழில் பொருந்திய மூவிலை வேலையும் தூய மழுவாட் படையையும் உடையவனே! நிறத்தால் பொன்னை வென்ற கொன்றை மாலையை நீ விரும்பிச் சூடுதற்குரிய காரணம் என்னையோ? |
| 554. குற்றமின்மை யுண்மைநீயென் றுன்னடியார் பணிவார்<br>கற்றகேள்வி ஞானமான காரணமென் னைகொலாம்<br>வற்றலாமை வாளரவம் பூண்டயன்வெண் டலையில்<br>துற்றலான கொள்கையானே சோபுரமே யவனே. | ஊன் வற்றிய ஆமை ஓட்டையும், ஒளி பொருந்திய பாம்பையும் அணிகலனாகப் பூண்டு, பிரமனின் வெண்மையான தலையோட்டில் ப–யேற்று உண்ணும் கொள்கையனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! குணமும் குற்றமும் நீயே என்று பணியும் உன் அடியவர்கட்குத் தாங்கள் கற்ற கல்வியும், கேள்வியும் அதனால் விளையும் ஞானமுமாக நீயே விளங்குதற்குக் காரணம் என்னவோ? |
| 555. விலங்கலொன்று வெஞ்சிலையாக் கொண்டுவிற லரக்கர்<br>குலங்கள்வாழு மூரெரித்த கொள்கையிதென் னைகொலாம்<br>இலங்கைமன்னு வாளவுணர் கோனையெழில் விரலால்<br>துலங்கவூன்றி வைத்துகந்தாய் சோபுரமே யவனே. | இலங்கையில் நிலைபெற்று வாழும், வாட்போரில் வல்ல அவுணர் தலைவனாகிய இராவணனைத் தனது அழகிய கால்விரலால் நடுங்குமாறு ஊன்றிப் பின் அவன் வேண்ட மகிழ்ந்து அருள் புரிந்தவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! மேரு மலையைக் கொடியதொரு வில்லாகக் கொண்டு வ–மை பொருந்திய அரக்கர் குலங்கள் வாழ்கின்ற திரிபுரங்களாகிய ஊர்களை எரித்து அழித்தற்குக் காரணம் என்னவோ? |
| 556. விடங்கொணாக மால்வரையைச் சுற்றிவிரி திரைநீர்<br>கடைந்தநஞ்சை யுண்டுகந்த காரணமென் னைகொலாம்<br>இடந்துமண்ணை யுண்டமாலு மின்மலர்மே லயனும்<br>தொடர்ந்துமுன்னங் காணமாட்டாச் சோபுரமே யவனே. | மண்ணுலகை அகழ்ந்து உண்ட திருமாலும், இனிய தாமரை மலர்மேல் விளங்கும் பிரமனும், முற்காலத்தே உன்னைத் தொடர்ந்து அடிமுடி காணமாட்டாராய் நின்றொழியத் திருச்சோபுரத்தில் மேவி விளங்கும் இறைவனே! தேவர்கள் விடத்தையுடைய வாசுகி என்னும் பாம்பை மந்தரம் என்னும் பெரிய மலையைச் சுற்றிக் கட்டி, விரிந்த அலைகளையுடைய கடல்நீரைக் கடைந்தபோது, அதனிடை எழுந்த நஞ்சை உண்டு மகிழ்தற்குக் காரணம் என்னையோ? |
| 557. புத்தரோடு புன்சமணர் பொய்யுரையே யுரைத்துப்<br>பித்தராகக் கண்டுகந்த பெற்றிமையென் னைகொலாம்<br>மத்தயானை யீருரிவை போர்த்துவளர் சடைமேல்<br>துத்திநாகஞ் சூடினானே சோபுரமே யவனே. | மதம் பொருந்திய யானையை உரித்து அதன் தோலைப் போர்த்து, நீண்ட சடையின் மேல் புள்ளிகளையுடைய நாகப் பாம்பைச் சூடியவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! புத்தர்களும், சமணர்களும் பொய்யுரைகளேயே பேசிப் பித்தராகத் திரிதலைக் கண்டு நீ மகிழ்தற்குக் காரணம் என்னையோ? |

| | |
|---|---|
| 558. சோலைமிக்க தண்வயல் சூழ் சோபுரமே யவனைச்<br>சீலமிக்க தொல்புகழார் சிரபுரக்கோன் நலத்தான்<br>ஞாலமிக்க தண்டமிழான் ஞானசம்பந்தன் சொன்ன<br>கோலமிக்க மாலைவல்லார் கூடுவர்வா னுலகே. | சோலைகள் மிகுந்ததும், குளிர்ந்த வயல்களால் சூழப்பட்டதுமான திருச்சோபுரம் மேவிய இறைவனைச் சீலத்தால் மிக்க, பழமையான புகழை உடைய அந்தணர்கள் வாழும் சிரபுரம் என்னும் சீகாழிப் பதியின் தலைவனும், நன்மைகளையே கருதுபவனும், உலகில் மேம்பட்ட தண் தமிழ் பாடியவனுமாகிய ஞானசம்பந்தன் பாடிய அழகுமிக்க இத்தமிழ் மாலையை ஓதவல்லவர் வானுலகை அடைவர். |

## 52. திருநெடுங்களம்

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 52**

| | |
|---|---|
| 559. மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்<br>பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப்பே சினல்லால்<br>குறையுடையார் குற்றமோராய் கொள்கையினா லுயர்ந்த<br>நிறையுடையா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | திருநெடுங்களம் மேவிய இறைவனே, வேதங்களைத் தனக்கு உடைமையாகக் கொண்டவனே, தோல் ஆடை உடுத்தவனே, நீண்ட சடை மேல் வளரும் இளம் பிறையைச் சூடியவனே, தலைக்கோலம் உடையவனே, என்று உன்னை வாழ்த்தினாலல்லது குறை உடையவர்களின் குற்றங்களை மனத்துக் கொள்ளாத நீ, மனத்தினால் உன்னையன்றி வேறு தெய்வத்தை நினையாத கொள்கையில் மேம்பட்ட நிறையுடைய அடியவர்களின் இடர்களை நீக்கி அருள்வாயாக. |
| 560. கனைத்தெழுந்த வெண்டிரைசூழ் கட–டைநஞ் சுதன்னைத்<br>தினைத்தனையா மிடற்றில்வைத்த திருந்தியதே வநின்னை<br>மனத்தகத்தோர் பாடலாடல் பேணியிராப் பகலும்<br>நினைத்தெழுவா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | திருநெடுங்களம் மேவிய இறைவனே, ஆரவாரித்து எழுந்த, வெண்மையான அலைகளால் சூழப்பட்ட கடல் நஞ்சினைத் தினையளவாகச் செய்து உண்டு கண்டத்தே நிறுத்திய மேம்பட்ட தேவனே, நின்னை மனத்தகத்தே நிறுவியவர்களின் ஆடல், பாடல்களை விரும்பி, இரவும் பகலும் நின்னையே நினைத்து எழும் அடியவர்களின் இடர்களை நீக்கி அருளுக. |
| 561. நின்னடியே வழிபடுவான் நிமலாநினைக் கருத<br>என்னடியா னுயிரைவவ்வே லென்றடற்கூற் றுதைத்த<br>பொன்னடியே பரவிநாளும் பூவொடுநீர் சுமக்கும்<br>நின்னடியா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | திருநெடுங்களம் மேவிய இறைவனே, குற்றமற்றவனே, நின் திருவடிகளையே வழிபடும் மார்க்கண்டேயன் நின்னையே கருதிச் சரண் புக அவனைக் கொல்லவந்த வ–மை பொருந்திய கூற்றுவனைச் சினந்து, 'என் அடியவன் உயிரைக் கவராதே' என்று உதைத்தருளிய உன் பொன்னடிகளையே வழிபட்டு, நாள்தோறும் பூவும், நீரும் சுமந்து வழிபடும் உன் அடியவர்களின் இடர்களைக் களைந்தருள்வாயாக. |
| 562. மலைபுரிந்த மன்னவன்றன் மகளையோர்பான் மகிழ்ந்தாய்<br>அலைபுரிந்த கங்கைதங்கு மவிர்சடையா ரூரா<br>தலைபுரிந்த ப–மகிழ்வாய் தலைவநின்றா ணிழற்கீழ்<br>நிலைபுரிந்தா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | திருநெடுங்களம் மேவிய இறைவனே, இமவான் மகளாகிய பார்வதி தேவியைத் தன் திருமேனியின் ஓர் பாதியாகக் கொண்டு மகிழ்பவனே, அலைகள் வீசும் கங்கை நீரைத் தாங்கிய விரிந்த சடையினையுடைய திருவாரூர் இறைவனே, தலையோட்டை விரும்பி ஏந்தி அதன்கண் ப–யேற்று மகிழ்பவனே, தலைவனே, நினது திருவடி நீழற்கீழ் நிற்றலையே விரும்பும் அடியவர்களின் இடர்களைப் போக்கி அருள்வாயாக. |

| | |
|---|---|
| 563. பாங்கினல்லார் படிமஞ்செய்வார் பாரிடமும் ப–சேர்<br>தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழலே வணங்கித்<br>தாங்கிநில்லா அன்பினோடுந் தலைவநின்றா ணிழற்கீழ்<br>நீங்கிநில்லா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | திருநெடுங்களம் மேவிய இறைவனே, குணங்களால் நல்லவர்களும், தவ வேடம் தாங்கியவர்களும், பாரிடை வாழும் மக்களும் பலருடைய இல்லங்களிலும் ப–தேரும் உனது செயல்களில் மனம் ஒன்றி நல்லோர் பாடும் பாடல்களோடு தொழத்தக்க உன் திருவடிகளை வணங்கிக் கரை கடந்த அன்போடு தலைவனாகிய உனது திருவடி நிழலை நீங்கி நில்லாதவர்களாகிய அடியவர்களின் இடர்களைக் களைந்தருள்வாயாக. |
| 564. விருத்தனாகிப் பாலனாகி வேதமோர்நான் குணர்ந்து<br>கருத்தனாகிக் கங்கையானைக் கமழ்சடைமேற் கரந்தாய்<br>அருத்தனாய வாதிதேவ னடியிணையே பரவும்<br>நிருத்தர்கீத ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | திருநெடுங்களம் மேவிய இறைவனே, மூத்த வேடந்தாங்கியும், இளமை வடிவங் கொண்டும், வேதங்கள் நான்கையும் நன்குணர்ந்த தலைவனாய் கங்கை நங்கையை மணம் கமழும் சடைமிசைச் கரந்துள்ள பெருமானே, கலை ஞானங்கள் மெய்ஞானங்களின் பொருளான முதற்கடவுளாய உன் அடி இணைகளைப் பரவி ஆடியும் பாடியும் போற்றும் அடியவர்களின் இடர்களைப் போக்கியருள்வாயாக. |
| 565. கூறுகொண்டாய் மூன்றுமொன்றாக் கூட்டியோர்வெங் கணையால்<br>மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே கொடிமேல்<br>ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமா னணிந்த<br>நீறுகொண்டா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | திருநெடுங்களம் மேவிய இறைவனே, உமையம்மையைத் திருமேனியின் ஒரு கூறாகக் கொண்டவனே, அரி, எரி, காற்று ஆகிய மூன்றையும் ஒன்றாகக் கூட்டிய ஒப்பற்ற கொடிய அம்பினால் வேதவழக்கோடு பகை கொண்ட அசுரர்களின் முப்புரங்களையும் எரித்தழித்த மன்னவனே, கொடி மீது இடபத்தை இலச்சினையாகக் கொண்டவனே, இதுவே மணம் பொருந்திய சந்தனமாகும் என்று எம்பெருமானே நீ அணிந்துள்ள திருநீற்றை விரும்பி அணியும் அடியவர்களின் இடரை நீக்கியருள்வாயாக. |
| 566. குன்றினுச்சி மேல்விளங்குங் கொடிமதில்சூ ழிலங்கை<br>அன்றிநின்ற வரக்கர்கோனை யருவரைக்கீ ழடர்த்தாய்<br>என்றுநல்ல வாய்மொழியா லேத்தியிராப் பகலும்<br>நின்றுநைவா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | திருநெடுங்களம் மேவிய இறைவனே, மேருமலையின் சிகரங்கள் மூன்றில் ஒன்றாகிய குன்றின்மேல் விளங்குவதும் கொடிகள் கட்டப்பட்ட மதில்களால் சூழப்பட்டதுமான இலங்கை நகர் மன்னனும், உன்னோடு மாறுபட்டுக் கயிலை மலையைப் பெயர்த்தவனுமான அரக்கர் தலைவனுமாகிய இராவணனை அரிய அம்மலையின் கீழே அடர்த்தவனே! என்றெல்லாம் நல்ல தோத்திரங்களைக் கூறி இரவும் பகலும் உன்னையே ஏத்தி நின்று மனம் நையும் அடியவர்களின் இடர்களைப் போக்கி யருளுவாயாக. |

| | |
|---|---|
| 567. வேழவெண்கொம் பொசித்தமாலும் விளங்கியநான் முகனுஞ்<br>சூழவெங்கு நேடவாங்கோர் சோதியுளா கிநின்றாய்<br>கேழல்வெண்கொம் பணிந்தபெம்மான் கேடிலாப்பொன் னடியின்<br>நீழல்வாழ்வா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | திருநெடுங்களம் மேவிய இறைவனே, கஞ்சனால் ஏவப்பட்டுத் தன்னைக் கொல்ல வந்த குவலயாபீடம் என்ற யானையின் கொம்புகளை ஒடித்த திருமாலும், புகழ்பெற்ற நான்முகனும், தங்களைச் சூழ்ந்துள்ள இடமெங்கும் தேடுமாறு இருவருக்கும் இடையே சோதிப் பிழம்பாய்த் தோன்றி நின்றவனே, பன்றியினது கொம்பை அணிகலனாக அணிந்த பெருமானே, அழிவற்ற உன் பொன் போன்ற திருவடி நீழ–ல் வாழும் அடியவர்களின் இடர்களைக் களைந்தருள்வாய். |
| 568. வெஞ்சொற்றஞ்சொல் லாக்கிநின்ற வேடமிலாச் சமணும்<br>தஞ்சமில்லாச் சாக்கியருந் தத்துவமொன் றறியார்<br>துஞ்ச–ல்லா வாய்மொழியால் தோத்திரநின் னடியே<br>நெஞ்சில்வைப்பா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. | கொடுஞ் சொற்களையே தம் சொற்களாக்கிக் கொண்டு தமது வேடத்திற்குப் பொருந்தாமல் ஒழுகும் சமணரும் நற்சார்பில்லாத புத்தர்களும் சைவசமயம் கூறும் உண்மைப் பொருளை ஒரு சிறிதும் உணராதவர்கள். அவர்களை விடுத்து, திருநெடுங்களம் மேவிய இறைவனே! அழியாப் புகழுடைய வேதங்களோடு, தோத்திரங்களால் நின்னைப் பரவி நின் திருவடிகளை நெஞ்சில் கொண்டு வாழும் அடியவர்களின் இடர்களைப் போக்கியருளுவாயாக. |
| 569. நீடவல்ல வார்சடையான் மேயநெடுங் களத்தைச்<br>சேடர்வாழு மாமறுகிற் சிரபுரக்கோன் நலத்தால்<br>நாடவல்ல பனுவன்மாலை ஞானசம்பந்தன் சொன்ன<br>பாடல்பத்தும் பாடவல்லார் பாவம்ப றையுமே. | மேலும் மேலும் நீண்டு வளரத்தக்க சடைமுடியை உடைய சிவபிரான் எழுந்தருளிய திருநெடுங்களத்தை, பெரியோர் பலர் வாழும் பெரிய வீதிகளை உடைய சிரபுரம் என்னும் சீகாழிப்பதியின் தலைவனாகிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய, நன்மைப் பொருளால் ஆராய்ந்து உணரத்தக்க இப்பாடல்கள் பத்தையும் பாட வல்லவர்களின் பாவங்கள் விலகும். |

## 53. திருமுதுகுன்றம்

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 53**

| | |
|---|---|
| 570. தேவராயு மசுரராயுஞ் சித்தர்செழு மறைசேர்<br>நாவராயும் நண்ணுபாரும் விண்ணெரிகால் நீரும்<br>மேவராய விரைமலரோன் செங்கண்மால் ஈசனென்னும்<br>மூவராய முதலொருவன் மேயதுமு துகுன்றே. | தேவர், அசுரர், சித்தர், செழுமையான வேதங்களை ஓதும் நாவினராகிய அந்தணர், நாம் வாழும் மண், விண், எரி, காற்று, நீர் ஆகிய ஐம்பூதங்கள், மணம் மிக்க தாமரை மலர் மேல் உறையும் நான்முகன், சிவந்த கண்களை உடைய திருமால், உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகள் ஆகிய எல்லாமாகவும் அவர்களின் தலைவராகவும் இருக்கின்ற சிவபிரான் எழுந்தருளியிருப்பது திருமுதுகுன்றத் தலமாகும். |
| 571. பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதிபார்<br>எற்றுநீர்தீக் காலுமேலை விண்ணியமா னனோடு<br>மற்றுமாதோர் பல்லுயிராய் மாலயனும் மறைகள்<br>முற்றுமாகி வேறுமானான் மேயதுமு துகுன்றே. | தேவர்கட்குப் பற்றுக் கோடாகியும், பல வண்ணக் கதிர்களை உடைய ஞாயிறு, திங்கள், மண், கரையை மோதும் நீர், தீ, காற்று, மேலே உள்ள ஆகாயம், உயிர் ஆகிய அட்டமூர்த்தங்களாகியும் எல்லா உயிர்களாகியும் திருமால், பிரமன் வேதங்கள் முதலான அனைத்துமாகியும் இவற்றின் வேறானவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளியிருக்கும் தலம் திருமுதுகுன்றம் ஆகும். |

| | |
|---|---|
| 572. வாரிமாகம் வைகுதிங்கள் வாளரவஞ் சூடி<br>நாரிபாக நயந்துபூமேல் நான்முகன்றன் தலையில்<br>சீரிதாகப் ப–கொள்செல்வன் செற்றலுந்தோன் றியதோர்<br>மூரிநாகத் துரிவைபோர்த்தான் மேயதுமு துகுன்றே. | கங்கை, வானகத்தே வைகும் திங்கள், ஒளி பொருந்திய பாம்பு ஆகியவற்றை முடிமிசைச் சூடி உமையம்மையை ஒரு பாகமாக விரும்பி ஏற்று, தாமரை மலரில் உறையும் பிரமனது தலைகளில் ஒன்றைக் கொய்து அத்தலையோட்டில் ப– ஏற்கச் செல்பவனும், தன்னைச் சினந்து வந்த வ–ய யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்தியவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய தலம் திருமுதுகுன்றம். |
| 573. பாடுவாருக் கருளுமெந்தை பனிமுதுபௌ வமுந்நீர்<br>நீடுபாரு முழுதுமோடி யண்டர்நிலை கெடலும்<br>நாடுதானு மூடுமோடி ஞானமுநான் முகனும்<br>ஊடுகாண மூடும்வெள்ளத் துயர்ந்ததுமு துகுன்றே. | தன்னைப் பாடிப் பரவுவார்க்கு அருள் செய்யும் எந்தையாகிய சிவபிரான் எழுந்தருளிய தலம், குளிர்ந்த பழமையான கடல் நீண்ட மண் உலகிலும் தேவர் உலகிலும் பரவி, அவர்தம் இருப்பிடங்களை அழித்ததோடு நாடுகளிலும் அவற்றின் இடையிலும் ஓடி, ஞாலத்துள்ளாரும் நான்முகன் முத–ய தேவரும் உயிர் பிழைக்க வழிதேடும்படி, ஊழி வெள்ளமாய்ப் பெருகிய காலத்திலும் அழியாது உயர்ந்து நிற்பதாகிய, திருமுதுகுன்றமாகும். |
| 574. வழங்குதிங்கள் வன்னிமத்த மாசுணமீ சணவிச்<br>செழுங்கல்வேந்தன் செல்விகாணத் தேவர்திசை வணங்கத்<br>தழங்குமொந்தை தக்கைமிக்க பேய்க்கணம்பூ தஞ்சூழ<br>முழங்குசெந்தீ யேந்தியாடி மேதுமு துகுன்றே. | வானத்தில் சஞ்சரிக்கும் திங்கள் வன்னியிலை, ஊமத்தம் மலர், பாம்பு ஆகியவற்றைத் திருமுடி மீது நெருக்கமாகச் சூடி, இமவான் மகளாகிய உமையவள் காணத் தேவர்கள் எல்லாத் திசைகளிலும் நின்று வணங்க, மொந்தை, தக்கை ஆகியன அருகில் ஒ–க்க, பேய்க்கணங்கள் பூதங்கள் சூழ்ந்து விளங்க, முழங்கும் செந்தீயைக் கையில் ஏந்தி ஆடும் சிவபெருமான் மேவிய தலம் திருமுதுகுன்றமாகும். |
| 575. சுழிந்தகங்கை தோய்ந்ததிங்கட் டொல்லரானல் –தழி<br>சழிந்தசென்னிச் சைவவேடந் தான்நினைந் தைம்புலனும்<br>அழிந்தசிந்தை யந்தணாளர்க் கறம்பொருளின் பம்வீடு<br>மொழிந்தவாயான் முக்கணாதி மேயதுமு துகுன்றே. | சுழிகளோடு கூடிய கங்கை, அதன்கண் தோய்ந்த திங்கள், பழமையான பாம்பு, நல்ல கொன்றை மலர் ஆகியன நெருங்கிய சென்னியை உடைய முக்கண் ஆதியாகிய சிவபிரானுடைய சைவ வேடத்தை விருப்புற்று நினைத்து, ஐம்புலன்களும் மனமும் அழிந்த சிந்தையினராகிய சனகர் முத–ய அந்தணாளர்கட்கு அறம் பொருள் இன்பம் வீடு ஆகியவற்றை உபதேசித்த திருவாயினனாய் எழுந்தருளியிருப்பது திருமுதுகுன்றம் ஆகும். தாள் நினைத்து, தாள் இணைத்து என்பவும் பாடம். |

| | |
|---|---|
| 576. மயங்குமாயம் வல்லராகி வானினொடு நீரும்<br>இயங்குவோருக் கிறைவனாய விராவணன்றோ ணெரித்த<br>புயங்கராக மாநடத்தன் புணர்முலைமா துமையான்<br>முயங்குமார்பன் முனிவரேத்த மேயதுமு துகுன்றே. | அறிவை மயங்கச் செய்யும் மாயத்தில் வல்லவராய் வான், நீர் ஆகியவற்றிலும் சஞ்சரிக்கும் இயல்பினராய் அரக்கர்களுக்குத் தலைவனாகிய இராவணனின் தோளை நெரித்த வ–மையோடு பாம்பு நடனத்தில் விருப்புடையவனும், செறிந்த தனபாரங்களை உடைய உமையம்மையைத் தழுவிய மார்பினனும் ஆகிய சிவபிரான் முனிவர்கள் ஏத்த எழுந்தருளி விளங்கும் தலம் திருமுதுகுன்றமாகும். |
| 577. ஞாலமுண்ட மாலுமற்றை நான்முகனும் மறியாக்<br>கோலமண்டர் சிந்தைகொள்ளா ராயினுங்கொய் மலரால்<br>ஏலவிண்டை கட்டிநாம மிசையவெப்போ துமேத்தும்<br>மூலமுண்ட நீற்றர்வாயான் மேயதுமு துகுன்றே. | உலகங்களை உண்ட திருமாலும், நான்முகனும் அறிய முடியாத இறைவனது திருக்கோலத்தைத் தேவர்களும் அறியாதவர் ஆயினர். நாள்தோறும் கொய்த மலர்களைக் கொண்டு இண்டை முத–ய மாலைகள் தொடுத்துத் தன் திருப்பெயரையே எப்போதும் மனம் பொருந்தச் சொல்பவரும், மூலமலத்தை அழிக்கும் திருநீற்றை மெய்யிற் பூசுபவருமாகிய அடியவர்களின் வாயில், நாம மந்திரமாக உறைந்தருளுகின்ற அப்பெருமான் மேவிய தலம் திருமுது குன்றமாகும். |
| 578. உறிகொள்கையர் சீவரத்த ருண்டுழன்மிண் டர்சொல்லை<br>நெறிகளென்ன நினைவுறாதே நித்தலுங்கை தொழுமின்<br>மறிகொள்கையன் வங்கமுந்நீர்ப் பொங்குவிடத் தையுண்ட<br>முறிகொண்டமேனி மங்கைபங்கன் மேயதுமு துகுன்றே. | குண்டிகையை உறியில் கட்டித் தூக்கிய கையினரும், காவியாடையைத் தரித்தவரும், உண்டு உழல்பவரும் ஆகிய சமண புத்தர்கள் கூறுவனவற்றை நெறிகள் எனக் கருதாது, நாள் தோறும், சென்று வணங்குவீராக. மானை ஏந்திய கையினனும், கப்பல்கள் ஓடும் கட–டைப் பொங்கி எழுந்த விடத்தை உண்டவனும், தளிர் போலும் மேனியளாகிய உமையம்மையை ஒருகூறாக உடையவனுமாகிய சிவபிரான் மேவியுள்ளது திருமுதுகுன்றமாகும். அத்திருத் தலத்தை வணங்குவீராக. |
| 579. மொய்த்துவானோர் பல்கணங்கள் வணங்குமு துகுன்றைப்<br>பித்தர்வேடம் பெருமையென்னும் பிரமபுரத் தலைவன்<br>* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * | தேவர் கணங்கள் பலவும் நிறைந்து செறிந்து வணங்கும் திருமுதுகுன்றத்திறைவனை, பித்தர் போலத் தன் வயம் இழந்து திரிவாரின் தவவேடம் பெருமை தருவதாகும் எனக் கருதும் பிரமபுரத் தலைவனான ஞானசம்பந்தன்..... |

## 54. திருவோத்தூர்

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 54**

| | |
|---|---|
| 580. பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி<br>ஏத்தா தாரில்லை யெண்ணுங்கால்<br>ஓத்தூர் மேய வொளிமழு வாளங்கைக்<br>கூத்தீ ரும்ம குணங்களே. | திருஓத்தூரில் அழகிய கையில் ஒளி பொருந்திய மழுவாகிய வாளை ஏந்தியவராய் எழுந்தருளிய கூத்தரே, ஆராயுமிடத்து பூசைக்குரிய நறுமலர்களைத் தேர்ந்து பறித்தும் ஏனைய உபகரணங்களைச் சேகரித்துக் கொண்டு, உம் குணநலங்களைப் போற்றி பொன் போன்ற திருவடிகளை ஏத்தி, வணங்காதார் இல்லை. |

| | |
|---|---|
| 581. இடையீர் போகா விளமுலை யாளையோர்<br>புடையீ ரேபுள்ளி மானுரி<br>உடையீ ரேயும்மை யேத்துது மோத்தூர்ச்<br>சடையீ ரேயும தாளே. | திருஒத்தூரில் சடைமுடியோடு விளங்கும் இறைவரே, ஈர்க்கு இடையில் செல்லாத நெருக்கமான இளமுலைகளை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவரே, புள்ளிமான் தோலை ஆடையாக உடுத்தியவரே, உம் திருவடிகளை நாங்கள் வணங்குகிறோம். |
| 582. உள்வேர் போல நொடிமையி னார்திறம்<br>கொள்வீ ரல்குலோர் கோவணம்<br>ஒள்வா ழைக்கனி தேன்சொரி யோத்தூர்க்<br>கள்வீ ரேயும காதலே. | ஒளிசிறந்த வாழைக் கனிகள் தேன் போன்ற சாற்றைச் சொரியும் திருவோத்தூரில் அரையிற் கோவணம் உடுத்தியவராய் விளங்கும் கள்வரே, உம் காதல் மிக நன்று. பொய் பேசும் இயல்பினராய் அடியார்களை நினைப்பவரைப் போலக் காட்டி அவரை ஏற்றுக் கொள்வீர். |
| 583. தோட்டீ ரேதுத்தி யைந்தலை நாகத்தை<br>ஆட்டீ ரேயடி யார்வினை<br>ஓட்டீ ரேயும்மை யேத்துது மோத்தூர்<br>நாட்டீ ரேயரு ணல்குமே. | செங்காந்தட்பூவை அணிந்தவரே! படப்பொறிகளை உடைய ஐந்து தலை நாகத்தை ஆட்டுபவரே! அடியவர் வினைகளை ஓட்டுபவரே! திருவோத்தூர் நாட்டில் எழுந்தருளியவரே! உம்மைத் துதிக்கின்றோம்: அருள்புரிவீராக. |
| 584. குழையார் காதீர் கொடுமழு வாட்படை<br>உழையாள் வீர்திரு வோத்தூர்<br>பிழையா வண்ணங்கள் பாடிநின் றாடுவார்<br>அழையா மேயரு ணல்குமே. | குழையணிந்த காதினை உடையவரே, கொடிய மழு என்னும் வாட்படையை ஒருபாலுள்ள கரத்தில் ஏந்தி ஆள்பவரே, திருவோத்தூரில் பிழை நேராதபடி வண்ணப்பாடல்கள் பல பாடி நின்று ஆடும் அடியார்க்கு அழையாமலே வந்து அருள் நல்குவீராக. |
| 585. மிக்கார் வந்து விரும்பிப் ப–யிடத்<br>தக்கார் தம்மக்க ளீரென்<br>றுட்கா தாருள ரோதிரு வோத்தூர்<br>நக்கீ ரேயரு ணல்குமே. | திருவோத்தூரில் மகிழ்ந்து உறையும் இறைவரே, நீர் ப– கொள்ள வருங்காலத்து, உம் திருமுன் அன்பு மிக்கவராய் விரும்பி வந்து ப–யிடுதற்குத் தம் மக்களுள் மகளிரை அனுப்புதற்கு அஞ்சாத தந்தை தாயர் உளரோ? எவ்வாறேனும் ஆக, அவர் தமக்கு அருள் நல்குவீராக. |
| 586. தாதார் கொன்றை தயங்கு முடியுடை<br>நாதா வென்று நலம்புகழ்ந்<br>தோதா தாருள ரோதிரு வோத்தூர்<br>ஆதீ ரேயரு ணல்குமே. | திருவோத்தூரில் முதற்பொருளாக விளங்குபவரே மகரந்தம் பொருந்திய கொன்றை மலர் விளங்கும் திருமுடியை உடைய தலைவரே! என்றழைத்து உமது அழகினைப் புகழ்ந்து ஓதாதவர் உளரோ? அருள் நல்குவீராக. |
| 587. என்றா னிம்மலை யென்ற வரக்கனை<br>வென்றார் போலும் விர–னால்<br>ஒன்றார் மும்மதி லெய்தவ னோத்தூர்<br>என்றார் மேல்வினை யேகுமே. | இக்கயிலைமலை எம்மாத்திரம் என்று கூறிய இராவணனைக் கால்விரலால் வென்றவரும், தம்மோடு மனம் பொருந்தாத திரிபுரத்தசுரர்தம் மும்மதில்களைக் கணையால் எய்து அழித்தவருமாகிய சிவபிரானது திருவோத்தூர் என்று ஊர்ப் பெயரைச் சொன்ன அளவில் சொல்–ய அவர்மேல் உள்ள வினைகள் போகும். |

| | |
|---|---|
| 588. நன்றா நான்மறை யானொடு மாலுமாய்ச்<br>சென்றார் போலுந் திசையெலாம்<br>ஒன்றா யொள்ளெரி யாய்மிக வோத்தூர்<br>நின்றீ ரேயுமை நேடியே. | திருவோத்தூரில் விளங்கும் இறைவரே! நல்லன செய்யும் நான்கு வேதங்களை ஓதுபவனாகிய பிரமன், திருமால் ஆகியோர் எரியுருவாய் நீர் ஒன்றுபட்டுத்தோன்றவும், அறியாராய் திசையனைத்தும் தேடித் திரிந்து எய்த்தனர் அவர்தம் அறிவுநிலை யாதோ? |
| 589. கார மண்க–ங் கத்துவ ராடையர்<br>தேரர் சொல்லவை தேறன்மின்<br>ஓரம் பாலெயி லெய்தவ னோத்தூர்ச்<br>சீர வன்கழல் சேர்மினே. | கரிய நிறத்தவராகிய சமணர்களும், க–ங்க நாட்டுத் துவர் ஏற்றிய ஆடையை அணிச்த புத்தத் துறவியரும் கூறும் பொய் மொழிகளை நம்பாதீர், முப்புரங்களை ஓரம்பினால் எய்து அழித்தவனாகிய, திருவோத்தூரில் விளங்கும் சிறப்பு மிக்க சிவபிரானின் கழல்களைச் சேர்வீர்களாக. |
| 590. குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்<br>அரும்பு கொன்றை யடிகளைப்<br>பெரும்பு க–யுண் ஞானசம்பந் தன்சொல்<br>விரும்பு வார்வினை வீடே. | திருவோத்தூரில், ஆண் பனைகள் குரும்பைக் குலைகளை ஈனும் அற்புதத்தைச் செய்தருளிய கொன்றை அரும்பும் சடைமுடி உடைய இறைவரைப் பெருமை மிக்க திருப்புக– என்னும் பெயருடைய சீகாழிப் பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் போற்றியுரைத்த இப்பாமாலையை விரும்பும் அன்பர்களின் வினைகள் அழியும். |

## 55. திருமாற்பேறு

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 55**

| | |
|---|---|
| 591. ஊறி யார்தரு நஞ்சினை யுண்டுமை<br>நீறு சேர்திரு மேனியர்<br>சேறு சேர்வயற் றென்றிரு மாற்பேற்றின்<br>மாறி லாமணி கண்டரே. | சேற்று வளம் நிறைந்த வயல்கள் சூழ்ந்த அழகிய திருமாற்பேற்றி ஒப்பற்ற நீலமணி போன்ற கண்டத்தை உடைய இறைவர், கட–டத்தே ஊறிப் பொருந்திவந்த நஞ்சினை உண்டு உமையம்மையோடு கூடியவராய்த் திருநீறு பூசிய திருமேனியராய் விளங்குகிறார். |
| 592. தொடையார் மாமலர் கொண்டிரு போதும்மை<br>அடைவா ராமடி கள்ளென<br>மடையார் நீர்மல்கு மன்னிய மாற்பே<br>றுடையீ ரேயுமை யுள்கியே. | வாய்க்கால் மடைகளில் நீர் நிறைந்து விளங்கும் நிலையான திருமாற்பேற்றைத் தமது இருப்பிடமாக உடையவரே, உம்மை நினைந்து சிறந்த மாலைகளைத் தொடுத்து ஏந்திய கையினராய்க் காலை, மாலை இருபோதும் உம்மைத் தலைவராக எண்ணி அடியவர் அடைகின்றனர். |
| 593. பையா ரும்மர வங்கொடு வாட்டிய<br>கையா னென்று வணங்குவர்<br>மையார் நஞ்சுண்டு மாற்பேற் றிருக்கின்ற<br>ஐயா நின்னடி யார்களே. | கருநிறம் பொருந்திய நஞ்சை உண்டு தேவர்களைக் காத்தருளிய நீலகண்டராய்த் திருமாற்பேற்றில் வீற்றிருக்கின்ற தலைவரே, உம் அடியவர்கள் படம் பொருந்திய பாம்பைப் பிடித்து ஆட்டும் கைகளை உடையவர் என்று உம்மை வணங்குவார்கள். |

| | |
|---|---|
| 594. சால மாமலர் கொண்டு சரணென்று<br>மேலை யார்கள் விரும்புவர்<br>மா– னார்வழி பாடுசெய் மாற்பேற்று<br>நீல மார்கண்ட நின்னையே. | திருமால் வழிபாடு செய்து அருள் பெற்றதால் திருமாற்பேறு என வழங்கும் இத்தலத்தில் விளங்கும் நீலநிறம் பொருந்திய கண்டத்தை உடையவரே, நும்மை மேன்மை மிக்க பெரியோர்கள் மிகுதியான நறுமலர்களைக் கொண்டு அர்ச்சித்து உம்மையே சரண் என்று விரும்பி வழிபடுவர். |
| 595. மாறி லாமணி யேயென்று வானவர்<br>ஏற வேமிக வேத்துவர்<br>கூற னேகுல வுந்திரு மாற்பேற்றின்<br>நீற னேயென்று நின்னையே. | உமையம்மையை ஒரு கூற்றாகக் கொண்டவரே, விளங்கும் திருமாற்பேற்றில் வெண்ணீறு பூசி விளங்குபவரே, ஒப்பற்ற மாணிக்கமணியே என்று உம்மையே வானவர் மிகமிக ஏத்தி மகிழ்வர். |
| 596. உரையா தாரில்லை யொன்றுநின் றன்மையைப்<br>பரவா தாரில்லை நாள்களும்<br>திரையார் பா–யின் றென்கரை மாற்பேற்<br>றரையா னேயரு ளல்கிடே. | அலைகள் பொருந்திய பா–யாற்றின் தென்கரையில் விளங்கும் திருமாற்பேற்றில் விளங்கும் அரசனே, பொருந்திய நின் பெருந்தன்மையை வியந்து உரையாதார் இல்லை. நாள்தோறும் உன் பெருமைகளைப் பரவாதவர் இல்லை. அருள் நல்குவீராக. |
| 597. அரச ளிக்கு மரக்க னவன்றனை<br>உரைகெ டுத்தவ னொல்கிட<br>வரமி குத்தவெம் மாற்பேற் றடிகளைப்<br>பரவி டக்கெடும் பாவமே. | இலங்கை நாட்டை ஆளும் இராவணனின் புகழை மங்கச் செய்து, பின் அவன் பிழை உணர்ந்து வேண்டிய அளவில் அவனுக்கு வரங்கள் பலவற்றையும் மிகுதியாக அளிந்தருளிய எமது திரு மாற்பேற்று அடிகளைப் பரவப் பாவம் கெடும். |
| 598. இருவர் தேவருந் தேடித் திரிந்தினி<br>ஒருவ ராலறி வொண்ணிலன்<br>மருவு நீள்கழன் மாற்பேற் றடிகளைப்<br>பரவு வார்வினை பாறுமே. | திருமால் பிரமன் ஆகிய இருவரும் அடிமுடி காணத்தேடித் திரிந்தும் ஒருவராலும் அறிய ஒண்ணாத இயல்பினனாகிய, திருமாற்பேற்றுள் விளங்கும் சிவபிரானுடைய பெருமை விரிந்த திருவடிகளைப் பரவித் துதிப்பார் வினைகள் கெடும். |
| 599. தூசு போர்த்துழல் வார்கையிற் றுற்றுணும்<br>நீசர் தம்முரை கொள்ளெலும்<br>தேச மல்கிய தென்றிரு மாற்பேற்றின்<br>ஈச னென்றெடுத் தேத்துமே. | ஆடையை மேனிமேற் போர்த்து உழல்வோரும், கைகளில் உணவை ஏற்று உண்ணும் இழிந்தோருமாகிய புத்த, சமணர்களின் உரைகளை மெய்யெனக் கொள்ளாதீர். புகழ் பொருந்திய அழகிய திருமாற்பேற்றுள் விளங்கும் ஈசன் என்று பெருமானைப் புகழ்ந்து போற்றுமின். |
| 600. மன்னி மாலொடு சோமன் பணிசெயும்<br>மன்னு மாற்பேற் றடிகளை<br>மன்னு காழியுண் ஞானசம் பந்தன்சொல்<br>பன்ன வேவினை பாறுமே. | திருமாலும் சந்திரனும் தங்கியிருந்து பணி செய்து வழிபட்ட நிலைபேறுடைய திருமாற்பேற்றுள் விளங்கும் இறைவனை நிலைத்த காழி மாநகருள் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய இத்திருப்பதிகத்தை ஓதினால் வினைகள் கெடும். |

# 56. திருப்பாற்றுறை

பண் : பழந்தக்கராகம் | முதல் திருமுறை பதிக எண் : 56

| | |
|---|---|
| 601. காரார் கொன்றை கலந்த முடியினர்<br>சீரார் சிந்தை செலச்செய்தார்<br>பாரார் நாளும் பரவிய பாற்றுறை<br>யாரா ராதி முதல்வரே. | உலக மக்கள் நாள்தோறும் வந்து வழிபட்டுப் போற்றும், ஆத்தி மலர் அணிந்த திருப்பாற்றுறையில் விளங்கும் ஆதி முதல்வராகிய பெருமானார் கார்காலத்தே மலரும் கொன்றை மலர் மாலை சூடிய திருமுடியினராய் அன்பு கனிந்த நம் சிந்தையைத் தம்மிடமே செல்லச் செய்தார். |
| 602. நல்லா ரும்மவர் தீய ரெனப்படும்<br>சொல்லார் நன்மலர் சூடினார்<br>பல்லார் வெண்டலைச் செல்வரெம் பாற்றுறை<br>எல்லா ருந்தொழு மீசரே. | பற்கள் பொருந்திய வெண்மையான தலையோட்டை அணிந்தவரும், எல்லாராலும் தொழப்படுபவருமாகிய எம் திருப்பாற்றுறைச் செல்வராகிய ஈசர், நல்லவருக்கு நல்லவராவர். தீயை ஏந்தியதால் தீயர் எனவும் படுவார். அவர் நல்ல மலரைச் சூடியவர். |
| 603. விண்ணார் திங்கள் விளங்கு நுத–னர்<br>எண்ணார் வந்தெ னெழில்கொண்டார்<br>பண்ணார் வண்டினம் பாடல்செய் பாற்றுறை<br>உண்ணா ணாளு முறைவரே. | இயற்கையில் பண்ணிசை போல முரலும் வண்டினங்கள் பாடும் திருப்பாற்றுறையுள் எக்காலத்தும் உறைபவரும், விண்ணகத்தே தவழும் திங்கள் விளங்கும் திருமுடியினரும் ஆகிய இறைவர் என் இதயத்தில் இருப்பவராய் வந்து என் எழில்நலம் அனைத்தையும் கவர்ந்தார். |
| 604. பூவுந் திங்கள் புனைந்த முடியினர்<br>ஏவி னல்லா ரெயிலெய்தார்<br>பாவந் தீர்புனன் மல்கிய பாற்றுறை<br>ஓவென் சிந்தை யொருவரே. | மூழ்கியவருடைய பாவங்களைப் போக்கும் தீர்த்த நலம் உடைய திருப்பாற்றுறையுள் மலர்களையும் பிறைமதியையும் புனைந்த திருமுடியினராய்க் கணையொன்றால் பகைவராய் வந்தடைந்த அசுரர்களின் முப்புரங்களை அழித்த இறைவரே என் மனம் பிறவற்றில் செல்லாது ஓவுதல் செய்த ஒருவராவர். |
| 605. மாகந் தோய்மதி சூடி மகிழ்ந்தென்<br>தாகம் பொன்னிற மாக்கினார்<br>பாகம் பெண்ணு முடையவர் பாற்றுறை<br>நாகம் பூண்ட நயவரே. | தம் திருமேனியின் ஒரு பாதியாய்ப் பெண்ணைக் கொண்டுள்ளவரும், நாகத்தை அணிகலனாகப் பூண்டவரும் ஆகிய, திருப்பாற்றுறை இறைவர், வானகத்தே தோயும் பிறைமதியை முடியிற் சூடி மகிழ்ந்து வந்து எனது உடலைப் பொன்னிறமான பசலை பூக்கச் செய்தவராவார். |
| 606. போது பொன்றிகழ் கொன்றை புனைமுடி<br>நாதர் வந்தெ னலங்கொண்டார்<br>பாதந் தொண்டர் பரவிய பாற்றுறை<br>வேத மோதும் விகிர்தரே. | தொண்டர்கள் தம் திருவடிகளைப் பரவத் திருப்பாற்றுறையுள் விளங்கும் வேதங்களை அருளிய விகிர்தரும், பொன்போல் திகழும் கொன்றை மலர்களைப் புனைந்த திருமுடியினை உடைய தலைவருமாகிய சிவபிரானாரே என்பால் வந்து என் அழகினைக் கவர்ந்தவராவார். |

| | |
|---|---|
| 607. வாடல் வெண்டலை சூடினர் மால்விடை<br>கோடல் செய்த குறிப்பினார்<br>பாடல் வண்டினம் பண்செயும் பாற்றுறை<br>ஆட னாக மசைத்தாரே. | பாடல்கள் பலவற்றைப் பாடும் வண்டினங்கள் சிறந்த பண்களை மிழற்றும் திருப்பாற்றுறையுள், ஆடுத-ல் வல்ல நாகப்பாம்பைத் திருமேனியில் பல இடங்களிலும் கட்டியுள்ள இறைவர், உலர்ந்த வெள்ளிய தலையோடுகளை மாலையாச் சூடியவராவர். பெரிய இடபத்தின் மேல் ஏறி வந்து என் அழகைக் கவர்ந்து செல்லும் குறிப்பினர். |
| 608. வெவ்வ மேனிய ராய்வெள்ளை நீற்றினர்<br>எவ்வஞ் செய்தெ னெழில்கொண்டார்<br>பவ்வ நஞ்சடை கண்டரெம் பாற்றுறை<br>மவ்வல் சூடிய மைந்தரே. | கட-டைத் தோன்றிய நஞ்சடைந்த கண்டரும், முல்லை மலர் சூடிய மைந்தரும் ஆகிய எம் திருப்பாற்றுறை இறைவர் விரும்பத்தக்க திருமேனியராய், வெண்மையான திருவெண்ணீறு அணிந்தவராய் வந்து, என் எழிலைக் கொண்டு பின் பிரிவுத்துன்பம் தந்தவராவர். |
| 609. ஏன மன்னமு மானவ ருக்கெரி<br>ஆன வண்ணத்தெ மண்ணலார்<br>பான லம்மலர் விம்மிய பாற்றுறை<br>வான வெண்பிறை மைந்தரே. | நீலோற்பல மலர்கள் நிறைந்த நீர் நிலைகளோடு கூடிய திருப்பாற்றுறையுள் வானகத்தே விளங்கும் வெண்மையான பிறைமதியைச் சூடி எழுந்தருளியுள்ள மைந்தராகிய இறைவர், பன்றியும், அன்னமுமாய் அடிமுடி தேடிய திருமால், பிரமன் ஆகியோருக்கு அழலுருவமாய் ஓங்கி நின்ற அண்ணலார் ஆவார். |
| 610. வெந்த நீற்றினர் வே-னர் நூ-னர்<br>வந்தெ னன்னலம் வௌவினார்<br>பைந்தண் மாதவி சூழ்தரு பாற்றுறை<br>மைந்தர் தாமோர் மணாளரே. | பசுமையான குளிர்ந்த குருக்கத்திக் கொடிகள் சூழ்ந்துள்ள திருப்பாற்றுறையுள் எழுந்தருளியுள்ள மைந்தராகிய இறைவர், மேனி மீது வெந்த நீறு பூசியவராய், கையில் வேலேந்தியவராய், மார்பில் பூணூல் அணிந்தவராய் வந்து என் அழகினை வவ்விச் சென்றார். அவர் முன்னரே மலைமகளை மணந்த மணாளர் ஆவார். |
| 611. பத்தர் மன்னிய பாற்றுறை மேவிய<br>பத்து நூறு பெயரனைப்<br>பத்தன் ஞானசம் பந்தன தின்றமிழ்<br>பத்தும் பாடிப் பரவுமே. | அடியவர்கள் நிறைந்துள்ள திருப்பாற்றுறையுள் எழுந்தருளிய ஆயிரம் திருநாமங்களையுடைய இறைவனை பக்தனாகிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய இனிய தமிழ்ப் பாடல்களாகிய இப்பத்தையும் பாடிப் பரவுமின். |

## 57. திருவேற்காடு

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 57**

| | |
|---|---|
| 612. ஒள்ளி துள்ளக் கதிக்கா மிவனொளி<br>வெள்ளி யானுறை வேற்காடு<br>உள்ளி யாருயர்ந் தாரிவ் வுலகினில்<br>தெள்ளி யாரவர் தேவரே. | மிகவும் சிறந்த மெய்ப்பொருளை அன்போடு எண்ணினால் அவ்வெண்ணம் நற்கதிக்கு வாயிலாம். அத்தகைய மெய்ப்பொருளாய் வெண்மையான ஒளி வடிவினனாய் திருவேற்காட்டில் எழுந்தருளியுள்ள இவ்விறைவனை நினைந்தவர்கள் இவ்வுலகினில் உயர்ந்தவர் ஆவர். அவனைக் கண்டு தெளிந்த அவர்கள் தேவர்களாவர். |

| | |
|---|---|
| 613. ஆட னாக மசைத்தள வில்லதோர்<br>வேடங் கொண்டவன் வேற்காடு<br>பாடி யும்பணிந் தாரிவ் வுலகினில்<br>சேட ராகிய செல்வரே. | ஆடுதற்குரிய பாம்பினை இடையிற் கட்டிய, அளவற்ற பல்வேறு வடிவங்களைக் கொண்டருளிய திருவேற்காட்டு இறைவனைப் பாடிப் பணிந்தவர்கள், இவ்வுலகினில் பெருமை பொருந்திய செல்வர்கள் ஆவர். |
| 614. பூதம் பாடப் புறங்காட் டிடையாடி<br>வேத வித்தகன் வேற்காடு<br>போதுஞ் சாந்தும் புகையுங் கொடுத்தவர்க்<br>கேத மெய்துத –ல்லையே. | பூதகணங்கள் பாட, சுடுகாட்டின்கண் நடனம் ஆடி, வேதங்களை அருளிய வித்தகனாக விளங்கும் திருவேற்காட்டு இறைவற்கு மலர்களும், சந்தனமும், நறும்புகை தரும் பொருள்களும், கொடுத்தவர்களுக்குத் துன்பங்கள் வருதல் இல்லையாம். |
| 615. ஆழ்க டலெனக் கங்கைக ரந்தவன்<br>வீழ்ச டையினன் வேற்காடு<br>தாழ்வு டைமனத் தாற்பணிந் தேத்திடப்<br>பாழ் படும்மவர் பாவமே. | ஆழமான கடல் என்று சொல்லத்தக்க கங்கை நதியை மறைத்துக்கொண்ட, விழுது போன்ற சடைமுடியினை உடைய திருவேற்காட்டு இறைவனைப் பணிவான மனத்தோடு வணங்கித் துதிப்பவர்களின் பாவங்கள் அழிந்தொழியும். |
| 616. காட்டி னாலு மயர்த்திடக் காலனை<br>வீட்டி னானுறை வேற்காடு<br>பாட்டி னாற்பணிந் தேத்திட வல்லவர்<br>ஓட்டி னார்வினை யொல்லையே. | மார்க்கண்டேயர், சிவனே முழுமுதல்வன் எனக் காட்டினாலும், அதனை உணராது மயங்கி அவர் உயிரைக் கவர வந்த அக்காலனை அழித்த சிவபிரான் உறையும் திருவேற்காட்டைப் பாடல்கள் பாடிப் பணிந்து வழிபட வல்லவர் தம் வினைகளை விரைவில் ஓட்டியவர் ஆவர். |
| 617. தோ– னாலுடை மேவவல் லான்சுடர்<br>வே– னானுறை வேற்காடு<br>நூ– னாற்பணிந் தேத்திட வல்லவர்<br>மா– னார்வினை மாயுமே. | தான் கட்டியும் போர்த்தும் உள்ள ஆடைகளைத் தோ–னால் அமைந்தனவாகக் கொண்டுள்ள இறைவன் ஒளி பொருந்திய வேலோடு உறையும் திருவேற்காட்டை, ஆகம நூல்களில் விதித்தவாறு வழிபட்டுத் துதிக்க வல்லவர்களாகிய ஆன்மாக்களைப் பற்றிய மயங்கச் செய்யும் வினைகள், மாய்ந்தொழியும். |
| 618. மல்லன் மும்மதின் மாய்தர வெய்ததோர்<br>வில்– னானுறை வேற்காடு<br>சொல்ல வல்ல சுருங்கா மனத்தவர்<br>செல்ல வல்லவர் தீர்க்கமே. | வளமை பொருந்திய முப்புரங்களும் அழிந்தொழியுமாறு கணை எய்த ஒப்பற்ற மேரு வில்லை ஏந்திய சிவபிரான் உறையும் திருவேற்காட்டைப் புகழ்ந்து சொல்ல வல்லவர்கள் சுருங்கா மனத்தினராவர். அங்குச் சென்று தரிசிக்க வல்லவர் நீண்ட ஆயுள் பெறுவர். |
| 619. மூரல் வெண்மதி சூடுமுடியுடை<br>வீரன் மேவிய வேற்காடு<br>வார மாய்வழி பாடுநி னைந்தவர்<br>சேர்வர் செய்கழல் திண்ணமே. | மிக இளைய வெண்மையான பிறைமதியைச் சூடும் திருமுடியை உடைய வீரனாகிய சிவபிரான் எழுந்தருளியுள்ள திருவேற்காட்டை, அன்போடு வழிபட நினைந்தவர், அப்பெருமானின் சிவந்த திருவடிகளைத் திண்ணமாகச் சேர்வர். |

| | |
|---|---|
| 620. பரக்கி னார்படு வெண்டலை யிற்ப–<br>விரக்கி னானுறை வேற்காட்டூர்<br>அரக்க னாண்மை யடரப்பட் டானிறை<br>நெருக்கி னானை நினைமினே. | பிரமனின் தலையோட்டில் ப–யேற்கின்ற சமர்த்தனாகிய சிவபிரான் உறையும் திருவேற்காட்டில் அரக்கன் ஆகிய இராவணனின் ஆண்மையை அடர்த்துக் கால்விரலால் சிறிதே ஊன்றி நெருக்கிய அவனை நினைமின்கள். |
| 621. மாறி லாமல ரானொடு மாலவன்<br>வேற லானுறை வேற்காடு<br>ஈறி லாமொழி யேமொழி யாவெழில்<br>கூறி னார்க்கில்லை குற்றமே. | ஒப்பற்ற தாமரை மலர் மேல் உறையும் நான்முகன், திருமால் ஆகியவர்களை வெற்றி கொள்வானாகிய சிவன் உறையும் திருவேற்காட்டு இறைவனைப் பற்றிய மொழியை ஈறிலா மொழியாக, அப்பெருமானுடைய அழகிய நலங்களைக் கூறுபவர்களுக்குக் குற்றமில்லை. |
| 622. விண்ட மாம்பொழில் சூழ்திரு வேற்காடு<br>கண்டு நம்பன் கழல்பேணிச்<br>சண்பை ஞானசம் பந்தன் செந்தமிழ்<br>கொண்டு பாடக் குணமாமே. | விரிந்த மலர்களையுடைய மாஞ்சோலைகள் சூழ்ந்த திருவேற்காட்டை அடைந்து, அங்கெழுந்தருளியுள்ள இறைவன் திருவடிகளைப் பரவி, சீகாழிப் பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் உரைத்த இப்பதிகச் செந்தமிழ் கொண்டு பாடிப் போற்றுவார்க்கு நன்மைகள் விளையும். |

## 58. திருக்கரவீரம்

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 58**

| | |
|---|---|
| 623. அரியு நம்வினை யுள்ளன வாசற<br>வரிகொண் மாமணி போற்கண்டம்<br>கரிய வன்றிக முங்கர வீரத்தெம்<br>பெரிய வன்கழல் பேணவே. | வரிகள் அமைந்த சிறந்த நீலமணி போலக் கண்டம் கறுத்தவனாய், விளங்கும் திருக்கர வீரத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானாகிய இறைவன் திருவடிகளைத் துதித்தால் நம் வினைகளாக உள்ளன யாவும் முற்றிலும் கழியும். |
| 624. தங்கு மோவினை தாழ்சடை மேலவன்<br>திங்க ளோடுடன் சூடிய<br>கங்கை யான்றிக முங்கர வீரத்தெம்<br>சங்க ரன்கழல் சாரவே. | தாழ்ந்து தொங்கும் சடைமுடிகளை உடைய உயர்ந்தோனாய் இளம்பிறையோடு கங்கையை உடனாகச் சூடிய, திருக்கர வீரத்தில் விளங்கும் சங்கரன் திருவடிகளை வழிபட்டால் நம்மைப் பற்றிய வினைகள் தங்கா. |
| 625. ஏதம் வந்தடை யாவினி நல்லன<br>பூதம் பல்படை யாக்கிய<br>காத லன்றிக முங்கர வீரத்தெம்<br>நாதன் பாத நணுகவே. | நல்லவனாகிய பூத கணங்களைப் பல்வகைப் படைகளாக அமைத்துக் கொண்டுள்ள அன்பு வடிவினனும் விளங்கும் திருக்கர வீரத்தில் எழுந்தருளிய எம் நாதனுமான சிவபெருமான் திருவடிகளை அடைவோரைத் துன்பங்கள் வந்தடைய மாட்டா. |
| 626. பறையு நம்வினை யுள்ளன பாழ்பட<br>மறையு மாமணி போற்கண்டம்<br>கறைய வன்றிக முங்கர வீரத்தெம்<br>இறைய வன்கழ லேத்தவே. | நீலமணி போலக் கண்டத்தில் கறையுடையவனும், விளங்கும் திருக்கரவீரத்தில் உறையும் எம் இறைவனுமாகிய பெருமான் திருவடிகளை ஏத்த நம் வினைகள் நீங்கும். சஞ்சிதமாக உள்ளவும் மறையும். |

| | |
|---|---|
| 627. பண்ணி னார்மறை பாடல னாடலன்<br>விண்ணி னார்மதி லெய்தமுக்<br>கண்ணி னானுறை யுங்கர வீரத்தை<br>நண்ணு வார்வினை நாசமே. | சத்த இசையமைப்புடன் கூடிய வேதங்களைப் பாடியும் ஆடியும் மகிழ்பவரும், வானகத்தில் சஞ்சரித்த மும்மதில்களையும் எய்தழித்த மூன்றாம் கண்ணை உடையவரும் ஆகிய சிவபிரானார் எழுந்தருளிய திருக்கரவீரத்தை அடைவார் வினைகள் நாசமாம். |
| 628. நிழ– னார்மதி சூடிய நீள்சடை<br>அழ– னாரழ லேந்திய<br>கழ– னாருறை யுங்கர வீரத்தைத்<br>தொழவல் லார்க்கில்லை துக்கமே. | ஒளி பொருந்திய பிறைமதியைச் சூடிய நீண்ட சடைமுடியினரும், அழலைக் கையில் ஏந்தியவரும் வீரக்கழலை அணிந்தவரும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளிய திருக்கரவீரத்தைத் தொழ வல்லவர்கட்குத் துக்கம் இல்லை. |
| 629. வண்டர் மும்மதின் மாய்தர வெய்தவன்<br>அண்ட னாரழல் போலொளிர்<br>கண்ட னாருறை யுங்கரவீ ரத்துத்<br>தொண்டர் மேற்றுயர் தூரமே. | தீயவர்களாகிய அசுரர்களின் முப்புரங்களும் அழிந்தொழியுமாறு கணை எய்தவரும், அனைத்து உலகங்களின் வடிவாக விளங்குபவரும், விடம் போல ஒளிவிடும் கண்டத்தை உடையவரும் ஆகிய சிவபிரான் எழுந்தருளியுள்ள திருக்கரவீரத்துத் தொண்டர்களைப் பற்றிய துயரங்கள் தூர விலகும். அழல் – தீப்போன்ற கொடிய விடம். |
| 630. புன– லங்கையர் கோன்முடி பத்திறச்<br>சினவ லாண்மை செகுத்தவன்<br>கனல வன்னுறை கின்ற கரவீரம்<br>எனவல் லார்க்கிட ரில்லையே. | கடலால் சூழப்பட்ட இலங்கை மக்களின் தலைவனாகிய இராவணனின் தலைகள் பத்தும் நெரியுமாறு செய்து, கோபத்தோடு கூடிய அவனது ஆண்மையை அழித்தவனாய், எரிபோலும் உருவினன் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய கரவீரம் என்று சொல்ல வல்லார்க்கு இடர் இல்லை. |
| 631. வெள்ளத் தாமரை யானொடு மாலுமாய்த்<br>தெள்ளத் தீத்திர ளாகிய<br>கள்ளத் தானுறை யுங்கர வீரத்தை<br>உள்ளத் தான்வினை யோயுமே. | நீரில் தோன்றும் தாமரை மலர் மேல் உறையும் நான்முகனோடு திருமாலும் உண்மையைத் தெளியுமாறு ஒளிப் பிழம்பாகத் தோன்றி அவர்கள் அறியாவாறு கள்ளம் செய்தவனாகிய சிவபிரான் உறையும் திருக்கரவீரத்தை நினைந்து போற்ற வினைகள் நீங்கும். |
| 632. செடிய மண்ணொடு சீவரத் தாரவர்<br>கொடிய வெவ்வுரை கொள்ளேன்மின்<br>கடிய வன்னுறை கின்ற கரவீரத்<br>தடிய வர்க்கில்லை யல்லலே. | முடைநாற்றம் வீசும் அமணர்களோடு காவியாடை அணிந்து திரியும் புத்தர்கள் ஆகியோர்தம் கொடிய வெம்மையான உரைகளை மெய்யெனக் கொள்ளாதீர். அனைத்துலகையும் காத்தருள் கின்றவனாகிய சிவபிரான் உறைகின்ற திருக்கர வீரத்து அடியவர்க்கு அல்லல் இல்லை. |

| | |
|---|---|
| **633.** வீடி லான்விளங் குங்கர வீரத்தெம்<br>சேடன் மேற்கசி வாற்றமிழ்<br>நாடு ஞானசம் பந்தன சொல்–வை<br>பாடு வார்க்கில்லை பாவமே. | அழிவில்லாதவனாக விளங்கும் திருக்கரவீரத்துப் பெரியோன் மேல் அன்புக் கசிவால் தமிழை விரும்பும் ஞானசம்பந்தன் சொல்–ய இத்திருப்பதிகப் பாடல்களாகிய இவற்றைப் பாடுவோர்க்குப் பாவம் இல்லை. |

## 59. திருத்தூங்கானைமாடம்

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 59**

| | |
|---|---|
| **634.** ஒடுங்கும் பிணிபிறவி கேடென்றிவை யுடைத்தாய<br>வாழ்க்கை யொழியத்தவம்<br>அடங்கும் மிடங்கருதி நின்றீரெல்லாம் அடிக ளடிநிழற்கீ<br>ழாளாம்வண்ணம்<br>கிடங்கும் மதிலுஞ் சுலாவியெங்குங் கெழுமனைக டோறு<br>மறையின்னொ–<br>தொடங்குங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந்<br>தொழுமின்களே. | வெளிப்படுதற்குரிய காலம் வருந்துணையும் ஒடுங்கியிருக்கும் நோய் இனிவரும் பிறப்புகள், துன்பங்கள் புரிதற்குரிய இவைகளை உடைய இவ்வாழ்க்கை நீங்கத்தவம் புரிதற்குரிய இடத்தை விரும்பி நிற்கும் நீவிர் எல்லீரும் அகழும் மதிலும் சூழ்ந்து எல்லா இடங்களிலும் உள்ள வீடுகள்தோறும் வேதங்களின் ஒ–கள் ஒ–க்கும் கடந்தை என்னும் ஊரில் உறையும் அடிகளாகிய சிவபெருமானின் அடிநிழ–ன்கீழ் அவருக்கு ஆளாகுமாறு அவர் கோயிலாகிய திருத்தூங்கானைமாடம் செல்வீராக. |
| **635.** பிணிநீர சாதல் பிறத்த–வை பிரியப் பிரியாத பேரின்பத்தோ<br>டணிநீர மேலுலக மெய்தலுறில் அறிமின் குறைவில்லை<br>யானேறுடை<br>மணிநீல கண்ட முடையபிரான் மலைமக ளுந்தானு<br>மகிழ்ந்துவாழும்<br>துணிநீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை<br>மாடந் தொழுமின்களே. | பிணிகளின் தன்மையினை உடைய சாதல் பிறத்தல் ஆகியன நீங்க, எக்காலத்தும் நீங்காத பேரின்பத்தோடு கூடிய அழகிய தன்மை வாய்ந்த, மேலுலகங்களை நீவிர் அடைய விரும்பினால், விடையேற்றை ஊர்தியாகவும், கொடியாகவும் உடையவனும், நீலமணி போன்ற கண்டத்தினைக் கொண்டவனும் ஆகிய சிவபிரான் மலைமகளும் தானுமாய் மகிழ்ந்து வாழும், தெளிந்த நீரை உடைய கடந்தையில் ஒளியோடு கூடிய திருத்தூங்கானை மாடக் கோயிலை அறிந்து தொழுவீராக. உங்கட்கு யாதும் குறைவில்லை. |
| **636.** சாநாளும் வாழ்நாளுந் தோற்றமிவை ச–ப்பாய வாழ்க்கை<br>யொழியத்தவம்<br>ஆமா றறியா தலமந்துநீர் அயர்ந்துங் குறைவில்லை<br>யானேறுடைப்<br>பூமா னலங்க –லங்குகொன்றை புனல்பொழிந்த<br>புன்சடையி னானுறையும்<br>தூமாண் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை<br>மாடந் தொழுமின்களே. | இறக்கும் நாளும், வாழும் நாளும், பிறக்கும் நாளும் ஆகிய இவற்றோடு கூடிய ச–ப்பான வாழ்க்கை நீங்கள் செய்யும் தவம் யாதென அறியாது நீவிர் மறந்ததனாலும் யாதும் குறைவில்லை. விடையேற்றை ஊர்தியாகக் கொண்டு மலர்களில் மாட்சிமையுற்று விளங்கும் கொன்றை மாலையும், கங்கையும் தங்கிய சிவந்த சடையினை உடைய சிவபிரான் உறையும் தூய்மையான, மாண்புடைய கடம்பைநகரில் விளங்கும் பெரிய கோயிலாக அமைந்த திருத்தூங்கானை மாடத்தைத் தொழுவீராக. அது ஒன்றே தவத்தின் பயனைத் தரப் போதுமானதாகும். |

| | |
|---|---|
| 637. ஊன்றும் பிணிபிறவி கேடென்றிவை யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம்<br>மான்று மனங்கருதி நின்றீரெல்லாம் மனந்திரிந்து மண்ணின் மயங்காதுநீர்<br>மூன்று மதிலெய்த மூவாச்சிலை முதல்வர்க் கிடம்போலு முகில்தோய்கொடி<br>தோன்றுங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந் தொழுமின்களே. | நிலையான நோய், பிறப்பு, இறப்பு, துன்பம் இவற்றை உடைய வாழ்க்கை நீங்கவும், நிலையான வீடு பேற்றைப் பெறவும், தவம் செய்ய விரும்பி மயங்கி நிற்கும் நீவிர் எல்லீரும் மனம் வேறுபட்டு உலகில் மயங்காது, திரிபுரங்களை எய்த அழியாத வில்லை ஏந்தியவரும், உலகின் தலைவருமாகிய சிவபிரானது இடமாக விளங்குவதாய், வானளாவிய கொடிகள் தோன்றும் கடந்தை நகரில் உள்ள பெரிய கோயிலாக அமைந்த திருத்தூங்கானை மாடத்தைத் தொழுவீர்களாக. |
| 638. மயறீர்மை யில்லாத தோற்றம்மிவை மரணத்தொ டொத்தழியு மாறாதலால்<br>வியறீர மேலுலக மெய்தலுறின் மிக்கொன்றும் வேண்டா விமலனிடம்<br>உயர்தீர வோங்கிய நாமங்களா லோவாது நாளும் அடிபரவல்செய்<br>துயர்தீர கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந் தொழுமின்களே. | மயக்கம் நீங்காத பிறப்பிறப்புக்கள் அழியும் வழிகள் ஆதலால் அவற்றின் நீங்கி மேலுலகம் எய்த நீவிர் விரும்பினால் பெரிதாய முயற்சி எதுவும் வேண்டா. எளிய வழியாகச் சிவபிரானது இடமாக விளங்குவதும் நம் துயர்களைத் தீர்ப்பதும் ஆகிய கடந்தை நகரில் உள்ள பெரிய கோயிலாகிய திருத்தூங்கானை மாடத்தை அடைந்து அப்பெருமானுடைய மிக உயர்ந்த திருப்பெயர்களைக் கூறி இடைவிடாது அவன் திருவடிகளைத் தொழுவீர்களாக. |
| 639. பன்னீர்மை குன்றிச் செவிகேட்பிலா படர்நோக் கிற்கண் பவளந்திற<br>நன்னீர்மை குன்றித் திரைதோலொடு நரைதோன் றுங்கால நமக்காதன்முன்<br>பொன்னீர்மை துன்றப் புறந்தோன்றுநற் புனல்பொதிந்த புன்சடையி னானுறையும்<br>தொன்னீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந் தொழுமின்களே. | புலன் நுகர்ச்சிக்குரிய பல தன்மைகளும் குறைந்து காதுகள் கேளாமல் கண்களில், சென்று பற்றும் பார்வை குன்றிப் பவளம் போன்ற உடல்நிறம் குன்றிச் சுருங்கிய தோலோடு நரை தோன்றும் மூப்புக் காலம் நம்மை வந்து அணுகுமுன் பொன் போன்ற நிறம் பொருந்திய கங்கை தங்கிய செஞ்சடையினையுடைய சிவபிரான் உறையும், பழமையான புகழையுடைய கடம்பை நகர்த் தடங்கோயிலாகிய திருத்தூங்கானை மாடத்தைத் தொழுவீர்களாக. |
| 640. இறையூண் டுகளோ டிடுக்கணெய்தி யிழிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்<br>நிறையூண் நெறிகருதி நின்றீரெல்லா நீள்கழ லேநாளு நினைமின்சென்னிப்<br>பிறைசூ ழலங்க —லங்குகொன்றை பிணையும் பெருமான் பிரியாதநீர்த்<br>துறைசூழ் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந் தொழுமின்களே. | குறைந்த உணவோடு பல்வகைத் துன்பங்களையும் எய்தி வருந்தும் இழிந்த வாழ்க்கை நீங்க, தவமாகிய நிறைந்த உணவைப் பெறும் வழியாதென மயங்கி நிற்கும் நீவிர் அனைவீரும், முடியில் பிறை சூடியவரும், கொன்றை மாலை அணிந்தவரும் ஆகிய பெருமான் பிரியாது உறைவதாய், நீர்த்துறைகள் சூழ்ந்த கடந்தை நகரிலுள்ள தடங்கோயிலாகிய தூங்கானை மாடத்தை நாளும் நினைந்து தொழுவீர்களாக. |

| | |
|---|---|
| 641. பல்வீழ்ந்து நாத்தளர்ந்து மெய்யில்வாடிப் பழிப்பாய வாழ்க்கை யொழித்தவம்<br>இல்சூ ழிடங்கருதி நின்றீரெல்லா மிறையே பிரியா தெழுந்துபோதும்<br>கல்சூ ழரக்கன் கதறச்செய்தான் காத–யுந் தானுங் கருதிவாழும்<br>தொல்சீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந் தொழுமின்களே. | பல் வீழ்ந்து பேச்சுத் தளர்ந்து, உடல் வாடிப் பலராலும் பழிக்கப்படும் இவ்வுலக வாழ்க்கை நீங்கத் தவம் புரியும் இடம் யாதெனக் கருதி நிற்கும் நீவிர் அனைவீரும் சிறிதும் காலம் தாழ்த்தாது எழுந்துவருவீர்களாக. கயிலை மலையைப் பெயர்த்த இராவணனைக் கதறுமாறு அடர்த்த சிவபிரான் மலைமகளும் தானுமாய்க் கருதி வாழும் பழமையான புகழையுடைய கடம்பை நகரில் உள்ள பெருங்கோயிலாகிய தூங்கானை மாடத்தைத் தொழுவீர்களாக. |
| 642. நோயும் பிணியு மருந்துயரமு நுகருடைய வாழ்க்கை யொழியத்தவம்<br>வாயு மனங்கருதி நின்றீ ரெல்லா மலர்மிசைய நான்முகனு மண்ணும்விண்ணும்<br>தாய வாடியளந்தான் காணமாட்டாத் தலைவர்க் கிடம்போலுந் தண்சோலைவிண்<br>தோயுங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந் தொழுமின்களே. | உடலை வருத்தும் நோய்களும், மனத்தை வருத்தும் கவலைகளும் அவற்றால் விளையும் துன்பங்களும் ஆகியவற்றை நுகர்தற்குரிய இவ்வாழ்க்கை நீங்கத் தவம் புரியும் எண்ணத்துடன் நிற்கும் நீவிர் அனைவீரும் தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும், மண்ணையும் விண்ணையும் அடியால் அளந்த திருமாலும் காணமாட்டாத தலைவனாகிய சிவபிரானுக்குரிய இடமாகிய விண் தோயும் சோலைகளால் சூழப்பட்ட கடந்தை நகரிலுள்ள திருத்தூங்கானை மாடப்பெருங்கோயிலைத் தொழுவீர்களாக. |
| 643. பகடூர் பசிந–ய நோய்வருதலாற் பழிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்<br>முகடூர் மயிர்கடிந்த செய்கையாரும் மூடுதுவ ராடையரு நாடிச்சொன்ன<br>திகடீர்ந்த பொய்ம்மொழிகள் தேறவேண்டா திருந்திழையுந் தானும் பொருந்திவாழும்<br>துகடீர் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந் தொழுமின்களே. | பெரும்பசி ந–ய, நோய்கள் வருத்துவதால், பழிக்கத்தக்க இவ்வாழ்க்கை நீங்கத் தவம் செய்ய விரும்பும் நீவிர் தலையை முண்டிதமாக்கித் திரிபவரும், உடலைத் துவராடையால் போர்த்தவரும் ஆகிய சமண புத்தர்களின் ஞானம் நீங்கிய பொய் மொழிகளைத் தெளியாது இறைவன் இறைவியோடு பொருந்தி வாழும் குற்றமற்ற கடந்தை நகர்த் தடங் கோயிலாகிய திருத்தூங்கானை மாடத்தைத் தொழுவீர்களாக. |
| 644. மண்ணார் முழவதிரு மாடவீதி வயற்காழி ஞானசம் பந்தனல்ல<br>பெண்ணா கடத்துப் பெருங்கோயில்சேர் பிறையுரிஞ்சுந் தூங்கானை மாடமேயான்<br>கண்ணார் கழல்பரவு பாடல்பத்துங் கருத்துணரக் கற்றாருங் கேட்டாரும்போய்<br>விண்ணோ ருலகத்து மேவிவாழும் விதியதுவே யாகும் வினைமாயுமே. | மார்ச்சனையோடு கூடிய முழவு ஒ– செய்யும் மாட வீதிகளைக் கொண்டுள்ள வயல்கள் சூழ்ந்த சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தர் பெண்ணாகடத்தில் பெருங்கோயிலாக விளங்கும் வானளாவிய திருத்தூங்கானைமாடத்து இறைவன் திருவடிகளைப் பரவிப் பாடிய பாடல்கள் பத்தையும் கற்றவரும், கேட்டவரும் விண்ணவர் உலகத்தை மேவி வாழ அப்பாடல்களே தவப்பயன்தரும் : வினைகள் மாயும். |

# 60. திருத்தோணிபுரம்

பண் : பழந்தக்கராகம் — முதல் திருமுறை பதிக எண் : 60

| | |
|---|---|
| 645. வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினொடும்<br>ஒண்டரங்க விசைபாடு மளியரசே யொளிமதியத்<br>துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்<br>பண்டரங்கர்க் கென்னிலைமை பரிந்தொருகாற் பகராயே. | வளமையான அலைகளோடு கூடிய நீர் நிலைகளில், மலர்ந்த தாமரை மலர்களின் விளைந்த தேனை வயிறார உண்டு, தன் பெண் வண்டோடு களித்து, சிறந்த அலைபோல மேலும் கீழுமாய் அசையும் நடையில் இசைபாடும் அரச வண்டே! என் மேல் பரிவு கொண்டு, ஒளிபொருந்திய இளம்பிறையை முடியிற் சூடியவரும், எலும்பு மாலைகளை அணிகலனாகப் பூண்ட மார்பினருமாகிய, திருத்தோணிபுரத்தில் பண்டரங்கக் கூத்து ஆடும் பரமரைக் கண்டு, அவரிடம் எனது பிரிவாற்றாத நிலையை ஒரு முறையேனும் பகர்வாயாக. |
| 646. எறிசுறவங் கழிக்கான –ளங்குருகே யென்பயலை<br>அறிவுறா தொழிவதுவு மருவினையேன் பயனன்றே<br>செறிசிறார் பதமோதுந் திருத்தோணி புரத்துறையும்<br>வெறிநிறார் மலர்க்கண்ணி வேதியர்க்கு விளம்பாயே. | எதிர்ப்பட்டனவற்றைக் கொல்லும் இயல்பின வாகிய சுறா மீன்கள் நிறைந்த உப்பங்கழிகளை அடுத்துள்ள கடற்கரைச் சோலைகளில் வாழும் இளங்குருகே! என்னுடைய பசலைத் துன்பத்தை நீ அறியாமல் இருப்பதும் நீக்குதற்கரிய என் வினைப்பயன் அன்றோ? அந்தணச் சிறுவர்கள் பலர் கூடி, பத மந்திரங்களை ஓதிப் பயிலும் திருத்தோணிபுரத்தில் எழுந்தருளியவரும் முடிமீது மணமும் நிறமும் பொருந்திய மலர்க்கண்ணி சூடியவருமான சிவபிரானாருக்கு என் நிலைமையைக் கூறுவாயாக. |
| 647. பண்பழனக் கோட்டகத்து வாட்டமிலாச் செஞ்சூட்டுக்<br>கண்பகத்தின் வாரணமே கடுவினையே னுறுபயலை<br>செண்பகஞ்சேர் பொழில்புடைசூழ் திருத்தோணி<br>புரத்துறையும்<br>பண்பனுக்கென் பரிசுரைத்தாற் பழியாமோ மொழியாயே. | பண்படுத்தப்பட்ட வயல்களின் கரைகளில் முளைத்த சம்பங்கோரைகளின் இடையே வாட்டமின்றி மகிழ்வோடு வாழும் சிவந்த உச்சிக் கொண்டையை உடைய கோழியே! சண்பக மரங்கள் நிறைந்த பொழில்களால் சூழப்பட்ட திருத்தோணிபுரத்தில் எழுந்தருளிய இனிய இயல்பினன் ஆகிய இறைவனிடம் மிக்க வினைகளின் பயனாய் அவனைப் பிரிந்து மிகுதியான பசலையால் வருந்தி வாழும் என் நிலைமையை உரைத்தால் உனக்குப் பழி விளையுமோ? மொழிவாயாக. |
| 648. காண்டகைய செங்காலொண் கழிநாராய் காதலாற்<br>பூண்டகைய முலைமெ–ந்து பொன்பயந்தா ளென்றுவளர்<br>சேண்டகைய மணிமாடத் திருத்தோணி புரத்துறையும்<br>ஆண்டகையாற் கின்றேசென் றடியறிய வுணர்த்தாயே. | உப்பங்கழியில் வாழும் அழகுமிக்க சிவந்த கால்களை உடைய நாரையே! ‘காதல் மிக்கூர்தலால் அணிகலன்களைப் பொருந்திய அழகிய தனங்கள் மெ–ந்து பசலை நோய் பூக்கப் பெற்று உன் அடியவள் வருந்துகிறாள்’ என்று வானோங்கி வளர்ந்துள்ள அழகிய மாட வீடுகளைக் கொண்டுள்ள திருத்தோணிபுரத்தில் எழுந்தருளியுள்ள ஆண்மக்களில் சிறந்தவராய் விளங்கும் சிவபிரானை இன்றே சென்று அடைந்து என் மெ–வுக்குரிய காரணத்தை அவர் அறியுமாறு உணர்த்துவாயாக. |

| | |
|---|---|
| 649. பாராரே யெனையொருகாற் றொழுகின்றேன் பாங்கமைந்த<br>காராருஞ் செழுநிறத்துப் பவளக்காற் கபோதகங்காள்<br>தேராரு நெடுவீதித் திருத்தோணி புரத்துறையும்<br>நீராருஞ் சடையாருக் கென்னிலைமை நிகழ்த்தீரே. | அழகியதாய் அமைந்துள்ள கருமை நிறைந்த செழுமையான நிறத்தினையும் பவளம் போன்ற கால்களையும் உடைய புறாக்களே! உம்மைத் தொழுகின்றேன். வண்டு முத–யவற்றிடம் என் நிலைமை கூறியும் அவை என்னை ஒரு முறையேனும் பாராவாயின. நீவிர் தேரோடும் அகலமான வீதிகளை உடைய திருத்தோணிபுரத்தில் எழுந்தருளிய கங்கை தங்கிய சடையினை உடைய சிவபிரானிடம் சென்று என் பிரிவாற்றாத நிலையைக் கூறுவீர்களாக. |
| 650. சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சா–க் கதிர்வீச<br>வீற்றிருந்த வன்னங்காள் விண்ணோடு மண்மறைகள்<br>தோற்றுவித்த திருத்தோணி புரத்தீசன் றுளங்காத<br>கூற்றுதைத்த திருவடியே கூடுமா கூறீரே. | வளமான சேற்றிடை முளைத்து மலர்ந்த தாமரை மலர்மேல் நெற்பயிர்கள் தம் கதிர்களையே சாமரையாக வீச, அரச போகத்தில் வீற்றிருக்கும் அன்னங்களே! விண்ணுலகம் மண்ணுலகம் ஆகியவற்றையும் நான்கு வேதங்களையும் தோற்றுவித்த திருத்தோணிபுரத்தில் உறையும் சிவபிரானாருடைய யாராலும் அசைத்தற்கு இயலாத இயமனை உதைத்தழித்த திருவடிகளை யாம் அடையும் வழிகளைக் கூறுவீர்களாக. |
| 651. முன்றில்வாய் மடற்பெண்ணைக் குரம்பைவாழ் முயங்குசிறை<br>அன்றில்காள் பிரிவுறுநோ யறியாதீர் மிகவல்லீர்<br>தென்றலார் புகுந்துலவுந் திருத்தோணி புரத்துறையுங்<br>கொன்றைவார் சடையார்க்கென் கூர்பயலை கூறீரே. | வீடுகளின் வாயிற் பகுதியில் மடல்களை உடைய பனைமரங்களில் கட்டிய கூடுகளில் வாழ்ந்து தம் பெடைகளைத் தழுவும் சிறகுகளோடு கூடிய அன்றிற் பறவைகளே! நீவிர் பிரிவுத் துன்பத்தை அறியமாட்டீர் ஆயினும் நேசிப்பதில் மிக வல்லவர்களாயுள்ளீர்கள். தென்றல் காற்று தவழ்ந்து வரும் திருவீதிகளை உடைய திருத்தோணிபுரத்தில் எழுந்தருளிய கொன்றை மாலை அணிந்த சடைமுடியினை உடைய சிவபிரானுக்கு என்பால் மிகுந்துள்ள பசலை நோயின் இயல்பை எடுத்துரைப்பீர்களாக. |
| 652. பானாறு மலர்ச்சூதப் பல்லவங்க ளவைகோதி<br>ஏனோர்க்கு மினிதாக மொழியுமெழி –ளங்குயிலே<br>தேனாரும் பொழில்புடைசூழ் திருத்தோணி புரத்தமரர்<br>கோனரை யென்னிடைக்கே வரவொருவாற் கூவாயே. | பால்மணம் கமழும் மலர்களைக் கொண்ட மாமரத்தின் தளிர்களைக் கோதி உண்டு, எல்லோர்க்கும் இனிதாகக் கூவும் அழகிய இளமையான குயிலே! தேன் நிறைந்த பொழில்கள் புடைசூழ்ந்து விளங்கும் திருத்தோணிபுரத்தில் எழுந்தருளிய தேவர் தலைவனாகிய சிவபிரான் என்னிடம் வருமாறு ஒருமுறையேனும் கூவுவாயாக. |
| 653. நற்பதங்கண் மிகவறிவாய் நானுன்னை வேண்டுகின்றேன்<br>பொற்பமைந்த வாயலகிற் பூவைநல்லாய் போற்றுகின்றேன்<br>சொற்பதஞ்சேர் மறையாளர் திருத்தோணி புரத்துறையும்<br>விற்பொ–தோள் விகிர்தனுக்கென் மெய்ப்பயலை<br>விளம்பாயே. | அழகமைந்த வாயாகிய அலகினை உடைய நாகணவாய்ப் பறவையே! நான் உன்னைத் துதித்துப் போற்றுகிறேன். தலைவனிடம் முறையிடுதற்குரிய செவ்விகளை நீ மிகவும் நன்கறிவாய் ஆதலால், இம்முறையீட்டை உன்பால் தெரிவிக்கிறேன். சொற்களால் அமைந்த பதம் என்னும் இசையமைப்புடைய வேதங்களில்வல்ல மறையவர் வாழும் திருத்தோணிபுரத்தில் எழுந்தருளிய வில்லாற் பொழியும் தோளை உடைய விகிர்தனுக்கு என் உட–ல் தோன்றிய பசலை நோயை உரைப்பாயாக. |

| | |
|---|---|
| 654. சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால்<br>முறையாலே யுணத்தருவன் மொய்பவளத் தொடுதரளந்<br>துறையாருங் கடற்றோணி புரத்தீசன் றுளங்குமிளம்<br>பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே. | அழகிய சிறகுகளை உடைய இளங்கிளியே! என் பால் வருவாயாக. நான் உனக்குத் தேனையும் பாலையும் மாறி மாறி உண்ணத் தருவேன். நீ செறிந்த பவளங்களையும் முத்துக்களையும் கரைகளில் சேர்ப்பிக்கும் கடல் அருகில் உள்ள திருத்தோணிபுரத்தில் உறையும் இளம்பிறை சூடிய பெருமானின் திருநாமத்தை 'ஒரு முறை' என் செவி குளிரப் பேசுவாயாக. |
| 655. போர்மிகுந்த வயற்றோணி புரத்துறையும் புரிசடையெங்<br>கார்மிகுத்த கறைக்கண்டத் திறையவனை வண்கமலத்<br>தார்மிகுத்த வரைமார்பன் சம்பந்த னுரைசெய்த<br>சீர்மிகுத்த தமிழ்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. | தூற்றாப் பொ–களை மிகுதியாகக் கொண்ட வயல்கள் சூழ்ந்த திருத்தோணிபுரத்தில் எழுந்தருளிய முறுக்கேறிய சடையினையும் கருமை நிறைந்த விடக்கறை பொருந்திய கழுத்தையும் உடைய சிவபிரானை, வளமையான தாமரை மலர் மாலையைச் சூடிய மலை போன்ற மார்பினனாகிய ஞானசம்பந்தன் போற்றி உரைத்த புகழ் பொருந்திய இத்தமிழ்த் திருப்பதிகத்தை ஓதி நினைய வல்லவர் சிவலோகம் சேர்வர். |

## 61. திருச்செங்காட்டங்குடி

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 61**

| | |
|---|---|
| 656. நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்<br>முறைகொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்<br>சிறைகொண்ட வண்டறையுஞ் செங்காட்டங் குடியதனுள்<br>கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சரத்தானே. | அடியவர்கள் நாள்தோறும் விதிப்படி தேன் பொருந்திய நாண்மலர்களைத் தூவி மணம் கமழச் செய்வித்துத் தவறாமல் நின்று பணி செய்து வழிபட, விடக்கறை பொருந்திய கண்டத்தினனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் கோயில், சிறகுகளை உடைய வண்டினங்கள் ஒ–க்கும் திருச்செங்காட்டங் குடியில் விளங்கும் கணபதீச்சரமாகும். |
| 657. வாரேற்ற பறையொ–யுஞ் சங்கொ–யும் வந்தியம்ப<br>ஊரேற்ற செல்வத்தோ டோங்கியசீர் விழவோவாச்<br>சீரேற்ற முடைத்தாய செங்காட்டங் குடியதனுள்<br>காரேற்ற கொன்றையான் கணபதீச் சரத்தானே. | கார்காலத்தே மலரும் கொன்றை மலரை அணிந்த சிவபிரான், வாரால் இழுத்துக் கட்டப்பட்ட பறைகளின் ஒ–யும், சங்குகளின் ஒ–யும் வந்திசைக்க ஊர் முழுதும் நிறைந்த செல்வ வளங்களோடு பரவிய புகழை உடைய திருவிழாக்கள் இடைவிடாது நிகழும் திருச்செங்காட்டங்குடியில் விளங்கும் கணபதீச்சரம் என்னும் கோயி–ல் எழுந்தருளியுள்ளான். |
| 658. வரந்தையான் சோபுரத்தான் மந்திரத்தான் தந்திரத்தான்<br>கிரந்தையான் கோவணத்தான் கிண்கிணியான் கையதோர்<br>சிரந்தையான் செங்காட்டங் குடியான்செஞ் சடைச்சேரும்<br>கரந்தையான் வெண்ணீற்றான் கணபதீச் சரத்தானே. | கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ள இறைவன், வரந்தை, சோபுரம் ஆகிய தலங்களில் எழுந்தருளியிருப்பவன். வேதாகமங்களை அருளிச் செய்தவன். கோவணம் அணிந்தவன். கா–ற் கிண்கிணி அணிந்தவன். கையில் உடுக்கை ஒன்றை ஏந்தியவன். சிவந்த சடைமுடீ மீது கரந்தை சூடியவன். திருவெண்ணீறு அணிந்தவன். அப்பெருமான் திருச்செங்காட்டங் குடியில் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ளான். |

| | |
|---|---|
| **659.** தொங்கலுங் கமழ்சாந்து மகிழ்புகையுந் தொண்டர்கொண்<br>டங்கையாற் றொழுதேத்த வருச்சனைக்கன் றருள்செய்தான்<br>செங்கயல்பாய் வயலுடுத்த செங்காட்டங் குடியதனுள்<br>கங்கைசேர் வார்சடையான் கணபதீச் சரத்தானே. | மணம் கமழும் மாலைகளும் சந்தனமும், அகில் புகையும் கொண்டு தொண்டர்கள் தம் அழகிய கைகளால் தொழுது போற்றி வணங்கி அருச்சிக்க அவர்கட்கு உடனே அருள் செய்த பெருமானும் கங்கை தங்கிய நீண்ட சடைமுடியை உடையவனமாகிய சிவபிரான், சிவந்த கயல் மீன்கள் பாயும் வளமான வயல்கள் புறமாகச் சூழ்ந்த திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ளான். |
| **660.** பா–னால் நறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி<br>நூ–னான் மணமாலை கொணர்ந்தடியார் புரிந்தேத்தச்<br>சே–னார் வயல்புடைசூழ் செங்காட்டங் குடியதனுள்<br>கா–னாற் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே. | தனது இடத் திருவடியால் இயமனை உதைத்தருளிய இறைவன், அடியவர்கள் ஆகம விதிப்படி பா–னாலும் மணம் கமழும் நெய்யாலும், பழவர்க்கங்களாலும் விரும்பி அபிடேகித்து மணமாலைகளைக் கொண்டு வந்து சூட்டி அன்போடு வழிபடுமாறு சேல்மீன்கள் நிறைந்த வளமான வயல்கள் புடை சூழ்ந்துள்ள திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ளான். |
| **661.** நுண்ணியான் மிகப்பெரியான் நோவுளார் வாயுளான்<br>தண்ணியான் வெய்யான்நந் தலைமேலான் மனத்துளான்<br>திண்ணியான் செங்காட்டங் குடியான்செஞ் சடைமதியக்<br>கண்ணியான் கண்ணுதலான் கணபதீச் சரத்தானே. | திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் நுண்ணியன யாவற்றினும் மிக நுண்ணியன். பருமையான பொருள்கள் யாவற்றிலும் மிகப் பருமையானவன். நோய் முத–யவற்றால் வருந்துவோர் தம் வாயினால் துதிக்கப் பெறுபவன். தண்மையானவன். புறச்சமயிகட்கு வெய்யவன். நமது முடிமீது மனத்தின் கண்ணும் உறைபவன். உறுதியானவன். தனது சிவந்த சடைமீது பிறைமதிக் கண்ணியைச் சூடியவன். நெற்றியில் கண்ணுடையவன். |
| **662.** மையினார் மலர்நெடுங்கண் மலைமகளோர் பாகமாம்<br>மெய்யினான் பையரவ மரைக்கசைத்தான் மீன்பிறழச்<br>செய்யினா ரகன்கழனிச் செங்காட்டங் குடியதனுட்<br>கையினார் கூரெரியான் கணபதீச் சரத்தானே. | கருங்குவளை மலர் போன்ற நீண்ட கண்களை உடைய மலைமகளாகிய பார்வதிதேவியை ஒரு பாகமாகக் கொண்டுள்ள திருமேனியனும், படம் பொருந்திய பாம்பை இடையிலே கட்டியவனும், கையின்கண் மிகுந்துள்ள தீயை ஏந்திய வனுமாகிய சிவபிரான், மீன்கள் விளங்கித் திரியும் வயல்களாலும் அகன்ற கழனிகளாலும் சூழப்பட்ட திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ளான். |
| **663.** தோடுடையான் குழையுடைய னரக்கன்றன் றோளடர்த்த<br>பீடுடையான் போர்விடையான் பெண்பாக மிகப்பெரியான்<br>சேடுடையான் செங்காட்டங் குடியுடையான் சேர்ந்தாடும்<br>காடுடையா னாடுடையான் கணபதீச் சரத்தானே. | திருச்செங்காட்டங்குடியில் விளங்கும் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ள இறைவன், ஒரு காதில் தோட்டினை அணிந்தவன். பிறிதொரு காதில் குழை அணிந்தவன். கயிலையைப் பெயர்த்த இராவணனின் தோள்களை நெரித்த பெருமை உடையவன். போரிடும் காளையை உடையவன். பெண்ணை ஒரு பாகமாகக் கொண்டவன். மிகவும் பெரியவன். பெருமைகட்கு உரியவன். பூதகணங்களோடு சேர்ந்தாடும் சுடுகாட்டைத் தனக்குரிய இடமாகக் கொண்டவன். நாடுகள் பலவற்றிலும் கோயில் கொண்டு அருள்புரிபவன். |

| | |
|---|---|
| **664.** ஆனூரா வுழிதருவா னன்றிரவர் தேர்ந்துணரா<br>வானூரான் வையகத்தான் வாழ்த்துவார் மனத்துளான்<br>தேனூரான் செங்காட்டங் குடியான்சிற் றம்பலத்தான்<br>கானூரான் கழுமலத்தான் கணபதீச் சரத்தானே. | விடைமிசை ஏறி அதனை ஊர்ந்து பல இடங்களிலும் திரிபவன். முன்னொரு காலத்தே திருமால் பிரமன் ஆகிய இருவர் அடிமுடிகளைத் தேர்ந்து உணர முடியாதவாறு வானளாவ ஓங்கி நின்றவன். இவ்வுலகில் சிற்றம்பலத்திலும் தேனூரிலும் கானூரிலும் கழுமலத்திலும் விளங்குபவன். அவ்விறைவன் திருச்செங்காட்டங் குடியில் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ளான். |
| **665.** செடிநுகருஞ் சமணர்களுஞ் சீவரத்த சாக்கியரும்<br>படிநுகரா தயருழப்பார்க் கருளாத பண்பினான்<br>பொடிநுகருஞ் சிறுத்தொண்டர்க் கருள்செய்யும் பொருட்டாகக்<br>கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச் சரத்தானே. | முடைநாற்றத்தை நுகரும் சமணர்களும், காவியாடை கட்டிய புத்தர்களும் எம்பெருமானுடைய இயல்புகளை அறிந்துணராது துன்புறுவர்கள். அவர்கட்கு அருள்புரியாத இயல்பினனாகிய சிவபிரான் திருநீற்று மணத்தையே நுகரும் சிறுத்தொண்டர்க்கு அருள் செய்யும் பொருட்டுத் திருச்செங்காட்டங்குடியை விளங்கிய தலமாகக் கொண்டு அங்குள்ள கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ளான். |
| **666.** கறையிலங்கு மலர்க்குவளை கண்காட்டக் கடிபொழி–ன்<br>நறையிலங்கு வயற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்<br>சிறையிலங்கு புனற்படப்பைச் செங்காட்டங் குடிசேர்த்தும்<br>மறையிலங்கு தமிழ்வல்லார் வானுலகத் திருப்பாரே. | கருமை பரவி விளங்கும் மலராகிய குவளை கண்போல் மலர்ந்து விளங்குவதும், மணம் கமழும் சோலைகளிலுள்ள தேனின் மணம் வீசுவதுமான, வயல்களால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் தோன்றிய தமிழ் வல்ல ஞானசம்பந்தன் கரைகளோடு கூடி நீர் நிறைந்து தோன்றும் வயல்கள் சூழ்ந்த திருச்செங்காட்டங்குடியில் விளங்கும் கணபதீச்சரத்து இறைவர் மீது பாடிய வேதப் பொருள் நிறைந்த இத் திருப்பதிகத் தமிழ் மாலையை ஓதவல்லவர் வானுலகில் வாழ்வர். |

## 62. திருக்கோளிலி

**பண் : பழந்தக்கராகம்** **முதல் திருமுறை பதிக எண் : 62**

| | |
|---|---|
| **667.** நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே<br>ஆளாய வன்புசெய்வோ மடநெஞ்சே யரனாமம்<br>கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளிக்<br>கோளாய நீக்குமவன் கோளி–யெம் பெருமானே. | அறியாமையை உடைய மனமே! உலகில் உயிர் வாழும் நாள்கள் பல போவதற்கு முன்னரே நீலகண்டனாய சிவபிரானுக்கே அடியவராக விளங்கி அவனிடத்து அன்பு செய்வோம். அவ்வரனது திருநாமங்களைப் பலகாலும் கேட்பாயாக. அவ்வாறு கேட்பின் நம் சுற்றத்தினரும் கிளைத்து இனிது வாழ்வர். துன்பங்கள் நம்மைத் தாக்காதவாறு அருள்புரிந்து நம் மனமாறுபாடுகளையும் அவன் தீர்த்து அருள்வான். அவ்விறைவன் திருக்கோளி– என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளான். |

| | |
|---|---|
| 668. ஆடரவத் தழகாமை யணிகேழற் கொம்பார்ந்த<br>தோடரவத் தொருகாதன் துணைமலர்நற் சேவடிக்கே<br>பாடரவத் திசைபயின்று பணிந்தெழுவார் தம்மனத்தில்<br>கோடரவந் தீர்க்குமவன் கோளி–யெம் பெருமானே. | படம் எடுத்து ஆடும் இயல்புடைய பாம்பை நாணாகக் கொண்டு அதில் அழகிய ஆமை ஓட்டையும் பன்றிக் கொம்பையும் கோத்து அணிந்தவனும், தோடாகப் பாம்பையே கொண்டவனும் ஆகிய சிவபிரானது இரண்டு மலர் போன்ற சிவந்த நல்ல திருவடிகளையே பாடலால் வரும் இசையினால் பாடிப் பழகிப் பணிந்து வணங்குபவர்களின் மனக்கோணலைத் தீர்த்தருள்பவன் திருக்கோளி–எம்பெருமானாவான். |
| 669. நன்றுநகு நாண்மலரால் நல்–ருக்கு மந்திரங்கொண்<br>டொன்றிவழி பாடுசெய லுற்றவன்ற னோங்குயிர்மேல்<br>கன்றிவரு காலனுயிர் கண்டவனுக் கன்றளித்தான்<br>கொன்றைமலர் பொன்றிகழுங் கோளி–யெம் பெருமானே. | அழகிதாக மலர்ந்த புதிய பூக்களைக் கொண்டு இருக்கு வேத மந்திரங்களைக் கூறி மன ஒருமையோடு வழிபாடு செய்த மார்க்கண்டேயனின் உயர்ந்த உயிரைக் கவரச் சினந்து வந்த இயமனது உயிரைப் போக்கி அம்மார்க்கண்டேயனுக்கு அன்றே என்றும் பதினாறாண்டாக இருக்கும் வரமளித்தவன், பொன் போல் விளங்கும் கொன்றை மலரைச் சூடிய எம் திருக்கோளி–ப் பெருமானாவான். |
| 670. வந்தமண லால்இ–ங்கம் மண்ணியின்கட் பாலாட்டும்<br>சிந்தைசெய்வோன் றன்கருமந் தேர்ந்துசிதைப் பான்வருமத்<br>தந்தைதனைச் சாடுதலுஞ் சண்டீச னென்றருளிக்<br>கொந்தணவு மலர்கொடுத்தான் கோளி–யெம் பெருமானே. | மண்ணியாறு கொண்டுவந்த மணலால் அவ்வாற்றின் கரையில் இ–ங்கம் அமைத்து மேய்ச்சலுக்குக் கொண்டு வந்த பசுவின் பாலை அபிடேகித்து வழிபட்ட விசாரசருமனது செயலைக் கண்டு அச்சிவபூசையைச் சிதைக்க முற்பட்ட அவன் தந்தையின் காலை அவன் தடிய, அதனைக் கண்டு அவ்விசாரசருமனுக்குக் சண்டீசப் பதவி அருளித் தான் உண்ட கலத்தொடு சூடிய மலர் மாலைகளைச் சூடிக் கொள்ளும் சிறப்பை அளித்தவன், திருக்கோளி–யில் விளங்கும் எமது பெருமான் ஆவான். |
| 671. வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலுநற் பூசனையால்<br>நஞ்சமுது செய்தருளும் நம்பியென வேநினையும்<br>பஞ்சவரிற் பார்த்தனுக்குப் பாசுபத மீந்துகந்தான்<br>கொஞ்சுகிளி மஞ்சணவுங் கோளி–யெம் பெருமானே. | வஞ்சகமான மனத்தைத் திருத்தி ஐம்பொறிகளை ஒடுக்கி நாள்தோறும் நல்ல பூசையை இயற்றி, நஞ்சினை அமுதாக உண்டருளிய நம்பியே என நினையும் சிவபக்தனும், பாண்டவர் ஐவரில் ஒருவனுமான அருச்சுனனுக்குப் பாசுபதம் என்னும் அத்திரம் வழங்கி மகிழ்ந்தவன், கொஞ்சும் கிளிகள் வானவெளியில் பறக்கும் திருக்கோளி–யில் விளங்கும் எம் பெருமான் ஆவான். |
| 672. தாவியவ னுடனிருந்துங் காணாத தற்பரனை<br>ஆவிதனி லஞ்சொடுக்கி யங்கணனென் றாதரிக்கும்<br>நாவியல்சீர் நமிநந்தி யடிகளுக்கு நல்குமவன்<br>கோவியலும் பூவெழுகோற் கோளி–யெம் பெருமானே. | மூவுலகங்களையும் தாவி அளந்த திருமால் தன்னோடு உடனிருந்தும் திருவடிகளைக் காண இயலாதவாறு சிறந்து நின்ற தற்பரனாகிய சிவபிரானை, ஐம்புலன்களையும் ஒடுக்கிக் கருணையாளனாக உயிர்க்குயிராய்க் காத–த்து வழிபடும் நாவால் புகழத்தக்க பெரியவராகிய நமிநந்தி அடிகளுக்கு அருள் புரிந்தவன். தலைமை சான்ற மலர் மரங்களை உடைய திருக்கோளி–யில் விளங்கும் எம் பெருமானாவான். |

| | |
|---|---|
| 673. கன்னவிலு மால்வரையான் கார்திகழு மாமிடற்றான்<br>சொன்னவிலு மாமறையான் றோத்திரஞ்செய் வாயினுளான்<br>மின்னவிலுஞ் செஞ்சடையான் வெண்பொடியா னங்கையினில்<br>கொன்னவிலுஞ் சூலத்தான் கோளி–யெம் பெருமானே. | கற்கள் செறிந்த பெரிய கயிலாய மலையில் எழுந்தருளியிருப்பவன். கருமை விளங்கும் பெரிய மிடற்றை உடையவன். புகழ் பொருந்திய வேதங்களை அருளிச் செய்வதன். தன்னைத் தோத்திரிப்பாரின் வாயின்கண் உள்ளவன். மின்னல் போன்ற சிவந்த சடையினை உடையவன். திருவெண்ணீறு அணிந்தவன். அழகிய கையில் சொல்லும் தொழி–ல் பழகிய சூலப்படையை ஏந்தியவன். இத்தகையோனாகி விளங்குவோன் திருக்கோளி–யின்கண் விளங்கும் எம்பெருமானாவான். |
| 674. அந்தரத்திற் றேரூரு மரக்கன்மலை யன்றெடுப்பச்<br>சுந்தரத்தன் றிருவிரலா லூன்றஅவன் உடல்நெரிந்து<br>மந்திரத்த மறைபாட வாளவனுக் கீந்தானும்<br>கொந்தரத்த மதிச்சென்னிக் கோளி–யெம் பெருமானே. | ஆகாய வெளியிலே தேரை ஊர்ந்து வரும் இராவணன் கயிலை மலையைப் பெயர்த்த போது அழகிய தனது கால் விரலால் சிறிதே ஊன்றிய அளவில், அவன் உடல் நெரிந்து, மந்திரமாக விளங்கும் வேத கீதங்களைப் பாடிப் போற்றச் சந்திரஹாசம் என்னும் வாளை ஈந்து அருள் செய்வதன், கொத்துப் போல இரண்டு முனைகளை உடைய பிறை மதியைச் சூடிய சடையினனாகிய திருக்கோளி– எம்பெருமானாவான். |
| 675. நாணமுடை வேதியனும் நாரணனும் நண்ணவொணாத்<br>தாணுவெனை யாளுடையான் தன்னடியார்க் கன்புடைமை<br>பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்<br>கோண–எம் பிறைச்சென்னிக் கோளி–யெம் பெருமானே. | ஐந்து தலைகளில் ஒன்றை இழந்ததால் நாணமுற்ற வேதியனாகிய பிரமனும், திருமாலும் அணுக முடியாத நிலைத்த பொருள் ஆனவனும் என்னை அடிமையாக உடையவனும், தன் அடியவர்கட்கு அன்பு வடிவானவனும், பாணபத்திரன் பத்திமையோடு பாடப் பரிவோடு அவனுக்கு அருள் புரிந்தவனுமான வளைந்த பிறைமதியைச் சென்னியில் சூடிய சிவபிரான், திருக்கோளி– எம்பெருமான் ஆவான். |
| 676. தடுக்கமருஞ் சமணரொடு தர்க்கசாத் திரத்தவர்சொல்<br>இடுக்கண்வரு மொழிகேளா தீசனையே யேத்துமின்கள்<br>நடுக்கமிலா வமருலகம் நண்ணலுமா மண்ணல்கழல்<br>கொடுக்ககிலா வரங்கொடுக்குங் கோளி–யெம் பெருமானே. | தடுக்கை உடையாக விரும்பும் சமணரும், தர்க்க சாத்திரங்களில் வல்ல புத்தர்களும் கூறுகின்ற இடுக்கண் வளரும் மொழிகளைக் கேளாது ஈசனையே ஏத்துமின்கள். துளங்காது அமரர் வாழும் வானுலகத்தை அடைதலும் கூடும். அப்பெருமான் திருவடிகள், வேறு யாராலும் தர இயலாத வரங்கள் பலவற்றையும் தரும். அவ்விறைவன் திருக்கோளி– எம்பெருமான் ஆவான். |
| 677. நம்பனைநல் லடியார்கள் நாமுடைமா டென்றிருக்கும்<br>கொம்பனையாள் பாகனெழிற் கோளி–யெம் பெருமானை<br>வம்பமருந் தண்காழிச் சம்பந்தன் வண்டமிழ்கொண்<br>டின்பமர வல்லார்கள் எய்துவர்க ளீசனையே. | நல்ல அடியவர்கள் நம்முடைய செல்வம் என நம்பியிருப்பவனாய்ப், பூங்கொம்பு போன்ற அழகிய உமையம்மையின் கணவனாய், அழகிய திருக்கோளி–யில் விளங்கும் எம் பெருமானை, மணம் விரியும் தண்ணிய சீகாழிப் பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய இத்தமிழ்ப் பதிகத்தால் இன்பம் பொருந்தப் பாட வல்லவர்கள் அப்பெருமானையே அடைவர். |

## தக்கேசி

இது மருதப் பெரும்பண்ணின் முதல் திறமாகிய நவிரின் அகநிலைப் பண், 69 என்ற எண்பெற்றது. சங்கீத ரத்நாகரம் இப்பண்ணை தக்கை கைசிகம் எனக் குறிப்பிடுகிறது. ஆறு சுரங்களைக் கொண்ட ஔவடம் (பண்ணியல்) என்று கொள்ளப்படும். இது தீரசங்கராபரண மேளத்தில் பிறப்பது அச்சம் உவகை என்பன இதற்குரிய சுவைகள். சம்பந்தர் இப்பண்ணில் முதல் திருமுறையில் 63–74 ஆக 12 பதிகங்கள். சுந்தரர் 54 – 70 ஆக 17 பதிகங்கள். அவர் பாடியவற்றுள் இதுவே மிக அதிகம். சம்பந்தர் திருஅண்ணாமலைப் பதிகம் – பூவார் மலர்கொண்டு அடியார் தொழுவார், சுந்தரர் அந்தணாளன் உன்னடைக்கலம் புகுந்த என்ற திருப்புன்கூர்ப் பதிகம். அழுக்கு மெய்கொடுன் திருவடியடைந்தேன். சாதலும் பிறத்தலுந்தவிர்த்து, பொன்னு மெய்ப்பொருளும் தருவானை, ஒருகண் பெற்றபோது பாடிய ஆலந்தான் உகந்தமுது செய்தானை, தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி, திருவும் மெய்ப்பொருளும் செல்வமும் எனக்கு ஆகிய பதிகங்கள் இப்பண்ணில் உள்ளன. இப்பண்ணுக்குரிய கட்டளைகள் இரண்டு, தக்கேசி, பகற்பண், நண்பகலுக்குரியது என்பது மரபு. இதற்கு நேரான இராகம் காம்போதி.

## 63. திருப்பிரமபுரம்

பண் : தக்கேசி — முதல் திருமுறை பதிக எண் : 63

678. எரியார்மழுவொன் றேந்தியங்கை யிடுதலை யேகலனா
வரியார்வளையா ரையம்வவ்வாய் மாநலம் வவ்வுதியே
சரியாநாவின் வேதகீதன் தாமரை நான்முகத்தன்
பெரியான்பிரமன் பேணியாண்ட பிரம புரத்தானே.

உச்சரிப்பு தவறாதவாறு நாவினால் வேத கீதங்களைப் பாடுபவனும், தாமரை மலர்மேல் விளங்குவோனும் ஆகிய நான்கு திருமுகங்களை உடைய பெரியவனாகிய பிரமன் விரும்பி வழிபட்டு ஆட்சிபுரிந்த பிரமபுரத்தில் விளங்கும் இறைவனே! எரியும் மழு ஆயுதத்தை கையில் ஏந்தி அழகிய கையில் பிரமனது ஐந்து தலைகளில் ஒன்றைக் கொய்து கொண்ட மண்டை ஓட்டையே உண்கலனாகக் கொண்டு வீதிகள்தோறும் ப– ஏற்பது போல் வந்து வரிகளை உடைய வளையல்களை அணிந்த இளம் பெண்கள் தரும் பிச்சையை ஏலாது அவர்களது மிக்க அழகைக் கவர்ந்து செல்கின்றாயே! இது நீதிதானா?

| | |
|---|---|
| 679. பெயலார்சடைக்கோர் திங்கள்சூடிப் பெய்ப–க் கென்றயலே<br>கயலார்தடங்க ணஞ்சொனல்லார் கண்டுயில் வவ்வுதியே<br>இயலானடாவி யின்பமெய்தி யிந்திரனாண் மண்மேல்<br>வியலார்முரச மோங்குசெம்மை வேணு புரத்தானே. | இந்திரன் விண்ணுலகை இழந்து மண்ணுலகம் வந்து முறைப்படி ஆட்சி நடத்தி மகிழ்வெய்தி வழிபட்டு வாழ்ந்த சிறப்பினதும், பெரிதாய முரசுகள் ஓங்கி ஒ–ப்பதும் நீதி நிலை பெற்றதும் ஆகிய வேணுபுரத்தில் எழுந்தருளிய இறைவனே, கங்கை தங்கிய சடைமுடியில் ஒரு திங்களைச் சூடி மகளிர் இடும் ப–யை ஏற்பதற்கு என்றே வந்து அதனின் வேறாய் மீன் போன்ற தடங்கண்களையும் அழகிய சொற்களையும் உடைய இளம்பெண்களின் கண்கள் துயில் கொள்வதைக் கவர்ந்து அவர்களை விரக நோய்ப் படுத்தல் நீதியோ ? |
| 680. நகலார்தலையும் வெண்பிறையு நளிர்சடை மாட்டயலே<br>பகலாப்ப–தேர்ந் தையம்வவ்வாய் பாய்கலை வவ்வுதியே<br>அகலாதுறையு மாநிலத்தில் அய–ன்மை யாலமரர்<br>புகலான்ம–ந்த பூம்புக– மேவிய புண்ணியனே. | இம்மாநிலத்தில் தம்மை அடைக்கலமாக ஏற்போர் பிறர் இன்மையால் தேவர்கள் தமக்குப் புக–டமாய் வந்தடைந்த சிறப்பினதும், அவர்கள் அகலாது உறைவதுமாகிய அழகிய புக– நகரில் மேவிய புண்ணியனே ! சிரிக்கும் தலையோட்டையும் வெண்மையான பிறை மதியையும் குளிர்ந்த சடையில் அணிந்து பகற்போதில் ப– ஏற்பது போல் வந்து, மகளிர்தரும் பிச்சைப் பொருள் கொள்ளாது அவர்கட்கு விரகதாபம் அளித்து, அதனால் அவர்கள் அணிந்துள்ள ஆடை முத–யன, நெகிழும்படி செய்து போதல் நீதியோ ? |
| 681. சங்கோடிலங்கத் தோடுபெய்து காதிலொர் தாழ்குழையன்<br>அங்கோல்வளையா ரையம்வவ்வா யானலம் வவ்வுதியே<br>செங்கோனடாவிப் பல்லுயிர்க்கும் செய்வினை மெய்தெரிய<br>வெங்கோத்தருமன் மேவியாண்ட வெங்குரு மேயவனே. | கொடிய அரசன் எனப்படும் எமதருமராசன் தானும் குருவாகிச் செங்கோல் ஆட்சியை நடத்தித் தான் செய்யும் செயல்கள் நீதிநெறிக்கு உட்பட்டவை என்ற உண்மை எல்லோர்க்கும் தெரியுமாறு செங்கோல் முறைகளை வந்து கற்று அருள் புரிந்து ஆண்ட வெங்குரு என்னும் தலத்தில் எழுந்தருளியவனே ! சங்கக் குண்டலத்தோடு விளங்குமாறு தோடணிந்தும் ஒரு காதில் தாழும் குழையணிந்தும் ப– ஏற்பதற்கென்று வந்து அழகிய திரண்ட வளையல்களை அணிந்த இளம் பெண்களின் அழகினைக் கவர்ந்து செல்லல் நீதியோ ? |
| 682. தணிநீர்மதியஞ் சூடிநீடு தாங்கிய தாழ்சடையன்<br>பிணிநீர்மடவா ரையம்வவ்வாய் பெய்கலை வவ்வுதியே<br>அணிநீருலக மாகியெங்கு மாழ்கட லாலழுங்கத்<br>துணிநீர்பணியத் தான்மிதந்த தோணி புரத்தானே. | மண்ணுலகம் அழகிய நீருலகம் ஆகி, அனைத்திடங்களும் ஆழமான கடலால் மூழ்கி வருந்தும் அவ்வேளையில், அச்சம் தரும் அக்கடல் பணியுமாறு தான் மட்டும் அவ்வூழிவெள்ளத்தில் அழியாது மிதந்த தோணிபுரத்து இறைவனே ! தன்னை வந்து பணிந்த மதியைச் சூடி அம்மதியை நெடிது நாள் காத்தருளிய, தாழ்ந்து தொங்கும் சடைமுடியை உடையவனாய், காமநோயால் வருந்தும் மகளிர் பால் சென்று அவர்கள் தரும் பிச்சையை ஏலாது அவர்களின் ஆடைகளை நிலைகுலையச் செய்தல் நீதியாகுமா ? |

| | |
|---|---|
| 683. கவர்பூம்புனலுந் தண்மதியுங் கமழ்சடை மாட்டயலே<br>அவர்பூம்ப–யோ டையம்வவ்வா யானலம் வவ்வுதியே<br>அவர்பூணரையர்க் காதியாய வடன்மன்ன னாண்மண்மேல்<br>தவர்பூம்பதிக ளெங்குமெங்குந் தங்கு தராயவனே. | அணிகலன்களை அணிந்த அரசர்களாகிய அவர்க்கெல்லாம் தலைவனாகிய வ–மை பொருந்திய மன்னனாகிய திருமால் வராக அவதாரத்தில் இரண்ய கசிபுவைக் கொன்ற பழி நீங்கப் பூசித்து ஆட்சி செய்த இம்மண்ணுலகில் உள்ளதும், தவமுனிவர்கள் எல்லா இடங்களிலும் தங்கும் சிறப்பினதும் ஆகிய பூந்தராயில் எழுந்தருளியவனே, இம்மண்ணுலகைக் கவர வந்த அழகிய கங்கையையும் தண்ணிய மதியையும் மணம் கமழும் சடைமிசைச் சூடி மகளிர் அருகருகே இடும் சுவைமிக்க ப–யாகிய உணவை ஏலாது அவர்களின் அழகை வவ்வுகின்றாயே; இது நீதியா? |
| 684. முலையாழ்கெழுவ மொந்தைகொட்ட முன்கடை மாட்டயலே<br>நிலையாப்ப–தேர்ந் தையம்வவ்வாய் நீநலம் வவ்வுதியே<br>தலையாய்க்கிடந்திவ் வையமெல்லாந் தன்னதொ<br>ராணைநடாய்ச்<br>சிலையான்ம–ந்த சீர்ச்சிலம்பன் சிரபுர மேயவனே. | கரவாக அமுதுண்டதால் திருமாலால் வெட்டப் பெற்றுத் தலைமாத்திரமாய் நின்ற வில்வீரனாகிய சிலம்பன் என்னும் இராகு வழிபட்டு இவ்வையக மெல்லாவற்றையும் தன் ஆணைவழி நடத்தி ஆட்சி புரிந்த சிரபுரம் என்னும் நகரில் எழுந்தருளிய இறைவனே! முல்லையாழை மீட்டி மொந்தை என்னும் பறை ஒ–க்கச் சென்று வீட்டின் முன் கடையின் அயலே நின்று உண்பதற்காக அன்றிப் பொய்யாகப் பிச்சை கேட்டு மகளிர் தரும் உணவைக் கொள்ளாது நீ அவர்தம் அழகினைக் கவர்வது நீதியோ? |
| 685. எருதேகொணர்கென் றேறியங்கை யிடுதலை யேகலனாக்<br>கருதேர்மடவா ரையம்வவ்வாய் கண்டுயில் வவ்வுதியே<br>ஒருதேர்கடாவி யாரமரு ளொருபது தேர்தொலையப்<br>பொருதேர்வலவன் மேவியாண்ட புறவமர் புண்ணியனே. | ஒரு தேரைச் செலுத்திய அரிய போரில் பத்துத் தேர்களை அழியுமாறு சண்டையிடும் தேர் வல்லவன் ஆகிய சிபிச் சக்கரவர்த்தி வீற்றிருந்து அரசாண்ட சிறப்பினதும் அவனை வஞ்சித்துப் புறாவின் எடைக்கு எடை தசைகேட்ட பாவம் தீரத் தீக்கடவுள் வழிபட்டதுமான புறவம் என்னும் சீகாழிப் பதியில் விளங்கும் இறைவனே! தனது எருது ஊர்தியைக் கொணர்க என ஆணையிட்டு அதன்மிசை ஏறித் தனது அழகிய கையில் ஏந்திய பிரமகபாலத்தையே உண்கலனாகக் கொண்டு விரும்பும் அழகுடைய மகளிரிடும் ப–யைக் கொள்ளாது அவர்களின் உறக்கம் கெடுமாறு விரகதாபம் செய்து வருதல் நீதியோ? |

| | |
|---|---|
| **686.** துவர்சேர்க–ங்கப் போர்வையாருந் தூய்மை யிலாச்சமணும்<br>கவர்செய்துழலக் கண்டவண்ணங் காரிகை வார்குழலார்<br>அவர்பூம்ப–யோ டையம்வவ்வா யானலம் வவ்வுதியே<br>தவர்செய்நெடுவேற் சண்டனாளச் சண்பை யமர்ந்தவனே. | உடலைத் துளைக்கும் நீண்ட வேலை உடைய இயமனை அடக்கி ஆளச் சண்பையில் எழுந்தருளிய இறைவரே! காவி நிறம் சேர்ந்த ஆடையைப் போர்த்த புத்தரும், தூய்மையற்ற சமணரும் மனம் திரிந்து உழலுமாறு செய்து, பிச்சையேற்கும் கோலத்தவராய் மகளிர் வாழும் இல்லங்களை அடைந்து, நீண்ட கூந்தலை உடைய அம்மகளிர் கண்ட அளவில் மனம் திரிந்து நிற்க, அவர்கள் இட வந்த இனிய உணவாகிய பிச்சையை ஏலாது அவர்தம் அழகினைக் கவர்ந்து செல்கின்றீரே; இது நீதியோ ? |
| **687.** நிழலான்ம–ந்த கொன்றைசூடி நீறுமெய் பூசிநல்ல<br>குழலார்மடவா ரையம்வவ்வாய் கோல்வளை வவ்வுதியே<br>அழலாயுலகங் கவ்வைதீர வைந்தலை நீண்முடிய<br>கழனாகரையன் காவலாகக் காழி யமர்ந்தவனே. | உலகம் அழலாக வெதும்பி வருத்திய துன்பம் தீருமாறு ஐந்து தலைகளையும் நீண்ட முடியையும் வீரக் கழலையும் அணிந்த நாகங்களின் தலைவனாகிய காளிதன் என்னும் பாம்பு காவல் புரிந்த காழிப் பதியில் அமர்ந்த தலைவனே! ஒளி நிறைந்த கொன்றை மலர் மாலையைச் சூடி, திருமேனியில் நீற்றினைப் பூசிக் கொண்டு பிச்சையேற்பவர் போல மகளிர் வாழும் வீதிகளில் சென்று அழகிய கூந்த–னை உடைய மகளிர்தரும் பிச்சையை ஏலாது அவர்களை விரகதாபத்தினால் மெ–யச் செய்து அவர்தம் திரண்ட வளையல்களை வவ்வுகின்றீரே; இது நீதியோ ? |
| **688.** கட்டார்துழாயன் றாமரையா னென்றிவர் காண்பரிய<br>சிட்டார்ப–தேர்ந் தையம்வவ்வாய் செய்கலை வவ்வுதியே<br>நட்டார்நடுவே நந்தனாள நல்வினை யாலுயர்ந்த<br>கொட்டாறுடுத்த தண்வயல்சூழ் கொச்சை யமர்ந்தவனே. | ஆற்றின் நடுவே பராசரமுனிவன் மச்சகந்தியைக் கூடிய பழி போகும்படி; அம்முனிவன் செய்த பூசனையால், அம்முனிவர் அடையுமாறு அப்பெண்ணுக்கு மணத்தையும் நல்லொழுக் கத்தையும் அளித்து அம்முனிவனை வாழச் செய்த சிறப்பினதாகிய குளிர்ந்த வயல்களால் சூழப்பட்ட கொச்சைவயம் என்னும் இத்தலத்தில் எழுந்தருளிய இறைவனே! கட்டப்பட்ட துளசி மாலையை அணிந்த திருமால் நான்முகன் என்ற இவர்களாலும் காண்டற்கரிய மேன்மையனாகிய நீ பிச்சை ஏற்கச் சென்று மகளிர் தரும் ப–யை ஏலாது அவர் தம் அழகிய ஆடைகளை வவ்வுதல் நீதியோ ? |
| **689.** கடையார்கொடிநன் மாடவீதிக் கழுமலவூர்க் கவுணி<br>நடையார்பனுவன் மாலையாக ஞானசம் பந்தன்நல்ல<br>படையார்மழுவன் மேன்மொழிந்த பல்பெயர்ப் பத்தும்வல்லார்க்<br>கடையாவினைகள் உலகில்நாளும் அமருல காள்பவரே. | வாயில்களிற் பொருந்திய கொடிகளோடு கூடிய மாடவீடுகளை உடைய வீதிகள் சூழ்ந்த கழுமலம் என்னும் சீகாழிப் பதியில் கவுணியர் குலத்தில் தோன்றிய ஞானசம்பந்தன் சந்தநடைகளோடு கூடிய இலக்கிய மாலையாக மழுப்படையை உடைய சீகாழி இறைவர்மேற் பாடிய பல் பெயர்ப் பத்து என்னும் இத்திருப்பதிகத்தை ஓதி வழிபட வல்லவர்களை இவ்வுலகில் துன்புறுத்தும் வினைகள் ஒருநாளும் வந்து அடையா. மறுமையில் அவர்கள் அமரருலகினை ஆள்வர். |

## 64. திருப்பூவணம்

பண் : தக்கேசி | முதல் திருமுறை பதிக எண் : 64

| | |
|---|---|
| 690. அறையார்புனலு மாமலரு மாடரவார் சடைமேல்<br>குறையார்மதியுஞ் சூடிமாதோர் கூறுடையா னிடமாம்<br>முறையார்முடிசேர் தென்னர்சேரர் சோழர்கள்தாம் வணங்கும்<br>திறையாரொளிசேர் செம்மையோங்குந் தென்றிருப்<br>பூவணமே. | ஆரவாரித்து வரும் கங்கையும், ஆத்தி மலரும், ஆடும் பாம்பும் பொருந்திய சடையின் மேல், ஒரு கலையாய்க் குறைந்த பிறை மதியையும் சூடி மாதொர் பாகனாக விளங்கும் சிவபிரான் எழுந்தருளிய இடம், நீதியோடு கூடியவராய் முடிசூடி ஆளும் பாண்டியர், சேரர், சோழர் ஆகிய மூவேந்தர்களும் வணங்குவதும், வையை ஆற்றின் அலைகள் வீசுவதும், புகழோடு கூடியதும், வயல் வளம் மிக்கதுமாகிய அழகிய திருப்பூவணமாகும். |
| 691. மருவார்மதின்மூன் றொன்றவெய்து மாமலையான் மடந்தை<br>ஒருபால்பாக மாகச்செய்த வும்பர்பிரா னவனூர்<br>கருவார்சா– யாலைமல்கிக் கழன்மன்னர் காத்தளித்த<br>திருவான்ம–ந்த சேடர்வாழுந் தென்றிருப் பூவணமே. | பகைவர்களாகிய திரிபுர அசுரர் மதில்கள் மூன்றையும் ஒருசேர எய்து அழித்தோனும், மலையரையன் மகளாகிய பார்வதி தேவியை ஒருபால் கொண்டு தேவர்கள் தலைவனாக விளங்குவோனும் ஆகிய சிவபிரானது ஊர்; கருக்கொண்ட நெற்பயிர்கள் கரும்புகள் ஆகியன நிறைந்ததும் வீரக் கழல் புனைந்த மன்னர்கள் காப்பாற்றிக் கொடுத்த செல்வ வளத்தால் சிறந்த மேலானவர்கள் வாழ்வதுமான அழகிய பூவண நகராகும். |
| 692. போரார்மதமா வுரிவைபோர்த்துப் பொடியணி மேனியனாய்க்<br>காரார்கட– னஞ்சமுண்ட கண்ணுதல் விண்ணவனூர்<br>பாரார்வைகைப் புனல்வாய்ப்பரப்பிப் பன்மணி<br>பொன்கொழித்துச்<br>சீரார்வாரி சேரநின்ற தென்றிருப் பூவணமே. | போர்ப் பயிற்சியுடைய மதம் பொருந்திய யானையின் தோலை உரித்துப் போர்த்து, திருநீற்றுப் பொடி அணிந்த மேனியனாய், கருநிறம் பொருந்திய கட–டைத் தோன்றிய நஞ்சினை உண்டவனாய், நுதல் விழி உடையவனாய் விளங்கும் சிவனது ஊர், நிலவுலகை வளம் செய்வதற்கு வந்த வையையாறு வாய்க்கால் வழியே பரப்பிப் பலவகை மணிகளையும் பொன்னையும் கொழித்து வளம் செய்யும் அழகிய திருப்பூவணமாகும். |
| 693. கடியாரலங்கற் கொன்றைசூடிக் காதிலொர் வார்குழையன்<br>கொடியார்வெள்ளை யேறுகந்த கோவணவன் னிடமாம்<br>படியார்கூடி நீடியோங்கும் பல்புகழாற் பரவச்<br>செடியார்வைகை சூழநின்ற தென்றிருப் பூவணமே. | மணம் பொருந்திய கொன்றை மலர் மாலையைச் சூடி ஒரு காதில் நீண்ட குழை அணிந்தவனாய், வெண்மையான விடைக் கொடியைத் தனக்குரியதாகக் கொண்டவனாய், கோவணம் அணிந்தவனாய் விளங்கும் சிவபிரானது இடம், நிலவுலக மக்கள் ஒருங்கு கூடி நீண்டு விரிந்த தன் புகழைக் கூறி வணங்கப் புதர்கள் நிறைந்த வைகை யாறு சூழ்ந்துள்ள அழகிய திருப்பூவண மாகும். |
| 694. கூரார்வாளி சிலையிற்கோத்துக் கொடிமதில் கூட்டழித்த<br>போரார்வில்– மெல்–யலாளோர் பான்மகிழ்ந் தானிடமாம்<br>ஆராவன்பிற் றென்னர்சேரர் சோழர்கள் போற்றிசைப்பத்<br>தேரார்வீதி மாடநீடுந் தென்றிருப் பூவணமே. | கூர்மை பொருந்திய அம்பை வில்–ல் பூட்டி, கொடிகள் கட்டிப் பறந்த மும்மதில்களின் கூட்டுக்களையும் ஒருசேர அழித்த போர்வல்ல வில்வீரனும், மெல்–யலாகிய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டு மகிழ்பவனுமாகிய சிவபிரானது இடம், குன்றாத அன்போடு பாண்டியர் சேரர் சோழர் ஆகிய மூவேந்தர்கள் போற்றத் தேரோடும் திருவீதியையும் மாட வீடுகளையும் உடைய அழகிய திருப்பூவணமாகும். |

| | |
|---|---|
| **695.** நன்றுதீதென் றொன்றிலாத நான்மறை யோன்கழலே<br>சென்றுபேணி யேத்தநின்ற தேவர்பிரா னிடமாம்<br>குன்றிலொன்றி யோங்கமல்கு குளிர்பொழில் சூழ்மலர்மேல்<br>தென்றலொன்றி முன்றிலாருந் தென்றிருப் பூவணமே. | நன்மை தீமை என்பனவற்றுள் ஒன்றும் இல்லாதவனும், நான்கு வேதங்களை அருளியவனும், தேவர்களின் தலைவனுமான சிவபிரான் தன் திருவடிகளை அடைந்து அன்பர்கள் போற்றி அருள் பெறுமாறு நின்ற இடம், பொதிய மலையில் பொருந்தி அங்கு நிறைந்த ஓங்கிய குளிர் பொழில்களில் உள்ள மலர்களிற் படிந்து வந்து தென்றல் முன்றில்களில் தங்கி மகிழ்விக்கும் அழகிய திருப்பூவணமாகும். |
| **696.** பைவாயரவ மரையிற்சாத்திப் பாரிடம் போற்றிசைப்ப<br>மெய்வாய்மேனி நீறுபூசி யேறுகந் தானிடமாம்<br>கைவாழ்வளையார் மைந்தரோடுங் கலவியி னானெருங்கிச்<br>செய்வார்தொழி–ன் பாடலோவாத் தென்றிருப் பூவணமே. | படம் பொருந்திய வாயினை உடைய பாம்பை இடையில் கட்டிக் கொண்டு, பூதகணங்கள் போற்றிப் பாட, மேனி முழுதும் மெய்மை வடிவான திருநீற்றைப் பூசி, விடையேறை ஊர்ந்து வரும் சிவபிரானது இடம், கைகளில் வளையல்களை அணிந்துள்ள இளமகளிர் தம் காதலர்களோடு புணர்ச்சி விருப்புடையராய் நெருங்கிச் செய்யப்படும் கலவி பற்றிய பாடல்களின் ஓசை நீங்காத அழகிய திருப்பூவணமாகும். |
| **697.** மாடவீதி மன்னிலங்கை மன்னனை மாண்பழித்துக்<br>கூடவென்றி வாள்கொடுத்தாள் கொள்கையி னார்க்கிடமாம்<br>பாடலோடு மாடலோங்கிப் பன்மணி பொன்கொழித்து<br>ஓடிநீரால் வைகைசூழு முயர்திருப் பூவணமே. | மாடவீதிகள் நிலைபெற்ற இலங்கை மன்னன் இராவணன் பெருவீரன் என்று மக்கள் பாராட்டிய சிறப்பை அழித்து, அவன் பிழை உணர்ந்து பாடி வேண்டிய அளவில் உடன் வெற்றி நல்கும் வாளைக் கொடுத்து ஆளும் அருட்கொள்கை யாளனாகிய சிவபிரானுக்குரிய இடம், ஆடல் பாடல்களால் மிக்க சிறப்புடையதும், பல்வகை மணைகளையும் பொன்னையும் அடித்து ஓடிவரும் நீரோடு வைகையாறு சூழ்ந்ததுமான உயர்ந்த திருப்பூவணமாகும். |
| **698.** பொய்யாவேத நாவினானும் பூமகள் காதலனும்<br>கையாற்றொழுது கழல்கள்போற்றக் கனலெரி யானவனூர்<br>மையார்பொழி–ன் வண்டுபாட வைகைமணி கொழித்துச்<br>செய்யார்கமலந் தேனரும்புந் தென்றிருப் பூவணமே. | என்றும் பொய்யாகாத வேதங்களை ஓதும் நாவினன் ஆகிய நான்முகனும், மலர்மகள் கணவனாகிய திருமாலும், தம் கைகளால் தன் திருவடிகளைக் தொழுது போற்ற, சிவந்த எரி உருவான சிவபிரானது ஊர், கருநிறம் பொருந்திய சோலைகளில் வண்டுகள் பாடுவதும், வைகை ஆறு மணி கொழித்து வளம் சேர்ப்பதும், சிவந்த தாமரை மலர்களில் தேன் அரும்பி நிற்பதுமான அழகிய திருப்பூவணமாகும். |
| **699.** அலையார்புனலை நீத்தவருந் தேரருமன்பு செய்யா<br>நிலையாவண்ண மாயம்வைத்த நின்மலன் றன்னிடமாம்<br>மலைபோற்றுன்னி வென்றியோங்கு மாளிகை சூழ்ந்தயலே<br>சிலையார்புரிசை பரிசுபண்ணுந் தென்றிருப் பூவணமே. | அலைகள் வீசும் நீரில் நீராடாது அதனைத் துறந்த சமணரும் புத்தரும் புண்ணியப் பேறு இன்மையால் அன்பு செய்து வழிபாட்டில் நிலைத்திராது அவர்கட்கு மாயத்தை வைத்த குற்றமற்ற சிவபிரானுக்குரிய இடம், வெற்றி மிக்க மாளிகைகள் மலைபோல் நெருங்கி அமைய அவற்றைச் சூழ்ந்து கருங்கல்லால் ஆகிய மதில்கள் அழகு செய்யும் அழகிய திருப்பூவணமாகும். |

| | |
|---|---|
| 700. திண்ணார்புரிசை மாடமோங்குந் தென்றிருப் பூவணத்துப்<br>பெண்ணார்மேனி யெம்மிறையைப் பேரிய —ன்றமிழால்<br>நண்ணாருட்கக் காழிமல்கு ஞானசம்பந்தன் சொன்ன<br>பண்ணார்பாடல் பத்தும்வல்லார் பயில்வது வானிடையே. | வ—மை பொருந்திய மதில்களும் மாடவீடுகளும் நிறைந்த அழகிய திருப்பூவணத்தில் பெண்ணொரு பாகனாம் திருமேனியோடு விளங்கும் எம் தலைவனாகிய சிவபிரானைப் பெருமை பொருந்திய இனிய தமிழால் பகைவராய புறச் சமயத்தவர் அஞ்சுமாறு சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் சொல்—ய இவ்விசைத் தமிழ்ப் பாடல்கள் பத்தினையும் ஓத வல்லவர் வாழ்வது வான் உலகமாகும். |

## 65. காவிரிப்பூம்பட்டினத்துத் திருப்பல்லவனீச்சரம்

பண் : தக்கேசி

முதல் திருமுறை பதிக எண் : 65

| | |
|---|---|
| 701. அடையார்தம் புரங்கண்மூன்று மரழ—ல் லழுந்த<br>விடையார்மேனி யராய்ச்சீறும் வித்தகர் மேயவிடங்<br>கடையார்மாட நீடியெங்கும் கங்குல் புறந்தடவப்<br>படையார்புரிசைப் பட்டினஞ்சேர் பல்லவ னீச்சரமே. | பகைவராய அசுரர்களின் திரிபுரங்கள் தாங்குதற்கரிய அழ—ல் அழுந்துமாறு விடைமிசை ஏறிவரும் திருமேனியராய்ச் சென்று சினந்த வித்தகராகிய சிவபிரான் மேவிய இடம், வாயில்களோடு கூடிய மாடவீடுகள் எங்கும் உயர்ந்து விளங்குவதும், வான்வெளியைத் தடவும் மதில்களால் சூழப்பட்டதும் ஆகிய காவிரிப்பூம் பட்டினத்தைச் சேர்ந்த திருப்பல்லவனீச்சரமாகும். |
| 702. எண்ணாரெயில்கண் மூன்றுஞ்சீறு மெந்தையிரா<br>னிமையோர்<br>கண்ணாயுலகங் காக்கநின்ற கண்ணுதல் நண்ணுமிடம்<br>மண்ணார்சோலைக் கோலவண்டு வைகலுந் தேனருந்திப்<br>பண்ணார்செய்யும் பட்டினத்துப் பல்லவ னீச்சரமே. | பகைவராய அசுரர்களின் கோட்டைகளாய திரிபுரங்களைச் சினந்தழித்த எந்தையாகிய பெருமானும், தேவர்களின் கண்களாய் விளங்குவோனும், இவ்வுலகைக் காக்கின்ற கண்ணுதலும் ஆகிய சிவபிரான் மேவிய இடம், நன்கு அமைக்கப்பட்ட சோலைகளில் அழகிய வண்டுகள் நாள்தோறும் தேனுண்டு இசை பாடும் காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரமாகும். |
| 703. மங்கையங்கோர் பாகமாக வாணில வார்சடைமேற்<br>கங்கையங்கே வாழவைத்த கள்வ னிருந்தவிடம்<br>பொங்கயஞ்சேர் புணரியோத மீதுயர் பொய்கையின்மேற்<br>பங்கயஞ்சேர் பட்டினத்துப் பல்லவ னீச்சரமே. | உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு ஒளி பொருந்திய பிறை தங்கிய சடையின்மேல் கங்கை நங்கையையும் வாழ வைத்துள்ள கள்வனாகிய சிவபிரான் எழுந்தருளிய இடம், மிக்க ஆழமான கட—னது வெள்ள நீரால் தானும்மேலே உயர்ந்துள்ள நீர் நிலையாகிய பொய்கைகளில் தாமரை மலர்கள் பூத்துள்ள காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரமாகும். |
| 704. தாரார்கொன்றை பொன்றயங்கச் சாத்திய மார்பகலம்<br>நீரார்நீறு சாந்தம்வைத்த நின்மலன் மன்னுமிடம்<br>போரார்வேற்கண் மாதர்மைந்தர் புக்கிசை பாட—னாற்<br>பாரார்கின்ற பட்டினத்துப் பல்லவ னீச்சரமே. | மாலையாகக் கட்டிய கொன்றை மலர்கள் பொன்போல் விளங்குமாறு சூட்டியுள்ள மார்பின் பரப்பில், நீரில் குழைத்த சாம்பலைச் சந்தனத்தைப் போலப் பூசியுள்ள குற்றமற்ற சிவபிரான் எழுந்தருளிய இடம், போர் செய்யத் தகுதியான கூரிய வேல் போலும் கண்களையுடைய மாதர்களும் இளைஞர்களும் கூடி இசை பாடுதலால் அதனைக் கேட்க மக்கள் வெள்ளம்போல் திரண்டுள்ள காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரமாகும். |

| | |
|---|---|
| 705. மைசேர்கண்ட ரண்டவாணர் வானவ ருந்துதிப்ப மெய்சேர்பொடிய ரடியாரேத்த மேவி யிருந்தவிடங் கைசேர்வளையார் விழைவினோடு காதன்மை யாற்கழலே பைசேரரவா ரல்குலார்சேர் பல்லவ னீச்சரமே. | கருமை நிறம் பொருந்திய கண்டத்தினை உடையவரும், மண்ணக மக்களும் விண்ணகத் தேவரும் துதிக்க மேனிமிசைத் திருநீறு பூசியவனும் ஆகிய நிமலன், அடியவர் புகழ மேவியிருந்தருளும் இடம், கைகளில் மிகுதியான வளையல்களை அணிந்த பாம்பின் படம் போன்ற அல்குலை உடைய இளமகளிர் விழைவோடும் காதலோடும் திருவடிகளை வழிபடச் சேர்கின்ற திருப்பல்லவனீச்சரமாகும். |
| 706. குழ–னோசை வீணைமொந்தை கொட்ட முழவதிரக் கழ–னோசை யார்க்கவாடுங் கடவு ளிருந்தவிடஞ் சுழியிலாருங் கட–லோதந் தெண்டிரை மொண்டெறியப் பழியிலார்கள் பயில்புகாரிற் பல்லவ னீச்சரமே. | குழலோசைக்கு ஏற்ப வீணை, மொந்தை ஆகியன முழங்கவும், முழவு ஒ–க்கவும், கா–ல் அணிந்துள்ள வீரக்கழல் நடனத்துக்கு ஏற்பச் சதங்கை போல இசைக்கவும் ஆடும் கடவுளாகிய சிவபிரான் எழுந்தருளிய இடம், சுழிகள் பொருந்திய கட–ல் காவிரி வெள்ளநீர் தெளிந்த நீரை முகந்து எறியுமாறு விளங்குவதும், பழியற்ற நன்மக்கள் வாழ்வதுமான புகார் நகரிலுள்ள பல்லவனீச்சரமாகும். |
| 707. வெந்தலாய வேந்தன்வேள்வி வேரறச்சாடி விண்ணோர் வந்தெலாமுன் பேணநின்ற மைந்தன் மகிழ்ந்தவிடம் மந்தலாய மல்–கையும் புன்னைவளர் குரவின் பந்தலாரும் பட்டினத்துப் பல்லவ னீச்சரமே. | தகுதி இல்லாத மிக்க கூட்டத்தை உடைய தக்கன் என்னும் வேந்தன் செய்த வேள்வியை அடியோடு அழித்துத் தேவர்கள் எல்லோரும் வந்து தன்னை விரும்பி வழிபட நின்ற பெருவீரனாகிய சிவபிரானது இடம், மென்மையான மல்–கை வளர்ந்து பரவியுள்ள புன்னை குராமரம் ஆகியவற்றில் படர்ந்துள்ள, காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரமாகும். |
| 708. தேரரக்கன் மால்வரையைத் தெற்றி யெடுக்கவவன் றாரரக்குந் திண்முடிக ளூன்றிய சங்கரனூர் காரரக்குங் கடல்கிளர்ந்த காலமெலா முணரப் பாரரக்கம் பயில்புகாரிற் பல்லவ னீச்சரமே. | சிறந்த தேரை உடைய இராவணன் பெருமை மிக்க கயிலை மலையைக் கைகளைப் பின்னி அகழ்ந்து எடுக்க, மாலைகள் அழுத்தும் அவனது திண்ணிய தலைகள் பத்தையும் கால் விரலால் ஊன்றி நெரித்த சங்கரனது ஊர், மேகங்கள் வந்து அழுந்தி முகக்கும் கடல், கிளர்ந்து எழும் காலங்களிலும் அழியாது உணரப்படும் சிறப்பினதும், மக்கள் அக்குமணிமாலை பூண்டு போற்றி வாழும் பெருமையுடையதுமாகிய, புகார் நகரைச் சேர்ந்த பல்லவனீச்சரமாகும். |
| 709. அங்கமாறும் வேதநான்கு மோதுமய னெடுமால் தங்கணாலு நேடநின்ற சங்கரன் றங்குமிடம் வங்கமாரு முத்தமிப்பி வார்கட லூடலைப்பப் பங்கமில்லார் பயில்புகாரிற் பல்லவ னீச்சரமே. | ஆறு அங்கங்களையும், நான்கு வேதங்களையும், முறையே ஓதும் பிரமனும், திருமாலும் தம் கண்களால் தேருமாறு உயர்ந்து நின்ற சங்கரன் தங்கும் இடம், மரக்கலங்களை உடைய கடல் முத்துக்களையும் சங்கங்களையும் அலைக் கரங்களையும் அலைத்துத் தருவதும், குற்றமற்றோர் வாழ்வதுமாய புகாரில் அமைந்துள்ள பல்லவனீச்சரம் ஆகும். |

| | |
|---|---|
| 710. உண்டுடுக்கை யின்றியேநின் றூர்நக வேதிரிவார்<br>கண்டுடுக்கை மெய்யிற்போர்த்தார் கண்டறி யாதவிடந்<br>தண்டுடுக்கை தாளந்தக்கை சார நடம்பயில்வார்<br>பண்டிடுக்கண் டீரநல்கும் பல்லவ னீச்சரமே. | அளவுக்கு மீறி உண்டு ஆடையின்றி ஊரார் சிரிக்கத் திரியும் சமணர்களும், அவர்களைக் கண்டு தாமும் அவ்வாறு திரியாது ஆடையை மெய்யில் போர்த்து உழலும் புத்தர்களும் கண்டு அறியாத இடம், தண்டு, உடுக்கை, தாளம், தக்கை இவை பொருந்த நடனம் புரிபவராய், அடியவர் இடுக்கண்களைக் பண்டு முதல் தீர்த்தருளிவரும் பரமனார் எழுந்தருளிய பல்லவனீச்சரமாகும். |
| 711. பத்தரேத்தும் பட்டினத்துப் பல்லவ னீச்சரத்தெம்<br>அத்தன்றன்னை யணிகொள்காழி ஞானசம் பந்தன்சொற்<br>சித்தஞ்சேரச் செப்புமாந்தர் தீவினை நோயிலராய்<br>ஒத்தமைந்த வும்பர்வானி லுயர்வினொ டோங்குவரே. | பக்தர்கள் போற்றும் காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் விளங்கும் எம் தலைவனாகிய இறைவனை அழகிய சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகச் செழுந்தமிழை மனம் ஒன்றிச் சொல்– வழிபடும் மக்கள், தீவினையும் நோயும் இல்லாதவராய், அமைந்த ஒப்புடையவர் என்று கூறத் தேவர் உலகில் உயர்வோடு ஓங்கி வாழ்வர். |

## 66. திருச்சண்பைநகர்

பண் : தக்கேசி

முதல் திருமுறை பதிக எண் : 66

| | |
|---|---|
| 712. பங்கமேறு மதிசேர்சடையார் விடையார் பலவேதம்<br>அங்கமாறு மறைநான்கவையு மானார் மீனாரும்<br>வங்கமேவு கடல்வாழ்பரதர் மனைக்கே நுனைமூக்கின்<br>சங்கமேறி முத்தமீனுஞ் சண்பை நகராரே. | மீன்கள் நிறைந்ததும், கப்பல்களை உடையதும் ஆன கட–டையே வாழும் பரதவர்கள் வீட்டு முற்றங்களில் கூரிய மூக்கினை உடைய சங்குகள் முத்துக்களை ஈனுகின்ற கடற்கரை ஊராகிய சண்பை நகரில் மேவிய இறைவர் கலை குறைந்த பிறை மதி சேர்ந்த சடையினர். விடைஊர்தியர், பலவாய் விரிந்த நான்கு வேதங்களாகவும் ஆறு அங்கங்களாகவும் விளங்குபவர். |
| 713. சூதகஞ்சேர் கொங்கையாளோர் பங்கர் சுடர்க்கமலப்<br>போதகஞ்சேர் புண்ணியனார் பூத கணநாதர்<br>மேதகஞ்சேர் மேகமந்தண் சோலையில் விண்ணார்ந்த<br>சாதகஞ்சேர் பாளைநீர்சேர் சண்பை நகராரே. | வானகத்தே திரிந்து வாழும் சாதகப் பறவைகள் உண்ணுமாறு மேன்மை பொருந்திய மேகங்கள் பெய்த மழை நீர் அழகிய குளிர்ந்த சோலைகளில் விளங்கும் தெங்கு கமுகு இவற்றின் பாளைகளில் சேரும் சண்பை நகர் இறைவர், சூது ஆடு கருவி போன்ற தனபாரங்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவர். ஒளி பொருந்திய தாமரை மலரைச் சூடிய புண்ணிய வடிவினர். பூதகணங்களின் தலைவர். |
| 714. மகரத்தாடு கொடியோனுடலம் பொடிசெய் தவனுடைய<br>நிகரொப்பில்லாத் தேவிக்கருள்செய் நீல கண்டனார்<br>பகரத்தாரா வன்னம்பகன்றில் பாதம் பணிந்தேத்தத்<br>தகரப்புன்னை தாழைப்பொழில்சேர் சண்பை நகராரே. | எல்லோரும் புகழத்தாரா அன்னம் அன்றில் முத–ய பறவைகள் தம் திருவடிகளை வணங்கிப் போற்றுமாறு தகரம் புன்னை தாழை முத–ய மரங்களின் பொழில்கள் சூழ்ந்த சண்பை நகரில் விளங்கும் இறைவர், மகர மீன் வடிவு எழுதப்பட்டு, ஆடும் கொடியை உடைய மன்மதனது உடலை நீங்குமாறு செய்து, அழகில் தன்னொப்பில்லாத அவனுடைய மனைவி வேண்ட அவள் கண்களுக்கு மட்டும் மன்மதனைப் புலனாகுமாறு அருள் செய்த நீலகண்டர் ஆவார். |

| | |
|---|---|
| 715. மொய்வல்லசுரர் தேவர்கடைந்த முழுநஞ் சதுவுண்ட<br>தெய்வர்செய்ய வுருவர்கரிய கண்டர் திகழ்சுத்திக்<br>கையர்கட்டங் கத்தர்கரியி னுரியர் காதலாற்<br>சைவர்பாசு பதர்கள்வணங்குஞ் சண்பை நகராரே. | அன்போடு சைவர்களும் பாசுபதர்களும் வழிபடும் சண்பை நகர் இறைவர் வ–மை செறிந்த அசுரர்களும் தேவர்களும் கடலைக் கடைந்த போது எழுந்த நஞ்சு முழுவதையும் உண்டருளிய தெய்வமாவார். அவர் சிவந்த திருமேனி உடையவர். கருநிறம் பொருந்திய கண்டத்தினர். சுத்தியைக் கொண்டகையினர். மழுவினர் – யானைத் தோலைப் போர்த்தியவர். |
| 716. கலமார்கடலுள் விடமுண்டமரர்க் கமுத மருள்செய்த<br>குலமார்கயிலைக் குன்றதுடைய கொல்லை யெருதேறி<br>நலமார்வெள்ளை நாளிகேரம் விரியா நறும்பாளை<br>சலமார்கரியின் மருப்புக்காட்டுஞ் சண்பை நகராரே. | மக்கட்கு நன்மை தரும் மரமாகிய தென்னையி–ருந்து வெண்மை நிறத்தோடு வெளிவரும் மணம் மிக்க பாளை கபடம் மிக்க யானையின் மருப்புப் போலத் தோன்றும் சோலை வளம் மிக்க சண்பைநகர் இறைவர் மரக்கலங்கள் நிறைந்த கட–டையே தோன்றிய விடத்தை உண்டு அமரர்கட்கு அமுதம் அருள் செய்தவர். மலைக் குலங்களில் மேம்பட்ட கயிலை மலைக்கு உரியவர். முல்லை நிலத்து ஆனேற்றை ஊர்ந்து வருபவர். |
| 717. மாகரஞ்சே ரத்தியின்றோல் போர்த்து மெய்ம்மாலான<br>சூகரஞ்சே ரெயிறுபூண்ட சோதியன் மேதக்க<br>ஆகரஞ்சே ரிப்பிமுத்தை யந்தண் வயலுக்கே<br>சாகரஞ்சேர் திரைகளுந்துஞ் சண்பை நகராரே. | கட–ல் வாழும் சிப்பிகள் தந்த முத்துக்களை அழகியதாய்க் குளிர்ந்த வயல்களுக்குக் கடல் அலைகள் உந்தி வந்து சேர்க்கும் சண்பை நகர் இறைவன் நீண்ட கையினை உடைய யானையின் தோலை உரித்துப் போர்த்துள்ள திருமேனியில் திருமா–ன் பத்து அவதாரங்களில் ஒன்றான பன்றியின் பல்லை அணிகலனாகப் பூண்ட ஒளி வடிவினன். |
| 718. இருளைப்புரையு நிறத்திலரக்கன் றனையீ டழிவித்து<br>அருளைச்செய்யு மம்மானேரா ரந்தண் கந்தத்தின்<br>மருளைச்சுரும்பு பாடியளக்கர் வரையார் திரைக்கையாற்<br>றரளத்தோடு பவளமீனுஞ் சண்பை நகராரே. | அழகிய மணத்தோடு மருள் என்னும் பண்ணை வண்டுகள் பாட, கடல் மலை போன்ற அலைக் கைகளால் முத்துக்களையும் பவளங்களையும் கொணர்ந்து சேர்க்கும் சண்பை நகர் இறைவன் இருள் போன்ற கரிய நிறத்தினன் ஆகிய இராவணனின் வீரத்தை அழித்து அவன் உணர்ந்து வருந்து அருள் செய்த தலைவன். |
| 719. மண்டான்முழுது முண்டமாலு மலர்மிசை மேலயனும்<br>எண்தானறியா வண்ணநின்ற விறைவன் மறையோதி<br>தண்டார்குவளைக் கள்ளருந்தித் தாமரைத் தாதின்மேற்<br>பண்டான்கொண்டு வண்டுபாடுஞ் சண்பை நகராரே. | தண்டிலே மலர்ந்த குவளை மலர்களின் தேனை உண்டு தாமரை மலர்களில் நிறைந்துள்ள மகரந்தங்களில் தங்கி வண்டுகள் பண்பாடும் சண்பை நகர் இறைவன் உலகங்கள் முழுவதையும் உண்ட திருமால் தாமரை மலர் மேல் விளங்கும் நான்முகன் ஆகியோர் மனத்தாலும் அறிய ஒண்ணாதவாறு நின்றவன் வேதங்களை ஓதி வெளிப்படுத்தியவன். |

| | |
|---|---|
| 720. போதியாரும் பிண்டியாரும் புகழல சொன்னாலும்<br>நீதியாகக் கொண்டங்கருளு நிமல னிருநான்கின்<br>மாதிசித்தர் மாமறையின் மன்னிய தொன்னூலர்<br>சாதிகீத வர்த்தமானர் சண்பை நகராரே. | அணிமா முத–ய எண்வகைச் சித்திகளில் வல்ல சித்தர், பழமையான நூல்களாகிய வேதப் பொருள்களில் நிலைபெற்று நிற்பவர், சகாரம் முதலாகப் பாடப்படும் பாட்டில் நிலைத்திருப்பவர் ஆகிய சண்பை நகரார், புத்தர்களும் சமணர்களும் புகழ் அல்லவற்றைக் கூறினாலும் அவற்றைப் புகழ் மொழிகளாகக் கொண்டருளும் நிமலர். |
| 721. வந்தியோடு பூசையல்லாப் போழ்தின் மறைபேசிச்<br>சந்திபோதிற் சமாதிசெய்யுஞ் சண்பை நகர்மேய<br>அந்திவண்ணன் றன்னையழகார் ஞானசம் பந்தன்சொற்<br>சிந்தைசெய்து பாடவல்லார் சிவகதி சேர்வாரே. | அடியவர்கள் வந்தனையோடு பூசை செய்யும் காலங்கள் அல்லாத ஏனைய பொழுதுகளில் வேதப் பொருள்களைப் பேசியும், மூன்று சந்தியா காலங்களிலும் தியானம் சமாதி நிலையில் நின்று வழிபடும் சண்பை நகர்மேய, மாலைக்காலம் போன்ற செம்மேனியனாகிய இறைவனை, ஞானசம்பந்தன் அருளிய அழகிய இப்பதிகப் பொருளை மனத்தில் நிறுத்திப் பாடவல்லவர் சிவகதி சேர்வர். |

## 67. திருப்பழனம்

**பண் : தக்கேசி** **முதல் திருமுறை பதிக எண் : 67**

| | |
|---|---|
| 722. வேதமோதி வெண்ணூல்பூண்டு வெள்ளை யெருதேறிப்<br>பூதஞ்சூழப் பொ–யவருவார் பு–யி னுரிதோலார்<br>நாதாவெனவு நக்காவெனவு நம்பா வெனநின்று<br>பாதந்தொழுவார் பாவந்தீர்ப்பார் பழன நகராரே. | நாதனே எனவும், நக்கனே நம்பனே எனவும் கூறி நின்று தம் திருவடிகளைப் பரவும் அடியவர்களின் பாவங்களைத் தீர்த்தருளும் திருப்பழனத்து இறைவர் வேதங்களை ஓதிக் கொண்டு மார்பில் வெண்மையான பூணூலையணிந்து கொண்டு வெண்மையான எருதின் மிசை ஏறிப் பூதகணங்கள் புடைசூழப் பு–யின் தோலை அணிந்து பொ–வு பெற வருவார். |
| 723. கண்மேற்கண்ணுஞ் சடைமேற்பிறையு முடையார் காலனைப்<br>புண்ணாறுதிர மெதிராறோடப் பொன்றப் புறந்தாளால்<br>எண்ணாதுதைத்த வெந்தைபெருமா னிமவான் மகளோடும்<br>பண்ணார்களிவண் டறைபூஞ்சோலைப் பழன நகராரே. | மது உண்ட வண்டுகள் பண்பாடி ஒ– செய்யும் அழகிய சோலைகள் சூழ்ந்த திருப்பழன நகரில் இமவான் மகளாகிய பார்வதி தேவியோடு எழுந்தருளிய இறைவர் இயல்பாக உள்ள இரண்டு கண்களுக்கு மேலாக நெற்றியில் ஒரு கண்ணையும், சடைமுடிமேல் பிறையையும் உடையவர். காலனை உதைத்து, அவன் உட–ல் தோன்றிய புண்களி–ருந்து குருதி வெள்ளம் ஆறாக ஓடுமாறு, அவனை ஒரு பொருளாக மதியாது புறந்தாளால் அவன் அழிய உதைத்த எந்தை பெருமானார் ஆவார். |
| 724. பிறையும்புனலுஞ் சடைமேலுடையார் பறைபோல் விழிகட்பேய்<br>உறையுமயான மிடமாவுடையா ருலகர் தலைமகன்<br>அறையுமலர்கொண் டடியார்பரவி யாடல் பாடல்செய்<br>பறையுஞ்சங்கும் ப–யுமோவாப் பழன நகராரே. | அடியவர்கள் உயர்ந்தனவாகப் போற்றப்படும் நறுமலர்களைக் கொண்டுவந்து சாத்தி, பரவி, ஆடல் பாடல்களைச் செய்தும் பறை, சங்கு ஆகியவற்றை முழக்கியும், பணிந்தும் இடைவிடாது வழிபடும் திருப்பழனநகர் இறைவர் சடைமேல் பிறையையும், கங்கையையும் உடையவர். பறை வாய் போன்ற வட்டமான, விழிகளையுடைய பேய்கள்வாழும் மயானத்தைத் தமக்கு இடமாகக் கொண்டவர். அனைத்துலக மக்கட்கும் தலைவர். |

| | |
|---|---|
| 725. உரமன்னுயர்கோட் டுலறுகூகை யலறு மயானத்தில்<br>இரவிற்பூதம் பாடவாடி யெழிலா ரலர்மேலைப்<br>பிரமன்றலையி னறவமேற்ற பெம்மா னெமையாளும்<br>பரமன்பகவன் பரமேச்சுவரன் பழன நகராரே. | திருப்பழன நகர் இறைவர் வ–மை பொருந்திய உயரமான மரக்கிளைகளில் அமர்ந்து ஒ– செய்யும் கூகைகள் அலறும் மயானத்தே நள்ளிருளில் பூதங்கள் பாட ஆடியும் அழகிய தாமரை மலர்மேல் உறையும் பிரமனது தலையோட்டில் ப–யேற்றும் திருவிளையாடல் புரியும் பெருமானார் எம்மை ஆளும் பரமர் ஆவார். அவர் பகவன், பரமேச்சுரன் என்பவனாகிய பெயர்களை உடையவர். |
| 726. குலவெஞ்சிலையான் மதின்மூன்றெரித்த கொல்லே<br>றுடையண்ணல்<br>கலவமயிலுங் குயிலும்பயிலுங் கடல்போற் காவேரி<br>நலமஞ்சுடைய நறுமாங்கனிகள் குதிகொண் டெதிருந்திப்<br>பலவின்கனிக டிரைமுன்சேர்க்கும் பழன நகராரே. | தோகைகளையுடைய மயில்கள், குயில்கள் வாழ்வதும், கடல்போல் பரந்து விரிந்த காவிரி ஆற்றின் அலைகள் மாங்கனிகளையும், பலாவின் கனிகளையும் ஏந்திக் குதித்து உந்தி வந்து கரையிற் சேர்ப்பதுமாகிய திருப்பழன நகர் இறைவர், உயர்ந்த கொடிய மலை வில்லால் அசுரர்களின் முப்புரங்களையும் எரித்தவர். பகைவரைக் கொல்லும் ஆனேற்றையுடைய அண்ணல் ஆவார். |
| 727. வீளைக்குரலும் விளிச்சங்கொ–யும் விழவின் னொ–யோவா<br>மூளைத்தலைகொண் டடியாரேத்தப் பொடியா மதிளெய்தார்<br>ஈளைப்படுகி –லையார்தெங்கிற் குலையார் வாழையின்<br>பாளைக்கமுகின் பழம்வீழ்சோலைப் பழன நகராரே. | ஈரத்தன்மையுடைய ஆற்றுப் படுகைகளில் வளர்ந்த பசுமையான மட்டைகளோடு கூடிய தென்னை மரங்களின் குலைகளில் விளைந்த தேங்காயும், வாழை மரத்தில் பழுத்த வாழைப் பழங்களும், பாளைகளையுடைய கமுகமரங்களில் பழுத்த பாக்குப் பழங்களும் விழுகின்ற சோலைகளால் சூழப்பட்ட திருப்பழன நகர் இறைவர் அழைக்கும் சீழ்க்கை ஒ–யும் அழைக்கும் சங்கொ–யும், விழவின் ஆரவாரங்களும் ஓயாத ஊரகத்தே சென்று மூளை பொருந்திய தலையோட்டில் ப–யேற்பவர். அடியவர்கள் போற்றி வாழ்த்த முப்புரங்களையும் அழித்தவராவார். |
| 728. பொய்யாமொழியார் முறையாலேத்திப் புகழ்வார் திருமேனி<br>செய்யார்கரிய மிடற்றார்வெண்ணூல் சேர்ந்த வகலத்தார்<br>கையாட–னார் புனலான்மல்கு சடைமேற் பிறையோடும்<br>பையாடரவ முடனேவைத்தார் பழன நகராரே. | திருப்பழனநகர் இறைவர் பொய் கூறாத அடியவர்களால் முறைப்படி ஏத்திப் புகழப் பெறுவர். சிவந்த திருமேனி உடையவர். கரிய கண்டம் உடையவர். முப்புரிநூல் அணிந்த மார்பினை உடையவர். கைகளை வீசி ஆடல் புரிபவர். கங்கை சூடிய சடை முடி மீது பிறையையும், படப்பாம்பையும் ஒருசேர வைத்தவர். |
| 729. மஞ்சோங்குயர முடையான்மலையை மாறா யெடுத்தான்றோள்<br>அஞ்சோடஞ்சு மாறுநான்கு மடர வூன்றினார்<br>நஞ்சார்சுடலைப் பொடிநீறணிந்த நம்பான் வம்பாரும்<br>பைந்தாமரைகள் கழனிசூழ்ந்த பழன நகராரே. | மணம் கமழும் புதிய தாமரை மலர்களையுடைய வயல்களால் சூழப்பட்ட திருப்பழன நகர் இறைவர், வானகத்தே விளங்கும் மேகங்கள் அளவு உயர்ந்த தோற்றம் உடைய இராவணன் தனக்கு எதிராகக் கயிலை மலையைப் பெயர்க்க அவனுடைய இருபது தோள்களும் நெரியுமாறு கால்விரலை ஊன்றியவர். நச்சுத்தன்மை பொருந்திய சுடலையில் எரிந்த சாம்பலை அணிந்த பெருமானாகிய சிவனார் ஆவார். |

| | |
|---|---|
| 730. கடியார்கொன்றைச் சுரும்பின்மாலை கமழ்புன் சடையார்விண்<br>முடியாப்படிமூ வடியாலுலக முழுதுந் தாவிய<br>நெடியானீடா மரைமேலயனு நேடிக் காணாத<br>படியார்பொடியா டகலமுடையார் பழன நகராரே. | திருப்பழன நகர் இறைவர் மணங்கமழ்வதும் வண்டுகள் மொய்ப்பதுமான கொன்றை மாலை கமழ்கின்ற சிவந்த சடைமுடியையுடையவர். விண்ணளாவிய திருமுடியோடு இவ்வுலகம் முழுவதையும் மூவடியால் அளந்த நெடியோனாகிய திருமாலும், நீண்ட தண்டின்மேல் வளர்ந்த தாமரை மலர்மேல் விளங்கும் நான்முகனும் தேடிக் காணமுடியாத தன்மையை யுடையவர். திருநீற்றுப் பொடியணிந்த மார்பினையுடையவர். |
| 731. கண்டான்கழுவா முன்னேயோடிக் கலவைக் கஞ்சியை<br>உண்டாங்கவர்க ளுரைக்குஞ்சிறுசொல் லோரார் பாராட்ட<br>வண்டாமரையின் மலர்மேனறவ மதுவாய் மிகவுண்டு<br>பண்டான்கெழும வண்டியாழ்செய்யும் பழன நகராரே. | வண்டுகள் வளமையான தாமரை மலர்மேல் விளங்கும் தேனாகிய மதுவை வாயால் மிக உண்டு பண்பொருந்த யாழ்போல் ஒ– செய்யும் கழனிகளையுடைய திருப்பழன நகர் இறைவர், கண்களைக் கூடக் கழுவாமல் முந்திச் சென்று கலவைக் கஞ்சியை உண்பவர்களாகிய சமணர்கள் உரைக்கும் சிறு சொல்லைக் கேளாத அடியவர்கள் பாராட்ட விளங்குபவராவார். |
| 732. வேய்முத்தோங்கி விரைமுன்பரக்கும் வேணுபுரந் தன்னுள்<br>நாவுய்த்தனைய திறலான்மிக்க ஞான சம்பந்தன்<br>பேசற்கினிய பாடல்பயிலும் பெருமான் பழனத்தை<br>வாயிற்பொ–ந்த மாலைபத்தும் வல்லார் நல்லாரே. | மூங்கில் மரங்கள் முத்துக்களோடு ஓங்கி வளர்ந்து மணம் பரப்பும் வேணுபுர நகரில் உள்ள, நாவினால் வல்ல திறன் மிக்க ஞானசம்பந்தன் திருப்பழனப் பெருமான் மீது, பேசற்கினிய பாடல்களாய்த் தன் வாயால் பாடிய இப்பதிகப் பாமாலை பத்தையும், இசையுடன் பாடவல்லவர் நல்லவர் ஆவார். |

## 68. திருக்கயிலாயம்

பண் : தக்கேசி — முதல் திருமுறை பதிக எண் : 68

| | |
|---|---|
| 733. பொடிகொளுருவர் பு–யினதளர் புரிநூல் திகழ்மார்பில்<br>கடிகொள்கொன்றை கலந்தநீற்றர் கறைசேர் கண்டத்தர்<br>இடியகுரலா –ரியுமடங்கல் தொடங்கு முனைச்சாரல்<br>கடியவிடைமேற் கொடியொன்றுடையார் கயிலை<br>மலையாரே. | மேகங்களின் இடிக்குரல் கேட்டு அஞ்சிய சிங்கங்கள், நிலைகெட்டு ஓடத்தொடங்கும் சாரலை உடைய கயிலை மலையில் வாழும் இறைவர், திருநீறு பூசிய திருமேனியை உடையவர். பு–யின் தோலை உடுத்தவர். முப்புரி நூல் விளங்கும் மார்பில் மணம் கமழும் கொன்றை மாலையோடு திருநீற்றையும் அணிந்தவர். விடக் கறை பொருந்திய கண்டத்தை உடையவர். விரைந்து செல்லும் விடை மீது ஏறி அவ்விடை எழுதிய கொடி ஒன்றையே தம் கொடியாகக் கொண்டவர். |
| 734. புரிகொள்சடைய ரடியர்க்கெளியார் கிளிசேர் மொழிமங்கை<br>தெரியவுருவில் வைத்துகந்த தேவர் பெருமானார்<br>பரியகளிற்றை யரவுவிழுங்கி மழுங்க விருள்கூர்ந்த<br>கரியமிடற்றர் செய்யமேனிக் கயிலை மலையாரே. | பெரிய களிற்றி யானையை மலைப்பாம்பு விழுங்கி மறையும் இருள் மிக்க கயிலை மலையில் விடம் உண்ட கரிய கண்டராய்ச் சிவந்த திருமேனியராய் விளங்கும் இறைவர் வளைத்துக் கட்டிய சடைமுடியை உடையவர். அடியவர்க்கு எளிமையானவர். கிளி போன்ற மெல்–ய மொழி பேசும் உமை மங்கையைப் பலருக்கும் தெரியுமாறு ஒரு பாகமாகக் கொண்டு மகிழ்ந்த தேவர் தலைவராவார். |

| | |
|---|---|
| 735. மாவினுரிவை மங்கைவெருவ மூடி முடிதன்மேல்<br>மேவு மதியு நதியும்வைத்த விறைவர் கழலுன்னும்<br>தேவர்தேவர் திரிசூலத்தர் திரங்கன் முகவன்சேர்<br>காவும்பொழிலுங் கடுங்கற்சுனைசூழ் கயிலை<br>மலையாரே. | திரங்கிய தோலை உடைய குரங்குகள் வாழும் காடுகளும் பொழில்களும் மலையிடையே இயற்கையாக அமைந்த சுனைகளும் சூழ்ந்த கயிலை மலைப் பெருமானார் உமையம்மை அஞ்ச யானையின் தோலை உரித்துப் போர்த்திக் கொண்டு முடிமீது பிறை கங்கை ஆகியவற்றைக் கொண்ட இறைவர், தம் திருவடிகளை நினைந்து போற்றும் தேவர்களின் தேவர், முத்தலைச் சூலத்தை உடையவர். |
| 736. முந்நீர்சூழ்ந்த நஞ்சமுண்ட முதல்வர் மதனன்றன்<br>தென்னீருருவ மழியத்திருக்கண் சிவந்த நுத–னார்<br>மன்னீர்மடுவும் படுகல்லறையி னுழுவை சினங்கொண்டு<br>கன்னீர்வரைமே –ரைமுன்றேடுங் கயிலை மலையாரே. | இயற்கையாகத் தோன்றிய மலைக் குகைகளில் வாழும் பு–கள், பசியினால் சினமடைந்து கல்லால் இயன்ற மலைமிசை உணவாதற்குரிய இரைகளையும், அருந்துவதற்கு நிலைபெற்ற நீரையுடைய மடுக்களையும் தேடும் கயிலை மலையில் உறையும் தலைவர், கட–ல் பரவித் தோன்றிய நஞ்சினைத் திரட்டி உண்டவர். மன்மதனின் அழகிய உருவம் அழியக் கண் சிவந்த நுதலை உடையவர். |
| 737. ஒன்றும்பலவு மாயவேடத் தொருவர் கழல்சேர்வார்<br>நன்றுநினைந்து நாடற்குரியார் கூடித் திரண்டெங்கும்<br>தென்றியிருளிற் றிகைத்தகரிதண் சாரல் நெறியோடிக்<br>கன்றும்பிடியு மடிவாரஞ்சேர் கயிலை மலையாரே. | இரவில் சிதறித் தனிமைப்பட்ட யானைகள் குளிர்ந்த மலைச் சார–ன் வழிகளில் விரையச் சென்று கன்றும் பிடியுமாய் இணையும் கயிலை மலைக்குரிய இறைவர். ஒருவராக இருந்தே பற்பல வடிவங்களைக் கொண்ட ஒப்பற்ற பரம்பொருளாவார். தம் திருவடிகளை அடைய எண்ணும் அடியவர்கள் பேரின்பத்தை அடையும் விருப்போடு நாடுதற்குரியவர். |
| 738. தாதார் கொன்றை தயங்குமுடியர் முயங்கு மடவாளைப்<br>போதார்பாக மாகவைத்த புனிதர் பனிமல்கும்<br>மூதாருலகின் முனிவருடனா யறநான் கருள்செய்த<br>காதார்குழையர் வேதத்திரளர் கயிலை மலையாரே. | கயிலைமலை இறைவர், மகரந்தம் நிறைந்த கொன்றை மாலை விளங்கும் முடியினை உடையவர். தம்மைத் தழுவிய உமையம்மையை மென்மையான இடப்பாகமாக ஏற்ற தூயவர். குளிர்ந்த இவ்வுலகின்கண் வயதால் முதிர்ந்த சனகர் முத–ய முனிவர்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கையும் அருளிச் செய்தவர். வலக் காதில் குழை அணிந்தவர். வேத வடிவாய் விளங்குபவர். |
| 739. தொடுத்தார் புரமூன் றெரியச்சிலைமே லெரியொண்<br>பகழியார்<br>எடுத்தான்திரள்தோள் முடிகள்பத்து மிடிய விரல்வைத்தார்<br>கொடுத்தார்படைகள் கொண்டாராளாக் குறுகிவருங்<br>கூற்றைக்<br>கடுத்தாங்கவனைக் கழலாலுதைத்தார் கயிலை மலையாரே. | கயிலைமலை இறைவர் முப்புரங்களை மேரு வில்லை வளைத்து எரியாகிய ஒளி பொருந்திய அம்பைத் தொடுத்து எரித்து அழித்தவர். கயிலை மலையைப் பெயர்த்த இராவணனின் திரண்ட தோள்கள் பத்துத்தலைகள் ஆகியன நெரியுமாறு கால்விரலை ஊன்றியவர். அவன் பிழையுணர்ந்து வருந்த அவனை அடிமையாக ஏற்று வாள் முத–ய படைகள் கொடுத்தவர். மார்க்கண்டேயனின் உயிரைக் கவர அவன்மேல் நெருங்கி வந்த எமனைச் சினந்து அவனைக் காலால் உதைத்தவர். |

| | |
|---|---|
| 740. ஊணாப்ப–கொண் டுலகிலேற்றா ரிலகு மணிநாகம்<br>பூணாணார மாகப்பூண்டார் புகழு மிருவர்தாம்<br>பேணாவோடி நேடவெங்கும் பிறங்கு மெரியாகிக்<br>காணாவண்ண முயர்ந்தார்போலுங் கயிலை மலையாரே. | கயிலை மலை இறைவர் உலகில் மகளிர் இடும் ப–யை உணவாகக் கொண்டு அதனை ஏற்றவர். விளங்கும் மணிகளைக் கொண்டுள்ள நாகங்களை அணிகலனாகப் பூண்டவர். எல்லோராலும் புகழப்பெறும் திருமால் பிரமர்கள் அடிமுடி காண விரும்பிச் சென்று தேட எங்கும் விளங்கும் எரியுருவோடு அவர்கள் காணாதவாறு உயர்ந்து நின்றவர். |
| 741. விருதுபகரும் வெஞ்சொற்சமணர் வஞ்சச் சாக்கியர்<br>பொருதுபகரு மொழியைக்கொள்ளார் புகழ்வார்க் கணியராய்<br>எருதொன்றுகைத்திங் கிடுவார்தம்பால் இரந்துண்<br>டிகழ்வார்கள்<br>கருதும்வண்ண முடையார்போலுங் கயிலை மலையாரே. | தாம் பெற்ற விருதுகளைப் பலரிடமும் சொல்–ப் பெருமை கொள்ளும் இயல்புடைய கொடுஞ்சொல் பேசும் சமணரும் வஞ்சனையான மனமுடைய சாக்கியரும் பிற சமயத்தவரோடு சண்டையிட்டுக் கூறும் சொற்களைக் கேளாதவராய், புகழ்ந்து போற்றுவார்க்கு அணிமையானவராய் விடை ஒன்றைச் செலுத்தி உணவிடுவார்பால் இரந்து உண்பவராய் இகழ்பவரும் தம் பெருமையை நினைந்து போற்றும் இயல்பினராய் விளங்குபவர் கயிலைமலை இறைவர். |
| 742. போரார்கட–ற் புனல்சூழ்காழிப் புகழார் சம்பந்தன்<br>காரார்மேகங் குடிகொள்சாரற் கயிலை மலையார்மேல்<br>தேராவுரைத்த செஞ்சொன்மாலை செப்பு மடியார்மேல்<br>வாராபிணிகள் வானோருலகின் மருவு மனத்தாரே. | கரையோடு போர் செய்யும் கட–னது நீரால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் தோன்றிய புகழ் பொருந்திய ஞானசம்பந்தன். கரிய மேகங்கள் நிலையாகத் தங்கியுள்ள சாரலை உடைய கயிலைமலை இறைவர்மேல் தெளிந்துரைத்த இச்செஞ்சொல் மாலையாகிய திருப்பதிகத்தை ஓதும் அடியவர்பால் பிணிகள்வாரா. அவர்கள் வானோர் உலகில் மருவும் மனத்தினராவர். |

## 69. திருவண்ணாமலை

பண் : தக்கேசி

முதல் திருமுறை பதிக எண் : 69

| | |
|---|---|
| 743. பூவார்மலர்கொண் டடியார்தொழுவார் புகழ்வார்<br>வானோர்கள்<br>மூவார்புரங்க ளெரித்தவன்று மூவர்க் கருள்செய்தார்<br>தூமாமழைநின் றதிரவெருவித் தொறுவின் னிரையோடும்<br>ஆமாம்பிணைவந் தணையுஞ்சாரல் அண்ணா மலையாரே. | நீர்த்துளிகளைத் தூவும் கரிய மேகங்கள் வானத்தில் நின்றவாறு இடி முழக்கத்தைச் செய்ய, அதனைக் கேட்டு அஞ்சிய காட்டுப் பசுக்களின் மந்தைகளான வரிசைகள் வந்து ஒருங்கிணையும் அடிவாரத்தை உடைய திருவண்ணாமலை இறைவர், அடியவர்கள் பொ–வுமிக்க நறுமலர்களைத் தூவி வழிபடவும், வானோர்கள் புகழ்ந்து போற்றவும், அழியா வரம் பெற்ற அசுரர்களின் முப்புரங்களை எரித்து அழித்து அவ்வசுரர்களில் மூவர்க்கு அருளையும் வழங்கிய பெருமையுடையவர். |

| | |
|---|---|
| 744. மஞ்சைப் போழ்ந்த மதியஞ்சூடும் வானோர் பெருமானார்<br>நஞ்சைக்கண்டத் தடக்குமதுவு நன்மைப் பொருள்போலும்<br>வெஞ்சொற்பேசும் வேடர்மடவா ரிதண மதுவேறி<br>அஞ்சொற்கிளிக ளாயோவென்னும் அண்ணா மலையாரே. | குத்து வெட்டு முத–ய கொடிய சொற்களையே பேசும் வேடர்களின் பெண்கள் தினைப் புனங்களில் பரண்மீது ஏறியிருந்து தினைகவர வரும் அழகிய சொற்களைப் பேசும் கிளிகளை ஆயோ என ஒ–யெழுப்பி ஒட்டும் திருவண்ணாமலை இறைவர், மேகங்களைக் கிழித்துச் செல்லும் பிறைமதியை முடியிற்சூடும் வானவர் தலைவர். கட–டைத் தோன்றிய நஞ்சையுண்டு கண்டத்தில் அடக்கியவர். இச்செயல் உலகத்தை அழியாது காக்கும் நன்மை கருதியதேயாகும். |
| 745. ஞானத்திரளாய் நின்றபெருமா னல்ல வடியார்மேல்<br>ஊனத்திரளை நீக்குமதுவு முண்மைப் பொருள்போலும்<br>ஏனத்திரளோ டினமான்கரடி யிழியு மிரவின்கண்<br>ஆனைத்திரள்வந் தணையுஞ்சாரல் அண்ணா<br>மலையாரே. | இராப்போதில் பன்றிகளின் கூட்டமும், மான் இனங்களும், கரடிகளும், ஒருங்கே இறங்கிவரும் மலைச்சார–ல் யானைகளின் கூட்டமும் வந்தணையும் திருவண்ணாமலை இறைவர், ஞானப் பிழம்பாய் நிற்பவர். நன்மைகளையே கருதும் அடியவர்கள் ஊனுடலோடு பிறக்கும் பிறவிகளை நீக்குபவர். இவ்வருட்செயல் வேதாகம நூல்கள் உணர்த்தும் உண்மைப் பொருளாகும். |
| 746. இழைத்தவிடையா ளுமையாள்பங்க ரிமையோர் பெருமானார்<br>தழைத்தசடையார் விடையொன்றேறித் தரியார் புரமெய்தார்<br>பிழைத்தபிடியைக் காணாதோடிப் பெருங்கை மதவேழம்<br>அழைத்துத்திரிந்தங் குறங்குஞ்சாரல் அண்ணா மலையாரே. | தன்னைவிட்டுப் பிரிந்த பெண் யானையைக் காணாத பெரிய கையை உடைய மதம் பொருந்திய ஆண் யானை, குரல் கொடுத்து அழைத்துத் திரிந்து அலுத்து உறங்கும் சாரலை உடைய திருவண்ணாமலை இறைவர், நூல் போன்று நுண்ணிய இடையினை உடைய உமையம்மையை ஒருபாகமாக உடையவர். விடைமீது ஏறிச் சென்று பகைவரின் முப்புரங்களை எரித்தவர். |
| 747. உருவிற்றிகழு முமையாள்பங்க ரிமையோர் பெருமானார்<br>செருவில்லொருகால் வளையவூன்றிச் செந்தீ யெழுவித்தார்<br>பருவிற்குறவர் புனத்திற்குவித்த பருமா மணிமுத்தம்<br>அருவித்திரளோ டிழியுஞ்சாரல் அண்ணா மலையாரே. | பெரிய வில்லை ஏந்திய குறவர்கள் விளைநில வரப்புகளில் குவித்து வைத்திருந்த பெரிய முத்துக்களும் மணிகளும் அருவித்திரள்களின் வழியே நிலத்தில் வந்து இழியும் திருவண்ணாமலை இறைவர், உருவத்தால் அழகிய உமையவளை ஒருபாகமாகக் கொண்டவர். இமையவர்கட்குத் தலைவர். பெரிய போர்வில்லை ஒரு காலால் ஊன்றிக்கொண்டு வளைத்துக் கணை எய்து முப்புரங்களும் செந்தீயால் அழிந்து விழுமாறு செய்தவர். |
| 748. எனைத்தோரூழி யடியாரேத்த விமையோர் பெருமானார்<br>நினைத்துத்தொழுவார் பாவந்தீர்க்கும் நிமல ருறைகோயில்<br>கனைத்தமேதி காணாதாயன் கைம்மேற் குழலூத<br>அனைத்துஞ்சென்று திரளுஞ்சாரல் அண்ணா மலையாரே. | மலைச்சார–ல் புல் மேய்க்கச் சென்ற ஆயன் கனைத்து மேய்ந்த தம் எருமைகளைக் காணாதவனாய்த் தன் கையி–ருந்த வேய்ங்குழலை ஊத அவ்வளவில் அனைத்தெருமைகளும் வீடு திரும்பும் விருப்போடு ஒன்று திரளும் அடிவாரத்தை உடைய திருவண்ணாமலை, அடியவர்கள் தன்னைத் துதிக்க இமையவர் தலைவனாய்ப் பல்லூழிக் காலங்களைக் கண்ட பழையோனாய் விளங்கும் தன்னை நினைத்துத் தொழும் அன்பர்களின் பாவங்களைத் தீர்த்தருளும் நிமலனாய் விளங்கும் அப்பெரியோனின் கோயிலாக விளங்குவது ஆகும். |

| | |
|---|---|
| 749. வந்தித்திருக்கு மடியார்தங்கள் வருமேல் வினையோடு<br>பந்தித்திருந்த பாவந்தீர்க்கும் பரம னுறைகோயில்<br>முந்தியெழுந்த முழவினோசை முதுகல் வரைகண்மேல்<br>அந்திப்பிறைவந் தணையுஞ்சாரல் அண்ணா மலையாரே. | விழா நிகழ்ச்சிகளை முன்னதாக அறிவித்தெழும் முழவின் ஓசை இடையறாது கேட்பதும், பழமையான மலைப் பாறைகளுக்கு இடையே அந்திக்காலத்துப் பிறை வந்து அணைவதுமாகிய திருவண்ணாமலையில் விளங்கும் இறைவன் தன்னை வழிபட்டு வேறு நினைவின்றி இருக்கும் அடியவர்களின் ஆகாமிய வினைகளோடு அவர்களைப் பந்தித்திருக்கும் பாவங்களையும் போக்கியருளும் பரமனாவான். அவனது கோயில் திருவண்ணாமலையாகும். |
| 750. மறந்தான்கருதி வ–யைநினைந்து மாறா யெடுத்தான்றோள்<br>நிறந்தான்முரிய நெரியவூன்றி நிறைய வருள்செய்தார்<br>திறந்தான்காட்டி யருளாயென்று தேவ ரவர்வேண்ட<br>அறந்தான்காட்டி யருளிச்செய்தார் அண்ணா மலையாரே. | தனது வ–மையை வெளிப்படுத்தித் திரிபுர அசுரர்களை அழித்து அருள்புரியுமாறு தேவர்கள் வேண்ட, தீயவரை ஒறுப்பது அறநெறியின் பாற்பட்டதாதலை உணர்த்தும் நிலையில் அசுரர்களை அழித்துத் தேவர்கட்கு அருள்செய்த பெருமானாகிய திருவண்ணாமலை இறைவன், தன் வ–மையையும், பெற்ற வெற்றிகளையும் பெரிதாக எண்ணியவனாய்த் தனக்கு மாறாகத் தான் உறையும் கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணனின் மார்பு தோள் ஆகியவற்றை நெரியுமாறு காலை ஊன்றிப் பின் அவ்விராவணன் வேண்ட அவனுக்கு அருள் செய்த மேம்பாடுடையவனாவன். |
| 751. தேடிக்காணார் திருமால்பிரமன் றேவர் பெருமானை<br>மூடியோங்கி முதுவேயுகுத்த முத்தம் பலகொண்டு<br>கூடிக்குறவர் மடவார்குவித்துக் கொள்ள வம்மினென்<br>றாடிப்பாடி யளக்குஞ்சாரல் அண்ணா மலையாரே. | மலையை மூடி ஓங்கி வளர்ந்த பழமையான மூங்கில் மரங்கள் உகுத்த முத்துக்கள் பலவற்றைக் குறவர்குலப் பெண்கள் ஓரிடத்தே குவித்து வைத்து அவற்றை வாங்கிட வருக என மக்களை அழைத்து ஆடிப்பாடி அவர்களுக்கு அளந்து அளிக்கும் திருவண்ணாமலை இறைவனாகிய தேவர் பெருமானைத் திருமால் பிரமன் ஆகிய இருவர் தேடிக் காணாதவராயினர். |
| 752. தட்டையிடுக்கித் தலையைப்பறித்துச் சமணே நின்றுண்ணும்<br>பிட்டர்சொல்லுக் கொள்ளவேண்டா பேணித் தொழுமின்கள்<br>வட்டமுலையா ளுமையாள்பங்கர் மன்னி யுறைகோயில்<br>அட்டமாளித் திரள்வந்தணையும் அண்ணா மலையாரே. | தடுக்கை அக்குளில் இடுக்கிக் கொண்டு தலை மயிரை ஒன்றொன்றாகப் பறித்த முண்டிதராய் ஆடையின்றி நின்றுண்ணும் சமணர்களாகிய பித்தர்களின் சொற்களைப் பொருளெனக் கொள்ளல் வேண்டா. வட்டமான தனங்களைக் கொண்ட உமையம்மையின் பங்கராய், மலைச்சாரல்களில் சிங்க ஏறுகள் கூட்டமாய் வந்தணையும் திருவண்ணாமலையில் வீற்றிருந்தருளும் பெருமான் நிலையாக எழுந்தருளி உறையும் கோயிலை விரும்பித் தொழுவீராக. |

| | |
|---|---|
| 753. அல்லாடரவ மியங்குஞ்சாரல் அண்ணா மலையாரை<br>நல்லார்பரவப் படுவான்காழி ஞான சம்பந்தன்<br>சொல்லான்ம—ந்த பாடலான பத்து மிவைகற்று<br>வல்லாரெல்லாம் வானோர்வணங்க மன்னி வாழ்வாரே. | இரவு வேளைகளில் படம் எடுத்தாடும் பாம்புகள் இயங்கும் சாரலை உடைய திருவண்ணா மலையில் உறையும் இறைவரை, நல்லவர்களால் போற்றப்படுபவனாகிய, சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய அருஞ்சொல்லமைப்புக்கள் நிறைந்த இப்பதிகப் பாடல்கள் பத்தையும் கற்று வல்லவர் அனைவரும் வானோர் வணங்க நிலைபெற்று வாழ்வர். |

## 70. திருவீங்கோய்மலை

**பண் : தக்கேசி** **முதல் திருமுறை பதிக எண் : 70**

| | |
|---|---|
| 754. வானத்துயர்தண் மதிதோய்சடைமேன் மத்த மலர்சூடித்<br>தேனொத்தனமென் மொழிமான்விழியாள் தேவி பாகமாக்<br>கானத்திரவி லெரிகொண்டாடுங் கடவு ளுலகேத்த<br>ஏனத்திரள்வந் திழியுஞ்சாரல் ஈங்கோய் மலையாரே. | வானத்தில் உயர்ந்து விளங்கும் குளிர்ந்த சந்திரன் தோயும் சடைமுடிமேல் ஊமத்தம் மலர்களைச் சூடித் தேன் போன்ற இனிய மொழிகளையும் மான் விழிபோலு கண்களையுமுடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு சுடுகாட்டில் இரவில் எரியேந்தி ஆடும் இறைவர் உலகமக்கள் உணர்ந்து போற்றுமாறு பன்றிகள் பலகூடி இறங்கிவரும் சாரலையுடைய திருவீங்கோய்மலையில் எழுந்தருளியுள்ளார். |
| 755. சூலப்படையொன் றேந்தியிரவிற் சுடுகா டிடமாகக்<br>கோலச்சடைக டாழக்குழல்யாழ் மொந்தை கொட்டவே<br>பாலொத்தனைய மொழியாள்காண வாடும் பரமனார்<br>ஏலத்தொடுநல் —லவங்கமழும் ஈங்கோய் மலையாரே. | முத்தலைச் சூலம் ஒன்றைத்தமது படைக்கலனாக ஏந்தி இரவில் சுடுகாட்டை இடமாகக் கொண்டு அழகிய சடைகள் தாழ்ந்து தொங்கவும், குழல் யாழ் மொந்தை ஆகிய இசைக் கருவிகள் முழங்கவும், பால் போன்று இனிய மொழியினை உடைய பார்வதிதேவி காண ஆடும் பரமர் ஏலம் நல்ல இலவங்கம் முத—யன கமழும் திருவீங்கோய்மலையின்கண் எழுந்தருளியுள்ளார். |
| 756. கண்கொணுதலார் கறைகொண்மிடற்றார் கரியி<br>னுரிதோலார்<br>விண்கொண்மதிசேர் சடையார்விடையார் கொடியார்<br>வெண்ணீறு<br>பெண்கொள்திருமார் பதனிற்பூசும் பெம்மா னெமையாள்வார்<br>எண்குமரியுந் திரியுஞ்சாரல் ஈங்கோய் மலையாரே. | கண் ஒன்றைக் கொண்ட நுத—னரும், விடக்கறை பொருந்திய கண்டத்தினரும், யானையின் தோலை உரித்துப் போர்த்தவரும், வானில் விளங்கும் மதியைச் சூடிய சடையினரும், விடைக் கொடியினரும், ஒருபாகமாக உமையம்மையைக் கொண்டுள்ளவரும் திருவெண்ணீற்றைத் திருமேனியின் மார்பகத்தே பூசுபவரும் ஆகிய எமை ஆள்பவராகிய பெருமான் கரடிகளும், சிங்கங்களும் திரியும் சாரலை உடைய திருவீங்கோய் மலையில் எழுந்தருளியுள்ளார். |
| 757. மறையின்னிசையார் நெறிமென்கூந்தன் மலையான்<br>மகளோடும்<br>குறைவெண்பிறையும் புனலுந்நிலவுங் குளிர்புன் சடைதாழப்<br>பறையுங்குழலுங் கழலுமார்ப்பப் படுகாட் டெரியாடும்<br>இறைவர்சிறைவண் டறைபூஞ்சாரல் ஈங்கோய் மலையாரே. | சிறகுகளையுடைய வண்டுகள் ஒ—க்கும் அழகிய சாரலை உடைய திருவீங்கோய் மலை இறைவர் வேதங்களை இனிய இசையோடு பாடுபவர். வளைவுகளோடு கூடிய மென்மையான கூந்தலையுடைய மலையரையன் மகளாகிய பார்வதி தேவியோடு, கலைகள் குறைந்த வெண்மையான பிறையும் கங்கையும் விளங்கும் குளிர்ந்த மென்மையான சடைகள் தாழ, பறை குழல் இவற்றோடு கா—ற் கட்டிய கழலும் ஆரவாரிக்கப் பிணங்களை எரிக்கும் சுடுகாட்டுள் எரியேந்தி ஆடுபவராவார். |

| | |
|---|---|
| 758. நொந்தசுடலைப் பொடிநீறணிவார் நுதல்சேர் கண்ணினார்<br>கந்தமலர்கள் பலவுந்நிலவு கமழ்புன் சடைதாழப்<br>பந்தண்விரலாள் பாகமாகப் படுகாட் டெரியாடும்<br>எந்தம்மடிகள் கடிகொள்சாரல் ஈங்கோய் மலையாரே. | நறுமணங்களைக் கொண்டுள்ள சாரலையுடைய திருவீங்கோய்மலை இறைவர், இறந்தார் உடலை எரிக்கும் சுடலையில் விளைந்த சாம்பற் பொடியைத் திருநீறாக அணிந்தவர். நெற்றியைச் சார்ந்துள்ள விழியையுடையவர். மணம் பொருந்திய மலர்கள் பலவும் விளங்கும் மணங்கமழ் செஞ்சடைகள் தாழ்ந்து தொங்கப் பந்து சேரும் கைவிரல்களையுடைய உமையம்மை ஒரு பாகமாக விளங்கச் சுடுகாட்டில் எரியாடுபவர். |
| 759. நீறாரகல முடையார்நிரையார் கொன்றை யரவோடும்<br>ஆறார்சடையா ரயில்வெங்கணையா லவுணர் புரமூன்றும்<br>சீறாவெரிசெய் தேவர்பெருமான் செங்க ணடல்வெள்ளை<br>ஏறார்கொடியா ருமையாளோடும் ஈங்கோய் மலையாரே. | உமையம்மையோடு திருவீங்கோய் மலையில் எழுந்தருளியுள்ள இறைவர் திருநீறு அணிந்த மார்பினையுடையவர். சரஞ்சரமாக வரிசையாய் மலரும் கொன்றை மாலை பாம்பு கங்கை ஆகியவற்றை அணிந்த சடைமுடியை உடையவர். கூரிய கொடிய கணையால் அசுரர்களின் முப்புரங்களையும் சினந்து எரித்த தேவர் தலைவர். சிவந்த கண்களையும் வ–மையையும் உடைய வெண்மையான விடையேற்றுக் கொடியினை உடையவர். |
| 760. வினையாயினதீர்த் தருளேபுரியும் விகிர்தன் விரிகொன்றை<br>நனையார்முடிமேன் மதியஞ்சூடு நம்பான் நலமல்கு<br>தனையார்கமல மலர்மேலுறைவான் தலையோ டனலேந்தும்<br>எனையாளுடையா னுமையாளோடும் ஈங்கோய் மலையாரே. | உமையம்மையோடு திருவீங்கோய்மலையில் எழுந்தருளி விளங்கும் இறைவர் வினைகளானவற்றைத் தீர்த்து அருளையே வழங்கும் விகிர்தர். விரிந்து தழைத்த கொன்றை அரும்புகள் சூடிய முடிமீது பிறைமதியையும் சூடும் நம்பர். அழகு நிறைந்ததும் தலைமை உடையதுமான தாமரை மலர்மேல் உறையும் பிரமனின் தலையோட்டுடன் அனலையும் ஏந்தி என்னை அடிமையாகக் கொண்டருளுபவர். |
| 761. பரக்கும்பெருமை யிலங்கையென்னும் பதியிற் பொ–வாய<br>அரக்கர்க்கிறைவன் முடியுந்தோளு மணியார் விரல்தன்னால்<br>நெருக்கியடர்த்து நிமலாபோற்றி யென்று நின்றேத்த<br>இரக்கம்புரிந்தா ருமையாளோடும் ஈங்கோய் மலையாரே | உமையம்மையாரோடு எழுந்தருளியுள்ள ஈங்கோய்மலை இறைவர், எங்கும் பரவிய பெருமையை உடைய இலங்கை என்னும் நகரில் புகழோடு விளங்கிய அரக்கர்களுக்குத் தலைவனாகிய இராவணன் தலைகளையும் தோள்களையும் தமது அழகு பொருந்திய கால் விரலால் நெருக்கி அடர்த்து, பின் அவன் 'நிமலா போற்றி' என்று ஏத்த இரக்கம் காட்டி அருள்புரிந்தவராவார். |
| 762. வரியார்பு–யி னுரிதோலுடையான் மலையான் மகளோடும்<br>பிரியாதுடனா யாடல்பேணும் பெம்மான் திருமேனி<br>அரியோடயனு மறியாவண்ண மளவில் பெருமையோ<br>டெரியாய்நிமிர்ந்த வெங்கள்பெருமான் ஈங்கோய் மலையாரே. | ஈங்கோய்மலை இறைவர் வரிகளோடு கூடிய பு–த்தோலை உடையாகக் கட்டியவர். மலையரையன் மகளாகிய பார்வதி தேவியோடு பிரியாது அவளுடனாக இருந்து ஆடுதலை விரும்பும் தலைமை சான்றவர். தம் திருமேனியின் அடிமுடிகளைத் திருமாலும் நான்முகனும் அறியாதபடி அளவற்ற பெருமை உடையவராய் எரிஉருவத்தோடு ஓங்கிநின்ற எங்கள் பெருமான் ஆவார். |

| | |
|---|---|
| 763. பிண்டியேன்று பெயராநிற்கும் பிணங்கு சமணரும்<br>மண்டைகலனாக் கொண்டுதிரியு மதியில் தேரரும்<br>உண்டிவயிறா ருரைகள்கொள்ளா துமையோ டுடனாகி<br>இண்டைச்சடையா னிமையோர்பெருமான் ஈங்கோய்<br>மலையாரே. | அருகதேவன் வீற்றிருக்கும் அசோகமரம் என அம்மரத்தின் பெருமை கூறிப்பெயர்ந்து செல்லும் மாறுபட்ட சமயநெறியில் நிற்கும் சமணர்களும், பிச்சை ஏற்கும் மண்டை என்னும் பாத்திரத்தைக் கையில் ஏந்தித் திரியும் அறிவற்ற புத்தரும் உண்டு பருத்த வயிற்றினராய்க் கூறும் உரைகளைக் கொள்ளாது, உமையம்மையாரோடு உடனாய், இண்டை சூடிய சடைமுடியினனாய், இமையோர் தலைவனாய், ஈங்கோய் மலையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானைச் சென்று வழிபடுவீராக. |
| 764. விழவாரொ–யு முழவுமோவா வேணு புரந்தன்னுள்<br>அழலார்வண்ணத் தடிகளருள்சே ரணிகொள் சம்பந்தன்<br>எழிலார்சுனையும் பொழிலும்புடைசூழ் ஈங்கோய் மலையீசன்<br>கழல்சேர்பாடல் பத்தும்வல்லார் கவலை களைவாரே. | திருவிழாக்களின் ஓசையும் முழவின் ஓசையும் நீங்காத வேணுபுரம் என்னும் சீகாழிப் பதியில் அழல் வண்ணனாகிய சிவபிரானின் அருள்சேரப் பெற்ற அழகிய ஞானசம்பந்தன் எழிலார்ந்த சுனையும் பொழிலும் புடைசூழ்ந்து விளங்கும் திருவீங்கோய்மலை ஈசனின் திருவடிகளைப் பரவிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓத வல்லவர்கள் கவலைகள் நீங்கப் பெறுவர். |

## 71. திருநறையூர்ச்சித்தீச்சரம்

**பண் : தக்கேசி** **முதல் திருமுறை பதிக எண் : 71**

| | |
|---|---|
| 765. பிறைகொள்சடையர் பு–யினுரியர் பேழ்வாய் நாகத்தர்<br>கறைகொள்கண்டர் கபாலமேந்துங் கையர் கங்காளர்<br>மறைகொள்கீதம் பாடச்சேடர் மனையின் மகிழ்வெய்திச்<br>சிறைகொள்வண்டு தேனார்நறையூர்ச் சித்தீச் சரத்தாரே. | பெருமை உடைய மறையவர் தங்கள் இல்லங்களில் வேதப்பொருள்களை உள்ளடக்கிய பாடல்களைப் பாட, அதனைக் கேட்டுச் சிறகுகளைக் கொண்ட வண்டுகள் மகிழ்வெய்திப் பாடித் தேனை உண்ணுகின்ற நறையூரில் விளங்கும் சீத்தீச்சரத்து இறைவர், பிறைசூடிய சடையர், பு–த்தோலை உடுத்தவர். பிளந்த வாயினை உடைய பாம்பினை அணிந்தவர். விடக் கறை பொருந்திய கழுத்தை உடையவர். பிரமனது தலையோட்டை ஏந்திய கையினை உடையவர். எலும்பு மாலை அணிந்தவர். |
| 766. பொங்கார்சடையர் புனலரனலர் பூதம் பாடவே<br>தங்காத–யுந் தாமுமுடனாய்த் தனியோர் விடையேறிக்<br>கொங்கார்கொன்றை வன்னிமத்தஞ் சூடிக் குளிர்பொய்கைச்<br>செங்காலனமும் பெடையுஞ்சேருஞ் சித்தீச் சரத்தாரே. | தழைத்த சடையினராய், கங்கை அணிந்தவராய், அனல் ஏந்தியவராய், பூதகணங்கள் பாடத் தம் காத–யாகிய உமையம்மையும் தாமும் உடனாய், ஒப்பற்றதொரு விடைமீது, தேன் பொருந்திய கொன்றை மலர், வன்னியிலை, ஊமத்தை மலர் ஆகியவற்றைச் சூடிக் கொண்டு குளிர்ந்த பொய்கைகளில் சிவந்த கால்களை உடைய ஆண் அன்னமும் பெண் அன்னமும் கூடிக் களிக்கும் சித்தீச்சரத்தில் எழுந்தருளியுள்ளார். |

| | |
|---|---|
| 767. முடிகொள்சடையர் முளைவெண்மதியர் மூவா மேனிமேல்<br>பொடிகொணூலர் பு–யினதளர் புரிபன் சடைதாழக்<br>கடிகொள்சோலை வயல்சூழ்மடுவிற் கயலா ரினம்பாயக்<br>கொடிகொண்மாடக் குழாமார்நறையூர்ச் சித்தீச் சரத்தாரே. | முடியாகச் சடையினை உடையவராய், ஒரு கலையோடு தோன்றும் வெண்மையான மதியை அணிந்தவராய், மூப்படையாத தம் திருமேனியின் மேல் திருநீற்றையும் முப்புரி நூலையும் அணிந்தவராய், பு–த்தோலை உடுத்தவராய், முறுக்கப்பட்ட சடைகள் தாழ்ந்து தொங்க மணம் கமழும் சோலைகளும் வயல்களும் சூழ்ந்த நீர் நிலைகளில் கயல் மீன்களின் இனங்கள் பாய்ந்து விளையாடக் கொடிகள் கட்டிய மாடவீடுகளின் கூட்டங்கள் நிறைந்த நறையூரில் உள்ள சித்தீச்சரத்தில் எழுந்தருளியுள்ளார். |
| 768. பின்றாழ்சடைமே னகுவெண்டலையர் பிரமன் றலையேந்தி<br>மின்றாழுருவிற் சங்கார்குழைதான் மிளிரு மொருகாதர்<br>பொன்றாழ்கொன்றை செருந்திபுன்னை பொருந்து செண்பகம்<br>சென்றார்செல்வத் திருவார்நறையூர்ச் சித்தீச் சரத்தாரே. | பூசைக்குகந்த பொன் போன்ற கொன்றை, செருந்தி, புன்னை, ஏற்புடையதான செண்பகம் ஆகியன வானுறப் பொருந்தி வளரும் செல்வச் செழுமையுடைய அழகிய நறையூரில் விளங்கும் சித்தீச்சரத்து இறைவர், பின்புறம் தாழ்ந்து தொங்கும் சடைமுடிமேல், விளங்கும் வெண்மையான தலை மாலையை அணிந்தவர். பிரமனது தலையோட்டைக் கையில் ஏந்தி மின்னலைத் தாழச் செய்யும் ஒளி உருவினர். சங்கக் குழையணிந்த காதினை உடையவர். |
| 769. நீரார்முடியர் கறைகொள்கண்டர் மறைக ணிறைநாவர்<br>பாரார்புகழாற் பத்தர்சித்தர் பாடி யாடவே<br>தேரார்வீதி முழவார்விழவி னொ–யுந் திசைசெல்லக்<br>சீரார்கோலம் பொ–யுநறையூர்ச் சித்தீச் சரத்தாரே. | உலகில் பரவிய தமது புகழ் மொழிகளைப் பக்தர்களும் சித்தர்களும் பாடி ஆடத் தேரோடும் வீதிகளில் முழவின் ஒ–, விழா ஒ–யோடு பெருகி எண் திசையும் பரவ, புகழ் பொருந்திய அழகோடு விளங்கும் நறையூர்ச் சித்தீச்சரத்தில் உறையும் இறைவர், கங்கையை அணிந்த சடைமுடியினர். கறை பொருந்திய கண்டத்தை உடையவர். வேதங்கள் நிறைந்த நாவினர். |
| 770. நீண்டசடையர் நிரைகொள்கொன்றை விரைகொண் மலர்மாலை<br>தூண்டுசுடர்பொன் னொளிகொள்மேனிப் பவளத் தெழிலார்வந்<br>தீண்டுமாட மெழிலார்சோலை யிலங்கு கோபுரம்<br>தீண்டுமதியந் திகழுநறையூர்ச் சித்தீச் சரத்தாரே. | ஒன்றோடு ஒன்று வந்து பொருந்தும் மாட வீடுகளையும், அழகிய சோலைகளையும், மதியைத் தீண்டும் உயரமாக விளங்கிய கோபுரங்களையும் உடைய நறையூரில் உள்ள சித்தீச்சரத்து இறைவர், நீண்ட சடைமுடியை உடையவர். பூச்சரங்களைக் கொண்ட கொன்றையினது மலரால் தொடுத்த மாலையை அணிந்தவர். ஒளி மிகுந்து தோன்றும் பொன்போன்ற ஒளி உருவம் உடையவர். பவளம் போன்ற அழகிய செந்நிறத்தை உடையவர். |
| 771. குழலார்சடையர் கொக்கினிறகர் கோல நிறமத்தம்<br>தழலார்மேனித் தவளநீற்றர் சரிகோ வணக்கீளர்<br>எழிலார்நாகம் பு–யினுடைமே –சைத்து விடையேறிக்<br>கழலார்சிலம்பு புலம்பவருவார் சித்தீச் சரத்தாரே. | அழகு பொருந்திய பாம்பினைப் பு–த்தோல் ஆடை மேல் பொருந்தக் கட்டிக் கொண்டு விடைமீது ஏறி, கழலும் சிலம்பும் கால்களில் ஒ–க்க வருபவராகிய நறையூர்ச் சித்தீச்சரத்து இறைவர், மாதொரு பாகராத–ன் கூந்தலும் சடையும் அமைந்த திருமுடியினர். கொக்கின் இறகை அணிந்தவர். அழகிய நிறம் அமைந்த ஊமத்தம் மலர் சூடித் தழல் போலச் சிவந்த திருமேனியில் வெண்ணிறமான திருநீற்றை அணிந்தவர். |

| | |
|---|---|
| 772. கரையார்கடல்சூ ழிலங்கைமன்னன் கயிலை மலைதன்னை<br>வரையார்தோளா லெடுக்கமுடிகள் நெரித்து மனமொன்றி<br>உரையார்கீதம் பாடநல்ல வுலப்பி லருள்செய்தார்<br>திரையார்புனல்சூழ் செல்வநறையூர்ச் சித்தீச் சரத்தாரே. | அலைகளோடு கூடிய நீர் நிலைகளால் சூழப்பட்ட செல்வ வளம் மிக்க நறையூரில் விளங்கும் சித்தீச்சரத்துறையும் இறைவர், கரைகளை வந்து பொருந்தும் கடல் நாற்புறமும் சூழ்ந்துள்ள இலங்கை மன்னன் இராவணன், கயிலை மலையை, மலை போன்ற தன் தோளால் பெயர்க்க முற்பட்டபோது, தலைகளைக் கால் விரலால் நெரிக்க, அவன்தன் பிழை உணர்ந்து நல் உரைகளால் இயன்ற பாடல்களைப் பாடிப் போற்ற, அளவிடமுடியாத நல்லருளை வழங்கியவர். |
| 773. நெடியான்பிரம னேடிக்காணார் நினைப்பார் மனத்தாராய்<br>அடியாரவரு மருமாமறையு மண்டத் தமரரும்<br>முடியால்வணங்கிக் குணங்களேத்தி முதல்வா வருளென்னச்<br>செடியார்செந்நெற் றிகழுநரையூர்ச் சித்தீச் சரத்தாரே. | திருமாலும் பிரமனும் தேடிக் காண இயலாதவராய் விளங்கிய சிவபெருமான் தம்மை நினைப்பவரின் மனத்தில் விளங்கித் தோன்றுபவராய், அடியவர்களும் அரிய புகழ்மிக்க வேதங்களும், மேலுலகில் வாழும் தேவர்களும், தம் முடியால் வணங்கிக் குணங்களைப் போற்றி ‘முதல்வா அருள்’ என்று வழிபடுமாறு செந்நெற் பயிர்கள் புதர்களாய்ச் செழித்துத் திகழும் திருநறையூர்ச் சித்தீச்சரத்தில் எழுந்தருளியுள்ளார். |
| 774. நின்றுண்சமண ரிருந்துண்டேரர் நீண்ட போர்வையார்<br>ஒன்றுமுணரா வூமர்வாயி லுரைகேட் டுழல்வீர்காள்<br>கன்றுண்பயப்பா லுண்ணமுலையிற் கபால மயல்பொழியச்<br>சென்றுண்டார்ந்து சேருநறையூர்ச் சித்தீச் சரத்தாரே. | நின்றுண்ணும் சமணர்களும், இருந்துண்ணும் புத்தர்களும் சித்தாந்த சைவச் சிறப்பொன்றையும் அறியாத ஊமர்கள். அவர்கள் தம் வாயால் கூறும் உரைகளைக் கேட்டு உழல்பவரே! எளிதில் அருள் நல்கும் சிவபிரான், கன்று விருப்போடு உண்ண, முலைக் காம்பில் சுரந்த பால் பாத்திரத்தில் நிறைந்து அய–னும் பொழிவதைக் கண்டு பால் போதுமென மீண்டும் கன்றை அவிழ்த்து விட அக்கன்றுகள் சென்று உண்டு கொட்டிலை அடையும் நறையூர்ச் சித்தீச்சரத்தில் எழுந்தருளியுள்ளார். சென்று தொழுமின். |
| 775. குயிலார்கோல மாதவிகள் குளிர்பூஞ் சுரபுன்னை<br>செயிலார் பொய்கை சேருநறையூர்ச் சித்தீச் சரத்தாரை<br>மயிலார்சோலை சூழ்ந்தகாழி மல்கு சம்பந்தன்<br>பயில்வார்க்கினிய பாடல்வல்லார் பாவ நாசமே. | குயில்கள் வாழும் அழகிய மாதவிகளும், குளிர்ந்த அழகிய சுரபுன்னைகளும் வயல்களில் நீரைச் செலுத்தும் பொய்கைகளும் நிறைந்த நறையூர்ச் சித்தீச்சரத்து இறைவரை மயில்கள் வாழும் சோலைகள் சூழ்ந்த சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் பயில்பவர்க்கு இனியவாய்ப் போற்றிப் பாடிய இப்பதிகப் பாடல்களை ஓத வல்லவர்களின் பாவம் நாசமாம். |

## 72. திருக்குடந்தைக்காரோணம்

**பண் : தக்கேசி** **முதல் திருமுறை பதிக எண் : 72**

| | |
|---|---|
| 776. வாரார்கொங்கை மாதோர்பாக மாக வார்சடை<br>நீரார்கங்கை திங்கள்சூடி நெற்றி யொற்றைக்கண்<br>கூரார்மழுவொன் றேந்தியந்தண் குழகன் குடமூக்கில்<br>காரார்கண்டத் தெண்டோளெந்தை காரோ ணத்தாரே. | திருக்குடமூக்கில் விளங்கும் காரோணத்தில் கருமை பொருந்திய கண்டத்தராய், எட்டுத் தோள்களோடு விளங்கும் எந்தையாராகிய இறைவர், கச்சணிந்த கொங்கைகளை உடைய பார்வதி தேவியை ஒருபாகமாகக் கொண்டு, நீண்ட சடைமிசை நீர் மயமான கங்கை, பிறை ஆகியவற்றைச் சூடி, இயல்பான இருவிழிகளோடு நெற்றியில் ஒற்றைக் கண்ணுடையவராய், கூரிய மழு என்னும் ஓர் ஆயுதத்தை ஏந்தி, அழகிய தண்ணளி செய்யும் குழகராய் விளங்குகின்றார். |

| | |
|---|---|
| 777. முடியார்மன்னர் மடமான்விழியார் மூவுலகும் மேத்தும்<br>படியார்பவள வாயார்பலரும் பரவிப் பணிந்தேத்தக்<br>கொடியார்விடையார் மாடவீதிக் குடந்தைக் குழகாரும்<br>கடியார்சோலைக் கலவமயிலார் காரோ ணத்தாரே. | மாடவீதிகளை உடைய குடந்தை என்னும் திருத்தலத்தில் உள்ளதும், மணம் கமழும் சோலைகளில் தோகைகளோடு கூடிய மயில்கள் விளங்குவதும் ஆகிய காரோணத்தில், இளமை பொருந்தியவராய் இலங்கும் இறைவர், முடிமன்னர்கள், இளைய மான் போன்ற விழியினை உடைய மகளிர், மேல் கீழ் நடு என்னும் மூவுலக மக்கள், தேவர், முனிகணங்கள், பவளம் போன்ற வாயினை உடைய அரம்பையர் முதலானோர் பலரும் பரவிப் பணிந்து போற்ற விடைக்கொடியோடு விளங்குபவராவார். |
| 778. மலையார்மங்கை பங்கரங்கை யனலர் மடலாரும்<br>குலையார்தெங்கு குளிர்கொள்வாழை யழகர் குடமூக்கில்<br>முலையாரணிபொன் முளைவெண்ணகையார் மூவா மதியினார்<br>கலையார்மொழியார் காதல்செய்யுங் காரோ ணத்தாரே. | மட்டைகளோடும், குலைகளோடும் கூடிய தென்னைகளும், குளிர்ந்த வாழைகளும் சூழ்ந்த அழகமைந்த குடமூக்கு என்னும் திருத்தலத்தில், பொன்னணிகள் விளங்கும் தனங்களையும் மூங்கில் முளை போன்ற வெண்மையான பற்களையும் இளம் பிறை போன்ற நெற்றியையும் இசைக்கலை சேர்ந்த மொழியையும் உடைய மகளிர் பலரால் விரும்பப்படும் காரோணத்து இறைவர் மலை மங்கைபங்கர்; அழகிய கையில் அனல் ஏந்தியவர். |
| 779. போதார்புனல்சேர் கந்தமுந்திப் பொ–யவ் வழகாரும்<br>தாதார்பொழில்சூழ்ந் தெழிலார்புறவி லந்தண் குடமூக்கில்<br>மாதார்மங்கை பாகமாக மனைகள் ப–தேர்வார்<br>காதார்குழையர் காளகண்டர் காரோ ணத்தாரே. | நீர்நிலைகளில் தோன்றும் தாமரை கழுநீர் குவளை முத–ய பூக்களின் வாசனை முற்பட்டுப் பொ–வெய்த, அழகு நிரம்பிய மகரந்தம் நிறைந்த சோலைகளாலும் எழிலார்ந்த காடுகளாலும் சூழப் பெற்றதாய் விளங்கும் அழகிய தண்மையான குடமூக்கில் விளங்கும் காரோணம் எனப் பெயர் பெறும் கோயி–ல் எழுந்தருளிய இறைவர், காதல் நிறைந்த உமையம்மை பாகராக மனைகள் தோறும் ப– ஏற்பவர். காதில் குழை அணிந்தவர். காளம் என்னும் நஞ்சினைக் கண்டத்தே கொண்டவர். |
| 780. பூவார்பொய்கை யலர்தாமரைசெய் கழுநீர் புறவெல்லாம்<br>தேவார்சிந்தை யந்தணாளர் சீராலடி போற்றக்<br>கூவார்குயில்க ளாலுமயில்க ளின்சொற் கிளிப்பிள்ளை<br>காவார்பொழில்சூழ்ந் தழகார்குடந்தைக் காரோ ணத்தாரே. | சிவபிரான், தெய்வத்தன்மை நிறைந்த மனத்தினராகிய அந்தணர்கள் அழகிய பொய்கைகளில் பூத்த தாமரை செங்கழுநீர் ஆகியவற்றையும் முல்லை நிலங்களில் பூத்த மல்–கை முல்லை முத–ய மணமலர்களையும் கொண்டு தனது புகழைக் கூறித் திருவடிகளைப் போற்ற, கூவும் குயில்கள் ஆடும் மயில்கள், இன்சொல் பேசும் கிளிப்பிள்ளைகள் ஆகிய பறவைகளை உடையதும், பணியாளர்களால் காக்கப் பெறுவதுமாகிய பொழிலால் சூழப்பெற்ற அழகிய குடந்தைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளார். |

| | |
|---|---|
| 781. மூப்பூர்ந–ய நெதியார்விதியாய் முன்னே யனல்வாளி<br>கோப்பார்பார்த்த நிலைகண்டருளுங் குழகர் குடமூக்கில்<br>தீர்ப்பாருட– லடுநோயவலம் வினைகள் ந–யாமைக்<br>காப்பார்கால னடையாவண்ணங் காரோ ணத்தாரே. | குடமூக்கிலுள்ள காரோணத்து இறைவர் மூப்பு ஊர்ந்துவந்து ந–ய நியதி தத்துவத்தின் வழியே நெறியாய் நின்று நம்மைக் காப்பவர். முற்காலத்தில் அனலையே அம்பாக வில்–ல் கோத்து முப்புரங்களை அழித்தவர். அருச்சுனன் செய்த தவத்தின் நிலை கண்டு இரங்கிப் பாசுபதக் கணை வழங்கியருளிய குழகர். நம் உடலை வருத்தும் நோய்கள், நம்மைப் பற்றிய வினைகள், மனத்தை வருத்தும் துன்பங்கள் ஆகியவற்றைத் தீர்ப்பவர். காலன் அடையா வண்ணம் காப்பவர். |
| 782. ஊனார்தலைகை யேந்தியுலகம் ப–தேர்ந் துழல்வாழ்க்கை<br>மானார்தோலார் பு–யினுடையார் கரியின் னுரிபோர்வை<br>தேனார்மொழியார் திளைத்தங்காடித் திகழுங் குடமூக்கில்<br>கானார்நட்ட முடையார்செல்வக் காரோ ணத்தாரே. | விளங்கும் குடமூக்கில் உள்ள செல்வவளம் மிக்க காரோணத்து இறைவர், ஊன் பொருந்திய தலையோட்டைக் கையில் ஏந்தி, உலகம் முழுதும் திரிந்து ப– ஏற்று உழலும் வாழ்க்கையர். மான் தோலைப் பூணநூ–ல் அணிந்தவர். தேனார் மொழி அம்மையோடு குடமூக்கில் கூடி மகிழ்ந்து சுடுகாட்டில் நடனம் புரிபவர். |
| 783. வரையார்திரடோண் மதவாளரக்க னெடுப்ப மலைசேரும்<br>விரையார்பாத நுதியாலூன்ற நெரிந்து சிரம்பத்தும்<br>உரையார்கீதம் பாடக்கேட்டங் கொளிவாள் கொடுத்தாரும்<br>கரையார்பொன்னி சூழ்தண்குடந்தைக் காரோ ணத்தாரே. | கரைகளோடு கூடிய காவிரியாற்று நீர் சூழ்ந்த தண்மையான குடந்தை மாநகரில் அமைந்த காரோணத்து இறைவர் மலை போன்ற திரண்ட தோள்களை உடைய மதம் மிக்க வாட்போரில் வல்ல இராவணன் கயிலைமலையைப் பெயர்க்க, அவ்வளவில் தம் மணம் கமழும் திருவடி நுனிவிரலால் அம்மலையில் சேர்த்து ஊன்றி, அவ்விராவணன் தலை பத்தும் நெரித்துப் புகழ்மிக்க சாம கானத்தைப் பாடக் கேட்டு, அப்பொழுதே அவனுக்கு ஒளிபொருந்திய சந்திரஹாசம் என்னும் வாளைக் கொடுத்தவர் ஆவார். |
| 784. கரியமாலுஞ் செய்யபூமே லயனுங் கழறிப்போய்<br>அரியவண்டந் தேடிப்புக்கு மளக்க வொண்கிலார்<br>தெரியவரிய தேவர்செல்வந் திகழுங் குடமூக்கில்<br>கரியகண்டர் காலகாலர் காரோ ணத்தாரே. | செல்வம் விளங்கும் குடமூக்கில் உள்ள காரோணத்து இறைவர் கருநிம் பொருந்திய திருமாலும் சிவந்த தாமரை மலர் மேல் விளங்கும் நான்முகனும் ஒருவரோடு ஒருவர் மாறுபடப் பேசியவராய் அரிய உலகங்கள் அனைத்தும் தேடிச் சென்றும் அடிமுடிகளை அளக்க ஒண்ணாதவராய் உயர்ந்து நின்ற பெரியவர். முனைப்புடையவரால் காணுதற்கு அரியவர். கருநிறம் பொருந்திய கண்டத்தினர். கால காலர். |
| 785. நாணாரமணர் நல்லதறியார் நாளுங் குரத்திகள்<br>பேணார்தூய்மை மாசுகழியார் பேசே லவரோடும்<br>சேணார்மதிதோய் மாடமல்கு செல்வ நெடுவீதிக்<br>கோணாகரமொன் றுடையார்குடந்தைக் காரோ ணத்தாரே. | சமணர்கள் நாணம் இல்லாதவர்கள். நல்லதை அறியாதவர்கள். நாள்தோறும் பெண்பால் குருமார்களும், தூய்மை பேணாதவர்கள். உடல் மாசை நீராடிப் போக்கிக் கொள்ளாதவர்கள். அவர்களோடு பேசவும் செய்யாதீர்கள். வான் அளாவிய மதியினைத் தோயும் மாட வீடுகளைக் கொண்ட செல்வச் செழுமை உடைய வீதிகளோடு கூடிய காரோணமாகிய இருப்பிடத்தை உடையவர் சிவபெருமானார். அவரைச் சென்று வழிபடுவீர்களாக. |

| | |
|---|---|
| 786. கருவார்பொழில்சூழ்ந் தழகார்செல்வக் காரோ ணத்தாரைத்<br>திருவார்செல்வ மல்குசண்பைத் திகழுஞ் சம்பந்தன்<br>உருவார்செஞ்சொன் மாலையிவைபத் துரைப்பா ருலகத்துக்<br>கருவாரிடும்பைப் பிறப்பதறுத்துக் கவலை கழிவாரே. | அடர்த்தியால் கருநிறம் பெற்ற பொழில்கள் சூழ்ந்த அழகிய செல்வக் காரோணத்து இறைவரைத் தெய்வ நலத்தால் விளைந்த செல்வம் நிறைந்த சண்பை என்னும் சீகாழிப் பதியில் விளங்கும் ஞானசம்பந்தன் பாடிய செஞ்சொல் மாலையாகிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் உரைப்பவர், இவ்வுலகில் மீளக் கருவுற்று இடர்ப்படும் பிறப்பினை எய்தாது கவலைகள் நீங்கப் பெறுவர் |

## 73. திருக்கானூர்

**பண் : தக்கேசி** **முதல் திருமுறை பதிக எண் : 73**

| | |
|---|---|
| 787. வானார்சோதி மன்னுசென்னி வன்னி புனங்கொன்றைத்<br>தேனார்போது தானார்கங்கை திங்க ளொடுசூடி<br>மானேர்நோக்கி கண்டங்குவப்ப மாலை யாடுவார்<br>கானூர்மேய கண்ணார்நெற்றி யானூர் செல்வரே. | திருக்கானூரில் மேவிய கண்பொருந்திய நெற்றியினை உடையவரும், ஆனேற்றை ஊர்ந்து வருபவருமாகிய செலைவர், வானத்தில் ஒளியோடு விளங்கும் சூரிய சந்திரர் போன்ற ஒளி மன்னும் சென்னியில் வன்னி, காடுகளில் பூத்த தேன் பொருந்திய கொன்றை மலர் தானே வந்து தங்கிய கங்கை, திங்கள் ஆகியவற்றைச் சூடி, மான் போன்ற மருண்ட கண்களையுடைய உமையம்மை கண்டு மகிழ மாலைக் காலத்தில் நடனம் புரிபவராவர். |
| 788. நீந்தலாகா வெள்ளமூழ்கு நீள்சடை தன்மேலோர்<br>ஏய்ந்தகோணற் பிறையோடரவு கொன்றை யெழிலாரப்<br>போந்தமென்சொ –ன்பம்பயந்த மைந்தரவர் போலாம்<br>காந்தள்விம்மு கானூர்மேய சாந்த நீற்றாரே. | காந்தள் செடிகள் தழைத்து வளர்ந்து பூத்து மணம் பரப்பும் கானூரில் மேவிய சந்தனமும் திருநீறும் பூசிய இறைவர், தடுக்க முடியாதபடி பெருகிவந்த கங்கையினது வெள்ளம் மூழ்கி மறைந்துபோன நீண்ட சடைமுடிமேல் பொருந்த வளைந்த பிறை மதியோடு, பாம்பு, கொன்றைமலர் ஆகியன அழகுதர வீதியுலா வந்து அழகிய மென் சொற்களால் இன்பம் தந்த மைந்தர் ஆவார். |
| 789. சிறையார்வண்டுந் தேனும்விம்மு செய்ய மலர்க்கொன்றை<br>மறையார்பாட லாடலோடு மால்விடை மேல்வருவார்<br>இறையார்வந்தெ னில்புகுந்தென் னெழினல முங்கொண்டார்<br>கறையார்சோலைக் கானூர்மேய பிறையார் சடையாரே. | கருநிறமான சோலைகள் சூழ்ந்த கானூரில் மேவிய பிறை பொருந்திய சடையினராகிய இறைவர், சிறகுகளோடு கூடிய வண்டுகளும் அவற்றால் உண்ணப்பெறும் தேனும் நிறைந்து செவ்விதாக மலர்ந்த கொன்றை மலர்களைச் சூடியவராய் வேதப் பாடல்களைப் பாடி ஆடுபவராய்ப் பெரிய விடைமேல் வருவார். அவ்வாறு வரும் இறைவர் என் இல்லத்தே புகுந்து என் அழகையும் நலத்தையும் கவர்ந்து சென்றார். இதுமுறையோ ? |

| | | |
|---|---|---|
| 790. | விண்ணார்திங்கட் கண்ணிவெள்ளை மாலை யதுசூடித்<br>தண்ணாரக்கோ டாமைபூண்டு தழைபுன் சடைதாழ<br>எண்ணாவந்தெ னில்புகுந்தங் கெவ்வ நோய்செய்தான்<br>கண்ணார்சோலைக் கானூர்மேய விண்ணோர் பெருமானே. | இடம் அகன்ற சோலைகள் சூழ்ந்த திருக்கானூரில் மேவிய விண்ணோர் தலைவராகிய சிவபிரானார் வானகத்தில் பொருந்திய பிறை மதியைக் கண்ணியாகச் சூடி, வெண்ணிறமான மாலையை அணிந்து, குளிர்ந்த என்புமாலை, ஆமையோடு ஆகியவற்றைப் புனைந்து தழைத்த சிவந்த சடைகள் தொங்க, என்னை அடைய எண்ணி வந்து என் இல்லம் புகுந்து, எனக்கு மிக்க விரக வேதனையைத் தந்து சென்றார். இது முறையோ ? |
| 791. | தார்கொள்கொன்றைக் கண்ணியோடுந் தண் மதியஞ்சூடி<br>சீர்கொள்பாட லாடலோடு சேட ராய்வந்து<br>ஊர்கள்தோறு மையமேற்றென னுள்வெந் நோய்செய்தார்<br>கார்கொள்சோலைக் கானூர்மேய கறைக்கண் டத்தாரே. | கருநிறம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த கானூரில் மேவிய கறைக்கண்டர், கொன்றை மலர்களால் இயன்ற கண்ணி தார் ஆகியவற்றை அணிந்தவராய்க் குளிர்ந்த பிறைமதியை முடியில் சூடி, சிறப்புமிக்க ஆடல் பாடல்களோடு பெருமைக்குரியவராய் வந்து ஊர்கள்தோறும் திரிந்து, ப–யேற்று, என் மனத்தகத்தே கொடிய விரக வேதனையைத் தந்து சென்றார். |
| 792. | முளிவெள்ளெலும்பு நீறுநூலு மூழ்கு மார்பராய்<br>எளிவந்தார்போ லையமென்றே னில்லே புகுந்துள்ளத்<br>தெளிவுநாணுங் கொண்டகள்வர் தேற லார்பூவில்<br>களிவண்டியாழ்செய் கானூர்மேய வொளிவெண்<br>பிறையாரே. | தேன் பொருந்திய மலரில் கள்ளுண்டு களித்த வண்டுகள் யாழ்போல ஒ– செய்யும் திருக்கானூரில் மேவிய ஒளி பொருந்திய வெண்பிறையை முடியிற் சூடிய இறைவர், காய்ந்த வெண்மையான எலும்பும் திருநீறும் முப்புரி நூலும் பொருந்திய மார்பினராய் எளிமையாக வந்தவர் போல வந்து, 'ஐயம் இடுக' என்று கூறிக் கொண்டே என் இல்லத்தில் புகுந்து உள்ளத் தெளிவையும் நாணத்தையும் கவர்ந்து சென்ற கள்வர் ஆவார். |
| 793. | மூவாவண்ணர் முளைவெண்பிறையர் முறுவல் செய்திங்கே<br>பூவார்கொன்றை புனைந்துவந்தார் பொக்கம் பலபேசிப்<br>போவார்போல மால்செய்துள்ளம் புக்க புரிநூலார்<br>தேவார்சோலைக் கானூர்மேய தேவ தேவரே. | தெய்வத்தன்மை வாய்ந்த சோலைகள் சூழ்ந்த கானூரில் மேவிய தேவதேவராகிய சிவபிரானார், மூப்பு அடையாத அழகினர். ஒரு கலையோடு முளைத்த வெண்மையான பிறையை அணிந்தவர். அவர் கொன்றை மாலை சூடியவராய்க் காமக் குறிப்புத் தோன்றும் புன்சிரிப்புடன் என் இல்லம் நோக்கி வந்து, பொய் கலந்த வார்த்தைகளைப் பேசிக் கொண்டிருந்து போவாரைப்போல் காட்டி என்னை மயக்கி என் உள்ளத்தில் புக்கொளித்த புரிநூலர் ஆவார். |
| 794. | தமிழினீர்மை பேசித்தாளம் வீணை பண்ணிநல்ல<br>முழவமொந்தை மல்குபாடல் செய்கை யிடமோவார்<br>குமிழின்மேனி தந்தகோல நீர்மை யதுகொண்டார்<br>கமழுஞ்சோலைக் கானூர்மேய பவள வண்ணரே. | மணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருக்கானூரில் மேவிய பவளம் போன்ற நிறத்தினை உடைய பரமர், தமிழ்போன்று இனிக்கும் இனிய வார்த்தைகளைப் பேசி, தாளத்தோடு வீணையை மீட்டி, முழவம் மொந்தை ஆகிய துணைக் கருவிகளுடன் கூடிய பாடல்களைப் பாடி எனது இல்லத்தை அடைந்து, அதனை விட்டுப் பெயராதவராய் எனக்குக் குமிழம்பூப் போன்ற பசலை நிறத்தை அளித்து என் அழகைக் கொண்டு சென்றார். |

| | |
|---|---|
| 795. அந்தமாதி யயனுமாலு மார்க்கு மறிவரியான்<br>சிந்தையுள்ளு நாவின்மேலுஞ் சென்னியு மன்னினான்<br>வந்தென்னுள்ளம் புகுந்துமாலை காலை யாடுவான்<br>கந்தமல்கு கானூர்மேய வெந்தை பெம்மானே. | மணம் நிறைந்த திருக்கானூரில் எழுந்தருளிய எந்தையாராகிய பெருமானார், அந்தத்தைச் செய்பவரும், யாவர்க்கும் ஆதியாய் இருப்பவரும் ஆவார். அயன், மால் முத–ய அனைவராலும் அறிதற்கரியவர். என் சிந்தையிலும் சென்னியிலும் நாவிலும் நிலைபெற்றிருப்பவர். அத்தகையோர் காண வெளிப்பட்டு வந்து என் உள்ளம் புகுந்து மாலையிலும் காலையிலும் நடனம் புரிந்தருளுகின்றார். |
| 796. ஆமையரவோ டேனவெண்கொம் பக்கு மாலைபூண்<br>டமோர்கள்வர் வெள்ளர்போல வுள்வெந் நோய்செய்தார்<br>ஓமவேத நான்முகனுங் கோணா கணையானும்<br>சேமமாய செல்வர்கானூர் மேய சேடரே. | வேள்விகள் இயற்றும் முறைகளைக் கூறும் வேதங்களை ஓதும் நான்முகனும், வளைந்த பாம்பணையில் பள்ளி கொள்ளும் திருமாலும் தங்கள் பாதுகாப்புக்குரியவராகக் கருதும் செல்வராகிய கானூர் மேவிய பெருமானார், ஆமை, அரவு, பன்றியின் வெண்மையான கொம்பு என்புமாலை ஆகியவற்றைப் பூண்ட ஓர்கள்வராய் வெள்ளை உள்ளம் படைத்தவர் போலக் கருதுமாறு நல்லவர் போல வந்து எனக்கு மன வேதனையைத் தந்தார். |
| 797. கழுதுதுஞ்சுங் கங்குலாடுங் கானூர் மேயானைப்<br>பழுதின்ஞான சம்பந்தன்சொற் பத்தும் பாடியே<br>தொழுதுபொழுது தோத்திரங்கள் சொல்–த் துதித்துநின்<br>றழுதுநக்கு மன்புசெய்வார் அல்ல லறுப்பாரே. | பேய்களும் தூங்கும் நள்ளிரவில் நடனம் ஆடும் கானூர் மேவிய இறைவனைக் குற்றமற்ற ஞானசம்பந்தன் போற்றிச் சொன்ன சொல்மாலையாகிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாடித்தொழுது முப்பொழுதும் தோத்திரங்களைச் சொல்–த் துதித்து நின்று அழுதும் சிரித்தும் அன்பு செய்பவர்கள் அல்லலை அறுப்பார்கள். |

## 74. திருப்புறவம்

**பண் : தக்கேசி** **முதல் திருமுறை பதிக எண் : 74**

| | |
|---|---|
| 798. நறவநிறைவண் டறைதார்க்கொன்றை நயந்து நயனத்தாற்<br>சுறவஞ்செறிவண் கொடியோனுடலம் பொடியா விழிசெய்தான்<br>புறவமுறைவண் பதியாமதியார் புரமூன் றெரிசெய்த<br>இறைவன்அறவ னிமையோரேத்த வுமையோ டிருந்தானே. | தேன் நிறைந்த வண்டுகள் ஒ–க்கும் கொன்றை மாலையை விரும்பிச் சூடி, சுறாமீன் எழுதப்பட்ட கொடியை உடைய, உயிர்கட்கு எல்லாம் இன்ப நலம் தரும் வள்ளன்மை உடைய, மன்மதனைப் பொடியாகுமாறு நெற்றிக்கண்ணால் விழித்து அழித்த, சிவபிரான் உறையும் பதி புறவம் எனப்பெறும் சீகாழியாம், தன்னை மதியாத அசுரர்களின் முப்புரங்களை எரித்தழித்த அவ்விறைவனாகிய அறவன் இமையவர் ஏத்தித் துதிக்க அப்பதியிடை உமையம்மையோடு வீற்றிருந்தருள்கிறான். |

| | |
|---|---|
| 799. உரவன்பு–யி னுரிதோலாடை யுடைமேற் படநாகம்<br>விரவிவிரிபூங் கச்சாவசைத்த விகிர்த னுகிர்தன்னாற்<br>பொருவெங்களிறு பிளிறவுரித்துப் புறவம் பதியாக<br>இரவும்பகலு மிமையோரேத்த வுமையோ டிருந்தானே. | மிக்க வ–மையை உடையவனும், பு–யினது தோல் ஆடையாகிய உடை மேல் படம் பொருந்திய நாகத்தைக் கச்சாகக் கட்டிய விகிர்தனும், தனது கைவிரல் நகத்தால் போர் செய்யும் கொடிய யானை பிளிற அதன் தோலை உரித்துப் போர்த்தவனுமாகிய இறைவன், புறவம் என்னும் சீகாழியையே தான் உறையும் பதியாகக் கொண்டு அதன்கண் இரவும் பகலும் தேவர்கள் பலரும் வந்து வணங்க உமையம்மையோடு எழுந்தருளியிருக்கின்றான். |
| 800. பந்தமுடைய பூதம்பாடப் பாதஞ் சிலம்பார்க்கக்<br>கந்தமல்கு குழ–காணக் கரிகாட் டெரியாடி<br>அந்தண்கடல்சூழ்ந் தழகார்புறவம் பதியா வமர்வெய்தி<br>எந்தம்பெருமா னிமையோரேத்த வுமையோ டிருந்தானே. | எம்முடைய தலைவனாகிய இறைவன், உதரபந்தத்தை அணிந்துள்ள பூதங்கள் பாடவும், பாதங்களில் சிலம்புகள் ஒ–க்கவும், மணம் நிறைந்த கூந்தலையுடைய உமையம்மை காணச் சுடுகாட்டில் எரியேந்தி ஆடி, அழகிய குளிர்ந்த கடலால் சூழப்பட்ட எழில்மிக்க புறவம் என்னும் சீகாழியையே இருப்பிடமாகக் கொண்டு, எழுந்தருளி இமையோர்கள் தன்னையேத்த உமையம்மையோடு வீற்றிருந்தருள்கிறான். |
| 801. நினைவார்நினைய வினியான்பனியார் மலர்தூய் நித்தலுங்<br>கனையார்விடையொன் றுடையான்கங்கை திங்கள்<br>கமழ்கொன்றை<br>புனைவார்சடையின் முடியான்கடல்சூழ் புறவம் பதியாக<br>எனையாளுடையா னிமையோரேத்த வுமையோ டிருந்தானே. | என்னை ஆளாக உடைய இறைவன், நாள்தோறும் குளிர்ந்த மலர்களைத் தூவித் தன்னை நினையும் அடியவர்களின் நினைப்பிற்கு இனியவனாய், கனைக்கும் விடை ஒன்றை ஊர்தியாக உடையவனாய், கங்கை, திங்கள், மணங்கமழும் கொன்றை ஆகியவற்றைச் சூடிய அழகிய நீண்ட சடைமுடியை உடையவனாய், கடலால் சூழப்பட்ட புறவம் என்னும் சீகாழிப் பதியை இடமாகக் கொண்டு இமையவர் ஏத்த உமையம்மையோடு வீற்றிருந்தருள்கிறான். |
| 802. செங்கணரவு நகுவெண்டலையு முகிழ்வெண் டிங்களுந்<br>தங்குசடையன் விடையனுடையன் சரிகோ வணவாடை<br>பொங்குதிரைவண் கடல்சூழ்ந்தழகார் புறவம் பதியாக<br>எங்கும்பரவி யிமையோரேத்த வுமையோ டிருந்தானே. | சிவபிரான், சிவந்த கண்களையுடைய பாம்பும், சிரிப்பதுபோல் வாய்விண்டு தோன்றும் வெள்ளிய தலையோடும், இளைய வெண்பிறையும் தங்கும் சடைமுடியன். விடைஊர்தியன். சரியும் கோவண ஆடையை உடையாகக் கொண்டவன். அப்பெருமான் பொங்கி எழும் அலைகளையுடைய வளம் பொருந்திய கடலால் சூழப்பட்ட அழகிய புறவம் என்னும் சீகாழியைத் தனக்குரிய பதியாகக் கொண்டு இமையோர் எங்கும் பரவி நின்று ஏத்த உமையம்மையோடு வீற்றிருந் தருள்கின்றான். |

| | |
|---|---|
| 803. பின்னுசடைகள் தாழக்கேழ லெயிறு பிறழப்போய்<br>அன்னநடையார் மனைகடோறு மழகார் பலதேர்ந்து<br>புன்னைமட−ன் பொழில்சூழ்ந்தழகார் புறவம் பதியாக<br>என்னையுடையா னிமையோரேத்த வுமையோ டிருந்தானே. | என்னை அடிமையாக உடைய இறைவன், முறுக்கி விடப்பட்ட சடைகள் தாழ்ந்து தொங்க மாலையாகக் கோத்தணிந்த பன்றியின் பற்கள் விளங்கச் சென்று, அன்னம் போன்ற நடையினையுடைய மகளிரின் இல்லங்கள் தோறும் அழகு பொருந்தப் ப−யேற்று, புன்னை தாழை முத−யன நிறைந்த பொழிலால் சூழப்பட்ட அழகிய புறவம் என்னும் சீகாழியைத் தனது பதியாகக் கொண்டு உமையம்மையோடு வீற்றிருந்தருள்கின்றான். |
| 804. உண்ணற்கரிய நஞ்சையுண் டொருதோ ழந்தேவர்<br>விண்ணிற்பொ−ய வமுதமளித்த விடைசேர்<br>கொடியண்ணல்<br>பண்ணிற்சிறைவண் டறைபூஞ்சோலைப் புறவம் பதியாக<br>எண்ணிற்சிறந்த விமையோரேத்த வுமையோ டிருந்தானே. | யாராலும் உண்ண முடியாத நஞ்சைத் தான் உண்டு, ஒரு தோழம் என்ற எண்ணிக்கையில் தேவர்கள் விண்ணுலகில் மகிழ்வுற்று வாழ, கட−டைத் தோன்றிய அமுதை வழங்கிய விடை எழுதிய கொடியையுடைய அண்ணல். சிறகுகளையுடைய வண்டுகள் பண்ணோடு ஒ−க்கும் பூஞ்சோலைகளால் சூழப்பட்ட புறவம் என்னும் சீகாழியைத் தன் பதியாகக் கொண்டு எண்ணற்ற இமையோர் தன்னை ஏத்தி வணங்க உமையம்மையோடு வீற்றிருந்தருள்கிறான். |
| 805. விண்டானதிர வியனார்கயிலை வேரோ டெடுத்தான்றன்<br>றிண்டோளுடலு முடியுநெரியச் சிறிதே யூன்றிய<br>புண்டானொழிய வருள்செய்பெருமான் புறவம் பதியாக<br>எண்டோளுடையா னிமையோரேத்த வுமையோ டிருந்தானே. | எட்டுத் தோள்களையுடைய சிவபிரான் விண் அதிரும்படியாகப் பெரிய கயிலை மலையை வேரோடு பெயர்த்து எடுத்த இராவணனின் வ−மை பொருந்திய தோள்கள், உடல், முடி ஆகியன நெரியுமாறு கால் விரலால் சிறிதே ஊன்றிப் பின் அவன் வருந்திய அளவில் உட−ல் தோன்றிய புண்கள் நீங்க அவன் வேண்டும் வரங்கள் பலவற்றைத் தந்த பெருமானாவான். அவ்விறைவன் புறவம் என்னும் சீகாழியைத் தனக்குரிய பதியாகக் கொண்டு இமையோர் ஏத்த உமையம்மையோடு வீற்றிருந்தருள்கிறான். |
| 806. நெடியானீடா மரையேலயனும் நேடிக் காண்கில்லாப்<br>படியாமேனி யுடையான்பவள வரைபோற் றிருமார்பிற்<br>பொடியார்கோல முடையான்கடல்சூழ் புறவம் பதியாக<br>இடியார்முழவா ரிமையோரேத்த வுமையோ டிருந்தானே. | திருமாலும், நீண்டு வளர்ந்த தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும் தேடிக் காண இயலாத தன்மையை உடைய திருமேனியன். பவளமலை போன்ற திருமார்பின்கண் திருநீறு அணிந்த அழகினையுடையவன். அவ்விறைவன், கடல் நீரால் சூழப்பட்டதும் இடி போன்ற முழக்கத்தையுடைய முழா ஒ−ப்பதும் ஆகிய புறவம் என்னும் சீகாழியைத் தனக்குரிய பதியாகக் கொண்டு, இமையவர் ஏத்த உமையம்மையோடு வீற்றிருந்தருள்கின்றான். |

| | |
|---|---|
| 807. ஆலும்மயி—ன் பீ—யமண ரறிவில் சிறுதேரர்<br>கோலும்மொழிக ளொழியக்குழுவுந் தழலு மெழில்வானும்<br>போலும்வடிவு முடையான்கடல்சூழ் புறவம் பதியாக<br>ஏலும்வகையா —மையோரேத்த வுமையோ டிருந்தானே. | ஆடுகின்ற மயி—ன் தோகையைக் கையில் ஏந்திய அமணர்களும், அறிவில் குறைந்த புத்தர்களும், புனைந்து பேசும் மொழிகளைத் தாழுமாறு செய்பவனாய், கூடி எரியும் தழலும், அழகிய வானமும் போன்ற செவ்வண்ணம் உடைய சிவன், கடல் நீர் சூழ்ந்த புறவம் என்னும் சீகாழியைத் தனது பதியாகக் கொண்டு இமையோர் பொருந்தும் வகையால் போற்ற உமையம்மையோடு வீற்றிருந்தருள்கிறான். |
| 808. பொன்னார்மாட நீடுஞ்செல்வப் புறவம் பதியாக<br>மின்னாரிடையா ளுமையாளோடு மிருந்த விமலனைத்<br>தன்னார்வஞ்செய் தமிழின்விரக னுரைத்த தமிழ்மாலை<br>பன்னாள்பாடி பாடப்பிரியோர் பரலோ கந்தானே. | அழகு பொருந்திய உயர்ந்த மாட வீடுகளை உடையதும், செல்வச் செழுமை வாய்ந்ததும் ஆகிய புறவம் என்னும் சீகாழிப் பதியில், மின்னல் போன்ற இடையினையுடைய உமையம்மையாரோடு எழுந்தருளியுள்ள குற்றமற்ற இறைவனைத் தன் அன்பால் தமிழ் விரகனாகிய ஞானசம்பந்தன் போற்றி உரைத்த இத்தமிழ் மாலையைப் பல நாள்களும் பாடி ஆடுவோர், மேலுலகத்தில் பிரியாது உறைவர். |

## குறிஞ்சி

குறிஞ்சியாழ் என்ற பெரும்பண்ணின் எட்டுத் திறங்களில் ஏழாவது திறமாகிய அரற்று என்ற திறத்தின் அகநிலைப் பண், 103 வரிசையில் 61 ஆவதாகும். இப்பண்ணில் மூவரும் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 1.75–103, அப்பர் 4.21, சுந்தரர் 90–94, ஆக 35 பதிகங்கள். இதற்குரிய சுவை திருமுறைதோறும் உவகை, மருட்கை, பெருமிதம் என மாறுவதுண்டு. இதில் 5 கட்டளைகள் உள்ளன. (சம்பந்தர்) கற்றாங் கெரியோம்பி என்ற தில்லைப் பதிகம், வாசிதீரவே, நன்றுடையானைத் தீயதிலானை, வம்பார் குன்றம் நீடுயர் சாரல் என்ற திருக்குற்றாலப் பதிகம், (அப்பர்) முத்துவிதான மணிப் பொற்கவரி, (சுந்தரர்) முதலையைப் பிள்ளை தரச்சொல்லு என்பன இப்பண்ணில் அமைந்தவை. இது 29– ஆவது மேளகர்த்தா தீரசங்கராபரணத்தில் ஜன்னியம்.

குறிஞ்சி, குறிஞ்சி இராகத்துக்கு நேர் என்பர். மலகரி (பிலகரி) யில் பாடுவது மரபு. குறிஞ்சி நள்ளிரவில் பாடப்படும். அகநானூற்றுப் பாடல் (102.5–9) இதை உணர்த்தும்,

ஒலியர் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாட
..............................................................................
மறம் புகல் மழகளிறு உறங்கும்

என்பது பாட்டு, குறிஞ்சிப் பண்ணின் ஆற்றல் குறித்து இப்பாடல் கூறும் செய்தி மிக்க சுவையானது. மலைப்பகுதியில் யானை வந்து தினைக்கதிரை நாசம் செய்த நிலைக்கண் காவல் இருந்த கொடிச்சி குறிஞ்சிப் பண்ணைப் பாடினாள். கேட்ட யானை தான் பறித்த தினைக்கதிரையும் மென்று விழுங்காது, இடத்தைவிட்டு நிலைபெயராது துயில்வரப் பெற்று அவ்விடத்திலேயே உறங்கியிருந்ததாம். குறிஞ்சியின் கவர்ச்சி அத்தகையது. குறிஞ்சிக்குச் சிறுபொழுது இடையாமம் என்று தண்டியலங்கார உரையாசிரியர் ஒரு பாடலுக்குக் குறிப்பெழுதுகிறார்.

பாடல் பயிலும் பணிமொழி தண்பணைத்தோள்
கூடல் அவாவாற் குறிப்புணர்த்தும் – ஆடவற்கு
மென்றீந் தொடையாழின் மெல்லவே தைவந்தாள்
இன்தீங் குறிஞ்சி யிசை

தருமபுரம் ஆதீனத்தலைவர் மார்கழி மாதத்தில் தினமும் இடையாமத்தில் நீராடிச் சிறப்பு அனுட்டானம் செய்தல் வழக்கம். அப்போது ஓதுவார்கள் குறிஞ்சிப் பண் பாடுவது மரபு.

# 75. திருவெங்குரு

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 75

| | |
|---|---|
| 809. காலைநன்மாமலர் கொண்டடிபரவிக் கைதொழுமாணியைக் கறுத்தவெங்காலன்<br>ஓலமதிடமுன் னுயிரொடுமாள வுதைத்தவனுமையவள் விருப்பனெம்பெருமான்<br>மாலைவந்தணுக வோதம்வந்துலவி மறிதிரைசங்கொடு பவளமுனுந்தி<br>வேலைவந்தணையுஞ் சோலைகள்சூழ்ந்த வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. | வைகறைப் பொழுதில், சிறந்தவனாகிய நல்ல மலர்களைப் பறித்துவந்து சாத்தித் தன் திருவடிகளைப் பரவி, கைகளால் தொழும் மார்க்கண்டேயன் உயிரைக் கவரச் சினந்து வந்த கொடிய காலனை ஓலமிட்டு அலறித் தனக்கு முன்னே உயிரோடு மாளுமாறு உதைத் தருளியவனும், உமையம்மைக்கு விருப்ப மானவனும் ஆகிய எம்பெருமான், மாலைக் காலம் வரக் கடல் வெள்ள நீர் வந்து உலவிச் சூழ்ந்து வரும் அலைகளால் சங்கு, பவளம் ஆகியவற்றை உந்தி வந்து கரையிற் சேர்க்கும் சோலைகள் சூழ்ந்த வெங்குரு என்னும் சீகாழியில் மேவி வீற்றிருந்தருள்கின்றான். |
| 810. பெண்ணினைப்பாக மமர்ந்துசெஞ்சடைமேற் பிறையொடுமரவினை யணிந்தழகாகப்<br>பண்ணினைப்பாடி யாடிமுன்ப–கொள் பரமரெம்மடிகளார் பரிசுகள்பேணி<br>மண்ணினைமூடி வான்முகடேறி மறிதிரைகடன்முகந் தெடுப்பமற்றுயர்ந்து<br>விண்ணளவோங்கி வந்திழிகோயில் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. | உமையம்மையை இடப்பாகமாக விரும்பி ஏற்று, செஞ்சடைமேல் பிறை பாம்பு ஆகியவற்றை அணிந்து, பண் வகைகளை அழகாகப் பாடி ஆடியவராய்ச் சென்று, மகளிரிடம் ப–யேற்கும் பரமராகிய எம் அடிகளார், ஊழிக் காலத்தில் உலகை மூடி வான்முகடு வரை உயர்ந்து சுருண்டு விழும் அலைகடல் நீரில் மிதந்து உயர்ந்து வான் உற ஓங்கி மீள நிலவுலகிற்கு வந்திழிந்த கோயிலாகிய வெங்குரு என்னும் சீகாழிப் பதியுள், வீற்றிருந்தருள்கிறார். |
| 811. ஓரியல்பில்லா வுருவமதாகி யொண்டிறல்வேடன துருவதுகொண்டு<br>காரிகைகாணத் தனஞ்சயன்றன்னைக் கறுத்தவற்களித்துடன் காதல்செய்பெருமான்<br>நேரிசையாக வறுபதமுரன்று நிரைமலர்த்தாதுகண் மூசவிண்டுதிர்ந்து<br>வேரிகளெங்கும் விம்மியசோலை வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. | தம் இயல்பிற்குப் பொருத்தமற்ற உருவமாய் மிக்க வ–மையுடைய வேடர் உருத்தாங்கி வந்து உமையம்மை காண அருச்சுனனோடு ஒரு காரணங்காட்டிச் சண்டையிட்டு அவனுக்கு வேண்டும் பொருள்களை வழங்கி அன்பு செய்த பெருமானாகிய சிவபிரான், வண்டுகள் நேரிசைப் பண்பாடி முரன்று வரிசையாக மலர்ந்த மலர்களின் மகரந்தங்களில் புரள, அதனால் மலர்கள் விரிந்து தேன் உதிருவதால் தேன் எங்கும் விம்மி வழியும் சோலைகள் சூழ்ந்த வெங்குரு என்னும் சீகாழிப்பதியில் வீற்றிருந்தருள்கிறான். |

| | |
|---|---|
| 812. வண்டனைகொன்றை வன்னியுமத்த மருவியகூவிள மெருக்கொடுமிக்க<br>கொண்டணிசடையர் விடையினர்பூதங் கொடுகொட்டிகுடமுழாக் கூடியுமுழவப்<br>பண்டிகழ்வாகப்பாடியொர்வேதம் பயில்வர்முன்பாய்புனற் கங்கையைச்சடைமேல்<br>வெண்பிறைசூடி யுமையவளோடும் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. | வண்டுகள் சூழும் கொன்றை மலர், வன்னி இலை, ஊமத்தம் மலர், வில்வம், எருக்கம்பூ ஆகியனவற்றை மிகுதியாகக் கொண்டு அணிந்த சடையினரும், விடை ஊர்தியரும், பூத கணங்கள் கொடுகொட்டி குடமுழா முழவு முத–யவற்றை முழக்கப் பண் விளங்க ஒப்பற்ற வேதங்களைப் பாடிப் பழகியவரும், தமக்கு முன்னே பாய்ந்து வந்த கங்கை வெள்ளத்தை வெண்பிறையோடு சடையில் அணிந்தவரும் ஆகிய சிவபிரானார் உமையம்மையாரோடு வெங்குரு எனப்படும் சீகாழிப் பதியில் வீற்றிருந்தருள்கிறார். |
| 813. சடையினர்மேனி நீறதுபூசித் தக்கைகொள்பொக்கண மிட்டுடனாகக்<br>கடைதொறும்வந்து ப–யதுகொண்டு கண்டவர்மனமவை கவர்ந்தழகாகப்<br>படையதுவேந்திப் பைங்கயற்கண்ணி யுமையவள்பாகமு மமர்ந்தருள்செய்து<br>விடையொடுபூதஞ் சூழ்தரச்சென்று வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. | சடைமுடியினராய்த் திருமேனியில் வெண்ணீறு பூசியவராய், தக்கை என்னும் இசைக் கருவியை வைத்துக் கட்டியுள்ள துணிமூட்டையைத் தோளில் தொங்கவிட்டுக் கொண்டு வீடுகள் தோறும் வந்து ப–யேற்று, தம்மைக் கண்ட மகளிரின் மனங்களைக் கவர்ந்து அழகிய கோலத்தோடு மழுப்படையைக் கையில் ஏந்தியவராய் விளங்கும் பெருமானார், பசிய கயல் போன்ற கண்களை உடைய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டு அமர்ந்து அருள் செய்யும் குறிப்பினராய், விடையூர்தியோடு பூத கணங்கள் சூழ வெங்குரு என்னும் சீகாழிப் பதியில் வந்து வீற்றிருந்தருள்கிறார். |
| 814. கரைபொருகட–ற் றிரையதுமோதக் கங்குல்வந்தேறிய சங்கமுமிப்பி<br>உரையுடைமுத்த மண–டைவைகி யோங்குவானிருளறத் துரப்பவெண்டிசையும்<br>புரைம–வேதம் போற்றுபூசுரர்கள் புரிந்தவர் நலங்கொளா குதியினினிறைந்த<br>விரைம–தூபம் விசும்பினைமறைக்கும் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. | கரையை அலைக்கும் கட–ன் திரைகள் மோதுதலால் இரவிடைக் கரையில் வந்து ஏறிய சங்குகளும் சிப்பிகளும் முத்துக்களை ஈனப் புகழ்பெற்ற அம்முத்துக்கள் மணல் இடையே தங்கி ஓங்கிய வானத்தின் இருளை முற்றிலும் துரத்தி ஒளி செய்ய, எண் திசைகளிலும் பரவி நிறைந்த வேதங்களைப் போற்றும் அந்தணர்கள் நன்மை விளைக்கும் வேள்விகளைப் புரிய, அவ் வேள்விகளின் ஆகுதியால் எழும் மணம் மிக்க புகை வானை மறைத்துத் தோன்றும் வெங்குரு என்னும் சீகாழிப்பதியில் பெருமான் உமையம்மை யாரோடு வீற்றிருந்தருள்கின்றார். |

| | |
|---|---|
| 815. வல்–நுண்ணிடையா ளுமையவடன்னை மறுகிடவருமத களிற்றினைமயங்க<br>ஒல்லையிற்பிடித்தங் குரித்தவள்வெருவல் கெடுத்தவர்விரிபொழின் மிகுதிருவா–ல்<br>நல்லறமுரைத்து ஞானமோடிருப்ப ந–ந்திடலுற்று வந்தவக்கருப்பு<br>வில்–யைப்பொடிபட விழித்தவர்விரும்பி வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. | கொடி போன்று நுண்ணிய இடையினை உடைய உமையம்மை அஞ்சுமாறு வந்த மதகளிற்றை அது மயங்குமாறு விரைந்து பிடித்து அதனை உரித்து அம்மையின் அச்சத்தைப் போக்கியவரும், விரிந்த பொழி–டையே அமைந்த அழகிய ஆலமரத்தின் அடியில் அமர்ந்து சனகாதியர்க்கு நல்லறங்களை உரைத்து, யோக நிலையில் ஞானமாத்திரராய் வீற்றிருக்க, திருமால் பிரமர் தம் கடுஞ்சொற்களால் ந–வுற்று மலர்க்கணை தொடுத்து யோக நிலையைக் கலைக்க வந்த கரும்பு வில்லையுடைய காமன் எரிந்து பொடிபடுமாறு விழித்தவரும் ஆகிய சிவபிரானார் விரும்பி வெங்குரு என்னும் சீகாழிப் பதியில் எழுந்தருளியுள்ளார். |
| 816. பாங்கிலாவரக்கன் கயிலையன்றெடுப்பப் பலதலைமுடியொடு தோளவைநெரிய<br>ஓங்கியவிரலா லூன்றியன்றவற்கே யொளிதிகழ்வாளது கொடுத்தழகாய<br>கோங்கொடுசெருத்தி கூவிளமத்தங் கொன்றையுங்குலாவிய செஞ்சடைச்செல்வர்<br>வேங்கைபொன்மலரார் விரைதருகோயில் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. | நற்குணங்கள் இல்லாத அரக்கனாகிய இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த போது அவன் முடிகள் அணிந்த பல தலைகளையும் தோள்களையும் கால்விரலை ஊன்றி நெரித்தவரும், அவன் பிழை உணர்ந்து வருந்திப் பாடிய அளவில் அப்பொழுதே அவனுக்கு ஒளிபொருந்திய வாளை வழங்கியருளியவரும், அழகிய கோங்கு, செருந்தி, வில்வம், ஊமத்த மலர், கொன்றை ஆகியன விளங்கும் சிவந்த சடைமுடிச் செல்வரும் ஆகிய சிவபிரானார் வேங்கை மரங்களின் பொன்போன்ற மலர்களின் மணம் கமழும் வெங்குரு என்னும் சீகாழித் திருக்கோயி–ல் வீற்றிருந்தருள்கிறார். |
| 817. ஆறுடைச்சடையெம் மடிகளைக்காண வரியொடுபிரமனு மளப்பதற்காகிச்<br>சேறிடைத்திகழ்வா னத்திடைபுக்குஞ் செலவறத்தவிர்ந்தன ரெழிலுடைத்திகழ்வெண்<br>ணீறுடைக்கோல மேனியர்நெற்றிக் கண்ணினர்விண்ணவர் கைதொழுதேத்த<br>வேறெமையாள விரும்பியவிகிர்தர் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. | கங்கை நதியைச் சடையிற் சூடிய எம் தலைவராகிய சிவபிரானாரின் அடிமுடிகளை அளந்து காணுதற்குத் திருமால் பிரமர்கள் சேற்று நிலத்தைப் பன்றியாய் அகழ்ந்து சென்றும், முடியினைக் காண அன்னமாய்ப் பறந்து சென்றும் தம் செயல் அழிந்தனர். அழகு விளங்கும் வெண்ணீறு பூசிய திருமேனியரும், நெற்றிக்கண்ணரும், விண்ணவர் கைகளால் தொழுது ஏத்த அவர்களை விடுத்து எம்மைச் சிறப்பாக ஆள விரும்பியவரும் ஆகிய அவ்விகிர்தர் வெங்குரு என்னும் சீகாழிப் பதியில் எழுந்தருளியுள்ளார். |

| | |
|---|---|
| 818. பாடுடைக்குண்டா சாக்கியர்சமணர் பயிறருமறவுரை<br>விட்டழகாக<br>ஏடுடைமலராள் பொருட்டுவன்றக்க னெல்லையில்<br>வேள்வியைத் தகர்த்தருள்செய்து<br>காடிடைக்கடிநாய் கலந்துடன்சூழக் கண்டவர்வெருவுற<br>விளித்துவெய்தாய<br>வேடுடைக்கோலம் விரும்பியவிகிர்தர் வெங்குருமேவியுள்<br>வீற்றிருந்தாரே. | துன்பங்களைத் தாங்குதலே தவத்தின் அடையாளம் எனக் கருதும் குண்டர்களாகிய சமணர்களும் சாக்கியர்களும் கூறும் அறவுரைகளைக் கருதாது, அழகிய இதழ்களோடு கூடிய தாமரை மலர் போன்றவளாகிய தாட்சாயணியின்பொருட்டு வ–ய தக்கன் இயற்றிய அளவிடமுடியாத பெரிய வேள்வியை அழித்துப் பின் தக்கனுக்கும் அருள்புரிந்து, காட்டில் காவல் புரியும் நாய்கள் சூழ்ந்து வரவும், கண்டவர் அஞ்சவும், வேடர் பயிலும் சொற்களால் விலங்குகளை விளித்து வேட்டுவக் கோலத்தை விரும்பி ஏற்ற விகிர்தர் வெங்குரு என்னும் சீகாழிப்பதியில் வீற்றிருந்தருள்கின்றார். |
| 819. விண்ணியல்விமானம் விரும்பியபெருமான்<br>வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரை<br>நண்ணியநூலன் ஞானசம்பந்த னவின்றவிவ்வாய்மொழி<br>நலமிகுபத்தும்<br>பண்ணியல்பாகப் பத்திமையாலே பாடியுமாடியும்<br>பயிலவல்லோர்கள்<br>விண்ணவர்விமானங் கொடுவரவேறி வியனுலகாண்டுவீற்<br>றிருப்பவர்தாமே. | வானளாவிய விமானத்தை விரும்பி, வெங்குரு என்னும் சீகாழிப் பதியுள் வீற்றிருந்தருளும் பெருமானைப் பற்றி, அறம் பொருள் இன்பம் வீடு ஆகியவற்றைத் தெரிவிக்கும் நல்ல நூல்களை அறிந்த ஞானசம்பந்தன் அருளிய இவ்வுண்மை மொழிகளாகிய நன்மைகளைத் தரும் இப்பதிகப் பாடல்கள் பத்தையும், பண்ணிசையோடும் பக்தியோடும் பாடி ஆடிக் கூற வல்லவர்கள், தேவர்கள் விமானம் கொண்டுவர அதன்மிசை ஏறி, அகன்ற அத்தேவருலகை அடைந்து அரசு புரிந்து, அதன்கண் வீற்றிருப்பர். |

## 76. திருஇலம்பையங்கோட்டூர்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 76

| | |
|---|---|
| 820. மலையினார்பருப்பதந் துருத்திமாற்பேறு மாசிலாச்சீர்மறைக்<br>காடுநெய்த்தானம்<br>நிலையினானெனதுரை தனதுரையாக நீறணிந்தேறுகந்<br>தேறியநிமலன்<br>கலையினார்மடப்பிணை துணையொடுந்துயிலக்<br>கானலம்பெடைபுல்கிக் கணமயிலாலும்<br>இலையினார்பைம்பொழி –லம்பையங்கோட்டு ரிருக்கையாப்<br>பேணியென்னெழில் கொள்வதியல்பே. | கயிலாய மலையை இடமாகக் கொண்டுறையும் இறைவன், சீபருப்பதம், துருத்தி, மாற்பேறு, குற்றமற்ற சிறப்புடைய திருமறைக்காடு, நெய்த்தானம் ஆகிய தலங்களில் நிலையாக எழுந்தருளியிருப்பவன். தன் உரைகளை என் உரைகளாக வெளிப்படுத்தி அருள்புரிபவன். திருநீறு அணிந்து ஆனேற்றில் மகிழ்வோடு ஏறி வரும் நிமலன். அத்தகையோன் ஆண்மான்கள் தம் இளைய பெண் மான்களோடு துயில்வதும், சோலைகளில் வாழும் ஆண் மயில்கள் பெடைகளைத் தழுவி அகவுவதுமாய் இலைகள் நிறைந்த பசிய பொழில்கள் சூழ்ந்த இலம்பையங்கோட்டுரைத் தனது இருப்பிடமாகக் கொண்டு என் அழகினைக் கவர்ந்து செல்வது முறையோ ? |

| | |
|---|---|
| 821. திருமலர்க்கொன்றையா னின்றியூர்மேயான்<br>ரேவர்கடலைமகன் றிருக்கழிப்பாலை<br>நிருமலனெனதுரை தனதுரையாக நீறணிந்தேறுகந்<br>தேறியநிமலன்<br>கருமலர்க்கமழ்சுனை நீண்மலர்க்குவளை<br>கதிர்முலையிளையவர் மதிமுகத்துலவும்<br>இருமலர்த்தண்பொய்கை யிலம்பையங்கோட்டு ரிருக்கையாப்<br>பேணியென்னெழில் கொள்வதியல்பே. | அழகிய கொன்றை மலர் மாலையை அணிந்தவன். திருநின்றியூரில் எழுந்தருளியிருப்பவன். தேவர்கட்குத் தலைவன். திருக்கழிப்பாலையில் குற்றமற்றவனாய் உறைபவன். தன்னுடைய உரைகளை என்னுடைய உரைகளாக வெளிப்படுத்தி அருள் புரிபவன். திருநீறு அணிந்து ஆனேற்றில் மகிழ்வோடு ஏறிவரும் நிமலன். அத்த கையோன் பெரிய தாமரை மலர்களால் மணம் கமழும் சுனைகளில் உள்ள நீண்ட குவளை மலர்கள் இளம் பெண்களின் மதி போன்ற முகத்தில் உலவும் பெரிய கண்களை நிகர்க்கும் இலம்பையங் கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டு என் அழகைக் கவர்ந்து செல்லுதல் முறையோ? |
| 822. பாலனாம்விருத்தனாம் பசுபதிதானாம் பண்டுவெங்கூற்றுதைத்<br>தடியவர்க்கருளும்<br>காலனாமெனதுரை தனதுரையாகக் கனலெரியங்கையி<br>லேந்தியகடவுள்<br>நீலமாமலர்ச்சுனை வண்டுபண்செய்ய நீர்மலர்க்குவளைக<br>டாதுவிண்டோங்கும்<br>ஏலநாறும்பொழி –லம்பையங்கோட்டு ரிருக்கையாப்<br>பேணியென்னெழில் கொள்வதியல்பே. | பால வடிவோடும், விருத்த வடிவோடும் வரும் பசுபதி எனப் பெறுபவன். முற்காலத்தில் கொடிய கூற்றுவனை உதைத்து மார்க்கண்டேயருக்கு அருள்புரிந்த காலகாலன். தன்னுடைய உரைகளை என் உரைகளாக வெளிப்படுத்தியவன். கையில் விளங்கும் எரியை ஏந்திய கடவுள். அத்தகைய இறைவன் நீல நிறம் பொருந்திய சிறந்த மலர்கள் பூக்கும் சுனையில் வண்டுகள் பாட நீரில் பூக்கும் குவளை மலர்கள் மகரந்தம் விண்டு மணம் பரப்புவதும், ஏலமணம் கமழும் பொழில்கள் சூழ்ந்ததுமான இலம்பையங்கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டு அவனைத் தரிசிக்க வந்த என் எழிலைக் கொள்வது முறையோ? |
| 823. உளங்கொள்வாருச்சியார் கச்சியேகம்ப<br>னொற்றியூருறையுமண் ணாமலையண்ணல்<br>விளம்புவானெனதுரை தனதுரையாக வெள்ளநீர்விரிசடைத்<br>தாங்கியவிமலன்<br>குளம்புறக்கலைதுள மலைகளுஞ்சிலம்பக்<br>கொழுங்கொடியெழுந் கூவிளங்கொள்ள<br>இளம்பிறைதவழ்பொழி–லும்பையங்கோட்டு ரிருக்கையாப்<br>பேணியென் னெழில்கொள்வதியல்பே. | உள்ளத்தில் தியானிப்பவர்களின் முடிமீது விளங்குபவன் கச்சியேகம்பன். ஒற்றியூர், திருவண்ணாமலை ஆகிய தலங்களில் விளங்கும் தலைவன். என்னுடைய உரைகளாகத் தன்னுரைகளை வெளியிடுபவன். கங்கை வெள்ளத்தைத் தனது விரிந்த சடைமிசைத் தாங்கிய விமலன். அத்தகையோன், கலைமான்கள் குளம்புகள் நிலத்தில் பதியுமாறு கால்களை அழுத்தித் துள்ளவும், மலைகள் அவ்விடங்களில் எழும்பும் ஒ–களை எதிரொ–க்கவும், வளமையான கொடிகள் வளர்ந்த வில்வ மரங்கள் முழுதும் படியவும் அமைந்துள்ள, இளம்பிறை தவழும் வான் அளவிய பொழில்கள் சூழ்ந்த இலம்பையங் கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டு அவனைத் தரிசிக்க வந்த என் எழிலைக் கவர்ந்து கொள்வது நீதியோ! |

| | |
|---|---|
| 824. தேனுமாயமுதமாய்த் தெய்வமுந்தானாய்த் தீயொடுநீருடன் வாயுவாந்தெரியில்<br>வானுமாமெனதுரை தனதுரையாக வரியராவரைக்கசைத் துழிதருமைந்தன்<br>கானமான்வெருவுறக் கருவிரலூகங் கடுவனோடுகளுமூர் கற்கடுஞ்சாரல்<br>ஏனமானுழிதரு மிலம்பையங்கோட்டு ரிருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. | தேன், அமுது ஆகியன போல இனிப்பவனாய், தெய்வம் தானேயானவன். தீ, நீர், வாயு, வான், மண் ஆகிய ஐம்பூத வடிவினன். தன் உரைகளை என் உரைகளாக வெளிப்படுத்தியவன். உட–ல் வரிகளை உடைய பாம்பைத் தன் இடையிலே கட்டிக் கொண்டு திரிபவன். மான்கள் அஞ்சும்படி கரிய விரல்களை உடைய பெண் கருங்குரங்கு ஆண் குரங்கோடு காட்டில் உகளும் பாறைகளை யுடைய கடுமையான மலைச்சார–ல் பன்றிகளும் காட்டுப் பசுக்களும் திரியும் இலம்பையங் கோட்டூரைத் தன் இருப்பிடமாகக் கொண்டு தன்னை வழிபட வந்த என் அழகைக் கவர்ந்து கொள்ளல் முறையோ ? |
| 825. மனமுலாமடியவர்க் கருள்புரிகின்ற வகையலாற்ப–திரிந் துண்பிலான்மற்றோர்<br>தனமிலானெனதுரை தனதுரையாகத் தாழ்சடையிளமதி தாங்கியதலைவன்<br>புனமெலாமருவிக ளிருவிசேர்முத்தம் பொன்னொடுமணிகொழித் தீண்டிவந்தெங்கும்<br>இனமெலாமடைகரை யிலம்பையங்கோட்டு ரிருக்கையாப் பேணியென் னெழில்கொள்வதியல்பே. | தங்கள் மனங்களில் இறைவனை உலாவச் செய்யும் அடியவர்க்கு அருள்புரிதற் பொருட்டே ப–யேற்றுத் திரிபவனேயன்றி உண்ணும் பொருட்டுப் ப– ஏலாதவன். வீடு பேறாகிய செல்வமன்றி வேறு செல்வம் இல்லாதவன். தன்னுடைய உரைகளை என்னுடைய உரைகளாக வெளிப்படுத்தியவன். தாழ்ந்து தொங்கும் சடைமீது இளம் பிறையைத் தாங்கியுள்ள தலைவன். அத்தகையோன் தினைப்புனங்களில் பாய்ந்துவரும் அருவிகள் அரிந்த தினைத்தாள்களில் ஒதுங்கிய முத்து பொன் மணி முத–யவற்றைக் கொழித்துக் கொண்டு வந்து எல்லா இடங்களிலும் சேர்க்கும் கரைகளோடு கூடிய வயல்களை உடைய இலம்பையங் கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டு என் எழிலைக் கொள்வது முறையோ ? |
| 826. நீருளான்றீயுளா னந்தரத்துள்ளா னினைப்பவர்மனத்துளா னித்தமாவேத்தும்<br>ஊருளானெனதுரை தனதுரையாக வொற்றைவெள்ளேறுகந் தேறியவொருவன்<br>பாருளார்பாடலோ டாடலறாத பண்முரன்றஞ்சிறை வண்டினம்பாடும்<br>ஏருளார்பைம்பொழி –லம்பையங்கோட்டு ரிருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. | நீர், தீ, ஆகாயம் ஆகியவற்றுள் இருப்பவன். நினைப்பவர் மனத்தில் உறைபவன். நாள்தோறும் அடியவர்கள் வந்து வணங்கும் ஊர்களை இடமாகக் கொண்டவன். தன்னுடைய உரைகளை என்னுடையனவாக வெளிப்படுத்தியவன். தனித்த ஒரு வெள்ளேற்றை உகந்து ஏறி வருபவன். அத்தகையோன், மண்ணக மக்களின் பாடல் ஆடல்கள் இடையறாது நிகழ்வதும், அழகிய சிறகுகளை உடைய வண்டுகள் பண்ணிசை போல ஒ– செய்து பாடும் அழகிய பொழில்கள் சூழ்ந்ததுமான இலம்பையங்கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டு என் எழிலைக் கவர்தல் முறையாகுமோ ? |

| | |
|---|---|
| 827. வேருலாமாழ்கடல் வருதிரையிலங்கை வேந்தனதடக்கைக ளடர்த்தவனுலகில்<br>ஆருலாமெனதுரை தனதுரையாக வாகமோரரவணிந் துழிதருமண்ணல்<br>வாருலாநல்லன மாக்களுஞ்சார வாரணமுழிதரு மல்லலங்கானல்<br>ஏருலாம்பொழிலணி யிலம்பையங்கோட்டு நிருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. | நிலத்தின் வேர் வரை உலாவுகின்ற ஆழ்ந்த கட–ன் அலைகள் தவழ்கின்ற இலங்கை வேந்தனாகிய இராவணனின் நீண்ட கைகள் இருபதையும் நெரித்தவன். உலகின்கண் நிறைந்து விளங்கும் தன்னுடைய உரைகளை என் உரைகளாக வெளிப்படுத்தியவன். தன்னுடைய மார்பில் பெரியதொரு பாம்பினை அணிந்து திரியும் தலைவன். அத்தகையோன், கழுத்தில் வார் கட்டப்பட்ட நல்ல வளர்ப்பு விலங்குகளும், யானைகளும் திரியும் வளமான காடுகளும் அழகிய பொழில்களும் சூழ்ந்த இலம்பையங் கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டு என் எழிலைக் கவர்தல் முறையோ ? |
| 828. கிளர்மழைதாங்கினா னான்முகமுடையோன் கீழடிமேன்முடி தேர்ந்தளக்கில்லா<br>உளமழையெனதுரை தனதுரையாக வொள்ளழலங்கையி லேந்தியவொருவன்<br>வளமழையெனக்கழை வளர்துளிசோர மாசுணமுழிதரு மணியணிமாலை<br>இளமழைதவழ்பொழி –லம்பையங்கோட்டு நிருக்கையாப் பேணியென் னெழில்கொள்வதியல்பே. | ஆயர்பாடியை அழித்தற்கெனக் கிளர்ந்தெழுந்த மழையைக் கோவர்த்தனம் என்னும் மலையால் தடுத்த திருமாலும், நான்முகனும், கீழே அகழ்ந்து சென்று அடியையும், மேலே பறந்து சென்று முடியையும் அளந்தறியமுடியாதவாறு அழலுருவாய் ஓங்கி நின்றவன். மனத்தால் அழைத்தற்குரியனவாய் அமைந்த தன்னுடைய உரைகளை என்னுடையவாக வெளிப் படுத்தியவன். அழகிய கையில் ஒளி பொருந்திய அழலை ஏந்திய ஒப்பற்ற தலைவன். அத்தகையோன், வளமான மழை போல, மூங்கி–ல் தேங்கிய பனி நீர், காற்றால் பொழிவதும், மலைப் பாம்புகள் ஊர்வதும், அழகிய மணிகள் மாலை போல நிறைந்து தோன்றுவதும், மேகக் கூட்டங்கள் தவழும் பொழில் சூழ்ந்ததுமான இலம்பையங்கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டு என் எழிலைக் கவர்ந்தான். இது முறையோ ? |
| 829. உரிஞ்சனகூறைக ளுடம்பினராகி யுழிதருசமணருஞ் சாக்கியப்பேய்கள்<br>பெருஞ்செல்வனெனதுரை தனதுரையாகப் பெய்ப–க் கென்றுழல் பெரியவர்பெருமான்<br>கருஞ்சினைமுல்லைநன் பொன்னடைவேங்கை களிமுகவண்டொடு தேனினமுரலும்<br>இருஞ்சுனைமல்கிய விலம்பையங்கோட்டு நிருக்கையாப் பேணியென் னெழில்கொள்வதியல்பே. | ஆடைகளை உரிந்துவிட்டாற் போன்ற அம்மண உடம்பினராய்த் திரியும் சமணர்களும், சாக்கியர்களாகிய பேய்களும் அறிய இயலாத பெரிய வைப்பு நிதியாய் விளங்குவோன். தன்னுடைய உரைகளை என் உரைகளாக வெளிப்படுத்தியவன். ஊரார் இடும் ப–யை ஏற்பதற்கெனப் பிட்சாடனனாய்த் திரிபவன். பெரியோர்களுக்கெல்லாம் தலைவன். அத்தகையோன், பெரிதான அரும்புகளை உடைய முல்லையும், பொன் போன்று மலரும் வேங்கையும், மகிழ்ச்சி நிறைந்த முகத்தோடு வண்டுகளும், தேனீக்களும் முரலும் பெரிய சுனைகளும், நிறைந்து காணப்படும் இலம்பையங்கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டு, என் எழிலைக் கவர்தல் முறையோ ? |

830. கந்தனைம-கனை கடலொ-யோதங் கானலங்கழிவளர் கழுமலமென்னும்
நந்தியாருறைபதி நான்மறைநாவ னற்றமிழ்க்கின்றுணை ஞானசம்பந்தன்
எந்தையார்வளநக ரிலம்பையங்கோட்டு ரிசையொடுகூடிய பத்தும்வல்லார்போய்
வெந்துயர்கெடுகிட விண்ணவரோடும் வீடுபெற்றிம்மையின் வீடெளிதாமே.

மணம் நிரம்பியதும், கடல் ஒ-யோடு அதன் வெள்ளம் பெருகிக் கடற்கரைச் சோலைகள் உப்பங்கழிகள் ஆகியன நிரம்புவதும் ஆகிய கழுமலம் என்னும் சிவன் உறை பதியாகிய சீகாழியில் தோன்றிய நான்மறை ஓதும் நாவினனும் நற்றமிழ்க்கு இனிய துணையாயிருப்பவனுமாகிய ஞானசம்பந்தன் எந்தையார் உறையும் வளநகராகிய இலம்பையங் கோட்டூரில் வீற்றிருந்தருளும் இறைவன் மீது பாடிய இசையொடும் கூடிய பத்துப் பாடல்களையும் ஓத வல்லவர்கள் தம் கொடிய துயர்கள் ஓடிக்கெட விண்ணவரோடும் வீற்றிருந்து பின் விண்ணி-ருந்து விடுபட்டு வீடு பேற்றையும் இப்பிறப்பு ஒன்றாலேயே எளிதாகப் பெறுவார்கள்.

## 77. திருஅச்சிறுபாக்கம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 77

831. பொன்றிரண்டன்ன புரிசடைபுரளப் பொருகடற்பவளமொ டழனிறம்புரையக்
குன்றிரண்டன்ன தோளுடையகலங் குவாலவெண்ணூலொடு கொழும்பொடியணிவர்
மின்றிரண்டன்ன நுண்ணிடையரிவை மெல்-யலாளையோர் பாகமாப்பேணி
அன்றிரண்டுருவ மாயவெம்மடிக ளச்சிறுபாக்கம் தாட்சிகொண்டாரே.

அச்சிறுபாக்கத்தைத் தான் ஆட்சிபுரியும் இடமாகக் கொண்டுள்ள இறைவர், தமது, முறுக்கேறிய பொன் திரண்டாற் போன்ற சடை, அலைகள் பெருங்கட-ல் தோன்றும் பவளக் கொடியையும், தீ வண்ணத்தையும் ஒத்துப் புரள, குன்றுகள் போன்ற இரண்டு தோள்களோடு கூடிய மார்பகத்தில் விளங்கும் வெண்மையான முப்புரி நூலோடு வளமையான திருநீற்றையும் அணிந்து, மின்னல் போன்ற நுண்ணிய இடையினையுடைய மென்மைத் தன்மை வாய்ந்த அரிவையாகிய பார்வதி தேவியை ஒரு பாகமாக விரும்பி ஏற்று, ஒருருவில் ஈருருவாய்த் தோன்றும் அடிகளாவார்.

832. தேனினுமினியர் பாலனநீற்றர் தீங்கரும்பனையர்தந் திருவடிதொழுவார்
ஊனயந்துருக வுவகைகடருவா ருச்சிமேலுறைபவ ரொன்றலாதூரார்
வானகமிறந்து வையகம்வணங்க வயங்கொளநிற்பதோர் வடிவினையுடையார்
ஆனையினுரிவை போர்த்தவெம்மடிக ளச்சிறுபாக்கம் தாட்சிகொண்டாரே.

அச்சிறுபாக்கத்தைத் தான் ஆட்சிபுரியும் இடமாகக் கொண்டுள்ள இறைவர், தேனினும் இனியவர். பால் போன்ற நீறணிந்தவர். இனிய கரும்பு போன்றவர். தம் திருவடிகளை மெய்யுருகி வணங்கும் அன்பர்கட்கு உவகைகள் தருபவர். அவர்களின் தலைமேல் விளங்குபவர். இடபவாகனமாகிய ஓர் ஊர்தியிலேயே வருபவர். வானுலகைக் கடந்து மண்ணுலகை அடைந்து அங்குத் தம்மை வழிபடும் அன்பர்கள் நினைக்கும் செயலை வெற்றி பெறச் செய்து நிற்கும் வடிவினை உடையவர். யானையின் தோலைப் போர்த்தியவர். அவர் எம் தலைவராவர்.

| | |
|---|---|
| 833. காரிருளுருவ மால்வரைபுரையக் களிற்றினதுருவுகொண் டரிவைமேலோடி<br>நீருருமகளை நிமிர்சடைத்தாங்கி நீறணிந்தேறுகந் தேறியநிமலர்<br>பேரருளாளர் பிறவியிற்சேரார் பிணியிலர்கேடிலர் பேய்க்கணஞ்சூழ<br>ஆரிருண்மாலை யாடுமெம்மடிக எச்சிறுபாக்கம் தாட்சிகொண்டாரே. | அச்சிறுபாக்கத்தைத் தான் ஆட்சிபுரியும் இடமாகக் கொண்டுள்ள இறைவர், உமையம்மை பெண் யானை வடிவு கொள்ளத் தாம் காரிருளும், பெரிய மலையும் போன்ற களிற்றுயானை வடிவம் தாங்கிச் சென்று அவளோடு கூடியவர். நீர்வடிவமான கங்கையை மேல்நோக்கிய சடைமிசைத் தாங்கியவர். நீறுபூசி விடையேற்றில் மகிழ்ந்து ஏறிவரும் புனிதர். பேரருளாளர். பிறப்பிறப்பிற் சேராதவர். பிணி, கேடு இல்லாதவர். பேய்க்கணங்கள் சூழச் சுடுகாட்டில் முன்மாலை யாமத்தில் நடனம் புரியும் எம் அடிகளாவார். |
| 834. மைம்மலர்க்கோதை மார்பினரெனவு மலைமகளவளொடு மருவினரெனவும்<br>செம்மலர்ப்பிறையுஞ் சிறையணிபுனலுஞ் சென்னிமேலுடையரெஞ்சென்னிமேலுறைவார்<br>தம்மலரடியொன் றடியவர்பரவத் தமிழ்ச்சொலும்வடசொலுந் தாணிழற்சேர<br>அம்மலர்க்கொன்றை யணிந்தவெம்மடிக எச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. | அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவர், குவளை மலர்களால் இயன்ற மாலையைச் சூடிய மார்பினர் எனவும், மலைமகளாகிய பார்வதி தேவியை இடப்பாகமாகக் கொண்டுள்ளவர் எனவும், சிவந்த மலர் போலும் பிறையையும், தேங்கியுள்ள கங்கை நீரையும் தம் சடைமுடி மீது உடையவர் எனவும், எம் சென்னி மேல் உறைபவர் எனவும், தம் மலர் போன்ற திருவடிகளை மனத்தால் ஒன்றி நின்று அடியவர்கள் பரவவும் தமிழ்ச்சொல், வடசொற்களால் இயன்ற தோத்திரங்கள் அவர்தம் திருவடிகளைச் சாரவும் அழகிய கொன்றை மலர் மாலையை அணிந்தவராய் விளங்கும் அடிகள் ஆவார். |
| 835. விண்ணுலாமதியஞ் சூடினரெனவும் விரிசடையுள்ளது வெள்ளநீரெனவும்<br>பண்ணுலாமறைகள் பாடினரெனவும் பலபுகழல்லது பழியிலரெனவும்<br>எண்ணலாகாத விமையவர்நாளு மேத்தரவங்களோ டெழில்பெறநின்ற<br>அண்ணலானூர்தி யேறுமெம்மடிக எச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. | அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவர், வானிலே உலாவும் திங்களைச் சூடியவர் எனவும், அவர்தம் விரிந்த சடைமுடியில் கங்கை நீர் வெள்ளம் தங்கி உள்ளது எனவும், இசை அமைதியோடு கூடிய நான்கு வேதங்களைப் பாடியவர் எனவும், பலவகையான புகழையே உடையவர் எனவும், பழியே இல்லாதவர் எனவும் எண்ணற்ற தேவர்கள் நாள்தோறும் தம்மை ஏத்த அரவாபரணங்களோடு மிக்க அழகும் தலைமையும் உடையவராய் ஆனேறு ஏறிவரும் எம் அடிகள் ஆவார். |
| 836. நீடிருஞ்சடைமே –லிம்பிறைதுலங்க நிழறிகழ்மழுவொடு நீறுமெய்பூசித்<br>தோடொருகாதினிற் பெய்துவெய்தாய சுடலையிலாடுவர் தோலுடையாகக்<br>காடரங்காகக் கங்குலும்பகலுங் கழுதொடுபாரிடங் கைதொழுதேத்த<br>ஆடரவாட வாடுமெம்மடிக எச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. | அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவர், தமது நீண்ட பெரிய சடைமேல் இளம்பிறை விளங்க, ஒளிபொருந்திய மழுவோடு, திருநீற்றை மேனிமேல் பூசி, ஒரு காதில் தோடணிந்து கொடிய சுடலைக் காட்டில் ஆடுபவர். பு–த்தோலை உடையாக அணிந்து இரவும், பகலும் பேய்க்கணங்களும், பூதகணங்களும் கைகளால் தொழுதேத்தப் படமெடுத்தாடும் பாம்புகள் தம் மேனிமேல் பொருந்தி ஆடச் சுடுகாட்டைத் தமது அரங்கமாகக் கொண்டு ஆடும் எம்அடிகள் ஆவார். |

| | |
|---|---|
| 837. ஏறுமொன்றேறி நீறுமெய்பூசி யிளங்கிளையரிவையொ<br>டொருங்குடனாகிக்<br>கூறுமொன்றருளிக் கொன்றையந்தாருங் குளிரிளமதியமுங்<br>கூவிளமலரும்<br>நாறுமல்–கையு மெருக்கொடுமுருக்கு மகிழிளவன்னியு<br>மிவைநலம்பகர<br>ஆறுமோர்சடைமே லணிந்தவெம்மடிக ளச்சிறுபாக்கம<br>தாட்சிகொண்டாரே. | அச்சிறுபாக்கத்தைத் ஆட்சி கொண்டுள்ள இறைவர், ஆனேறு ஒன்றில் ஏறித்தம் திருமேனிமேல் நீறுபூசி இளைய கிளி போன்ற அழகிய பார்வதி தேவியாருக்குத் தம் உட–ல் ஒரு கூறு அருளி இருவரும் ஒருவராய் இணைந்து திருமுடிமேல் கொன்றை மாலை, குளிர்ந்த இளமதி, வில்வம், பிற நறுமலர்கள் மணங்கமழும் மல்–கை, எருக்கு, முருக்கு, மகிழ், இளவன்னி இலை ஆகிய இவை மணம் பரப்ப, கங்கையாற்றைச் சடைமேல் அணிந்துள்ள எம் அடிகள் ஆவார். |
| 838. கச்சுமொள்வாளுங் கட்டியவுடையர் கதிர்முடிசுடர்விடக்<br>கவரியுங்குடையும்<br>பிச்சமும்பிறவும் பெண்ணணங்காய பிறைநுதலவர்தமைப்<br>பெரியவர்பேணப்<br>பச்சமும்வ–யுங் கருதியவரக்கன் பருவரையெடுத்ததிண்<br>டோள்களையடர்வித்<br>தச்சமுமருளுங் கொடுத்தவெம்மடிக ளச்சிறுபாக்கம<br>தாட்சிகொண்டாரே. | அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவர், ஒளிபொருந்திய வாளைக் கச்சிலே பொருத்தி இடையில் ஆடையாகக் கட்டியுள்ளவர். ஒளி பொருந்திய முடி சுடர்விடக்கவரி, குடை, பீ–க்குஞ்சம் முத–யவற்றோடு பெண்களைக் கவரும் பிறை மதியை முடியிற் சூடி விளங்குபவர். பெருமை உடைய அடியவர் தம்மை விரும்பி வழிபடுமாறு, தம் அன்பு வ–மை ஆகியவற்றைக் கருதித் தன்னைப் பெரியவனாக எண்ணிப் பெரிய கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணனின் தோள்களை அடர்த்து அவனுக்குத் தம்பால் அன்பையும் அருளையும் கொடுத்த எம் அடிகள் ஆவார். |
| 839. நோற்றலாரேனும் வேட்டலாரேனு நுகர்புகர்சாந்தமொ<br>டேந்தியமாலைக்<br>கூற்றலாரேனு மின்னவாறென்று மெய்தலாகாததொ<br>ரியல்பினையுடையார்<br>தோற்றலார்மாலு நான்முகமுடைய தோன்றலுமடியொடு<br>முடியுறத்தங்கள்<br>ஆற்றலாற்காணா ராயவெம்மடிக ளச்சிறுபாக்கம்<br>தாட்சிகொண்டாரே. | அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவர், தவம் செய்யாராயினும், அன்பு செய்யாராயினும் நுகரத்தக்க உணவு, சந்தனம், கையில் ஏந்திய மாலை இவற்றின் கூறுகளோடு வழிபாடு செய்யாராயினும் இத்தகையவர் என்று அறிய முடியாத தன்மையும் அடைய முடியாத அருமையும் உடைய இயல்பினராய் மாலும் நான்முகனும் பன்றியும் அன்னமுமாய்த் தோன்றி அடியையும் முடியையும் தங்கள் ஆற்றலால் காண இயலாதவாறு உயர்ந்து நின்ற எம்அடிகள் ஆவார். எனவே நோற்பவருக்கும் அன்பு செய்பவருக்கும் வழிபடுவோருக்கும் அவர் எளியர் என்பது கருத்து. |
| 840. வாதுசெய்சமணுஞ் சாக்கியப்பேய்க ணல்வினைநீக்கிய<br>வல்வினையாளர்<br>ஓதியுங்கேட்டு முணர்வினையிலாதா ருள்கலாகாததோ<br>ரியல்பினையுடையார்<br>வேதமும்வேத நெறிகளுமாகி விமலவேடத்தோடு<br>கமலமாமதிபோல்<br>ஆதியுமீறு மாயவெம்மடிக ளச்சிறுபாக்கம<br>தாட்சிகொண்டாரே. | அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள எம் அடிகள் நல்வினைகளைச் செய்யாது வல்வினைகள் புரிபவரும் ஓதியும் கேட்டும் திருந்தாத உணர்வோடு தர்க்கவாதம் புரிபவருமாகிய சமணர்களும் சாக்கியப் பேய்களும் நினைத்தும் அறிய முடியாத இயல்பினை உடையவர். வேதமும் வேத நெறிகளும் ஆகியவர். தம்மை வழிபடுவார் மலங்களை நீக்கும் வேடம் உடையவர். தாமரை மலரும் திங்களும் போன்ற அழகும், தண்மையும் உடையவர். உலகின் முதலும் முடிவும் ஆனவர். |

| | |
|---|---|
| 841. மைச்செறிகுவளை தவளைவாய்நிறைய<br>மதுமலர்ப்பொய்கையிற் புதுமலர்கிழியப்<br>பச்சிறவெறிவயல் வெறிகமழ்காழிப் பதியவரதிபதி கவுணியர்<br>பெருமான்<br>கைச்சிறுமறியவன் கழலலாற்பேணாக் கருத்துடைஞானசம்<br>பந்தனதமிழ்கொண்<br>டச்சிறுபாக்கத் தடிகளையேத்து மன்புடையடியவ<br>ரருவினையிலரே. | கருநிறம் பொருந்திய குவளை மலர்கள் தவளைகளின் வாய் நிறையுமாறு தேனைப் பொழியும் மலர்கள் நிறைந்த பொய்கைகளும், புதுமலர்களின் இதழ்கள் கிழியுமாறு பசிய இறால் மீன்கள் துள்ளி விழும் பொய்கைகளை அடுத்துள்ள வயல்களும் மணம் கமழும் சீகாழிப் பதியினர்க்கு அதிபதியாய் விளங்கும் கவுணியர் குலத் தலைவனும், கையின்கண் சிறிய மானை ஏந்திய சிவன் திருவடிகளையன்றிப் பிறவற்றைக் கருதாத கருத்தினை உடையவனும் ஆகிய ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகத்தைக் கொண்டு அச்சிறுபாக்கத்து அடிகளை ஏத்தும் அன்புடை அடியவர் நீக்குதற்கரிய வினைகள் இலராவர். |

## 78. திருஇடைச்சுரம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 78

| | |
|---|---|
| 842. வரிவளரவிரொளி யரவரைதாழ வார்சடைமுடிமிசை<br>வளர்மதிசூடிக்<br>கரிவளர்தருகழல் கால்வலனேந்திக் கனலெரியாடுவர்<br>காடரங்காக<br>விரிவளர்தருபொழி –னமயிலால வெண்ணிறத்தருவிக<br>டிண்ணெனவீழும்<br>எரிவளரினமணி புனமணிசார –டைச்சுரமேவிய<br>விவர்வணமென்னே. | மரங்கள் வளர்ந்த விரிந்த பொழில்களில் இள மயில்கள் ஆடுவதும், வெண்மையான நிறத்துடன் அருவிகள் திண்ணென்ற ஒ–க் குறிப்போடு வீழ்வதும், எரி போன்று ஒளிரும் ஒரினமான மணிகள் காடுகளில் அழகுற விளங்குவதுமாய மலைச்சாரலை உடைய திருஇடைச்சுரத்தில், வரிகளையும் ஒளியையும் உடைய பாம்பை இடையிலே கட்டி, நீண்ட சடைமுடி மீது வளரும் பிறைமதியைச் சூடி யானை உருவம் பொறித்த வீரக் கழலைக் கா–ன்கண் வெற்றி பெறச் சூடிச் சுடுகாட்டைத் தமது அரங்காகக் கொண்டு ஆடும் இவ்விறைவரது இயல்பு யாதோ ? |
| 843. ஆற்றையுமேற்றதோ ரவிர்சடையுடைய ரழகினையருளுவர்<br>குழகலதறியார்<br>கூற்றுயிர்செகுப்பதோர் கொடுமையையுடையர்<br>நடுவிருளாடுவர் கொன்றையந்தாரார்<br>சேற்றயன்மிளிர்வன கய–ளவாளை செருச்செயவோர்ப்பன<br>செம்முகமந்தி<br>ஏற்றையொடுழிதரு மெழிறிகழ்சார –டைச்சுரமேவிய<br>விவர்வணமென்னே. | வயல்களில் உள்ள சேற்றில் விளங்கும் கயல் மீன்களும் வாளை மீன்களும் தம்மோடு சண்டையிடுவதைக் கூர்ந்து நோக்கும் சிவந்த முகத்தையுடைய பெண் குரங்கோடு ஆண் குரங்கு கூடித் திரியும் அழகிய மலைச் சாரலை உடைய திருஇடைச்சுரத்தில், கங்கை நதியையும் ஏற்றருளிய விரிந்த சடையை உடையவராய், அழகும் இளமையும் உடையவராய், கூற்றுவன் உயிரை மாய்க்கும் பெருவிரல் உடையவராய், நள்ளிருளில் திருநடம்புரிபவராய், கொன்றை மலர் மாலை சூடியவராய் விளங்கும் இவ்விறைவர்தம் இயல்பு யாதோ ? |

| | |
|---|---|
| 844. கானமுஞ்சுடலையுங் கற்படுநிலனுங் காதலர்தீதிலர் கனன்மழுவாளர்<br>வானமுநிலமையு மிருமையுமானா் வணங்கவுமிணங்கவும் வாழ்த்தவும்படுவார்<br>நானமும்புகையொளி விரையொடுகமழ நளிர்பொழி–ளமஞ்ஞை மன்னியபாங்கர்<br>ஏனமும்பிணையலு மெழிறிகழ்சார –டைச்சுரமேவிய விவர்வணமென்னே. | தூவி எரிக்கும் புழுகு, சந்தனம், அகில் முத–யவற்றின் புகையும் அவை எரிதலால் விளங்கும் ஒளியும் மணம் வீசச் செறிந்த பொழில்களிடையே இளமயில்கள் நிறைந்துள்ளதும், அருகில் பன்றிகளும் மானினங்களும் வாழ்வதுமான அழகிய மலைச் சாரலை அடுத்துள்ள திருஇடைச்சுரத்தில் காட்டையும், சுடலையையும், கற்கள் நிரம்பிய மலையிடங்களையும் விரும்புபவரும், தீமையில்லாதவரும், அழல் போன்ற வெம்மையான மழுவாயுதத்தை ஏந்தியவரும், தீமையில்லா தவரும், மறுமை இம்மை ஆகிய இருமை இன்பங்களையும் தருபவரும் வணங்குதற்கும் பழகுதற்கும் வாழ்த்துதற்கும் உரிமையான வருமாகிய இவ்விறைவரின் இயல்பு யாதோ? |
| 845. கடமணிமார்பினர் கடறனிலுறைவார் காதலர்தீதிலர் கனன்மழுவாளர்<br>விடமணிமிடறினர் மிளிர்வதோரரவர் வேறுமோர்சரிதையர் வேடமுமுடையர்<br>வடமுலையயலன கருங்குருந்தேறி வாழையின்றீங்கனி வார்ந்துதேனட்டும்<br>இடைமுலையரிவைய ரெழிறிகழ்சார –டைச்சுரமேவிய விவர்வணமென்னே. | அசையும் ஆலமரத்தினருகே விளங்கும் கரிய குருந்த மரங்களில் ஏறி வாழைக் கனிகளின்மீது ஒழுகுமாறு தேன் அடைகளை எடுத்துப் பிழியும், இடங்கொண்டு வளர்ந்த முலைகளை உடைய பெண்கள் வாழும் அழகிய மலைச்சாரலை உடைய திருஇடைச்சுரத்தில், மலைச்சாரல்களில் விளைந்த மணிகளை அணிந்த மார்பினரும் கட–ல் உறைபவரும், அன்புடையவரும் தீமை யில்லாதவரும், கனலும் மழுவை ஏந்தியவரும் விடத்தை அடக்கிய மணிமிடற்றினரும், பாம்பை அணிகலனாகப் பூண்டவரும் வேறு வேறான ஒழுக்க நெறிகளை உடையவரும் பல்வேறு தோற்றங்களையுடையவருமாய் எழுந்தருளிய இவ்விறைவரின் இயல்பு யாதோ? |
| 846. கார்கொண்டகடிகமழ் விரிமலர்க்கொன்றைக் கண்ணியர்வளர்மதி கதிர்விடக்கங்கை<br>நீர்கொண்டசடையினர் விடையுயர்கொடியர் நிழறிகழ்மழுவின ரழறிகழ்நிறத்தர்<br>சீர்கொண்டமென்சிறை வண்டுபண்செய்யும் செழும்புனலனையன செங்குலை வாழை<br>ஏர்கொண்டபலவினொ டெழிறிகழ்சார –டைச்சுரமேவிய விவர்வணமென்னே. | கார்காலத்தே உண்டான மணம் கமழும் விரிந்த கொன்றை மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்தவரும், வளரும் பிறைமதி ஒளிவிடக் கங்கை நீரை ஏற்ற சடையினரும், விடை எழுதிய உயர்ந்த கொடியை உடையவரும், ஒளி விளங்கும் மழுப் படையை ஏந்தியவரும், அழல் போலும் சிவந்த நிறத்தினரும் ஆய், சிறப்புமிக்க மெல்–ய இறகுகளை உடைய வண்டுகள் இசை பாடுவதும் வளவிய புனல் போலும் தண்ணிய செவ்வாழைக் குலைகள் அழகுமிக்க பலாக்கனிகளோடு விளங்கி அழகு செய்வதும் ஆகிய சாரலை உடைய இடைச்சுரத்தில் எழுந்தருளியிருக்கும் இவரது தன்மை யாதோ? |

| | |
|---|---|
| 847. தோடணிகுழையினர் சுண்ணவெண்ணீற்றர் சுடலையினாடுவர் தோலுடையாகப்<br>பீடுயர்செய்ததோர் பெருமையையுடையர் பேயுடனாடுவர் பெரியவர்பெருமான்<br>கோடல்களொழுகுவ முழுகுவதும்பி குரவமுமரவமு மன்னியபாங்கர்<br>ஏடவிழ்புதுமலர் கடிகமழ்சார –டைச்சுரமேவிய விவர்வணமென்னே. | தோடணிந்த காதினராய்த் திருவெண்ணீறாகிய சுண்ணப்பொடி பூசியவரும், தோலை உடுத்திச் சுடுகாட்டில் நடனம் ஆடுபவரும், பீடு என்னும் சொல் பெருமை உறுமாறு மிக்க பெருமையை உடையவரும் பேய்க் கணங்களோடு ஆடுபவரும், பெரியவர் எனப் போற்றத் தக்வர்கட்குத் தலைவருமாய்ச் செங்காந்தட் பூக்கள் தேனைச் சொரிய அவற்றின்கண் முழுகும் வண்டுகளை உடையதும் குரவம் கடம்ப மரம் ஆகியன நிறைந்துள்ள சோலைகளில் பூத்த புதுமலர்களின் மணம் வீசப் பெறுவதுமாகிய சாரலை உடைய இடைச்சுரத்தில் எழுந்தருளியுள்ள சிவபிரானது இயல்பு யாதோ? |
| 848. கழன்மல்குகா–னர் வே–னர்நூலர் கவர்தலையரவொடு கண்டியும்பூண்பர்<br>அழன்மல்குமெரியொடு மணிமழுவேந்தி யாடுவர்பாடுவ ராரணங்குடையர்<br>பொழின்மல்குநீடிய மரவமுமரவ மன்னியகவட்டிடைப் புணர்குயிலாலும்<br>எழின்மல்குசோலையில் வண்டிசைபாடு மிடைச்சுரமேவிய விவர்வணமென்னே. | வீரக்கழல் அணிந்த திருவடியினரும், கையில் வேலை ஏந்தியவரும், முப்புரிநூல் அணிந்தவரும் ஐந்தாகக் கிளைத்த தலைகளை உடைய பாம்போடு உருத்திராக்க மாலை அணிந்துள்ளவரும், சுவாலைவிட்ட எரியோடு அழகிய மழுவை ஏந்தி ஆடுபவரும், பாடுபவரும், பிறரை வருத்தும் அழகுடையவருமாய்ப் பொழில்களில் நிறைந்து உயர்ந்துள்ள மராமரங்களில் பொருந்திய கிளைகளில் ஆண் பெண் குயில்கள் இணைந்து பாடுவதும் அழகிய சோலைகளில் வண்டுகள் இசை பாடுவதும் ஆகிய சாரலை உடைய இடைச்சுரத்தில் விளங்கும் சிவபிரானது இயல்பு யாதோ? |
| 849. தேங்கமழ்கொன்றையந் திருமலர்புனைவார் திகழ்தருசடைமிசைத் திங்களுஞ்சூடி<br>வீந்தவர்சுடலைவெண் ணீறுமெய்பூசி வேறுமோர்சரிதையர் வேடமுமுடையர்<br>சாந்தமுமகிலொடு முகில்பொதிந்தலம்பித் தவழ்கனமணியொடு மிகுபளிங்கிடறி<br>ஏந்துவெள்ளருவிக ளெழிறிகழ்சார –டைச்சுரமேவிய விவர்வணமென்னே. | தேன் மணம் கமழும் அழகிய கொன்றை மலர் மாலையைச் சூடுபவரும், விளங்கும் சடைமுடியில் பிறை மதியைச் சூடி இறந்தவர்களை எரிக்கும் சுடுகாட்டுச் சாம்பலைத் தம் திருமேனி மீது பூசி, வேறுபடும் புராண வரலாறுகளை உடையவரும், அவ்வாறே வேறுபடும் பல வேடங்களுடன் காட்சி தருபவருமாய், சந்தனம் அகில் ஆகியவற்றின் மணம் பொதிந்து இடித்துப் பொழியும் மழையாள் உருண்டுவரும் பெரிய மணிகளையும் பளிங்குகளையும் அத்து வருவனவாகிய உயர்ந்த வெண்மையான அருவிகள் விளங்கும் மலைச் சாரலை உடைய இடைச்சுரத்தில் விளங்கும் பெருமானது இயல்பு யாதோ? |

| | |
|---|---|
| 850. பலவிலமிடுப– கையிலொன்றேற்பர் பலபுகழல்லது பழியிலர்தாமும்<br>தலையிலங்கவிரொளி நெடுமுடியரக்கன் றடக்கைகளடர்த்ததோர் தன்மையையுடையர்<br>மலையிலங்கருவிகண் மணமுழவதிர மழைதவழிளமஞ்ஞை மல்கியசாரல்<br>இலையிலவங்கமு மேலமுங்கமழு மிடைச்சுரமேவிய விவர்வணமென்னே. | பலர் இல்லங்களுக்கும் சென்று மகளிர் இடும் உணவைக் கைகளில் ஏற்பவரும், பலவாய் விரிந்த புகழ் அல்லது பழி எதுவும் இல்லாதவரும், விட்டு விளங்கும் ஒளியை உடைய நீண்ட மகுடங்களைத் தரித்த பத்துத் தலைகளையுடைய இராவணனின் நீண்ட கைகளை நெரித்த வ–மையை உடையவருமாய், மலையில் விளங்கும் அருவிகள் மணமுழாப் போல் ஒ–யோடு இழிவதும், இளமயில்கள் நிறைந்ததும், மேகங்கள் தவழும் சாரலை உடையதும், இலைகளை உடைய இலவங்கம் ஏலம் கமழ்வதுமான திருஇடைச்சுரத்தில் எழுந்தருளிய இப்பெருமானது இயல்பு யாதோ? |
| 851. பெருமைகடருக்கியோர் பேதுறுகின்ற பெருங்கடல்வண்ணனும் பிரமனுமோரா<br>அருமையரடிநிழல் பரவிநின்றேத்து மன்புடையடியவர்க் கணியருமாவர்<br>கருமைகொள்வடிவொடு சுனைவளர்குவளைக் கய–னம்வய–ள வாளைகளிரிய<br>எருமைகள்படிதர விளவனமாலு மிடைச்சுரமேவிய விவர்வணமென்னே. | பெருமைகளால் செருக்குற்றுப் பேதைமை உறுகின்ற கடல் நிற வண்ணனாகிய திருமாலும் பிரமனும் அறிய முடியாத அருமையை உடையவரும், தம் திருவடி நிழலை நின்று பரவிப் போற்றும் அன்புடைய அடியவர்கட்கு அணிமையானவருமாய், சுனைகளில் கரிய நிறவடிவோடு பூத்து வளர்ந்த குவளை மலர்களையும், கய–னங்களையும் உடையதும் வயல்களில் வாளை மீன்களும், கயல் மீன்களும் அஞ்சித் துள்ளுமாறு எருமைகள் படிய அதனைக் கண்டு இளைய அன்னங்கள் ஆரவாரிப்பதுமாகிய திருஇடைச்சுரத்தில் எழுந்தருளிய சிவபிரா னாராகிய இவர்தம் இயல்பு யாதோ? |
| 852. மடைச்சுரமறிவன வாளையுங்கயலு மருவியவயறனில் வருபுனற்காழிச்<br>சடைச்சுரத்துறைவதோர் பிறையுடையண்ணல் சரிதைகள் பரவிநின் றுருகுசம்பந்தன்<br>புடைச்சுரத்தருவரைப் பூக்கமழ்சாரற் புணர்மடநடையவர் புடையிடையார்ந்த<br>இடைச்சுரமேத்திய விசையொடுபாட –வைசொலவல்லவர் பிணியிலர்தாமே. | நீர் மடைகளில் துள்ளுவனவாகிய வாளை மீன்களும் கயல் மீன்களும் வயல்களிடத்து வரும் நீர் வளம் மிக்க காழி நகரில், சடைக்காட்டில் உறையும் பிறை மதியை உடைய சிவபிரானின் வரலாறுகளைப் பரவி உருகும் ஞானசம்பந்தன், அருகருகே வெற்றிடங்களை உடைய மலையின் பூக்கமழ் சார–ல் அழகிய மட நடையினை உடைய மகளிர் பல இடங்களில் தங்கி அழகு செய்வதாகிய இடைச்சுரத்தைப் போற்றிப் பாடிய இப்பதிகப் பாடலை இசையோடு சொல்ல வல்லவர், பிணிகள் இன்றி வாழ்வர். |

# 79. திருக்கழுமலம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 79

| | |
|---|---|
| 853. அயிலுறுபடையினர் விடையினர்முடிமே லரவமுமதியமும் விரவியவழகர்<br>மயிலுறுசாயல் வனமுலையொருபான் மகிழ்பவர்வானிடை முகில்புல்குமிடறர்<br>பயில்வுறுசரிதைய ரெருதுகந்தேறிப் பாடியுமாடியும் ப–கொள்வர்வ–சேர்<br>கயிலையும்பொதியிலு மிடமெனவுடையார் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | கூர்மை பொருந்திய சூலப் படையை உடையவரும், விடை ஊர்தியினரும், முடிமேல் அரவு மதி ஆகியன விரவிய அழகுடையவரும், ஆண்மயில் போலும் கட்புலனாகிய மென்மையையும், அழகிய தனபாரங்களையும் உடைய உமையம்மையை ஒரு பாலாகக் கொண்டு மகிழ்பவரும், வானகத்தே பொருந்திய மேகம் போன்ற கரிய மிடற்றினரும், எல்லோராலும் போற்றப்படும் புராண வரலாறுகளை உடையவரும், இடபத்தில் மகிழ்ந்தேறிப் பாடியும் ஆடியும் சென்று ப–யேற்பவரும், வ–மை சேர்ந்த கயிலை, பொதியில் போன்ற அழகிய மலைகளைத் தம் இடங்களாக உடையவரும் ஆகிய சிவபெருமான் உறையும் கழுமலத்தை நினைய நம் வினைத் தீமை அறும். |
| 854. கொண்டலுநீலமும் புரைதிருமிடறர் கொடுமுடியுறைபவர் படுதலைக்கையர்<br>பண்டலரயன்சிர மரிந்தவர்பொருந்தும் படர்சடையடிகளார் பதியதனயலே<br>வண்டலும்வங்கமுஞ் சங்கமுஞ்சுறவு மறிகடற்றிரைகொணர்ந் தெற்றியகரைமேற்<br>கண்டலுங்கைதையு நெய்தலுங்குலவுங் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | மேகம் நீல மலர் ஆகியன போன்ற அழகிய மிடற்றை உடையவரும், கயிலைச் சிகரத்தில் உறைபவரும், உயிரற்ற தலையோட்டைக் கையில் ஏந்தியவரும், முற்காலத்தில் தாமரை மலர் மேல் உறையும் பிரமனின் தலைகளில் ஒன்றைக் கொய்தவரும், அழகுறப் பொருந்தும் விரிந்த சடைமுடியை உடையவரும் ஆகிய சிவபிரானதுபதி, பக்க–ன் சுருண்டு விழும் கடல் அலைகள் வண்டல் மண், இலவங்கம், சங்குகள் சுறா ஆகியனவற்றைக் கொணர்ந்து வீசும் கரை மேல் நீர்முள்ளி தாழை நெய்தல் ஆகியன பூத்து விளங்கும் கழுமல நகராகும். அதனை நினைய நம் வினைகளின் தீமைகள் நீங்கும். |
| 855. எண்ணிடையொன்றின ரிரண்டினருருவ மெரியிடைமூன்றினர் நான்மறையாளர்<br>மண்ணிடையைந்தின ராறினரங்கம் வகுத்தனரேழிசை யெட்டிருங்கலைசேர்<br>பண்ணிடையொன்பது முணர்ந்தவர்பத்தர் பாடிநின்றடிதொழ மதனனைவெகுண்ட<br>கண்ணிடைக்கன–னர் கருதியகோயில் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | எண்ணத்தில் ஒன்றாயிருப்பவர், சிவம் சக்தி என உருவத்தால் இரண்டாயிருப்பவர். நெருப்பில் மூன்றாயிருப்பவர். நான்கு மறைகளை அருளியவர். மண்ணிடைச் சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து தன்மையர். வேதத்தின் ஆறு அங்கங்களாக இருப்பவர். ஏழிசைகளை வகுத்தவர். எண்வகைக் கலைகளில் ஒன்றாய இசைத்துறையில் ஒன்பான் கலையையும் உணர்ந்தவர். பக்தர்கள் பாடி நின்று திருவடிகளை வணங்க வீற்றிருப்பவர். மன்மதனைக் கண்ணிடைத் தோன்றிய கனலால் வெகுண்டவர். அத்தகைய பெருமான் விரும்பி உறையும் கழுமலத்திலுள்ள கோயிலை நினைய நம் வினைகளின் தீமை முற்றிலும் நீங்கும். |

| | |
|---|---|
| 856. எரியொருகரத்தின ரிமையவர்க்கிறைவ ரேறுகந்தேறுவர் நீறுமெய்பூசித்<br>திரிதருமியல்பின ரயலவர்புரங்க டீயெழவிழித்தனர் வேய்புரைதோளி<br>வரிதருகண்ணிணை மடவரலஞ்ச மஞ்சுறநிமிர்ந்ததோர் வடிவொடும்வந்த<br>கரியுரிமருவிய வடிகளுக்கிடமாங் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | ஒருகரத்தில் எரி ஏந்தியவர். தேவர்கட்குத் தலைவர். விடையை விரும்பி ஊர்பவர். திருநீற்றை மெய்யிற் பூசித் திரியும் இயல்பினர். பகைமை பூண்டவர்களாய அசுரர்களின் மூன்று புரங்களும் தீயில் அழியுமாறு விழித்தவர். மூங்கில் போன்ற திரண்ட தோள்களையும், வரி பரந்த கண்களையும் உடைய உமையம்மை அஞ்சுமாறு மேகம் திரண்டு நிமிர்ந்து வந்தாற் போன்ற கரிய வடிவோடு தம்பால் வந்த யானையின் தோலை உரித்து அதனை அணிந்தவர். அத்தகைய பெருமானுக்கு இடமாக விளங்கும் கழுமலத்தை நினைய நம் வினைத்தீமை நீங்கும். |
| 857. ஊரெதிர்ந்திடுப– தலைகலனாக வுண்பவர்விண்பொ–ந் திலங்கியவுருவர்<br>பாரெதிர்ந்தடிதொழ விரைதருமார்பிற் படவரவாமையக் கணிந்தவர்க்கிடமாம்<br>நீரெதிர்ந்திழிமணி நித்திலமுத்த நிரைசுரிசங்கமொ டொண்மணைவரன்றிக்<br>காரெதிர்ந்தோதம்வன் றிரைகரைக்கெற்றுங் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | ஊர்மக்கள் வரவேற்று இடும் ப–யைத் தலையோட்டில் ஏற்று உண்பவர். வானத்தில் பொ–வோடு இலங்கும் திருவுருவினர். மண்ணுலக மக்கள் விரும்பி வந்து தம் திருவடிகளை வணங்க மணம் கமழும் மார்பகத்தே படப்பாம்பு ஆமைஓடு உருத்திராக்கம் ஆகியன அணிந்தவர். அவர் தமக்கு இடமாய் உள்ளதால், மேகங்கள் படியும் வெண்மையான வ–ய கடல் அலைகள் மிகுதியான நீருடன் இழிந்துவரும் மணிகள், முத்துக்கள், ஒழுங்குற நிறைந்த வளைந்த சங்குகள், ஒளி பொருந்திய பவளமணி ஆகியவற்றைக் கரையில் கொணர்ந்து வீசும் கழுமலத்தை நினைய நம் வினைத்தீமை நீங்கும். |
| 858. முன்னுயிர்த்தோற்றமு மிறுதியுமாகி முடியுடையமரர்க ளடிபணிந்தேத்தப்<br>பின்னியசடைமிசைப் பிறைநிறைவித்த பேரருளாளனார் பேணியகோயில்<br>பொன்னியனறுமலர் புனலொடுதூபஞ் சாந்தமுமேந்திய கையினராகிக்<br>கன்னியர் நாடொறும் வேடமேபரவுங் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | உயிர்கட்கு முத–ல் தோற்றத்தையும் பின்னர் இறுதியையும் வழங்குவோராய், முடியணிந்த, தேவர் கணங்கள் தம் திருவடிகளைப் பணிந்து போற்ற, வட்டமாக, முறுக்கிய சடையின் மேல் பிறையைச் சூடிய பெருங் கருணையாளராகிய சிவபிரான் விரும்பிய கோயிலை உடையதும், பொன் போன்ற மணம் பொருந்திய மலர்கள் புனல் தூபம் சந்தனம் முத–யன ஏந்திய கையினராய்க் கன்னியர்கள் நாள்தோறும் வந்து இறைவர் கொண்டருளிய வடிவங்களைப் போற்றி வழிபடுவதுமாய கழுமலத்தை நினைய நம் வினைத் தீமைகள் நீங்கும். |

| | |
|---|---|
| 859. கொலைக்கணித்தாவரு கூற்றுதைசெய்தார் குரைகழல் பணிந்தவர்க் கருளியபொருளின்<br>நிலைக்கணித்தாவர நினையவல்லார்தந் நெடுந்துயர்தவிர்த்தவெந் நிமலருக்கிடமாம்<br>மலைக்கணித்தாவர வன்றிரைமுரல மதுவிரிபுன்னைகண் முத்தெனவரும்பக்<br>கலைக்கணங்கான– னீழ–ல்வாழுங் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | மார்க்கண்டேயர் உயிரைக் கொல்லுதற்கு அணித்தாக வந்த கூற்றுவனை உதைத்தவர். ஒ–க்கின்ற கழல் அணிந்த தமது திருவடியைப் பணிந்தவர்கட்கு உரியதாக அருளிச் செய்த வீட்டின்பமாகிய நிலை அணியதாக வரவும் அவர்தம் நெடுந்துயர் போகவும் நினைக்கும் எம் நிமலர். அவர்க்கு இடமாக விளங்குவதும், தோணி மலைக்கு அருகில் வரும் வ–ய அலைகள் ஒ–ப்பதும், தேன் நிறைந்த புன்னைகள் முத்தென அரும்பவும் கடற்கரைச் சோலைகளின் நீழ–ல் மானினங்கள் வாழ்வதுமாய கழுமல நகரை நினைய நம் வினைக்குற்றங்கள் நீங்கும். |
| 860. புயம்பலவுடையதென் னிலங்கையர்வேந்தன் பொருவரையெடுத்தவன் பொன்முடிதிண்டோள்<br>பயம்பலபடவடர்த் தருளியபெருமான் பரிவொடுமினிதுறை கோயிலதாகும்<br>வியன்பலவிண்ணினு மண்ணினுமெங்கும் வேறுவேறுகங்களிற் பெயருளதென்னக்<br>கயம்பலபடக்கடற் றிரைகரைக்கெற்றுங் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | தோள்கள் பலவற்றை உடைய தென்னிலங்கை மன்னனாகிய இராவணன் கயிலை மலையைப் பெயர்க்க அவன் பொன் முடிகளையும், வ–ய தோள்களையும் அச்சம் பல உண்டாகுமாறு அடர்த்தருளிய பெருமான் விருப்போடு மகிழ்ந்துறையும் கோயிலை உடையதும் அகன்ற விண்ணுலகிலும் மண்ணுலகிலும் வேறுவேறு யுகங்களில் வேறுவேறு பெயர்களுடையதாய் விளங்குவதும் நீர்த்துளி பலவாகத் தோன்ற கடல் அலைகள் தொடர்ந்து வந்து கரையில் வீசுவதுமாய கழுமலத்தை நினைய நம் வினைகளின் தீமைகள் நீங்கும். |
| 861. விலங்கலொன்றேந்திவன் மழைதடுத்தோனும் வெறிகமழ்தாமரை யோனுமென்றிவர்தம்<br>பலங்களானேடியு மறிவரிதாய பரிசினன்மருவிநின் றினிதுறைகோயில்<br>மலங்கிவன்றிரைவரை யெனப்பரந்தெங்கு மறிகடலோங்கி வெள் ளிப்பியுஞ்சுமந்து<br>கலங்கடன்சரக்கோடு நிரக்கவந்தேறுங் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | கோவர்த்தனத்தைக் குடையாகக் கவித்துக் கொடிய மழையைத் தடுத்த திருமாலும், மணம்கமழ் தாமரையில் தோன்றிய பிரமனும் ஆகிய இவர்கள் தம் வ–மையினால் தேடியும் அறிய முடியாத தன்மையனாகிய சிவபெருமான், விரும்பி வந்து மகிழ்வாக உறையும் கோயில், வெள்ளிய அலைகள் ஒன்றோடொன்று கலந்து மலைகளைப் போலப் பரவி எங்கும் கரையில் மோதி மீளும் கட–ல் பெருமிதத்துடன் கப்பல்கள் தம் சரக்கொடு வெள்ளிய முத்துச் சிப்பிகளையும் சுமந்து கரையை நோக்கி வரும் கழுமலமாகும் அதனை நினைய நும்வினைத் தீமை நீங்கும். |

| | |
|---|---|
| 862. ஆம்பலதவமுயன் றறவுரைசொல்லு மறிவிலாச்சமணருந் தேரருங்கணிசேர்<br>நோம்பலதவமறி யாதவர்நொடிந்த மூதுரைகொள்கிலா முதல்வர்தம்மேனிச்<br>சாம்பலும்பூசிவெண் டலைகலனாகத் தையலாரிடுப–வையகத்தேற்றுக்<br>காம்பனதோளியொ டினிதுறைகோயில் கழுமலநினையநம் வினைகரிசறுமே. | இயன்ற பலவகையான தவங்களை மேற்கொண்டு பிறர்க்கு அறிவுரை கூறும் அறிவற்ற சமணரும் புத்தரும், எண்ணத்தக்க வருத்தத்தைத் தரும் தவம் பலவற்றை அறியாதவராய்க் கூறும் பழமொழிகளை ஏற்று அருளாத தலைவர், தம் மேனி மீது திருநீற்றைப் பூசிக் கொண்டு வெண்டலையை உண்கலனாக் கொண்டு மகளிர் இடும் ப–யை உலகில் ஏற்று மூங்கில் போலும் தோள்களை உடைய உமையம்மையோடு இனிதாக உறையும் கோயிலை உடைய கழுமலத்தை நினைய நம் வினைக்குற்றம் நீங்கும். |
| 863. க–கெழுபாரிடை யூரெனவுளதாங் கழுமலம்விரும்பிய கோயில்கொண்டவர்மேல்<br>வ–கெழுமனமிக வைத்தவன்மறைசேர் வருங்கலைஞானசம் பந்தனதமிழின்<br>ஒ–கெழுமாலையென் றுரைசெய்தபத்து முண்மையினானினைந் தேத்தவல்லார்மேல்<br>மெ–கெழுதுயரடை யாவினைசிந்தும் விண்ணவராற்ற–ன் மிகப்பெறுவாரே. | ஆரவாரம் மிக்க உலகில் ஊர் எனப் போற்ற விளங்கும் கழுமலத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள இறைவரிடம் உறுதியோடு தன் மனத்தை வைத்தவனும், வேதங்களிலும் கலைகளிலும் வல்லவனுமாகிய ஞானசம்பந்தன், இசையோடு பாடிய மாலையாகிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும், உண்மையோடு நினைந்து ஏத்த வல்லவரை, மெ–வைத் தரும் துன்பங்கள் சாரா. வினைகள் நீங்கும். விண்ணவரினும் மேம்பட்ட ஆற்றலை அவர்கள் பெறுவார்கள். |

## 80. கோயில்

**பண் : குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 80**

| | |
|---|---|
| 864. கற்றாங் கெரியோம்பிக் க–யை வாராமே<br>செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய<br>முற்றா வெண்டிங்கண் முதல்வன் பாதமே<br>பற்றா நின்றாரைப் பற்றா பாவமே. | வேதம் முத–ய நூல்களைக் கற்று அவற்றின்கண் ஓதிய நெறியிலே நின்று, வேள்விகளைச் செய்து, இவ்வுலகில் வறுமையை வாராமல் ஒழிக்கும் அந்தணர்கள் வாழும் தில்லையிலுள்ள சிற்றம்பலத்தில் எழுந்தருளியவனும் இளமையான வெள்ளிய பிறை மதியைச் சூடியவனும் ஆகிய முதல்வனது திருவடிகளைப் பற்றுக்கோடாகக் கொண்டு வாழ்பவர்களைப் பாவம் பற்றா. |
| 865. பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்புஞ்<br>சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய<br>பிறப்பில் பெருமானைப் பின்றாழ் சடையானை<br>மறப்பி லார்கண்டீர் மைய றீர்வாரே. | பல இடங்களிலும் வேள்விச் சாலைகளை அமைத்து, ஆன்ம போதத்தைக் கொன்று, எரியோம்பும் சிறப்புடைய அந்தணர்கள் வாழும் தில்லையில் உள்ள சிற்றம்பலத்தில் எழுந்தருளி யுள்ளவனும், தாயின் வயிற்றில் தங்கிப் பிறத்தல் இல்லாதவனும், பின்புறம் தாழ்ந்து தொங்கும் சடாபாரம் உடையவனும் ஆகிய பெருமானை மறவாதவர் மயக்க உணர்வு நீங்கப் பெறுவர். |

| | |
|---|---|
| **866.** மையா ரொண்கண்ணார் மாட நெடுவீதிக்<br>கையாற் பந்தோச்சுங் கழிசூழ் தில்லையுட்<br>பொய்யா மறைபாடல் புரிந்தா னுலகேத்தச்<br>செய்யா னுறைகோயில் சிற்றம் பலந்தானே. | மைதீட்டப் பெற்ற ஒளி பொருந்திய கண்களை உடைய பெண்கள், நீண்ட வீதிகளிலுள்ள மாட வீதிகளில் தம் கைகளால் பந்தோச்சி விளையாடும் அழகுடையதும், உப்பங்கழிகள் சூழ்ந்ததுமான தில்லையுள், என்றும் பொய்யாத வேதப் பாடல்களை விரும்பும் சிவந்த திருமேனியை உடைய சிவபிரான், உலக மக்கள் தன்னை ஏத்த உறையும் கோயிலை உடையது சிற்றம்பலமாகும். |
| **867.** நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப்<br>பிறைவந் திறைதாக்கும் பேரம் பலந்தில்லைச்<br>சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய<br>இறைவன் கழலேத்து மின்ப மின்பமே. | மாடவீடுகளில் நிறைந்துள்ள வெண்மையான கொடிகள் வானத்திலுள்ள பிறையின் நெற்றியை நேரே தீண்டுமாறு வந்து சிறிதே தாக்கும் தில்லைப் பதியில் சிறகுகளை உடைய வண்டுகள் எப்போதும் ஒ–க்கும் பேரம்பலத்தை அடுத்துள்ள சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திருவடிகளைப் பரவுவதே இன்பம் ஆகும். |
| **868.** செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்<br>செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற<br>செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய<br>செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே. | செல்வ வளம்மிக்க பெரிய மாடவீடுகள் வானளாவ ஓங்கி உயர்ந்து அழகிய மதியினைத் தோயப் பல்வகை அழகு நலன்களும் உயர்ந்து விளங்கி வருவதும், ஞானச் செல்வர்கள் பலர் வாழ்வதுமாகிய தில்லையிலுள்ள சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ள, வீடுபேறாகிய செல்வத்திற்குரிய பெருமான் திருவடிகளை வாழ்த்தும் செல்வமே, ஒருவருக்குச் செல்வமாம். |
| **869.** வருமாந் தளிர்மேனி மாதோர் பாகமாந்<br>திருமாந் தில்லையுட் சிற்றம் பலமேய<br>கருமா னுரியாடைக் கறைசேர் கண்டத்தெம்<br>பெருமான் கழலல்லாற் பேணா துள்ளமே. | புதிதாக மரத்தின்கண் இருந்து வெளிவரும் மாந்தளிர் போன்ற மேனியளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு, திருமகள் விளங்கும் தில்லை மாநகருள் சிற்றம்பலத்தின் கண் எழுந்தருளியவரும், யானைத் தோலை உரித்து ஆடையாகப் போர்த்தவரும் நீலமணி போன்ற கண்டத்தை உடையவருமாகிய எம் பெருமான் திருவடிகளை அல்லது என் உள்ளம் வேறொன்றையுமே விரும்பாது. |
| **870.** அலையார் புனல்சூடி யாகத் தொருபாகம்<br>மலையான் மகளோடு மகிழ்ந்தா னுலகேத்தச்<br>சிலையா லெயிலெய்தான் சிற்றம் பலந்தன்னைத்<br>தலையால் வணங்குவார் தலையா னார்களே. | அலைகள் வீசும் கங்கை நதியை முடியிற்சூடித் தன் திருமேனியில் ஒரு பாகமாக மலையரையன் மகளாகிய பார்வதி தேவியோடு மகிழ்ந் திருப்பவனும் உலகம் போற்ற மேருமலையாகிய வில்லால் முப்புரங்களை எய்து அழித்தவனும் ஆகிய சிற்றம்பலத்துப் பெருமானைத் தலைதாழ்த்தி வணங்குவார் தலைமைத் தன்மையோடு விளங்குவார். |

| | |
|---|---|
| 871. கூர்வா ளரக்கன்றன் வ–யைக் குறைவித்துச்<br>சீரா லேமல்கு சிற்றம் பலமேய<br>நீரார் சடையானை நிற்க லேத்துவார்<br>தீரா நோயெல்லாந் தீர்த றிண்ணமே. | கூரிய வாளை உடைய அரக்கனாகிய இராவணனின் வ–மையை அழித்துச் சிறந்த புகழ் மல்கிய சிற்றம்பலத்தின் கண் எழுந்தருளிய கங்கையைத் தரித்த சடையினை உடைய இறைவனை நாள்தோறும் ஏத்துபவருக்கு தீராத நோய்கள் எல்லாம் தீர்தல் திண்ணம். |
| 872. கோணா கணையானுங் குளிர்தா மரையானுங்<br>காணார் கழலேத்தக் கனலா யோங்கினான்<br>சேணார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேத்த<br>மாணா நோயெல்லாம் வாளா மாயுமே. | வளைத்து சுற்றிய பாம்பணையில் பள்ளி கொள்ளும் திருமாலும், குளிர்ந்த தாமரை மேல் விளங்கும் நான்முகனும், அடிமுடிகளைக் காணாதவராய்த் தன் திருவடிகளைப் பரவ, அழல் வடிவில் ஓங்கி நின்றவனும், உயர்ந்தோர் பலர் வாழும் தில்லைப் பதியுள் சிற்றம்பலத்தின்கண் எழுந்தருளியவனுமாகிய பெருமானைப் போற்ற, நோய்களில் மாட்சிமை உள்ள கொடிய நோய்கள் எல்லாமும் பயன்தாராது கழியும். |
| 873. பட்டைத் துவராடைப் படிமங் கொண்டாடும்<br>முட்டைக் கட்டுரை மொழிவ கேளாதே<br>சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய<br>நட்டப் பெருமானை நாளுந் தொழுவோமே. | மரப்பட்டையின் சாயம் ஏற்றிய ஆடையை உடுத்த புத்தரும் நோன்புகள் பலவற்றை மேற்கொண்டு திரியும் சமணர்களும் மொழியும் அறியாமையோடு கூடிய உரைகளைக் கேளாது ஒழுக்கத்தால் மேம்பட்டவர் வாழும் தில்லையில் சிற்றம்பலத்தில் எழுந்தருளிய நடராசப் பெருமானை நாள்தோறும் நாம் தொழுவோம். |
| 874. ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்<br>சீலத் தார்கொள்கைச் சிற்றம் பலமேய<br>சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை<br>கோலத் தாற்பாட வல்லார் நல்லாரே. | உலகில் உயர்ந்து விளங்கும் சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், ஒழுக்க சீலர்களாலே புனிதமாகக் கொண்டு போற்றப் பெறும் தில்லைச் சிற்றம்பலத்தே எழுந்தருளிய, சூலப்படையுடைய பெருமான் மீது பாடிய, இத்தமிழ் மாலையாகிய திருப்பதிகத்தை, அழகுறப் பாட வல்லவர் நல்லவர் ஆவர். |

## 81. சீகாழி

**பண் : குறிஞ்சி** — **முதல் திருமுறை பதிக எண் : 81**

| | |
|---|---|
| 875. நல்லார் தீமேவுந் தொழிலார் நால்வேதஞ்<br>சொல்லார் கேண்மையார் சுடர்பொற் கழலேத்த<br>வில்லாற் புரஞ்செற்றான் மேவும் பதிபோலுங்<br>கல்லார் மதில்சூழ்ந்த காழிந் நகர்தானே. | நல்லவர்களும், நாள்தோறும் வேள்விகளைச் செய்பவர்களும், நான்கு வேதங்களை ஓதுபவர்களும், அன்புடையவர்களும் ஆகிய அந்தணர்கள், ஒளி பொருந்திய அழகிய தன் திருவடிகளைப் போற்ற, மேருவில்லால் முப்புரங்களை அழித்த சிவபெருமான் எழுந்தருளிய தலம், மலை போன்ற மதில்களால் சூழப்பட்ட சீகாழி நகராகும். |

| | |
|---|---|
| 876. துளிவண் டேன்பாயு மிதழி தூமத்தந்<br>தெளிவெண் டிங்கண்மா சுணநீர் திகழ்சென்னி<br>ஒளிவெண் டலைமாலை யுகந்தா னூர்போலுங்<br>களிவண் டியாழ்செய்யுங் காழிந் நகர்தானே. | வளமான தேன் துளிபாயும் கொன்றை மலர், தூய ஊமத்தம் மலர், தெளிந்த வெண்மையான பிறைமதி, பாம்பு, கங்கை ஆகியன விளங்கும் சென்னிக்கண், ஒளி பொருந்திய வெள்ளிய தலை மாலையை விரும்பிச் சூடிய சிவபிரானது ஊர், கள்ளுண்டு களித்த வண்டுகள், யாழ்போல ஒ–க்கும், சீகாழி நகராகும். |
| 877. ஆலக் கோலத்தி னஞ்சுண் டமுதத்தைச்<br>சாலத் தேவர்க்கீந் தளித்தான் றன்மையாற்<br>பாலற் காய்நன்றும் பரிந்து பாதத்தாற்<br>காலற் காய்ந்தானூர் காழிந் நகர்தானே. | பாற்கட–ல் தோன்றிய ஆலகாலம் எனப்படும் அழகிய நஞ்சினை உண்டு, அமுதம் முழுவதையும் தேவர்களுக்கு ஈந்தருளிய தன்மையை உடையவனாய் மார்க்கண்டேயன் பொருட்டுத் தன் பாதத்தால் காலனை உதைத்த சிவபிரானது ஊர், சீகாழி நகராகும். |
| 878. இரவிற் றிரிவோர்கட் கிறைதோ ளிணைபத்தும்<br>நிரவிக் கரவாளை நேர்ந்தா னிடம்போலும்<br>பரவித் திரிவோர்க்கும் பாலீ றணிவோர்க்குங்<br>கரவிற் றடக்கையார் காழிந் நகர்தானே. | இரவில் திரியும் நிசாசரராகிய அசுரர்களுக்குத் தலைவனாகிய இராவணனின் இருபது தோள்களையும் நெரித்து, பின் அவன் வருந்திய அளவில் கைகளில் ஏந்தும் வாள் வழங்கிய சிவபிரானது இடம், இறைவனைப் பரவித் திரியும் அடியவர்கட்கும், பால் போன்ற திருநீற்றை அணிபவர்கட்கும், ஒளியாமல் வழங்கும் நீண்ட கைகளையுடைய, வள்ளன்மை மிக்க அடியார் வாழும், சீகாழிப் பதியாகும். |
| 879. மாலும் பிரமனு மறியா மாட்சியான்<br>றோலும் புரிநூலுந் துதைந்த வரைமார்பன்<br>ஏலும் பதிபோலு மிரந்தோர்க் கெந்நாளுங்<br>காலம் பகராதார் காழிந் நகர்தானே. | திருமால், பிரமன் ஆகியோர் அறிய முடியாத மாட்சிமையை உடையவனும், மான்தோலும், முப்புரி நூலும் பொருந்திய மலை போன்ற மார்பினனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளும் பதி, தம்பால் இரந்தவர்களுக்கு எந்நாளும் பிறிதொரு நாளையோ, நேரத்தையோ குறிக்காது உடனே பொருள் வழங்கும் செல்வர்கள் வாழ்கின்ற சீகாழி நகராகும். |
| 880. தங்கை யிடவுண்பார் தாழ்சீ வரத்தார்கள்<br>பெங்கை யுணராதே பேணித் தொழுமின்கள்<br>மங்கை யொருபாக மகிழ்ந்தான் மலர்ச்சென்னிக்<br>கங்கை தரித்தானூர் காழிந் நகர்தானே. | உணவளிப்போர் தங்கள் கைகளிலே தர, அதனை வாங்கி உண்ணும் சமணர்களும் தாழ்ந்த சீவரம் என்னும் கல்லாடையை உடுத்திய புத்தர்களும் ஆகியவர்களின் தீயொழுக்கத்தை மனத்துக் கொள்ளாமல், உமையம்மையை ஒரு பாகமாக மகிழ்ந்து ஏற்றவனும், மலரணிந்த சென்னியில் கங்கையைத் தரித்தவனுமாகிய சிவபெருமான் எழுந்தருளிய காழி நகரைப் பேணித் தொழுவீர்களாக. |

| | |
|---|---|
| 881. வாசங் கமழ்காழி மதிசெஞ் சடைவைத்த<br>ஈசன் னகர்தன்னை யிணையில் சம்பந்தன்<br>பேசுந் தமிழ்வல்லோர் பெருநீ ருலகத்துப்<br>பாசந் தனையற்றுப் பழியில் புகழாரே. | பிறைமதியைச் செஞ்சடையில் வைத்த சிவபிரானது மணங்கமழ்கின்ற சீகாழிப் பதியாகிய நகரை, ஒப்பற்ற ஞானசம்பந்தன் போற்றிப் பேசிய இத்திருப்பதிகத் தமிழில் வல்லவர்கள் கடல் சூழ்ந்த இவ்வுலகில் பாசங்களை நீக்கிப் பழியற்ற புகழோடு வாழ்வர். |

## 82. திருவீழிமிழலை

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 82

| | |
|---|---|
| 882. இரும்பொன் மலைவில்லா வெரியம் பாநாணில்<br>திரிந்த புரமூன்றுஞ் செற்றா னுறைகோயில்<br>தெரிந்த வடியார்கள் சென்ற திசைதோறும்<br>விரும்பி யெதிர்கொள்வார் வீழி மிழலையே. | பெரிய பொன்மயமான மேருமலையை வில்லாக வளைத்து, அனலை அம்பாக அவ்வில் நாணில் பூட்டி வானில் திரிந்து கொண்டிருந்த முப்புரங்களையும் அழித்தவனாகிய சிவபிரான் உறையும் கோயில், கற்றுணர்ந்த அடியவர்கள் செல்லும் திசைகளில் எல்லாம் விரும்பி அவர்களை எதிர்கொள்ளும் மக்கள் வாழும் திருவீழிமிழலை ஆகும். |
| 883. வாதைப் படுகின்ற வானோர் துயர்தீர<br>ஓதக் கடனஞ்சை யுண்டா னுறைகோயில்<br>கீதத் திசையோடுங் கேள்விக் கிடையோடும்<br>வேதத் தொ–யோவா வீழி மிழலையே. | துன்புறும் தேவர்களின் துயர்தீர, வெள்ள நீரொடு கூடிய கட–ன்கண் எழுந்த நஞ்சினை உண்ட சிவபிரான் உறையும் கோயில், இசையமைப்போடு கூடியதும் சுருதி என்பதற்கேற்ப ஒருவர் ஓதக்கேட்டு ஓதப்பட்டு வருவதும் ஆகிய வேத பாராயணத்தின் ஒ– நீங்காமல் ஒ–க்கின்ற திருவீழிமிழலை ஆகும். |
| 884. பயிலும் மறையாளன் றலையிற் ப–கொண்டு<br>துயிலும் பொழுதாடுஞ் சோதி யுறைகோயில்<br>மயிலும் மடமானும் மதியும் மிளவேயும்<br>வெயிலும் பொ–மாதர் வீழி மிழலையே. | வேதங்களை ஓதிய பிரமனின், தலையோட்டில் ப–யேற்று அனைவரும் துயிலும் நள்ளிரவில் ஆடும் ஒளிவடிவினனாகிய சிவபிரான் உறையும் கோயில், மயில், மடப்பம் பொருந்திய மான், மதி, இள மூங்கில், வெயில் ஆகியனவற்றைப் போன்று கண்ணுக்கு இனிய மென்மையும், மருளும் விழி, முகம், தோள்கள், உடல்ஒளி இவற்றால் பொ–யும் மகளிர் வாழும் திருவீழிமிழலையாகும். |
| 885. இரவன் பகலோனு மெச்சத் திமையோரை<br>நிரவிட் டருள்செய்த நிமலன் னுறைகோயில்<br>குரவஞ் சுரபுன்னை குளிர்கோங் கிளவேங்கை<br>விரவும் பொழிலந்தண் வீழி மிழலையே. | தக்கன் செய்த யாகத்தில் சந்திரன், சூரியன் ஏனைய தேவர்கள் ஆகியோரை, வீரபத்திரரை அனுப்பித் தண்டம் செய்து செம்மைப்படுத்தி அருள்செய்த சிவபிரான் உறையும் கோயில் குரா, சுரபுன்னை, குளிர்ந்த கோங்கு, இளவேங்கை ஆகியன விரவிய பொழில்கள் சூழ்ந்த அழகிய தட்பமுடைய வீழிமிழலையாகும். |

| | |
|---|---|
| 886. கண்ணிற் கனலாலே காமன் பொடியாகப்<br>பெண்ணுக் கருள்செய்த பெருமா னுறைகோயில்<br>மண்ணிற் பெருவேள்வி வளர்தீப் புகைநாளும்<br>விண்ணிற் புயல்காட்டும் வீழி மிழலையே. | நெற்றி விழியில் தோன்றிய கனலால் காமனைப் பொடி செய்து, இரதிதேவி வேண்ட அவள் கண்களுக்கு மட்டும் புலனாகுமாறு அருள் செய்த பெருமான் உறையும் கோயில் மண்ணில் செய்யும் பெரிய வேள்விகளில் வளரும் தீப்புகை நாள்தோறும் விண்ணகத்தே மழை மேகங்களை உருவாக்கும் திருவீழிமிழலையாகும். |
| 887. மாலா யிரங்கொண்டு மலர்க்கண் ணிடவாழி<br>ஏலா வலயத்தோ டீந்தா னுறைகோயில்<br>சேலா கியபொய்கைச் செழுநீர்க் கமலங்கள்<br>மேலா லெரிகாட்டும் வீழி மிழலையே. | திருமால் ஆயிரம் தாமரைப் பூக்களைக் கொண்டு அருச்சித்தபோது ஒன்று குறையக் கண்டு, தன் மலர் போன்ற கண்ணை இடந்து சாத்திய அளவில் பிறர் சுமக்கலாற்றாத சக்கராயுதம் ஆகிய ஆழியை அவனுக்கு ஈந்தருளிய பெருமான் உறையும் கோயில் சேல்மீன்கள் பொருந்திய செழுநீர்ப் பொய்கைகளில் முளைத்த தாமரை மலர்கள் தீப்பிழம்பு போலக் காணப்படும் திருவீழிமிழலையாகும். |
| 888. மதியால் வழிபட்டான் வாணாள் கொடுபோவான்<br>கொதியா வருகூற்றைக் குமைத்தா னுறைகோயில்<br>நெதியான் மிகுசெல்வர் நித்த நியமங்கள்<br>விதியா னிற்கின்றார் வீழி மிழலையே. | மெய்யறிவால் தன்னை வழிபட்ட மார்க்கண்டேய னின் வாழ்நாளைக் கையகப்படுத்தச் சினந்து வந்த கூற்றுவனை அழித்த சிவபிரானது கோயில், நிதியால் மிகுந்த செல்வர்கள் நாள்தோறும் செய்யும் நியமங்களை விதிப்படி செய்து வாழும் திருவீழிமிழலையாகும். |
| 889. எடுத்தான் றருக்கினை யிழித்தான் விரலூன்றிக்<br>கொடுத்தான் வாளாளாக் கொண்டா னுறைகோயில்<br>படித்தார் மறைவேள்வி பயின்றார் பாவத்தை<br>விடுத்தார் மிகவாழும் வீழி மிழலையே. | கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணனின் செருக்கினைத் தன் கால்விரலை ஊன்றி அழித்தவனும், பின் அவன் பிழையுணர்ந்து வேண்ட, வாள் முத–யன கொடுத்து, அவனை அடிமையாக ஏற்றுக் கொண்டருளியவனுமாகிய சிவபிரான் உறையும் கோயில், வேதங்களைப் பயின்றவர்களும், வேள்விகள் பலவற்றைச் செய்பவர்களும், பாவங்களை விட்டவர்களுமாகிய அந்தணர்கள் மிகுதியாக வாழும், திருவீழிமிழலையாகும். |
| 890. கிடந்தா னிருந்தானுங் கீழ்மேல் காணாது<br>தொடர்ந்தாங் கவரேத்தச் சுடரா யவன்கோயில்<br>படந்தாங் கரவல்குற் பவளத் துவர்வாய்மேல்<br>விடந்தாங் கியகண்ணார் வீழி மிழலையே. | பாம்பணையில் துயிலும் திருமாலும், தாமரை மலரில் உறையும் நான்முகனும் அடிமுடிகளைக் காணாது திரும்பித் தொடர்ந்து ஏத்த அழலுருவாய் நின்ற சிவபிரானது கோயில். அரவின் படம் போன்ற அல்குலையும், பவளம் போன்ற வாயினையும் விடம் பொருந்திய கண்களையும் உடைய மகளிர் மிகுதியாக வாழும் திருவீழிமிழலையாகும். |

| | |
|---|---|
| 891. சிக்கார் துவராடைச் சிறுதட் டுடையாரும்<br>நக்காங் கலர்தூற்றுந் நம்பா னுறைகோயில்<br>தக்கார் மறைவேள்வித் தலையா யுலகுக்கு<br>மிக்கா ரவர்வாழும் வீழி மிழலையே. | சிக்குப் பிடித்த காவி உடையையும் சிறிய ஓலைத் தடுக்குக்களையும் உடைய புத்தரும் சமணர்களும் ஏளனம் செய்து சிரித்துப் பழிதூற்றும் நம் இறைவர் தங்கும் கோயில், தக்கவராய், வேத வேள்விகள் செய்வதில் தலையாயவராய், உலகில் மேம்பட்டவராய் விளங்கும் மறையவர் வாழும் வீழிமிழலை ஆகும். |
| 892. மேனின் றிழிகோயில் வீழி மிழலையுள்<br>ஏனத் தெயிற்றானை யெழிலார் பொழிற்காழி<br>ஞானத் துயர்கின்ற நலங்கொள் சம்பந்தன்<br>வாய்மைத் திவைசொல்ல வல்லோர் நல்லோரே. | விண்ணி–ருந்து இழிந்து வந்துள்ள வீழிமிழலைக் கோயி–ல், பன்றிப்பல் சூடியவனாய் எழுந்தருளி விளங்கும் சிவபிரானை, அழகிய பொழில்கள் சூழ்ந்த காழிப் பதியில் தோன்றிய ஞானத்தால் மேம்பட்ட அழகிய ஞானசம்பந்தன், உண்மையை உடையவனாய் ஓதிய இப்பதிகத்தைச் சொல்ல வல்லவர் நல்லவர் ஆவர். |

## 83. திருஅம்பர்மாகாளம்

பண் : குறிஞ்சி முதல் திருமுறை பதிக எண் : 83

| | |
|---|---|
| 893. அடையார் புரமூன்று மனல்வாய் விழவெய்து<br>மடையார் புனலம்பர் மாகா ளம்மேய<br>விடையார் கொடியெந்தை வெள்ளைப் பிறைசூடும்<br>சடையான் கழலேத்தச் சாரா வினைதானே. | பகைவராகிய அசுரர்களின் மூன்று கோட்டைகளும் அன–டைப்பட்டு அழியுமாறு கணை எய்தவனும், நீரைத் தேக்கும் மடைகளையுடைய புனல் வளம் நிறைந்த அம்பர் மாகாளத்தில் எழுந்தருளிய விடை எழுதிய கொடியை உடைய எம் தந்தையும், வெண்மையான பிறை மதியை அணிந்த சடையினனும் ஆகிய பெருமான் திருவடிகளை ஏத்துவாரை வினைகள் சாரா. |
| 894. தேனார் மதமத்தந் திங்கள் புனல்சூடி<br>வானார் பொழிலம்பர் மாகா ளம்மேய<br>ஊனார் தலைதன்னிற் ப–கொண் டுழல்வாழ்க்கை<br>ஆனான் கழலேத்த வல்ல லடையாவே. | தேன் பொருந்திய செழுமையான ஊமத்தம் மலர், பிறைமதி, கங்கை ஆகியவற்றை முடியில் சூடி, வானளாவிய பொழில் சூழ்ந்த அம்பர் மாகாளத்தில் எழுந்தருளிய ஊன் பொருந்திய தலையோட்டில் ப–யேற்றுத் திரியும் வாழ்க்கையை மேற்கொண்ட பெருமான் திருவடிகளைப் போற்றத் துன்பங்கள் நம்மை அடையா. |
| 895. திரையார் புனலோடு செல்வ மதிசூடி<br>விரையார் பொழிலம்பர் மாகா ளம்மேய<br>நரையார் விடையூரு நம்பான் கழனாளும்<br>உரையா தவர்கண்மே லொழியா வூனம்மே. | அலைகள் பொருந்திய கங்கை நதியோடு கண்டாரை மகிழ்விக்கும் சிறப்பு வாய்ந்த பிறைமதியை முடியில் சூடி, மணம் கமழும் பொழில் சூழ்ந்த அம்பர் மாகாளத்தில் எழுந்தருளிய வெண்மையான விடையை ஊர்ந்து வரும் சிவபிரான் திருவடிப் புகழை நாள்தோறும் உரையாதவர்கள் பால் பழிபாவங்கள் நீங்கா. |

| | |
|---|---|
| **896.** கொந்தண் பொழிற்சோலைக் கோல வரிவண்டு<br>மந்தம் ம–யம்பர் மாகா ளம்மேய<br>கந்தங் கமழ்கொன்றை கமழ்புன்சடை வைத்த<br>எந்தை கழலேத்த விடர்வந் தடையாவே. | பூங்கொத்துக்கள் நிறைந்த பொழில்களிலும் சோலைகளிலும் அழகிய வரி வண்டுகள் பாடும் மந்தச் சுருதி இசை நிறைந்து விளங்கும் இயற்கை எழில் வாய்ந்த அம்பர் மாகாளத்தில் எழுந்தருளிய, மணம் கமழும் கொன்றை மலர்களை இயல்பாக மணம் வீசும் தனது சிவந்த சடைமிசை வைத்துள்ள எம் தந்தையாகிய சிவபிரானின் திருவடிகளை ஏத்தினால் இடர்கள் நம்மை வந்தடைய மாட்டா. |
| **897.** அணியார் மலைமங்கை யாகம் பாகமாய்<br>மணியார் புனலம்பர் மாகா ளம்மேய<br>துணியா ருடையினான் றுதைபொற் கழனாளும்<br>பணியா தவர்தம்மேற் பறையா பாவம்மே. | அழகு பொருந்திய மலைமங்கையாகிய பார்வதி தேவியைத் தனது உட–ன் இடப்பாகமாய்க் கொண்டவனாய் மணிகளோடு கூடிய புனல் வளம் உடைய அம்பர் மாகாளத்தில் எழுந்தருளிய, துணிக்கப்பட்ட கோவண உடையினன் ஆகிய சிவபெருமானின் பொன்னிறம் துதைந்த திருவடிகளை நாள்தோறும் பணியாதவரைப் பாவம் நீங்கா. |
| **898.** பண்டாழ் கடனஞ்சை யுண்டு களிமாந்தி<br>வண்டார் பொழிலம்பர் மாகா ளம்மேய<br>விண்டார் புரம்வேவ மேருச் சிலையாகக்<br>கொண்டான் கழலேத்தக் குறுகா குற்றம்மே. | முற்காலத்தில் ஆழ்ந்த கட–டைத் தோன்றிய நஞ்சினை உண்டு, களிப்புற்று வண்டுகள் மொய்க்கும் சோலைகள் சூழ்ந்த அம்பர் மாகாளத்தில் எழுந்தருளியிருப்பவனும், பகைவராகிய அசுரர்களின் முப்புரங்களும் வெந்தழியுமாறு மேருமலையை வில்லாகக் கொண்டருளியவனுமான சிவபெருமான், திருவடிகளைப் போற்ற, குற்றங்கள் நம்மைக் குறுகா. |
| **899.** மிளிரும் மரவோடு வெள்ளைப் பிறைசூடி<br>வளரும் பொழிலம்பர் மாகா ளம்மேய<br>கிளரும் சடையண்ணல் கேடில் கழலேத்தத்<br>தளரும் முறுநோய்கள் சாருந் தவந்தானே. | விளங்குகின்ற பாம்போடு வெள்ளை நிறமுடைய பிறையை முடியிற்சூடி, வளர்கின்ற பொழில்கள் சூழ்ந்த அம்பர் மாகாளத்தில் எழுந்தருளி யிருக்கும், விளங்குகின்ற சடைமுடியை உடைய தலைமையாளனாகிய சிவபிரானுடைய குற்றமற்ற திருவடிகளை ஏத்தினால், மிக்க நோய்கள் தளர்வுறும்; தவம் நம்மை வந்து அடையும். |
| **900.** கொலையார் மழுவோடு கோலச் சிலையேந்தி<br>மலையார் புனலம்பர் மாகா ளம்மேய<br>இலையார் திரிசூலப் படையான் கழனாளும்<br>நிலையா நினைவார்மே னில்லா வினைதானே. | கொல்லும் தொழி–ல் வல்ல மழுவாயுதத்தோடு, அழகிய வில்லையும் கையில் ஏந்தி, கரையோடு மோதும் நீர் நிரம்பிய அம்பர் மாகாளத்தில் எழுந்தருளியிருக்கும், இலை வடிவமான முத்தலைச் சூலத்தைப் படையாகக் கொண்ட சிவபெருமான் திருவடிகளை நாள்தோறும் நிலையாக நினைவார்பால் வினைகள் சாரா. |

<table>
<tr><td>901. சிறையார் வரிவண்டு தேனுண் டிசைபாட<br>மறையார் நிறையம்பர் மாகா ளம்மேய<br>நறையார் மலரானும் மாலும் காண்பொண்ணா<br>இறையான் கழலேத்த வெய்தும் மின்பம்மே.</td><td>சிறகுகளை உடைய வரி வண்டுகள் தேனுண்டு இசைபாட, வேதம் ஓதும் அந்தணர் நிறைந்த அம்பர் மாகாளத்தில் எழுந்தருளியிரப்பவனும், தேன் நிறைந்த தாமரை மலரில் வீற்றிருக்கு நான்முகனும் திருமாலும் காண ஒண்ணாத தலைமையாளனுமாய சிவபிரான் திருவடிகளை ஏத்தினால் இன்பம் கிடைக்கும்.</td></tr>
<tr><td>902. மாசூர் வடிவின்னார் மண்டை யுணல்கொள்வார்<br>கூசா துரைக்குஞ்சொற் கொள்கை குணமல்ல<br>வாசார் பொழிலம்பர் மாகா ளம்மேய<br>ஈசா வென்பார்கட் கில்லை யிடர்தானே.</td><td>அழுக்கடைந்த மேனியரும், துன்ப வடிவினராகி, மண்டை என்னும் பாத்திரத்தில் உணவு கொள்பவருமாய புத்தரும், சமணரும் மனம் கூசாமல் கூறும் பொய்யுரைகளை ஏற்றுக் கொள்ளல் நன்மை தாராது. மணம் கமழும் பொழில் சூழ்ந்த அம்பர் மாகாளத்தில் எழுந்தருளியுள்ள ஈசனே என்று கூறுபவர்கட்கு இடர் வாராது.</td></tr>
<tr><td>903. வெரிநீர் கொளவோங்கும் வேணு புரந்தன்னுள்<br>திருமா மறைஞான சம்பந் தனசேணார்<br>பெருமான் ம–யம்பர் மாகா ளம்பேணி<br>உருகா வுரைசெய்வா ருயர்வா னடைவாரே.</td><td>அஞ்சத்தக்க ஊழி வெள்ளம், உலகத்தை மூட, அவ்வெள்ளத்தே ஓங்கிமேல் மிதந்த வேணுபுரம் என்னும் சீகாழிப் பதியுள் தோன்றிய அழகியனவும் சிறந்தனவுமான வேதங்களில் வல்ல ஞானசம்பந்தனுடைய இத்திருப்பதிகப் பாடல்களை, விண்ணோர் தலைவனாகிய சிவபிரான் எழுந்தருளியுள்ள அம்பர் மாகாளத்தை விரும்பித் தொழுது உருகி உரை செய்பவர் உயர்ந்த வானோர் உலகத்தை அடைவார்கள்.</td></tr>
</table>

## 84. திருநாகைக்காரோணம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 84

<table>
<tr><td>904. புனையும் விரிகொன்றைக் கடவுள் புனல்பாய<br>நனையுஞ் சடைமேலோர் நகுவெண் டலைசூடி<br>வினையில் லடியார்கள் விதியால் வழிபட்டுக்<br>கனையுங் கடனாகைக் காரோ ணத்தானே.</td><td>விரிந்த கொன்றை மலர் மாலையைப் புனையும் கடவுளாய சிவபிரான், கங்கை நீரைத் தாங்கியதால் நனைந்துள்ள சடையின்மேல், வாய் விரித்துச் சிரிப்பது போன்ற வெள்ளியதொரு தலை மாலையைச் சூடி, வினை நீங்கிய அடியவர்கள் விதிப்படி வழிபடச் செறிந்துள்ள கடற்கரையை அடுத்த நாகைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளார்.</td></tr>
<tr><td>905. பெண்ணா ணெனநின்ற பெம்மான் பிறைச்சென்னி<br>அண்ணா மலைநாட னாரூ ருறையம்மான்<br>மண்ணார் முழவோவா மாடந் நெடுவீதிக்<br>கண்ணார் கடனாகைக் காரோ ணத்தானே.</td><td>பெண்ணும் ஆணுமாய் ஒருருவில் விளங்கும் பெருமானும், பிறை சூடிய சென்னியனாய் அண்ணாமலை ஆரூர் ஆகிய ஊர்களில் எழுந்தருளிய தலைவனும் ஆகிய சிவபிரான் மார்ச்சனை பொருந்திய முழவின் ஒ– இடைவிடாமல் கேட்கும், மாட வீடுகளுடன் கூடிய நெடிய வீதிகளை உடைய அகன்ற இடப் பரப்புடைய கடலையடுத்த நாகைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளான்.</td></tr>
</table>

| | |
|---|---|
| 906. பாரோர் தொழவிண்ணோர் பணியம் மதின்மூன்றும்<br>ஆரா ரழலூட்டி யடியார்க் கருள்செய்தான்<br>தேரார் விழவோவாச் செல்வன் றிரைசூழ்ந்த<br>காரார் கடனாகைக் காரோ ணத்தானே. | மண்ணக மக்கள் தொழவும், விண்ணவர் பணியவும் அனைவர்க்கும் நெருங்குதற்கரிய அழலை ஊட்டி அழித்து அடியவர்க்கு அருள் செய்து, தேரோட்டமாகிய சிறப்பு விழா இடைவிடாது நிகழும் சிறப்பினை ஏற்றருளும் செல்வன் ஆகிய சிவபெருமான், அலைகள் நிரம்பிய, மேகங்கள் பொருந்திய கட–ன் கரையில் விளங்கும் நாகைக் காரோணம் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளான். |
| 907. மொழிசூழ் மறைபாடி முதிருஞ் சடைதன்மேல்<br>அழிசூழ் புனலேற்ற வண்ணல் லணியாய<br>பழிசூழ் விலராய பத்தர் பணிந்தேத்தக்<br>கழிசூழ் கடனாகைக் காரோ ணத்தானே. | பொருள் பொதிந்த சொற்கள் நிரம்பிய வேதங்களைப் பாடிக் கொண்டு, முதிர்ந்த தன் சடைமுடி மேல் உலகை அழிக்க எண்ணி வந்த கங்கை நதியை ஏற்றருளிய தலைவனாகிய சிவபெருமான், அழகிய செயல்களோடு பழி பாவங்களை மனத்திலும் கருதாதவர்களாகிய அடியவர்கள் பணிந்து போற்ற உப்பங்கழிகள் சூழ்ந்த கடற்கரையை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளான். |
| 908. ஆணும் பெண்ணுமா யடியார்க் கருணல்கிச்<br>சேணின் றவர்க்கின்னஞ் சிந்தை செயவல்லான்<br>பேணி வழிபாடு பிரியா தெழுந்தொண்டர்<br>காணுங் கடனாகைக் காரோ ணத்தானே. | ஆணும் பெண்ணுமான வடிவோடு காட்சி தந்து, அடியவர்களுக்கு அருள் வழங்கி, வானுலகில் வாழும் தேவர்கட்கு மேலும் அருள் புரிய விரும்பும் மனத்தை உடையனாய் விளங்கும் சிவபிரான் அன்புடன் வழிபாடு செய்து பிரியாது வாழும் தொண்டர்கள் காணும் வண்ணம் கடற்கரையில் விளங்கும் நாகைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளான். |
| 909. ஏனத் தெயிறோடும் மரவ மெய்பூண்டு<br>வானத் திளந்திங்கள் வளருஞ் சடையண்ணல்<br>ஞானத் துரைவல்லார் நாளும் பணிந்தேத்தக்<br>கானற் கடனாகைக் காரோ ணத்தானே. | பன்றியின் பல், பாம்பு ஆகியவற்றை மெய்யிற் பூண்டு, வானகத்தே இயங்கும் இளம்பிறை தங்கும் சடைமுடியை உடைய தலைமை யாளனாகிய சிவபெருமான், மெய்யறிவு மயமான சொற்களைப் பேசவல்ல அடியவர்கள் நாள்தோறும் பணிந்து போற்றச் சோலைகள் சூழ்ந்த கடற்கரையை அடுத்துள்ள நாளைக்காரோணத்தில் எழுந்தருளியுள்ளான். |
| 910. அரையா ரழனாக மக்கோ டசைத்திட்டு<br>விரையார் வரைமார்பின் வெண்ணீறணியண்ணல்<br>வரையார் வனபோல வளரும் வங்கங்கள்<br>கரையார் கடனாகைக் காரோ ணத்தானே. | இடையில் அழல்போலும் கொடிய நாகத்தைச் சங்கு மணிகளோடு இணைத்துக் கட்டிக் கொண்டு, மணம் கமழும் மலை போன்ற மார்பில் திருவெண்ணீறு அணிந்துள்ள தலைமை யாளனாகிய சிவபெருமான், மலைகள் மிதந்து வருவன போலக் கப்பல்கள் கரையைச் சாரும் கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளான். |

| | |
|---|---|
| 911. வலங்கொள் புகழ்பேணி வரையா லுயர்திண்டோள்<br>இலங்கைக் கிறைவாட வடர்த்தங் கருள்செய்தான்<br>பலங்கொள் புகழ்மண்ணிற் பத்தர் பணிந்தேத்தக்<br>கலங்கொள் கடனாகைக் காரோ ணத்தானே. | மேலும் மேலும் வெற்றிகளால் பெற்ற புகழால் தருக்கி, மலை போன்று உயர்ந்த திண்ணிய தோளால் கயிலை மலையை எடுத்த இராவணனை வாடுமாறு அடர்த்துப்பின் அவனுக்கு அருள்செய்த சிவபிரான், வாழ்வின் பயனாகக் கொள்ளத்தக்க புகழை உடையவர் களாகிய அடியவர்கள் மண்ணுலகில் தன்னைப் பணிந்து ஏத்த மரக்கலங்கள் பொருந்திய கடற்கரையை அடுத்து விளங்கும் நாகைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளான். |
| 912. திருமா லடிவீழத் திசைநான் முகனேத்தப்<br>பெருமா னெனநின்ற பெம்மான் பிறைச்சென்னிச்<br>செருமால் விடையூருஞ் செல்வன் றிரைசூழ்ந்த<br>கருமால் கடனாகைக் காரோ ணத்தானே. | திருமால் தன் திருவடியில் விழுந்து வணங்கவும், நான்முகன் ஏத்தவும், தானே முழுமுதற் பரம்பொருள் என உணர்ந்து அழலுருவாய் ஓங்கி நின்ற பெருமானும், பிறை மதியை முடியிற்சூடிப் பகைவரை எதிர்க்க வல்ல விடையேற்றை ஊர்ந்து வரும் செல்வனும் ஆகிய சிவபெருமான், அலைகளால் சூழப்பட்ட கரிய பெரிய கடற்கரையில் விளங்கும் நாகைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளான். |
| 913. நல்லா ரறஞ்சொல்லப் பொல்லார் புறங்கூற<br>அல்லா ரலர்தூற்ற வடியார்க் கருள்செய்வான்<br>பல்லார் தலைமாலை யணிவான் பணிந்தேத்தக்<br>கல்லார் கடனாகைக் காரோ ணத்தானே. | நல்லவர்கள் அறநெறிகளைப் போதிக்கவும், பொல்லாதவர்களாகிய சமணர்கள் புறங்கூறவும், நல்லவரல்லாத புத்தர்கள் பழி தூற்றவும், தன் அடியவர்க்கு அருள்புரியும் இயல்பினன் ஆகிய இறைவன் சுடுகாட்டில் கிடக்கும் பலர் தலையோடுகளை மாலைகளாகக் கோத்து அணிந்தவனாய்ப் பலரும் பணிந்து ஏத்த, கல் என்னும் ஒ–யோடு கூடிய கடற்கரையில் விளங்கும் நாகைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளான். |
| 914. கரையார் கடனாகைக் காரோ ணம்மேய<br>நரையார் விடையானை நவிலுஞ் சம்பந்தன்<br>உரையார் தமிழ்மாலை பாடும் மவரெல்லாம்<br>கரையா வுருவாகிக் க–வா னடைவாரே. | இடைவிடாது ஒ– செய்யும் கட–ன் கரையில் விளங்கும் நாகைக் காரோணத்தில் எழுந்தருளிய வெண்மை நிறம் பொருந்திய விடை ஊர்தியைக் கொண்டுள்ள இறைவனை ஞானசம்பந்தன் பரவிப் போற்றிய புகழ்பொருந்திய இத்தமிழ் மாலையைப் பாடிப் பரவுபவர் அனைவரும் அழியாத வடிவத்தோடு ஆரவாரம் மிக்க வானுலகை அடைவார்கள். |

## 85. திருநல்லம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 85

| | |
|---|---|
| 915. கல்லா னிழன்மேய கறைசேர் கண்டாவென்<br>றெல்லா மொழியாலு மிமையோர் தொழுதேத்த<br>வில்லா லரண்மூன்றும் வெந்து விழவெய்த<br>நல்லா னமையாள்வா னல்ல நகரானே. | இமையவர்கள் கல்லால மர நிழ–ல் எழுந்தருளிய கறை பொருந்திய கண்டத்தை உடையவனே என்று தமக்குத் தெரிந்த அனைத்து மொழிகளாலும் தோத்திரம் செய்து தொழுது ஏத்த, மேரு வில்லால் அசுரர்தம் மூன்று அரண்களும் வெந்து விழுமாறு செய்தருளிய பெரியவனாகிய சிவபிரான் நம்மையாட் கொள்ளுதற் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளியுள்ளான். |

| | |
|---|---|
| 916. தக்கன் பெருவேள்வி தன்னி லமரரைத்<br>துக்கம் பலசெய்து சுடர்பொற் சடைதாழக்<br>கொக்கின் னிறகோடு குளிர்வெண் பிறைசூடும்<br>நக்கன் னமையாள்வா னல்ல நகரானே. | தன்னை இகழ்ந்து தக்கன் செய்த பெரிய வேள்விக்குச் சென்ற அமரர்களை, அவ்வேள்விக் களத்திலேயே பலவகையான துக்கங்களை அடையச் செய்தவனும், ஒளிவிடும் பொன்போன்ற சடைகள் தாழ்ந்து தொங்கக் கொக்கின் இறகோடு குளிர்ந்த வெண்மையான பிறையைச் சூடியிருப்பவனும் திகம்பரனுமாய இறைவன் நம்மை ஆளுதற்பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளியுள்ளான். |
| 917. அந்தி மதியோடு மரவச் சடைதாழ<br>முந்தி யனலேந்தி முதுகாட் டெரியாடி<br>சிந்தித் தெழவல்லார் தீரா வினைதீர்க்கும்<br>நந்தி நமையாள்வா னல்ல நகரானே. | மாலைக் காலத்தில் தோன்றும் பிறை மதியோடு பாம்பையும் அணிந்த சடைமுடி தாழ்ந்து தொங்க, முற்பட்ட ஊழிக் காலத்தில் கையில் அனலேந்திப் பழமையான சுடுகாட்டகத்தே எரியில் நின்றாடித் தன்னைச் சிந்தித்தே எச்செயலையும் தொடங்கும் அன்பர்களின் தீராத வினைகள் எல்லாவற்றையும் தீர்த்தருளும் நந்தியாகிய சிவபெருமான், நம்மை ஆட்கொண்டருளுதற் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளியுள்ளான். |
| 918. குளிரும் மதிசூடிக் கொன்றைச் சடைதாழ<br>மிளிரும் மரவோடு வெண்ணூ றிகழ்மார்பில்<br>தளிருந் திருமேனித் தையல் பாகமாய்<br>நளிரும் வயல்சூழ்ந்த நல்ல நகரானே. | குளிர்ந்த பிறை மதியைச் சூடி, கொன்றை மலர்களை அணிந்துள்ள சடைகள் தாழ்ந்து தொங்க, விளங்கும் பாம்போடு பூணநூல் திகழும் மார்பினனாய்த் தளிர் போன்ற திருமேனியை உடைய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்ட சிவபிரான் குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த நல்லம் என்னும் நகரில் எழுந்தருளியுள்ளான். |
| 919. மணியார் திகழ்கண்டம் முடையான் மலர்மல்கு<br>பிணிவார் சடையெந்தை பெருமான் கழல்பேணித்<br>துணிவார் மலர்கொண்டு தொண்டர் தொழுதேத்த<br>நணியா னமையாள்வா னல்ல நகரானே. | நீலமணி போன்ற விளங்கிய கண்டத்தினை உடையவனும், மலர்கள் நிறைந்த வளைத்துக் கட்டப்பட்ட நீண்ட சடைமுடியினனும், எமக்குத் தந்தையானவனும் ஆகிய பெருமான் மனத்துணிவோடு மலர் கொண்டு தன் திருவடிகளை விரும்பித் தொழுதேத்தவும் நம்மை ஆட்கொண்டருளவும் நண்ணிய நிலையினனாய் நல்லம் நகரில் எழுந்தருளியுள்ளான். |
| 920. வாசம் மலர்மல்கு மலையான் மகளோடும்<br>பூசுஞ் சுடுநீறு புனைந்தான் விரிகொன்றை<br>ஈசன் னெனவுள்கி யெழுவார் வினைகட்கு<br>நாசன் னமையாள்வா னல்ல நகரானே. | மணம் கமழ்கின்ற மலர்களைச் சூடிய மலையரையன் மகளாகிய பார்வதி தேவியோடும், பூசத்தக்கதாய்ச் சுட்டெடுத்த திருநீறு அணிந்தவனாய், இதழ் விரிந்த கொன்றை மாலையைப் புனைந்தவனாய், ஈசன் எனத் தன்னை நினைந்தேத்துபவர்களின் வினைகளைப் பொடி செய்பவனாய், விளங்கும் இறைவன், நம்மை ஆட்கொண்டருள நல்லம் என்னும் நகரில் எழுந்தருளியுள்ளான். |

| | |
|---|---|
| 921. அங்கோல் வளைமங்கை காண வனலேந்திக்<br>கொங்கார் நறுங்கொன்றை சூடிக் குழகாக<br>வெங்கா டிடமாக வெந்தீ விளையாடும்<br>நங்கோ னமையாள்வா னல்ல நகரானே. | அழகிய திரண்ட வளையல்களை அணிந்த உமையம்மை காணக் கையில் அனல் ஏந்தி, தேன் நிறைந்த மணமுடைய கொன்றை மலர்மாலை சூடி, இளமைக் கோலத்தில் சுடுகாட்டை அரங்காகக் கொண்டு எரியாடும் நம் தலைவனாகிய சிவபிரான், நம்மை ஆட்கொள்ளுதற் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளியுள்ளான். |
| 922. பெண்ணார் திருமேனிப் பெருமான் பிறைமல்கு<br>கண்ணார் நுத–னான் கயிலை கருத்தினால்<br>எண்ணா தெடுத்தானை யிறையே விரலூன்றி<br>நண்ணார் புரமெய்தா னல்ல நகரானே. | உமையம்மையைத் திருமேனியின் ஒரு கூற்றிலே கொண்டுள்ள பெருமானும், பிறை மதியை முடியில் சூடிக் கண் பொருந்திய நுத–னனாய் விளங்குவோனும், இறைவனது வரம்பிலாற்றலை மனத்தால் எண்ணாது கயிலை மலையை எடுத்த இராவணனைச் சிறிதே விரலூன்றி அடர்த்தவனும், பகைவர்தம் முப்புரங்களை எய்தழித்தவனுமாகிய சிவபிரான், நம்மை ஆட்கொண்டருள, நல்லம் என்னும் நகரில் எழுந்தருளியுள்ளான். |
| 923. நாகத் தணையானு நளிர்மா மலரானும்<br>போகத் தியல்பினாற் பொ–ய வழகாகும்<br>ஆகத் தவளோடு மமர்ந்தங் கழகாரும்<br>நாகம் மரையார்த்தா னல்ல நகரானே. | பாம்பணையில் துயிலும் திருமாலும், தண்ணிய, தாமரை மலர்மேல் எழுந்தருளியுள்ள நான்முகனும், திருமகள் கலைமகளிரோடு போகம் பொருந்தி வாழ, தானும் மலை மகளோடு கூடிப் போகியாய் இருந்து அருள் செய்த, அழகு பொருந்திய பாம்பை இடையில் அரைநாணாகக் கட்டிக் கொண்டிருப்பவன் ஆகிய சிவபிரான், நம்மை ஆள நல்லம் என்னும் நகரிடை எழுந்தருளியுள்ளான். |
| 924. குறியில் சமணோடு குண்டர் வண்டேரர்<br>அறிவில் லுரைகேட்டங் கவமே கழியாதே<br>பொறிகொள் ளரவார்த்தான் பொல்லா வினைதீர்க்கும்<br>நறைகொள் பொழில்சூழ்ந்த நல்ல நகரானே. | குறிக்கோள் இல்லாத சமணர்களும் புத்தரும் கூறும் அறிவற்ற சொற்களைக் கேட்டு நாள்களைப் பயனற்றனவாய்ப் போக்காதீர், புள்ளிகளோடு கூடிய பாம்பினை இடையிற் கட்டிய பரமன், நம் பொல்லா வினைகளைத் தீர்க்கும் நிலையில் தேன் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த நல்லம் என்னும் நகரிடை எழுந்தருளியுள்ளான். |
| 925. நலமார் மறையோர்வாழ் நல்ல நகர்மேய<br>கொலைசேர் மழுவானைக் கொச்சை யமர்ந்தோங்கு<br>தலமார் தமிழ்ஞான சம்பந் தன்சொன்ன<br>கலைக ளிவைவல்லார் கவலை கழிவாரே. | நன்மைகள் நிறைந்த வேதங்களை ஓதும் அந்தணர்கள் வாழும் நல்லம் நகரில் எழுந்தருளிய, கொல்லும் தொழில் வல்ல மழுவைக் கையில் ஏந்திய சிவபிரானை, கொச்சை வயம் என்னும் புகழுடைய தலத்தில் வாழ்ந்த தமிழ் ஞானசம்பந்தன், போற்றிப் பாடிய கலை நலம் வாய்ந்த இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர், கவலைகள் நீங்கப் பெறுவர். |

# 86. திருநல்லூர்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 86

| | |
|---|---|
| 926. கொட்டும் பறைசீராற் குழும வனலேந்தி<br>நட்டம் பயின்றாடு நல்லூர்ப் பெருமானை<br>முட்டின் றிருபோது முனியா தெழுந்தன்பு<br>பட்ட மனத்தார்க ளறியார் பாவமே. | பறை கொட்டும் சீருக்கு ஏற்பப் பூதகணங்கள் முத–யன சூழக் கையின்கண் அனலேந்தி விருப்போடு நடனம் ஆடும் நல்லூர்ப் பெருமானைக் காலை மாலை இருபொழுதும் தவறாமல் வெறுப்பின்றி எழுச்சியோடு வணங்கி அன்பு பூண்ட மனத்தார்களைப் பாவம் அணுகாது. |
| 927. ஏறி லெருதேறு மெழிலா யிழையோடும்<br>வேறும் முடனுமாம் விகிர்த ரவரென்ன<br>நாறும் மலர்ப்பொய்கை நல்லூர்ப் பெருமானைக்<br>கூறும் மடியார்கட் கடையா குற்றமே. | ஊர்தியாக எருது ஒன்றிலேயே ஏறுபவனும், அழகிய உமையம்மையோடு ஒன்றாகவும் வேறாகவும் விளங்கும் தன்மையை உடையவனுமாகிய சிவபெருமான், அன்பர்கள் எண்ணுமாறு மணங்கமழும் மலர்ப் பொய்கை சூழ்ந்த நல்லூரில் விளங்குகின்றான். அப்பெருமான் புகழைக் கூறும் அடியவர்களைக் குற்றங்கள் அடையா. |
| 928. சூடு மிளந்திங்கட் சுடர்பொற் சடைதாழ<br>ஓடுண் கலனாக வூரு ரிடுபிச்சை<br>நாடுந் நெறியானை நல்லூர்ப் பெருமானைப்<br>பாடும் மடியார்கட் கடையா பாவமே. | இளம்பிறை, முடியிற்சூடி, ஒளி விடுகின்ற பொன் போன்ற சடைகள் தாழ, தலையோட்டையே உண்கலனாகக் கொண்டு, ஒவ்வோர் ஊரிலும் மகளிர் இடும் பிச்சையை நாடிச் செல்லும் அறநெறியாளனாகிய நல்லூர்ப் பெருமானைப் பாடும் அடியவர்களைப் பாவங்கள் அடையா. |
| 929. நீத்த நெறியானை நீங்காத் தவத்தானை<br>நாத்த நெறியானை நல்லூர்ப் பெருமானைக்<br>காத்த நெறியானைக் கைகூப் பித்தொழு<br>தேத்து மடியார்கட் கில்லை யிடர்தானே. | உலகியல் நெறி முறைகளைத் தான் பின்பற்றாது நீத்தவனும், நீங்காத தவத்தை உடையவனும், கட்டுப்பாடுகளுடைய நெறிகளை வகுத்து அளித்தவனும், அந்நெறி நிற்பாரைக் காத்தருள்பவனும் ஆகிய நல்லூர்ப் பெருமானைக் கைகுவித்துத் தொழுதேத்தும் அடியவர்கட்கு இடரில்லை. |
| 930. ஆகத் துமைகேள்வ னரவச் சடைதாழ<br>நாகம் மசைத்தானை நல்லூர்ப் பெருமானைத்<br>தாகம் புகுந்தண்மித் தாள்கள் தொழுந்தொண்டர்<br>போக மனத்தராய்ப் புகழத் திரிவாரே. | தனது திருமேனியில், கூறாகக் கொண்டுள்ள உமையம்மையின் கணவனும் பாம்பணிந்த சடைகள் தாழ்ந்து தொங்க, இடையில் பாம்பைக் கச்சாகக் கட்டியவனும் ஆகிய நல்லூர்ப் பெருமானை, வேட்கை மிக்கவராய் அணுகி அவன் திருவடிகளைத் தொழும் தொண்டர்கள் இன்பம் பொருந்திய மனத்தவராய்ப் பலரும் புகழ உலகில் வாழ்வர். |
| 931. கொல்லுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச<br>நல்ல நெறியானை நல்லூர்ப் பெருமானைச்<br>செல்லு நெறியானைச் சேர்ந்தா ரிடர்தீரச்<br>சொல்லு மடியார்க ளறியார் துக்கமே. | தன்னைக் கொல்ல வந்த மதம் பொருந்திய யானையை, உமையம்மை அஞ்சுமாறு கொன்று, அதன் தோலைப் போர்த்த நல்ல நெறியாளனாய், நல்லூர்ப் பெருமானாய், எல்லோரும் அடையத்தக்க முத்திநெறியாளனாய் விளங்கும் சிவபிரானை அடைந்து, தங்களது அரிய துன்பங்கள் தீருமாறு புகழ்ந்து போற்றும் அடியவர்கள், துக்கம் அறியார். |

| | |
|---|---|
| 932. எங்கள் பெருமானை யிமையோர் தொழுதேத்தும்<br>நங்கள் பெருமானை நல்லூர் பிரிவில்லாத்<br>தங்கை தலைக்கேற்றி யாளென் றடிநீழல்<br>தங்கு மனத்தார்கள் தடுமாற் றறுப்பாரே. | எங்கள் தலைவனும், தேவர்களால் தொழுது போற்றப்படும் நம் பெருமானும், நல்லூரில் பிரிவின்றி எழுந்தருளியிருக்கும் தலைவனுமாய இறைவனை அடைந்து, தம் கைகளை உச்சி மேல் குவித்து, நாங்கள் உனக்கு அடிமை என்று கூறி, அவனது திருவடி நீழ–ல் ஒன்றி வாழும் மனத்தவர்கள் தடுமாற்றம் இலராவர். |
| 933. காம னெழில்வாட்டிக் கடல்சூ ழிலங்கைக்கோன்<br>நாம மிறுத்தானை நல்லூர்ப் பெருமானை<br>ஏம மனத்தாரா யிகழா தெழுந்தொண்டர்<br>தீப மனத்தார்க ளறியார் தீயவே. | மன்மதனது உருவ அழகை அழித்துக் கடல் சூழ்ந்த இலங்கை மன்னனாகிய இராவணனது புகழைக் கெடுத்து, விளங்கும் நல்லூரில் எழுந்தருளிய பெருமானை, பாதுகாப்புக் கொண்ட மனத்தவர்களாய் இகழாது அவனைக் காண எழும் தொண்டர்கள், தீபம் போன்ற ஞானஒளி நிலைத்த மனம் உடையவராவர். தீயனவற்றை அவர்கள் அறியார். |
| 934. வண்ண மலரானும் வைய மளந்தானும்<br>நண்ண லரியானை நல்லூர்ப் பெருமானைத்<br>தண்ண மலர்தூவித் தாள்க டொழுதேத்த<br>எண்ணு மடியார்கட் கில்லை யிடுக்கணே. | செந்தாமரையில் விளங்கும் பிரமனும், உலகை அளந்த திருமாலும், நண்ணுதற்கு அரியவனாய் விளங்கும் நல்லூர்ப் பெருமானை, குளிர்ந்த மலர்களைத் தூவி, அவன் திருவடிகளைத் தொழுது வணங்க எண்ணும் அடியவர்களுக்கு, இடுக்கண் இல்லை. |
| 935. பிச்சக் குடைநீழற் சமணர் சாக்கியர்<br>நிச்ச மலர்தூற்ற நின்ற பெருமானை<br>நச்சு மிடற்றானை நல்லூர்ப் பெருமானை<br>எச்சு மடியார்கட் கில்லை யிடர்தானே. | மயிற்பீ–யாலாகிய குடை நீழ–ல் திரியும் சமணர்களும், புத்தர்களும் நாள்தோறும் பழி தூற்றுமாறு நின்ற பெருமானாய், நஞ்சு பொருந்திய கண்டத்தை உடைய நல்லூர்ப் பெருமானாய் விளங்கும் சிவபிரானை, ஏத்தும் அடியவர்களுக்கு இடரில்லை. |
| 936. தண்ணம் புனற்காழி ஞான சம்பந்தன்<br>நண்ணும் புனல்வே– நல்லூர்ப் பெருமானை<br>வண்ணம் புனைமாலை வைக லேத்துவார்<br>விண்ணுந் நிலனுமாய் விளங்கும் புகழாரே. | குளிர்ந்த நீரால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், பொருந்திய நீரை வே–யாக உடைய நல்லூரில் விளங்கும் பெருமான் இயல்புகளைப் புனைந்து பாடிய இத்திருப்பதிகத்தை நாள்தோறும் சொல்–த் துதிப்பவர் விண்ணும் மண்ணும் விளங்கும் புகழாளர் ஆவர். |

## 87. திருவடுகூர்

**பண் : குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 87**

| | |
|---|---|
| 937. சுடுகூ ரெரிமாலை யணிவர் சுடர்வேலர்<br>கொடுகூர் மழுவாளொன் றுடையார் விடையூர்வர்<br>கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்<br>வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூ ரடிகளே. | சுடும் தன்மை மிக்க தீப மாலையை அணிபவரும், ஒளி பொருந்திய சூலத்தினரும், கொடிய மழுவாயுதம் ஒன்றைக் கையில் உடையவரும், விடையை ஊர்ந்து வருபவரும், நீர் வளம் மிக்க வடுகூர் இறைவர் ஆவார். மிக்க பசி காமம் கவலை பிணி ஆகியன இல்லாதவரும் ஆவர். |

| | |
|---|---|
| **938.** பாலுந் நறுநெய்யுந் தயிரும் பயின்றாடி<br>ஏலுஞ் சுடுநீறு மென்பு மொளிமல்கக்<br>கோலம் பொழிற்சோலைக் கூடி மடவன்னம்<br>ஆலும் வடுகூரி லாடும் மடிகளே. | பால், நறுமணம் மிக்க நெய், தயிர் ஆகியவற்றை விரும்பி ஆடி, பொருந்துவதான வெண்ணீறு, என்புமாலை ஆகியவற்றை ஒளி மல்க அணிந்து அழகிய பொழில்களிலும் சோலைகளிலும் வாழும் அன்னங்கள் கூடி ஆரவாரிக்கும் வடுகூரில் நம் அடிகளாகிய இறைவர் மகிழ்வோடு ஆடுகின்றார். |
| **939.** சூடு மிளந்திங்கட் சுடர்பொற் சடைதன்மேல்<br>ஓடுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச<br>ஏடு மலர்மோந்தங் கெழிலார் வரிவண்டு<br>பாடும் வடுகூரி லாடும் மடிகளே. | ஒளி பொருந்திய பொன் போன்ற சடைமுடிமேல் இளந்திங்களைச் சூடி, மதம் கொண்டு தன்பால் ஓடி வந்த யானையை, உமையம்மை அஞ்சக் கொன்று, அதன் தோலைப் போர்த்து, அழகு பொருந்திய வரி வண்டுகள் இதழ்களோடு கூடிய மலர்களை முகர்ந்து தேனுண்டு பாடும் வடுகூரில், அடிகள் நடனம் ஆடுவர். |
| **940.** துவரும் புரிசையுந் துதைந்த மணிமாடம்<br>கவர வெரியோட்டிக் கடிய மதிலெய்தார்<br>கவரு மணிகொல்லைக் கடிய முலைநல்லார்<br>பவரும் வடுகூரி லாடும் மடிகளே. | செந்நிறமும், மதிலும் செறிந்த அழகிய மாடங்களை அழிக்குமாறு தீயைச் செலுத்தி அம்மதில்கள் அழியுமாறு அம்பு எய்த சிவபெருமானார், காவல் பொருந்திய முலையாராகிய பெண்கொடிகள் முல்லை நிலத்தில் கைகளால் இரத்தினங்களைப் பொறுக்கி எடுக்கும் வடுகூரில் நடம்பயிலும் அடிகளாவர். |
| **941.** துணியா ருடையாடை துன்னி யரைதன்மேல்<br>தணியா வழனாகந் தரியா வகைவைத்தார்<br>பணியா ரடியார்கள் பலரும் பயின்றேத்த<br>அணியார் வடுகூரி லாடும் மடிகளே. | துணிக்கப் பெற்றதாகிய கோவண ஆடையை இடையிலே தரித்து அதன்மேல் தீப்போன்ற விட வெம்மை தணியாத நாகத்தை அழகுறத் தரித்தவராகிய அடிகள் அடியவர் பலரும் பணிந்து பரவி வாழ்த்த அழகிய வடுகூரில் ஆடியருள்கின்றார். |
| **942.** தளருங் கொடியன்னா டன்னோ டுடனாகிக்<br>கிளரு மரவார்த்துக் கிளரு முடிமேலோர்<br>வளரும் பிறைசூடி வரிவண் டிசைபாட<br>ஒளிரும் வடுகூரி லாடும் மடிகளே. | சுமை பொறுக்காது தள்ளாடும் கொடி போன்றவளாகிய உமையம்மையோடு கூடி, விளங்கும் பாம்பினை இடையிலே கட்டிக் கொண்டு விளக்கம் பொருந்திய முடிமேல் வளரும் பிறைமதி ஒன்றைச் சூடி, வரிகள் பொருந்திய வண்டுகள் இசைபாட பலராலும் நன்கறியப்பட்ட வடுகூரில் அடிகளாகிய பெருமான் ஆடியருள்கின்றார். |
| **943.** நெடியர் சிறிதாய நிரம்பா மதிசூடும்<br>முடியர் விடையூர்வர் கொடியர் மொழிகொள்ளார்<br>கடிய தொழிற்காலன் மடிய வுதைகொண்ட<br>அடியர் வடுகூரி லாடும் மடிகளே. | வடுகூரில் ஆடும் அடிகள் பேருருவம் கொள்பவர். சிறிதான கலைநிரம்பாத பிறை மதியைச் சூடும் முடியை உடையவர். விடையை ஊர்ந்து வருபவர். கொடியவர் மொழிகளை ஏற்றுக் கொள்ளாதவர். கொல்லும் தொழிலைச் செய்யும் காலன் மடியுமாறு உதைத்தருளிய திருவடியினர். |

| | |
|---|---|
| **944.** பிறையு நெடுநீரும் பிரியா முடியினார்<br>மறையும் பலபாடி மயானத் துறைவாரும்<br>பறையு மதிர்குழலும் போலப் பலவண்டாங்<br>கறையும் வடுகூரி லாடும் மடிகளே. | அதிர்கின்ற பறையும் வேய்ங்குழலும் போலப் பல வண்டுகள் ஒ–க்கும் சோலைகளை உடைய வடுகூரில் ஆடும் அடிகள், இளம்பிறை, பெருகிய கங்கை நீர் ஆகியன பிரியாத திருமுடியை உடையவர். வேதங்களில் உள்ள சந்தங்கள் பலவற்றையும் பாடிக் கொண்டு இடுகாட்டில் உறைபவர். |
| **945.** சந்தம் மலர்வேய்ந்த சடையின் னிடைவிம்மு<br>கந்தம் மிகுதிங்கட் சிந்து கதிர்மாலை<br>வந்து நயந்தெம்மை நன்று மருள்செய்வார்<br>அந்தண் வடுகூரி லாடும் மடிகளே. | அழகு தண்மை ஆகியவற்றை உடைய வடுகூரில் ஆடும் அடிகள் அழகிய மலர்கள் வேய்ந்த சடையின்கண் பெருகி எழும் மணம் மிகும் பிறை மதி வெளியிடும் கிரணங்களை உடைய மாலை நேரத்தில் வந்து விரும்பி எமக்கு நன்றாக அருள் செய்வார். |
| **946.** திருமா லடிவீழத் திசைநான் முகனாய<br>பெருமா னுணர்கில்லாப்பெருமா னெடுமுடிசேர்<br>செருமால் விடையூருஞ் செம்மான் றிசைவில்லா<br>அருமா வடுகூரி லாடும் மடிகளே. | எட்டுத் திசைகளிலும் ஒளி பரவுமாறு அரிய பெரிய வடுகூரில் நடனம் ஆடும் அடிகள், திருமால் தம் அடியை விரும்பித் தோண்டிச் செல்லவும், திசைக்கு ஒரு முகமாக நான்கு திருமுகங்களைக் கொண்ட பிரமனாகிய தலைவனும் அறிய முடியாத பெரிய முடியினை உடைய இறைவர், போர் செய்யத் தக்க விடைமீது எழுந்தருளிவரும் சிவந்த நிறத்தினர். |
| **947.** படிநோன் பகையாவர் பழியில் புகழான<br>கடிநா ணிகழ் சோலை கமழும் வடுகூரைப்<br>படியா னசிந்தை மொழியார் சம்பந்தன்<br>அடிஞா னம்வல்லா ரடிசேர் வார்களே. | இவ்வுலகில் கூறப்படும் நோன்புகள் பலவற்றுக்கும் உரியவராய் விளங்கும் சிவபிரான் எழுந்தருளியதும், குற்றமற்ற புகழோடு கூடிய மணம் கமழும் சோலைகளால் மணம் பெறுவதுமான வடுகூரில் மேவிய இறைவன் திருவடிகளில் படிந்த மனத்தோடு ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகத் தமிழை ஓதி, அடிசேர் ஞானம் பெற்றார், திருவடிப்பேறு பெறுவர். |

## 88. திருஆப்பனூர்

பண் : குறிஞ்சி — முதல் திருமுறை பதிக எண் : 88

| | |
|---|---|
| **948.** முற்றுஞ் சடைமுடிமேன் முதிரா விளம்பிறையன்<br>ஒற்றைப் படவரவ மதுகொண் டரைக்கணிந்தான்<br>செற்றமில் சீரானைத் திருவாப்ப னூரானைப்<br>பற்று மனமுடையார் வினைபற் றறுப்பாரே. | முடியைச் சூழ்ந்துள்ள சடையின்மேல் வளராத இளம் பிறையைச் சூடியவனும், ஒருதலைப் படத்தோடு கூடிய பாம்பை இடையில் கட்டியுள்ளவனும், வெறுத்தற்கியலாத புகழானும் ஆகிய திருஆப்பனூர் இறைவனைப் பற்றும் உள்ளமுடையோர் வினைத்தொடர்ச்சி நீங்கப் பெறுவர். |
| **949.** குரவங் கமழ்குழலாள் குடிகொண்டு நின்றுவிண்ணோர்<br>விரவுந் திருமேனி விளங்கும் வளையெயிற்றின்<br>அரவ மணிந்தானை யணியாப்ப னூரானைப்<br>பரவு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. | குராமலர் மணம் கமழும் கூந்தலையுடைய உமையம்மை விளங்கும் திருமேனியோடு தேவர்கள் கூடி வணங்கத் திருஆப்பனூரில் விளங்கும் சிவபிரானைப் பரவும் மனம் உடையவர் வினைத் தொடர்ச்சி நீங்கப் பெறுவர். |

| | |
|---|---|
| 950. முருகு விரிகுழலார் மனங்கொ ளநங்கனைமுன்<br>பெரிது முனிந்துகந்தான் பெருமான் பெருங்காட்டின்<br>அரவ மணிந்தானை யணியாப்ப னூரானைப்<br>பரவு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. | மணம் கமழும் கூந்தலை உடைய மகளிரால் நினைக்கப் பெறும் காமனை, முற்காலத்தில் பெரிதும் சினந்து, பின் அவனுக்கு வாழ்வு தந்த பெருமானும், பெரிய காட்டகத்தே வாழும் அரவத்தை அணிந்தவனும், அழகிய ஆப்பனூரில் எழுந்தருளியவனுமாகிய இறைவனைப் பரவும் மனம் உடையவர் வினைத் தொடர்ச்சி நீங்கப் பெறுவர். |
| 951. பிணியும் பிறப்பறுப்பான் பெருமான் பெருங்காட்டில்<br>துணியி னுடைதாழச் சுடரேந்தி யாடுவான்<br>அணியும் புனலானை யணியாப்ப னூரானைப்<br>பணியு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. | உடலைப் பற்றிய நோய்களையும் உயிரைப் பற்றிய பிறவி நோயையும் அறுத்தருளும் பெருமானும், சுடுகாட்டகத்தே கோவண ஆடையோடு அழலேந்தி ஆடுபவனும், கங்கையை முடியில் அணிந்தவனும் ஆகிய அழகிய ஆப்பனூர் இறைவனைப் பணியும் மனம் உடையவர் வினைத் தொடர்ச்சி நீங்கப் பெறுவர். |
| 952. தகர மணியருவித் தடமால் வரைசிலையா<br>நகர மொருமூன்று நலங்குன்ற வென்றுகந்தான்<br>அகர முதலானை யணியாப்ப னூரானைப்<br>பகரு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. | தகரம் எனப்படும் மணப் பொருளும் மணிகளும் கலந்து விழும் அருவிகளை உடைய மிகப் பெரிய மலையை, வில்லாக வளைத்து, அசுரர்களின் நகரங்களாக விளங்கிய முப்புரங்களும் பொடிபடச் செய்து மகிழ்ந்தவனும், எல்லா எழுத்துக்களிலும் கலந்து நிற்கும் அகரம் போல எப்பொருள்களிலும் கலந்து நின்பவனும், அழகிய ஆப்பனூரில் எழுந்தருளியிருப்பவனுமாகிய சிவபிரான் புகழைக் கூறும் மனம் உடையவர்கள் வினை மாசுகளினின்று நீங்கப் பெறுவர். |
| 953. ஒடுந் திரிபுரங்க ளுடனே யுலந்தவியக்<br>காட திடமாகக் கனல்கொண்டு நின்றிரவில்<br>ஆடுந் தொழிலானை யணியாப்ப னூரானைப்<br>பாடு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. | பறந்து திரியும் முப்புரங்களையும் ஒரு நொடியில் அழித்து, பொடிபடச் செய்து, சுடுகாட்டைத் தனது இடமாகக் கொண்டு, கனல் ஏந்தி நின்று, இரவில் திருநடனம் புரிவதை தொழிலாகக் கொண்டவனும், அழகிய ஆப்பனூரில் விளங்குபவனுமாகிய இறைவனைப் பாடும் மனம் உடையவர் வினைத் தொடர்ச்சி நீங்கப் பெறுவர். |
| 954. இயலும் விடையேறி யெரிகொண் மழுவீசிக்<br>கய– னிணைக்கண்ணா ளொருபாற் கலந்தாட<br>இயலு மிசையானை யெழிலாப்ப னூரானைப்<br>பயிலு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. | மனம் போல் இயங்கும் விடைமிசை ஏறி, எரிதலைக் கொண்ட மழுவைச் சுழற்றிக் கொண்டு, கயல் போன்ற இரு விழிகளைக் கொண்ட உமையம்மை திருமேனியின் ஒருபால் இணைந்து மகிழ, இசைபாடி மகிழ்பவனாய் அழகிய ஆப்பனூரில் எழுந்தருளியுள்ள இறைவனைப் பாடுவதைத் தம் இயல்பாகக் கொண்ட மனம் உடையவர், வினை மாசு தீர்வர். |

| | |
|---|---|
| 955. கருக்கு மணிமிடறன் கதநாகக் கச்சையினன்<br>உருக்கு மடியவரை யொளிவெண் பிறைசூடி<br>அரக்கன் றிறலழித்தானணியாப்ப னூரானைப்<br>பருக்கு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. | கரிதான நீலமணி போன்ற கண்டத்தை உடையவனும், சினம் பொருந்திய பாம்பைக் கச்சையாக அணிந்தவனும், அடியவர்களை மனம் உருகச் செய்பவனும், ஒளிபொருந்திய வெண்பிறையைச் சூடியவனும், இராவணனின் வ–மையை அழித்தவனும் ஆகிய அழகிய ஆப்பனூரில் எழுந்தருளிய இறைவனை, சுவைக்கும் மனம் உடையவர் வினை மாசு நீங்கப் பெறுவர். |
| 956. கண்ணன் கடிக்கமல மலர்மே –னிதுறையும்<br>அண்ணற் களப்பரிதாய் நின்றங் கடியார்மேல்<br>எண்ணில் வினைகளைவா னெழிலாப்ப னூரானைப்<br>பண்ணின் னிசைபகர்வார் வினைபற் றறுப்பாரே. | திருமால், மணம் பொருந்திய தாமரை மலர் மேல் இனிதாய் உறையும் பிரமன் ஆகியோரால், அளத்தற்கரியவனாய் நின்றவனும், அடியவர் மேல் வரும் எண்ணற்ற வினைகள் பலவற்றையும் களைபவனும் ஆகிய அழகிய ஆப்பனூரில் விளங்கும் இறைவனைப் பண் பொருந்த இசை பாடிப் போற்றுவார் வினை மாசு நீங்கப் பெறுவர். |
| 957. செய்ய க–ங்கத்தார் சிறுதட் டுடையார்கள்<br>பொய்யர் புறங்கூறப் புரிந்த வடியாரை<br>ஐய மகற்றுவா னணியாப்ப னூரானைப்<br>பைய நினைந்தெழுவார் வினைபற் றறுப்பாரே. | சிவந்த காவி ஆடை உடுத்த புத்தர்களும், சிறு தடுக்கை ஆடையாக உடுத்துக் கொண்டு திரியும் சமணர்களும் பொய் பேசிப் புறம் பேச, தன்னை விரும்பிய அடியவர்களின் விபரீத ஞானத்தைப் போக்கி, மெய்யுணர்வு நல்கும் அழகிய ஆப்பனூரில் விளங்கும் இறைவனை மெல்ல உள்குவார்களின் வினை மாசுகள் நீங்கும். |
| 958. அந்தண் புனல்வைகை யணியாப்ப னூர்மேய<br>சந்த மலர்க்கொன்றை சடைமே லுடையானை<br>நந்தி யடிபரவு நலஞான சம்பந்தன்<br>சந்த மிவைவல்லார் தடுமாற் றறுப்பாரே. | அழகிய குளிர்ந்த நீர் நிறைந்த வைகைக் கரையில் விளங்கும் அழகிய ஆப்பனூரில் எழுந்தருளிய அழகிய கொன்றை மலர் மாலையைச் சடைமேல் அணிந்துள்ள இறைவனை, சிவன் திருவடிகளையே பரவும் நல்ல ஞானசம்பந்தன் பாடிய சந்த இசையோடு கூடிய இத்திருப்பதிகப் பாடல்களை ஓதவல்லவர் நிலையான மெய்யறிவு பெறுவார்கள். |

## 89. திருஎருக்கத்தம்புலியூர்

**பண் : குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 89**

| | |
|---|---|
| 959. படையார் தருபூதப் பகடா ருரிபோர்வை<br>உடையா னுமையோடு முடனா யிடுகங்கைச்<br>சடையா னெருக்கத்தம் பு–யூர்த் தகுகோயில்<br>விடையா னடியேத்த மேவா வினைதானே. | படைகளாக அமைந்த பூத கணங்களை உடையவனும், யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டவனும், உமை யம்மையோடு உடனாய் விளங்குபவனும், வந்து பொருந்திய கங்கையை ஏற்ற சடையை உடையவனும் ஆகிய எருக்கத்தம்பு–யூரில் விளங்கும் தகுதி வாய்ந்த கோயி–ல் எழுந்தருளிய விடை ஏற்றை உடைய பெருமான் திருவடிகளை ஏத்துவாரை, வினைகள் வந்து சாரா. |

| | |
|---|---|
| 960. இலையார் தருசூலப் படையெம் பெருமானாய்<br>நிலையார் மதின்மூன்று நீறாய் விழவெய்த<br>சிலையா னெருக்கத்தம் புூயூர்த் திகழ்கோயில்<br>கலையா னடியேத்தக் கருதா வினைதானே. | இலை வடிவமாக அமைந்த சூலப்படையை உடையவனும், எம் பெருமானும், நிலைபெற்ற முப்புரங்களையும் நீறாய்ப் பொடிபடுமாறு கணை எய்த வில்லை உடையவனும், எருக்கத் தம்பு–யூரில் விளங்கும் கோயி–ல் மேவியிருப்பவனும் ஆகிய கலைகளின் வடிவான சிவபிரானின் திருவடிகளை ஏத்தி வாழ்வோரை, வினைகள் கருதா. |
| 961. விண்ணோர் பெருமானே விகிர்தா விடையூர்தீ<br>பெண்ணா ண–யாகும் பித்தா பிறைசூடீ<br>எண்ணா ரெருக்கத்தம் பு–யூ ருறைகின்ற<br>அண்ணா வெனவல்லார்க் கடையா வினைதானே. | விண்ணவர் தலைவனே, வேறுபட்ட வடிவும் பண்பும் உடையவனே, விடைமீது ஏறி வருபவனே! பெண், ஆண், அ– என்னும் திணை பால் பாகுபாடுகளைக் கடந்துள்ளவனே, பித்தனே, பிறை சூடியவனே, எல்லோராலும் எண்ணத்தகும் எருக்கத்தம் பு–யூரில் உறைகின்ற தலைவனே என்றுரைத்துப் போற்ற வல்லவரை, வினைகள் அடையா. |
| 962. அரையார் தருநாக மணிவா னலர்மாலை<br>விரையார் தருகொன்றை யுடையான் விடையேறி<br>வரையா னெருக்கத்தம் பு–யூர் மகிழ்கின்ற<br>திரையார் சடையானைச் சேரத் திருவாமே | இடையிலே பாம்பைப் பொருந்துமாறு அணிந்துள்ளவனும், மணம் கமழும் கொன்றை மலர் மாலையை அணிந்துள்ளவனும், விடைமீது ஏறி வருபவனும், கயிலை மலையைத் தனக்குரிய இடமாகக் கொண்டவனும், எருக்கத்தம்பு–யூரில் மகிழ்ந்து உறைபனும் ஆகிய அலைகள் வீசும் கங்கை நதியை, சடைமிசைத் தரித்த சிவபிரானைச் சேர்வோர்க்குச் செல்வங்கள் வந்து சேரும். |
| 963. வீறார் முலையாளைப் பாக மிகவைத்துச்<br>சீறா வருகாலன் சினத்தை யழிவித்தான்<br>ஏறா னெருக்கத்தம் பு–யூ ரிறையானை<br>வேறா நினைவாரை விரும்பா வினைதானே. | வேறொன்றற்கில்லா அழகினை உடைய தனங்களைக் கொண்ட உமையம்மையை, இடப்பாகமாக சிறப்புடன் வைத்துக் கொண்டருளியவனும், சீறி வந்த காலனின் சினம் அடங்கச் செய்தவனும், இடப ஊர்தியை உடையவனும், எருக்கத்தம்பு–யூரில் எழுந்தருளி யுள்ள இறைவனும் ஆகிய சிவபிரானைத் தனித்திருந்து தியானிப்பவரை வினைகள் விரும்பா. |
| 964. நகுவெண் டலையேந்தி நானாவிதம் பாடிப்<br>புகுவா னயம்பெய்யப் பு–த்தோல் பியற்கிட்டுத்<br>தகுவா னெருக்கத்தம் பு–யூர்த் தகைந்தங்கே<br>தொகுவான் கழலேத்தத் தொடரா வினைதானே. | சிரிக்கும் வெள்ளிய தலையோட்டைக் கையில் ஏந்திப் பலவிதமாகப் பாடிக் கொண்டு மகளிர் இடும் பிச்சையை ஏற்கப் புகுபவனாய்ப் பு–த்தோலைத் தோளில் இட்டுக்கொண்டு தகுதி வாய்ந்தவனாய் எருக்கத்தம்பு–யூரில் தங்கி அங்கே நிலைத்திருப்பவனாகிய இறைவன் கழல்களை ஏத்த வினைகள் தொடரா. |

| | |
|---|---|
| **965.** ஆவா வெனவரக்க னலற வடர்த்திட்டுத்<br>தேவா வெனவருளார் செல்வங் கொடுத்திட்ட<br>கோவே யெருக்கத்தம் பு–யூர் மிகுகோயில்<br>தேவே யெனவல்லல் தீர்தல் திடமாமே. | ஆஆ என்ற இரக்கக் குறிப்போடு இராவணன் அலறுமாறு அவனை அடர்த்து, பின் தேவா என அவன் வேண்ட அருள் நிறைந்த செல்வங்கள் பலவற்றை வழங்கியருளிய தலைவனே, எருக்கத்தம்பு–யூரில் விளங்கும் சிறப்புமிக்க கோயி–ல் எழுந்தருளும் தேவனே என்று போற்ற, நம் அல்லல்கள் தீர்தல் உறுதியாகும். |
| **966.** மறையா னெடுமால்காண் பரியான் மழுவேந்தி<br>நிறையா மதிசூடி நிகழ்முத் தின்தொத்தே<br>இறையா னெருக்கத்தம் பு–யூ ரிடங்கொண்ட<br>கறையார் மிடற்றானைக் கருதக் கெடும்வினையே. | வேதங்களை ஓதும் நான்முகனும், நெடுமாலும் காணுதற்கு அரியவனே, மழுவைக் கையில் ஏந்தியவனே, கலை நிறையாத பிறை மதியைச் சூடியவனே, முத்துக்களின் கொத்துப் போன்ற இறையோனே என்று போற்றி, எருக்கத் தம்பு–யூரை இடமாகக் கொண்ட கறைமிடற்று அண்ணலை நினைந்தால், வினை கெடும். |
| **967.** புத்த ரருகர்தம் பொய்கள் புறம்போக்கிச்<br>சுத்தி தரித்துறையுஞ் சோதி யுமையோடும்<br>நித்த னெருக்கத்தம் பு–யூர் நிகழ்வாய<br>அத்த னறவன்றன் னடியே யடைவோமே. | புத்தர் சமணர் ஆகியோர்தம் பொய்யுரைகளை விலக்கித் தூய்மையைத் தழுவி விளங்கும் ஒளி வடிவினனாய், உமையம்மையாருடன் நித்தம் மணாளனாக விளங்குவோனாய், எருக்கத் தம்பு–யூரில் விளங்கிக் கொண்டிருக்கும் அறவடிவினனாகிய தலைவன் அடிகளை, நாம் அடைவோம். |
| **968.** ஏரா ரெருக்கத்தம் பு–யூ ருறைவானைச்<br>சீரார் திகழ்காழித் திருவார் சம்பந்தன்<br>ஆரா வருந்தமிழ் மாலையிவை வல்லார்<br>பாரா ரவரேத்தப் பதிவா னுறைவாரே. | அழகிய எருக்கத்தம்பு–யூரில் விளங்கும் இறைவனை, சீர்மிகு காழிப்பதியில் தோன்றிய திருவார் சம்பந்தன் அருளிய சுவை குன்றாத அருந்தமிழ் மாலையாகிய இத்திருப்பதிகப் பாடல்களை ஓதுபவர்கள் உலகவர் ஏத்த வானகம் எய்துவர். |

## 90. திருப்பிரமபுரம்

**பண் : குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 90**

| | |
|---|---|
| **969.** அரனை யுள்குவீர், பிரம னூருளெம்<br>பரனையே மனம், பரவி யுய்ம்மினே. | சிவபிரானைச் சிந்தித்துப் போற்ற விரும்பும் அன்பர்களே, பிரமனூரில் விளங்கும் பரனையே மனத்தால் பரவிப் போற்றி உய்வீர்களாக. |
| **970.** காண வுள்குவீர், வேணு நற்புரத்<br>தாணு வின்கழல், பேணி யுய்ம்மினே. | சிவபிரானைக் கண்டு தொழ எண்ணும் அன்பர்களே, வேணுபுரத்தில் விளங்கும் தாணுவின் திருவடிகளைப் பேணி உய்வீர்களாக. |
| **971.** நாத னென்பிர்காள், காத லொண்புகல்<br>ஆதி பாதமே, ஓதியுய்ம்மினே. | சிவபெருமானை எம் தலைவன் எனக் கூறும் அன்பர்களே! அன்போடு ஒளி விளங்கும் புக–ப் பதியில் விளங்கும் ஆதியின் திருவடிப் பெருமைகளை ஓதி உய்வீர்களாக. |

| | |
|---|---|
| 972. அங்க மாதுசேர், பங்க மாயவன்<br>வெங்குரு மன்னும், எங்க ளீசனே. | அருள் வழங்கும் குறிப்போடு உமையம்மையைத் தனது திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டுள்ளவன், வெங்குருவில் நிலையாக உள்ள எங்கள் ஈசன் ஆவான். |
| 973. வாணி லாச்சடைத், தோணி வண்புரத்<br>தாணி நற்பொனைக், காணு மின்களே. | ஒளி பொருந்திய, பிறைமதி பொருந்திய சடைமுடி உடையவனாய்த் தோணிபுரத்தில் விளங்கும் ஆணிப் பொன் போன்ற இறைவனைக் கண்டு தொழுவீர்களாக. |
| 974. பாந்த ளார்சடைப், பூந்த ராய்மன்னும்<br>ஏந்து கொங்கையாள், வேந்த னென்பரே. | பாம்பு பொருந்திய சடைமுடியோடு பூந்தராயில் விளங்கும் பெருமானை, ஏந்திய தனபாரங்களை உடைய உமையம்மையின் கணவன் என்று கூறுவார்கள். |
| 975. கரிய கண்டனைச், சிரபு ரத்துளெம்<br>அரசை நாடொறும், பரவி யுய்ம்மினே. | கருமை பொருந்திய கண்டத்தை உடையவனாய்ச், சிரபுரத்துள் எழுந்தருளிய அரசனை நாள்தோறும் பரவி உய்வீர்களாக. |
| 976. நறவ மார்பொழிற், புறவ நற்பதி<br>இறைவ னாமமே, மறவ னெஞ்சமே. | தேன் பொருந்திய சோலைகளை உடைய புறவமாகிய நல்ல ஊரில் எழுந்தருளிய இறைவன் திருநாமங்களை, நெஞ்சமே! நீ மறவாதே. |
| 977. தென்றி லரக்கனைக், குன்றிற் சண்பைமன்<br>அன்று நெரித்தவா, நின்று நினைமினே. | தென் திசையிலுள்ள இலங்கை மன்னனாம் இராவணனாகிய அரக்கனைச் சண்பை மன்னனாகிய சிவபிரான் கயிலை மலையிடைப் படுத்து அன்று நெரித்த வரலாற்றை நின்று நினைத்துப் போற்றுவீர்களாக. |
| 978. அயனு மாலுமாய், முயலுங் காழியான்<br>பெயல்வை யெய்திநின், றியலு முள்ளமே. | பிரமனும் திருமாலும் அடிமுடி தேடி முயலும் பரம்பொருளாகிய சீகாழிப் பதியில் விளங்கும் இறைவனது கருணைப் பொழிவைச் சார்ந்து நின்று நினைக்கும் என் உள்ளம். |
| 979. தேர ரமணரைச், சேர்வில் கொச்சைமன்<br>நேரில் கழனினைந், தோரு முள்ளமே. | புத்தர், சமணர் ஆகியோரை அணுகாத, கொச்சை வயத்து மன்னனாகிய சிவபிரானின் ஒப்பற்ற திருவடிகளை நினைந்து தியானிக்கும் என் உள்ளம். |
| 980. தொழும னத்தவர், கழும லத்துறை<br>பழுதில் சம்பந்தன், மொழிகள் பத்துமே. | கழுமலத்தில் உறையும் குற்றமற்ற ஞானசம்பந்தன் அருளிய மொழிகளாகிய, இத்திருப்பதிகப் பாடல்களை ஓதி, பெருமானைத் தொழும் மனத்தவர் ஆகுக. |

## 91. திருவாரூர்

பண் : குறிஞ்சி — முதல் திருமுறை பதிக எண் : 91

| | |
|---|---|
| 981. சித்தந் தெளிவீர்காள், அத்த னாரூரைப் பத்தி மலர்தூவ, முத்தி யாகுமே. | சித்தம் மாசு நீங்கித் தெளிவடைய விரும்புகின்ற வர்களே, அனைவர்க்கும் தலைவனாய் ஆரூரில் எழுந்தருளியிருக்கும் பெருமானைப் பக்தியோடு மலர் தூவி வாழ்த்துங்கள். சித்தத் தெளிவோடு முக்தி கிடைக்கும். |
| 982. பிறவி யறுப்பீர்காள், அறவ னாரூரை மறவா தேத்துமின், துறவி யாகுமே. | பிறப்பினை அறுத்துக் கொள்ள விரும்புபவர்களே, அறவடிவினனாகத் திருவாரூரில் எழுந்தருளி யிருக்கும் இறைவனை மறவாது ஏத்துங்கள் பிறப்பிற்குக் காரணமான ஆசைகள் நீங்கித் துறவு நிலை எய்தலாம். |
| 983. துன்பந் துடைப்பீர்காள், அன்ப னணியாரூர் நன்பொன் மலர்தூவ, இன்ப மாகுமே. | துன்பங்களைத் துடைத்துக் கொள்ள விரும்புகின்றவர்களே, அழகிய ஆரூரில் எழுந்தருளிய அன்பு வடிவான இறைவனை நல்ல பொ–வுடைய மலர்களைத் தூவி வழிபடுங்கள். துன்பம் நீங்குவதோடு இன்பம் உளதாம். |
| 984. உய்ய லுறுவீர்காள், ஐய னாரூரைக் கையி னாற்றொழ, நையும் வினைதானே. | உலக வாழ்க்கையி–ருந்து கடைத்தேற விரும்புகின்றவர்களே, ஆரூரில் எழுந்தருளிய தலைவனாகிய இறைவனைக் கைகளைக் கூப்பி வணங்குங்கள். உங்கள் வினைகள் மெ–வடையும். உய்தி பெறலாம். |
| 985. பிண்ட மறுப்பீர்காள், அண்ட னாரூரைக் கண்டு மலர்தூவ, விண்டு வினைபோமே. | மீண்டும் பிறவா நிலையைப் பெற விரும்பு கின்றவர்களே, ஆரூரில் எழுந்தருளிய அனைத்துலக நாயகனாகிய இறைவனைச் சென்று கண்டு மலர் தூவி வழிபடுங்கள். பிறப்புக்குக் காரணமான வினைகள் விண்டுபோம். பிறவா நிலை எய்தலாம். |
| 986. பாச மறுப்பீர்காள், ஈச னணியாரூர் வாச மலர்தூவ, நேச மாகுமே. | உயிரோடு பிணைந்துள்ள பாசம் அகல வேண்டுமென விரும்புகின்றவர்களே, அழகிய ஆரூரில் எழுந்தருளியுள்ள ஈசனை மணம் பொருந்திய மலர்களைத் தூவி வழிபடுங்கள். உம்பால் அவனது நேசம் உளதாகும். பாசம் அகலும். |
| 987. வெய்ய வினைதீர, ஐய னணியாரூர் செய்ய மலர்தூவ, வைய முமதாமே. | கொடிய வினைகள் தீர வேண்டுமென விரும்புகின்றவர்களே, அழகிய ஆரூரில் எழுந்தருளியுள்ள அனைத்துயிர்க்கும் தலைவனாகிய இறைவனைச் செம்மையான மலர்களைத் தூவி வழிபடுங்கள். உலகம் உம்முடையதாகும். |

| | |
|---|---|
| 988. அரக்க னாண்மையை நெருக்கி னானாரூர்<br>கரத்தி னாற்றொழத், திருத்த மாகுமே. | அரக்கர் தலைவனாகிய இராவணனின் ஆற்றலைக் கால்விரல் ஒன்றால் நெருக்கி அழித்து ஆரூரில் எழுந்தருளிய இறைவனைக் கைகளால் தொழுவீர்களாக. உமது மனக்கோணல் நீங்கும். திருத்தம் பெறலாம். |
| 989. துள்ளு மிருவர்க்கும், வள்ள லாரூரை<br>உள்ளு மவர்தம்மேல், விள்ளும் வினைதானே. | செருக்குற்றுத் துள்ளிய திருமால் பிரமரின் செருக்கு அடக்கி அருள் செய்த, ஆரூரில் எழுந்தருளிய வள்ளற் பெருமானை மனத்தால் நினைத்து வழிபட வல்லவர்களின் வினைகள் நீங்கும். |
| 990. கடுக்கொள் சீவரை, அடக்கி னானாரூர்<br>எடுத்து வாழ்த்துவார், விடுப்பர் வேட்கையே. | கடுக்காயைத் தின்று துவர் ஆடை போர்த்துத் திரியும் சமண புத்தர்களை அடக்கியவனாகிய ஆரூர் இறைவனே பரம்பொருள் எனச் சிறப்பித்து வாழ்த்துவார், வேட்கை என்னும் ஆசையை விடுப்பர். |
| 991. சீரூர் சம்பந்தன், ஆரூ ரைச்சொன்ன<br>பாரூர் பாடலார், பேரா ரின்பமே. | சிறப்புப் பொருந்திய ஞானசம்பந்தன் ஆரூர் இறைவன்மீது பாடிய உலகம் முழுதும் பரவிய பாடல்களைப் பாடி வழிபட வல்லவர் இன்பத்தினின்று நீங்கார். |

## 92. திருவீழிமிழலை

**பண் : குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 92**

| | |
|---|---|
| 992. வாசி தீரவே, காசு நல்குவீர்<br>மாசின் மிழலையீர், ஏச –ல்லையே. | குற்றம் அற்ற வீழிமிழலையில் எழுந்தருளியுள்ள இறைவரே, அடியேனுக்கு வழங்கியருளும் காசில் உள்ள உயர்வு தாழ்வு நீங்குமாறு செய்து அக்காசினை நல்குக. அதனால் உமக்குப் பழிப்பு இல்லை. |
| 993. இறைவ ராயினீர், மறைகொண் மிழலையீர்<br>கறைகொள் காசினை, முறைமை நல்குமே. | எல்லோருக்கும் இறைவராக விளங்கும் பெருமானீரே, வேதங்களின் ஒ– நிறைந்த திருவீழிமிழலையில் எழுந்தருளியிருப்பவரே, கறை படிந்ததாக அளிக்கப்படும் காசில் உள்ள அக்கறையை நீக்கி முறையாக அளித்தருளுக. |
| 994. செய்ய மேனியீர், மெய்கொண் மிழலையீர்<br>பைகொ ளரவினீர், உய்ய நல்குமே. | சிவந்த திருமேனியை உடையவரே, மெய்ம்மையாளர் வாழும் திருவீழிமிழலையில் எழுந்தருளியிருப்பவரே, படம் எடுக்கும் பாம்பை அணிகலனாகப் பூண்டுள்ளவரே, அடியேங்கள் உய்யுமாறு வாசியில்லாததாகக் காசு அருளுக. |

| | |
|---|---|
| 995. நீறு பூசினீர், ஏற தேறினீர்<br>கூறு மிழலையீர், பேறு மருளுமே. | திருவெண்ணீற்றை அணிந்தவரே, ஆனேற்றில் ஏறி வருபவரே, பலராலும் புகழப்பெறும் திருவீழிமிழலையில் எழுந்தருளியவரே, காசு அருளுவதோடு எமக்கு முத்திப் பேறும் அருளுவீராக. |
| 996. காமன் வேவவோர், தூமக் கண்ணினீர்<br>நாம மிழலையீர், சேம நல்குமே. | காமனை எரித்து அழியுமாறு செய்த புகை பொருந்திய அழல் விழியை உடையவரே! புகழ் பொருந்திய திருவீழிமிழலையில் எழுந்தருளியவரே! எமக்குச் சேமத்தை அருளுவீராக. |
| 997. பிணிகொள் சடையினீர், மணிகொண் மிடறினீர்<br>அணிகொண் மிழலையீர், பணிகொண் டருளுமே. | கட்டப்பட்ட சடையை உடையவரே, நீலமணி போன்ற கண்டத்தை உடையவரே, அழகு பொருந்திய திருவீழிமிழலையில் எழுந்தருளி யிருப்பவரே, எம்மைப் பணி கொண்டு அருளுவீராக. |
| 998. மங்கை பங்கினீர், துங்க மிழலையீர்<br>கங்கை முடியினீர், சங்கை தவிர்மினே. | உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவரே, உயர்வுடைய திருவீழிமிழலையில் உறைபவரே, கங்கை சூடிய திருமுடியை உடையவரே, எங்களது ஐயுறவைப் போக்கியருளுக. |
| 999. அரக்க னெரிதர, இரக்க மெய்தினீர்<br>பரக்கு மிழலையீர், கரக்கை தவிர்மினே. | இராவணன் கயிலை மலையின் கீழ் அகப்பட்டு நெரிய இரக்கம் காட்டியருளியவரே, எங்கும் பரவிய புகழ் உடைய திருவீழிமிழலையில் உறைபவரே, எமக்கு அளிக்கும் காசில் உள்ள குறையைப் போக்கியருளுக. |
| 1000. அயனு மாலுமாய், முயலு முடியினீர்<br>இயலு மிழலையீர், பயனு மருளுமே. | நான்முகனும் திருமாலும் அடிமுடி காண முயலும் பேருருவம் கொண்டருளியவரே, எல்லோரும் எளிதில் வழிபட இயலுமாறு திருவீழிமிழலையில் எழுந்தருளியவரே, எமக்கு வீட்டின்பத்தையும் அருளுவீராக. |
| 1001. பறிகொள் தலையினார், அறிவ தறிகிலார்<br>வெறிகொள் மிழலையீர், பிறிவ தரியதே. | ஒன்றொன்றாக மயிர் பறித்த தலையினை உடைய சமணர்கள் அறிய வேண்டுபவராகிய உம்மை அறியாது வாழ்கின்றனர். மணம் கமழும் திருவீழிமிழலையில் உறைபவரே, அடியேங்கள் உம்மைப் பிரிந்து வாழ்தல் இயலாது. |
| 1002. காழி மாநகர், வாழி சம்பந்தன்<br>வீழி மிழலைமேல், தாழு மொழிகளே. | இத்திருப்பதிகம் சீகாழிப் பதியாகிய பெரிய நகருள் தோன்றி வாழும் ஞானசம்பந்தன் திருவீழிமிழலை இறைவர் மேல் தாழ்ந்து பணிந்து போற்றிய மொழிகளைக் கொண்டதாகும். |

## 93. திருமுதுகுன்றம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 93

| | |
|---|---|
| 1003. நின்று மலர்தூவி, இன்று முதுகுன்றை<br>நன்று மேத்துவீர்க், கென்று மின்பமே. | இன்றே திருமுதுகுன்றம் சென்று, அங்குள்ள இறைவரை மலரால் அருச்சித்து நின்று நல்ல முறையில் துதிப்பீராயின் உமக்கு எக்காலத்தும் இன்பம் உளதாம். |
| 1004. அத்தன் முதுகுன்றைப், பத்தி யாகிநீர்<br>நித்த மேத்துவீர்க், குய்த்தல் செல்வமே. | நீர் திருமுதுகுன்றத்துத் தலைவனாய் விளங்கும் இறைவன்மீது பக்தி செலுத்தி நாள்தோறும் வழிபட்டு வருவீராயின் உமக்குச் செல்வம் பெருகும். |
| 1005. ஐயன் முதுகுன்றைப், பொய்கள் கெடநின்று<br>கைகள் கூப்புவீர், வைய முமதாமே. | திருமுதுகுன்றத்துள் விளங்கும் தலைவனாகிய சிவபிரானை நீர் பலவகையான பொய்கள் இன்றி மெய்மையோடு நின்று கைகளைக் கூப்பி வழிபடுவீர்களாயின் உலகம் உம்முடையதாகும். |
| 1006. ஈசன் முதுகுன்றை, நேச மாகிநீர்<br>வாச மலர்தூவப், பாச வினைபோமே. | திருமுதுகுன்றத்து ஈசனை நீர் அன்போடு மணம் பொருந்திய மலர்களால் அருச்சித்துவரின் உம் பாசங்களும் அவற்றால் விளைந்த வினைகளும் நீங்கும். |
| 1007. மணியார் முதுகுன்றைப், பணிவா ரவர்கண்டீர்<br>பிணியா யினகெட்டுத், தணிவா ருலகிலே. | அழகிய திருமுதுகுன்றத்து இறைவரைப் பணிபவர்கள், பிணிகளி–ருந்து விடுபட்டு உலகில் அமைதியோடு வாழ்வார்கள். |
| 1008. மொய்யார் முதுகுன்றில், ஐயா வெனவல்லார்<br>பொய்யா ரிரவோர்க்குச், செய்யா ளணியாளே. | அன்பர்கள் நெருங்கித் திரண்டுள்ள திருமுதுகுன்றத்து இறைவனை, நீர், ஐயா என அன்போடு அழைத்துத் துதிக்க வல்லீர்களாயின் இரப்பவர்க்கு இல்லை என்னாத நிலையில் திருமகள் நிறை செல்வத்தோடு உமக்கு அணியள் ஆவாள். |
| 1009. விடையான் முதுகுன்றை, இடையா தேத்துவார்<br>படையா யினசூழ, உடையா ருலகமே. | திருமுதுகுன்றத்து விடை ஊர்தியை உடைய சிவபிரானை இடையீடுபடாது ஏத்துகின்றவர், படைகள் பல சூழ உலகத்தை ஆட்சிசெய்யும் உயர்வை உடையவராவர். |
| 1010. பத்துத் தலையோனைக், கத்த விரலூன்றும்<br>அத்தன் முதுகுன்றை, மொய்த்துப் பணிமினே. | பத்துத் தலைகளை உடைய இராவணனை அவன் கதறி அழுமாறு கால் விரலை ஊன்றி அடர்த்த திருமுதுகுன்றத்துத் தலைவனாகிய சிவபிரானை நெருங்கிச் சென்று பணிவீராக. |
| 1011. இருவ ரறியாத, ஒருவன் முதுகுன்றை<br>உருகி நினைவார்கள், பெருகி நிகழ்வோரே. | திருமால் பிரமர்களாகிய இருவரும் அறிய வொண்ணாத திருமுதுகுன்றத்தில் விளங்கும் பெருமானை மனம் உருகி நினைப்பவர் பெருக்கத்தோடு வாழ்வர். |

| | | |
|---|---|---|
| 1012. | தேர ரமணரும், சேரும் வகையில்லான்<br>நேரில் முதுகுன்றை, நீர்நின் றுள்குமே. | புத்தர், சமணர் ஆகியோர்க்குத் தன்னை வந்தடையும் புண்ணியத்தை அளிக்காத சிவபெருமானுடைய திருமுதுகுன்றத்தை வாய்ப்பு நேரின் நீர் நின்று உள்குவீராக. |
| 1013. | நின்று முதுகுன்றை, நன்று சம்பந்தன்<br>ஒன்று முரைவல்லார், என்று முயர்வோரே. | திருமுதுகுன்றம் சென்று நின்று பெருமை உடையவனாகிய ஞானசம்பந்தன் ஒன்றி உரைத்த இப்பதிகப் பாடல்களை ஓத வல்லவர் எக்காலத்தும் உயர்வு பெறுவர். |

## 94. திருஆலவாய்

**பண் : குறிஞ்சி** — **முதல் திருமுறை பதிக எண் : 94**

| | | |
|---|---|---|
| 1014. | நீல மாமிடற், றால வாயிலான்<br>பால தாயினார், ஞால மாள்வரே. | நீலநிறம் பொருந்திய கண்டத்தினை உடைய திருஆலவாய் இறைவனைச் சென்று தொழுது மனத்தால் அவன் அருகில் இருப்பதாக உணர்பவர்கள், இவ்வுலகை ஆள்வர். |
| 1015. | ஞால மேழுமாம், ஆல வாயிலார்<br>சீல மேசொலீர், காலன் வீடவே. | எமபயம் இன்றி வாழ, ஏழுலகங்களிலும் எழுந்தருளியிருக்கும் ஆலவாய் இறைவனது மெய்ப்புகழையே உரையால் போற்றி வருவீர்களாக. |
| 1016. | ஆல நீழலார், ஆல வாயிலார்<br>கால காலனார், பால தாமினே. | கல்லால மர நிழ-ல் வீற்றிருப்பவரும், காலனுக்குக் காலனாய் அவனை அழித்தருளிய பெருவீரரும் ஆகிய ஆலவாய் இறைவரை மனத்தால் அணுகியிருப்பீர்களாக. |
| 1017. | அந்த மில்புகழ், எந்தை யாலவாய்<br>பந்தி யார்கழல், சிந்தை செய்ம்மினே. | ஆலவாய்க் கோயி-லுள்ள எந்தையாகிய சிவபெருமானுடைய அழிவில்லாத புகழுக்கு இருப்பிடமான திருவடிகளை மனங் கொள்ளுங்கள். |
| 1018. | ஆட லேற்றினான், கூட லாலவாய்<br>பாடி யேமனம், நாடி வாழ்மினே. | வெற்றியோடு கூடிய ஆனேற்றினானது நான்மாடக்கூடல் என்னும் ஆலவாயின் புகழைப் பாடி மனத்தால் அவ்விறைவனையே நாடி வாழ்வீர்களாக. |
| 1019. | அண்ண லாலவாய், நண்ணி னான்றனை<br>எண்ணி யேதொழத், திண்ண மின்பமே. | தலைமையாளனும் ஆலவாய் என்னும் மதுரைப் பதியின் கோயிலைப் பொருந்தியிருப்பவனுமாகிய சோமசுந்தரப் பெருமானையே எண்ணித் தொழுதுவரின் இன்பம் பெறுவது திண்ணமாகும். |
| 1020. | அம்பொ னாலவாய், நம்ப னார்கழல்<br>நம்பி வாழ்பவர், துன்பம் வீடுமே. | அழகிய பொன்மயமான ஆலவாய்த் திருக் கோயி-ல் விளங்கும் இறைவனுடைய திருவடிகளே நமக்குச் சார்வாகும் என நம்பி வாழ்பவரின் துன்பம் நீங்கும். |

| | |
|---|---|
| 1021. அரக்க னார்வ–, நெருக்க னாலவாய்<br>உரைக்கு முள்ளத்தார்க், கிரக்க முண்மையே. | அரக்கனாகிய பெருவ–படைத்த இராவணனைக் கால் விரலால் நெரித்தருளிய ஆலவாய் அரன் புகழை உரைக்கும் உள்ளத்தார்க்கு அவனது கருணை உளதாகும். |
| 1022. அருவ னாலவாய், மருவி னான்றனை<br>இருவ ரேத்தநின், றுருவ மோங்குமே. | அருவனாய் விளங்கும் இறைவன் திருவால வாயில் திருமால் பிரமர் ஆகிய இருவர் போற்றும் உருவனாய் மருவி ஓங்கி நிற்கின்றான். |
| 1023. ஆர நாகமாம், சீர னாலவாய்த்<br>தேர மண்செற்ற, வீர னென்பரே. | பாம்பாகிய ஆரத்தை அணிந்தவனாய், ஆலவாயில் பெரும் புகழாளனாய் விளங்கும் இறைவன், புத்தரையும் சமணரையும் அழித்த பெருவீரன் ஆவான் என்று அடியவர்கள் அவனைப் புகழ்ந்து போற்றுவார்கள். |
| 1024. அடிக ளாலவாய்ப், படிகொள் சம்பந்தன்<br>முடிவி –ன்றமிழ், செடிக ணீக்குமே. | ஆலவாயில் எழுந்தருளிய அடிகளாகிய இறைவனது திருவருளில் தோய்ந்த ஞானசம்பந்தனின் அழிவற்ற இனிய இத்தமிழ் மாலை நமக்கு வரும் வினைகளைப் போக்குவதாகும். |

## 95. திருவிடைமருதூர்

பண் : குறிஞ்சி — முதல் திருமுறை பதிக எண் : 95

| | |
|---|---|
| 1025. தோடொர் காதினன், பாடு மறையினன்<br>காடு பேணிநின், றாடு மருதனே. | திருவிடைமருதூர் இறைவன் தோட்டை, இடத் திருச்செவியில் அணிந்தவனாய் நான்கு வேதங்களைப் பாடுபவனாய், சுடுகாட்டை விரும்பி அதன்கண் நின்று ஆடுகின்றவனாவான். |
| 1026. கருதார் புரமெய்வர், எருதே யினிதூர்வர்<br>மருதே யிடமாகும், விருதாம் வினைதீர்ப்பே. | தம்மைக் கருதாதவராகிய அசுரர்களின் முப்புரங்களை எய்து அழித்தவரும், எருதை வாகனமாகக் கொண்டு இனிதாக ஊர்பவரும் ஆகிய இறைவர்க்குத் திருவிடை மருதூரே விரும்பி உறையும் இடமாகும். அவரைத் தொழுதால் புகழ் சேரும். வினைகள் தீர்தலை உடையனவாகும். |
| 1027. எண்ணு மடியார்கள், அண்ணன் மருதரைப்<br>பண்ணின் மொழிசொல்ல, விண்ணுந் தமதாமே. | மனத்தால் எண்ணி வழிபடும் அன்பர்கள் தலைமையாளராய் விளங்கும் மருதவாணரைப் பண்ணிசையோடு அவர்தம் புகழைப் போற்ற, விண்ணுலகமும் அவர்கள் வசமாகும். |
| 1028. விரியார் சடைமேனி, எரியார் மருதரைத்<br>தரியா தேத்துவார், பெரியா ருலகிலே. | விரிந்த சடைமுடியை உடையவரும், எரி போன்ற சிவந்த மேனியருமாகிய மருதவாணரைத் தாமதியாது துதிப்பவர் உலகில் பெரியவர் எனப் போற்றப்படுவர். |

| | |
|---|---|
| 1029. பந்த விடையேறும், எந்தை மருதரைச்<br>சிந்தை செய்பவர், புந்தி நல்லரே. | கட்டுத்தறியில் கட்டத்தக்க விடையை ஊர்ந்து வரும் எந்தையாராகிய மருதவாணரை மனத்தால் தியானிப்பவர்கள் அறிவால் மேம்பட்டவராவர். |
| 1030. கழலுஞ் சிலம்பார்க்கும், எழிலார் மருதரைத்<br>தொழலே பேணுவார்க், குழலும் வினைபோமே. | ஒரு கா–ல் கழலும், பிறிதொரு கா–ல் சிலம்பும் ஒ–க்கும் உமைபாகராகிய அழகிய மருதவாணரை விரும்பித் தொழுவதை நியமமாகக் கொண்டவர்க்கு வருத்துதற்கு உரிய வினைகள் துன்புறுத்தா; அகலும். |
| 1031. பிறையார் சடையண்ணல், மறையார் மருதரை<br>நிறையால் நினைபவர், குறையா ரின்பமே. | பிறை பொருந்திய சடைமுடியினை உடைய தலைமையாளரான வேதங்களை அருளிய மருதவாணரை நிறைந்த மனத்தால் நினைப்பவர் இன்பம் குறையப் பெறார். |
| 1032. எடுத்தான் புயந்தன்னை, அடுத்தார் மருதரைத்<br>தொடுத்தார் மலர்சூட்ட, விடுத்தார் வேட்கையே. | கயிலை மலையை எடுத்த இராவணனின் தோள்களை நெரித்த மருதவாணருக்குச் சூட்டுவதற்கு மலர் தொடுத்தவர்கள், பிறவிக்குக் காரணமான ஆசையை விடுத்தவர்களாவர். |
| 1033. இருவர்க் கெரியாய, உருவ மருதரைப்<br>பரவி யேத்துவார், மருவி வாழ்வரே. | திருமால் பிரமர் அடிமுடி அறிய முடியாதவாறு எரி உருவமாய் நின்ற மருதவாணரைப் புகழ்ந்து ஏத்தித் துதிப்பவர் எல்லா நலன்களோடும் மருவி வாழும் வாழ்க்கையைப் பெறுவர். |
| 1034. நின்றுண் சமண்தேரர், என்று மருதரை<br>அன்றி யுரைசொல்ல, நன்று மொழியாரே. | நின்றுண்ணும் சமணரும், புத்தரும் எக்காலத்தும் இடைமருது இறைவனாகிய சிவபெருமானை மாறுபட்ட உரைகளால் கூறுவதால் அவர் எக்காலத்தும் நல்லனவே கூறார். |
| 1035. கருது சம்பந்தன், மருத ரடிபாடிப்<br>பெரிதுந் தமிழ்சொல்லப், பொருத வினைபோமே. | இறைவன் திருவருளையே கருதும் ஞானசம்பந்தன் மருதவாணரின் திருவடிகளைப் பெரிதும் போற்றிப் பாடிய இத்தமிழ் மாலையை ஓதுபவர்க்குத் துன்புறுத்திய வினைகள் போகும். |

## 96. திருஅன்னியூர்

பண் : குறிஞ்சி — முதல் திருமுறை பதிக எண் : 96

| | |
|---|---|
| 1036. மன்னி யூரிறை, சென்னி யார்பிறை<br>அன்னி யூரமர், மன்னு சோதியே. | திருஅன்னியூரில் எழுந்தருளிய நிலைபெற்ற ஒளி வடிவினனாகிய சிவன், பிறை சூடிய திருமுடியோடு பல தலங்களிலும் எழுந்தருளி யிருந்து, ஆங்காங்குள்ள மக்கட்குத் தலைவனாய் விளங்குபவன். |

| | | |
|---|---|---|
| 1037. | பழகுந் தொண்டர்வம், அழக னன்னியூர்க்<br>குழகன் சேவடி, தொழுது வாழ்மினே. | இறைவன்பால் மனம் ஒன்றிப் பழகும் தொண்டர்களே வாருங்கள். அன்னியூரில் அழகனாகவும், இளமைத் தன்மை உடையவனாகவும் எழுந்தருளியுள்ள சிவபிரானின் செம்மையான திருவடிகளைத் தொழுது வாழ்வீர்களாக. |
| 1038. | நீதி பேணுவீர், ஆதி யன்னியூர்ச்<br>சோதி நாமமே, ஓதி யுய்ம்மினே. | நீதியைப் போற்றி அதன்படி வாழ்கின்றவர்களே, அன்னியூரில் விளங்கும் ஒளி வடிவினனாகிய சிவபிரான் திருநாமங்களையே ஓதி உய்வீர்களாக. |
| 1039. | பத்த ராயினீர், அத்த ரன்னியூர்ச்<br>சித்தர் தாள் தொழ, முத்த ராவரே. | இறைவனிடம் பத்திமை பூண்டவர்களே, தலைமையாளனாய் அன்னியூரில் விளங்கும் ஞானவடிவினனின் திருவடிகளைத் தொழுதலால் வினை மாசுகளி–ருந்து விடுபட்டவராவீர். |
| 1040. | நிறைவு வேண்டுவீர், அறவ னன்னியூர்<br>மறையு ளான்கழற், குறவு செய்ம்மினே. | மனநிறைவுடன் வாழ விரும்புகின்றவர்களே, அற வடிவினனாய் நான்கு வேதங்களிலும் பரம்பொருளாகக் கூறப்பட்டுள்ள அன்னியூர்ப் பெருமான் திருவடிகளுக்கு அன்பு செய்து அவனோடு உறவு கொள்வீர்களாக. |
| 1041. | இன்பம் வேண்டுவீர், அன்ப னன்னியூர்<br>நன்பொ னென்னுமின், உம்பராகவே. | உலக வாழ்க்கையில் இன்பங்களை எய்த விரும்பும் அடியவர்களே, அன்பனாக விளங்கும் அன்னியூர் இறைவனை நல்ல பொன்னே என்று கூறுமின், தேவர்களாகலாம். |
| 1042. | அந்த ணாளர்தம், தந்தை யன்னியூர்<br>எந்தை யேயெனப், பந்த நீங்குமே. | அந்தணர்களின் தந்தையாக விளங்கும் அன்னியூர் இறைவனை எந்தையே என அழைக்க மலமாயைகள் நீங்கும். |
| 1043. | தூர்த்த னைச்செற்ற, தீர்த்த னன்னியூர்<br>ஆத்த மாவடைந், தேத்தி வாழ்மினே. | காமாந்தகனாகிய இராவணனைத் தண்டித்த புனிதனாகிய அன்னியூர் இறைவனை அடைந்து அன்புக்குரியவனாக அவனைப் போற்றி வாழுங்கள். |
| 1044. | இருவர் நாடிய, அரவ னன்னியூர்<br>பரவு வார்விண்ணுக், கொருவ ராவரே. | திருமால் பிரமர்களால் அடிமுடி தேடப்பட்ட அரவை அணிகலனாகப் பூண்ட அன்னியூர் இறைவனைப் பரவித் துதிப்பவர் தேவருலகில் இந்திரராவர். |
| 1045. | குண்டர் தேரருக்கு, அண்ட னன்னியூர்த்<br>தொண்டு ளார்வினை, விண்டு போகுமே. | சமணர்களாலும் புத்தர்களாலும் அணுக முடியாதவனாகிய அன்னியூர் இறைவனுக்குத் தொண்டு செய்பவர்களின் வினைகள் விண்டு போகும். |

| | |
|---|---|
| 1046. பூந்த ராய்ப்பந்தன், ஆய்ந்த பாடலால்<br>வேந்த னன்னியூர், சேர்ந்து வாழ்மினே. | பூந்தராய் என்னும் சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் ஆய்ந்து சொல்–ய பாடல்களைப் பாடி அன்னியூர் வேந்தனாகிய சிவபிரானைச் சேர்ந்து வாழ்வீர்களாக. |

## 97. திருப்புறவம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 97

| | |
|---|---|
| 1047. எய்யாவென்றித் தானவரூர்மூன் றெரிசெய்த<br>மையார்கண்டன் மாதுமைவைகுந் திருமேனிச்<br>செய்யான் வெண்ணீறணிவான் றிகழ்பொற் பதிபோலும்<br>பொய்யாநாவி னந்தணர்வாழும் புறவம்மே. | பொய் கூறாத நாவினை உடைய அந்தணர்கள் வாழும் திருப்புறவம் என்னும் சீகாழிப்பதி, இளையாத வெற்றியை உடைய அசுரர்களின் முப்புரங்களை எரித்த நீலகண்டன், உமையம்மையை ஒருகூறாகக் கொண்டு எழுந்தருளும், செய்ய திருமேனியனாய் வெண்ணீறு அணிந்தவனாய் விளங்கும் அழகிய பதியாகும். |
| 1048. மாதொருபாலு மாலொருபாலும் மகிழ்கின்ற<br>நாதனென்றேத்து நம்பரன்வைகுந் நகர்போலும்<br>மாதவிமேய வண்டிசைபாட மயிலாடப்<br>போதலர்செம்பொன் புன்னைகொடுக்கும் புறவம்மே. | குருக்கத்தியில் மேவிய வண்டுகள் இசைபாடவும் மயில்கள் ஆடவும், அவற்றிற்குப் பரிசிலாகப் புன்னை மரங்கள் விரிந்த மலர்களின் மகரந்தங்களைப் பொன்னாக அளிக்கும் இயற்கை வளம் சான்ற புறவம் என்னும் பதி, உமை யம்மையை ஒரு பாகமாகவும் திருமாலை ஒரு பாகமாகவும் கொண்டு மகிழ்கின்ற நம் மேலான தலைவன் வைகும் நகராகும். |
| 1049. வற்றாநதியும் மதியும் பொதியுஞ் சடைமேலே<br>புற்றாரரவின் படமாடவுமிப் புவனிக்கோர்<br>பற்றாயிடுமின் ப–யென்றடைவார் பதிபோலும்<br>பொற்றாமரையின் பொய்கைநிலாவும் புறவம்மே. | என்றும் நீர் வற்றாத கங்கையும், பிறையும் பொருந்திய சடையின்மேல் புற்றை இடமாகக் கொண்ட பாம்பு படத்துடன் ஆட, இவ்வுலகிற்கு ஒரு பற்றுக்கோடாகி, எனக்குப் ப– இடுமின் என்று பல ஊர்களுக்கும் செல்லும் சிவபிரானது பதி, அழகிய தாமரைகள் மலர்ந்துள்ள பொய்கை விளங்கும் புறவம் என்னும் பதியாகும். |
| 1050. துன்னார்புரமும் பிரமன்சிரமுந் துணிசெய்து<br>மின்னார்சடைமே லரவும்மதியும் விளையாடப்<br>பன்னாளிடுமின் ப–யென்றடைவார் பதிபோலும்<br>பொன்னார்புரிநூ லந்தணர்வாழும் புறவம்மே. | பகைவர்களாகிய திரிபுர அசுரர்களின் முப்புரங்களையும், பிரமனின் தலைகளில் ஒன்றையும் அழித்து, மின்னல் போல் ஒளி விடும் சடைமுடி மேல் பாம்பும் மதியும் பகை நீங்கி விளையாடுமாறு சூடிப் பல நாள்களும் சென்று ப–யிடுமின் என்று கூறித் திரிவானாகிய சிவபிரானது பதி, பொன்னா–யன்ற முப்புரி நூலை அணிந்த அந்தணர்கள் வாழும் புறவமாகும். |

| | | |
|---|---|---|
| 1051. | தேவாவரனே சரணென்றிமையோர் திசைதோறுங்<br>காவாயென்று வந்தடையக்கார் விடமுண்டு<br>பாவார்மறையும் பயில்வோருறையும் பதிபோலும்<br>பூவார்கோலச் சோலைசுலாவும் புறவம்மே. | பாற்கடலைக் கடைந்தபோது எழுந்த விடத்தின் கொடுமை தாங்காது, தேவர்கள் திசைதோறும் சூழ்ந்து நின்று, 'தேவனே! அரனே! உனக்கு அடைக்கலம் எங்களைக் காவாய்' எனச் சரண் அடைய, அக்கட–ல் தோன்றிய கரிய விடத்தை உண்டு, பாடல்களாக அமைந்த வேதங்களைப் பயிலும் சிவபெருமான் வாழும் பதி, மலர்கள் நிறைந்த அழகிய சோலைகள் சூழ்ந்த புறவம் என்னும் பதியாகும். |
| 1052. | கற்றறிவெய்திக் காமன்முன்னாகும் முகவெல்லாம்<br>அற்றரனேநின் னடிசரணென்னு மடியோர்க்குப்<br>பற்றதுவாய பாசுபதன்சேர் பதியென்பர்<br>பொற்றிகழ்மாடத் தொளிகள் நிலாவும் புறவம்மே. | மெய்ந்நூல்களைக் கற்று, அதனால் நல்லறிவும் பெற்று, காமனாகிய மன்மதனின் குறிப்பினால் ஆகும் காமவிருப்பமெல்லாம் அற்று, 'அரனே! நின் திருவடிகளே சரண்' என்று கூறும் அடியவர்கட்குப் பற்றுக்கோடாய்ப் பாசுபதன் எழுந்தருளிய பதி, பொன் நிறைந்து விளங்கும் மாடவீடுகளின் ஒளி சூழ்ந்த புறவம் என்னும் பதியாகும் என்பர். |
| 1053. | எண்டிசையோரஞ் சிடுவகைகார்சேர் வரையென்னக்<br>கொண்டெழுகோல முகில்போற்பெரிய கரிதன்னைப்<br>பண்டுரிசெய்தோன் பாவனைசெய்யும் பதியென்பர்<br>புண்டரிகத்தோன் போன்மறையோர்சேர் புறவம்மே. | எண்திசையில் உள்ளாரும் அஞ்சிடுமாறு கரிய மலைபோலவும், நீரை முகந்து கொண்டெழுந்த அழகிய கரிய மேகம் போலவும் வந்த பெரிய களிற்று யானையை முற்காலத்தில் கொன்று அதன் தோலை உரித்துப் போர்த்த சிவபிரான் விரும்பியிருக்கும் பதி, தாமரை மலர் மேல் உறையும் நான்முகன் போல வேதங்களில் வல்ல அந்தணர்கள் வாழும் புறவமாகும். |
| 1054. | பரக்குந்தொல்சீர்த் தேவர்கள்சேனைப் பௌவத்தைத்<br>துரக்குஞ்செந்தீப் போலமர்செய்யுந் தொழின்மேவும்<br>அரக்கன்றிண்டோ ளழிவித்தானக் காலத்திற்<br>புரக்கும்வேந்தன் சேர்தருமூதூர் புறவம்மே. | எங்கும் பரவிய பழமையான புகழை உடைய தேவர்களின் கடல் போன்ற படையை, ஊழித் தீப் போன்று அழிக்கும் தொழி–ல் வல்ல இராவணனின் வ–ய தோள் வ–யை அக்காலத்தில் அழித்தருளி, அனைத்து உலகங்களையும் புரந்தருளும் வேந்தனாக விளங்கும் சிவபிரான் எழுந்தருளிய பழமையான ஊர் புறவமாகும். |
| 1055. | மீத்திகழண்டந் தந்தயனோடு மிகுமாலும்<br>மூர்த்தியை நாடிக் காணவொணாது முயல்விட்டாங்<br>கேத்தவெளிப்பா டெய்தியவன்ற னிடமென்பர்<br>பூத்திகழ்சோலைத் தென்றலுலாவும் புறவம்மே. | மேலானதாக விளங்கும் உலகங்களைப் படைத்த பிரமனும், புகழால் மேம்பட்ட திருமாலும் அழலுருவாய் வெளிப்பட்ட சிவமூர்த்தியின் அடிமுடிகளைக் காண இயலாது தமது முயற்சியைக் கைவிட்டு ஏத்த, அவர்கட்குக் காட்சி தந்தருளிய சிவபிரானது இடம், மலர்கள் நிறைந்த சோலைகளில் தென்றல் வந்து உலாவும் புறவமாகும். |

| | |
|---|---|
| 1056. வையகநீர்தீ வாயுவும்விண்ணும் முதலானான்<br>மெய்யலதேர ருண்டிலையென்றே நின்றேதங்<br>கையினிலுண்போர் காணவொணாதான் நகரென்பர்<br>பொய்யகமில்லாப் பூசுரர்வாழும் புறவம்மே. | மண், நீர், தீ, காற்று, விண் ஆகிய ஐம்பூதங்களில் நிறைந்து, அவற்றின் முதலாக விளங்கும் இறைவனாய், உண்மையல்லாதவற்றைப் பேசி உண்டு இல்லை என்ற உரைகளால் அத்தி நாத்தி எனக் கூறிக் கொண்டு தம் கைகளில் உணவேற்று உண்போராய சமணரும், புத்தரும் காண ஒண்ணாத சிவபிரானின் நகர், நெஞ்சிலும் பொய்யறியாத பூசுரர் வாழும் புறவமாகும். |
| 1057. பொன்னியன்மாடப் புரிசைநிலாவும் புறவத்து<br>மன்னியவீசன் சேவடிநாளும் பணிகின்ற<br>தன்னியல்பில்லாச் சண்பையர்கோன்சீர்ச் சம்பந்தன்<br>இன்னிசையீரைந் தேத்தவல்லோர்கட் கிடர்போமே. | பொன்னால் இயன்ற மாடங்களின் மதில்கள் சூழ்ந்த, புறவம் என்னும் பதியில் நிலைபெற்று விளங்கும் சிவபிரானின் சேவடிகளை, நாள்தோறும் பணிந்து, சீவபோதம் அற்றுச் சிவபோதம் உடையவனாய்ப் போற்றும் சண்பையர் தலைவனாகிய புகழ்மிக்க ஞானசம்பந்தன், இன்னிசையோடு பாடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாடி ஏத்தவல்லவர்கட்கு, இடர் போகும். |

## 98. திருச்சிராப்பள்ளி

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 98

| | |
|---|---|
| 1058. நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளே<br>றொன்றுடையானை யுமையொருபாக முடையானைச்<br>சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்<br>குன்றுடையானைக் கூறவென்னுள்ளங் குளிரும்மே. | நன்மைகளையே தனக்கு உடைமையாகக் கொண்டவனை, தீயது ஒன்றேனும் இல்லாதவனை, மிக வெண்மையான ஆனேற்றைத் தனக்கு ஊர்தியாகக் கொண்டவனை, பார்வதியை ஒரு பாகமாக உடையவனை, அவனது அருளாலன்றிச் சென்றடைய முடியாத வீடு பேறாகிய செல்வத்தை உடையவனை, சிராப்பள்ளிக் குன்றில் எழுந்தருளியுள்ளவனைப் போற்ற என் உள்ளம் குளிரும். |
| 1059. கைம்மகவேந்திக் கடுவனொடூடிக் கழைபாய்வான்<br>செம்முகமந்தி கருவரையேறுஞ் சிராப்பள்ளி<br>வெம்முகவேழத் தீருரிபோர்த்த விகிர்தாநீ<br>பைம்முகநாகம் மதியுடன்வைத்தல் பழியன்றே. | சிவந்த முகம் உடைய பெண் குரங்கு தனது ஆண் குரங்கோடு ஊடல் கொண்டு மூங்கில் புதரில் பாய்ந்து தன் உயிரை மாய்த்துக் கொள்ளுதற்காகத் தனது குட்டியையும் ஏந்திக் கொண்டு கரிய மலை மீது ஏறும் சிராப்பள்ளியில் எழுந்தருளியவனும் கொடிய முகத்தோடு கூடிய யானையின் தோலைப் போர்த்துள்ள விகிர்தனு ஆகிய நீ படத்தோடு கூடிய முகத்தினை உடைய நாகப்பாம்பை அதன் பகைப்பொருளாகிய பிறை மதியுடன் முடிமிசை அணிந்திருத்தல் பழிதரும் செயல் அன்றோ ? |

| | | |
|---|---|---|
| 1060. | மந்தம்முழவம் மழலைததும்ப வரைநீழல்<br>செந்தண்புனமுஞ் சுனையுஞ்சூழ்ந்த சிராப்பள்ளிச்<br>சந்தம்மலர்கள் சடைமேலுடையார் விடையூரும்<br>எந்தம்மடிக ளடியார்க்கல்ல –ல்லையே. | மந்த சுருதியினை உடைய முழவு மழலை போல ஒ– செய்ய, மலை அடிவாரத்தில் செவ்விய தண்ணிய தோட்டங்களையும் சுனைகளையும் கொண்டுள்ள சிராப்பள்ளியில் எழுந்தருளிய அழகிய மலர்களைச் சடைமேற் சூடியவரும், விடையேற்றை ஊர்ந்து வருபவரும் ஆகிய எம் தலைவராகிய செல்வரை வணங்கும் அடியார்களுக்கு அல்லல் இல்லை. |
| 1061. | துறைமல்குசாரற் சுனைமல்குநீலத் திடைவைகிச்<br>சிறைமல்குவண்டுந் தும்பியும்பாடுஞ் சிராப்பள்ளிக்<br>கறைமல்குகண்டன் கனலெரியாடுங் கடவுள்ளெம்<br>பிறைமல்குசென்னி யுடையவனெங்கள் பெருமானே. | பலவாகிய வழிகளைக் கொண்டுள்ள மலையடிவாரத்தில் விளங்கும் சுனைகளில் நெருங்கிப் பூத்த நீல மலர்களில் தங்கிச் சிறகுகளை உடைய வண்டுகளும் தும்பியும் இசைபாடும் சிராப்பள்ளியில் எங்கள் பெருமானாகிய சிவபிரான் கறை பொருந்திய கண்டத்தை உடையவனாய்க் கனலும் எரியைக் கையில் ஏந்தி ஆடும் எம் கடவுளாய்ப் பிறை பொருந்திய சென்னியை உடையவனாய் விளங்கியருள்கின்றான். |
| 1062. | கொலைவரையாத கொள்கையர்தங்கண் மதின்மூன்றும்<br>சிலைவரையாகச் செற்றனரேனுஞ் சிராப்பள்ளித்<br>தலைவரை நாளுந் தலைவரல்லாமை யுரைப்பீர்காள்<br>நிலவரைநீல முண்டதும்வெள்ளை நிறமாமே. | கொல்லும் தொழிலைக் கைவிடாத கொள்கையினராகிய அவுணர்கள் மும் மதில்களையும் மேரு மலையை வில்லாகக் கொண்டு அழித்தவராயினும் சிராப்பள்ளியின் தலைவராகிய அப்பெருமானாரைத் தலைவரல்லர் என்று நாள் தோறும் கூறிவரும் புறச் சமயிகளே! நிலவுலகில் நீலம் உண்ட துகி–ன் நிறத்தை, வெண்மை நிறமாக மாற்றல் இயலாதது போல நீவிர் கொண்ட கொள்கையையும் மாற்றுதல் இயலுவதொன்றோ ? |
| 1063. | வெய்யதண்சாரல் விரிநிறவேங்கைத் தண்போது<br>செய்யபொன்சேருஞ் சிராப்பள்ளிமேய செல்வனார்<br>தையலொர்பாக மகிழ்வர்நஞ்சுண்பர் தலையோட்டில்<br>ஐயமுங்கொள்வ ராரிவர்செய்கை யறிவாரே. | எல்லோராலும் விரும்பத்தக்க குளிர்ந்த மலைச்சார–ல் விரிந்த தண்ணிய பொன்னிறமான வேங்கை மலர்கள் சிவந்த பொன் போன்ற நிறத்தனவாய் உதிரும் சிராப்பள்ளி மலையில் வீற்றிருக்கும் செல்வராகிய சிவபிரான் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு மகிழ்வர். நஞ்சினை உண்பர். தலையோட்டில் ப– ஏற்பர். வேறுபட்ட இவர்தம் செயல்களின் உண்மையை யார் அறியவல்லார். |

| | |
|---|---|
| **1064.** வேயுயர்சாரற் கருவிரலூகம் விளையாடும்<br>சேயுயர்கோயிற் சிராப்பள்ளிமேய செல்வனார்<br>பேயுயர் கொள்ளி கைவிளக்காகப் பெருமானார்<br>தீயுகந்தாடல் திருக்குறிப்பாயிற் றாகாதே. | கரிய விரல்களை உடைய கருங்குரங்குகள் விளையாடும் மூங்கில் மரங்கள் உயர்ந்து வளர்ந்துள்ள சாரலை உடைய சிராப்பள்ளியில் நெடிதாக உயர்ந்துள்ள கோயி–ல் மேவிய செல்வராகிய பெருமானார் பேய்கள் உயர்த்திப் பிடித்த கொள்ளிகளைக் கைவிளக்காகக் கொண்டு, சுடுகாட்டில் எரியும் தீயில் மகிழ்ந்து நடனம் ஆடும் திருக்குறிப்பு யாதோ? அஃது அவரை அடைய விரும்பும் மகளிர்க்குப் புலனாகாததாக உள்ளதே. |
| **1065.** மலைமல்குதோளன் வ–கெடவூன்றி மலரோன்றன்<br>தலைகலனாகப் ப–திரிந்துண்பர் பழியோரார்<br>சொலவலவேதஞ் சொலவலகீதஞ் சொல்லுங்கால்<br>சிலவலபோலுஞ் சிராப்பள்ளிச்சேடர் செய்கையே. | மலைபோன்ற திண்மை நிரம்பிய தோள்களை உடைய இராவணனின் வ–மை கெடுமாறு ஊன்றி அழித்துத் தாமரை மலர்மேல் உறைபவனாகிய பிரமனது தலையோட்டை உண்கலனாகக் கொண்டு திரிந்து அவ்வோட்டில் ப–யேற்று உண்ணுவதால் தமக்குப் பழி வருமே என்று நினையாதவராய், இசையோடு ஓதத் தக்க வேதங்களையும் கீதங்களையும் அன்பர்கள் ஓதுமிடத்துச் சில பிழைபட்டன என்றாலும் அவற்றையும் ஏற்று மகிழ்பவர் சிராப்பள்ளி மேவிய பெருமைக்குரிய சிவனார். இவர்தம் செய்கைகளின் உட்பொருள் யாதோ? |
| **1066.** அரப்பள்ளியானு மலருறைவானு மறியாமைக்<br>கரப்புள்ளிநாடிக் கண்டிலரேனுங் கல்சூழ்ந்த<br>சிரப்பள்ளிமேய வார்சடைச்செல்வர் மனைதோறும்<br>இரப்புள்ளீரும்மை யேதிலர்கண்டா –கழாரே. | பாம்பணையில் பள்ளி கொள்ளும் திருமாலும், தாமரை மலர்மேல் உறையும் பிரமனும் அறியாதவாறு அடிமுடி கரந்து உயர்ந்து நின்றதை அவர்கள் தேடிக் கண்டிலர் என்ற பெருமை உமக்கு உளதாயினும் மலையகத்துள்ள சிராப்பள்ளியில் எழுந்தருளிய நீண்ட சடையினை உடைய செல்வராகிய சிவபிரானே நீர் வீடுகள் தோறும் சென்று இரப்பதைக் கருதுகின்றீர். அயலவர் கண்டால் இதனை இகழாரோ? |
| **1067.** நாணாதுடைநீத் தோர்களுங்கஞ்சி நாட்காலை<br>ஊணாப்பகலுண் டோதுவோர்க ளுரைக்குஞ்சொல்<br>பேணாதுறுசீர் பெறுதுமென்பீரெம் பெருமானார்<br>சேணார்கோயில் சிராப்பள்ளிசென்று சேர்மினே. | நாணாது உடையின்றித் திரியும் திகம்பர சமணரும், காலையிலும் நண்பக–லும் கஞ்சியை மட்டும் உணவாக உண்டு வாழும் புத்தரும் கூறும் பழிப்புரைகளைக் கருதாது நாம் சிறப்படைய வேண்டுமென்று விரும்பும் நீர் எம்பெருமான் உறையும் வானளாவிய கோயிலை உடைய சிராப்பள்ளியைச் சென்று அடைவீர்களாக. |
| **1068.** தேனயம்பாடுஞ் சிராப்பள்ளியானைத் திரைசூழ்ந்த<br>கானல்சங்கேறுங் கழுமலவூரிற் கவுணியன்<br>ஞானசம்பந்த னலமிகுபாட –வைவல்லார்<br>வானசம்பந்தத் தவரொடுமன்னி வாழ்வாரே. | தேனுண்ணும் வண்டுகள் இனிய இசைபாடும் சிராப்பள்ளியில் விளங்கும் இறைவனை, அலைகளிற் பொருந்திவந்த சங்குகள் சோலைகளில் ஏறி உலாவும் கடலை அடுத்துள்ள கழுமல ஊரில் கவுணியர் கோத்திரத்தில் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிப் போற்றிய, நன்மைகள் மிக்க இப்பதிகப் பாடல்களை ஓதவல்லவர் வானுலகில் சம்பந்தமுடையவராகத் தேவர்களோடு நிலைபெற்று வாழ்வர். |

## 99. திருக்குற்றாலம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 99

| | |
|---|---|
| 1069. வம்பார்குன்றம் நீடுயர்சாரல் வளர்வேங்கைக்<br>கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றாலம்<br>அம்பானெய்யோ டாடலமர்ந்தா னலர்கொன்றை<br>நம்பான்மேய நன்னகர்போலும் நமரங்காள். | நம்மவர்களே! காணுந்தோறும் புதுமையைப் பயக்கும் குன்றங்களையும், நீண்டுயர்ந்த மலைச் சாரலையும், அழகிய வண்டுகள் யாழ் போல் ஒ-க்கும் வளர்ந்த வேங்கை மரங்களின் கிளைகள் அடர்ந்த சோலைகளையும் உடைய குற்றாலம், இனிய பால் நெய் ஆகியவற்றோடு நீராடலை விரும்புபவனாய் விரிந்த கொன்றை மலர்களைச் சூடிய நம்பனாகிய சிவபெருமான் எழுந்தருளிய நன்னகராகும். |
| 1070. பொடிகள்பூசித் தொண்டர்பின்செல்லப் புகழ்விம்மக்<br>கொடிகளோடுந் நாள்விழமல்கு குற்றாலம்<br>கடிகொள்கொன்றை கூவிளமாலை காதல்செய்<br>அடிகண்மேய நன்னகர்போலும் மடியீர்காள். | அடியவர்களே! திருநீறு பூசித் தொண்டர்கள் பின்னே வரவும், புகழ் சிறக்கவும், கொடிகளை ஏந்தியவர்களாய் அன்பர்கள் முன்னால் செல்லவும், நாள்தோறும் விழாக்கள் நிகழும் நகர் குற்றாலமாகும். இவ்வூர் மணம் கமழும் கொன்றை வில்வமாலை ஆகியவற்றை விரும்பும் அடிகளாகிய சிவபிரானார் எழுந்தருளிய நன்னகராகும். |
| 1071. செல்வமல்கு செண்பகம்வேங்கை சென்றேறிக்<br>கொல்லைமுல்லை மெல்லரும்பீனுங் குற்றாலம்<br>வில்-னொல்க மும்மதிலெய்து வினைபோக<br>நல்கும்நம்பா னன்னகர்போலுந் நமரங்காள். | நம்மவர்களே! செல்வம் நிறைந்ததும், செண்பகம் வேங்கை ஆகிய மரங்களில் தாவிப் படர்ந்து முல்லைக் கொடி அரும்புகளை ஈனுவதும் ஆகிய குற்றாலம், வில்-ன் நாண் அசைய அதன்கண் தொடுத்த கணையை விடுத்து மும்மதில்களையும் எய்து அழித்துத் தன்னை வழிபடும் அன்பர்களின் வினை மாசுகள் தீர அருள் புரியும் சிவபிரான் எழுந்தருளியுள்ள நன்னகராகும். |
| 1072. பக்கம்வாழைப் பாய்கனியோடு பலவின்தேன்<br>கொக்கின்கோட்டுப் பைங்கனிதூங்குங் குற்றாலம்<br>அக்கும்பாம்பு மாமையும்பூண்டோ ரனலேந்தும்<br>நக்கன்மேய நன்னகர்போலும் நமரங்காள். | மலையின் பக்கங்களில் எல்லாம் முளைத்த வாழை மரத்தின் கனிகளோடு தேன் ஒழுகும் பலாவின் பழங்களும் மாமரக் கிளைகளில் பழுத்த புத்தம் புதிய நறுங்கனிகளும் ஆய முக்கனிகளும் அவ்வம்மரங்களில் தொங்கும் குற்றால நகர், என்புமாலை, பாம்பு, ஆமை ஆகியவற்றைப் பூண்டு கையில் அனலை ஏந்தி விளங்கும் சிவபிரான் மேவிய நன்னகராகும். |
| 1073. மலையார்சாரன் மகவுடன்வந்த மடமந்தி<br>குலையார்வாழைத் தீங்கனிமாந்துங் குற்றாலம்<br>இலையார்சூல மேந்தியகையா னெயிலெய்த<br>சிலையான்மேய நன்னகர்போலுஞ் சிறுதொண்டீர். | இறைவனுக்குக் கைத்தொண்டு புரியுமவர்களே! தன் குட்டிகளோடு மலையின் சாரலுக்கு வந்த மடமந்தி வாழை மரக் குலைகளில் பழுத்த இனிய கனிகளை வயிறு புடைக்கத் தின்னும் குற்றாலம், இலை வடிவமான சூலத்தை ஏந்திய கையினனும், மும்மதில்களையும் எய்து அழித்த வில்லாளனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளியுள்ள நன்னகராகும். |

| | | |
|---|---|---|
| 1074. | மைம்மாநீலக் கண்ணியர்சாரன் மணிவாரிக்<br>கொய்ம்மாவேன லுண்கிளியோப்பும் குற்றாலம்<br>கைம்மாவேழத் தீருரிபோர்த்த கடவுள்ளெம்<br>பெம்மான்மேய நன்னகர்போலும் பெரியீர்காள். | பெரியீரே! மிகக் கரிய பெரிய நீலமலர் போன்ற கண்களை உடைய குறமகளிர், மலைச்சாரல்களில் விளைந்த தினைப் புனங்களில் கொய்யத்தக்க பருவத்திலுள்ள பெரிய தினைக்கதிர்களை உண்ண வரும் கிளிகளை அங்குள்ள மணிகளை வாரி வீசியோட்டும் குற்றாலம், கைம்மா எனப் பெறும் யானையின் தோலைப் போர்த்த கடவுளும் எம் தலைவனுமாகிய சிவபிரான் எழுந்தருளியுள்ள நன்னகராகும். |
| 1075. | நீலநெய்தல் தண்சுனைசூழ்ந்த நீள்சோலைக்<br>கோலமஞ்ஞை பேடையொடாடுங் குற்றாலம்<br>காலன்றன்னைக் காலாற்காய்ந்த கடவுள்ளெம்<br>சூலபாணி நன்னகர்போலுந் தொழுவீர்காள். | தொழுது வணங்கும் அடியவர்களே! நீலமலரும் நெய்தல் மலரும் பூத்த தண்ணியவான சுனைகள் சூழ்ந்ததும், நீண்டு வளர்ந்துள்ள சோலைகளில் அழகிய ஆண் மயில்கள் தத்தம் பெண் மயில்களோடு களித்தாடுவதுமாகிய குற்றாலம், காலனைக் காலால் கடிந்த கடவுளும் சூலத்தைக் கையில் ஏந்தியவனுமாகிய எம் சிவபிரான் எழுந்தருளியுள்ள நன்னகராகும். |
| 1076. | போதும்பொன்னு முந்தியருவி புடைசூழக்<br>கூதன்மாரி நுண்துளிதூங்குங் குற்றாலம்<br>மூதூரிலங்கை முட்டியகோனை முறைசெய்த<br>நாதன்மேய நன்னகர்போலுந் நமரங்காள். | நம்மவர்களே! அருவிகள் மலர்களையும் பொன்னையும் உந்திவந்து இரு புறங்களிலும் குளிர்ந்த மழை போல் நுண்மையான துளிகளை உதிர்க்கும் குற்றாலம், தன் தகுதிக்கு மேலே செயற்பட்ட இலங்கை நகரின் புகழ் பெருக்கி ஆளும் அரசனாகிய இராவணனைத் தண்டித்த சிவபிரான் எழுந்தருளிய நல்ல நகராகும். |
| 1077. | அரவின்வாயின் முள்ளெயிறேய்ப்ப வரும்பீன்று<br>குரவம்பாவை முருகமர்சோலைக் குற்றாலம்<br>பிரமன்னோடு மாலறியாத பெருமையெம்<br>பரமன்மேய நன்னகர்போலும் பணிவீர்காள். | பணியும் தொண்டர்களே! பாம்பின் வாயில் அமைந்த வளைந்த கூரிய பற்களை ஒப்ப அரும்பீன்று குரவ மரங்கள் பூத்துள்ள பாவை போன்ற மலர்களின் மணம் தங்கியுள்ள குற்றாலம், பிரமன் மால் அறியாப் பெரியோனாகிய எம் பரமன் மேவியுள்ள நன்னகராகும். |
| 1078. | பெருந்தண்சாரல் வாழ்சிறைவண்டு பெடைபுல்கிக்<br>குருந்தம்மேறிச் செவ்வழிபாடுங் குற்றாலம்<br>இருந்துண்டேரு நின்றுண்சமணு மெடுத்தார்ப்ப<br>அருந்தண்மேய நன்னகர்போலு மடியீர்காள். | அடியவர்களே! பெரிய தண்ணிய மலைச்சார–ல் வாழ்கின்ற சிறகுகளை உடைய வண்டு தன் பெண் வண்டை விரும்பிக் கூடி குருந்த மரத்தில் ஏறிச் செவ்வழிப் பண்பாடும் குற்றாலம். இருந்துண்ணும் புத்தர்களும் நின்று உண்ணும் சமணர்களும் புறங்கூற அரிய தண்ணியோ னாகிய சிவபிரான் எழுந்தருளிய நன்னகராகும். |
| 1079. | மாடவீதி வருபுனற்காழி யார்மன்னன்<br>கோடலீன்று கொழுமுனைகூம்புங் குற்றாலம்<br>நாடவல்ல நற்றமிழ்ஞான சம்பந்தன்<br>பாடல்பத்தும் பாடநம்பாவம் பறையுமே. | மாடவீதிகளையுடையதும் ஆற்று நீர்வளம் மிக்கதுமான சீகாழிப் பதிக்கு மன்னனும் பலராலும் நாட வல்லவனுமான நற்றமிழ் ஞானசம்பந்தன் செங்காந்தள் மலர்களை ஈன்று அவற்றின் கொழுவிய முனையால் கை குவிக்கும் குற்றாலத்து இறைவர் மேல் பாடிய பாடல்கள் பத்தையும் பாடப் பாவம் நீங்கும். |

## 100. திருப்பரங்குன்றம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 100

| | |
|---|---|
| 1080. நீடலர்சோதி வெண்பிறையோடு நிரைகொன்றை<br>சூடலனந்திச் சுடரெரியேந்திச் சுடுகானில்<br>ஆடலனஞ்சொ லணியிழையாளை யொருபாகம்<br>பாடலன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே. | நீண்டு விரிந்த ஒளிக்கதிர்களை உடைய வெண்பிறையோடு வரிசையாகத் தொடுத்த கொன்றை மாலையைச் சூடுதலை உடையவன். அந்திப் போதில் ஒளியோடு கூடிய எரியை ஏந்திச் சுடுகாட்டில் ஆடுபவன். அழகிய சொற்களைப் பேசும் அணிகலன்களோடு கூடிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு பாடுபவன். அத்தகைய பெருமானது நல்லநகர் பரங்குன்று. |
| 1081. அங்கமொராறும் மருமறைநான்கும் மருள்செய்து<br>பொங்குவெண்ணூலும் பொடியணிமார்பிற் பொ–வித்துத்<br>திங்களும்பாம்புந் திகழ்சடைவைத்தோர் தேன்மொழி<br>பங்கினன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே. | நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அருளிச் செய்து, திருநீறு அணைந்த மார்பில் அழகுமிக்க வெண்ணூலைப் பொ–வுற அணிந்து, பிறை பாம்பு ஆகியவற்றை விளங்கும் சடைமீது சூடித் தேன் போன்ற மொழியினளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனாய்ச் சிவபிரான் விளங்கும் நன்னகர் திருப்பரங்குன்றம். |
| 1082. நீரிடங்கொண்ட நிமிர்சடைதன்மே னிரைகொன்றை<br>சீரிடங்கொண்ட வெம்மிறைபோலுஞ் சேய்தாய<br>ஒருடம்புள்ளே யுமையொருபாக முடனாகிப்<br>பாரிடம்பாட வினிதுறைகோயில் பரங்குன்றே. | கங்கை சூடிய நிமிர்ந்த சடைமுடிமேல் வரிசையாகத் தொடுத்த கொன்றை மாலையைச் சிறப்புற அணிந்துள்ள எம் இறைவன் மிக உயர்ந்துள்ள தனது திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டுள்ள உமையம்மையோடும் உடனாய்ப் பூதகணங்கள் பாட இனிதாக உறையும் கோயில் திருப்பரங்குன்றம். |
| 1083. வளர்பூங்கோங்க மாதவியோடு மல்–கைக்<br>குளிர்பூஞ்சாரல் வண்டறைசோலைப் பரங்குன்றம்<br>தளிர்போன்மேனித் தையனல்லாளோ டொருபாகம்<br>நளிர்பூங்கொன்றை சூடினன்மேய நகர்தானே. | வளர்ந்துள்ள கோங்கு முத–ய மரங்களும், மணம் தரும் மாதவி முத–ய செடிகளும், மல்–கை முத–ய கொடிகளும் நிறைந்துள்ள வண்டுகள் முரலும் சோலைகள் சூழ்ந்த சாரலை உடைய திருப்பரங்குன்றம், ஒரு பாகமாகிய தளிர் போன்ற மேனியளாகிய தையல் நல்லாளோடு பொருந்திக் கொத்தாகச் செறிந்த பூக்களைக் கொண்ட கொன்றை மலர் மாலையை அணிந்தவனாகிய சிவபிரானது நகராகும். |
| 1084. பொன்னியல்கொன்றை பொறிகிளர்நாகம் புரிசடைத்<br>துன்னியசோதி யாகியவீசன் றொன்மறை<br>பன்னியபாட லாடலன்மேய பரங்குன்றை<br>உன்னியசிந்தை யுடையவர்க்கில்லை யுறுநோயே. | பொன்போன்ற கொன்றை மலர், பொறிகள் விளங்கும் பாம்பு ஆகியவற்றை அணிந்துள்ள முறுக்கேறிய சடைமுடியோடு பொருந்திய ஒளி வடிவினனாகிய ஈசனும், பழமையான வேதங்களில் அமைந்துள்ள பாடல்களைப் பாடி ஆடுபவனுமாகிய சிவபிரான் எழுந்தருளிய திருப்பரங்குன்றை எண்ணிய சிந்தை உடையவர்க்கு மிக்க நோய்கள் எவையும் இல்லை. |

| | |
|---|---|
| 1085. கடைநெடுமாடக் கடியரண்மூன்றுங் கனன்மூழ்கத்<br>தொடைநவில்கின்ற வில்–னனந்திச் சுடுகானில்<br>புடைநவில்பூதம் பாடநின்றாடும் பொருசூலப்<br>படைநவில்வான்ற னன்னகர்போலும் பரங்குன்றே. | வாயிலை உடைய காவல் பொருந்திய அசுரர்களின் மூன்று கோட்டைகளும் கன–ல் மூழ்குமாறு அம்பினை எய்த வில்–னனும், அந்திக் காலத்தில் சுடுகாட்டில் அருகில் தன்னொடு பழகிய பூதகணங்கள் பாட நின்றாடுபவனும் போர்க் கருவியாகிய சூலப்படையை ஏந்தியவனுமாகிய சிவபிரானது நன்னகர் திருப்பரங்குன்றம். |
| 1086. அயிலுடைவேலோ ரனல்புல்குகையி னம்பொன்றால்<br>எயில்படவெய்த வெம்மிறைமேய விடம்போலும்<br>மயில்பெடைபுல்கி மாநடமாடும் வளர்சோலைப்<br>பயில்பெடைவண்டு பாடலறாத பரங்குன்றே. | கூரிய வேற்படையை உடையவனும், அனல் தழுவிய கை அம்பு ஒன்றால் மூவெயில்களை எய்து அழித்தவனும் ஆகிய எம் இறைவன் மேவிய இடம், ஆண் மயில்கள் பெண் மயில்களைத் தழுவிச் சிறந்த வகையில் நடனம் ஆடும் வளர்ந்த சோலைகளில் பெண் வண்டுகளோடு கூடிய ஆண் வண்டுகள் இடையறாது இசை பாடும் சிறப்புடைய திருப்பரங்குன்றாகும். |
| 1087. மைத்தகுமேனி வாளரக்கன்றன் மகுடங்கள்<br>பத்தினதிண்டோ ளிருபதுஞ்செற்றான் பரங்குன்றைச்<br>சித்தமதொன்றிச் செய்கழலுன்னிச் சிவனென்று<br>நித்தலுமேத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே. | மை எனத்தக்க கரிய மேனியனாகிய வாட் போரில் வல்ல இராவணனின் மகுடம் பொருந்திய பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் அடர்த்த சிவபிரான் எழுந்தருளிய திருப்பரங்குன்றை ஒன்றிய மனத்துடன் அங்குள்ள பெருமானின் சேவடிகளைச் சிந்தித்துச் சிவனே என்று நித்தலும் ஏத்தித் துதிக்க, வினைகள் நம் மேல் நில்லா. |
| 1088. முந்தியிவ்வையந் தாவியமாலு மொய்யொளி<br>உந்தியில்வந்திங் கருமறையீந்த வுரவோனும்<br>சிந்தையினாலுந் தெரிவரிதாகித் திகழ்சோதி<br>பந்தியலங்கை மங்கையொர்பங்கன் பரங்குன்றே. | மாவ–யிடம் மூன்றடி மண் கேட்டு அவன் தந்த அளவில் முந்திக் கொண்டு இவ்வுலகை ஓரடியால் அளந்ததுடன் வானுலகங்களையும் ஓரடியால் அளந்த திருமாலும், அத் திருமா–ன் ஒளி நிறைந்த உந்திக் கமலத்தில் தோன்றி அரிய மறைகளை ஓதும் நான்முகனும் மனத்தாலும் அறிய முடியாதவாறு பேரொளிப் பிழம்பாய் நின்ற சோதி வடிவினனும், விளையாடும் பந்து தங்கிய அழகிய கையை உடைய மங்கையை ஒரு பாகமாகக் கொண்டவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய தலம் திருப்பரங்குன்று. |
| 1089. குண்டாய்முற்றுந் திரிவார்கூற்றை மெய்போர்த்து<br>மிண்டாய்மிண்டர் பேசியபேச்சு மெய்யல்ல<br>பண்டானீழன் மேவியவீசன் பரங்குன்றைத்<br>தொண்டாலேத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே. | பருத்த உட–னராய் எங்கும் திரியும் சமணரும், ஆடையை உட–ற் போர்த்துத் திரியும் புத்தரும் தர்க்க வாதத்துடன் மிடுக்காய்ப் பேசும் பேச்சுக்கள் எவையும் உண்மையல்ல. முற்காலத்தில் கல்லால மர நிழ–ல் வீற்றிருந்து அறம் நால்வர்க்கருளிய ஈசனது பரங்குன்றைத் தொண்டு செய்து ஏத்தினால் நம் தொல்வினை நம்மேல் நில்லாது கழியும். |

| | |
|---|---|
| 1090. தடம—பொய்கைச் சண்பைமன்ஞான சம்பந்தன்<br>படம—நாக மரைக்கசைத்தான்றன் பரங்குன்றைத்<br>தொடைம—பாடல் பத்தும்வல்லார்தந் துயர்போகி<br>விடம—கண்ட னருள்பெருந்தன்மை மிக்கோரே. | பரப்புமிக்க பொய்கையை உடைய சண்பை என்னும் சீகாழிப் பதியின் மன்னனாகிய ஞானசம்பந்தன் படத்தோடு கூடிய பாம்பை இடையில் கட்டிய பரங்குன்றிறைவர் மீது பாடிய தொடை நயம் மிக்க பாடல்கள் பத்தையும் ஓதி வழிபட வல்லவர் தம் துன்பம் நீங்கி விடமுண்ட கண்டனாகிய சிவபிரானின் அருள்பெறும் தகுதியில் மேம்பட்டவராவர். |

## 101. திருக்கண்ணார்கோயில்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 101

| | |
|---|---|
| 1091. தண்ணார்திங்கட் பொங்கரவந்தாழ் புனல்சூடிப்<br>பெண்ணாணாய பேரருளாளன் பிரியாத<br>கண்ணார் கோயில் கைதொழுவோர்கட் கிடர்பாவம்<br>நண்ணாவாகுந் நல்வினையாய நணுகும்மே. | குளிர்ந்த திங்கள், சினம் மிக்க பாம்பு, ஆகாயத்தி—ருந்து தாழ்ந்துவந்த கங்கை ஆகியவற்றை முடியில் சூடி, பெண்ணும் ஆணுமாய கோலத்தில் விளங்கும் பெருங்கருணையாளனாகிய சிவபிரான் பிரியாமல் எழுந்தருளியிருக்கும் திருக்கண்ணார் கோயிலைக் கைகளால் தொழுது வணங்குவாரைத் துன்பங்களும் பாவங்களும் நண்ணா. நல்வினைகளும் அவற்றின் பயனான இன்பங்களும் நண்ணும். |
| 1092. கந்தமர்சந்துங் காரகிலுந்தண் கதிர்முத்தும்<br>வந்தமர்தெண்ணீர் மண்ணிவளஞ்சேர் வயன்மண்டிக்<br>கொந்தலர்சோலைக் கோகிலமாடக் குளிர்வண்டு<br>செந்திசைபாடுஞ் சீர்திகழ்கண்ணார் கோயிலே. | மணம் பொருந்திய சந்தனம், கரிய அகில், குளிர்ந்த ஒளி பொருந்திய முத்து ஆகியன பொருந்தியதாய் வரும் தெளிந்த நீரையுடைய மண்ணியாற்றால் வளம் பெறும் வயல்களால் சூழப்பட்டு, கொத்துக்களாக விரிந்த மலர்களை உடைய சோலைகளில் குயில்கள் ஆடச் செவிகளைக் குளிர்விக்கும் வண்டுகள் செவ்வழிப் பண்பாடும் சீரோடு திகழ்வது, சிவபிரானது திருக்கண்ணார் கோயிலாகும். |
| 1093. பல்—யல்பாணிப் பாரிடமேத்தப் படுகானின்<br>எல்—நடஞ்செய் யீசனெம்மான்றன் னிடமென்பர்<br>கொல்லையின்முல்லை மல்—கைமௌவற் கொடிபின்னிக்<br>கல்—ய—ஞ்சி மஞ்சமர்கண்ணார் கோயிலே. | பலவாக இயலும் தாளங்களை இசைத்துப் பூத கணங்கள் ஏத்த, பிணங்கள் இடப்படும் சுடுகாட்டில் நள்ளிராப்போதில் திருநடம்புரியும் ஈசனாகிய எம்பெருமானது இடம், காடுகளில் முல்லையும், மல்—கையும் காட்டு மல்—கையோடு பின்னி விளங்குவதும், கல்லால் இயன்ற வானளாவிய மதில்களில் மேகங்கள் அமர்ந்திருப்பதுமாகிய கண்ணார்கோயில் என்னும் தலமாகும் என்பர். |

| | | |
|---|---|---|
| 1094. | தருவளர்கானந் தங்கியதுங்கப் பெருவேழம்<br>மருவளர்கோதை யஞ்சவுரித்து மறைநால்வர்க்<br>குருவளரால நீழலமர்ந்தீங் குரைசெய்தார்<br>கருவளர்கண்ணார் கோயிலடைந்தோர் கற்றோரே. | மரங்கள் செழித்து வளர்ந்துள்ள காட்டில் வாழ்ந்த உயர்ந்த பெரிய யானையை, மணம் பொருந்திய மலர் மாலையை அணிந்துள்ள உமையம்மை அஞ்சுமாறு உரித்தவரும், அடர்ந்த பசுமை நிறம் பொருந்தி உயர்ந்து வளர்ந்துள்ள கல்லால மர நிழ–ல் அமர்ந்து வேதங்களின் உட்பொருளைச் சனகாதி முனிவர்க்கு இவ்வுலகத்தே உரை செய்து உணர்த்தியவருமாகிய சிவபெருமான் கருவறையில் தங்கியிருக்கின்ற கோயிலை அடைந்தவர்கள் முழுமையான கல்வியறிவின் பயனை அடைந்தோராவர். |
| 1095. | மறுமாணுருவாய் மற்றிணையின்றி வானோரைச்<br>செறுமாவ–பாற் சென்றுலகெல்லா மளவிட்ட<br>குறுமாணுருவன் றற்குறியாகக் கொண்டாடும்<br>கறுமாகண்டன் மேயதுகண்ணார் கோயிலே. | வஞ்சகம் பொருந்திய மனத்தோடு பெரிய உருவம் உடையனவாய், தனக்கு ஒப்பார் இல்லாதவனாய், தேவர்களைத் துன்புறுத்திய மாவ– என்ற அரக்கர் குல மன்னனிடம் சென்று அவனிடம் மூன்றடி மண் கேட்டு எல்லா உலகங்களையும் தனக்கே உரியவாய் அளவிட்டு அளந்த குள்ளமான பிரமசாரிய வடிவுடைய வாமனன், சிவபெருமானது வடிவாகத் தாபித்து வழிபட, அவனுக்கு அருள் செய்த நீல மறுப் பொருந்திய கண்டனாகிய சிவபிரான் மேவிய ஊர், கண்ணார் கோயிலாகும். |
| 1096. | விண்ணவருக்காய் வேலையுணஞ்சம் விருப்பாக<br>உண்ணவனைத்தே வர்க்கமுதீந்தெவ் வுலகிற்கும்<br>கண்ணவனைக்கண் ணார்திகழ்கோயிற் கனிதன்னை<br>நண்ணவல்லோர்கட் கில்லைநமன்பால் நடலையே. | விண்ணவர்களைக் காத்தற் பொருட்டுக் கடலுள் தோன்றிய நஞ்சினை விருப்போடு உண்டவனை, தேவர்களுக்கு அமுதம் அளித்து எவ்வுலகிற்கும் பற்றுக்கோடாய் விளங்குபவனை, விளக்கமான கண்ணார் கோயிலுள் விளங்கும் களி போல்பவனை நண்ணி வழிபட வல்லவர்கட்கு, நமனால் வரும் துன்பங்கள் இல்லை. |
| 1097. | முன்னொருகாலத் திந்திரனுற்ற முனிசாபம்<br>பின்னொருநாளவ் விண்ணவரேத்தப் பெயர்வெய்தித்<br>தன்னருளாற்கண் ணாயிரமீந்தோன் சார்பென்பர்<br>கன்னியர்நாளுந் துன்னமர்கண்ணார் கோயிலே. | முன்னொரு காலத்தில் கௌதம முனிவரால் விளைந்த சாபத்தால் உடல் எங்கும் பெண் குறிகளோடு வருந்தித் தன்னை வழிபட்ட இந்திரனுக்குப் பின்னொரு நாளில் தேவர்கள் புகழ்ந்து போற்றுமாறு தண்ணருளோடு அச்சாபத்தைப் போக்கி அவற்றை ஆயிரம் கண்களாகத் தோன்றுமாறு அருள் செய்த சிவபிரான் எழுந்தருளிய இடம், கன்னியர்கள் நாள்தோறும் கூடி வந்து வழிபடும் தலமாகிய கண்ணார் கோயில் என்பர். |
| 1098. | பெருக்கெண்ணாத பேதையரக்கன் வரைக்கீழால்<br>நெருக்குண்ணாத்தன் னீள்கழனெஞ்சில் நினைந்தேத்த<br>முருக்குண்ணாதோர் மொய்கதிர்வாள்தேர் முன்னீந்த<br>திருக்கண்ணாரென் பார்சிவலோகஞ் சேர்வாரே. | அன்போடு வழிபட்டால் ஆக்கம் பெறலாம் என்று எண்ணாத அறிவி–யாகிய இராவணன் கயிலையைப் பெயர்த்த போது அதன்கீழ் அகப்பட்டு நெருக்குண்டு நல்லறிவு பெற்று விரிந்த புகழை உடைய தன் திருவடிகளை அவன் நெஞ்சினால் நினைந்து போற்றிய அளவில் அவனுக்கு அழிக்கமுடியாத, ஒளியினை உடைய வாளையும் தேரையும் முற்காலத்தில் வழங்கியருளிய சிவபிரான் வீற்றிருக்கும் தலமாகிய திருக்கண்ணார் கோயில் என்று கூறுவார் சிவலோகம் சேர்வர். |

1099. செங்கமலப்போ திற்றிகழ்செல்வன் றிருமாலும்
அங்கமலக்கண் ணோக்கரும்வண்ணத் தழலானான்
தங்கமலக்கண் ணார்திகழ்கோயில் தமதுள்ளம்
அங்கமலத்தோ டேத்திடவண்டத் தமர்வாரே.

செந்தாமரைப் போதில் வீற்றிருக்கும் பிரமனும் திருமாலும் அழகிய தங்கள் கமலம் போன்ற கண்களால் நோக்கிக் காணுதற்கரிய அழலுருவாய் நின்ற பெருமான் தன் கருணை நிறைந்த கமலக் கண்களோடு வீற்றிருக்கும் தலமாகிய கண்ணார் கோயிலை அடைந்து அங்குத் தம் உள்ளத்தில் மலம் நீங்கப் பெற்றவராய் ஏத்திடுவோர் வானுலகில் இனிது உறைபவராவர்.

1100. தாறிடுபெண்ணைத் தட்டுடையாருந் தாமுண்ணும்
சோறுடையார்சொற்றேறன்மின்வெண்ணூல் சேர்மார்பன்
ஏறுடையன்பர னென்பணிவானீள் சடைமேலோர்
ஆறுடையண்ணல் சேர்வதுகண்ணார் கோயிலே.

குலைகளை ஈனும் பனை மரத்தின் ஓலைகளால் வேயப்பட்ட தடுக்கை உடையாக உடுத்தித் திரியும் சமணரும், தாம் உண்ணும் சோற்றையே பெரிதெனக் கருதும் புத்தரும் கூறும் அறிவுரைகளைக் கேளாதீர். வெண்மையான பூநூல் அணிந்த மார்பினனும், ஆனேற்றை ஊர்தியாக உடையவனும், மேலானவனும், என்பு மாலை அணிபவனும், நீண்ட சடைமுடி மேல் கங்கையை அணிந்துள்ளவனுமாகிய தலைமைத் தன்மை உடைய சிவபிரான் எழுந்தருளி விளங்கும் தலம் கண்ணார் கோயிலாகும். அதனைச் சென்று தொழுமின்.

1101. காமருகண்ணார் கோயிலுளானைக் கடல்சூழ்ந்த
பூமருசோலைப் பொன்னியன்மாடப் புக–க்கோன்
நாமருதொன்மைத் தன்மையுண்ஞான சம்பந்தன்
பாமருபாடல் பத்தும்வல்லார்மேற் பழிபோமே.

அழகிய திருக்கண்ணார் கோயில் என்னும் தலத்துள் விளங்கும் சிவபெருமானை, கடல் ஒரு புடைசூழ்ந்ததும், பூக்கள் நிறைந்த சோலைகளை உடையதும் அழகியதாய் அமைந்த மாட வீடுகளைக் கொண்டதுமான புக–ப் பதியின் தலைவனும், பழமையான இறை புகழை, நாவினால் மருவிப் போற்றுபவனும் ஆகிய ஞானசம்பந்தன் பாடிப் பரவிய ஓசையோடு திகழும் இப்பதிகப் பாடல்கள் பத்தினாலும் போற்றி வழிபட வல்லவர்கள், தம் மேல் வரும் பழிகள் நீங்கப் பெறுவர்.

## 102. சீகாழி

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 102

1102. உரவார்கலையின் கவிதைப்புலவர்க் கொருநாளுங்
கரவாவண்கைக் கற்றவர்சேருங் க–க்காழி
அரவாரரையா வவுணர்புரமூன் றெரிசெய்த
சரவாவென்பார் தத்துவஞானத் தலையாரே.

ஞானம் நிறைந்த கலை உணர்வோடு, கவிதைகள் பாடும் புலவர்களுக்கு ஒரு நாளும் கரவாத வள்ளன்மை மிக்க கைகளை உடைய கற்றவர்கள் வாழும் ஒ–மிக்க காழி மாநகரில் விளங்கும் பாம்பை இடையில் அணிந்துள்ள பரமனே! அசுரர்களின் முப்புரங்களையும் எரித்த அம்பை ஏந்தியவனே! என்று போற்றுபவர், தத்துவ ஞானத்தில் தலையானவராவர்.

| | | |
|---|---|---|
| 1103. | மொய்சேர்வண்டுண் மும்மதநால்வாய் முரண்வேழக்<br>கைபோல்வாழை காய்குலையீனுங் க–க்காழி<br>மைசேர்கண்டத் தெண்டோண்முக்கண் மறையோனே<br>ஐயாவென்பார்க் கல்லல்களான வடையாவே. | சூழ்ந்து மொய்த்தலை உடைய வண்டுகள் தங்கி உண்ணும் மும்மதங்களையும், தொங்குகின்ற வாயையும், முரண்படு தலையும் உடைய களிற்று யானையின் கை போல வாழை மரங்கள் காய்களை ஈனும் ஒ– நிறைந்த காழிப் பதியில், நீலகண்டனாய் எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும் உடையவனாய் விளங்கும் மறையோனே! தலைவனே! என்பவர்களை அல்லல்கள் அடையா. |
| 1104. | இளகக்கமலத் தீன்களியங்குங் கழிசூழக்<br>களகப்புரிசைக் கவினார்சாருங் க–க்காழி<br>அளகத்திருநன் னுத–பங்கா வரனேயென்<br>றுளகப்பாடு மடியார்க்குறுநோ யடையாவே. | முறுக்கவிழ்ந்த தாமரை மலர்கள் பி–ற்றிய தேன் ஓடுகின்ற கழிகள் சூழப் பெற்றதும், சுண்ணாம்பினால் இயன்ற அழகு பொருந்திய மதில்களை உடையதுமான, ஆரவாரம் மிக்க காழிப்பதியில் அழகிய கூந்தலையும் நல்ல நெற்றியையும் உடைய உமையம்மையின் கணவனே, அரனே! என்று மனம் உருகிப் பாடும் அடியவர்களை மிக்க துன்பங்கள் எவையும் அடையா. |
| 1105. | எண்ணார்முத்த மீன்றுமரகதம் போற்காய்த்துக்<br>கண்ணார்கமுகு பவளம்பழுக்குங் க–க்காழிப்<br>பெண்ணோர்பாகா பித்தாபிரானே யென்பார்க்கு<br>நண்ணாவினைகள் நாடொறுமின்பம் நணுகும்மே. | அழகிய கமுக மரங்கள், எண்ணத்தில் நிறையும் அழகிய முத்துக்களைப் போல அரும்பி மரகதம் போலக் காய்த்துப் பவளம் போலப் பழுக்கும் ஆரவாரம் மிக்க காழிப் பதியில் விளங்கும் பெண்ணோர் பாகனே! பித்தனே! பிரானே! என்பவர்களை வினைகள் நண்ணா. நாள்தோறும் அவர்கட்கு இன்பங்கள் வந்து சேரும். |
| 1106. | மழையார்சாரற் செம்புனல்வந்தங் கடிவருடக்<br>கழையார்கரும்பு கண்வளர்சோலைக் க–க்காழி<br>உழையார்கரவா வுமையாள்கணவா வொளிர்சங்கக்<br>குழையாவென்று கூறவல்லார்கள் குணவோரே. | மேகங்கள் தங்கிய குடதிசை மலைச் சாரல்களி–ருந்து சிவந்த நிறமுடைய தண்ணீர் வந்து அடிகளை வருட, அதனால் மூங்கில் போன்று பருத்த கரும்புகளில் கணுக்கள் வளரும் சோலைகளை உடைய ஒ–மிக்க சீகாழிப் பதியில் எழுந்தருளிய மானேந்திய கையனே, உமையம்மையின் கணவனே! ஒளி பொருந்திய சங்கக் குழையை அணிந்தவனே என்று கூறிப் போற்ற வல்லவர்கள் குணம் மிக்கவராவர். |
| 1107. | குறியார்திரைகள் வரைகணின்றுங் கோட்டாறு<br>கறியார்கழிசம் பிரசங்கொடுக்குங் க–க்காழி<br>வெறியார்கொன்றைச் சடையாவிடையா வென்பாரை<br>அறியாவினைக எருநோய்பாவம் மடையாவே. | தாள ஒ–க் குறிப்போடு கூடிய அலைகளை உடைய, மலைகளி–ருந்து வரும் அருவிகள் இரு கரைகளுக்கும் உள்ளடங்கிய ஆறாக அடித்துக் கொண்டு வரும் மிளகின் கொடித் தண்டுகளின் சுவையைத் தன் தண்ணீருக்கு வழங்கும். ஆரவாரம் மிக்க காழிப் பதியில் எழுந்தருளிய மணம் கமழும் கொன்றை மலர் மாலையை அணிந்த சடையினனே! விடையை ஊர்ந்து வருபவனே! என்று கூறுபவரை வினைகள் அறியாது அகலும். அவர்களை அரிய நோய்கள் பாவங்கள் அடைய மாட்டா. |

1108. உலங்கொள்சங்கத் தார்க–யோதத் துதையுண்டு
கலங்கள் வந்து கார்வயலேறுங் க–க்காழி
இலங்கைமன்னன் றன்னையிடர்கண் டருள்செய்த
சலங்கொள்சென்னி மன்னாவென்னத் தவமாமே.

வ–ய சங்குகளை உடைய கட–னது வெள்ளத்தால் மோதப்பட்டுத் தோணிகள் வந்து கரிய வய–ன்கண் சேரும் ஒ–மிக்க சீகாழியில் எழுந்தருளிய, இலங்கை மன்னன் இராவணனை முத–ல் துன்புறுத்திப்பின் அருள் செய்த, கங்கை சூடிய திருமுடியினை உடைய மன்னவனே! என்று சிவபிரானைப் போற்றத்தவம் கைகூடும்.

1109. ஆவிக்கமலத் தன்னமியங்குங் கழிசூழக்
காவிக்கண்ணார் மங்கலமோவாக் க–க்காழிப்
பூவிற்றோன்றும் புத்தேளொடுமா லவன்றானும்
மேவிப்பரவு மரசேயென்ன வினைபோமே.

ஓடைகளில் உள்ள தாமரை மலர்களில் வாழும் அன்னங்கள் நடமாடும் உப்பங்கழிகள் சூழ்ந்திருப்பதும், நீலமலர் போன்ற கண்களை உடைய மகளிரது மங்கல ஒ– ஓவாது கேட்பதுமாகிய செழிப்புமிக்க சீகாழியில் தாமரை மலர் மேல் உறையும் பிரமனும் திருமாலும் வந்து பரவும் அரசனாக விளங்கும் பெருமானே என்று சொல்ல நம் வினைகள் போகும்.

1110. மலையார்மாட நீடுயரிஞ்சி மஞ்சாருங்
கலையார்மதியஞ் சேர்தருமந்தண் க–க்காழித்
தலைவாசமணர் சாக்கியர்க்கென்று மறிவொண்ணா
நிலையாயென்னத் தொல்வினையாய நில்லாவே.

மலை போலுயர்ந்த மாட வீடுகளின், மேகங்கள் தவழும் நீண்டுயர்ந்த மதில்களில் கலைகள் நிறைந்த மதி வந்து தங்கும் அழகிய குளிர்ந்த ஒ–மிக்க காழிப் பதியின் தலைவனே! சமண புத்தர்களால் என்றும் அறிய ஒண்ணாத நிலையினனே! என்று போற்ற நம் தொல்வினைகள் நில்லா.

1111. வடிகொள்வாவிச் செங்கழுநீரிற் கொங்காடிக்
கடிகொள்தென்றல் முன்றினில்வைகுங் க–க்காழி
அடிகள்தம்மை யந்தமின்ஞான சம்பந்தன்
படிகொள்பாடல் வல்லவர் தம்மேற் பழிபோமே.

தேன் மணங் கொண்ட வாவியில் மலர்ந்த செங்கழு நீர்ப் பூவின் மகரந்தங்களில் படிந்து அவற்றின் மணத்தைக் கொண்ட தென்றல், முன்றி–ல் வந்து உலாவும் ஒ–மிக்க காழிப் பதியில் வீற்றிருக்கும் அடிகளை, முடிவற்ற புகழை உடைய ஞானசம்பந்தன் இவ்வுலகிடைப் போற்றிப் பாடிய பாடல்களை வல்லவர்கள் மேல் வரும் பழிகள் போகும்.

## 103. திருக்கழுக்குன்றம்

பண் : குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 103

1112. தோடுடையானொரு காதிற்றூய குழைதாழ
ஏடுடையான் றலைகலனாக விரந்துண்ணும்
நாடுடையா னள்ளிருளேம நடமாடும்
காடுடையான் காதல்செய்கோயில் கழுக்குன்றே.

ஒரு காதில் தோடும் பிறிதொரு காதில் தூய குழையும் தாழ்ந்து தொங்கத், தாமரை மலரில் தங்கும் பிரமனின் தலையோட்டை உண்கலனாகக் கொண்டு இரந்துண்ணும் நாடுகளை உடையவன். நள்ளிருள் யாமத்தில் மகிழ்வோடு சுடுகாட்டில் நடனம் ஆடுபவன். அத்தகையோன் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக் குன்றமாகும்.

பாட வேண்டிய பதிகம் எண் 126

திருஏகபாதம் - 127

திருஎழுகூற்றிருக்கை – 128

## VII) முதல் திருமுறையின் ஏழாம் பண் மேகராகக் குறிஞ்சி

ஏழு திருப்பதிகங்கள் + யாழ் மூரிப்பதிகம், இப்பதிகங்களில் 4 யாப்பு விகற்பங்கள்
"பாவு புகழ் மேகராகக் குறிஞ்சிப் பாலிரண்டு" - திருமுறைகண்ட புராணம்

### கட்டளை – I

சேவுயருந் திண்கொடியான் திருவடியே சரணென்று சிறந்த அன்பால்
கூவிளங்காய் கூவிளங்காய் கருவிளங்காய் புளிமாங்காய் புளிமா தேமா

பாட வேண்டிய பதிகம் எண்கள் 129, 130, 131, 132

### கட்டளை – II

வெந்த வெண்பொடிப் பூசுமார் பின்விரி நூலொரு பால்பொருந்த
தான தானன தானன தானன தானன தானதனா

பாட வேண்டிய பதிகம் எண் 133

### கட்டளை – III

கருத்தன் கடவுள் கனலேந்தி யாடும்
தனனா தனனா தனதானா தானா

பாட வேண்டிய பதிகம் எண் 134

### கட்டளை – IV

நீறு சேர்வதொர் மேனியர் நேரிழை
தான தானன தானன தானன

கூறு சேர்வதொர் கோலமாய்
தான தானன தானனா

பாட வேண்டிய பதிகம் எண் 135

யாழமூரிக்கு என்ன பண் என்று குறிக்கப் பெறாத நிலையில் அது மேகராகக் குறிஞ்சிக்கு அடுத்ததாக முதல் திருமுறையின் ஈற்றில் வைக்கப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| 1113. | கேணவல்லான் கேழல்வெண்கொம்பு குறளாமை<br>பூணவல்லான் புரிசடைமேலொர் புனல்கொன்றை<br>பேணவல்லான் பெண்மகள்தன்னை யொருபாகம்<br>காணவல்லான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. | திருமாலாகிய பன்றியினது வெண்மையான கொம்பை அகழ்ந்து அணிய வல்லவன். வாமனனாக அவதரித்த திருமா—ன் கூர்மாவதார ஆமையோட்டினை அணிகலனாகக் கோத்துப் பூண வல்லவன். முறுக்கிய சடைமுடிமேல் ஒப்பற்ற கங்கை, கொன்றை மாலை ஆகியவற்றை விரும்பி அணிபவன். பெண்ணின் நல்லவளான உமையம்மையைத் தன் திருமேனியின் ஒரு பாகமாகக் காணுமாறு செய்தருளியவன். அத்தகையோன் காதல் செய்யும் கோயில் திருக்கழுக்குன்றமாகும். |
| 1114. | தேனகத்தார் வண்டதுவுண்ட திகழ்கொன்றை<br>தானகத்தார் தண்மதிசூடித் தலைமேலோர்<br>வானகத்தார் வையகத்தார்கள் தொழுதேத்தும்<br>கானகத்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. | தேனை அகத்தே இருந்து வண்டுகள் உண்ட, விளங்கிய கொன்றை மாலையைச் சூடிய தலையில் மதியைச் சூடி, வானகத்தவரும், வையகத்தவரும் தொழுதேத்தும் வண்ணம் சுடுகாட்டைத் தனக்கு இடமாகக் கொண்ட இறைவன் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக்குன்றம். |
| 1115. | துணையல்செய்தான் றூயவண்டியாழ்செய் சுடர்க்கொன்றை<br>பிணையல்செய்தான் பெண்ணினல்லானை யொருபாகம்<br>இணையல்செய்யா விலங்கெயின்மூன்று மெரியுண்ணக்<br>கணையல்செய்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. | வண்டுகள் யாழ்போல் ஒ—த்து மொய்க்கும் தூய ஒளி நிறைந்த கொன்றை மாலையை அணிந்தவனும், பெண்ணின் நல்லவளான உமையம்மையைக்கூடி அவளைத்தன் உட—ல் ஒரு பாகமாகப் பிணைத்திருப்பவனும், தன்னோடு இணைந்து வாராத புரங்கள் மூன்றையும் எரி உண்ணுமாறு கணையை விடுத்தவனுமாகிய சிவபிரான் காதல் செய்யும் கோயில், கழுக்குன்றம் ஆகும். |
| 1116. | பையுடைய பாம்பொடுநீறு பயில்கின்ற<br>மெய்யுடையான் வெண்பிறைசூடி விரிகொன்றை<br>மையுடைய மாமிடற்றண்ணன் மறிசேர்ந்த<br>கையுடையான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. | நச்சுப் பையையுடைய பாம்போடு திருநீறு அணிந்த திருமேனியை உடையவனும், வெண்பிறையையும், விரிந்த கொன்றையையும் முடியில் சூடியவனும், விடம் பொருந்திய மிடற்றினை உடைய தலைமையாளனும், மானேந்திய கையை உடையவனுமாகிய சிவபிரான் விரும்பி உறையும் கோயில் கழுக்குன்றம் ஆகும். |
| 1117. | வெள்ளமெல்லாம் விரிசடைமேலோர் விரிகொன்றை<br>கொள்ளவல்லான் குரைகழலேத்துஞ் சிறுத்தொண்டர்<br>உள்ளமெல்லா முள்கிநின்றாங்கே யுடனாடும்<br>கள்ளம்வல்லான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. | விரிந்த சடைமுடியின்மேல் வெள்ளமாகப் பெருகி வந்த கங்கையின் அனைத்து நீரையும் விரிந்த கொன்றை மாலையோடு சூடியிருப்பவனும், தனது ஒ—க்கின்ற கழல் அணிந்த திருவடிகளை ஏத்தித் துதிக்கும் சிறிய தொண்டர்களின் உள்ளமெல்லாம் நிறைந்து, அவர்கள் தியானித்து நின்று ஆடத் தானும் உடன் ஆடும் கள்ளம் வல்லவனுமாகிய, சிவபிரான் காதல் செய்யும் கோயில் கழுக்குன்றம் ஆகும். |

| | | |
|---|---|---|
| 1118. | ஆதல்செய்தா னரக்கர்தங்கோனை யருவரையின்<br>நோதல்செய்தா னொடிவரையின்கண் விரலூன்றிப்<br>பேர்தல்செய்தான் பெண்மகள்தன்னோ டொருபாகம்<br>காதல்செய்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. | அரக்கர் கோனை அரிய கயிலை மலையின்கீழ் அகப்படுத்தி, நொடிப்பொழுதில் கால் விரலை ஊன்றி, அவனை நோதல் செய்தவனும், பிறகு அவனுக்கு ஆக்கம் வழங்கியவனும், பெண்மகளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு காதல் செய்தவனுமாகிய சிவபிரான் காதல் செய்யும் கோயில் கழுக்குன்றம் ஆகும். |
| 1119. | இடந்தபெம்மா னேனமதாயு மனமாயும்<br>தொடர்ந்தபெம்மான் றூமதிசூடி வரையார்தம்<br>மடந்தைபெம்மான் வார்கழலோச்சிக் காலனைக்<br>கடந்தபெம்மான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. | அடிமுடி காணப் பன்றி உருவோடு நிலத்தை அகழ்ந்து சென்ற திருமாலும், அன்னமாய்ப் பறந்து சென்ற நான்முகனும், தொடர்ந்த பெருமானாய், தூய மதியை முடியிற் சூடியவன், மலைமகளின் தலைவன், வார்கழலணிந்த திருவடியை உயர்த்திக் காலனைக் காய்ந்தவன் ஆகிய சிவபிரான் காதல் செய்யும் கோயில் கழுக்குன்றம் ஆகும். |
| 1120. | தேயநின்றான் றிரிபுரங்கங்கை சடைமேலே<br>பாயநின்றான் பலர்புகழ்ந்தேத்த வுலகெல்லாம்<br>சாயநின்றான் வன்சமண்குண்டர் சாக்கீயர்<br>காயநின்றான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. | முப்புரங்களை அழியுமாறு செய்தவனும், பெருகி வந்த கங்கை தன் சடை மேல் பாய நின்றவனும், பலரும் புகழ்ந்து போற்ற உலகனைத்தும் ஊழி இறுதியில் அழியுமாறு நின்றவனும், வ–ய சமண் குண்டர்களும், புத்தர்களும் கெடுமாறு நின்றவனும் ஆகிய சிவபிரான் காதல் செய்யும் கோயில் கழுக்குன்றமாகும். |
| 1121. | கண்ணுதலான் காதல்செய்கோயில் கழுக்குன்றை<br>நண்ணியசீர் ஞானசம்பந்தன் றமிழ்மாலை<br>பண்ணியல்பாற் பாடியபத்து மிவைவல்லார்<br>புண்ணியராய் விண்ணவரோடும் புகுவாரே. | நெற்றியில் கண்ணுடையவனாகிய சிவபிரான் காதல் செய்யும் கோயிலாகிய திருக்கழுக் குன்றத்தைப் புகழ் பொருந்திய ஞானசம்பந்தன் பண் அமைதியோடு பாடிய தமிழ் மாலையாகிய பத்துப் பாடல்களையும் பாடிப் போற்றுபவர் புண்ணியராய்த் தேவர்களோடு வானுலகம் புகுவர். |

## வியாழக்குறிஞ்சி

இது குறிஞ்சிப் பெரும்பண்ணின் ஏழாவது திறமாகிய அரற்று என்ற திறத்தில் பெருகியல் பண்ணாக 64 என்ற எண் பெற்றுள்ளது. இப்பண்ணைச் சம்பந்தர் மட்டுமே பாடியுள்ளார். திருமுறை 1.104–128, இதுவும் இராப்பண். இதன்சுவை பெருமிதம். அவ்வினைக் கிவ்வினை – என்ற திருநீலகண்டப் பதிகம், பல திருவிராகப் பதிகங்கள், பந்தத்தால் வந்தெப்பால் என்ற திருத்தாளச்சதி, ஏகபாதம், எழுகூற்றிருக்கை ஆகிய பதிகங்கள் இப்பண்ணில் உள்ளன. இது சௌராஷ்டர இராகமென்று சொல்லப்பெறும்.

## 104. திருப்புகலி

பண் : வியாழக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 104

1122. ஆட லரவசைத்தா னருமாமறை தான்விரித்தான் கொன்றை
சூடிய செஞ்சடையான் சுடுகா டமர்ந்தபிரான்
ஏடவிழ் மாமலையா ளொருபாக மமர்ந்தடியா ரேத்த
ஆடிய வெம்மிறையூர் புக–ப் பதியாமே.

படம் எடுத்து ஆடும் பாம்பினை இடையில் கட்டியவனும், அரிய பெரிய வேதங்களை அருளிச் செய்தவனும், கொன்றை மலர் மாலையைச் சூடிய செஞ்சடை முடியை உடையவனும், சுடுகாட்டைத் தனது இருப்பிடமாகக் கொண்டு உறைபவனும், இதழ் அவிழும் மலர்கள் பூத்த பெரிய இமய மலை அரசனின் புதல்வியாகிய பார்வதி தேவியை ஒரு பாகமாக விரும்பி ஏற்று அடியவர் போற்ற நடனம் ஆடியவனும் ஆகிய எம் இறைவனது ஊர் புக–ப் பதியாகும்.

1123. ஏல ம–குழலா ரிசைபாடி யெழுந்தருளாற் சென்று
சோலை ம–சுனையிற் குடைந்தாடித் துதிசெய்ய
ஆலை ம–புகைபோ யண்டர்வானத்தை மூடிநின்று நல்ல
மாலை யதுசெய்யும் புக–ப் பதியாமே.

மயிர்ச் சாந்தணிந்த கூந்த–னை உடைய மகளிர் காலையில் எழுந்து இசை பாடிக் கொண்டு இறையருள் பெறும் வேட்கையோடு சென்று சோலையின்கண் விளங்கும் சுனையில் துளைந்து நீராடித் துதி செய்ய, கரும்பு ஆலைகளில் நிறைந்தெழுந்த புகை சென்று தேவர்கள் உறையும் வானகத்தை மூடி நின்று காலையை நல்ல மாலைப் போதாகச் செய்வது புக–ப் பதியாம். மகளிர் நீராடித் துதி செய்ய விளங்குவது புக–ப் பதி என முடிவு காண்க.

| | | |
|---|---|---|
| 1124. | ஆறணி செஞ்சடையா னழகார்புர மூன்றுமன்று வேவ<br>நீறணி யாகவைத்த நிமிர்புன்சடை யெம்மிறைவன்<br>பாறணி வெண்டலையிற் பகலேப– யென்றுவந்து நின்ற<br>வேறணி கோலத்தினான் விரும்பும் புக–யதே. | கங்கை சூடிய செஞ்சடையினை உடையவனும், அழகமைந்த முப்புரங்களைத் தீயால் வேவச் செய்தவனும், திருநீற்றைத் தன் திருமேனியில் அழகாகப் பூசியவனும், மேல்நோக்கிய சிவந்த சடையை உடைய எம் இறைவனும், பருந்து சூழும் வெள்ளிய தலையோட்டை ஏந்திப் பக–ல் ப–இடுக என்று வந்து நிற்பவனும் வேறுபாடு உடையனவாய்ப் புனையப் பெற்ற கோலத்தினனும் ஆகிய சிவபிரான் விரும்பும் தலம் புக–யாகும். |
| 1125. | வெள்ள மதுசடைமேற் கரந்தான் விரவார்புரங்கண் மூன்றுங்<br>கொள்ள வெரிமடுத்தான் குறைவின்றி யுறைகோயில்<br>அள்ளல் விளைகழனி யழகார்விரைத் தாமரைமே லன்னம்<br>புள்ளினம் வைகியெழும் புக–ப் பதிதானே. | பெருகி வந்த கங்கை வெள்ளத்தைச் சடைமேல் கரந்தவனும், பகைவர்களாகிய அசுரர்களின் புரங்கள் மூன்றையும் எரிமடுத்தவனும் ஆகிய சிவபிரான் குறைவிலா நிறைவோடு உறையும் கோயில், சேறு நிறைந்த வயல்களில் முளைத்த அழகிய மணங்கமழும் தாமரை மலர்கள் மேல் அன்னமும் பிற பறவைகளும் வந்து தங்கிச் செல்லும் புக–ப் பகுதியாகும். |
| 1126. | சூடு மதிச்சடைமேற் சுரும்பார்மலர்க் கொன்றைதுன்ற<br>நட்டம்<br>ஆடு மமரர்பிரா னழகாருமை யோடுமுடன்<br>வேடு படநடந்த விகிர்தன் குணம்பரவித் தொண்டர்<br>பாட வினிதுறையும் புக–ப் பதியாமே. | மதி சூடிய சடையின்மீது வண்டுகள் மொய்க்கும் கொன்றை மலர்களைப் பொருந்துமாறு அணிந்து நடனம் ஆடும் தேவர் பிரானும், அழகிய உமையம்மையோடு உடனாய் வேட்டுவக் கோலத்தோடு தோன்றி அருச்சுனற்கு அருள்புரிய நடந்த வேறுபாடுடையவனும் ஆகிய சிவபிரானின் குணங்களைப் போற்றித் தொண்டர்கள் பாட அப்பெருமான் இனிதுறையும் பதி புக–யாகும். |
| 1127. | மைந்தணி சோலையின்வாய் மதுப்பாய்வரிவண்டினங்கள்<br>வந்து<br>நந்திசை பாடநடம் பயில்கின்ற நம்பனிடம்<br>அந்திசெய் மந்திரத்தா லடியார்கள் பரவியெழ விரும்பும்<br>புந்திசெய் நான்மறையோர் புக–ப் பதிதானே. | இளமை குன்றாத மரங்களை உடைய அழகிய சோலையின்கண் மலர்ந்த பூக்களின் தேனில் பரவிய வரி வண்டுகள் வந்து வளரும் இசையைப் பாட நடம் பயிலும் பெருமானது இடம், அந்திக் காலங்களில் செய்யும் சந்தியாவந்தன மந்திரங்களால் அடியார்களாய்ப் போற்றுவதற்கு நான்கு வேதங்களிலும் வல்ல அந்தணர் விருப்போடு தமது புந்தியில் நினைக்கும் புக–ப் பதியாகும். |

| | | |
|---|---|---|
| 1128. | மங்கையோர் கூறுகந்த மழுவாளன் வார்சடைமேற் றிங்கள்<br>கங்கை தனைக்கரந்த கறைக்கண்டன் கருதுமிடஞ்<br>செங்கயல் வார்கழனி திகழும் புக–தனைச் சென்றுதம்<br>அங்கையி னாற்றொழுவா ரவலம் மறியாரே. | உமையம்மையைத் தனது திருமேனியில் ஒரு பாகமாகக்கொண்டு மகிழ்பவனும், மழுவாயுதத்தை கையில் ஏந்தியவனும், நீண்ட சடைமேல் திங்களையும், கங்கையையும் அணிந்தவனும், விடக் கறை பொருந்திய மிடற்றினனும் ஆகிய சிவபிரான் கருதி உறையும் இடமாகிய சிவந்த கயல் மீன்கள் திகழும் நீண்ட வயல்களோடு விளங்கும் திருப்புக–க்குச் சென்று தம் அழகிய கைகளைக் குவித்து வணங்குபவர் துன்பங்கள் நீங்கப் பெறுவர். |
| 1129. | வில்–ய நுண்ணிடையாளுமையாள் விருப்பனவ னண்ணும்<br>நல்–ட மென்றறியா ன–யும் விறலரக்கன்<br>பல்லொடு தோளெரிய விரலூன்றிப் பாடலுமே கைவாள்<br>ஒல்லை யருள்புரிந்தா னுறையும் புக–யதே. | ஒளி பொருந்திய நுண்ணிய இடையினை உடைய உமையவளிடம் பெருவிருப்பினனாகிய சிவபிரான் எழுந்தருளிய மேம்பட்ட இடம் என்று கருதாது கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த வ–ய அரக்கனாகிய இராவணனின் பற்களும் தோள்களும் நெரியுமாறு கால்விரலை ஊன்றி அடர்த்த அளவில் அவன் தன்னைப் புகழ்ந்து பாடக் கேட்டுக் கையில் ஏந்திப் போர் செய்யும் வாளை விரைந்து அருள்புரிந்தவனாகிய சிவபிரான் உறையுமிடம் திருப்புக–யாகும். |
| 1130. | தாதலர் தாமரைமே லயனுந் திருமாலுந் தேடி<br>ஓதியுங் காண்பரிய வுமைகோ னுறையுமிடம்<br>மாதவி வான்வகுள மலர்ந்தெங்கும் விரைதோய வாய்ந்த<br>போதலர் சோலைகள்சூழ் புக–ப் பதிதானே. | மகரந்தம் விரிந்த தாமரை மலர் மேல் உறையும் பிரமனும் திருமாலும் தேடியும் புகழ்ந்தும் காண்டற்கு அரியவனாய் நின்ற உமை மணவாளனாம் சிவன் உறையுமிடம், மாதவி, வானளாவ உயர்ந்த மகிழமரம் ஆகியன மலர்ந்து எங்கும் மணம் பரப்புமாறு பொருந்திய மலர் விரிந்த சோலைகள் சூழ்ந்த புக–ப் பதியாகும். |
| 1131. | வெந்துவர் மேனியினார் விரிகோவண நீத்தார் சொல்லும்<br>அந்தர ஞானமெல்லா மவையோர் பொருளென்னேல்<br>வந்தெதி ரும்புரமூன் றெரித்தா னுறைகோயில் வாய்ந்த<br>புந்தியி னார்பயிலும் புக–ப் பதிதானே. | கொடிய மருதத் துவராடை உடுத்த மேனியினராகிய புத்தர்களும் விரிந்த கோவணம் உடுப்பதையும் துறந்த திகம்பர சமணரும் சொல்லும் அழிவுதரும் ஞானங்களாகிய அவற்றை ஒரு பொருளாகக் கொள்ளாதீர். தம்மை வந்தெதிர்த்த திரிபுரங்களை எரித்தவனாகிய சிவபிரான் உறையும் கோயில், பொருந்திய அறிவு உடையவர் வாழும் புக–ப் பதியாகும். அதனைச் சென்று தொழுமின். |
| 1132. | வேதமோர் கீதமுணர் வாணர்தொழு தேத்த மிகுவாசப்<br>போதனைப் போன்மறையோர் பயிலும் புக–தன்னுள்<br>நாதனை ஞானமிகு சம்பந்தனன் றமிழ்மாலை நாவில்<br>ஓதவல் லாருலகி லுறுநோய் களைவாரே. | வேத கீதங்களை உணர்ந்து வாழ்பவர் தொழுது ஏத்தவும், மிக்க மணமுடைய தாமரை மலர் மேல் உறையும் நான்முகனைப் போல விளங்கும் மறையவர் போற்றவும், விளங்கும் புக–யுள் உறையும் சிவபிரானை ஞானம் மிகும் சம்பந்தன் பாடிய இத்தமிழ் மாலையை நாவினால் ஓதி வழிபட வல்லவர் மேம்பட்ட பிறவிப் பிணியை நீக்கிவிடுவர். |

## 105. திருவாரூர்

**பண் : வியாழக்குறிஞ்சி** — **முதல் திருமுறை பதிக எண் : 105**

| | | |
|---|---|---|
| 1133. | பாடல னான்மறையன் படிபட்ட கோலத்தன் றிங்கள்<br>சூடலன் மூவிலைய சூலம் வலனேந்திக்<br>கூடலர் மூவெயிலும்மெரியுண்ணக் கூரெரிகொண்<br>டெல்–<br>ஆடல னாதிரையன் ஆரூ ரமர்ந்தானே. | திருவாரூரின்கண் எழுந்தருளிய இறைவன் பாடப்படும் நான்கு வேதங்களை அருளியவன். ஒப்பற்ற தோற்றத்தை உடையவன். திங்களை முடியிற் சூடியவன். இலை வடிவமான முத்தலைச் சூலத்தை வலக் கரத்தே ஏந்தித் தன் பகைவராக இருந்த அசுரர்களின் முப்புரங்களையும் எரியுண்ணச் செய்தவன். மிக்க எரியைக் கையில் ஏந்தி நள்ளிரவில் நடம் புரிபவன். திருவாதிரை நாளை உகந்தவன். |
| 1134. | சோலையில் வண்டினங்கள் சுரும்போ டிசைமுரலச் சூழ்ந்த<br>ஆலையின் வெம்புகைபோய் முகில்தோயும் ஆரூரில்<br>பாலொடு நெய்தயிரும் பயின்றாடும் பரமேட்டி பாதம்<br>காலையு மாலையும்போய்ப் பணிதல் கருமமே. | சோலைகளில் வண்டுகளும், சுரும்புகளும் இசை முரலவும், சூழ்ந்துள்ள கரும்பாலைகளில் தோன்றும் விரும்பத்தக்க புகை மேல் நோக்கிச் சென்று வானத்திலுள்ள முகில்களில் தோய்வதுமான திருவாரூரில் பால், நெய், தயிர் ஆகியவற்றை விரும்பி ஆடும் மேலான இறைவன் திருவடிகளைக் காலை மாலை ஆகிய இரு போதுகளிலும் சென்று பணிவது நாம் செய்யத்தக்க கருமமாகும். |
| 1135. | உள்ளமோ ரிச்சையினா லுகந்தேத்தித்<br>தொழுமின்றொண்டீர் மெய்யே<br>கள்ள மொழிந்திடுமின் கரவா திருபொழுதும்<br>வெள்ளமோர் வார்சடைமேற்கரந்திட்ட வெள்ளேற் றான்மேய<br>அள்ள லகன்கழனி ஆரூர் அடைவோமே. | தொண்டர்களே! நீவிர் உள்ளத்தால் ஆராய்ந்தறிந்த விருப்போடு மகிழ்ந்து போற்றித் தொழுவீர்களாக. மறைக்காமல் உண்மையாகவே உம் நெஞ்சத்திலுள்ள கள்ளங்களை ஒழிப்பீர்களாக! காலை மாலை இரு போதுகளிலும் கங்கை வெள்ளத்தை ஒப்பற்ற நீண்ட தன் சடைமேல் மறையும்படி செய்தவனும், வெண்மையான ஆனேற்றை உடையவனுமான சிவபிரான் எழுந்தருளிய சேற்று வளம் மிக்க அகன்ற வயல்களால் சூழப்பெற்ற திருவாரூரை வழிபடுதற் பொருட்டு நாம் செல்வோம். |
| 1136. | வெந்துறு வெண்மழுவாட் படையான் மணிமிடற்றா<br>னரையின்<br>ஐந்தலை யாடரவ மசைத்தா னணியாரூர்ப்<br>பைந்தளிர்க் கொன்றையந்தார்ப் பரமன் னடிபரவப் பாவம்<br>நைந்தறும் வந்தணையும் நாடொறும் நல்லனவே. | அடியவர்களின் வினைகளை வெந்தறுமாறு செய்யும் வெண்மையான மழுவாளைக் கையில் ஏந்தியவனும், நீலமணி போன்ற கண்டத்தை உடையவனும், இடையில் ஐந்து தலையுடையதாய் ஆடும் பாம்பினைக் கட்டியவனும், அழகிய திருவாரூரில் பசுந்தளிர்களோடு கட்டிய கொன்றை மாலையை அணிந்தவனுமாகிய பரமனுடைய அடிகளைப் பரவ நம் பாவங்கள் நைந்து இல்லையாகும். நாள்தோறும் நமக்கு நல்லனவே வந்தணையும். |

| | | |
|---|---|---|
| 1137. | வீடு பிறப்பெளிதா மதனை வினவுதிரேல் வெய்ய<br>காடிட மாகநின்று கனலேந்திக் கைவீசி<br>ஆடு மவிர்சடையா னவன்மேய வாரூரைச் சென்று<br>பாடுதல் கைதொழுதல் பணிதல் கருமமே. | வீடு பேற்றை அடைதல் நமக்கு எளிதாகும். அதற்குரிய வழிகளை நீர் கேட்பீராயின் கூறுகிறேன். கொடிய சுடுகாட்டைத் தனக்குரிய இடமாகக் கொண்டு கனலை ஏந்திக் கைகளை வீசிக்கொண்டு ஆடுகின்ற விளங்கிய சடைமுடியை உடையவனாகிய சிவபிரான் எழுந்தருளிய திருவாரூரை அடைந்து பாடுதல், கைகளால் தொழுதல், பணிதல் ஆகியனவற்றைச் செய்தலே அதற்குரிய வழிகளாகும். |
| 1138. | கங்கையோர் வார்சடைமேற் கரந்தான் கிளிமழலைக் கேடில்<br>மங்கையோர் கூறுடையான் மறையான் மழுவேந்தும்<br>அங்கையி னானடியே பரவி யவன்மேய வாரூர்<br>தங்கையி னாற்றொழுவார் தடுமாற் றறுப்பாரே. | கங்கையை ஒப்பற்ற தனது நீண்ட சடைமுடி மேல் கரந்தவனும், கிளி போன்ற மழலை மொழி பேசும் கேடில்லாத உமைமங்கையை ஒரு பாகமாக உடையவனும், மழுவாயுதத்தை அழகிய கையில் ஏந்தியவனும் ஆகிய இறைவன் திருவடிகளையே பரவி அவன் எழுந்தருளிய திருவாரூரைத் தம் கைகளால் தொழுபவர் தடுமாற்றங்கள் தவிர்வர். |
| 1139. | நீறணி மேனியனாய் நிரம்பா மதிசூடி நீண்ட<br>ஆறணி வார்சடையான் ஆரூர் இனிதமர்ந்தான்<br>சேறணி மாமலர்மேற் பிரமன் சிரமரிந்த செங்கண்<br>ஏறணி வெல்கொடியா னவனெம் பெருமானே. | திருநீறு அணிந்த திருமேனியனாய்த் திருமுடியில் இளம்பிறையைச் சூடி, கங்கை விளங்கும் அழகிய நீண்ட சடைமுடியை உடையவனாய், திருவாரூரின் கண் மகிழ்வோடு எழுந்தருளி விளங்குபவனும், சேற்றின்கண் அழகியதாய்த் தோன்றி மலர்ந்த தாமரை மலர்மேல் விளங்கும் பிரமனது சிரங்களில் ஒன்றைக் கொய்த, சிவந்த கண்களை உடைய விடையேற்றை வெற்றிக் கொடியாகக் கொண்டவனுமாகிய சிவபெருமானே எம் தலைவனாவான். |
| 1140. | வல்–யந் தோலுடையான் வளர்திங்கட் கண்ணியினான் வாய்த்த<br>நல்–ய னான்முகத்தோன் றலையின் னறவேற்றான்<br>அல்–யங் கோதைதன்னை யாகத் தமர்ந்தருளி யாரூர்ப்<br>புல்–ய புண்ணியனைத் தொழுவாரும் புண்ணியரே. | வ–ய பு–யினது தோலை உடுத்தவனும், வளர்தற்குரிய பிறைமதியைக் கண்ணியாகச் சூடியவனும், நல்–யல்புகள் வாய்ந்த பிரமனது தலையில் ப–யேற்று உண்பவனும், அல்–யங் கோதை என்ற பெயருடைய அம்மையைத் தனது திருமேனியின் ஒருபாகமாகக் கொண்டவனும் ஆகிய திருவாரூரில் விளங்கும் புண்ணியனைத் தொழுபவர்களும் புண்ணியராவர். |
| 1141. | செந்துவ ராடையினா ருடைவிட்டு நின்றுழல்வார் சொன்ன<br>இந்திர ஞாலமொழிந் தின்புற வேண்டுதிரேல்<br>அந்தர மூவெயிலும் அரணம் மெரியூட்டி யாரூர்த்<br>தந்திர மாவுடையா னவனெந் தலைமையனே. | செந்துவர் ஊட்டப்பட்ட ஆடையை உடுத்தவரும், ஆடையின்றித் திகம்பரராய்த் திரிபவரும் ஆகிய புத்த சமணர்கள் கூறிய மாயப் பேச்சுக்களைக் கேளாது விடுத்து, இன்புற்று வாழ விரும்புவீராயின் வானத்தில் திரியும் மூவெயில்களாகிய கோட்டைகளை எரியூட்டி அழித்தவனும் திருவாரூரைத் தனக்கு நிலையான இடமாகக் கொண்டவனுமாகிய சிவபிரானே எம் தலைவன் என்று வழிபடுவீர்களாக. |

| | | |
|---|---|---|
| 1142. | நல்ல புனற்புக-த் தமிழ்ஞான சம்பந்தன்நல்ல<br>அல்- மலர்க்கழனி ஆரூர் அமர்ந்தானை<br>வல்லதோ ரிச்சையினால் வழிபாடிவை பத்தும் வாய்க்கச்<br>சொல்லுதல் கேட்டல்வல்லார் துன்பந் துடைப்பாரே. | தூயதான நீர்வளத்தை உடைய புக-யில் தோன்றிய தமிழ் ஞானசம்பந்தன் அக இதழ்களையுடைய நல்ல தாமரை முத-ய மலர்கள் பூத்த கழனிகளால் சூழப்பட்ட திருவாரூரில் எழுந்தருளிய இறைவனைத் தனக்கியன்ற வல்லமையால் அன்போடு பாடிய வழிபாட்டுப் பாடல்களாகிய இப்பதிகத்தைப் பொருந்தச் சொல்லுதல் கேட்டல் வல்லவர்கள் துன்பம் துடைப்பவர்களாவர். |

## 106. திருவூறல்

**பண் : வியாழக்குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 106**

| | | |
|---|---|---|
| 1143. | மாறி லவுணரரணம் மவைமாயவோர் வெங்கணையா<br>லன்று<br>நீறெழ வெய்தவெங்கள் நிமல னிடம்வினவில்<br>தேற -ரும்பொழிலுந் திகழ்செங்கயல் பாய்வயலுஞ்<br>சூழ்ந்த<br>ஊற லமர்ந்தபிரா னொ-யார்கழ லுள்குதுமே. | தமக்கு ஒப்பாரில்லாத வ-ய அவுணர்களின் அரணங்களாக விளங்கிய முப்புரங்களை மறையுமாறு முற்காலத்தில் ஒரு வெங்கணையால் நீறுபடச் செய்தழித்த எங்கள் நிமலன் ஆகிய சிவபிரான் எழுந்தருளியுள்ள இடம், யாதென வினவில், தேன் நிறைந்த பெரிய பொழில்களும், விளங்கிய செங்கயல்கள் பாயும் வயல்களும், சூழ்ந்துள்ள திருவூறலாகும். அப்பெருமானுடைய ஒ-க்கின்ற கழலணிந்த திருவடிகளை நாம் தியானிப்போம். |
| 1144. | மத்த மதக்கரியை மலையான்மக ளஞ்சவன்று கையால்<br>மெத்த வுரித்தவெங்கள் விமலன் விரும்புமிடம்<br>தொத்தல ரும்பொழில்சூழ் வயல்சேர்ந்தொளிர்<br>நீலநாளுந் நயனம்<br>ஒத்தல ருங்கழனித் திருவூறலை யுள்குதுமே. | மதம் பொருந்திய பெரிய தலையையுடைய யானையை மலைமகள் அஞ்ச, முற்காலத்தில் தன் கைகளால் மெல்ல உரித்த எங்கள் விமலனாகிய சிவபெருமான் விரும்பும் இடம் யாதென வினவில், பூங்கொத்துக்கள் விரிந்துள்ள பொழில்கள் சூழ்ந்ததும், வயல்களில் நாள்தோறும் முளைத்து விளங்கிய நீல மலர்கள் மங்கையரின் கண்களையொத்து மலரும் வயல்வளங்களை உடையதுமான திருவூறலாகும். அத்தலத்தை நாம் நாள்தோறும் நினைவோமாக. |
| 1145. | ஏன மருப்பினொடு மெழிலாமையும் பூண்டழகார் நன்றும்<br>கானமர் மான்மறிக்கைக் கடவுள் கருதுமிடம்<br>வான மதிதடவும் வளர்சோலைகள் சூழ்ந்தழகார் நம்மை<br>ஊன மறுத்தபிரான் றிருவூறலை யுள்குதுமே. | பன்றிக் கொம்புகளோடு ஆமையோட்டையும் அணிகலனாக அழகுறப் பூண்டு, நல்ல காட்டில் வாழும் மான்கன்றைத் தன் கையில் ஏந்தியுள்ள கடவுளாகிய சிவபெருமான் விரும்புமிடம், வானத்தின் கண் உள்ள மதி தோயுமாறு வளர்ந்துள்ள சோலைகளால் அழகுறச் சூழப்பட்டு நமது பிறவிப் பிணியைப் போக்க வல்லவனாய்ச் சிவபிரான் எழுந்தருளிய திருவூறலாகும். அதனை நாம் நாள்தோறும் நினைவோமாக. |

| | | |
|---|---|---|
| 1146. | நெய்யணி மூவிலைவே னிறைவெண்மழு வும்மனலு மன்று<br>கையணி கொள்கையினான் கடவுள் ளிடம்வினவில்<br>மையணி கண்மடவார் பலர்வந் திறைஞ்சமன்னி நம்மை<br>உய்யும் வகைபுரிந்தான் றிருவூறலை யுள்குதுமே. | நெய் பூசப்பெற்ற மூவிலை வேல், ஒளிநிறைந்த வெண்மழு, அனல் ஆகியவற்றைத் தன் கைகளில் அணியும் கோட்பாட்டினை உடைய கடவுள் விரும்பும் இடம் யாதென வினவுவீராயின், மை பூசப் பெற்ற கண்களையுடைய மடவார் பலர் வந்து வழிபட நிலையாகத் தங்கி, நாம் உய்யும் வகையில் எழுந்தருளி அருள்புரியும் திருவூறலாகும். அத்தலத்தை நாம் நாள்தோறும் நினைவோமாக. |
| 1147. | எண்டிசை யோர்மகிழ வெழின்மாலையும் போனகமும் பண்டு<br>சண்டி தொழவளித்தான் அவன்றாழு மிடம்வினவில்<br>கொண்டல்கள் தங்குபொழிற் குளிர்பொய்கைகள் சூழ்ந்து நஞ்சை<br>உண்டபி ரானமருந் திருவூறலை யுள்குதுமே. | எட்டுத் திசைகளில் உள்ளாரும் கண்டு மகிழுமாறு தன்னைத் தொழுத சண்டீசர்க்கு அழகிய மாலை, உணவு முத–யவற்றை முற்காலத்தே அளித்தருளியவனும், கட–ல் தோன்றிய நஞ்சினை உண்டு தேவர்களைக் காத்தவனு மாகிய சிவபிரான் விரும்பி உறையும் இடம் யாதென வினவில், மேகங்கள் தங்கும் பொழில்களும், குளிர்ந்த பொய்கைகளும் சூழ்ந்து விளங்கும் திருவூறலாகும். அதனை நாம் நாள்தோறும் நினைவோமாக. |
| 1148. | கறுத்த மனத்தினொடுங் கடுங்காலன்வந் தெய்துதலுங் கலங்கி<br>மறுக்குறு மாணிக்கருள மகிழ்ந்தா னிடம்வினவில்<br>செறுத்தெழு வாளரக்கன் சிரந்தோளு மெய்யுந்நெரிய வன்று<br>ஒறுத்தருள் செய்தபிரான் றிருவூறலை யுள்குதுமே. | சினம் பொருந்திய மனத்தோடு கூடிய கொடிய காலன் தம் வாழ்நாளைக் கவர வந்து அடைதலைக் கண்டு கலங்கி மயங்கிய மார்க்கண்டேயனுக்கு அருள் புரிந்தவனும், தன்னை மதியாது சினந்து வந்த வாள்வல்ல இராவணனின் தலை, தோள், உடல் ஆகியனவற்றை முற்காலத்தில் நெரித்து அருள் செய்தவனுமாகிய சிவபிரான் உறையும் இடம் யாதென வினவில் திருவூறலாகும். அதனை நாம் நாள்தோறும் நினைவோமாக. |
| 1149. | நீரின் மிசைத்துயின்றோ னிறைநான் முகனுமறியா தன்று<br>தேரும் வகை நிமிர்ந்தான் அவன்சேரு மிடம்வினவில்<br>பாரின் மிசையடியார் பலர்வந் திறைஞ்சமகிழ்ந் தாகம்<br>ஊரு மரவசைத்தான் றிருவூறலை யுள்குதுமே. | கடல்நீரின் மேல் துயில் கொள்வோனாகிய திருமாலும் ஞானத்தினால் நிறைவுபெற்ற நான்முகனும் அறிய முடியாமல் தேடி ஆராயுமாறு நிமிர்ந்து நின்றவனும், மண்ணுலகில் அடியவர் பலரும் வந்து வணங்க மகிழ்ந்து ஊரும் பாம்பினை இடையில் கட்டியவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய இடம் யாதென வினவில் திருவூறலாகும். அதனை நாமும் உள்குவோமாக. |
| 1150. | பொன்னியல் சீவரத்தார் புளித்தட்டையர் மோட்டமணர் குண்டர்<br>என்னு மிவர்க்கருளா வீசனிடம் வினவில்<br>தென்னென வண்டினங்கள் செறியார்பொழில் சூழ்ந்தழகார் தனை<br>உன்ன வினைகெடுப்பான் றிருவூறலை யுள்குதுமே. | பொன் போன்ற மஞ்சட் காவியுடை அணிந்த புத்தர்கள், புளிப்பேறிய காடியைத் தட்டில் இட்டு உண்பவர்கள் ஆகிய அறியாமையை உடைய சமண் குண்டர்கள் என்னும் இவர்கட்கு அருள் புரியாதவனும், தன்னை நினைவார்களின் வினைகளைக் கெடுப்பவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய இடம் யாதென வினவில் வண்டு இனங்கள் தென்னென்ற ஓசையோடு செறிந்த பொழில்கள் சூழ்ந்த அழகிய திருவூறலாகும். அதனை நாமும் நினைவோமாக. |

| | |
|---|---|
| 1151. கோட –ரும்புறவிற் கொடிமாடக் கொச்சையர்மன் மெச்ச<br>ஓடு புனல்சடைமேற் கரந்தான் திருவூறல்<br>நாட லரும்புகழான் மிகுஞானசம் பந்தன்சொன்ன நல்ல<br>பாடல்கள் பத்தும்வல்லார் பரலோகத் திருப்பாரே. | செங்காந்தட் செடிகள் நிறைந்த பெரிய புதர்கள் விளங்குவதும் கொடிகள் கட்டிய மாட வீடுகளைக் கொண்டதுமான கொச்சையம்பதிக்குத் தலைவனும், பெருகிவரும் கங்கையைச் சடைமிசைக் கரந்தவனுமாகிய சிவபிரானது திருவூறலைப் பற்றி நாடற்கரிய புகழால் மிக்க ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் வல்லவர் பரலோகத்திருப்பர். |

## 107. திருக்கொடிமாடச் செங்குன்றூர்

பண் : வியாழக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 107

| | |
|---|---|
| 1152. வெந்தவெண் ணீறணிந்து விரிநூல் திகழ்மார்பில் நல்ல<br>பந்தண வும்விரலா ளொருபாக மமர்ந்தருளிக்<br>கொந்தண வும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர்<br>நின்ற<br>அந்தண னைத்தொழுவார் அவல மறுப்பாரே. | விரிக்கப் பெற்ற பூணநூல் திகழும் திருமார்பின னாய், நன்றாக வெந்த திருவெண்ணீற்றை அணிந்து, பந்து பொருந்திய கைவிரல்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு, பூங்கொத்துக்கள் நிறைந்த பொழில் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளிய அழகிய தண்ணளியை உடைய சிவபெருமானைத் தொழுவார் துன்பங்கள் நீங்கப் பெறுவர். |
| 1153. அலைமஃ தண்புனலோ டரவஞ் சடைக்கணிந் தாகம்<br>மலைமகள் கூறுடையான் மலையா ரிளவாழைக்<br>குலைமஃ தண்பொழில்சூழ் கொடிமாடச்<br>செங்குன்றூர்நின்ற<br>தலைமக னைத்தொழுவார் தடுமாற் றறுப்பாரே. | அலைகள் நிறைந்த குளிர்ந்த கங்கை நதியோடு பாம்பினையும், சடையின்கண் அணிந்து, தனது திருமேனியில் மலைமகளை ஓர் பாகமாகக் கொண்டுள்ளவனும், மலையின்கண் வளரும் குலைகள் நிறைந்துள்ள இளவாழை மரங்களை உடைய குளிர்ந்த பொழில்கள் குழ்ந்து விளங்கும் கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளிய தலைவனுமாகிய சிவபிரானைத் தொழுவார் தடுமாற்றம் தவிர்வர். |
| 1154. பாலன நீறுபுனை திகழ்மார்பிற் பல்வளைக்கை நல்ல<br>ஏல மலர்க்குழலா ளொருபாக மமர்ந்தருளிக்<br>கோல மலர்ப்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர்<br>மல்கும்<br>நீலநன் மாமிடற்றான் கழலேத்தல் நீதியே. | பால் போன்று வெள்ளிய திருநீற்றைப் புனைந்து விளங்கிய மார்பினோடு பல்வகை வளையல் களையும் பாங்குறப் புனைந்த கையினளாய், மணம் கமழும் நறுமலர்களைச் சூடிய கூந்த–ன ளாகிய உமையம்மை ஒரு பாகமாக அமைந்த கோலத்தோடு அழகிய மலர்கள் பூத்த பொழில்கள் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளிய நீல நன்மாமிடற்றானின் கழலணிந்த திருவடிகளை ஏத்துதலே நீதியாகும். |

| | | |
|---|---|---|
| 1155. | வாருறு கொங்கைநல்ல மடவாள் திகழ்மார்பி னண்ணும்<br>காருறு கொன்றையொடுங் கதநாகம் பூண்டருளிச்<br>சீருறு மந்தணர்வாழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற<br>நீருறு செஞ்சடையான் கழலேத்தல் நீதியே. | கச்சணிந்த தனங்களை உடைய அழகிய உமையம்மை விளங்கும் திருமார்பின்கண் கார்காலத்தே மலரும் கொன்றை மலர் மாலையோடு சினம் பொருந்திய பாம்பை அணிகலனாகப் பூண்டு சிறப்புப் பொருந்திய அந்தணர்கள் வாழும் கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளிய கங்கையணிந்த செஞ்சடையனாய் விளங்கும் சிவபிரானின் கழலணிந்த திருவடிகளை ஏத்துதல் நீதியாகும். |
| 1156. | பொன்றிக ழாமையொடு புரிநூல் திகழ்மார்பி னல்ல<br>பன்றியின் கொம்பணிந்து பணைத்தோளியோர் பாகமாகக்<br>குன்றன மாளிகைசூழ் கொடிமாடச் செங்குன்றூர் வானில்<br>மின்றிகழ் செஞ்சடையான் கழலேத்தல் மெய்ப்பொருளே. | திருமகள் விளங்கும் திருமாலாகிய ஆமையினது ஓட்டினோடு முப்புரிநூல் திகழும் மார்பின்கண் நல்ல பன்றியின் கொம்புகளையும் அணிந்து மூங்கில் போன்ற தோளினளாகிய உமையம்மை ஒரு பாகமாக விளங்கக் குன்றுகள் போன்ற மாளிகைகள் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் வானில் திகழும் மின்னல் போன்று விளங்கும் செஞ்சடையானின் கழலணிந்த திருவடிகளை ஏத்துதலே மெய்ப் பொருளாகும். |
| 1157. | ஓங்கிய மூவிலைநற் சூல மொருகையன் சென்னி<br>தாங்கிய கங்கையொடு மதியஞ் சடைக்கணிந்து<br>கோங்கண வும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் வாய்ந்த<br>பாங்கன தாள்தொழுவார் வினையாய பற்றறுமே. | மேம்பட்ட மூவிலை வடிவான நல்ல சூலத்தை ஒரு கையில் ஏந்தியவனாய்த் திருமுடியில் தடுத்த கங்கையோடு, பிறையையும் சடையின்கண் அணிந்து, தேன் பொருந்திய பொழில்கள் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் பொருந்திய தோழனாய் விளங்கும் சிவபெருமானின் திருவடிகளைத் தொழுபவர்களின் வினைகள் வேர்ப்பற்றோடு நீங்கும். |
| 1158. | நீடலர் கொன்றையொடு நிமிர்புன் சடைதாழ வெள்ளை<br>வாட லுடைதலையிற் ப–கொள்ளும் வாழ்க்கையனாய்க்<br>கோடல் வளம்புறவிற் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற<br>சேடன தாள்தொழுவார் வினையாய தேயுமே. | கொத்தாக நீண்டு மலர்கின்ற கொன்றை மலர்களோடு நிமிர்ந்து தோன்றும் சிவந்த சடைகள் தாழ்ந்து தொங்க, வெண்மையான புலால் நீங்கிய தலையோட்டில் ப– ஏற்றுண்ணும் வாழ்க்கையனாய், வெண்காந்தள் மலர்ந்த புதர்களை உடைய வளமான முல்லை நிலங்களால் சூழப்பட்ட கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளிய பெருமை உடையோனின் திருவடிகளைத் தொழுபவர்களின் வினைகள் தேய்ந்தொழியும். |
| 1159. | மத்தநன் மாமலரும் மதியும்வளர் கொன்றையுடன் துன்று<br>தொத்தலர் செஞ்சடைமேல் துதைய வுடன்சூடிக்<br>கொத்தலர் தண்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் மேய<br>தத்துவ னைத்தொழுவார் தடுமாற் றறுப்பாரே. | செஞ்சடைமீது நல்ல ஊமத்த மலரையும் இளமதியையும் கொத்தாக அலரும் கொன்றை மலருடன் ஒருசேர நெருங்கச் சூடிப் பூங்கொத்துக்கள் அலரும் தண்ணிய பொழில் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளிய தத்துவனைத் தொழுவார் தடுமாற்றங்கள் இலராவர். |

| | | |
|---|---|---|
| 1160. | செம்பொனின் மேனியனாம் பிரமன்றிரு மாலுந்தேட நின்ற<br>அம்பவ ளத்திரள்போ லொளியாய வாதிபிரான்<br>கொம்பண வும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் மேய<br>நம்பன தாடொழுவார் வினையாய நாசமே. | சிவந்த பொன் போன்ற மேனியினன் ஆகிய பிரமனும் திருமாலும் தேடுமாறு பவளத்திரள் போல ஒளி வடிவினனாய் ஓங்கிநின்ற மூல காரணனும், கொம்புகளாகக் கிளைத்து நெருங்கிய மரங்கள் நிறைந்த பொழில் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளிய வனுமாகிய சிவபிரானின் திருவடிகளைத் தொழுபவர்களின் வினைகள் நாசமாகும். |
| 1161. | போதியர் பிண்டியரென் றிவர்கள் புறங்கூறும் பொய்ந்நூல்<br>ஓதிய கட்டுரைகேட் டுழல்வீர் வரிக்குயில்கள்<br>கோதிய தண்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற<br>வேதிய னைந்தொழநும் வினையான வீடுமே. | போதி மரத்தை வழிபடும் புத்தர், அசோக மரத்தை வழிபடும் சமணர் ஆகியோர் பொய்ந்நூல்களை மேற்கோள்களாகக் காட்டிக் கூறும் புனைந்துரை களைக் கேட்டு அவற்றை மெய்யெனக் கருதி உழல்பவர்களே! இசை பாடும் குயில்கள் கோதிய தளிர்களோடு கூடிய தண்பொழில் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளிய வேதம் விரித்த சிவபிரானைத் தொழுமின்; நம் வினைகள் யாவும் அழியும். |
| 1162. | அலைமலி தண்புனல்சூழ்ந் தழகார் புகலிந்நகர் பேணும்<br>தலைமக னாகிநின்ற தமிழ்ஞான சம்பந்தன்<br>கொலைமலி மூவிலையான் கொடிமாடச் செங்குன்றூ ரேத்தும்<br>நலமலி பாடல்வல்லார் வினையான நாசமே. | அலைகள் மிகுந்த குளிர்ந்த நீரால் சூழப்பட்ட அழகிய புகலி நகரை விரும்பும் தலைமகனாகிய தமிழ் ஞானசம்பந்தன், கொல்லும் தொழிலில் வல்ல மூன்று இலை வடிவான சூலத்தைக் கையில் ஏந்தியவனாய் சிவபிரான் எழுந்தருளிய கொடிமாடச் செங்குன்றூரைப் போற்றிப் பாடிய, நலம் மிக்க, இப்பதிகப் பாடல்களை ஓத, வல்லவர்களின் வினைகள் நாசமாகும். |

## 108. திருப்பாதாளீச்சரம்

**பண் : வியாழக்குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 108**

| | | |
|---|---|---|
| 1163. | மின்னியல் செஞ்சடைமேல் விளங்கும்மதி மத்தமொடு நல்ல<br>பொன்னியல் கொன்றையினான் புனல்சூடிப் பொற்பமரும்<br>அன்ன மனநடையா ளொருபாகத் தமர்ந்தருளி நாளும்<br>பன்னிய பாடலினா னுறைகோயில் பாதாளே. | மின்னல் போன்ற செஞ்சடைமேல் விளங்கும் மதி, ஊமத்தமலர் பொன் போன்ற நல்ல கொன்றை ஆகியவற்றோடு கங்கையையும் சூடி, அழகு விளங்கும் அன்னம் போன்ற நடையினளாகி உமையம்மை ஒரு பாகமாக விளங்க, நாள்தோறும் வேத கீதங்களைப் பாடியவனாய்ச் சிவபெருமான் உறையும் கோயில் பாதாளீச்சரமாகும். |
| 1164. | நீடலர் கொன்றையொடு நிரம்பா மதிசூடி வெள்ளைத்<br>தோடமர் காதினல்ல குழையான் சுடுநீற்றான்<br>ஆடர வம்பெருக வனலேந்திக் கைவீசி வேதம்<br>பாடலி னாலினியா னுறைகோயில் பாதாளே. | கொத்தாக நீண்டு அலர்கின்ற கொன்றையோடு கலைநிறையாத இளம் பிறையை முடியில் சூடி, ஒரு காதில் வெள்ளைத் தோட்டுடன் மறு காதில் நல்ல குழையையுடையவனாய் விளங்குவோனும், சுட்ட திருநீற்றை மெய்யில் பூசியவனும், ஆடும் பாம்பு அணிகலனாகப் பெருகித் தோன்ற அனல் ஏந்திக் கைவீசி வேதப் பாடல்களைப் பாடுதலில் இனியனாய் விளங்குவோனும் ஆகிய சிவபெருமான் உறையும் கோயில் திருப்பாதாளீச் சரமாகும். |

| | | |
|---|---|---|
| 1165. | நாகமும் வான்மதியு நலமல்கு செஞ்சடையான் சாமம்<br>போகநல் வில்வரையாற் புரமூன்றெரித்துகந்தான்<br>தோகைநன் மாமயில்போல் வளர்சாயற் றூமொழியைக்<br>கூடப்<br>பாகமும் வைத்துகந்தா னுறைகோயில் பாதாளே. | பாம்பு, வானில் விளங்கும் மதி ஆகியனவற்றைச் சூடிய அழகுமிக்க செஞ்சடையை உடையவனும், உரிய காலம் கழிய நல்ல மேருவில்லால் முப்புரங்களை எரித்துகந்தவனும், தோகையை உடைய நல்ல ஆண்மயில் போன்று வளர்கின்ற கட்புலனாய மென்மையை உடைய தூய மொழி பேசும் உமையம்மையைத் தன்னோடு உடனாக இடப்பாகமாகக் கொண்டு மகிழ்ந்தவனும் ஆகிய சிவபிரான் மகிழ்ந்துறையும் கோயில் பாதாளீச்சரமாகும். |
| 1166. | அங்கமு நான்மறையும் அருள்செய் தழகார்ந்த வஞ்சொல்<br>மங்கையோர் கூறுடையான் மறையோ னுறைகோயில்<br>செங்கய னின்றுகளுஞ் செறுவிற் றிகழ்கின்ற சோதிப்<br>பங்கய நின்றலரும் வயல்சூழ்ந்த பாதாளே. | ஆறு அங்கங்களையும் நான்கு வேதங்களையும் அருளிச் செய்தவனும், அழகிய இனிய சொற்களைப் பேசும் உமைநங்கையை ஒரு பாகமாக உடையவனும், வேதங்களைப் பாடி மகிழ்பவனுமாகிய சிவபிரான் உறையும் கோயில் செங்கயல் மீன்கள் புரளும் வயல்களில் விளங்கும் ஒளியினால் தாமரைகள் எழுந்து மலரும் வயல்கள் சூழ்ந்த பாதாளீச்சரமாகும். |
| 1167. | பேய்பல வுந்நிலவப் பெருங்காடரங் காகவுன்னி நின்று<br>தீயொடு மான்மறியும் மழுவுந் திகழ்வித்துத்<br>தேய்பிறை யும்மரவும் பொ–கொன்றைச் சடைதன்மேற்<br>சேரப்<br>பாய்புன லும்முடையா னுறைகோயில் பாதாளே. | பேய்கள் பலவும் உடன் சூழ, சுடுகாட்டை அரங்காக எண்ணி நின்று, தீ, மான்கன்று மழு ஆகியவற்றைக் கைகளில் விளங்குவித்து, தேய்ந்த பிறையும் பாம்பும் விளங்கிய கொன்றை மலரும் உடைய தன் சடைமேல் பாய்ந்து வரும் கங்கையையும் உடையவனாகிய சிவபிரான் உறையும் கோயில் பாதாளீச்சரமாகும். |
| 1168. | கண்ணமர் நெற்றியினான் கமழ்கொன்றைச் சடைதன்மே<br>னன்று<br>விண்ணியன் மாமதியும் முடன்வைத் தவன்விரும்பும்<br>பெண்ணமர் மேனியினான் பெருங்கா டரங்காக வாடும்<br>பண்ணியல் பாட–னா னுறைகோயில் பாதாளே. | கண் பொருந்திய நெற்றியை உடையவனும், சடை முடி மீது மணம் கமழும் கொன்றை மலரோடு, அழகு பொருந்த வானின்கண் உலாவும் சிறந்த பிறைமதியையும் உடனாக வைத்தவனும், தன்னால் விரும்பப் பெற்ற உமை மங்கை பொருந்திய திருமேனியனும், சுடுகாட்டை அரங்காகக் கொண்டு பண்ணொடு கூடிய பாடல்களுடன் ஆடுபவனுமாகிய சிவபிரான் உறையும் கோயில் பாதாளீச்சரமாகும். |
| 1169. | விண்டலர் மத்தமொடு மிளிரும்மிள நாகம்வன் னிதிகழ்<br>வண்டலர் கொன்றைநகு மதிபுல்கு வார்சடையான்<br>விண்டவர் தம்புரமூன் றெரிசெய்துரை வேதநான்<br>கும்மவை<br>பண்டிசை பாட–னா னுறைகோயில் பாதாளே. | தளையவிழ்ந்து மலர்ந்த ஊமத்த மலரோடு, புரண்டு கொண்டிருக்கும் இளநாகம், வன்னிஇலை, வண்டுகளால் மலர்த்தப்பெறும் கொன்றை, பிறைமதி ஆகியன பொருந்திய நீண்ட சடை உடையவனும், பகைவரான அசுரர்களின் முப்புரங்களையும் எரித்தவனும், நான்கு வேதங்களையும் உரைத்தலோடு அவற்றைப் பண்டைய இசை மரபோடு பாடி மகிழ்பவனுமாகிய சிவபிரான் உறையும் கோயில் பாதாளீச்சரமாகும். |

| | | |
|---|---|---|
| 1170. | மல்கிய நுண்ணிடையா ளுமைநங்கை மறுகவன்று கையால்<br>தொல்லை மலையெடுத்த வரக்கன்றலை தோணெரித்தான்<br>கொல்லை விடையுகந்தான் குளிர்திங்கள் சடைக் கணிந்தோன்<br>பல்—சை பாட—னா னுறைகோயில் பாதாளே. | செறிந்த நுண்மையான இடையினை உடைய உமையம்மை அஞ்ச அன்று கையால் பழமையான கயிலை மலையைப் பெயர்த்த இராவணனின் தலைகளையும் தோள்களையும் நெரித்தவனும், முல்லை நிலத் தெய்வமான திருமாலாகிய விடையை உகந்தவனும், குளிர்ந்த திங்களைச் சடையின்கண் அணிந்தவனும் பல்வகையான இசைப் பாடல்களைப் பாடுபவனும் ஆகிய சிவபிரான் உறையும் கோயில் பாதாளீச்சரமாகும். |
| 1171. | தாமரை மேலயனும் மரியுந்தம தாள்வினையாற் றேடிக்<br>காமனை வீடுவித்தான் கழல்காண்பில ராயகன்றார்<br>பூமரு வுங்குழலா ளுமைநங்கை பொருந்தியிட்ட நல்ல<br>பாமரு வுங்குணத்தா னுறைகோயில் பாதாளே. | மன்மதனை எரித்த சிவபிரான் திருவடிகளைத் தாமரை மலரின்மேல் எழுந்தருளிய அயனும், திருமாலும் தமது முயற்சியால் தேடிக்காண இயலாது நீங்கினர். மலர்கள் சூடிய கூந்தலை உடைய உமைநங்கை ஒரு பாகமாகப் பொருந்தியவனும் வேதப் பாடல்களைப் பாடும் நல்ல குணத்தினனும் ஆகிய அப்பெருமான் உறையும் கோயில் பாதாளீச்சரமாகும். அங்குச் சென்றால் அவன் கழலடி காணலாம் என்பது குறிப்பெச்சம். |
| 1172. | காலையி லுண்பவருஞ் சமண்கையருங் கட்டுரை விட்டன்<br>றால விடநுகர்ந்தா னவன் றன்னடி யேபரவி<br>மாலையில் வண்டினங்கண் மதுவுண் டிசைமுரல வாய்த்த<br>பாலையாழ்ப் பாட்டுகந்தா னுறைகோயில் பாதாளே. | காலையில் சோறுண்ணும் புத்தரும், சமண சமயக் கீழ்மக்களும் கூறும் மெய்போன்ற பொய்யுரைகளை விடுத்து, ஆலகால விடமுண்டு அமரர்களைக் காத்தவனும் மாலைக் காலத்தில் வண்டினங்கள் மதுவுண்டு இசை முரல ஏற்புடையதான பாலைப் பண்ணையாழில் பாடக் கேட்டு மகிழ்பவனும் ஆகிய சிவபிரான் உறையும் கோயில் பாதாளீச்சரமாகும். |
| 1173. | பன்மலர் வைகுபொழில் புடைசூழ்ந்த பாதாளைச் சேரப்<br>பொன்னியன் மாடமல்கு புக—ந்நகர் மன்னன்<br>தன்னொளி மிக்குயர்ந்த தமிழ்ஞான சம்பந்தன் சொன்ன<br>இன்னிசை பத்தும்வல்லா ரெழில்வானத் திருப்பாரே. | பலவகையான மலர்களும் பூத்துள்ள பொழில்புடை சூழ்ந்த பாதாளீச்சரத்தைச் சென்று தரிசிக்குமாறு, பொன்னால் இயன்ற மாட வீடுகள் நிறைந்த புக—நகர் மன்னனும், தன்புகழ் உலகெங்கும் பரவி விளங்குமாறு உயர்ந்தவனுமாகிய தமிழ் ஞானசம்பந்தன் பாடிய இன்னிசை பொருந்திய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் வல்லவர் அழகிய வானுலகின்கண் இருப்பர். |

## 109. திருச்சிரபுரம்

பண் : வியாழக்குறிஞ்சி — முதல் திருமுறை பதிக எண் : 109

| | | |
|---|---|---|
| 1174. | வாருறு வனமுலை மங்கைபங்கன்<br>நீருறு சடைமுடி நிமலனிடங்<br>காருறு கடிபொழில் சூழ்ந்தழகார்<br>சீருறு வளவயற் சிரபுரமே. | கச்சணிந்த அழகிய தனபாரங்களை உடைய உமையம்மையின் கணவனும், கங்கையை அணிந்த சடைமுடியை உடைய நிமலனுமாகிய சிவபிரான் விரும்பி உறையும் இடம், மேகங்கள் தோயுமாறு வானளாவிய மணம் கமழும் பொழில் சூழ்ந்த அழகிய சிறப்புப் பொருந்திய வளமையான வயல்களை உடைய சிரபுரம் ஆகும். |

| | | |
|---|---|---|
| 1175. | அங்கமொ டருமறை யருள்புரிந்தான்<br>திங்களொ டரவணி திகழ்முடியன்<br>மங்கையொ டினிதுறை வளநகரஞ்<br>செங்கயன் மிளிர்வயற் சிரபுரமே. | ஆறங்கங்களோடு அரிய வேதங்கள் நான்கையும் அருளிச் செய்தவனும், திங்கள் பாம்பு ஆகியவற்றை அணிந்து விளங்கிய முடியினனும் ஆகிய சிவபெருமான் உமைமங்கையோடு மகிழ்வாக உறையும் வளமையான நகரம் செங்கயல்கள் துள்ளி விளையாடும் வயல்கள் சூழ்ந்த சிரபுரம் ஆகும். |
| 1176. | பரிந்தவன் பன்முடி யமரர்க்காகித்<br>திரிந்தவர் புரமவை தீயின்வேவ<br>வரிந்தவெஞ் சிலைபிடித் தடுசரத்தைத்<br>தெரிந்தவன் வளநகர் சிரபுரமே. | பல்வகையான முடிகளைச் சூடிய அமரர்களிடம் மிக்க பரிவுடையவனாகி வானவெளியில் திரிந்த அவுணர்களின் முப்புரங்களும் தீயில் வேகுமாறு வரிந்து கட்டிய கொடிய வில்லைப் பிடித்துக் கொல்லும் அம்பினை ஆராய்ந்து தொடுத்த பெருமானது வளநகர் சிரபுரமாகும். |
| 1177. | நீறணி மேனிய னீண்மதியோ<br>டாறணி சடையின னணியிழையோர்<br>கூறணிந் தினிதுறை குளிர்நகரஞ்<br>சேறணி வளவயற் சிரபுரமே. | திருநீறு அணிந்த திருமேனியை உடையவனும், வளைவாக நீண்ட பிறை மதியோடு கங்கையை அணிந்த சடையினை உடையவனும் ஆகிய சிவபிரான், அழகிய அணிகலன்களைப் பூண்ட உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு இனிதாக உறையும் குளிர்ந்த நகரம் சேற்றால் அழகிய வளமான வயல்கள் சூழ்ந்த சிரபுரமாகும். |
| 1178. | அருந்திற லவுணர்க ளரணழியச்<br>சரந்துரந் தெரிசெய்த சங்கரனூர்<br>குருந்தொடு கொடிவிடு மாதவிகள்<br>திருந்திய புறவணி சிரபுரமே. | வெல்லுதற்கரிய வ–மையினையுடைய அசுரர் களின் முப்புரங்களும் அழியுமாறு கணையைத் தொடுத்து எரித்த சங்கரனாகிய சிவபெருமானது ஊர், குருந்தமரம் கொடிகளாகப் படரும் மாதவி எனும் குருக்கத்தி ஆகியன நிறைந்த அழகிய புதர்களால் சூழப்பட்ட சிரபுரம் என்னும் நகரமாகும். |
| 1179. | கலையவன் மறையவன் காற்றொடுதீ<br>மலையவன் விண்ணொடு மண்ணுமவன்<br>கொலையவன் கொடிமதில் கூட்டழித்த<br>சிலையவன் வளநகர் சிரபுரமே. | கலைகளாக விளங்குபவனும், வேதங்களை அருளியவனும் காற்று, தீ, மலை, விண், மண் முத–யனவாகத் திகழ்பவனும் கொடிகள் கட்டப்பெற்ற அசுரர்களின் முப்புரங்களை அவற்றின் மதில்களோடு கூட்டாக அழித்த மேருவில் ஏந்திய கொலையாளனும் ஆகிய சிவபெருமானது வளநகர் சிரபுரமாகும். |
| 1180. | வானமர் மதியொடு மத்தஞ்சூடித்<br>தானவர் புரமெய்த சைவனிடங்<br>கானமர் மடமயில் பெடைபயிலுந்<br>தேனமர் பொழிலணி சிரபுரமே. | வானத்தில் உலவும் பிறை மதியையும், ஊமத்த மலரையும் முடியிற் சூடி, அசுரர்களின் முப்புரங்களை எய்தழித்த சைவன் இடம், காடுகளில் வாழும் இள ஆண் மயில்கள் பெண் மயில்களோடு கூடி மகிழ்வதும் இனிமை நிறைந்து விளங்குவதுமான சிரபுரமாகும். |

| | |
|---|---|
| 1181. மறுத்தவர் திரிபுர மாய்ந்தழியக்<br>கறுத்தவன் காரரக் கன்முடிதோள்<br>இறுத்தவ னிருஞ்சினக் காலனைமுன்<br>செறுத்தவன் வளநகர் சிரபுரமே. | தன்னோடு உடன்பாடு இல்லாது மாறுபட்டு ஒழுகிய அசுரர்களின் முப்புரங்களும் கெட்டு அழியுமாறு சினந்தவனும், கரிய அரக்கனாகிய இராவணனின் தலை தோள் ஆகியவற்றை நெரித்தவனும், மிக்க சினம் உடைய இயமனை அழித்தவனுமான சிவபிரானது வளநகர் சிரபுரமாகும். |
| 1182. வண்ணநன் மலருறை மறையவனுங்<br>கண்ணனுங் கழல்தொழக் கனலுருவாய்<br>விண்ணுற வோங்கிய விமலனிடம்<br>திண்ணநன் மதிலணி சிரபுரமே. | செவ்வண்ணமுடைய நல்ல தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும், திருமாலும் தன் திருவடிகளைத் தொழுது நிற்குமாறு கனல் உருவாய் விண்ணுற ஓங்கி நின்ற விமலனாகிய சிவபிரானது இடம் உறுதியான நல்ல மதில்களால் அழகுறும் சிரபுர வளநகராகும். |
| 1183. வெற்றரை யுழல்பவர் விரிதுகிலார்<br>கற்றில ரறவுரை புறனுரைக்கப்<br>பற்றலர் திரிபுர மூன்றும்வேவச்<br>செற்றவன் வளநகர் சிரபுரமே. | ஆடையில்லாத இடையோடு திரிந்துழல்வோரும், விரித்த ஆடையைப் போர்வையாகப் போர்த்தியுள்ளவரும், மெய் நூல்களைக் கல்லாதவரும் ஆகிய சமண பௌத்தர்கள் அறவுரை என்ற பெயரில் புறம்பான உரைகளைக் கூறக்கேட்டு அவற்றைப் பொருட்படுத்தாத வனாய்ப் பகைவராகிய அவுணர்களின் முப்புரங்களும் தீயில் வேகுமாறு அழித்தருளிய சிவபிரான் எழுந்தருளிய வளநகர் சிரபுரமாகும். |
| 1184. அருமறை ஞானசம் பந்தனந்தண்<br>சிரபுர நகருறை சிவனடியைப்<br>பரவிய செந்தமிழ் பத்தும்வல்லார்<br>திருவொடு புகழ்மல்கு தேசினரே. | அரிய மறைகளை ஓதாது உணர்ந்த ஞானசம்பந்தன் அழகிய தண்ணளியை உடைய சிரபுர நகரில் எழுந்தருளிய சிவபெருமான் திருவடிகளைப் பரவிப் போற்றிய இப்பதிகச் செந்தமிழ் பத்தையும் ஓத வல்லவர் செல்வத்துடன் புகழ் நிறைந்து ஒளியுடன் திகழ்வர். |

## 110. திருவிடைமருதூர்

**பண் : வியாழக்குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 110**

| | |
|---|---|
| 1185. மருந்தவன் வானவர் தானவர்க்கும்<br>பெருந்தகை பிறவினொ டிறவுமானான்<br>அருந்தவ முனிவரொ டால்நிழற்கீழ்<br>இருந்தவன் வளநக ரிடைமருதே. | பிறவி நோய் தீர்க்கும் மருந்தாக விளங்குபவனும், தேவர்கட்கும் அசுரர்கட்கும் தலைவனாய் விளங்குபவனும், உயிர்களின் பிறப்பு இறப்பிற்குக் காரணமானவனும், அரிய தவம் உடைய சனகாதி முனிவர்களோடு கல்லால மர நிழல் எழுந்தருளியிருந்து அறம் உரைத்தருளிய வனுமான சிவபிரானது வளநகர் இடைமருதாகும். |

| | | |
|---|---|---|
| 1186. | தோற்றவன் கேடவன் றுணைமுலையாள்<br>கூற்றவன் கொல்பு–த் தோலசைத்த<br>நீற்றவ னிறைபுன னீள்சடைமேல்<br>ஏற்றவன் வளநக ரிடைமருதே. | உயிர்களின் தோற்றத்திற்கும் கேட்டிற்கும் காரணமானவனும், இணையான தனங்களை உடைய உமையம்மையை ஒரு கூறாகக் கொண்டவனும், கொல்லும் தொழி–ல் வல்ல பு–யினது தோலை இடையில் கட்டியவனும், மெய்யெலாம் திருநீறு அணிந்தவனும், பெருகிவந்த கங்கையை நீண்ட சடைமுடி மேல் ஏற்று உலகைக் காத்தவனுமான சிவபிரானது வளநகர் இடைமருதாகும். |
| 1187. | படையுடை மழுவினன் பால்வெண்ணீற்றன்<br>நடைநவி லேற்றினான் ஞாலமெல்லாம்<br>உடைதலை யிடுப– கொண்டுழல்வான்<br>இடைமரு தினிதுறை யெம்மிறையே. | மழுவைத் தனக்குரிய ஆயுதமாகக் கொண்டவனும், பால் போன்று வெள்ளிய திருநீற்றை மேனிமேல் பூசியவனும், இனிய நடையைப் பழகுகின்ற விடை ஏற்றை உடையவனும், உடைந்த தலையோட்டில் ப– கொண்டு உலகெலாம் திரிந்துழல்பவனும் ஆகிய எம் தலைவனாகிய சிவபெருமான் இனிது உறையும் நகர் இடைமருதாகும். |
| 1188. | பணைமுலை யுமையொரு பங்கனொன்னார்<br>துணைமதின் மூன்றையுஞ் சுடரின்மூழ்கக்<br>கணைதுரந் தடுதிறற் காலற்செற்ற<br>இணையி– வளநக ரிடைமருதே. | பருத்த தனங்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனும், பகைவராகிய அசுரர்கட்குத் துணையாக இருந்த மூன்று அரணங்களையும் தீயில் மூழ்கி அழியுமாறு கணையைச் செலுத்தி அழித்தவனும், காலனைச் செற்ற ஒப்பி–யும் ஆகிய சிவபெருமானது வளநகர் இடைமருது ஆகும். |
| 1189. | பொழிலவன் புயலவன் புய–யக்கும்<br>தொழிலவன் றுயரவன் துயரகற்றும்<br>கழலவன் கரியுரி போர்த்துகந்த<br>எழிலவன் வளநக ரிடைமருதே. | ஏழ் உலகங்களாக இருப்பவனும், மேகங்களாகவும் அவற்றை இயக்கி மழையைப் பெய்விக்கும் தொழிலைப் புரிவோனாக இருப்பவனும், துன்பங்களைத் தருபவனாகவும் அவற்றைப் போக்கும் கழலணிந்த திருவடிகளை உடையவனாக விளங்குபவனும், யானையின் தோலைப் போர்த்து மகிழ்ந்த அழகனாக விளங்குபவனும் ஆகிய சிவபெருமானது வளநகர் இடைமருதாகும். |
| 1190. | நிறையவன் புனலொடு மதியும்வைத்த<br>பொறையவன் புகழவன் புகழநின்ற<br>மறையவன் மறிகட னஞ்சையுண்ட<br>இறையவன் வளநக ரிடைமருதே. | குறைவற்ற நிறைவாக விளங்குபவனும், கங்கையோடு திங்களைத் திருமுடியில் வைத்துச் சுமக்கும் சுமையை உடையவனும், புகழ் வடிவினனாக விளங்குபவனும், எல்லோராலும் புகழப்படும் வேதங்களாக விளங்குபவனும், சுருண்டு விழும் அலைகளை உடைய கட–ன்கண் தோன்றிய நஞ்சினை உண்ட தலைவனும் ஆகிய சிவபிரானது வளநகர் இடைமருதாகும். |

| | | |
|---|---|---|
| 1191. | நனிவளர் மதியொடு நாகம்வைத்த<br>பனிமலர்க் கொன்றையம் படர்சடையன்<br>முனிவரொ டமரர்கண் முறைவணங்க<br>இனிதுறை வளநக ரிடைமருதே. | நாள்தோறும் ஒரு கலையாக நன்றாக வளர்தற்குரிய பிறை மதியோடு பாம்பையும் உடனாக வைத்துள்ளவனும் குளிர்ந்த கொன்றை மலர்மாலை சூடிய விரிந்த சடைமுடியை உடையவனும் ஆகிய சிவபிரான் முனிவர்களும் தேவர்களும் முறையாக வணங்க இனிதாக உறையும் வளநகர் இடைமருதாகும். |
| 1192. | தருக்கின வரக்கன தாளுந்தோளும்<br>நெரித்தவ னெடுங்கைமா மதகரியன்<br>றுரித்தவ னொன்னலர் புரங்கண்மூன்றும்<br>எரித்தவன் வளநக ரிடைமருதே. | செருக்குற்ற அரக்கனாகிய இராவணனின் தாள்களையும், தோள்களையும் நெரித்தவனும், நீண்ட கையை உடைய பெரிய மத யானையை அக்காலத்தில் உரித்துப் போர்த்தவனும், பகைவர்களாகிய அசுரர்களின் புரங்கள் மூன்றையும் எரித்தவனும் ஆகிய சிவபெருமானது வளநகர் இடைமருதாகும். |
| 1193. | பெரியவன் பெண்ணினொ டாணுமானான்<br>வரியர வணைமறி கடற்றுயின்ற<br>கரியவ னலரவன் காண்பரிய<br>எரியவன் வளநக ரிடைமருதே. | எல்லோரினும் பெரியவனும், பெண் ஆண் வடிவாக விளங்குபவனும், வயிற்றிடையே கீற்றுக்களாகிய கோடுகளை உடைய பாம்பணைமேல் கட–டையே துயிலும் கரியவனாகிய திருமால் தாமரை மலர்மேல் உறையும் நான்முகன் ஆகியோர் காணுதற்கரிய எரியுருவாய் ஓங்கி நின்றவனும் ஆகிய சிவபெருமானது வளநகர் இடைமருதாகும். |
| 1194. | சிந்தையில் சமணொடு தேரர்சொன்ன<br>புந்தியி லுரையவை பொருள்கொளாதே<br>அந்தண ரோத்தினொ டரவமோவா<br>எந்தைதன் வளநக ரிடைமருதே. | சிந்திக்கும் திறனற்ற சமணர்களும், புத்தர்களும் கூறிய அறிவற்ற உரைகளைப் பொருளுடைய உரைகளாகக் கொள்ளாதீர். அந்தணர்களின் வேத ஒ–யோடு விழவொ– நீங்காத வளநகர் ஆகிய இடைமருது எந்தையாகிய சிவபிரான் உறையும் இடமாகும் என்று அறிந்து சென்று வழிபடுமின். |
| 1195. | இலைமடி பொழி–டை மருதிறையை<br>நலமிகு ஞானசம்பந்தன்சொன்ன<br>பலமிகு தமிழிவை பத்தும்வல்லார்<br>உலகுறு புகழினொ டோங்குவரே. | இலைகள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த இடைமருதில் உறையும் சிவபிரானை, அருள்நலம் மிகுந்த ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய பயன்மிகு தமிழ்ப் பாடல்களா–யன்ற இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதி வழிபட வல்லவர் உலகில் நிறைந்து விளங்கும் புகழ்கள் அனைத்தையும் பெற்று ஓங்கி வாழ்வர். |

## 111. திருக்கடைமுடி

பண் : வியாழக்குறிஞ்சி | முதல் திருமுறை பதிக எண் : 111

| | | |
|---|---|---|
| 1196. | அருத்தனை யறவனை யமுதனைநீர்<br>விருத்தனைப் பாலனை வினவுதிரேல்<br>ஒருத்தனை யல்லதிங் குலகமேத்தும்<br>கருத்தவன் வளநகர் கடைமுடியே. | வேதப் பொருளாய் விளங்குபவனும், அறவடிவினனும், அமுதம்போல இனியவனும், மூத்தவனும், இளையோனும், உலக மக்கள் பலராலும் இவ்வொருவனையன்றித் துணை யில்லை என்று கருதி வழிபடும் முடிந்த பொருளாயுள்ளவனும், ஆகிய பெருமான் எவ்விடத்தான் என நீர் வினவுவீராயின் அவன் எழுந்தருளிய வளநகர் கடைமுடி என்னும் தலமாகும். சென்று வழிபடுவீராக. |
| 1197. | திரைபொரு திருமுடி திங்கள்விம்மும்<br>அரைபொரு பு–யத ளடிகளிடம்<br>திரையொடு நுரைபொரு தெண்சுனைநீர்<br>கரைபொரு வளநகர் கடைமுடியே. | ஒளியால் விம்மித் தோன்றும் பிறைமதி, அலைகள் ஒன்றோடு ஒன்று மோதும் கங்கை ஆகியவற்றை உடைய திருமுடியை உடையவரும், இடையில் பு–த்தோலைப் பொருந்த அணிந்தவருமாகிய அடிகள் எழுந்தருளிய இடம், அலைகளோடு நுரைகள் பொருந்திய தெளிந்த சுனைநீர் கரைகளில் வந்து மோதும் வளநகராகிய கடைமுடியாகும். |
| 1198. | ஆ–ள மதியினொ டரவுகங்கை<br>கோலவெண் ணீற்றனைத் தொழுதிறைஞ்சி<br>ஏலநன் மலரொடு விரைகமழும்<br>காலன வளநகர் கடைமுடியே. | கல்லால மர நீழ–ல் இளமதி அரவு கங்கை ஆகியன சூடிய சடைமுடியுடனும், அழகிய திருவெண்ணீற்றுடனும், நறுமலர் ஆகியன வற்றால் மணம் பொறுத்தமாகக் கமழும் திருவடிகளை உடையவனாக விளங்கும் இறைவனைத் தொழுது இறைஞ்சுதற்குரிய வளநகராக விளங்குவது கடைமுடியாகும். |
| 1199. | கொய்யணி நறுமலர்க் கொன்றையந்தார்<br>மையணி மிடறுடை மறையவனூர்<br>பையணி யரவொடு மான்மழுவாள்<br>கையணி பவனிடங் கடைமுடியே. | கொய்யப் பெற்ற அழகிய மணம் கமழும் கொன்றை மலர்மாலை அணிந்தவனாய் விடம் பொருந்திய கண்டத்தை உடையவனாய், படம் பொருந்திய பாம்பையும், மான் மழு வாள் ஆகியவற்றையும் கையின்கண் அணிந்தவனாய் விளங்கும் மறை முதல்வனது ஊர் கடைமுடியாகும். |
| 1200. | மறையவ னுலகவன் மாயமவன்<br>பிறையவன் புனலவ னனலுமவன்<br>இறையவ னெனவுல கேத்துங்கண்டம்<br>கறையவன் வளநகர் கடைமுடியே. | வேதங்களை அருளியவனும், அனைத்துலகங் களும் ஆகியவனும், மாயை வடிவினனும், சடைமுடியில் பிறை கங்கை ஆகியவற்றை அணிந்தவனும், கையில் அனல் ஏந்தியவனும் உலக மக்கள் இறைவன் எனப் போற்றும் நீல கண்டனுமான சிவபிரானது வளநகர் கடைமுடியாகும். |

| | | |
|---|---|---|
| 1201. | படவர வேரல்குற் பல்வளைக்கை<br>மடவர லாளையொர் பாகம்வைத்துக்<br>குடதிசை மதியது சூடுசென்னிக்<br>கடவுள்தன் வளநகர் கடைமுடியே. | அரவின் படம் போன்ற அழகிய அல்குலையும் பலவகையினவான வளையல்களை அணிந்த கைகளையும் உடைய உமையம்மையை ஒரு பாகமாக வைத்து, மேற்குத் திசையில் தோன்றும் பிறை மதியைச் சூடிய சடைமுடியினனாய் விளங்கும் கடவுளின் வளநகர் கடைமுடியாகும். |
| 1202. | பொடிபுல்கு மார்பினிற் புரிபுல்குநூல்<br>அடிபுல்கு பைங்கழ லடிகளிடம்<br>கொடிபுல்கு மலரொடு குளிர்சுனைநீர்<br>கடிபுல்கு வளநகர் கடைமுடியே. | திருநீறு அணிந்த மார்பின்கண் முறுக்கேறிய பூணூலை அணிந்தவராய், திருவடிகளில் பொருந்திய அழகிய கழல்களை உடையவராய் விளங்கும் அடிகள் இடம் கொடிகளில் பூத்த மலர்களோடு குளிர்ந்த சுனை நீரின் மணம் கமழும் வளநகராகிய கடைமுடியாகும். |
| 1203. | நோதல்செய் தரக்கனை நோக்கழியச்<br>சாதல்செய் தவனடி சரணெனலும்<br>ஆதர வருள்செய்த வடிகளவர்<br>காதல்செய் வளநகர் கடைமுடியே. | இராவணனைத் துன்புறுமாறு செய்து, அவன் மீது முத–ல் கருணை நோக்கம் செய்யாமல் வ–மை காட்டிப்பின் அவன் திருவடியே சரண் எனக் கூறிய அளவில் அவனுக்கு ஆதரவு காட்டி அருள் செய்த அடிகளாகிய சிவபிரானார் விரும்பும் வளநகர் கடைமுடியாகும். |
| 1204. | அடிமுடி காண்கில ரோரிருவர்<br>புடைபுல்கி யருளென்று போற்றிசைப்பச்<br>சடையிடைப் புனல்வைத்த சதுரனிடம்<br>கடைமுடியதனயல் காவிரியே. | அடிமுடி காணாதவராகிய திருமால் பிரமர் அருகிற்சென்று அருள்புரிக எனப் போற்றி செய்து வழிபடுமாறு, சடைமிசையே கங்கையை அணிந்த சதுரப்பாடுடைய சிவபிரானது இடமாக விளங்குவது காவிரியின் அய–லே உள்ள கடைமுடியாகும். |
| 1205. | மண்ணுதல் பறித்தலு மாயமிவை<br>எண்ணிய காலவை யின்பமல்ல<br>ஒண்ணுத லுமையையொர் பாகம்வைத்த<br>கண்ணுதல் வளநகர் கடைமுடியே. | நீரிற் பல கால் மூழ்கலும் மயிர் பறித்தலும் ஆகிய புத்த சமண விரத ஒழுக்கங்கள் பொய்யானவை. ஆராயுமிடத்து இவை இன்பம் தாரா. ஒளி பொருந்திய நுத–னளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டுள்ள கண்ணுதலோனின் வளநகர் கடைமுடியாகும். |
| 1206. | பொன்றிகழ் காவிரிப் பொருபுனல்சீர்<br>சென்றடை கடைமுடிச் சிவனடியை<br>நன்றுணர் ஞானசம் பந்தன்சொன்ன<br>இன்றமி ழிவைசொல வின்பமாமே. | பொன்துகள் திகழும் காவிரியாற்றின் அலைகளின் நீர் முறையாகச் சென்று அடையும் கடைமுடியில் விளங்கும் சிவபிரான் திருவடிப் பெருமைகளை நன்குணர்ந்த ஞானசம்பந்தன் சொன்ன இனிய தமிழாகிய இத்திருப்பதிகப் பாடல்களை ஓதி வழிபட இன்பம் ஆகும். |

## 112. திருச்சிவபுரம்

பண் : வியாழக்குறிஞ்சி | முதல் திருமுறை பதிக எண் : 112

| | | |
|---|---|---|
| 1207. | இன்குர –சைகெழும் யாழ்முரலத்<br>தன்கர மருவிய சதுரனகர்<br>பொன்கரை பொருபழங் காவிரியின்<br>தென்கரை மருவிய சிவபுரமே. | இனிய ஒ–யும் இசையும் பொருந்திய யாழ் முரலுமாறு தனது கரத்தின்கண்ணே அதனை ஏந்தி விளங்கும் சதுரனது நகர், அழகிய கரையினை மோதும் பழமையான காவிரியாற்றின் தென்கரையில் விளங்கும் சிவபுரமாகும். |
| 1208. | அன்றடற் காலனைப் பாலனுக்காய்ப்<br>பொன்றிட வுதைசெய்த புனிதனகர்<br>வென்றிகொ ளெயிற்றுவெண் பன்றிமுன்னாள்<br>சென்றடி வீழ்தரு சிவபுரமே. | முற்காலத்தில் மார்க்கண்டேயன் பொருட்டு வ–ய காலனைக் காலால் அழியுமாறு உதைத்தருளிய புனிதனது நகர், தனது கோரைப் பல்லால் வெற்றி பெறும் வெள்ளைப் பன்றியாகத் திருவவதாரம் கொண்ட திருமால், முற்காலத்தில் வந்து திருவடியைப் பணிந்து வழிபாடு செய்த தலமாகிய சிவபுரமாகும். (திருமால் வெண்ணிறப் பன்றியாகத் திருஅவதாரம் செய்த செய்தி தேவாரத்திலேயே உள்ளது. திவ்வியப் பிரபந்தத்தில் இல்லை) |
| 1209. | மலைமகண் மறுகிட மதகரியைக்<br>கொலைமல்க வுரிசெய்த குழகனகர்<br>அலைமல்கு மரிசி– னதனயலே<br>சிலைமல்கு மதிளணி சிவபுரமே. | மலைமகளாகிய பார்வதி தேவி அஞ்சுமாறு மதம் பொருந்திய யானையைக் கொன்று, அதன் தோலை உரித்துப் போர்த்த குழகனது நகர், அலைகள் நிரம்பிய அரிசிலாற்றின் கரையருகே விளங்குவதும் மலை போன்ற மதில்களை உடையதுமான சிவபுரமாகும். |
| 1210. | மண்புன லனலொடு மாருதமும்<br>விண்புனை மருவிய விகிர்தனகர்<br>பண்புனை குரல்வழி வண்டுகிண்டிச்<br>செண்பக மலர்பொழிற் சிவபுரமே. | மண், புனல், அனல், காற்று, ஆகாயம் என்னும் ஐம்பூதங்களாய்ப் பொருந்தி விளங்கும் விகிர்தனது நகர், பண் பொருந்திய குரலோடு வண்டுகள் சூழ்ந்து கிளர மலரும் செண்பகப் பூக்களோடு கூடிய பொழில்கள் சூழ்ந்த சிவபுரமாகும். |
| 1211. | வீறுநன் குடையவள் மேனிபாகம்<br>கூறுநன் குடையவன் குளிர்நகர்தான்<br>நாறுநன் குரவிரி வண்டுகிண்டித்<br>தேறலுண் டெழுதரு சிவபுரமே. | அழகால் தனிப்பெருமை பெற்ற உமையம்மையைத் தன் திருமேனியின் ஒரு பாகமாக உடையவ னாகிய சிவபிரானது குளிர்ந்த நகரம், மணம் வீசும் நல்ல குராமலரை வண்டுகண் கிண்டித் தேனை உண்டு மகிழ்ந்து எழும் பொழில் சூழ்ந்த சிவபுரமாகும். |
| 1212. | மாறெதிர் வருதிரி புரமெரித்து<br>நீறது வாக்கிய நிமலனகர்<br>நாறுடை நடுபவ ருழவரொடும்<br>சேறுடை வயலணி சிவபுரமே. | பகைமை உணர்வோடு மாறுபட்டுத் தன்னை எதிர்த்துவந்த அசுரர்களின் திரிபுரங்களை எரித்து நீறாக்கிய நிமலனது நகர், உழவர்களோடு நாற்றுநடும் மகளிர் பலரைக் கொண்ட சேற்று வளம் மிக்க வயல்களால் அழகு பெறுவதாகிய சிவபுரமாகும். |

| | |
|---|---|
| 1213. ஆவிலைந் தமர்ந்தவ னரிவையொடு<br>மேவினன் கிருந்ததொர் வியனகர்தான்<br>பூவில்வண் டமர்தரு பொய்கையன்னச்<br>சேவல்தன் பெடைபுல்கு சிவபுரமே. | பசுவிடம் உண்டாகும் பால், தயிர் முத—ய ஐந்து பொருள்களை விரும்புபவனாகிய சிவபிரான் உமையம்மையோடு கூடி மகிழ்வுடன் இருக்கின்ற பெரிய நகர், தேனுண்ண வண்டுகள் மொய்க்கும் மலர்களை உடைய பொய்கைகளில் அன்னச் சேவல் தன் பெண் அன்னத்தைத் தழுவி மகிழும் அழகுடைய சிவபுரமாகும். |
| 1214. எழின்மலை யெடுத்தவல் —ராவணன்றன்<br>முழுவ— யடக்கிய முதல்வனகர்<br>விழவினி லெடுத்தவெண் கொடிமிடைந்து<br>செழுமுகி லடுக்கும்வண் சிவபுரமே. | அழகிய கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த வ—ய இராவணனின் முழுமையான வல்லமையை அடக்கிய முதல்வனாகிய சிவபிரானது நகர், விழாக் காலங்களில் எடுக்கப்பட்ட வெண்மையான கொடிகள் நிறைந்து கரிய மேகங்களை நெருங்கிச் செறியும் வளமையான சிவபுரமாகும். |
| 1215. சங்கள வியகையன் சதுர்முகனும்<br>அங்கள வறிவரி யவனகர்தான்<br>கங்குலும் பறவைகள் கமுகுதொறும்<br>செங்கனி நுகர்தரு சிவபுரமே. | சங்கேந்திய கையினனாகிய திருமாலும் நான்முகனும் முற்காலத்தில் அடிமுடி தேடி அளந்தறியப் பெறாத சிவபிரானது நகர், இரவிலும் பறவைகள், கமுக மரங்கள் தோறும் தங்கிச் செங்கனிகளை நுகரும் வளம் மிக்க சிவபுரமாகும். |
| 1216. மண்டையிற் குண்டிகை மாசுதரும்<br>மிண்டரை விலக்கிய விமலனகர்<br>பண்டமர் தருபழங் காவிரியின்<br>தெண்டிரை பொருதெழு சிவபுரமே. | உண்கலன் குண்டிகை ஆகியனவற்றை ஏந்தியவராய், மாசேறிய உட—னராய்த் தருக்கொடு திரியும் சமணர்களை வெறுக்கும் சிவபிரானது நகர், பாழமையான காலந்தொட்டே ஓடி வந்து வளம் சேர்க்கும் பழங்காவிரியின் அலைகள் வந்து பொருந்தும் சிவபுரமாகும். |
| 1217. சிவனுறை தருசிவ புரநகரைக்<br>கவுணியர் குலபதி காழியர்கோன்<br>தவமல்கு தமிழிவை சொல்லவல்லார்<br>நவமொடு சிவகதி நண்ணுவரே. | சிவபெருமான் எழுந்தருளிய சிவபுர நகரைப் போற்றிக் கவுணியர் குலபதியாகிய காழியர் தலைவன் ஞானசம்பந்தன் பாடிய தவத்தைத தருவனவாகிய இப்பதிகத் தமிழை ஓத வல்லவர் புதுமைகள் பலவும் பெற்று முடிவில் சிவகதி சேர்வர். |

## 113. திருவல்லம்

**பண் : வியாழக்குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 113**

| | |
|---|---|
| 1218. எரித்தவன் முப்புர மெரியின்மூழ்கத்<br>தரித்தவன் கங்கையைத் தாழ்சடைமேல்<br>விரித்தவன் வேதங்கள் வேறுவேறு<br>தெரித்தவ னுறைவிடந் திருவல்லமே. | அவுணர்களின் முப்புரங்களையும் எரியில் மூழ்குமாறு செய்து அழித்தவனும், தாழ்ந்து தொங்கும் சடைமுடிமீது கங்கையைத் தரித்தவனும், வேதங்களை அருளிச் செய்தவனும், அவற்றின் பொருள்களை ஆறு அங்கங்களுடன் தெளியச் செய்தவனும் ஆகிய சிவபிரான் உறையும் இடம் திருவல்லமாகும். |

| | | |
|---|---|---|
| 1219. | தாயவ னுலகுக்குத் தன்னொப்பிலாத்<br>தூயவன் றூமதி சூடியெல்லாம்<br>ஆயவ னமரர்க்கு முனிவர்கட்கும்<br>சேயவ னுறைவிடத் திருவல்லமே. | உலக உயிர்கட்குத் தாய் போன்றவனும், தனக்கு யாரையும் உவமை சொல்ல முடியாத தூயவனும், தூய மதியை முடியில் சூடியவனும், எல்லாப் பொருள்களுமாக ஆனவனும், போகிகள் ஆன அமரர், மானசீலரான முனிவர் முதலானோர்க்குச் சேயவனும் ஆன சிவபிரானது உறைவிடம் திருவல்லமாகும். |
| 1220. | பார்த்தவன் காமனைப் பண்பழியப்<br>போர்த்தவன் போதகத் தின்னுரிவை<br>ஆர்த்தவன் நான்முகன் றலையையன்று<br>சேர்த்தவ னுறைவிடந் திருவல்லமே. | மன்மதனின் அழகு கெடுமாறு நெற்றி விழியால் பார்த்து அவனை எரித்தவனும், யானையின் தோலை உரித்துப் போர்த்தவனும், தன்முனைப்போடு ஆரவாரித்த பிரமனின் ஐந்து தலைகளில் ஒன்றைக் கொய்து அத்தலையினது ஓட்டைக் கையில் உண்கலன் ஆகச் சேர்த்துள்ளவனும் ஆகிய சிவபிரானது உறைவிடம் திருவல்லமாகும். |
| 1221. | கொய்தவம் மலரடி கூடுவார்தம்<br>மைதவழ் திருமகள் வணங்கவைத்துப்<br>பெய்தவன் பெருமழை யுலகமுய்யச்<br>செய்தவ னுறைவிடந் திருவல்லமே. | அன்பர்களால் கொய்து அணியப்பெற்ற அழகிய மலர் பொருந்திய திருவடிகளைச் சேர்பவர்களைப் பலரிடத்தும் மாறி மாறிச் செல்லும் இயல்பின ளாகிய திருமகளை வணங்குமாறு செய்விப் பவனும், பெருமழை பெய்வித்து உலகை உய்யுமாறு செய்பவனுமாய சிவபிரானது உறைவிடம் திருவல்லமாகும். |
| 1222. | சார்ந்தவர்க் கின்பங்கள் தழைக்கும்வண்ணம்<br>நேர்ந்தவ னேரிழை யோடுங்கூடித்<br>தேர்ந்தவர் தேடுவார் தேடச்செய்தே<br>சேர்ந்தவ னுறைவிடந் திருவல்லமே. | தன்னைச் சார்ந்தவர்கட்கு இன்பங்கள் தழைக்குமாறு நேரிய அணிகலன்களைப் பூண்டுள்ள உமையம்மையாரோடு அருள் வழங்க இசைந்துள்ளவனும் தன்னைச் சேர்ந்த சிவஞானியர்க்கும் பிறவாறு தேடுபவர்க்கும் அவர்களைத் தேடுமாறு செய்து அவர்கட்கு உள்ளிருந்து அருள் செய்பவனுமாகிய சிவபெருமானது உறைவிடம் திருவல்லமாகும். |
| 1223. | பதைத்தெழு காலனைப் பாதமொன்றால்<br>உதைத்தெழு மாமுனிக் குண்மைநின்று<br>விதிர்த்தெழு தக்கன்றன் வேள்வியன்று<br>சிதைத்தவ னுறைவிடந் திருவல்லமே. | சினந்து வந்த எமனை இடக் காலால் உதைத்துத் தன்னை வணங்கி எழுந்த மார்க்கண்டேயனுக்கு உண்மைப் பொருளாய் எதிர்நின்று அருள் செய்தவனும், விதிர்த்தெழு கோபத்தால் படபடத்துத் திட்டமிட்டுச் செயற்பட்ட தக்கனது வேள்வியை முற்காலத்தில் சிதைத்தவனும் ஆகிய சிவபிரானது இடம் திருவல்லமாகும். |
| 1224. | இகழ்ந்தரு வரையினை யெடுக்கலுற்றாங்<br>ககழ்ந்தவல் லரக்கனை யடர்த்தபாதம்<br>நிகழ்ந்தவர் நேடுவார் நேடச்செய்த<br>திகழ்ந்தவ னுறைவிடந் திருவல்லமே. | இகழ்ந்து அரிய கயிலை மலையை எடுத்து அப்புறப்படுத்தற் பொருட்டு அகழ்ந்து வ–ய இராவணனை அடர்த்த திருவடியை உடையவனும், அத்திருவடியையே நிகழ் பொருளாகக் கொண்ட அன்பர்கள் தேடி வருந்திய அளவில் அவர்கள் உள்ளத்திலேயே திகழ்ந்து விளங்குபவனும் ஆகிய சிவபிரான் உறையுமிடம் திருவல்லமாகும். |

1225. பெரியவன் சிறியவர் சிந்தைசெய்ய
அரியவ னருமறை யங்கமானான்
கரியவ னான்முகன் காணவொண்ணாத்
தெரியவன் வளநகர் திருவல்லமே.

எல்லோரினும் பெரியவனும், அறிவிற் சிறியவர்கள் சிந்தித்து உணர்தற்கு அரியவனும், அரிய வேதங்களும் அவற்றின் அங்கங்களும் ஆனவனும், திருமால் பிரமர்கள் காண ஒண்ணாதவனாய் அன்பிற் சிறந்தார்க்குத் தெரிய நிற்பவனும் ஆன சிவபிரானது வளநகர் திருவல்லமாகும்.

1226. அன்றிய வமணர்கள் சாக்கியர்கள்
குன்றிய வறவுரை கூறாவண்ணம்
வென்றவன் புலனைந்தும் விளங்கவெங்கும்
சென்றவ னுறைவிடந் திருவல்லமே.

கொள்கைகளால் மாறுபட்ட சமணர்களும் புத்தர்களும் அறம் குன்றிய உரைகளைக் கூறாதவாறு, ஐம்புலன்களையும் வென்றவனும், எங்கும் விளங்கித் தோன்றுபவனும் ஆகிய சிவபிரான் உறைவிடம் திருவல்லமாகும்.

1227. கற்றவர் திருவல்லங் கண்டுசென்று
நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
குற்றமில் செந்தமிழ் கூறவல்லார்
பற்றுவ ரீசன்பொற் பாதங்களே.

கற்றவர்கள் வாழும் திருவல்லத்தைத் தரிசித்துச் சென்று நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தன் பாடிய குற்றமற்ற இச்செந்தமிழ்ப் பதிகத்தைக் கூற வல்லவர்கள் சிவபிரானுடைய அழகிய திருவடிகளை அடைவர்.

## 114. திருமாற்பேறு

பண் : வியாழக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 114

1228. குருந்தவன் குருகவன் கூர்மையவன்
பெருந்தகை பெண்ணவ னாணுமவன்
கருந்தட மலர்க்கண்ணி காதல்செய்யும்
மருந்தவன் வளநகர் மாற்பேறே.

குருத்தாக, தளிராக, மொட்டு, காய் ஆகியனவாக விளங்குபவனும், பெருந்தகையாய்ப் பெண் ஆண் வடிவோடு விளங்குபவனும், தடாகத்தில் பூக்கும் கருநீல மலர் போன்ற கண்களை உடைய உமையம்மையால் விரும்பப் படுபவனும், அரிய மருந்தாய் விளங்குபவனும் ஆகிய சிவபெருமானது வளநகர் மாற்பேறு.

1229. பாறணி வெண்டலை கையிலேந்தி
வேறணி ப–கொளும் வேட்கையனாய்
நீறணிந் துமையொரு பாகம்வைத்த
மாறி– வளநகர் மாற்பேறே.

பருந்தால் நெருங்கப்பட்ட புலால் நீங்கிய அழகிய வெள்ளிய தலையோட்டைக் கையில் ஏந்தி, உலகிய–ல் வேறுபட்ட அழகுடன் சென்று ப–யேற்கும் வேட்கையனாய் மேனி முழுதும் நீறுபூசி உமையம்மையை ஒருபாகமாக வைத்துள்ளவனும், தனக்கு ஒப்பு இல்லாதவனும் ஆகிய சிவபிரானது வளநகர், மாற்பேறு.

1230. கருவுடை யாருல கங்கள்வேவச்
செருவிடை யேறியுஞ் சென்றுநின்று
உருவிடை யாளுமை யாளுந்தானும்
மருவிய வளநகர் மாற்பேறே.

பிறப்புடைய ஆன்மாக்களுக்குப் படைக்கப்பட்ட உலகங்களை ஊழிக் காலத்தில் அழியுமாறு செய்பவனும், போரில் வல்ல விடைமீது ஏறி வருபவனும் ஆகிய சிவபிரான் மணம் புரிந்த அழகிய இடையினை உடைய உமையாளும் தானுமாய்ச் சென்று நின்று பொருந்தி விளங்கும் வளநகர் மாற்பேறாகும்.

| | |
|---|---|
| **1231.** தலையவன் றலையணி மாலைபூண்டு<br>கொலைநவில் கூற்றினைக் கொன்றுகந்தான்<br>கலைநவின் றான்கயி லாயமென்னும்<br>மலையவன் வளநகர் மாற்பேறே. | எல்லோரினும் மேம்பட்டவனும், அழகிய தலைமாலையைப் பூண்டு உயிரைக் கொல்லும் விருப்பொடுவந்த கூற்றுவனைக் கொன்று மகிழ்ந்தவனும், பல கலைகளையும் உலகிற்கு அருளியவனும், கயிலாய மலையாளனுமாகிய சிவபிரானது வளநகர் மாற்பேறாகும். |
| **1232.** துறையவன் றொழிலவன் றொல்லுயிர்க்கும்<br>பிறையணி சடைமுடிப் பெண்ணொர்பாகன்<br>கறையணி மிடற்றண்ணல் காலற்செற்ற<br>மறையவன் வளநகர் மாற்பேறே. | பல்வேறு நெறிகளாய் விளங்குபவனும், பழமையாக வரும் உயிர்களின் பொருட்டு ஐந்தொழில்களைப் புரிபவனும், பிறையணிந்த சடைமுடியனும், உமை நங்கையை ஒருபாகமாகக் கொண்டவனும், விடக்கறை பொருந்திய மிடற்றினை உடைய தலைமையாளனும், காலனைச் செற்றுகந்த மறையவனுமான சிவபிரானது வளநகர், மாற்பேறாகும். |
| **1233.** பெண்ணினல் லாளையோர் பாகம்வைத்துக்<br>கண்ணினாற் காமனைக் காய்ந்தவன்றன்<br>விண்ணவர் தானவர் முனிவரொடு<br>மண்ணவர் வணங்குநன் மாற்பேறே. | பெண்களிற் பேரழகினளாகிய உமையம்மையை ஒரு பாகமாக வைத்திருந்தும் தனது நெற்றிக் கண்ணால் காமனை நீறாக்கி அழித்தவனும் தேவர்கள், அசுரர்கள் முனிவர்கள், மண்ணுலக மக்கள் ஆகியோரால் வணங்கப் பெறுபவனுமாய சிவபிரானது வளநகர், மாற்பேறாகும். |
| **1234.** தீதிலா மலையெடுத் தவ்வரக்கன்<br>நீதியால் வேதகீ தங்கள்பாட<br>ஆதியா னாகிய வண்ணலெங்கள்<br>மாதிதன் வளநகர் மாற்பேறே. | குற்றமற்ற கயிலை மலையைப் பெயர்த்த அரக்கனாகிய இராவணனை முத—ல் கால்விரலால் அடர்த்துப் பின் அவன் பிழை உணர்ந்து முறையோடு வேத கீதங்களைப் பாட அருள்புரிந்த ஆதியானாகிய அண்ணலும் மாதினை இடப்பாகமாக உடைய எங்கள் தலைவனுமாய சிவபிரானது வளநகர், மாற்பேறாகும். |
| **1235.** செய்யதண் டாமரைக் கண்ணனொடும்<br>கொய்யணி நறுமலர் மேலயனும்<br>ஐயனன் சேவடி யதனையுள்க<br>மையல்செய் வளநகர் மாற்பேறே. | சிவந்த தண் தாமரை மலர் போன்ற கண்களை உடைய திருமாலும், கொய்து அணியத்தக்க தாமரை மலர்மேல் விளங்கும் பிரமனும், தலைவனாகிய சிவபிரானின் சேவடிகளை விருப்போடு நினைந்து வழிபட அருள்புரியும் சிவபிரான் எழுந்தருளிய வளநகர், மாற்பேறாகும். |
| **1236.** குளித்துணா வமணர்குண் டாக்கரென்றும்<br>களித்துநன் கழலடி காணலுறார்<br>முளைத்தவெண் மதியினொ டரவஞ்சென்னி<br>வளைத்தவன் வளநகர் மாற்பேறே. | குளித்துப்பின் உண்ணாத இயல்பினராகிய அணமர்களும், பருத்த உட—னராகிய புத்தர்களும், களிப்போடு சிவபிரான் திருவடிகளைக் காணப் பெறார். ஒரு கலைப் பிறையாக முளைத்த வெள்ளிய பிறை மதியையும் பாம்பையும் முடிமீது சூடியவனாகிய சிவபிரானது வளநகர், மாற்பேறாகும். |

| | | |
|---|---|---|
| 1237. | அந்தமின் ஞானசம் பந்தன்சொன்ன<br>செந்திசை பாடல்செய் மாற்பேற்றைச்<br>சந்தமின் றமிழ்கள்கொண் டேத்தவல்லார்<br>எந்தைதன் கழலடி யெய்துவரே. | ஞானசம்பந்தன் செவ்விய இசையால் பாடிப் போற்றிய மாற்பேற்றைத் தரிசித்துச் சந்த இசையோடு கூடிய அழிவற்ற இனிய இத்திருப்பதிகப் பாடல்களைக் கொண்டு ஏத்தி வழிபட வல்லவர் எந்தையாகிய சிவபிரானின் கழலணிந்த திருவடிகளை எய்துவர். |

## 115. திருஇராமனதீச்சரம்

பண் : வியாழக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 115

| | | |
|---|---|---|
| 1238. | சங்கொளிர் முன்கையர் தம்மிடையே<br>அங்கிடு ப–கொளு மவன்கோபப்<br>பொங்கர வாடலோன் புவனியோங்க<br>எங்கும னிராமன தீச்சரமே. | சங்கு வளையல்கள் அணிந்த முன்கைகளை உடைய முனி பன்னியர் வாழும் வீதிகளிடையே சென்று அங்கு அவர்கள் இடும் ப–யை மகிழ்வோடு கொள்பவனும், சினம் பொங்கும் அரவைப் பிடித்து ஆட்டுபவனும், உலக மக்கள் உயர்வுபெற எங்கும் நிறைந்திருப்பவனுமாகிய சிவபிரானது தலம் இராமனதீச்சரம். |
| 1239. | சந்தநன் மலரணி தாழ்சடையன்<br>தந்தம தத்தவன் றாதையோதான்<br>அந்தமில் பாடலோ னழகனல்ல<br>எந்தவ னிராமன தீச்சரமே. | அழகிய நல்ல மலர்களை அணிந்து தாழ்ந்து தொங்கும் சடையினை உடையவனும், தந்தத்தையும் மதத்தையும் உடைய விநாயகப் பெருமானின் தந்தையும், முடிவற்ற இசைப்பாடல்களைப் பாடுபவனும், அழகனும், எங்கள் தவப்பேறாய் விளங்கும் நல்லவனுமாய சிவபிரானது தலம், இராமனதீச்சரம். |
| 1240. | தழைமயி லேறவன் றாதையோதான்<br>மழைபொழி சடையவன் மன்னுகாதில்<br>குழையது விலங்கிய கோலமார்பின்<br>இழையவ னிராமன தீச்சரமே. | தழைத்த பீ–யோடு கூடிய மயில்மீது ஏறிவரும் முருகனது தந்தையும், உலகிற்கு நீர்வளந்தரும் கங்கை பாயும் சடையினை உடையவனும், காதில் நிலைபெற்று விளங்கும் குழையை அணிந்தவனும், அழகிய மார்பில் குறுக்காக முப்புரிநூல் அணிந்தவனுமாகிய சிவபிரானது தலம் இராமனதீச்சரம். |
| 1241. | சத்தியு ளாதியோர் தையல்பங்கன்<br>முத்திய தாகிய மூர்த்தியோதான்<br>அத்திய கையினி லழகுசூலம்<br>வைத்தவ னிராமன தீச்சரமே. | சத்திகளில் முதல்வியாக விளங்கும் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனும், உயிர்கட்கு முத்திப்பேறாக விளங்கும் கடவுளும், தீயேந்திய கையில் அழகிய சூலத்தைத் தாங்கியவனுமாகிய சிவபிரானது தலம் இராமனதீச்சரம். |
| 1242. | தாழ்ந்தகு ழற்சடை முடியதன்மேல்<br>தோய்ந்த விளம்பிறை துலங்குசென்னிப்<br>பாய்ந்தகங் கையொடு படவரவம்<br>ஏய்ந்தவ னிராமன தீச்சரமே. | தலையில், தாழ்ந்த கூந்தலால் இயன்ற சடைமுடியின்மேல், அழகு தோய்ந்த இளம்பிறை, பாய்ந்துவரும் கங்கை, படம் பொருந்திய அரவம் ஆகியவற்றைச் சூடிய சிவபிரானது தலம் இராமனதீச்சரம். |

| | | |
|---|---|---|
| 1243. | சரிகுழ –லங்கிய தையல்காணும்<br>பெரியவன் காளிதன் பெரியகூத்தை<br>அரியவ னாடலோ னங்கையேத்தும்<br>எரியவ னிராமன தீச்சரமே. | பிடரியின்மேல் விளங்கும் சுருண்ட கூந்த–னளாகிய உமையம்மை அருகி–ருந்து காணும் பெரியவனும், காளியின் பெரிய கூத்தோடு போட்டியிட்டு அவளால் அறிதற்கு அரியவனாய், நடனமாடுபவனும், அழகிய கையில் எரி ஏந்தி விளங்குபவனுமாகிய சிவபிரானது தலம் இராமனதீச்சரம். |
| 1244. | மாறிலா மாதொரு பங்கன்மேனி<br>நீறது வாடலோ னீள்சடைமேல்<br>ஆறது சூடுவா னழகன்விடை<br>ஏறவ னிராமன தீச்சரமே. | தனக்கு ஒப்பாரில்லாத அழகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனும், திருமேனியில் திருநீற்றை அணிந்தவனும், நீண்ட சடைமுடியின்மேல் கங்கையைச் சூடியவனும் அழகனும், விடையின்மேல் ஏறி வருபவனுமாகிய சிவபிரானது தலம் இராமனதீச்சரம். |
| 1245. | தடவரை யரக்கனைத் தலைநெரித்தோன்<br>படவர வாட்டிய படர்சடையன்<br>நடமது வாடலா னான்மறைக்கும்<br>இடமவ னிராமன தீச்சரமே. | பெரிய கயிலை மலையால் இராவணனின் தலையை நெரித்தவனும், படம் பொருந்திய பாம்பை ஆட்டி மகிழ்பவனும், விரிந்த சடைமுடியை உடையவனும், நடனம் புரிபவனும், நான்கு வேதங்கட்கும் இடமாக விளங்குபவனும் ஆகிய சிவபிரானது தலம் இராமனதீச்சரம். |
| 1246. | தனமணி தையல்தன் பாகன்றன்னை<br>அனமணி யயனணி முடியுங்காணான்<br>பனமணி வரவரி பாதங்காணான்<br>இனமணி யிராமன தீச்சரமே. | அழகிய தனபாரங்களையுடைய உமையம்மையின் கேள்வனும், அன்னமாகத் தன்னை மாற்றிக் கொண்டு, அழகிய முடியைக் காணாது திரும்பிய நான்முகன், திருவடியைக் காணாத, படங்களில் மணிகளையுடைய ஆதிசேடனாகிய அணையில் துயிலும் திருமால் ஆகியோர் வணங்க அருள் புரிந்தவனுமாகிய சிவபிரானது தலம் பல்வகையான மணிக்குவைகளையுடைய இராமனதீச்சரம் ஆகும். |
| 1247. | தறிபோலாஞ் சமணர்சாக் கியர்சொற்கொளேல்<br>அறிவோரா னாம மறிந்துரைமின்<br>மறிகையோன் றன்முடி மணியார்கங்கை<br>எறிபவ னிராமன தீச்சரமே. | மரத்தால் இயன்ற தடி போன்ற அறிவற்ற சமண புத்தருடைய சொற்களைக் கேளாதீர். மெய்ஞ்ஞானியர்கள் வாயினால் இறைவன் திருப்பெயரை அறிந்து சொல்வீர்களாக. அப்பெருமான் மான் இளங்கன்றை ஏந்திய கையனாய்த் தனது முடியில், மணிகளோடு கூடிய கங்கை நதி அலை மோதுபவனாய், இராமனதீச்சரத்தில் எழுந்தருளியுள்ளான். சென்று வழிபடுக. |
| 1248. | தேன்மலர்க் கொன்றையோன் | தேன் பொருந்திய கொன்றை மாலையைச் சூடியவன். |

## 116. பொது

பண் : வியாழக்குறிஞ்சி | முதல் திருமுறை பதிக எண் : 116

| | |
|---|---|
| 1249. அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்<br>உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே<br>கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்<br>செய்வினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். | 'நாம் முற்பிறவிகளிற் செய்த வினைகளுக் கேற்பவே, இப்பிறவியில் வினைகளைச் செய்து அவற்றாலாய பயன்களை நுகர்கிறோம்' என்று சொல்லப் பெறுவதை நீங்கள் அறிவீர்கள். இவற்றி–ருந்து விடுதிபெறும் வழியை நீவிர் தேடாதிருப்பது உமக்குக் குறையன்றோ? நாம் அனைவரும் சிவபிரானுக்கு அடியவர்கள் ஆவோம். அவ்விறைவனை நோக்கிச் சரியை, கிரியை முதலான சிவப்பணிகளைச் செய்து அவ்விறைவன் கழலைப் போற்றுவோம். அவ்வாறு செய்யின் நாம் செய்த பழவினைகள் நம்மை வந்து அணுகா. இது திருநீலகண்டத்தின் மேல் ஆணை. |
| 1250. காவினை யிட்டுங் குளம்பல தொட்டுங் கனிமனத்தால்<br>ஏவினை யாலெயின் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்<br>பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்<br>தீவினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். | நாம் சிவனுக்கு அடியவர்கள் ஆவோம் அல்லமோ? நந்தவனம் சோலை முத–யவற்றை வளர்த்தும் குளங்கள் பல தோண்டியும் நல்லறங்கள் பலவற்றைச் செய்து, கனிந்த மனத்தோடு 'கணையொன்றால் முப்புரங்களை எரித்தவனே' என்று காலைமாலை இருபொழுதும் பூக்களைக் கொய்து வந்து அணிவித்துச் சிவபிரானுடைய மலர் போலும் திருவடிகளைப் போற்றுவோம். அவ்வாறு செயின் கொடிய பழவினைகள் நம்மைத் தீண்டமாட்டா. இது திருநீலகண்டத்தின் மேல் ஆணை. |
| 1251. முலைத்தட மூழ்கிய போகங் களுமற் றெவையுமெல்லாம்<br>விலைத்தலை யாவணங் கொண்டெமை யாண்ட<br>விரிசடையீர்<br>இலைத்தலைச் சூலமுந் தண்டு மழுவு மிவையுடையீர்<br>சிலைத்தெமைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். | நாம் சிவனுக்கு அடியவர்கள் ஆவோம் அல்லமோ? அவ்விறைவனை நோக்கி மகளிர் இன்பத்தில் திளைத்து மகிழ்தல் முதலான உலக நுகர்வுகள் எல்லாம் நம்மை விலையாகக் கொண்டு, அலைக்காதவாறு சிவபெருமானாரை 'எம்மை ஆட்கொண்டருளிய விரிந்த சடையை உடையவரே' முத்தலைச் சூலம், தண்டாயுதம், மழு முத–யவற்றைப் படைக்கலங்களாக உடையவரே! எனப் போற்றுவோமாயின், பழைய தீவினைகள் ஆரவாரித்து வந்து நம்மைத் தீண்ட மாட்டா. இது திருநீலகண்டத்தின்மேல் ஆணை. |

| | | |
|---|---|---|
| 1252. | விண்ணுல காள்கின்ற விச்சா தரர்களும் வேதியரும்<br>புண்ணிய ரென்றிரு போதுந் தொழப்படும் புண்ணியரே<br>கண்ணிமை யாதன மூன்றுடை யீரங் கழலடைந்தோம்<br>திண்ணிய தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். | நாம் சிவனுக்கு அடியவர்கள் ஆவோம் அல்லமோ? அவ்விறைவனை நோக்கி, விண்ணுலகை ஆளுகின்ற வித்யாதரர்களும், வேதியர்களும் 'புண்ணிய வடிவமானவர்' என்று காலை மாலை இருபோதும் துதித்துத் தொழப்படும் புண்ணியரே. இமையாத முக்கண்களை உடையவரே! உம் திருவடிகளைப் புகலாக அடைந்தோம் எனப் போற்றுவோமாயின் பழையதான வ–ய தீவினைகள் நம்மை வந்து தீண்டமாட்டா. இது திருநீலகண்டத்தின் மேல் ஆணை. |
| 1253. | மற்றிணை யில்லா மலைதிரண் டன்னதிண் டோளுடையீர்<br>கிற்றெமை யாட்கொண்டு கேளா தொழிவதுந் தன்மைகொல்லோ<br>சொற்றுணை வாழ்க்கை துறந்துந் திருவடி யேயடைந்தோம்<br>செற்றெமைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். | நாம் சிவனுக்கு அடியவர்கள் ஆவோம் அல்லமோ? அப்பெருமானை நோக்கி ஒப்பற்ற மலைபோல் திரண்ட திண்மையான தோள்களை உடையவரே! எம்மைப் பெருவ–மை கொண்டு ஆட்கொண்டும் சிறிதேனும் எம்குறையைக் கேளாதொழிவது உமது பெருமைக்கு ஏற்புடையதாமோ? இல்லற வாழ்க்கைக்குச் சொல்லப்படும் எல்லாத் துணைகளையும் விடுத்து உம் திருவடிகளையே சரணாக அடைந்தோம் எனப் போற்றுவோமாயின் நாம் முற்பிறவிகளில் செய்த தீவினைகள் பெருவ–மை கொண்டு வருத்தி நம்மை வந்து அடையமாட்டா. இது திருநீலகண்டத்தின் மேல் ஆணை. |
| 1254. | மறக்கு மனத்தினை மாற்றியெம் மாவியை வற்புறுத்திப்<br>பிறப்பில் பெருமான் றிருந்தடிக் கீழ்ப்பிழை யாதவண்ணம்<br>பறித்த மலர்கொடு வந்துமை யேத்தும் பணியடியோம்<br>சிறப்பி–த் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். | நாம் சிவனுக்கு அடியவர்கள் ஆவோம் அல்லமோ? அவ்விறைவனை நோக்கி மறக்கும் இயல்பை உடைய நம் மனத்தை மாற்றி மலமறைப்பால் தடுமாறும் உயிரை வற்புறுத்திப் பிறப்பற்ற பெருமானாகிய அச்சிவபெருமானுடைய அழகிய திருவடியின் கீழ் தவறாதவாறு மனத்தை நிறுத்தி அப்பொழுது பறித்த மலர்களைக் கொண்டு பூசித்து 'உம்மை ஏத்தும் பணியை உடைய அடியவர் நாங்கள்' எனக் கூறி வழிபட்டுவரின் சிறப்பற்ற தீய பழவினைகள் நம்மைத் தீண்ட மாட்டா. இது திருநீலகண்டத்தின்மேல் ஆணை. |
| 1255. | கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே<br>உருகி மலர்கொடு வந்துமை யேத்துதும் நாமடியோம்<br>செருவி லரக்கனைச் சீரி லடர்த்தருள் செய்தவரே<br>திருவி–த் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். | நாம் சிவனுக்கு அடியவர்கள் ஆவோம் அல்லமோ? பிறவியை அறுத்து உலக வாழ்க்கையை வெறுத்து அவன் திருவடிக்கண் நல்ல மலர்களைக் கொண்டு அருச்சித்துப் போற்றித் 'தன்னை எதிர்ப்பாரில்லாத வ–ய இராவணனைப் பலரும் போற்ற அடர்த்துப்பின் அருள் செய்த பெருமானே!' என உருகிப் போற்றுவோமாயின் சிவனடி வழுத்தும் செல்வத்தைப் போக்கும் இந்தப் பழைய தீவினைகள் நம்மை வந்து தீண்ட மாட்டா. இது திருநீலகண்டத்தின்மேல் ஆணை. |

| | |
|---|---|
| 1256. நாற்ற மலர்மிசை நான்முக னாரணன் வாதுசெய்து<br>தோற்ற முடைய வடியு முடியுந் தொடர்வரியீர்<br>தோற்றினுந் தோற்றுந் தொழுது வணங்குதும் நாமடியோம்<br>சீற்றம தாம்வினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். | நாம் சிவனுக்கு அடியவர்கள் ஆவோம் அல்லமோ ? அப்பெருமானை நோக்கி, மணங்கமழும் தாமரை மலர்மேல் விளங்கும் நான்முகனும், திருமாலும் தங்களுக்குள் யார் பெரியவர் என வாது செய்தபோது, அவர்கட்கு எதிரே கட்புலனாகத் தோன்றி, அவர்களால் அடியும் முடியும் அறியப்பெறாத் தன்மையை உடையவரே! என்று அழைத்து, நாம் காணத் தோன்றுதலையும் செய்யும் அவ்விறைவனை நாம் தொழுது வணங்குவோம். அவ்வாறு வழிபடின், சினந்துவரும் பழவினைகள் நம்மைத் தீண்டமாட்டா. இது திருநீலகண்டத்தின் மேல் ஆணை. |
| 1257. சாக்கியப் பட்டுஞ் சமணரு வாகி யுடையொழிந்தும்<br>பாக்கிய மின்றி யிருதலைப் போகமும் பற்றும்விட்டார்<br>பூக்கமழ் கொன்றைப் புரிசடை யீரடி போற்றுகின்றோம்<br>தீக்குழித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். | நாம் சிவனுக்கு அடியவர்கள் ஆவோம் அல்லமோ ? சிலர் புத்த மதத்தைச் சார்ந்தும், சமண சமயத்தைச் சார்ந்து ஆடையின்றித் திரிந்தும் சிவபிரானை வணங்கும் பாக்கியமின்றி இம்மை மறுமை இன்பங்களையும் அவற்றைப் பெறும் பற்றையும் விட்டுப் பயனற்றவராயினர். நாம் அவ்விறைவனை நோக்கிக் கொன்றை மலர் மணக்கும் சடையை உடையவரே! உம் திருவடிகளைப் போற்றுகின்றோம் எனக் கூறிச் செயற்படின் தீக்குழி போலக் கனலும் பழைய தீவினைகள் நம்மைத் தீண்ட மாட்டா. இது திருநீலகண்டத்தின் மேல் ஆணை. |
| 1258. பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்<br>இறந்த பிறவியுண் டாகி –மையவர் கோனடிக்கண்<br>திறம்பயின் ஞானசம் பந்தன செந்தமிழ் பத்தும்வல்லார்<br>நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே. | மக்கட் பிறப்பெடுத்த இப்பிறவியிலேயே சிவபிரான் திருவடிகளை விரும்பி வழிபடின் முத்திப்பேறு அடையலாம். மீண்டும் பழவினைகளால் பிறப்பு உளதாயின், தேவர்களின் தலைவனாகிய சிவபிரான் திருவடிகளின் பெருமைகளை அறிந்த ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகச் செந்தமிழ்ப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர்களாயின், அவர்கள் இமையவர்கள் நிறைந்த வானுலகில் அவ்வானவர் கோனொடும் கூடி மகிழும் பதவியைப் பெற்று இன்புறுவர். |

## 117. திருப்பிரமபுரம்

**பண் : வியாழக்குறிஞ்சி** | **முதல் திருமுறை பதிக எண் : 117**

| | |
|---|---|
| 1259. காட தணிகலங் காரர வம்பதி காலதனில்<br>தோட தணிகுவர் சுந்தரக் காதினிற் றூச்சிலம்பர்<br>வேட தணிவர் விசயற் குருவம் வில்லுங்கொடுப்பர்<br>பீடதணிமணி மாடப் பிரம புரத்தரரே. | பெருமை பெற்ற மணிகள் இழைத்த மாட வீடுகளை உடைய பிரமபுரத்து அரனார் இடுகாட்டைப் பதியாகக் கொள்வர். கரிய அரவினை அணிகலனாகப் பூண்டவர். கால்களில் தூய சிலம்பை அணிந்தவர். அழகிய காதில் தோடணிந்தவர். வேட்டுவ உருவம் தாங்கி அருச்சுனனுக்குப் பாசுபதக் கணை அருளியவர். |

| | | |
|---|---|---|
| 1260. | கற்றைச் சடையது கங்கண முன்கையிற் றிங்கள்கங்கை<br>பற்றித்து முப்புரம் பார்படைத் தோன்றலை சுட்டதுபண்<br>டெற்றித்துப் பாம்பை யணிந்தது கூற்றை<br>யெழில்விளங்கும்<br>வெற்றிச் சிலைமதில் வேணு புரத்தெங்கள் வேதியரே. | கருங்கல்லால் அழகு விளங்குவதாய் அமைக்கப்பட்ட வெற்றித் திருமதில் சூழ விளங்கும் வேணுபுரத்துள் உறையும் எங்கள் வேதியராகிய இறைவர் கற்றையான சடையின்கண் திங்களையும் கங்கையையும் கொண்டவர். முன்கையில் பாம்பைக் கங்கணமாக அணிந்தவர். கையில் உலகைப் படைத்த பிரமனது தலையோட்டை உண்கலமாகப் பற்றியிருப்பவர். முப்புரங்களைச் சுட்டெரித்தவர். முற்காலத்தில் மார்க்கண்டேயர் பொருட்டு எமனை உதைத்தவர். பாம்பை அணிகலனாகப் பூண்டவர். |
| 1261. | கூவிளங் கையது பேரி சடைமுடிக் கூட்டத்தது<br>தூவிளங் கும்பொடிப் பூண்டது பூசிற்றுத் துத்திநாகம்<br>ஏவிளங் குந்நுத லாளையும் பாக முரித்தனரின்<br>பூவிளஞ் சோலைப் புக–யுண் மேவிய புண்ணியரே. | இனிய பூக்களை உடைய இளஞ்சோலைகளால் சூழப்பட்ட புக–யுள் மேவிய புண்ணியராகிய இறைவர், அடர்த்தியான சடைமுடியில் வில்வம் அணிந்தவர். கையில் பேரி என்னும் தோற் பறையை உடையவர். தூய்மையோடு விளங்கும் திருநீற்றுப் பொடியைப் பூசியவர். படப் பொறிகளோடு கூடிய நாகத்தைப் பூண்டவர். அம்பொடு கூடிய வில் போன்று வளைந்த நெற்றியை உடைய உமையம்மையை ஒரு பாகத்தே கொண்டவர். ஆனையை உரித்தவர். |
| 1262. | உரித்தது பாம்பை யுடன்மிசை யிட்டதோ ரொண்களிற்றை<br>எரித்ததொ ராமையை யின்புறப் பூண்டது முப்புரத்தைச்<br>செருத்தது சூலத்தை யேந்திற்றுத் தக்கனை<br>வேள்விபன்னூல்<br>விரித்தவர் வாழ்தரு வெங்குரு வில்வீற் றிருந்தவரே. | பல நூல்களைக் கற்றுணர்ந்து விரித்துரைக்கும் புலவர்கள் வாழும் வெங்குருவில் வீற்றிருக்கும் இறைவர் ஒப்பற்ற சிறந்த களிற்றை உரித்தவர். பாம்பைத் தம் திருமேனிமேல் அணிந்தவர். முப்புரங்களை எரித்தவர். ஆமையோட்டை மகிழ்வுறப் பூண்டவர். தக்கனை வேள்வியில் வெகுண்டவர். சூலத்தைக் கையில் ஏந்தியவர். |
| 1263. | கொட்டுவ ரக்கரை யார்ப்பது தக்கை குறுந்தாளன<br>விட்டுவர் பூதங் கலப்பில ரின்புக ழென்புலவின்<br>மட்டுவ ருந்தழல் சூடுவர் மத்தமு மேந்துவர்வான்<br>தொட்டுவ ருங்கொடித் தோணி புரத்துறை சுந்தரரே. | வானைத் தொடுமாறு உயர்ந்துள்ள கொடிகளைக் கொண்ட தோணிபுரச் சுந்தரராகிய இறைவர் தக்கை என்னும் வாத்தியத்தைக் கொட்டுபவர். இடையிலே சங்கு மணிகளைக் கட்டியவர். குறுகிய தாளை உடைய பூதகணங்களைக் கலத்தல் இல்லாதவர். இனிய புகழை ஈட்டுபவர். எலும்பையும், உலவுகின்ற இனிய தேன்மணம் வெளிப்படும் ஊமத்தம் பூவையும் சூடுபவர். தீயை ஏந்துபவர். ஈட்டுவர் – இட்டுவர் என எதுகை நோக்கிக் குறுகிற்று. |
| 1264. | சாத்துவர் பாசந் தடக்கையி லேந்துவர் கோவணந்தங்<br>கூத்தவர் கச்சுக் குலவிநின் றாடுவர் கொக்கிறகும்<br>போர்த்தவர் பல்படை பேயவை சூடுவர் பேரெழிலார்<br>பூத்தவர் கைதொழு பூந்தராய் மேவிய புண்ணியரே. | தவமுனிவர்கள் பூக்களைத் தூவி, கைகளால் தொழும் பூந்தராய் என்ற தலத்தில் எழுந்தருளிய புண்ணிய வடிவினர். கோவணம் உடுத்தவர். நீண்ட கையில் பாசத்தை ஏந்தியவர். தமக்கே உரித்தான கூத்தினை உடையவர். கச்சணிந்து ஆடுபவர். கொக்கிறகு சூடுபவர். பல்வகைப் படைகளாகிய பேய்க் கணங்களை அடி பெயர்த்து ஆடல் செய்தவர். மிக்க அழகுடையவர். |

| | | |
|---|---|---|
| 1265. | காலது கங்கை கற்றைச் சடையுள்ளாற் கழல்சிலம்பு<br>மாலது வேந்தன் மழுவது பாகம் வளர்கொழுங்கோட்<br>டாலது வூர்வ ரடலேற் றிருப்ப ரணிமணிநீர்ச்<br>சேலது கண்ணியொர் பங்கர் சிரபுர மேயவரே. | அழகிய நீலமணியின் நிறத்தையும் சேல்மீன் போன்ற பிறழ்ச்சியையும் கொண்ட கண்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவரும் சிரபுரத்தில் எழுந்தருளியவரும் ஆகிய சிவபிரான், கழலையும் சிலம்பையும் கா–ல் சூடியவர். கற்றைச் சடையில் கங்கையை உடையவர். திருமாலைப் பாகமாகக் கொண்டவர். மழுவை ஏந்தியவர். கொழுமையான கிளைகளைக் கொண்ட ஆலமரத்தின் கீழ் இருப்பவர். அடல் ஏற்றினை ஊர்பவர். |
| 1266. | நெருப்புரு வெள்விடை மேனிய ரேறுவர் நெற்றியின்கண்<br>மருப்புறு வன்கண்ணார் தாதையைக் காட்டுவர் மாமுருகன்<br>விருப்புறு பாம்புக்கு மெய்த்தந்தை யார்விறன் மாதவர்வாழ்<br>பொருப்புறு மாளிகைத் தென்புற வத்தணி புண்ணியரே. | வீரர்களாகிய மிக்க தவத்தினை உடைய தவமுனிவர்கள் வாழ்வதும் மலை போன்ற மாளிகைகளை உடையதுமான அழகிய புறவ நகருக்கு அணிசேர்க்கும் புண்ணியராகிய இறைவர் நெருப்புப் போலச் சிவந்த மேனியை உடையவர். வெண்மையான விடைமீது ஏறி வருபவர். நெற்றியின் கண், விழி உடையவர். தந்தத்தை உடையவராகிய விநாயகருக்குத் தந்தையாராவார். பாம்புக்குத் தம் மெய்யில் இடம் தந்து அதனைச் சூடுபவர். சிறப்புக்குரிய முருகனுக்கு உகப்பான தந்தையார் ஆவார். |
| 1267. | இலங்கைத் தலைவனை யேந்திற் றிறுத்த திரலையின்னாள்<br>கலங்கிய கூற்றுயிர் பெற்றது மாணி குமைபெற்றது<br>கலங்கிளர் மொந்தையி னாடுவர் கொட்டுவர் காட்டகத்துச்<br>சலங்கிளர் வாழ்வயற் சண்பையுண் மேவிய தத்துவரே. | நீர் நிறைந்து விளங்கும் வயல்களை உடைய சண்பைப் பதியில் எழுந்தருளிய இறைவர் இலங்கைத் தலைவனாகிய இராவணனை நெரித்தவர். மானைக் கையில் ஏந்தியவர். கலக்கத்தோடு வந்த கூற்றுவனைக் குமைத்தவர். வாழ்நாள் முடிவுற்ற மார்க்கண்டேயருக்கு உயிர் கொடுத்துப் புது வாழ்வருளியவர். வாத்தியமாக இலங்கும் மொந்தை என்ற தோற்கருவியைக் கொட்டுபவர். இடுகாட்டின்கண் ஆடுபவர். |
| 1268. | அடியிணை கண்டிலன் றாமரை யோன்மான் முடிகண்டிலன்<br>கொடியணி யும்பு– யேறுகந் தேறுவர் தோலுடுப்பர்<br>பிடியணி யுந்நடை யாள்வெற் பிருப்பதோர் கூறுடையர்<br>கடியணி யும்பொழிற் காழியுண் மேய கறைக்கண்டரே. | மணம் பொருந்திய பொழில்கள் சூழ்ந்த சீகாழிப் பதியுள் விளங்கும் கறைக் கண்டராகிய சிவபெருமானின் அடி இணைகளைத் திருமால் கண்டிலன். தாமரை மலரில் எழுந்தருளியுள்ள பிரமன் முடியைக் கண்டிலன். அவ்விறைவன் கொடிமிசை இலச்சினையாகவுள்ள ஏற்றினை உகந்து ஏறுவர். பு–த்தோலை உடுத்தவர். பிடி போன்ற அழகிய நடையினை உடைய உமையம்மையை ஒரு கூறாகக் கொண்டவர். அவர் இருப்பதோ கயிலை மலையாகும். |

1269. கையது வெண்குழை காதது சூல மமணர் புத்தர்
எய்துவர் தம்மை யடியவ ரெய்தாரொ ரேனக்கொம்பு
மெய்திகழ் கோவணம் பூண்ப துடுப்பது மேதகைய
கொய்தலர் பூம்பொழிற் கொச்சையுண் மேவிய
கொற்றவரே.

சிறந்தனவாய்க் கொய்யக் கொய்ய மலர்வனவாய அழகிய பொழில்கள் சூழ்ந்த கொச்சையுள் எழுந்தருளிய கொற்றவராகிய சிவபிரான் கையில் சூலமும் காதில் வெண்குழையும் கொண்டவர். அப்பெருமானை அமணர் புத்தர் எய்தார். அடியவர் எய்துவர். பன்றியின் கொம்பை அவர் திருமேனிமேல் விளங்கப் பூண்பவர், கோவணம் உடுத்தவர்.

1270. கல்லுயர் கழுமல விஞ்சியுண் மேவிய கடவுடன்னை
நல்லுரை ஞானசம் பந்தன்ஞா னத்தமிழ் நன்குணரச்
சொல்—டல் கேட்டல்வல் லோர்தொல்லை வானவர்
தங்களொடும்
செல்குவர் சீரரு ளாற்பெற லாஞ்சிவ லோகமதே.

உயர்ந்த மதில்களை உடைய கழுமலக் கோயிலுள் விளங்கும் கடவுளை நல்லுரைகளால் ஞானசம்பந்தன் பாடிய ஞானத்தமிழை நன்குணர்ந்து சொல்லவும் கேட்கவும் வல்லவர் பழமையான தேவர்களோடும் அமருலகம் சென்று சிவலோகத்தைப் பெறுவர்.

## 118. திருப்பருப்பதம்

**பண் : வியாழக்குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 118**

1271. சுடுமணி யுமிழ்நாகஞ் சூழ்தர வரைக்கசைத்தான்
இடுமணி யெழிலானை யேறல னெருதேறி
விடமணி மிடறுடையான் மேவிய நெடுங்கோட்டுப்
படுமணி விடுசுடரார் பருப்பதம் பரவுதுமே.

மிக்க ஒளியைத் தரும் மாணிக்க மணியை உமிழும் பாம்பை இடையில் பொருந்தக் கட்டியவனும், இரு புறங்களிலும் மணிகள் தொங்கவிடப்பட்ட அழகிய யானையை ஊர்தியாகக் கொண்டு அதன்மிசை ஏறாது ஆனேற்றில் ஏறி வருபவனும், நஞ்சணிந்த மிடறுடையவனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளிய நீண்ட சிகரங்களை உடையதும் ஆங்காங்கே தோன்றும் மணிகள் உமிழ்கின்ற ஒளியினை உடையதுமான திருப்பருப்பதத்தை நாம் பரவுவோம்.

1272. நோய்புல்கு தோறிரைய நரைவரு நுகருடம்பில்
நீபுல்கு தோற்றமெல்லா நினையுள்கு மடநெஞ்சே
வாய்புல்கு தோத்திரத்தால் வலஞ்செய்து தலைவணங்கிப்
பாய்பு—த் தோலுடையான் பருப்பதம் பரவுதுமே.

அறியாமையுள் மூழ்கித் திளைக்கும் நெஞ்சே! நீ போக நுகர்ச்சிக்குரிய இவ்வுடம்பில் இளமை முதல் மாறிவரும் தோற்றமெல்லாவற்றையும், நோய்கள் தழுவும் தோல் சுருங்கி நரை தோன்றும் நிலையையும் நினைந்து சிந்திப்பாயாக. மூப்பு வருமுன் வாய் நிறைந்த தோத்திரங்களைப் பாடி, வலம் வந்து, தலையால் வணங்கிப் பாயும் பு—யின் தோலை உடுத்த பெருமான் எழுந்தருளிய திருப்பருப்பதத்தைப் பரவுவோம்; வருக.

| | | |
|---|---|---|
| 1273. | துனியுறு துயர்தீரத் தோன்றியோர் நல்வினையால்<br>இனியுறு பயனாத –ரண்டுற மனம்வையேல்<br>கனியுறு மரமேறிக் கருமுசுக் கழையுகளும்<br>பனியுறு கதிர்மதியான் பருப்பதம்பரவுதுமே. | நெஞ்சே! வருத்தத்தைத் தரும் பிறவித் துயர் தீரத் தோன்றிய நீ, நல் வினைகள் செய்து அப்புண்ணியத்தால் தேவர் உலக இன்பங்களை நுகர்தல், வீடுபேறாகிய விழுமிய பயனை எய்துதல் ஆகிய இரண்டிலும் பற்றுக் கொள்ளாதே. கரிய குரங்குகள் கனி நிறைந்த மரத்தில் ஏறி அதனை விடுத்து மூங்கில் மரங்களில் தாவி உகளும், குளிர்ந்த ஒளியோடு கூடிய பிறைமதியைச் சூடிய சிவபெருமானின் திரப்பருப்பதத்தை வணங்குவோம்; வருக. மனிதமனம் ஒன்றை விட்டு ஒன்று பற்றும் நிலையை இப்பாட–ன் வருணனை தெரிவிக்கிறது. |
| 1274. | கொங்கணி நறுங்கொன்றைத் தொங்கலன் குளிர்சடையான்<br>எங்கணோ யகலநின்றா னெனவரு ளீசனிடம்<br>ஐங்கணை வரிசிலையா னநங்கனை யழகழித்த<br>பைங்கண்வெள் ளேறுடையான் பருப்பதம் பரவுதுமே. | தேன் நிறைந்ததாய் மணம் கமழும் கொன்றை மலர்மாலையைச் சூடியவன், குளிர்ந்த சடைமுடியை உடையவன், எங்கள் துன்பங்களைப் போக்க எழுந்தருளியவன் என்று அடியவர் போற்ற அவர்கட்கு அருள்புரியும் ஈசனது இடம், ஐவகை மலர்களையும் வரிந்த கரும்பு வில்லையும் உடைய மன்மதனின் அழகினை அழித்து அவனை எரித்துப் பசிய கண்களை உடைய வெள்ளேற்றை உடையவனாய் அப்பெருமான் எழுந்தருளிய பதி திருப்பருப்பதம். அதனைப் பரவுவோம். |
| 1275. | துறைபல சுனைமூழ்கித் தூமலர் சுமந்தோடி<br>மறையொ– வாய்மொழியால் வானவர் மகிழ்ந்தேத்தச்<br>சிறையொ– கிளிபயிலுந் தேனின மொ–யோவாப்<br>பறைபடு விளங்கருவிப் பருப்பதம் பரவுதுமே. | கிளிகள் சிறகுகளால் எழுப்பும் ஓசையோடு வாயால் எழுப்பும் மெல்–ய அழைப்பொ–யும், வண்டுகளின் ஒ–யும் நீங்காததாய்ப் பறை போல ஒ–க்கும் அருவிகளை உடையதாய் விளங்குவதும், தேவர்கள் துறைகள் பலவற்றை உடைய சுனைகளில் மூழ்கித் தூய மலர்களைச் சுமந்து விரைந்து வந்து வேத கீதங்களைத் தம் வாய்மொழியாக ஓதி மகிழ்வோடு வழிபடுமாறு சிவபெருமான் விளங்குவதுமாகிய திருப்பருப் பதத்தைப் பரவுவோம். |
| 1276. | சீர்கெழு சிறப்போவாச் செய்தவ நெறிவேண்டில்<br>ஏர்கெழு மடநெஞ்சே யிரண்டுற மனம்வையேல்<br>கார்கெழு நறுங்கொன்றைக் கடவுள திடம்வகையால்<br>பார்கெழு புகழோவாப் பருப்பதம் பரவுதுமே. | அழகிய மடநெஞ்சே! பெருமை மிக்க சிறப்புக்கள் அகலாததாய் நாம் மேற்கொள்ளத்தக்க தவநெறியை நீ பின்பற்ற விரும்புவாயாயின், வேண்டுமா வேண்டாவா என இரண்டுபட எண்ணாமல் உறுதியாக ஒன்றை நினைந்து நெறியின் பயனாய் விளங்கும், கார்காலத்தே மலரும் மணம் மிக்க கொன்றை மலர்மாலை சூடியவனாய் எழுந்தருளியுள்ள அக்கடவுளது இடமாய் உலகிற் புகழ்மிக்க தலமாய் விளங்கும் திருப்பருப்பதத்தைப் பரவுவோம். |

| | | |
|---|---|---|
| 1277. | புடைபுல்கு படர்கமலம் புகையொடு விரைகமழத்<br>தொடைபுல்கு நறுமாலை திருமுடி மிசையேற<br>விடைபுல்கு கொடியேந்தி வெந்தவெண் ணீறணிவான்<br>படைபுல்கு மழுவாளன் பருப்பதம் பரவுதுமே. | ஓடைகளின் புறத்தே நிறைந்து வளர்ந்த விரிந்த தாமரை மலர்கள் அந்தணர் வேட்கும் யாகப் புகையோடு மணம் கமழுமாறு தொடுக்கப் பெற்ற நறுமாலை திருமுடியின்மேல் விளங்க, விடைக் கொடியைக் கையில் ஏந்தி, மேனியில் திருவெண்ணீறு அணிந்து மழுப்படை ஏந்தியவனாய் விளங்கும் சிவபெருமானது பருப்பதத்தை நாம் பரவுவோம். |
| 1278. | நினைப்பெனு நெடுங்கிணற்றை நின்றுநின் றயராதே<br>மனத்தினை வ–த்தொழிந்தே னவலம்வந் தடையாமைக்<br>கனைத்தெழு திரள்கங்கை கமழ்சடைக் கரந்தான்றன்<br>பனைத்திரள் பாயருவிப் பருப்பதம் பரவுதுமே. | நினைப்பு என்னும் ஆழமான கிணற்றின் அருகில் இடையறாது நின்று சோர்வுபடாமல், மனம் என்னும் கயிற்றைப் பற்றி இழுத்து, எண்ணங்கள் ஈடேறாமல் அயர்வுற்றேன். ஆத–ன் இதனைக் கூறுகின்றேன். துன்பங்கள் நம்மை அடையா வண்ணம் காத்துக் கொள்ளுவதற்கு இதுவே வழி. ஆரவாரித்து எழுந்த பரந்துபட்ட வெள்ளமாக வந்த கங்கை நீரைத் தனது மணம் கமழும் சடையிலே தாங்கி மறையச் செய்தவன் ஆகிய சிவபிரானது பனைமரம் போல உருண்டு திரண்டு ஒழுகும் அருவி நீரை உடைய திருப்பருப்பதத்தை நாம் பரவுவோம். |
| 1279. | மருவிய வல்வினைநோ யவலம்வந் தடையாமல்<br>திருவுரு வமர்ந்தானுந் திசைமுக முடையானும்<br>இருவரு மறியாமை யெழுந்ததோரெரிநடுவே<br>பருவரை யுறநிமிர்ந்தான் பருப்பதம் பரவுதுமே. | பல பிறவிகள் காரணமாக நம்மைத் தொடரும் வ–ய வினைகளின் பயனாகிய துன்பங்கள் நம்மை வந்து அடையாமல் இருக்கத் திருமகளைத் தன் மார்பில் கொண்ட திருமால், நான்முகன் ஆகிய இருவரும் அறியமுடியாதவாறு எழுந்த எரியின் நடுவே பெரிய மலையாய் ஓங்கி நின்ற சிவபிரான் எழுந்தருளிய திருப்பருப்பதத்தை நாம் வணங்குவோம். |
| 1280. | சடங்கொண்ட சாத்திரத்தார் சாக்கியர் சமண்குண்டர்<br>மடங்கொண்ட விரும்பியராய் மயங்கியோர் பேய்த்தேர்ப்பின்<br>குடங்கொண்டு நீர்க்குச்செல்வார் போதுமின் குஞ்சரத்தின்<br>படங்கொண்ட போர்வையினான் பருப்பதம் பரவுதுமே. | அறியாமை வயப்பட்ட சாத்திரங்களை ஓதும் புத்தர்களும், சமணராகிய இழிந்தோரும் குண்டர்களும் கூறும் மடமையை விரும்பியவராய் மயங்கியோர் சிலர். கானல் நீரை முகக்கக் குடத்தை எடுத்துச் செல்வார் போன்றவராவர். அவ்வாறு சென்றவர் செல்லட்டும். யானைத் தோலைப் போர்வையாகப் போர்த்த சிவபிரான் எழுந்தருளிய திருப்பருப்பதத்தை நாம் சென்று பரவுவோம். |
| 1281. | வெண்செநெல் விளைகழனி விழவொ– கழுமலத்தான்<br>பண்செலப் பலபாட –சைமுரல் பருப்பதத்தை<br>நன்சொ– னாற்பரவு ஞானசம் பந்தனல்ல<br>ஒண்சொ– னிவைமாலை யுருவெணத் தவமாமே. | வெண்ணெல், செந்நெல் ஆகிய இருவகை நெற்பயிர்களும் விளைவுதரும் வயல்களை யுடையதும் விழாக்களின் ஆரவாரம் மிகுந்து தோன்றுவதுமாகிய கழுமலத்தில் அவதரித்த வனாய்ப் பண்ணோடு பொருந்திய பாடல்கள் பலவற்றால் இசைபாடி இறைவனைப் பரவிவரும் ஞானசம்பந்தன், திருப்பருப்பதத்தை நல்ல சொற்கள் அமைந்த பாடலால் பாடிய ஒளி பொருந்திய இத்திருப்பதிகப் பாமாலையைப் பலகாலும் எண்ணிப் பரவ, அதுவே தவமாகிப் பயன்தரும். |

## 119. திருக்கள்ளில்

பண் : வியாழக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 119

| | |
|---|---|
| 1282. முள்ளின்மேன் முதுகூகை முரலுஞ் சோலை<br>வெள்ளின்மேல் விடுகூறைக் கொடி விளைந்த<br>கள்ளின்மே யவண்ணல் கழல்க ணாளும்<br>உள்ளுமே லுயர்வெய்த லொரு தலையே. | முள்ளுடைய மரங்களின்மேல் இருந்து முதிய கூகைகள் ஒ–க்கும் சோலைகள் சூழ்ந்ததும், விளமரங்களின்மேல் படர்ந்த கூறைக் கொடிகள் விளைந்து தோன்றுவதுமாய கள்ளில் என்னும் இத்தலத்தில் எழுந்தருளிய சிவபிரான் திருவடிகளை நாள்தோறும் நினைவோமானால் உயர்வெய்துதல் உறுதியாகும். |
| 1283. ஆடலான் பாடலா னரவங்கள் பூண்டான்<br>ஓடலாற் கலனில்லா னுறை பதியால்<br>காடலாற் கருதாத கள்ளின் மேயான்<br>பாடெலாம் பெரியார்கள் பரசு வாரே. | ஆடல் பாடல்களில் வல்லவனும், பாம்புகள் பலவற்றை அணிந்தவனும், தலையோட்டையன்றி வேறு உண்கலன் இல்லாதவனும், சுடுகாட்டைத் தவிர வேறோர் இடத்தைத் தனது இடமாகக் கொள்ளாதவனும் ஆகிய சிவபிரான், பெரியோர்கள் அருகி–ருந்து அவன் புகழைப் பரவக் கள்ளில் என்னும் தலத்தைத் தான் உறையும் பதியாகக் கொண்டுள்ளான். |
| 1284. எண்ணார்மும் மதிலெய்த விமையா முக்கண்<br>பண்ணார்நான் மறைபாடும் பரம யோகி<br>கண்ணார்நீ றணிமார்பன் கள்ளின் மேயோன்<br>பெண்ணாணாம் பெருமானெம் பிஞ்ஞ கனே. | பகைவர்களாகிய அசுரர்களின் மும்மதில்களை எய்து அழித்தவனும், இமையாத மூன்று கண்களை உடையவனும் இசையமைப்போடு கூடிய நான்மறைகளைப் பாடி மகிழும் மேலான யோகியும், கண்களைக் கவரும் வண்ணம் திருநீறு அணிந்த மார்பினனும், பெண் ஆண் என இருபாலாகக் கருதும் உமைபாகனும் ஆகிய பெருமான், கள்ளில் என்னும் இத்தலத்தில் எழுந்தருளியுள்ளான். |
| 1285. பிறைபெற்ற சடையண்ணல் பெடைவண் டாலும்<br>நறைபெற்ற விரிகொன்றைத் தார்ந யந்த<br>கறைபெற்ற மிடற்றண்ணல் கள்ளின் மேயான்<br>நிறைபெற்ற வடியார்கள் நெஞ்சு ளானே. | பிறை சூடிய சடையை உடைய அண்ணலும், பெண் வண்டுகளோடு ஆண் வண்டுகள் கூடி ஒ–க்கும் தேன் நிறைந்த விரிந்த கொன்றை மாலையை விரும்பிச் சூடிய, விடக்கறை பொருந்திய கண்டத்தை உடையவனும், மனநிறைவு பெற்ற அடியவர்களின் நெஞ்சங்களில் நிறைந்து நிற்பவனுமாகிய சிவபிரான், கள்ளில் என்னும் இத்தலத்தே எழுந்தருளியுள்ளான். |
| 1286. விரையாலு மலராலும் விழுமை குன்றா<br>உரையாலு மெதிர்கொள்ள வூரா ரம்மாக்<br>கரையார்பொன் புனல்வே–க் கள்ளின் மேயான்<br>அரையார்வெண் கோவணத்த வண்ணல் தானே. | இடையில் வெண்ணிறமான கோவணத்தை உடுத்த சிவபிரான் மணம் கமழும் ஐவகை மணப் பொருள்களாலும் மலர்களாலும் சீர்மை குன்றாத புகழுரைகளாலும் ஊர் மக்கள் எதிர்கொள்ள, அழகியவும் பெரியவுமான கரைகளை உடைய பொன்னி நதியின் கிளையாறு சூழ்ந்துள்ள கள்ளில் என்னும் இத்தலத்தே எழுந்தருளியுள்ளான். |

| | |
|---|---|
| 1287. நலனாய ப–கொள்கை நம்பா னல்ல<br>வலனாய மழுவாளம் வேலும் வல்லான்<br>கலனாய தலையோட்டான் கள்ளின் மேயான்<br>மலனாய தீர்த்தெய்து மாதவத் தோர்க்கே. | மக்கட்கு நன்மைகள் உண்டாகத் தான் ப–யேற்கும் கொள்கையனாகிய நம்பனும், அழகிய வெற்றியைத் தரும் மழு வாள் வேல் ஆகியவற்றில் வல்லவனும், உண்கலனாகிய தலை யோட்டை உடையவனும் ஆகிய சிவபிரான், தன்னை எய்தும் மாதவத்தோர்க்கு மும் மலங்களைத் தீர்த்து அருள்பவனாய்க் கள்ளில் என்னும் இத்தலத்தில் எழுந்தருளியுள்ளான். |
| 1288. பொடியார்மெய் பூசினும் புறவி னறவம்<br>குடியாவூர் திரியினும் கூப்பி டினும்<br>கடியார்பூம் பொழிற்சோலைக் கள்ளின் மேயான்<br>அடியார்பண் பிகழ்வார்க ளாதர் களே. | மணம் கமழும் அழகிய பொழில்களும் சோலைகளும் சூழ்ந்த கள்ளி–ல் எழுந்தருளிய இறைவன் அடியவர்கள் திருநீற்றுப் பொடியை உட–ல் பூசினும், சோலைகளில் எடுத்த தேனை உண்டு திரியினும் பலவாறு பிதற்றினும் அவர்கள் மனம் இறைவன் திருவருளிலேயே அழுந்தி யிருக்குமாத–ன் அடியவர்களின் குணம் செயல்களை இகழ்பவர்கள் அறியாதவர்களாவர். |
| 1289. திருநீல மலரொண்கண் டேவி பாகம்<br>புரிநூலுந் திருநீறும் புல்கு மார்பில்<br>கருநீல மலர்விம்மு கள்ளி லென்றும்<br>பெருநீல மிடற்றண்ணல் பேணு வதே. | அழகிய நீலமலர் போன்ற ஒளி பொருந்திய கண்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு, முப்புரி நூலும் திருநீறும் பொருந்திய மார்பினனாய் விளங்கும் கரிய மிடற்று அண்ணலாகிய சிவபிரான் என்றும் விரும்புவது கருநீலமலர்கள் மிகுந்து பூத்துள்ள கள்ளில் என்னும் தலமாகும். |
| 1290. வரியாய மலரானும் வையந் தன்னை<br>உரிதாய வளந்தானு முள்ளு தற்கங்<br>கரியானு மரிதாய கள்ளின் மேயான்<br>பெரியானென் றறிவார்கள் பேசு வாரே. | சிவந்த வரிகளைக் கொண்ட தாமரை மலர்மேல் உறையும் பிரமனும், உலகங்களைத் தனக்கு உரியதாகுமாறு அளந்த திருமாலும், நினைத்தற்கும் அரியவனாய் விளங்கும் பெரியோனாகிய இறைவன், அரியதலமாய் விளங்கும் கள்ளி–ல் எழுந்தருளி உள்ளான். அறிந்தவர்கள் அவனையே பெரியோன் எனப் போற்றிப் புகழ்வர். |
| 1291. ஆச்சியப் பேய்களோ டமணர் குண்டர்<br>பேச்சிவை நெறியல்ல பேணு மின்கள்<br>மாச்செய்த வளவயன் மல்கு கள்ளில்<br>தீச்செய்த சடையண்ணல் திருந்த டியே. | பரிகசிக்கத்தக்க பேய்கள் போன்றவர்களாகிய அமணர்களும், புத்தர்களும், கூறும் உரைகள் உண்மையான நெறிகளை மக்கட்கு உணர்த்தாதவை. எனவே அவர்தம் உரைகளைக் கேளாது விடுத்து, பெருமைக்குரிய வள வயல்கள் நிறைந்த கள்ளி–ல் விளங்கும் தீத்திரள் போன்ற சடைமுடியை உடைய சிவபிரானுடைய அழகிய திருவடிகளையே பேணுவீர்களாக. |
| 1292. திகைநான்கும் புகழ்காழிச் செல்வமல்கு<br>பகல்போலும் பேரொலியான் பந்தனல்ல<br>முகைமேவு முதிர்ச்சடையன் கள்ளிலேத்தப்<br>புகழோடும் பேரின்பம் புகுது மன்றே. | நாற்றிசை மக்களாலும் புகழப்பெறும் சீகாழிப் பதியில் செல்வவளம் நிறைந்த பகல் போன்ற பேரொளியினனாகிய ஞான சம்பந்தன், நறுமணம் கமழும் மலர் அரும்புகள் நிறைந்த, முதிர்ந்த சடைமுடி உடையவனாகிய சிவபிரானது கள்ளிலைப் போற்றிப் பாடிய இத்திருப்பதிகத்தைப் பாடி ஏத்தினால், புகழோடு பேரின்பம் அடையலாம். |

## 120. திருவையாறு

பண் : வியாழக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 120

1293. பணிந்தவ ரருவினை பற்றறுத் தருள்செய்த
துணிந்தவன் தோலொடு நூல்துதை மார்பினில்
பிணிந்தவ னரவொடு பேரெழி லாமைகொண்
டணிந்தவன் வளநக ரந்தணை யாறே.

தன்னை வணங்கும் அடியவர்களின் நீக்குதற்கரிய வினைகளை அடியோடு அழித்து அவர்கட்கு அருள் வழங்கத் துணிந்திருப்பவனும், மார்பின்கண் மான்தோலோடு விளங்கும் முப்புரி நூல் அணிந்தவனும், பாம்போடு பெரிய அழகிய ஆமை ஓட்டைப் பூண்டவனும் ஆகிய சிவபிரானது வளநகர் அழகிய குளிர்ந்த ஐயாறாகும்.

1294. கீர்த்திமிக் கவனகர் கிளரொளி யுடனடப்
பார்த்தவன் பனிமதி படர்சடை வைத்துப்
போர்த்தவன் கரியுரி பு–யத ளரவரை
ஆர்த்தவன் வளநக ரந்தணை யாறே.

புகழ்மிக்கவனும், பகைவர்களாகிய அவுணர்களின் முப்புரங்களைப் பேரொளி தோன்ற எரியுமாறு அழிந்தொழிய நெற்றி விழியால் பார்த்தவனும், குளிர்ந்த திங்களை விரிந்த சடைமுடி மீது வைத்துள்ளவனும், யானையின் தோலை உரித்துப் போர்த்தவனும், பு–த்தோலைப் பாம்போடு இடையில் கட்டியவனும் ஆகிய சிவபிரானது வளநகர் அழகிய குளிர்ந்த ஐயாறாகும்.

1295. வரிந்தவெஞ் சிலைபிடித் தவுணர்தம் வளநகர்
எரிந்தற வெய்தவ னெழில்திகழ் மலர்மேல்
இருந்தவன் சிரமது விமையவர் குறைகொள
அரிந்தவன் வளநக ரந்தணை யாறே.

இருமுனைகளும் இழுத்துக் கட்டப்பட்ட கொடிய வில்லைப் பிடித்து, அசுரர்களின் வளமையான முப்புரங்கள் எரிந்து அழியுமாறு கணை எய்தவனும், தேவர்கள் வேண்ட அழகிய தாமரை மலர்மேல் எழுந்தருளிய பிரமன் தலைகளில் ஒன்றைக் கொய்தவனுமாகிய சிவபிரானது வளநகர் அழகும் தன்மையும் உடைய ஐயாறாகும்.

1296. வாய்ந்தவல் லவுணர்தம் வளநக ரெரியிடை
மாய்ந்தற வெய்தவன் வளர்பிறை விரிபுனல்
தோய்ந்தெழு சடையினன் தொன்மறை யாறங்கம்
ஆய்ந்தவன் வளநக ரந்தணை யாறே.

வ–மை வாய்ந்த அவுணர்களின் வளமையான முப்புரங்களும் தீயிடை அழிந்தொழியுமாறு கணை எய்தவனும், வளரத்தக்க பிறை, பரந்து விரிந்த வந்த கங்கை ஆகியன தோய்ந்தெழும் சடையினனும், பழமையான நான்கு வேதங்கள் ஆறு அங்கங்கள் ஆகியவற்றை நன்கு ஆய்வு செய்தருளியவனும் ஆகிய சிவபிரானது நகர் அழகும் தண்மையும் உடைய திருவையாறாகும்.

1297. வானமர் மதிபுல்கு சடையிடை யரவொடு
தேனமர் கொன்றையன் திகழ்தரு மார்பினன்
மானன மென்விழி மங்கையொர் பாகமும்
ஆனவன் வளநக ரந்தணை யாறே.

வானின்கண் விளங்கும் பிறைமதி பொருந்திய சடையின்மேல் பாம்பையும், தேன் நிறைந்த கொன்றையையும் அணிந்தவனும், விளங்கும் மார்பினை உடையவனும், மான்போன்ற மென்மையான விழிகளை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனு மாகிய சிவபிரானது நகர் அழகும் தண்மையும் உடைய திருவையாறாகும்.

| | |
|---|---|
| 1298. முன்பனை முனிவரோ டமரர்க ளடிதொழும்<br>இன்பனை யிணையில விறைவனை யெழில்திகழ்<br>என்பொனை யேதமில் வேதியர் தாந்தொழும்<br>அன்பன வளநக ரந்தணை யாறே. | வ–மையுடையவனும் முனிவர்களும் அமரர்களும் தொழும் திருவடிகளை உடைய இன்ப வடிவினனும், ஒப்பற்ற முதல்வனும், அழகு விளங்கும் என் பொன்னாக இருப்பவனும், குற்றமற்ற வேதியர்களால் தொழப்பெறும் அன்பனும் ஆகிய சிவபிரானது வளநகர் அழகும் தன்மையும் உடைய ஐயாறாகும். |
| 1299. வன்றிற லவுணர்தம் வளநக ரெரியிடை<br>வெந்தற வெய்தவன் விளங்கிய மார்பினில்<br>பந்தமர் மெல்விரல் பாகம தாகிதன்<br>அந்தமில் வளநக ரந்தணை யாறே. | பெருவ– படைத்த அவுணர்களின் வளமையான முப்புர நகர்களும் தீயிடையே வெந்தழியுமாறு கணை எய்தவனும், விளங்கிய மார்பகத்தே பந்தணை மெல் விர–யாகிய உமையம்மையைப் பாகமாகக் கொண்டவனும் ஆகிய சிவபிரானது அழிவற்ற வளநகர் அழகும் தண்மையுமுடைய ஐயாறாகும். |
| 1300. விடைத்தவல் லரக்கனல் வெற்பினை யெடுத்தலும்<br>அடித்தலத் தா–றை யூன்றிமற் றவனது<br>முடித்தலை தோளவை நெரிதர முறைமுறை<br>அடர்த்தவன் வளநக ரந்தணை யாறே. | செருக்கோடு வந்த வ–ய இராவணன் நல்ல கயிலை மலையைப் பெயர்த்த அளவில் தனது அடித்தலத்தால் சிறிது ஊன்றி, அவ் விராவணனின் முடிகள் அணிந்த தலைகள், தோள்கள் ஆகியவற்றை முறையே நெரித்தருளிய சிவபிரானது வளநகர் அழகும் தன்மையும் உடைய ஐயாறாகும். |
| 1301. விண்ணவர் தம்மொடு வெங்கதி ரோனல்<br>எண்ணி– தேவர்க ளிந்திரன் வழிபடக்<br>கண்ணனும் பிரமனும் காண்பரி தாகிய<br>அண்ணல்தன் வளநக ரந்தணை யாறே. | வானகத்தே வாழ்வார் தம்மோடு, சூரியன், அக்கினி, எண்ணற்ற தேவர்கள், இந்திரன் முதலானோர் வழிபட, திருமால், பிரமர்கள் காணுதற்கு அரியவனாய் நின்ற தலைவனாகிய சிவபிரானது வளநகர், அழகும் தன்மையும் உடைய ஐயாறாகும். வெங்கதிரோன் அனல் என்று பாடம் ஓதுவாரும் உளர். |
| 1302. மருளுடை மனத்துவன் சமணர்கண் மாசறா<br>இருளுடை யிணைத்துவர்ப் போர்வையி னார்களும்<br>தெருளுடை மனத்தவர் தேறுமின் திண்ணமா<br>அருளுடை யடிகள்தம் அந்தணை யாறே. | தெளிந்த மனத்தினை உடையவர்களே! மருட்சியை உடைய மனத்தவர்களாகிய வ–ய சமணர்களும், குற்றம் நீங்காத இரண்டு துவர்நிற ஆடைகளைப் பூண்ட புத்தர்களும் கூறுவன வற்றைத் தெளியாது சிவபிரானை உறுதியாகத் தெளிவீர்களாக. கருணையாளனாக விளங்கும் சிவபிரானது இடம் அழகும் தண்மையும் உடைய ஐயாறாகும். |
| 1303. நலம– ஞானசம் பந்தன தின்றமிழ்<br>அலைம– புனல்மல்கு மந்தணை யாற்றினைக்<br>கலைம– தமிழிவை கற்றுவல் லார்மிக<br>நலம– புகழ்மிகு நன்மையர் தாமே. | அலைகள் வீசும் ஆறு குளம் முத–ய நீர்நிலைகளால் சூழப்பட்ட ஐயாற்று இறைவனை, நன்மைகள் நிறைந்த ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய இன்தமிழால் இயன்ற கலைநலம் நிறைந்த இத்திருப்பதிகத்தைக் கற்று வல்லவராயினார் நன்மை மிக்க புகழாகிய நலத்தைப் பெறுவர். |

## 121. திருவிடைமருதூர்

பண் : வியாழக்குறிஞ்சி | முதல் திருமுறை பதிக எண் : 121

| | |
|---|---|
| 1304. நடைமரு திரிபுர மெரியுண நகைசெய்த<br>படைமரு தழலெழ மழுவல பகவன்<br>புடைமரு திளமுகில் வளமமர் பொதுளிய<br>இடைமரு தடையநம் மிடர்கெட லெளிதே. | இயங்குதலைப் பொருந்திய திரிபுரங்களை எரியுண்ணுமாறு சிரித்தருளித் தனது படைக்கலத்தால் தீ எழும்படி செய்தருளிய வெற்றி மழுவேந்திய பகவனாகிய சிவபிரான் எழுந்தருளியதும் அருகில் வளர்ந்துள்ள மருத மரங்களில் இளமேகங்கள் தவழ்ந்து மழை வளத்தை நிரம்பத் தருவதுமான திரு இடைமருதூரை அடைந்தால் நம் இடர்கெடல் எளிதாகும். |
| 1305. மழைநுழை மதியமொ டழிதலை மடமஞ்ஞை<br>கழைநுழை புனல்பெய்த கமழ்சடை முடியன்<br>குழைநுழை திகழ்செவி யழகொடு மிளிர்வதொர்<br>இழைநுழை புரியண –டமிடை மருதே. | மேகங்களிடையே நுழைந்து செல்லும் பிறை மதியோடு தசை வற்றிய தலையோடு ஆகியவற்றையும், மடமயில்கள் மூங்கி–டையே நுழைந்து செல்லும் மலையில் தோன்றிய தேவ கங்கை நதியையும்; கமழுமாறு சடைமுடியில் சூடியவனும், குழை நுழைந்து விளங்கும் செவியழகோடு இழையாகத் திரண்ட முப்புரிநூலை விரும்பி அணிபவனுமாகிய அண்ணல் எழுந்தருளிய இடம் திருவிடை மருதூராகும். |
| 1306. அருமைய னெளிமைய னழல்விட மிடறினன்<br>கருமையி னொளிபெறு கமழ்சடை முடியன்<br>பெருமையன் சிறுமையன் பிணைபெணொ டொருமையின்<br>இருமையு முடையண –டமிடை மருதே. | அன்பில்லாதவர்க்கு அரியவனும், அன்புடை அடியவர்க்கு எளியவனும், அழலும் தன்மையுடைய விடத்தை உண்டு நிறுத்திய கண்டத்தினனும், பெரியனவற்றுக்கெல்லாம் பெரியவனும், சிறியன யாவற்றினும் சிறியவனும், தன்னோடு பிணைந்துள்ள உமையம்மையோடு ஒருருவில் இருவடிவாய்த் தோன்றுபவனுமாகிய சிவ பிரானுக்குரிய இடம் திருவிடைமருதூர் ஆகும். |
| 1307. பொரிபடு முதுகுற முளிகளி புடைபுல்கு<br>நரிவளர் சுடலையு ணடமென நவில்வோன்<br>வரிவளர் குளிர்மதி யொளிபெற மிளிர்வதொர்<br>எரிவளர் சடையண –டமிடை மருதே. | நன்கு காய்ந்து பொரிந்த முதுகினை உடைய நரிகள் களிப்போடு அருகில் மிகுந்து தோன்ற, சுடலைக் காட்டில் நடம் நவில்பவனும், கோடாகத் தோன்றிப் பின்வளரும் குளிர்ந்த பிறைமதியை ஒளிபெற அணிந்த எரிபோன்று வளரும் சடைமுடியை உடையவனும் ஆகிய தலைமை யாளனாகிய சிவபிரானது இடம் இடைமருதாகும். |
| 1308. வருநல மயிலன மடநடை மலைமகள்<br>பெருநல முலையிணை பிணைசெய்த பெருமான்<br>செருநல மதிலெய்த சிவனுறை செழுநகர்<br>இருநல புகழ்மல்கு மிடமிடை மருதே. | அழகோடு அசைந்து வரும் மயில் போன்ற மட நடையினளாகிய மலையரையன் மகளும், பெரு நல முலையாள் என்ற திருப்பெயருடைய வளுமாகிய அம்மையின் இருதன பாரங்களைக் கூடியவனும், போர் செய்தற்குரிய தகுதியோடு விளங்கிய அவுணர்களின் மும்மதில்களை எய்தழித்தவனும் ஆகிய சிவபிரான் உறையும் இடமாகிய செழுமையான நகர் விரிந்த புகழால் நிறைந்த திருஇடைமருதூர் ஆகும். |

| | | |
|---|---|---|
| 1309. | கலையுடை விரிதுகில் கமழ்குழ லகில்புகை<br>மலையுடை மடமகள் தனையிட முடையோன்<br>விலையுடை யணிகல னிலனென மழுவினோ<br>டிலையுடை படையவ னிடமிடை மருதே. | மேகலை சூழ்ந்த விரிந்த ஆடையுடன் அகிற் புகையின் மணம் கமழும் கூந்தலை உடைய மலையரையனின் மடமகளாகிய பார்வதி தேவியை இடப்பாகமாக உடையவனும் விலைமதிப்புடைய அணிகலன்கள் எவையும் இல்லாதவன் என்னுமாறு என்பு முத–யன பூண்டு மழு இலைவடிவான சூலம் இவற்றைப் படைக்கலனாகக் கொண்டவனுமாகிய சிவபிரானது இடம் இடைமருதாகும். |
| 1310. | வளமென வளர்வன வரிமுரல் பறவைகள்<br>இளமண லணைகரை யினைசெயு மிடைமரு<br>துளமென நினைபவ ரொ–கழ –ணையடி<br>குளமண லுறமூழ்கி வழிபடல் குணமே. | இது வளமான இடமாகும் என வளர்வனவாகிய வரிப் பாடல்களைப் பாடும் வண்டுகள் இளமணல் அணைந்த கரையில் தங்கி முரலும் இடைமருதை மனமார நினைபவர் அந்நகரை அடைந்து ஆங்குள்ள தீர்த்தத்தில் நன்கு மூழ்கி ஒ–க்கின்ற கழலணிந்த மருதவாணனை வழிபடுதலைப் பண்பாகக் கொள்க. |
| 1311. | மறையவ னுலகவன் மதியவன் மதிபுல்கு<br>துறையவ னெனவல வடியவர் துயரிலர்<br>கறையவன் மிடறது கனல்செய்த கமழ்சடை<br>இறையவ னுறைதரு மிடமிடை மருதே. | வேதங்களை அருளியவனும் அனைத்துலகங்களாய் விளங்குபவனும், திங்களாகத் திகழ்பவனும், அறிவொடுபட்ட கலைத்துறைகளாக விளங்குபவனும் சிவபிரானேயாவன் என்று போற்ற வல்ல அடியவர் துயரிலராவர். மிடற்றிற் கரையுடையவனும் கனல்போல் விளங்கும் சடையினனும் எல்லோர்க்கும் தலைவனும் ஆய அப்பெருமான் உறையும் இடம் இடைமருதாகும். |
| 1312. | மருதிடை நடவிய மணிவணர் பிரமரும்<br>இருதுடை யகலமொ டிக–ன ரினதெனக்<br>கருதிட லரியதொ ருருவொடு பெரியதொர்<br>எருதுடை யடிகள்தம் இடமிடை மருதே. | மருத மரங்களின் இடையே கட்டிய உரலோடு தவழ்ந்த நீலமணிபோன்ற நிறத்தை உடைய திருமாலும், பிரமனும் மிக்க பெருமையுடையவர் யார் எனத் தம்முள் மாறுபட்டவராய் நிற்க அவர்கள் இன்னதெனக் கருதற்கரிய பெரிய ஒளி உருவோடு தோன்றிய பெரிய விடையூர்தியனாகிய சிவபிரானது இடம் இடைமருதாகும். |
| 1313. | துவருறு விரிதுகி லுடையரு மமணரும்<br>அவருறு சிறுசொலை நயவன்மி னிடுமணல்<br>கவருறு புன–டை மருதுகை தொழுதெழும்<br>அவருறு வினைகெட லணுகுதல் குணமே. | துவர் ஏற்றிய விரிந்த ஆடையினை உடுத்தும் போர்த்தும் திரியும் புத்தரும் சமணரும் கூறும் சிறு சொல்லை விரும்பாதீர். காவிரி பல கிளைகளாப் பிரிந்து செல்லும் வாய்க்கால்களை உடைய இடைமருதைக் கைகளால் தொழுபவர்க்கு வினைகள் கெடுதலும் நல்ல குணங்கள் உண்டாதலும் கூடும். |
| 1314. | தடம– புக–யர் தமிழ்கெழு விரகினன்<br>இடம– பொழி–டை மருதினை யிசைசெய்த<br>படம– தமிழிவை பரவவல் லவர்வினை<br>கெடம– புகழொடு கிளரொளி யினரே. | நீர்நிலைகள் பலவற்றை உடைய புக–ப் பதியில் தோன்றியவனும், தமிழ் விரகனுமாகிய ஞானசம்பந்தன் விரிந்த பொழில்களால் சூழப்பட்ட இடைமருதீசனை இசையால் பரவிய சொல்லோவியமாக இத்திருப்பதிகத் தமிழைப் பாடிய பரவ வல்லவர்தம் வினைகள் கெட்டொழிய அவர்கள் புகழோடும் விளங்கும் ஒளியோடும் திகழ்பவராவர். |

# 122. திருவிடைமருதூர்

பண் : வியாழக்குறிஞ்சி | முதல் திருமுறை பதிக எண் : 122

| | |
|---|---|
| 1315. விரிதரு பு–யுரி விரவிய வரையினர்<br>திரிதரு மெயிலவை புனைகணை யினிலெய்த<br>எரிதரு சடையின ரிடைமரு தடைவுனல்<br>புரிதரு மனனவர் புகழ்மிக வுளதே. | விரிந்த பு–த்தோலை ஆடையாக உடுத்த இடையினரும், வானகத்தில் திரிந்து இடர் செய்த முப்புரங்களை ஆற்றல் பலவும் அமைந்த கணையால் எய்தழித்தவரும், எரிபோன்ற சிவந்த சடையினருமாகிய சிவபிரானார் உறையும் இடைமருதை அடைய எண்ணும் மனம் உடையவர்க்குப் புகழ் மிக உளதாகும். |
| 1316. மறிதிரை படுகடல் விடமடை மிடறினர்<br>எறிதிரை கரைபொரு மிடைமரு தெனுமவர்<br>செறிதிரை நரையொடு செலவில ருலகினில்<br>பிறிதிரை பெறுமுடல் பெறுகுவ தரிதே. | சுருண்டு விழும் அலைகள் உண்டாகும் கட–டைத் தோன்றிய விடம் சேர்ந்த மிடற்றினர் உறைவதும், காவிரியாற்று அலைகள் கரைகளைப் பொருவதுமான இடைமரு என்னும் தலத்தின் பெயரைச் சொல்லுவோர் உட–டை அலைபோலத் தோன்றும் தோ–ன் சுருக்கம், மயிரின் நரை ஆகியன நீங்குவர். மீண்டும் இவ்வுலகில் உணவு உண்ணும் உடலோடு கூடிய பிறவியை எய்தார். |
| 1317. சலசல சொரிபுனல் சடையினர் மலைமகள்<br>நிலவிய வுட–னர் நிறைமறை மொழியினர்<br>இலரென விடுப– யவரிடை மருதினை<br>வலமிட வுடன– விலதுள வினையே. | சலசல என்னும் ஒ–க்குறிப்போடு சொரியும் கங்கை ஆற்றைச் சடைமிசை அணிந்தவரும், மலைமகளை ஒருபாகமாகக் கொண்ட உட–னரும், நிறைவான வேதங்களை மொழிபவரும், உணவின்மையால் பசியோடுள்ளார் என மகளிர் இடும் ப–யை ஏற்பவருமான சிவபிரான் உறையும் இடைமருதை வலம் வருபவர்க்கு வினைகளால் ஆகும் உடல் ந–வு இல்லையாம். |
| 1318. விடையினர் வெளியதொர் தலைகல னெனநனி<br>கடைகடை தொறுப– யிடுகென முடுகுவர்<br>இடைவிட லரியவ ரிடைமரு தெனுநகர்<br>உடையவ ரடியிணை தொழுவதெம் முயர்வே. | விடையூர்தியை உடையவரும், வெண்மையான தலையோட்டை உண்கலன் எனக் கொண்டு பலகாலும் வீடுகள்தோறும் சென்று ப– இடுக என விரைந்து செல்பவரும், ஒருமுறை அன்பு செய்யின் விடுதற்கு அரியவரும், இடைமருது என்னும் நகரை உடையவரும் ஆகிய சிவபிரான் திருவடிகளைத் தொழுவதே எமக்கு உயர்வைத் தரும். |
| 1319. உரையரு முருவின ருணர்வரு வகையினர்<br>அரைபொரு பு–யத ளுடையின ரதன்மிசை<br>இரைமரு மரவின ரிடைமரு தெனவுளம்<br>உரைகள துடையவர் புகழ்மிக வுளதே. | சொல்லுதற்கரிய அழகரும், உணர்வதற்கரிய தன்மையரும், இடையில் பொருந்திய பு–த்தோல் ஆடையினரும், அதன்மேல் இரையை விழுங்கும் பாம்பைக் கச்சையாகக் கட்டியவரும் ஆகிய சிவபிரானது இடைமருதைப் பலகாலும் புகழ்ந்து போற்றுவார்க்கு மிகுதியான புகழ் உளதாகும். |

| | | |
|---|---|---|
| 1320. | ஒழுகிய புனன்மதி யரவமொ டுறைதரும்<br>அழகிய முடியுடை யடிகள தறைகழல்<br>எழி–ன ருறையிடை மருதினை மலர்கொடு<br>தொழுதல்செய் தெழுமவர் துயருற –லரே. | வழிந்தொழுகும் கங்கை நதி, இளம்பிறை, பாம்பு ஆகியன உறையும் அழகிய சடைமுடியை உடையவரும், ஒ–க்கின்ற வீரக்கழலை அணிந்துள்ள அழகரும் ஆகிய அடிகளது இடைமருதை அடைந்து மலர் கொண்டு போற்றித் தொழுது எழுவார் துன்புறுதல் இலராவர். |
| 1321. | கலைம– விர–னர் கடியதொர் மழுவொடும்<br>நிலையினர் சலமக ளுலவிய சடையினர்<br>மலைமகண் முலையிணை மருவிய வடிவினர்<br>இலைம– படையவ ரிடமிடை மருதே. | வீணையை மீட்டி இன்னிசைக் கலையை எழுப்பும் விரலை உடையவரும், கொடிய மழுவாயுதத்தோடு விளங்கும் நிலையினரும், கங்கை உலாவும் சடைமுடியினரும் மலைமகளின் முலைத் தழும்பு பொருந்திய வடிவினரும், இலைவடிவான சூலத்தை ஏந்தியவருமாய சிவபிரானார் இடம் இடைமருதாகும். |
| 1322. | செருவடை யிலவல செயல்செயத் திறலொடும்<br>அருவரை யினிலொரு பதுமுடி நெரிதர<br>இருவகை விரனிறி யவரிடை மருதது<br>பரவுவ ரருவினை யொருவுதல் பெரிதே. | போரில் முறையற்ற செயல்களைச் செய்யும் இராவணன் தன்னிடமும் அவ்வாறு திறலோடும் செய்தலைக் கண்டு அரிய கயிலைமலையின்கீழ் அகப்படுத்தி அவனுடைய பத்துத் தலைகளும் நெரியுமாறு சினம் கருணை ஆகிய இருவகைக் குறிப்போடு கால் விரலை ஊன்றியவராகிய சிவபிரானது இடைமருதைப் பரவுவார் அருவினைகள் பெரிதும் நீங்கும். |
| 1323. | அரியொடு மலரவ னெனவிவ ரடிமுடி<br>தெரிவகை யரியவர் திருவடி தொழுதெழ<br>எரிதரு முருவர்த மிடைமரு தடைவுறல்<br>புரிதரு மனனவர் புகழ்மிக வுளதே. | திருமால் பிரமர்களாகிய இருவரும் அடிமுடி காண முயன்றபோது அவர்கட்கு அரியவராய்த் தோன்றி அவர்கள் தம்மைத் தொழுது எழுந்தபோது அழலுருவாய்க் காட்சி தந்த சிவபிரானாரது இடைமருதினை அடைய விரும்புவார்க்குப் புகழ் மிக உளதாகும். |
| 1324. | குடைமயி –னதழை மருவிய வுருவினர்<br>உடைமரு துவரினர் பலசொல வுறவிலை<br>அடைமரு திருவினர் தொழுதெழு கழலவர்<br>இடைமரு தெனமன நினைவது மெழிலே. | குடையையும், மயிற்பீ–யையும் கையில் ஏந்திய வடிவினை உடைய சமணர்களும், மருதந்துவர் ஏற்றிய ஆடையை உடுத்த புத்தர்களும் பலவாறு கூற அவர்களோடு நமக்கு உறவில்லை என ஒதுக்கிச் செல்வங்கள் யாவும் தம்மை வந்தடைந்தவராய் விளங்கும் அடியவர்களால் தொழப் பெறும் திருவடிகளை உடைய சிவபிரானது இடைமருது என மனத்தால் நினைவது அழகைத் தரும். |
| 1325. | பொருகட லடைதரு புக–யர் தமிழொடு<br>விரகினன் விரிதரு பொழி–டை மருதினைப்<br>பரவிய வொருபது பயிலவல் லவரிடர்<br>விரவிலர் வினையொடு வியனுல குறவே. | கரையைப் பொரும் கடலை அணித்தாக உடைய புக–ப் பதியில் தோன்றியவனும், தமிழ் விரகனுமாகிய ஞானசம்பந்தன் விரிந்த பொழில்களால் சூழப்பட்ட இடைமருதில் விளங்கும் பெருமானைப் பரவிய இத்திருப் பதிகத்தின் பத்துப் பாடல்களையும் பயில வல்லவர் வினைகளும் இடர்களும் இலராவர். அகன்ற வீட்டுலகம் அவர்கட்குச் சொந்தமாகும். |

## 123. திருவலிவலம்

பண் : வியாழக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 123

| | |
|---|---|
| 1326. பூவியல் புரிகுழல் வரிசிலை நிகர்நுதல்<br>ஏவியல் கணைபிணை யெதிர்விழி உமையவள்<br>மேவிய திருவுரு வுடையவன் விரைமலர்<br>மாவியல் பொழில்வ– வலமுறை யிறையே. | மணம் கமழும் மலர்களையும், அவற்றில் தேனுண்ணும் வண்டுகளையும், உடைய பொழில் சூழ்ந்த வ–வலத்தில் உறையும் இறைவன், மலர்கள் அணிந்த சுருண்ட கூந்தலையும், வரிந்து கட்டப்பெற்ற வில்போன்ற நுதலையும், செலுத்துதற்கு உரிய கணை, மான் ஆகியன போன்ற கண்களையும் பெற்றுடைய உமையம்மையோடு கூடிய திருமேனியை உடையவன். |
| 1327. இட்டம தமர்பொடி யிசைத– னசைபெறு<br>பட்டவிர் பவளநன் மணியென வணிபெறு<br>விட்டொளிர் திருவுரு வுடையவன் விரைமலர்<br>மட்டமர் பொழில்வ– வலமுறை யிறையே. | மணம் கமழ்கின்ற மலர்கள் தேனோடு விளங்கும் பொழில் சூழ்ந்த வ–வலத்தில் உறையும் இறைவன், விருப்பத்தோடு அணியப் பெற்ற திருநீறு பொருந்தி இருத்த–ன் பட்டோடு விளங்கும் பவளமணி போல் ஒளிவிடுகின்ற அழகிய ஒளி வீசும் திருமேனியை உடையவனாகத் தோன்றுகின்றான். |
| 1328. உரும– கடல்கடை வுழியுல கமருயிர்<br>வெருவுறு வகையெழு விடம்வெளி மலையணி<br>கருமணி நிகர்கள முடையவன் மிடைதரு<br>மருவ– பொழில்வ– வலமுறை யிறையே. | மிகுதியான மணம் நிறைந்து விளங்கும் பொழில் சூழ்ந்த வ–வலத்தில் உறையும் இறைவன், தேவர்கள் அஞ்சத்தக்க கடலைக் கடைந்தபோது உலகில் உள்ள அனைத்துயிர்களும் அஞ்சத்தக்க வகையில் எழுந்த விடத்தை உண்டு, திருநீறு சண்ணித்த திருமேனி வெள்ளிமலை போல விளங்க அதனிடை நீலமணி பதித்தாற் போல் கரிய கண்டம் உடையவனாய் விளங்குபவன் ஆவான். |
| 1329. அனனிகர் சடையழ லவியுற வெனவரு<br>புனனிகழ் வதுமதி நனைபொறி யரவமும்<br>எனநினை வொடுவரு மிதுமெல முடிமிசை<br>மனமுடை யவர்வ– வலமுறை யிறையே. | வ–வலம் உறை இறைவன், அனல் போன்ற சடையழலை அவிப்பதற்கென வருவது போன்ற கங்கையையும், பிறையையும், பூ மொட்டுப் போன்ற படப்புள்ளிகளை உடைய பாம்பையும் முடிமிசை உடையவன் என்னும் நினைவோடு வரும் மனமுடைய அடியவர் வாழும் சிறப்பினை உடையது வ–வலமாகும். |
| 1330. பிடியத னுருவுமை கொளமிகு கரியது<br>வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்<br>கடிகண பதிவர வருளினன் மிகுகொடை<br>வடிவினர் பயில்வ– வலமுறை யிறையே. | மிகுதியாக வழங்கும் கொடையே தமக்கு அழகைத் தரும் என நினையும் வள்ளற் பெருமக்கள் வாழும் வ–வலத்தில் உறையும் இறைவன், உமையம்மை பெண் யானை வடிவு கொள்ள, தான் ஆண் யானையின் வடிவு கொண்டு தன் திருவடியை வணங்கும் அடியவர்களின் இடர்களைக் கடியக் கணபதியைத் தோற்றுவித்தருளினான். |

| | | |
|---|---|---|
| 1331. | தரைமுத லுலகினி லுயிர்புணர் தகைமிக<br>விரைம– குழலமை யொடுவிர வதுசெய்து<br>நரைதிரை கெடுதகை யதுவரு ளினனெழில்<br>வரைதிகழ் மதில்வ– வலமுறை யிறையே. | அழகிய மலை போலத் திகழும் மதில் சூழ்ந்த வ–வலத்தில் உறையும் இறைவன், மண் முத–ய அனைத்து அண்டங்களிலும் வாழும் உயிர்கள் ஆணும் பெண்ணுமாய்க் கூடிப் போகம் நுகருமாறு மணம் மிக்க கூந்தலை உடைய உமையம்மை யோடு கூடியவனாய் விளங்கித் தன்னை வழிபடும் அடியவர்க்கு நரைதோ–ன் சுருக்கம் என்பன கெடுமாறு செய்து என்றும் இளமையோடு இருக்க அருள்புரிபவனாவான். |
| 1332. | ந–தரு தரைவர நடைவரு மிடையவர்<br>பொ–தரு மடவர –யர்மனை யதுபுகு<br>ப–கொள வருபவ னெழின்மிகு தொழில்வளர்<br>வ–வரு மதில்வ– வலமுறை யிறையே. | அழகுமிக்கக் கவின் கலை முதலான தொழில்கள் வளரும் வ–மை மிக்க மதில்களால் சூழப்பட்ட வ–வலத்தில் உறையும் இறைவன், மண்ணை மிதிப்பதற்கே அஞ்சும் மென்மையான பாதங்களையும், அசையும் இடையினையும் உடைய அழகிய தாருகாவன மகளிர் உறையும் மனைகள் தோறும் சென்று புகுந்து ப– ஏற்கப் பிட்சாடனனாய் வருபவன். |
| 1333. | இரவண நிருபது கரமெழின் மலைதனின்<br>இரவண நினைதர வவன்முடி பொடிசெய்து<br>இரவண மமர்பெய ரருளின னகநெதி<br>இரவண நிகர்வ– வலமுறை யிறையே. | தன்னை வழிபட்டு இரக்கும் தன்மையாளர் களாகிய அடியவர்கட்குத் தன் மனத்தில் தோன்றும் கருணையாகிய நிதியை வழங்கும் வ–வலத்தில் உறையும் இறைவன், இராவணனின் இருபது கரங்களையும் அவனுடைய பத்துத் தலைகளையும் அழகிய கயிலை மலையின்கீழ் அகப்படுத்திப் பொடி செய்து பின் அவன் இரந்து வேண்டி நினைத்த அளவில் அவனுக்கு வேண்டுவன அளித்து இராவணன் என்ற பெயரையும் அருளியவன். |
| 1334. | தேனமர் தருமல ரணைபவன் வ–மிகும்<br>ஏனம தாய்நில மகழரி யடிமுடி<br>தானணை யாவுரு வுடையவன் மிடைகொடி<br>வானணை மதில்வ– வலமுறை யிறையே. | வானத்தைச் சென்றடையுமாறு நெருக்கமாகக் கட்டப்பட்ட கொடிகளைக் கொண்ட மதில்களால் சூழப்பட்ட வ–வலத்தில் உறையும் இறைவன், தேன் நிறைந்த தாமரை மலர்மேல் உறையும் நான்முகன், வ–மைமிக்க பன்றியுருவினனாய் நிலத்தை அகழும் திருமால் ஆகியோர் முடியையும் அடியையும் காண முடியாதவாறு ஓங்கி உயர்ந்த திருவுருவை உடையவன். |
| 1335. | இலைம– தரமிகு துவருடை யவர்களும்<br>நிலைமையி லுணலுடை யவர்களு நினைவது<br>தொலைவ– நெடுமறை தொடர்வகை யுருவினன்<br>மலைம– மதில்வ– வலமுறை யிறையே. | மலை போன்ற மதில்களால் சூழப்பட்ட வ–வலத்தில் உறையும் இறைவன், மிகுதியான மருதந்துவர் இலைகளால் பிழியப்பட்ட மிக்க துவர்நிறம் உடைய ஆடைகளை அணிந்த புத்தர்களும் நின்றுண்ணும் இயல்பினர்களாகிய சமணர்களும் நினைப்பதை அழித்துப் பொருட்டன்மையால் வ–யவான பெருமை மிக்க வேதங்கள் தன்னைத் தொடருமாறு செய்தருளும் உருவினை உடையவனாய் உள்ளான். |
| 1336. | மன்னிய வலிவல நகருறை யிறைவனை<br>இன்னியல் கழுமல நகரிறை யெழின்மறை<br>தன்னியல் கலைவல தமிழ்விர கனதுரை<br>உன்னிய வொருபது முயர்பொருள் தருமே. | நிலைபேறுடைய வலிவல நகரில் உறையும் இறைவன் மீது இனிமையான இயல்பினை உடைய கழுமல நகருக்குத் தலைவனும் அழகிய வேதங்களையும் கலைகளையும் ஓதாமல் தானே உணர்ந்த தமிழ் விரகனுமாகிய ஞானசம்பந்தன் எண்ணிஉரைத்த இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தும் உயர்வான வீடு பேறாகிய செல்வத்தை அளிக்கும். |

## 124. திருவீழிமிழலை

பண் : வியாழக்குறிஞ்சி | முதல் திருமுறை பதிக எண் : 124

| | |
|---|---|
| 1337. அலர்மகண் ம–தர வவனியி னிகழ்பவர்<br>மலர்ம– குழலுமை தனையிட மகிழ்பவர்<br>நலம– யுருவுடை யவர்நகர் மிகுபுகழ்<br>நிலம– மிழலையை நினையவ லவரே. | மலர் நிறைந்த கூந்தலை உடைய உமை யம்மையை இடப்பாகமாகக் கொண்டு மகிழ்பவரும், அழகிய திருமேனியை உடையவரும் ஆகிய சிவபிரானது நிலவுலகத்தே நிறைந்த புகழை உடைய மிழலை நகரை நினைய வல்லவர் திருமகளின் கருணையால் செல்வம் நிறையப் பெற்று உலகில் வாழ்வர். |
| 1338. இருநில மிதன்மிசை யெழில்பெறு முருவினர்<br>கரும– தருமிகு புவிமுத லுலகினில்<br>இருளறு மதியின ரிமையவர் தொழுதெழு<br>நிருபமன் மிழலையை நினையவ லவரே. | எண்ணற்ற உயிரினங்கள் வாழும் மண் முத–ய அனைத்துலகங்களிலும் இருளைப் போக்கும் மதி போல ஒளியும் தண்ணளியும் செய்பவரும், தேவர்களால் தொழப் பெறும் தன்னொப்பார் இல்லாதவரும் ஆகிய சிவபிரானது மிழலையை நினைப்பவர்கள் பரந்து விரிந்த இவ்வுலகில் அழகிய உருவோடு விளங்குபவர் ஆவர். |
| 1339. கலைமக டலைமக னிவனென வருபவர்<br>அலைம– தருபுன லரவொடு நகுதலை<br>இலைம– யிதழியு மிசைதரு சடையினர்<br>நிலைம– மிழலையை நினையவ லவரே. | அலைகள் நிறைந்த கங்கை நதி, பாம்பு, தலையோடு, வில்வ இலை, மிக்க கொன்றை ஆகியன பொருந்திய சடைமுடியினனாகிய சிவபிரான் உறையும் நிலைபேறு உடைய திருவீழிமிழலையை நினைய வல்லவர் கலைமகளின் தலைவன் இவன் என்னும் ஒவ்வொருவரும் சொல்லத்தக்க தகுதியை உடையவராய்க் கல்வி நலம் வாய்க்கப் பெறுவர். |
| 1340. மாடமர் சனமகிழ் தருமன முடையவர்<br>காடமர் கழுதுக ளவைமுழ வொடுமிசை<br>பாட– னவில்பவர் மிகுதரு முலகினில்<br>நீடமர் மிழலையை நினையவ லவரே. | இடுகாட்டில் வாழும் பேய்கள் ஒ–க்க முழவு முத–ய கருவிகள் ஒ–க்க இசைபாடி நடம் நவில்பவனாகிய சிவபிரான் இனிதாக எழுந்தருளியதும் இவ்வுலகிடைப் பெருமையோடு நீண்ட காலமாக விளங்குவதுமாகிய திருவீழிமிழலையை நினைய வல்லவர்கள் அருகில் விரும்பி உறையும் சுற்றத்தினர் மகிழும் மனம் உடையவராவர். |
| 1341. புகழ்மகள் துணையினர் புரிகுழ லுமைதனை<br>இகழ்வுசெய் தவனுடை யெழின்மறை வழிவளர்<br>முகமது சிதைதர முனிவுசெய் தவன்மிகு<br>நிகழ்தரு மிழலையை நினையவ லவரே. | சுருண்ட கூந்தலை உடைய உமையம்மையை இகழ்ந்த தக்கனுடைய அழகிய வேத நெறிகளை ஓதி வளர்க்கும் தலையைச் சினந்து சிதைத்தருளியவனாகிய சிவபிரானது புகழ் பொருந்திய திருவீழிமிழலையை நினைய வல்லவர் புகழ் மகளைப் பொருந்துவர். |

| | |
|---|---|
| 1342. அன்றின ரரியென வருபவ ரரிதினில்<br>ஒன்றிய திரிபுர மொருநொடி யினிலெரி<br>சென்று கொள் வகைசிறு முறுவல்கொ டொளிபெற<br>நின்றவன் மிழலையை நினையவ லவரே. | தவம் செய்து அரிதாகப் பெற்ற ஒன்றுபட்ட முப்புரங்களைத் தேவர்கள் வேண்டுகோட்படி ஒருநொடிப் பொழுதில் எரிஉண்ணுமாறு சிறுமுறுவல் செய்து புகழ் பெற்றவனாகிய சிவபிரானது திருவீழிமிழலையை நினைய வல்லவர் பகைவர்கட்குச் சிங்க ஏறு போன்ற வன்மை உடையவராவர். |
| 1343. கரம்பயில் கொடையினர் கடிமல ரயனதொர்<br>சிரம்பயில் வறவெறி சிவனுறை செழுநகர்<br>வரம்பயில் கலைபல மறைமுறை யறநெறி<br>நிரம்பினர் மிழலையை நினையவ லவரே. | மணங்கமழும் தாமரை மலர்மேல் உறையும் பிரமனுடைய தலைகளில் ஒன்றை அவனது உட–ல் பொருந்தாவண்ணம் கொய்த சிவபிரான் உறையும் செழுமையான நகராய், மேன்மை மிக்க கலைகள் பலவற்றோடு வேத விதிகளையும், அறநெறிகளையும் அறிந்தவர்கள் நிரம்பிய திருவீழிமிழலையை நினைய வல்லவர் தம் கைகளால் பலகாலும் கொடுக்கும் வள்ளன்மையோடு கூடிய உள்ளத்தைப் பெறுவர். |
| 1344. ஒருக்கிய வுணர்வினொ டொளிநெறி செலுமவர்<br>அரக்கனன் மணிமுடி யொருபது மிருபது<br>கரக்கன நெரிதர மலரடி விரல்கொடு<br>நெருக்கினன் மிழலையை நினையவ லவரே. | இராவணனுடைய மணிமுடி தரித்த பத்துத் தலைகளும், இருபது கரங்களும் நெரியுமாறு தன் மலர் போன்ற திருவடியின் விரலைக் கொண்டு நெரித்தருளியவனாகிய சிவபிரானது திருவீழி மிழலையை நினைய வல்லவர் ஒன்றுபட்ட உணர்வோடு ஒளிநெறியாகிய ஞானமார்க்கத்தில் செல்லுபவராவர். |
| 1345. அடியவர் குழுமிட வவனியி னிகழ்பவர்<br>கடிமல ரயனரி கருதரு வகைதழல்<br>வடிவுரு வியல்பினொ டுலகுக ணிறைதரு<br>நெடியவன் மிழலையை நினையவ லவரே. | மணம் மிக்க தாமரை மலர்மேல் விளங்கும் பிரமனும், திருமாலும் நினைதற்கு அரிய வகையில் தழல் வடிவோடு எல்லா உலகங் களிலும் நிறைந்தருளிய பெரியோனாகிய சிவபிரானது திருவீழிமிழலையை நினைய வல்லவர்கள், அடியவர் பலர் தம்மைச் சூழ இவ்வுலகில் இனிது வாழ்வர். |
| 1346. மன்மத னெனவொளி பெறுமவர் மருதமர்<br>வன்மலர் துவருடை யவர்களு மதியிலர்<br>துன்மதி யமணர்க டொடர்வரு மிகுபுகழ்<br>நின்மலன் மிழலையை நினையவ லவரே. | மருதத்தினது வ–ய மலரால் துவர் ஏற்றிய காவி ஆடையை உடுத்த புத்தர்களும் அறிவற்றவர். சமணர்களும் துன்மதியாளர்கள். இவர்கள் இருவராலும் அறிதற்கு அரிய மிக்க புகழினை உடைய நின்மலனாகிய சிவபிரானின் மிழலையை நினைப்பவர்கள் மன்மதன் போன்ற அழகினைப் பெறுவார்கள். |
| 1347. நித்திலன் மிழலையை நிகரி– புக–யுள்<br>வித்தக மறைம– தமிழ்விர கனமொழி<br>பத்தியில் வருவன பத்திவை பயில்வொடு<br>கற்றுவல் லவருல கினிலடி யவரே. | முத்துப் போன்றவனாகிய சிவபிரானது திருவீழிமிழலையை ஒப்பற்ற புக–ப் பதியில் வாழும் சதுரப்பாடுகளோடு வேதங்களிலும் தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் வல்லவன் ஆகிய ஞானசம்பந்தனது பத்தியால் விளைந்த இப்பதிகப் பாடல்கள் பத்தையும் பயின்று கற்று வல்லவர் உலகினில் சிறந்த அடியவராய் விளங்குவர். |

## 125. திருச்சிவபுரம்

பண் : வியாழக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 125

| | |
|---|---|
| 1348. கலைமட யகலல்கு லரிவைத னுருவினன்<br>முலைமட தருதிரு வுருவம துடையவன்<br>சிலைமட மதில்பொதி சிவபுர நகர்தொழ<br>இலைநடு வினையிரு மையுமிடர் கெடுமே. | மேகலை பொருந்திய அகன்ற அல்குலை உடைய உமையம்மை இடப்பாகமாகப் பொருந்திய திருவுருவினனும், அதனால் ஒரு கூற்றில் நகில் தோன்றும் திருவுருவை உடையவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய கருங்கற்களால் இயன்ற மதில்களால் பொதியப்பட்டுள்ள சிவபுர நகரைத் தொழுதால் நம்மை நடுயும் வினைகள் இல்லை. இருமையிலும் இடர் கெடும். |
| 1349. படரொளி சடையினன் விடையினன் மதிலவை<br>சுடரெரி கொளுவிய சிவனவ னுறைபதி<br>திடமடு புனல்வயல் சிவபுர மடையநம்<br>இடர்கெடு முயர்கதி பெறுவது திடனே. | ஒளி விரிந்த சடையினனும், விடை ஊர்தியனும் அசுரர்களின் மும்மதில்களை விளங்கும் எரி கொள்ளுமாறு செய்தழித்தவனுமாகிய சிவன் உறையும் பதி ஆகிய இடையிடையே திடலைக் கொண்ட நீர் சூழ்ந்த வயல்களை உடைய சிவபுரத்தை அடைந்து தொழுதால் நம் இடர் கெடும். உயர்கதி பெறுவது உறுதி. |
| 1350. வரைதிரி தரவர வகடழ லெழவரு<br>நுரைதரு கடல்விட நுகர்பவ னெழில்திகழ்<br>திரைபொரு புனலரி சிலதடை சிவபுரம்<br>உரைதரு மடியவ ருயர்கதி யினரே. | மந்தரமலை மத்தாகச் சுழல அதில் கயிறாகச் சுற்றிய வாசுகி என்னும் பாம்பின் வயிற்றிடுந்து அழலாகத் தோன்றி, நுரையுடன் வெளிப்பட்ட விடம், கடல் பொருந்த, ஆலகாலம் என்னும் அந்நஞ்சினை உண்டவனுடைய, அழகு விளங்கக் கரையில் மோதும் நீர் நிறைந்த அரிசிலாற்றங் கரையில் விளங்கும் சிவபுரத்தின் பெயரைக் கூறுபவர் உயர் கதியைப் பெறுவர். |
| 1351. துணிவுடை யவர்சுடு பொடியின ருடலடு<br>பிணியடை விலர்பிற வியுமற விசிறுவர்<br>தணிவுடை யவர்பயில் சிவபுர மருவிய<br>மணிமிட றனதடி யிணைதொழு மவரே. | அடக்கமுடைய மக்கள் வாழும் சிவபுரத்தில் எழுந்தருளிய நீலமணிபோலும் மிடற்றினை உடைய சிவபிரானுடைய திருவடிகளை வணங்குவோர் துணிபுடையவராவர். திருநீறு பூசும் அடியவர் ஆவர். உடலை வருத்தும் பிணிகளை அடையார். பிறவியும் நீங்கப் பெறுவர். |
| 1352. மறையவன் மதியவன் மலையவ னிலையவன்<br>நிறையவ னுமையவண் மகிழ்நட நவில்பவன்<br>இறையவ னிமையவர் பணிகொடு சிவபுரம்<br>உறைவென வுடையவ னெமையுடை யவனே. | தேவர்கள் செய்யும் பணிவிடைகளை ஏற்றுச் சிவபுரத்தைத் தனது உறைவிடமாகக் கொண்டவனும் எம்மை அடிமையாகக் கொண்டவனுமாகிய சிவபிரான் வேதங்களை அருளியவன். பிறை சூடியவன். கயிலை மலையைத் தனது இடமாகக் கொண்டவன். நிலைபேறு உடையவன். எங்கும் நிறைந்தவன். உமையம்மை கண்டு மகிழும் நடனத்தைப் புரிபவன். எல்லோர்க்கும் தலைவன். |

| | | |
|---|---|---|
| 1353. | முதிர்சடை யிளமதி நதிபுனல் பதிவுசெய்<br>ததிர்கழ லொ–செய வருநட நவில்பவன்<br>எதிர்பவர் புரமெய்த விணையி– யணைபதி<br>சதிர்பெறு முளமுடை யவர்சிவ புரமே. | முதிர்ந்த சடையின்மீது இளம்பிறை, கங்கை நதி ஆகியவற்றைப் பொருந்த அணிந்து, கா–ல் அசையும் கழல்கள் ஒ–க்குமாறு அரிய நடனம் புரிபவனும், தன்னை எதிர்த்த அசுரர்களின் முப்புரங்களை எய்தழித்த ஒப்பற்றவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய தலம், திறமையான மனம் உடைய அடியவர் வாழும் சிவபுரமாகும். |
| 1354. | வடிவுடை மலைமகள் சலமக ளுடனமர்<br>பொடிபடு முழையதள் பொ–திரு வுருவினன்<br>செடிபடு ப–திரி சிவனுறை சிவபுரம்<br>அடைதரு மடியவ ரருவினை யிலரே. | அழகிய வடிவினைக் கொண்ட மலைமகள் நீர் மகளாகிய கங்கை ஆகியோருடன் புள்ளி பொருந்திய மானினது தோல் விளங்கும் அழகிய உருவத்தைக் கொண்டவனும், தீ நாற்றம் வீசும் மண்டையோட்டில் பிச்சையை ஏற்றுத் திரிபவனுமாகிய சிவபிரான் உறையும் சிவபுரத்தை அடையும் அடியவர் நீங்குதற்கரிய வினைகள் இலராவர். |
| 1355. | கரமிரு பதுமுடி யொருபது முடையவன்<br>உரநெரி தரவரை யடர்வுசெய் தவனுறை<br>பரனென வடியவர் பணிதரு சிவபுர<br>நகரது புகுதனம் முயர்கதி யதுவே. | இருபது கைகளையும், பத்துத் தலைகளையும் உடையவனாகிய இராவணனின் மார்பு நெரியுமாறு கயிலை மலையால் அடர்த்தருளிய சிவபிரான் உறைவதும், மேலான பரம்பொருள் இவனேயாவான் என அடியவர் வழிபாடு செய்வதும் ஆகிய சிவபுரத்தை அடைதல் நமக்கு உயர் கதியைத் தரும். |
| 1356. | அன்றிய லுருவுகொ ளரியய னெனுமவர்<br>சென்றள விடலரி யவனுறை சிவபுரம்<br>என்றிரு பொழுதுமுன் வழிபடு மவர்துயர்<br>ஒன்றிலர் புகழொடு முடையரிவ் வுலகே. | தங்கள் செயலுக்கு மாறுபட்ட தன்மையொடு கூடிய பன்றி அன்னம் ஆகிய வடிவங்களைக் கொண்ட திருமால் பிரமன் ஆகியோர் சென்று அளவிடுதற்கு அரியவனாய் ஓங்கி நின்ற சிவபிரான் உறையும் சிவபுரம் என்று இருபொழுதுகளிலும் நினைத்து வழிபடும் அடியவர் ஒரு துன்பமும் இலராவர். இவ்வுலகில் புகழோடும் பொருந்தி வாழ்வர். |
| 1357. | புத்தரொ டமணர்க ளறவுரை புறவுரை<br>வித்தக மொழிகில விடையுடை யடிகடம்<br>இத்தவ முயல்வுறி –றைவன சிவபுரம்<br>மெய்த்தக வழிபடல் விழுமிய குணமே. | புத்தர்களும் சமணர்களும் கூறுவன அறவுரைக்குப் புறம்பான உரைகளாகும். அவை அறிவுடைமைக்கு ஏற்ப மொழியாதவை. அவற்றை விடுத்து விடையூர்தியை உடைய தலைவனாகிய சிவபிரானை நோக்கிச் செய்யும் இத்தவத்தைச் செய்யும் முயற்சியை மேற்கொள்வீராயின் அவ்விறைவனது சிவபுரத்தைச் சென்றடைந்து வழிபடுதல் சிறந்த குணங்களை உங்கட்குத் தரும். |

| | |
|---|---|
| 1358. புந்தியர் மறைநவில் புக–மன் ஞானசம்<br>பந்தன தமிழ்கொடு சிவபுர நகருறை<br>எந்தையை யுரைசெய்த விசைமொழி பவர்வினை<br>சிந்திமு னுறவுயர் கதிபெறு வர்களே. | அறிவுடையவர்கள் ஓதும் வேதங்களை ஓதி உணர்ந்த புக– மன்னனாகிய ஞானசம்பந்தன் தமிழைக் கொண்டு சிவபுர நகரில் உறையும் எந்தையைப் போற்றி உரை செய்த இவ்விசை மாலையை ஓதி வழிபடுபவர் வினைகள் முற்பட்டு நீங்க உயர்கதி பெறுவார்கள். |

## 126. திருக்கழுமலம்

பண் : வியாழக்குறிஞ்சி முதல் திருமுறை பதிக எண் : 126

| | |
|---|---|
| 1359. பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்ற வும்பரப்<br>பாலேசேர்வா யேனோர்காள் பயில்கண முநிவர்களுஞ்<br>சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின்மங்கை தன்னொடுஞ்<br>சேர்வார்நாணா ணீள்கயிலைத் திகழ்தரு பரிசதெலாஞ்<br>சந்தித்தே யிந்தப்பார் சனங்கணின்று தங்கணாற்<br>றாமேகாணா வாழ்வாரத் தகவுசெய்த வனதிடங்<br>கந்தத்தா லெண்டிக்குங் கமழ்ந்திலங்கு சந்தனக்<br>காடார்பூவார் சீர்மேவுங் கழுமல வளநகரே. | வினைவயத்தால் மண்ணுலகம் வந்து எல்லா இடங்களிலும் பொருந்தி அவ்விடங்களே தமக்கு இருப்பிடமாய் வாழும் தேவர்களும், மற்றவர்களாகிய கானகங்களில் வாழும் முனிவர்களும், மனத்தால் சிந்தித்து வழிபட்டு உய்தி பெறுமாறு, மலையரையன் மகளாகிய பார்வதி தேவியாரோடு சேர்ந்தவராய், நாளும் நாளும் நீண்டுயர்ந்த கயிலை மலையில் விளங்கும் திருவோலக்கச் சிறப்புக்கள் எல்லாவற்றையும் இந்த உலகில் வாழும் மக்கள் தங்கள் கண்களால் தாமே கண்டு வாழ்பவராகப் பெருங் கருணையோடு காட்சி நல்குபவனது இடம் எட்டுத் திசைகளிலும் மணம் கமழ்ந்து விளங்கும் மலர்களோடு கூடிய சந்தன மரக்காடுகள் சிறந்து வளர்ந்து செழிக்கும் கழுமல நகராகும். |
| 1360. பிச்சைக்கே யிச்சித்துப் பிசைந்தணிந்த வெண்பொடிப்<br>பீடார்நீடார் மாடாரும் பிறைநுத லரிவையொடும்<br>உச்சத்தா னச்சிப்போ றொடர்ந்தடர்ந்த வெங்கணே<br>றூராவூரா நீள்வீதிப் பயில்வொடு மொ–செயிசை<br>வச்சத்தா னச்சுச்சேர் வடங்கொள்கொங்கை மங்கைமார்<br>வாராநேரா மாலாகும் வசிவல வவனதிடங்<br>கச்சத்தான் மெச்சிப்பூக் கலந்திலங்கு வண்டினங்<br>காரார்காரார் நீள்சோலைக் கழுமல வளநகரே. | பிச்சை ஏற்பதை விரும்பி நீரில் குழைத்தணிந்த வெண்பொடியினராய்ப் பெருமை பொருந்தி யவரும் புகழால் விரிந்தவருமாய், அருகில் விளங்கும் பிறை போன்ற நெற்றியினளாகிய உமையம்மையோடு உச்சிப்போதினை விரும்பித் தன்னை எதிர்ப்பவரைத் தொடர்ந்து கொல்லும் தறுகண்மையை உடைய விடையேற்றின் மீதமர்ந்து, ஊர்ந்து ஊர்ந்து நீண்ட தெருக்களில் விருப்பத்தோடு பாடுவதால், நச்சுதலுக்குரியனவும் முத்துவடங்கள் அணிந்தனவுமாகிய கொங்கை களை உடைய மகளிர் அவ்விசையைக் கேட்டு வந்து தமக்கு முன்னே விரக மயக்கம் கொள்ளுமாறு வசீகரிக்கும் வன்மை பொருந்திய சிவபிரானது இடம் மேலைக் காற்றினால் அல்லது ஒற்றுமையோடு பூக்களைக் கலந்து விளங்கும் வண்டினங்களோடு கருமை நிறம் பொருந்திய மேகங்கள் தவழும் நீண்ட சோலைகளை உடைய கழுமல வளநகராகும். |

| | |
|---|---|
| 1361. திங்கட்கே தும்பைக்கே திகழ்ந்திலங்கு மத்தையின்<br>சேரேசேரே நீராகச் செறிதரு சுரநதியோ<br>டங்கைச்சேர் வின்றிக்கே யடைந்துடைந்த வெண்டலைப்<br>பாலேமேலே மாலேயப் படர்வுறு மவனிறகும்<br>பொங்கப்பேர் நஞ்சைச்சேர் புயங்கமங்கள் கொன்றையின்<br>போதார்தாரே தாமேவிப் புரிதரு சடையனிடங்<br>கங்கைக்கே யும்பொற்பார் கலந்துவந்த பொன்னியின்<br>காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. | திங்கள், தும்பை, விளங்கித் தோன்றும் ஊமத்த மலர் ஆகியவற்றைச் சேர்த்துச் செறிந்த நீராகிய கங்கை நதி, அழகிய கையில் விளங்குவதை யன்றி உடைந்த கபாலம், முடிகாண மயக்க உணர்வுடையனாய் மேலே பறந்து சென்ற பிரமனாகிய அன்னத்தின் இறகு, நஞ்சு பொங்கும் பாம்பு, கொன்றை மாலை ஆகியவற்றை அணிந்து, வளைத்துக் கட்டிய சடையை உடைய சிவபிரானது இடம்; கங்கைக்கு நிகரான அழகோடு கலந்து வந்த பொன்னி நதியின் வாய்க்கால்கள் பாய்ந்து வளஞ் சேர்க்கும் கழுமல வளநகராகும். |
| 1362. அண்டத்தா லெண்டிக்கு மமைந்தடங்கு மண்டலத்<br>தாறேவேறே வானாள்வா ரவரவ ரிடமதெலாம்<br>மண்டிப்போய் வென்றிப்போர் மலைந்தலைந்த வும்பரு<br>மாறேலாதார் தாமேவும் வ–மிகு புரமெரிய<br>முண்டத்தே வெந்திட்டே முடிந்திடிந்த விஞ்சிசூழ்<br>மூவாமூதூர் மூதூரா முனிவுசெய்த வனதிடங்<br>கண்டிட்டே செஞ்சொற்சேர் கவின்சிறந்த மந்திரக்<br>காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே. | இம்மண்ணுலகில் இருந்துகொண்டே எண்திசை களையும் உள்ளடக்கிய அனைத்துலகங்களுக்கும் சென்று வெற்றி கொண்டு வான் உலகை ஆளும் தேவர்களையும் நெருங்கிச் சென்று வெற்றிப்போர் செய்து, அத்தேவர்களாலும் எதிர்க்க இயலாதவர்களாய் விளங்கிய அவுணர்களின் வ–மை மிக்க முப்புரங்களைத் தன் நெற்றி விழியால் வெந்து முடியுமாறு செய்து அவ் இஞ்சி சூழ்ந்த அழியாத பழமையான மூன்று ஊர்களும் முதுமை உடையவாய் அழியுமாறு சினந்த சிவபிரானது இடம், செஞ்சொற்களைக் கண்டு தேர்ந்து தொகுத்த அழகிய மந்திரங்களை மூச்சுக் காற்றாகக் கொண்டு உருவேற்றி வருவோர் வாழும் கழுமலமாகிய வளநகராகும். |
| 1363. திக்கிற்றே வற்றற்றே திகழ்ந்திலங்கு மண்டலச்<br>சீறார்வீறார் போரார்தா ரகனுட லவனெதிரே<br>புக்கிட்டே வெட்டிட்டே புகைந்தெழுந்த சண்டத்தீப்<br>போலேபூநீர் தீகான்மீப் புணர்தரு முயிர்கடிறஞ்<br>சொக்கத்தே நிர்த்தத்தே தொடர்ந்தமங்கை செங்கதத்<br>தோடேயாமே மாலோகத் துயர்களை பவனதிடங்<br>கைக்கப்பேர் யுக்கத்தே கனன்றுமிண்டு தண்டலைக்<br>காடேயோடா வூரேசேர் கழுமல வளநகரே. | எட்டுத் திசைகளுக்கும் காவலர்களாகிய தெய்வங்கள் அங்கங்கே இருந்து காவல் செய்து விளங்கும் இம் மண்ணுலகைச் சீறி அழித்தற்கு வந்த வ–ய போர் வல்ல தாருகன் உடலை அவன் எதிரிலேயே புகுந்து வெட்டி வீழ்த்தி, புதைந்தெழுந்து வந்த ஊழித் தீப்போலத் தோன்றி மண் நீர் தீ கால் விண் ஆகிய ஐம்பூத வடிவாய் விளங்கும் இவ்வுலகில் வாழும் உயிர்களை அழிக்கச் சிவந்த கோபத்தோடு சொக்கநிருத்தத்தில் நடனமாடி வந்த காளியின் கோபத்தை அவளோடு எதிர் நடனம் ஆடி வென்று பெரிதான இவ்வுலக உயிர்களின் துயரைக் களைந்தவன் ஆகிய சிவபிரானது இடம் பலரும் வெறுக்கக் கனன்று வந்த பேரூழிக் காலத்தும் செறிந்த சோலைகளாகிய காடுகளோடு அழியாத ஊராக விளங்கும் கழுமல வளநகராகும். |

| | | |
|---|---|---|
| 1364. | செற்றிட்டே வெற்றிச்சேர் திகழ்ந்ததும்பி மொய்ம்புறுஞ்<br>சேரேவாரா நீள்கோதைத் தெரியிழை பிடியதுவாய்<br>ஒற்றைச்சேர் முற்றற்கொம் புடைத்தடக்கை முக்கண்மிக்<br>கோவாதேபாய் மாதானத் துறுபுகர் முகவிறையைப்<br>பெற்றிட்டே மற்றிப்பார் பெருத்துமிக்க துக்கமும்<br>பேராநோய்தா மேயாமைப் பிரிவுசெய்த வனதிடங்<br>கற்றிட்டே யெட்டெட்டுக் கலைத்துறைக் கரைச்செலக்<br>காணாதாரே சேராமெய்க் கழுமல வளநகரே. | சலந்தரன், திரிபுரத்தசுரர் முதலானவர்களைக் கொன்று வெற்றி பெற்று விளங்கும் வ–மை பொருந்திய ஆண் யானை வடிவு கொண்ட தன்னைச் சேர்தற் பொருட்டு வரும் நீண்ட மலர் மாலை அணிந்த உமையம்மை பெண் யானை வடிவு கொண்டு வந்து கூட முற்றிய ஒரு கொம்பையும் நீண்ட கையையும் மூன்று கண்களையும், இடைவிடாது மிகுந்து பொழியும் மதநீரையும் புள்ளிகளோடு கூடிய முகத்தையும் உடைய விநாயகனைப் பெற்றெடுத்து இவ்வுலகில் வாழும் மக்கட்குப் பெரிய துன்பங்களும் நோய்களும் வந்து பொருந்தாதவாறு செய்து காத்தருளிய சிவபிரானது இடம், அறுபத்து நான்கு கலைகளையும் முற்றக் கற்றுக் கரை கண்டு அவற்றின் வழி ஒழுகுவோர் சேர்ந்துறைவதும், அவ்வாறு ஒழுகாதார் அடைய முடியாததுமாகிய கழுமல வளநகராகும். |
| 1365. | பத்திப்பேர் வித்திட்டே பரந்தவைம் புலன்கள்வாய்ப்<br>பாலேபோகா மேகாவாப் பகையறும் வகைநினையா<br>முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக் குணங்கள்வாய்<br>மூடாவூடா நாலந்தக் கரணமு மொருநெறியாய்ச்<br>சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்<br>சேர்வார்தாமே தானாகச் செயுமவ னுறையுமிடங்<br>கத்திட்டோர் சட்டங்கங் கலந்திலங்கு நற்பொருள்<br>காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே. | அன்பாகிய விதையை ஊன்றி, பரந்துபட்ட சுவை முத–ய ஐம்புலன்கள் வழி ஒழுகாது தம்மைக் காத்துக் காமம் முத–ய பகைகளைக் கடிந்து முத்திக்கு இடையூறாகும் முக்குணங்களின்வழி ஒழுகாது அந்தக்கரணங்கள் நான்கையும் ஒரு நெறிப்படுத்திச் சிந்தனையில் செலுத்தி விளங்கும், மெய்ப்பரம்பொருளாகிய தன்னையே எண்ணுபவர்களைத் தானாகச் செய்யும் சிவபெருமான் உறையும் இடம், ஆறு அங்கங்களையும் கற்றுணர்ந்தோர் தம்மோடு கலந்து விளங்கும் சிவபரம் பொருளின் திருவடிகளை இடைவிடாது தியானித்து வாழும் கழுமல வளநகராகும். |
| 1366. | செம்பைச்சே ரிஞ்சிச்சூழ் செறிந்திலங்கு பைம்பொழிற்<br>சேரேவாரா வாரீசத் திரையெறி நகரிறைவன்<br>இம்பர்க்கே தஞ்செய்திட் டிருந்தான் பயின்றவெற்<br>பேரார்பூநே ரோர்பாதத் தெழில்விர லவணிறுவிட்<br>டம்பொற்பூண் வென்றித்தோ ளழிந்துவந்த னஞ்செய்தாற்<br>காரார்கூர்வாள் வாணாளன் றருள்புரி பவனதிடங்<br>கம்பத்தார் தும்பித்திண் கவுட்சொரிந்த மும்மதக்<br>காரார்சேறார் மாவீதிக் கழுமல வளநகரே. | செம்பினால் இயன்ற மதில்களால் சூழப்பெற்றுச் செறிந்து விளங்குவதும், பசுமையான பொழில்கள் சேர்ந்ததும், நீண்ட கடல்களின் அலைகளால் மோதப் பெறுவதுமாகிய இலங்காபுரி நகருக்கு இறைவனாகிய இராவணன், இவ்வுலக மக்கட்குத் துன்பங்கள் செய்து வாழ்ந்ததோடு சிவபிரான் உறையும் கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்டபோது அழகிய மலர் போன்ற ஓர் திருவடி விரல் ஒன்றை ஊன்றி அழகிய பொன்னணிகலன்கள் பூண்ட அவனது வெற்றி நிறைந்த தோள் வ–மையை அழித்து அவன் பிழை உணர்ந்து வந்தனம் செய்த அளவில் அவனுக்கு அரிய கூரிய வாளையும் நீண்ட வாழ்நாளையும் அப்பொழுதே அருள் புரிந்தருளிய சிவபெருமானது இடம்; கம்பங்களில் கட்டிய யானைகளின் வ–ய கன்னங்கள் முத–யன பொழிந்த மும்மதங்களால் நிலம் கரிய சேறாகும் வீதிகளை உடைய கழுமலநகராகும். |

| | |
|---|---|
| 1367. பன்றிக்கோ லங்கொண்டிப் படித்தடம் பயின்றிடப்<br>பானாமாறா னாமேயப் பறவையி னுருவுகொள<br>ஒன்றிட்டே யம்புச்சே ருயர்ந்தபங் கயத்தவ<br>னோதானோதா னஃதுணரா துருவின தடிமுடியுஞ்<br>சென்றிட்டே வந்திப்பத் திருக்களங்கொள் பைங்கணின்<br>றேசால்வேறோ ராகாரந் தெரிவுசெய் தவனதிடங்<br>கன்றுக்கே முன்றிற்கே கலந்திலந் நிறைக்கவுங்<br>காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. | திருமால் பன்றி உருவம் எடுத்து இவ்வுலகைப் பிளந்து சென்று பாதாளம் வரைத் தேடியும், நீரில் தோன்றிய தாமரை மலரில் உறையும் நான்முகன் வேதங்களை ஓதுபவனாக இருந்தும் அதன் உண்மைப் பொருளை உணராது அன்னப்பறவை வடிவம் எடுத்து வான வெளியில் பறந்து சென்று தேடியும் தம் எதிரே தோன்றிய வடிவினது அடிமுடிகளைக் காணாது அயர்த்துச் சென்று வழிபட அவர்களின் பசுமையான கண்களுக்கு அழகிய நீலகண்டத்தோடு தனது வல்லமையால் வேறோர் வடிவம் தெரியச் செய்தவனது இடம் ஆன் கன்றுகள் முன்றி–ல் நிறைந்து கலந்து நின்று இல்லத்தை நிறைக்கவும் வாய்க்கால்கள் வந்து மேல் ஏறிப் பாயவும் வளத்தால் நிறைந்து விளங்கும் கழுமல வளநகராகும். |
| 1368. தட்டிட்டே முட்டிக்கைத் தடுக்கிடுக்கி நின்றுணாத்<br>தாமேபேணா தேநாளுஞ் சமணொடு உழல்பவரும்<br>இட்டத்தா லத்தந்தா னிதன்றதென்று நின்றவர்க்<br>கேயாமேவா யேதுச்சொல் –லைம– மருதம்பூப்<br>புட்டத்தே யட்டிட்டுப் புதைக்குமெய்க்கொள் புத்தரும்<br>போல்வார்தாமோ ராமேபோய்ப் புணர்வுசெய் தவனதிடங்<br>கட்டிக்கால் வெட்டித்தீங் கரும்புதந்த பைம்புனற்<br>காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. | தட்டைக் கையில் ஏந்தி வளைந்த கையில் தடுக்கை இடுக்கி நின்று உண்டு ஆடைகளால் தம்மைப் பேணாது நாள்தோறும் வருந்தித் திரியும் சமணர்களும், தம் விருப்பப்படி கேட்பவர்க்குத் தெளிவு ஏற்படாதவாறு பொருள் இது அன்று அதுதான் என்று வாய்க்கு வந்தபடி காரணம் கூறுபவரும், இலைகள் நெருங்கிய மருத மரத்தின் பூவை அரைத்துப் பின்புறத்தே பூசிச் சாயமூட்டிய ஆடையைத் தம் உட–ன் பின்பாகத்தே சுற்றிக்கொண்டு உடலை மறைப்போரும் ஆகிய புத்தர்களும் போல்பவர் கண்டறியாதவாறு சென்று எழுந்தருளியுள்ள சிவபிரானது இடம் வெல்லக்கட்டிகளைத் தரும் இனிய கரும்பை வெட்டியதால் அக்கரும்பு தந்த இனிய சாறு வாய்க்கால் வழியே வந்து மேல் எறிப் பாயும் வளமுடைய கழுமல வளநகராகும். |
| 1369. கஞ்சத்தே னுண்டிட்டே களித்துவண்டு சண்பகக்<br>கானேதேனே போராருங் கழுமல நகரிறையைத்<br>தஞ்சைச்சார் சண்பைக்கோன் சமைத்தநற் கலைத்துறை<br>தாமேபோல்வார் தேனேரார் தமிழ்விர கனமொழிகள்<br>எஞ்சத்தேய் வின்றிக்கே யிமைத்திசைத்த மைத்தகொண்<br>டேழேயேழே நாலேமூன் றிய–சை யிசையியல்பா<br>வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்<br>மார்பேசேர்வாள் வானோர்சீர் மதிநுதன் மடவரலே. | தாமரை மலரிலுள்ள தேனைக் குடித்துக் களித்த வண்டுகள் சண்பக மரச்சோலைகளில் உள்ள தேன் வண்டுகளோடு போரிடும் கழுமல வளநகர் இறைவனைத் தஞ்சமாகச் சார்ந்துள்ள சண்பை நகர்த் தலைவனும் தமிழ் விரகனுமாகிய ஞானசம்பந்தன் குறைவின்றிப் பாடியமைத்த தேனுக்கு நிகரான இப்பதிகப் பாடல்களை நல்ல கலைகளில் துறைபோய்த் தமக்குத் தாமே நிகராய் இருபத்தொரு பண்முறையினால் இயல்பாக வஞ்சனையின்றி மனம் பொருந்தப் பாடுபவர்களின் மார்பினில் தேவர்களால் போற்றப் பெறும் சிறப்புமிக்க பிறை போன்ற நெற்றியினை உடைய திருமகள் சேர்வாள். |

## 127. திருப்பிரமபுரம்

பண் : வியாழக்குறிஞ்சி | முதல் திருமுறை பதிக எண் : 127

| | | |
|---|---|---|
| 1370. | பிரம புரத்துறை பெம்மா னெம்மான்<br>பிரம புரத்துறை பெம்மா னெம்மான்<br>பிரம புரத்துறை பெம்மா னெம்மான்<br>பிரம புரத்துறை பெம்மா னெம்மான். | ஞானாகாசமாகிய பராசத்தியான பரிபூரணத்தை மிகுதியாக வியந்து அந்தப் பராசத்திக்கு அதீதமாகிய சுகமே வடிவாய் முதல் நடு இறுதி காணப்படாத வஸ்து எந்தப் பெரியோன், மேல்நிலமாகிய ஆகாசத்தின் கண்ணே யோடா நின்ற கங்காதேவியை விரும்பித் திருமுடியிலே வைத்தவன், எம்மை நீங்காத நிலைமையையுடைய எமது உயிர். பிரமரூபத்திலே எண்ணப்பட்ட என்னை முத்தியிலே விடுகைக்கு அமையாத விருப்பமுள்ளவனாய் என்னை ஒக்கவந்தவன். பிரமபுரம் என்கின்ற சீகாழிப்பதியிலே வீற்றிராநின்ற கர்த்தாவானவன். என்னுடைய சுவாமி. பெரியோனும் எனக்கு உயிரானவனும் என்னை யொக்கவந்தவனும் சீகாழிப்பதியில் வீற்றிருக்கும் கடவுள் எனக் கூட்டிப் பொருள் கொள்க. |
| 1371. | விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்<br>விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்<br>விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்<br>விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன் | அஷ்டகுல பர்வதங்களும் ஒ–சிறந்த தரிசு மணியாகவும், அகில லோகங்களையும் உள்ளே அகப்படுத்தும் தன்மையவாயும், பெரிதாயும் உள்ள திருச்சிலம்பினைத் தரித்துள்ளவன் நூபுரம் எனற் பாலது நுபுரம் எனக் குறுகி நின்றது. விஷ்ணுவின் புறனுரையாகிய சிவதூஷணத்தை அரச மரத்தினீழ–ல் அவனுடன் இருந்து விரும்பியுள்ள முப்புரங்களைச் சங்கரித்துள்ளவன். அண்ணி என்ற பாலது அணி என இடைக்குறையாய் நின்றது. தேவர்கள் கற்பகப் பூஞ்சோலை மலர்களால் அர்ச்சிக்கப்படுகின்ற தேவேந்திர னுடைய எணு எனற்பாலது ஏணு என நீண்டது. புரந்தரன் எனற்பாலது புரத்தரன் என வ–த்து நின்றது. இதழ்கள் விண்டு மலர்கின்ற சோலை சூழ்ந்த சீகாழிப்பதிக்குக் கர்த்தாவாயுள்ளவன். தேவேந்திரன் மூங்கில் வழியாக வந்து பூசித்ததால் வேணுபுரம் என்னும் பெயர் பெற்றது. சிலம்பினைத் தரித்துள்ளவரும், முப்புரத்தை எரித்தவரும், தேவேந்திரனுடைய சோலை சூழ்ந்த வேணுபுரத்தில் வீற்றிருக்கும் இறைவர் எனக் கூட்டி உரைத்துக் கொள்க. |
| 1372. | புண்ட ரிகத்தவன் மேவிய புக–யே<br>புண்ட ரிகத்தவன் மேவிய புக–யே<br>புண்ட ரிகத்தவன் மேவிய புக–யே<br>புண்ட ரிகத்தவன் மேவிய புக–யே | இதய கமலத்தி–ருந்து இடையறாத ஆனந்தம் பொழியப்பட்டு என்னை மலபோதத்தில் தள்ளாமல் எனக்கு அடைக்கலப் பொருளாயுள்ளவன். ஆன்மாக்களுக்கு இரக்ஷையாக முண்டம் போ–ருந்த திருநீற்றை அணியப்பட்ட மிக்க கருணையானவனே யான் பாடும் பாடலை உவந்துள்ளவன். பு–க்காலும் பு–க்கையும் |

| | |
|---|---|
| | பெற்றுள்ள வியாக்கிரபாத முனிவருக்கு ஞானானந்தமாகிய நாடகத்தைக் கனகசபையிலே ஆடல்செய்யும் பரத வித்தையைக் கற்றுள்ளான். வியம் எனற்பாலது விய எனக் கடைகுறைந்து நின்றது. கீழ்ச்சொன்ன லீலைகளெல்லாம் செய்கின்ற சிவன் தனது இச்சையால் பொருந்தியிருக்கும் ஊர் பிரமா பூசித்த புக– என்னும் திருப்பதி. |
| 1373. விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்<br>விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்<br>விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்<br>விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன் | கன்று குணிலாக எறிந்து விளவின் கனியைக் கொண்ட நாரணனைப் பிரகாசஞ் செய்யப்பட்டு நின்மலமாயிருந்துள்ள தனது பெரிய திருமேனியிலே ஒன்று பாதியாக வைத்துள்ளான் என்க. தீ எனற்பாலது தி எனக் குறுகி நின்றது. கழுதரு எனற்பாலது கழ்தரு என நின்றது. மாறுபாடாய்க் கதறப்பட்ட புத்தனது தலையிலே அக்கினியைச் சொரிந்து மிக்க பயத்தோடும் விழுகின்ற இடியை விழும்படி ஏவிப் புத்தரைவேரறுத்தானும் தானேயன்றி யானன்றாகும். தீ எனற்பாலது தி எனவும், காழ்தரு எனற்பாலது கழ்தரு எனவும், ஏங்குகு எனற்பாலது எங்கு எனவும் குறுகி நின்றன. தனது பரிபூரணத்திலே தன்னையிழந்து இரண்டாய் விசுவமுருகித் தான் விஷமாகத் தூஷணப்பட்டு நிற்கின்ற எனக்கும் குருமூர்த்தியாய் வந்து என் பிறவியை ஒழித்துத் தனது பேரின்பமாகிய பரிபூரணத்திலே எனது அடிமை குலையாமல் இரண்டற வைத்தவன். கீழ்ச்சொல்–ப் போந்த செய்திகளெல்லாமுடையன் எத்தன்மையனோ என்னில் எங்கும் பிரகாசியாநின்ற கீர்த்தியினால் சிறக்கப்பட்டுள்ள இயமனால் பூசிக்கப்பட்ட வெங்குரு என்னும் திருப்பதியை விரும்பி யுள்ளான். வெங்குரு என்பதும் சீகாழி. |
| 1374. சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்<br>சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்<br>சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்<br>சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன் | சுடுநிலமாகிய மயானத்தை நடமாடும் இடமாகக் கொண்டும், முப்புரங்களையும் நகைசெய்து சுடப்பட்ட வெற்றிப் போரையுடைய தும்பைமாலைக் கடவுள். சூடார் எனற்பாலது சுடர் எனவும், ஈமம் எனற்பாலது இம் எனவும் குறுகி நின்றன. துரோணம் எனற்பாலது தோணி என மருவிற்று. என் உச்சிக்குச் சூடாமணியுமாய் என்மேல்வைத்த மா–னையுடையனுமாய் யாகத்தின் கண் வந்த யானையை வடிவொழித்துப் போர்க்கும் தன்மையை உடையவன். சூடாமணி எனற்பாலது சுடர்மணி எனவும், மா– எனற்பாலது மாளி எனவும், தோல் எனற்பாலது தோள் எனவும் நின்றன. மாலையுடையவன் – மா–. தோல் – யானை. சூரியனுடைய களங்கத்தைக் கழுவப்பட்ட சமுத்திரம் போன்ற சௌனக் |

| | | |
|---|---|---|
| | | கட–லே கீழ்ப்பட்டழுந்திக் கெடாநின்ற ஆன்மாக்களுக்குக் கைப்பற்றிக் கரையேறும் தெப்பமாகப் பிரணவம் என்கிற மந்திரத்தை அவரது செவியின் கண்ணே உண்டாக்கா நின்றவன். மண்ணி என்பது மணி என இடை குறைந்து நின்றது. புரந்தவன் எனற்பாலது புரத்தவன் என வ–த்தல் விகாரமாயிற்று. விளக்கத்தையுடைய நவரத்தினங்களாலே அலங்கரிக்கப்பட்ட மாளிகை சூழ்ந்த திருத்தோணிபுரத்திலே வீற்றிருக்கும் சிவன் இத்தன்மையன். |
| 1375. | பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி<br>பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி<br>பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி<br>பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி | பூமியிலுள்ளாரையும் தேவகணங்களாய் உள்ளாரையும் நாபிக் கமலத்திலே தோற்று விக்கப்பட்ட பிர்மா விஷ்ணுவினது போதத்திலே கண்ணாடியும் நிழலும் போலப் பிரதிவிம்பியா நின்றவன். ஆடி என்பது அடி எனக் குறுகி நின்றது. மலத்திரயங்களைக் கழுவப்பட்ட சிவஞானிகள் கூட்டம் பொ–வு பெறத்தக்க வனப்பையுடைய ஆனந்தநிருத்தம் செய் தருள்பவன். சர்வாங்கமும் உத்தூளனம் பண்ணின மார்பை உடைய சிவஞானிகளும், புண்ணிய பாவக்கட்டையரிந்து விசுவத்தைத் தள்ளப்பட்ட சிறப்பையுடையருமாயிரா நின்றவர் களுக்கு மிகுதியான மூலமாயுள்ளவன். உந்தராய் என்பது, ஊந்தராயென நீண்டது. மறுவிலா மறையோர் வாழ்கின்ற திருப்பூந்தராய் என்னும் திருப்பதியின்கண் வீற்றிராநின்ற சிவனது அழகிய திருவடித் தாமரை என்னை ஆண்டிடுவதாக, பூந்தராய் என்பது சீகாழி. |
| 1376. | செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்<br>செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்<br>செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்<br>செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில் | தனது திருவடிப் பிரசாதமில்லாதார்க்கு மல மயக்கத்தின் மேலீட்டைக்கெடாத சிவனுக்கு விசுவாதீதமான இருப்பிடம் எனது சைதன்னியமே. சத்தாதிகளஞ்சும் சேரப்பட்ட உலகத்தைத் தன் வாயினிடமாகவுடைய விஷ்ணுவின் களே பரத்தைத் திருமேனியிலே தரித்துள்ளான். சேர் எனற்பாலது செர் எனவும், சீர் எனற்பாலது சிர் எனவும் குறுகி நின்றன. ஆத்தும விகாரமாகிய கர்மத்தினாலே இந்திரியங்களுக்கு விடயமாகிய சுவர்க்கத்தி–ச்சையுடையானுக்கு அந்தச் சுவர்க்கம் மெய்யாக விசேடித்திருக்குமன்றே. இந்திரிய வன்மையாகிய யுத்தத்துக்கு இளையாமல் அந்த இந்திரியமாகிய பாணங்கள் தனது அறிவுக்குள் தைக்கப்படான். ஒருகால் சிரபுரம் என்று சொன்ன விடத்துப் பஞ்சேந்திரியங்களையும் அவியப்பொருது சிவனுடைய திருவடியிலே அடையாநிற்பன் என்பதாம். |

| | | |
|---|---|---|
| 1377. | பொன்னடி மாதர் சேர்புற வத்தவன்<br>பொன்னடி மாதர் சேர்புற வத்தவன்<br>பொன்னடி மாதர் சேர்புற வத்தவன்<br>பொன்னடி மாதர் சேர்புற வத்தவன் | பொ–வினையுடைய மாயாநிருத்தம் புரிகின்ற பத்திரகாளியும் பூதபசாசும் பொருந்திய மயானமே திருக்கோயிலாக உள்ளவன். சுத்தமான வழியைத் தரப்பட்ட மகாரிஷிகள் திரண்டு தவம் பண்ணா நிற்கும் ஆரணியத்தில் தனித்துத் தவம் புரியா நிற்கும் தபோதனன். அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள இலக்குமியை யொத்த இருடிபத்தினிகள் பிச்சையிட வந்து அணையுமிடத்துத் தனக்குள்ள நிருவாணத்தை அவர்களுக்குக் கொடுத்தவன். பொன்னாற் செய்யப்பட்ட பாடக நூபுராதிகளைப் பாதங்களிலே யணிந்துள்ள கன்னியர் திரண்டு விளையாடும் புறவம் என்னும் திருப்பதியில் வாழ்கின்ற சிவன். புறவம் என்பதும் சீகாழி. |
| 1378. | தசமுக னெரிதர வூன்று சண்பையான்<br>தசமுக னெரிதர வூன்று சண்பையான்<br>தசமுக னெரிதர வூன்று சண்பையான்<br>தசமுக னெரிதர வூன்று சண்பையான். | ஆத்துமாக்களிடத்துக் கருணைபிறக்கும் இடமாயுள்ளவன். அக்கினி வீசப்பட்டுத் திருவரையிலே அழுந்தச் சாத்தியுள்ள விரிந்த படத்தினையுடைய பாம்பை அரைஞாணாக வுடையான். எல்லாம் இறந்து அந்தமாயுள்ள சிவஞானிகள் குழாத்துக்கு நேரிதாகிய சூனியமாயுள்ள பொருளைத் தோற்றுவித் துள்ளானுமாய்ப் பு–யினது ஊன் பொருந்திய தோலாடையைத் திருவரையிலே விரித்துடுத்தவன். நேரி எனற்பாலது நெரி எனக் குறுகி நின்றது. தரக்கு எனற்பாலது தர எனக் குறைந்தது. தூசு எனற்பாலது துசு எனக் குறுகி நின்றது. பாயான் எனற்பாலது பையானெனக் குறுகிப் போ–யாயிற்று. ஆத்தும விகாரமான அகங்காரம் போம்படி என்னறிவில் எதிர்ப்பட்டவன் கயிலாய மலையைத் திருவுள்ளத்தடைத்து எழுந்தருளி யிருந்து ஆத்துமாக்களை இரக்ஷியாநின்ற விசேஷத்தையுடையவனென்றேத்தும் சட்சமயங்களுக்கும் அவரவர்கொண்ட பயனாயுள்ளவன். நேரி எனற்பாலது நெரி எனக் குறுகிநின்றது. பத்துத்தலையுள்ள இராவணன் முரியும்படி திருவிரலாலடர்த்தவன் யாரென்னில், சண்பை என்னும் திருப்பதியிலே வீற்றிருக்கும் கடவுள். |
| 1379. | காழி யானய னுள்ளவா காண்பரே<br>காழி யானய னுள்ளவா காண்பரே<br>காழி யானய னுள்ளவா காண்பரே<br>காழி யானய னுள்ளவா காண்பரே. | நிலைபெற்றுநின்ற நின்மலமாகிய சித்தத்தை யுடைய பத்தரிடத்துச் சத்தியப்பொருள் விளையும்பொருட்டு ஞானநட்டத்திலே அவர்களைக் கடாக்ஷிக்கின்றவன். திருமிடற்றில் கங்களமுடையானது கருணையை நினைத்து ஞானநட்டத்தையுடைய சிவஞானிகள் சிவனுக் கிச்சை தன்னடியார்க்கே ஆங்காரத்தைத் தடுக்குமதே பணியெனத் தமதறிவிலே கருதாநிற்பர். விஷ்ணுவும் பிர்மாவும், திருமுடியும் திருவடியும் காணும் பொருட்டு வராகமும் அன்னமுமாகக் கருதி வடிவுகொண்டார். ஐயோ! உள்ளபடி கருதிச் சிவனைப் பெறாமல் அவர் கருதியதேது எனில், அன்னியமே கண்டனர். கண் எனற்பாலது காண் என நீண்டது. என்பொருட்டால் காழி என்னும் திருப்பதியைப் படைத்தானை, என் ஐயனை, எனது ஆசையை, கீழ்ச்சொன்ன இருவர்களும் தாங்கள் தேடும் தேட்டப் பிரிவில் மயக்கத்திலே தேட்டமழித்துத் தோன்றா நிற்பவனைத் தேடி மறத்தலொழிந்து எவ்வாறு காண்பர். |

| | | |
|---|---|---|
| 1380. | கொச்சையண் யலைக்கூட கிலாருடன் மூடரே<br>கொச்சையண் யலைக்கூட கிலாருடன் மூடரே<br>கொச்சையண் யலைக்கூட கிலாருடன் மூடரே<br>கொச்சையண் யலைக்கூட கிலாருடன் மூடரே. | ஆணவமலத்தோடு கூடியுள்ள மயக்கத்துடன் மாறுபட்டோர்கள் மாயாதனுவாலும் மந்திர தனுவாலும் மறைக்கப்படார்கள். மூடார் எனற்பாலது மூடர் எனக் குறுகி நின்றது. புலால் நாற்றத்தைப் பொருந்திய அழுக்குமெய்யைப் பொய்யென்று மனங்கொள்ள மாட்டாமல் அதுவே தமது நிலைபெற்றவுருவாக நினைத்துத் துவராடையாலே உடம்பைச் சூழப்பட்ட பௌத்தரும், பேதைத் தன்மையையுடைய மச்சிய கந்தியினுடைய நலத்தைக் கொள்ளும் பொருட்டு அவளது சரீரம் எல்லாம் சுகந்தமொய்க்கும்படி அவளுடனே பொருந்திய பராசரனாகிய மகாவிருடிவந்து சிவனைப் பொருந்தி அருச்சிக்கப்படுதலால் பராசர முனிவரால் பூசிக்கப்பட்டு அவன் பெயரால் பெயர் பெற்றுள்ள கொச்சை நகரம் என்னும் திருப்பதியிலே எழுந்தருளியிராநின்ற தலைமையோனை உள்ளபடி தரிசனம் பண்ணி வழிபடமாட்டார்களது நினைவு எவ்வாறிருக்கும் என்னில், மழைக்கா–ருளும் வெளிதென இருண்ட மயக்கத்தையுடைய ஆணவ போதமாயிருக்கும். |
| 1381. | கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை<br>கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை<br>கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை<br>கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை. | மிகுதிப்பட்ட தோஷமாயுள்ள சுக்கில சுரோணிதமாகிய இருவகை நீரின்கண்ணே சிர முதலாகிய அவயவமாகத் தோன்றிப் பூமியின்கண் செனித்துப் பரிணமித்துப் பின்பு தேய்ந்து மரிக்கின்ற சென்மத்தையும் பரிணமித்தல் – வேறுபடுதல், கீழ்ச் சொல்–ப்போந்த சென்மத்தையும் கழுவி மலத்திரயங்களையும் கழுவாநிற்கும், தனது பாதியாகிய திருவருளினாலே என்னை அகப்படுத்திக் கவளிகரித்துக் கொண்டு அந்த அருள்வழியாக எனதிடத்தில் இடையறாமல் வாழும் தன்னை எனக்குத்தந்த அடிமை குலையாமல் எக்கண்ணும் விட்டு விளங்கும் கர்த்தர் பாதி எனற்பாலது பதி எனக் குறுகி நின்றது. மாயா மயக்கத்தின்கண்ணே மயங்கி பெத்த முத்தி இரண்டும் தெரியாமல் திண்டாடப்பட்ட மலபோதர்க்கு அமுதம் போன்று அரிதாயுள்ளவனுமாய் விட்டு விளங்கப்படாநின்ற பொன்னுருவையுடையவனாய்ச் சிருஷ்டிக்குக் கர்த்தாவாகிய பிரமனது சிரக்கபாலத்திலே பிச்சைகொண்டு நுகரும் கருணையாளனே! திருக்கழுமலம் என்னும் மூவாப் பழங்கிழமைப் பன்னிரு பெயர்பெற்ற அனாதிமூலமாகிய பதியிடத்துக் கவுணிய கோத்திரத்திலே தோன்றப்பட்ட யான் நிவேதிக்கப்படும் காட்டாகிய இப்பாடலைக் கீழ்ச்சொன்னவற்றிலும் மலத்திரயங்களிலும் அழுந்தாநின்ற ஒருத்தராகிலும் பலராகிலும் உரை செய்வார் உயர்ந்தாரேயாதலால் இப்பாடலை இடைவிடாமல் உரைசெய்வீராக. காட்டு என்பது கட்டு எனக் குறுகி நின்றது. |

## 128. திருப்பிரமபுரம்

பண் : வியாழக்குறிஞ்சி திருவெழுகூற்றிருக்கை முதல் திருமுறை பதிக எண் : 128

1382. ஒருரு வாயினை மானாங் காரத்
தீரியல் பாயொரு விண்முதல் பூதலம்
ஒன்றிய விருசுட ரும்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை
இருவரோ டொருவ னாகி நின்றனை.

ஓரா னீழ லொண்கழ -ரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி
காட்டினை நாட்ட மூன்றாகக் கோட்டினை
இருநதி யரவமோ டொருமதி சூடினை
ஒருதா ளீரயின் மூவிலைச் சூலம்

நாற்கான் மான்மறி யைந்தலை யரவம்
ஏந்தினை காய்ந்த நால்வாய் மும்மதத்
திருகோட் டொருகரி யீடழித் துரித்தனை
ஒருதனு விருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானில மஞ்சக்

கொன்று தலத்துற வவுணரை யறுத்தனை
ஐம்புல னாலா மந்தக் கரணம்
முக்குண மிருவளி யொருங்கிய வானோர்
ஏத்த நின்றனை யொருங்கிய மனத்தோ
டிருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து

நான்மறை யோதி யைவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை
அறுபத முரலும் வேணுபும் விரும்பினை

இக-ய மைந்துணர் புக- யமர்ந்தனை
பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு விளங்கினை
பாணிமூ வுலகும் புதையமேன் மிதந்த
தோணிபுரத் துறைந்தனை தொலையா விருநிதி
வாய்ந்த பூந்தரா யேய்ந்தனை

வரபுர மொன்றுணர் சிரபுரத் துறைந்தனை
ஒருமலை யெடுத்த விருதிற லரக்கன்
விறல்கெடுத் தருளினை புறவம் புரிந்தனை
முந்நீர்த் துயின்றோ னான்முக னறியாப்
பண்பொடு நின்றனை சண்பை யமர்ந்தனை

சொரூப நிலையில் விளங்கும் பரசிவம் ஆகிய நீ உனது இச்சையால் ஐந்தொழில்களை நிகழ்த்த வேண்டி எடுத்துக் கொண்ட ஒருருவமாகிய திருமேனியை உடையை ஆயினை.

உன் சக்தியைக் கொண்டு அவ் ஐந்தொழில்களை நடத்தும் திருவுளக் குறிப்போடு சத்தி சிவம் என்னும் இரு உருவாயினை.

விண் முத-ய பூதங்களையும் சந்திர - சூரியர்களையும் தேவர்கள் மக்கள் முத-யோரையும் படைத்துக் காத்து அழிக்க அயன் அரி அரன் என்னும் மும்மூர்த்திகள் ஆயினை.

பிரமன் திருமால் ஆகிய இருவரையும் வலத்திலும் இடத்திலும் அடக்கி ஏக மூர்த்தியாக நின்றாய்.

ஒப்பற்ற கல்லால மர நிழ-ல் உனது இரண்டு திருவடிகளை முப்பொழுதும் ஏத்திய சனகர், சனந்தனர் முத-ய நால்வர்க்கு ஒளிநெறியைக் காட்டினாய்.

சூரியன் சந்திரன் அக்கினி ஆகியோரை மூன்று கண்களாகக் கொண்டு உலகை விழுங்கிய பேரிருளை ஓட்டினாய்.

கங்கையையும் பாம்பையும் பிறைமதியையும் முடிமிசைச் சூடினாய்.

ஒரு தாளையும் ஈருகின்ற கூர்மையையும் முத்தலைகளையும் உடைய சூலத்தையும் நான்கு கால்களையும் உடைய மான் கன்று ஐந்து தலை அரவம் ஆகியவற்றையும் ஏந்தினாய்.

சினந்து வந்த, தொங்கும் வாயையும் இரு கோடுகளையும் கொண்ட ஒப்பற்ற யானையை அதன் வ- குன்றுமாறு அழித்து அதன் தோலை உரித்துப் போர்த்தாய்.

ஒப்பற்ற வில்-ன் இருதலையும் வளையுமாறு செய்து கணை தொடுத்து முப்புரத்தசுரர்களை இவ்வுலகம் அஞ்சுமாறு கொன்று தரையில் அவர்கள் இறந்துகிடக்குமாறு அழித்தாய்.

ஐம்புலன்கள் நான்கு அந்தக் கரணங்கள், முக்குணங்கள் இரு வாயுக்கள் ஆகியவற்றை ஒடுக்கியவர்களாய் தேவர்கள் ஏத்த நின்றாய்.

ஐயுறு மமணரு மறுவகைத் தேரரும்
ஊழியு முணராக் காழி யமர்ந்தனை
எச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை
ஆறு பதமு மைந்தமா் கல்வியும்
மறைமுத னான்கும்

மூன்று காலமுந் தோன்ற நின்றனை
இருமையி னொருமையு மொருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணிய னறியும்

அனைய தன்மையை யாத– னின்னை
நினைய வல்லவ ரில்லைநீ ணிலத்தே.

ஒருமித்த மனத்தோடு, இரு பிறப்பினையும் உணர்ந்து முச்சந்திகளிலும் செய்யத்தக்க கடன்களை ஆற்றி நான்மறைகளை ஓதி ஐவகை வேள்விகளையும் செய்து ஆறு அங்கங்களையும் ஓதி பிரணவத்தை உச்சரித்து தேவர்களுக்கு அவி கொடுத்து மழை பெய்விக்கும் அந்தணர் வாழும் பிரமபுரத்தை விரும்பினாய்.

ஆறுகால்களை உடைய வண்டுகள் இசைபாடும் பொழில் சூழ்ந்த வேணுபுரத்தை விரும்பினாய்.

தேவர்கள் புக–டம் என்று கருதி வாழ்ந்த புக–யை விரும்பினாய். நீர் மிகுந்த கடல் சூழ்ந்த வெங்குரு என்னும் தலத்தை விரும்பினாய். மூவுலகும் நீரில் அழுந்தவும் தான் அழுந்தாது மிதந்த தோணிபுரத்தில் தங்கினாய். வழங்கக் குறையாத செல்வ வளம் மிக்க பூந்தராயில் எழுந்தருளினாய். வரந்தருவதான சிரபுரத்தில் உறைந்தாய்.

ஒப்பற்ற கயிலை மலையைப் பெயர்த்த பெருந்திறல் படைத்த இராவணனின் வ–மையை அழித்தாய். புறவம் என்னும் தலத்தை விரும்பினாய். கட–டைத் துயிலும் திருமால் நான்முகன் ஆகியோர் அறிய முடியாத பண்பினை உடையாய். சண்பையை விரும்பினாய். ஐயுறும் சமணரும் அறுவகையான பிரிவுகளை உடைய புத்தரும் ஊழிக்காலம் வரை உணராது வாழ்நாளைப் பாழ் போக்கக் காழிப்பதியில் எழுந்தருளியுள்ளாய்.

வேள்வி செய்வோனாகிய ஏழிசையோன் வழிபட்ட கொச்சை வயத்தை விரும்பி வாழ்கின்றாய்.

ஆறு பதங்கள், ஐந்து வகைக் கல்வி, நால் வேதம், மூன்று காலம் ஆகியன தோன்ற நிற்கும் மூர்த்தியாயினாய்.

சத்தி சிவம் ஆகிய இரண்டும் ஒருருவமாய் விளங்கும் தன்மையையும் இவ்விரண்டு நிலையில் சிவமாய் ஒன்றாய் இலங்கும் தன்மையையும் உணர்ந்த குற்றமற்ற அந்தணாளர் வாழும் கழுமலம் என்னும் பழம்பதியில் தோன்றிய கவுணியன்குடித் தோன்றலாகிய ஞானசம்பந்தன் கட்டுரையை விரும்பிப் பிரமன் மண்டையோட்டில் உண்ணும் பெருமானே அறிவான். அத்தன்மையை உடைய நின்னை உள்ளவாறு அறிவார், நீண்ட இவ்வுலகிடை இனிப் பிறத்தல் இலர்.

## மேகராகக்குறிஞ்சி

இது குறிஞ்சிப் பெரும்பண்ணில் மூன்றாம் திறமாகிய பஞ்சுரத்தில் அருகியல் பண்ணாக 47 என்னும் எண் பெற்றது. இதை நாரத சங்கீத மகரந்தம் கூறும் மேகரஞ்சி எனவும் கொள்வர், அந்த நிலையில் இது ஔடவம் (ஐந்து சுரமே உள்ளது) எனப்படும்.

28–ஆவது மேளம் அரிகாம்போதியில் கிளைப்பது. இது இரவுப்பண் என்பர். இதன் சுவை உவகையும் மருட்கையும் ஆகும். இப்பண்ணில் சம்பந்தர் மட்டுமே பாடியுள்ளார். ஏனைய இருவரும் பாடவில்லை. சம்பந்தர் திருமுறை 1.129–135, ஏழு பதிகங்கள். புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி என்ற திருவையாற்றுப் பதிகம், அதேபோன்ற மெய்த்தாறு சுவையும் ஏழிசையும் என்ற முகுகுன்றம், அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று, ஆறாடு சடைமுடியன் என்ற பாடல்கள் இப்பண்ணுக்கு உரியன. இதன் பதிகங்கள் யாப்பினால் நால்வகையாய் இரண்டு கட்டளையாயுள்ளன. இதற்குரிய இராகம் மிகவும் சுகமாக தூங்க வைப்பதற்காக நீலாம்பரி இராகமாகும். பொதுவாகத் தாலாட்டுப் பாடுவது இந்த இராகமே. இந்த இராகம் பாடினால் மழையை வருவிக்கலாம் என்ற நம்பிக்கை உண்டு. ஒரு சமயம் திருவாவடுதுறை ஆதீன கர்த்தரொருவர் இராமநாதபுரம் போயிருந்தபோது மழையில்லாது துயருற்றிருந்த அந்நாட்டு மக்களுடைய துயருக்கிரங்கி, தம் அடியவர்களுடன் மேகராகக்குறிஞ்சி பாட விரைந்து மழை பெய்ததாம். இதற்கு ஒப்புகை செய்யத்தக்க ஓர் இசை இந்துஸ்தாணி சங்கீதத்தில் இல்லையாம்.

## 129. திருக்கழுமலம்

**பண் : மேகராகக்குறிஞ்சி** | **முதல் திருமுறை பதிக எண் : 129**

1383. சேவுயருந் திண்கொடியான் றிருவடியே
சரணென்று சிறந்தவன்பால்
நாவியலு மங்கையொடு நான்முகன்றான்
வழிபட்ட நலங்கொள்கோயில்
வாவிதொறும் வண்கமல முகங்காட்டச்
செங்குமுதம் வாய்கள்காட்டக்
காவியிருங் கருங்குவளை கருநெய்தல்
கண்காட்டுங் கழுமலமே.

விடைவடிவம் எழுதிய உயர்த்திய வ–மையான கொடியை உடைய சிவபிரானின் திருவடிகளே நமக்குச் சரண் என்று நாவின்கண் பொருந்திய கலைமகளோடு வந்து நான்முகன் சிறந்த அன்போடு வழிபட்ட அழகிய கோயில்; வாவிகள் தோறும் மலரும் வளவிய தாமரை மலர்கள் மகளிர்தம் முகங்களையும் செங்கழுநீர் மலர்கள் வாய்களையும், காவி மலர்கள், கருங்குவளை மலர்கள், கரிய நெய்தல் மலர்கள் ஆகியன கண்களையும் போலத் தோன்றி மலரும் கழுமலத்தின்கண் விளங்குவதாகும்.

1384. பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடுடைய
மலைச்செல்வி பிரியாமேனி
அருந்தகைய சுண்ணவெண்ணீ றலங்கரித்தா
னமரர்தொழ வமருங்கோயில்
தருந்தடக்கை முத்தழலோர் மனைகள்தொறு
மிறைவனது தன்மைபாடிக்
கருந்தடங்கண் ணார்கழல்பந் தம்மானைப்
பாட்டயருங் கழுமலமே.

அகன்ற விழிகளையும், பவளம் போலச் சிவந்த வாயையும் உடைய பெருமை மிக்க மலைமகளாகிய உமையம்மை பிரியாத திருமேனியில், அருமையான திருவெண்ணீற்றுப் பொடியை அழகுறப் பூசிய சிவபிரான் தேவர்கள் தன்னை வணங்க எழுந்தருளியுள்ள திருக்கோயில், வள்ளன்மையோடு விளங்கும் நீண்ட கைகளை உடைய முத்தீ வேட்கும் அந்தணர்களின் வீடுகள்தோறும் கரியவான பெரிய கண்களை உடைய மகளிர் இறைவனுடைய இயல்புகளைக் கூறிக்கொண்டு கழற்சிக்காய் அம்மானை பந்து ஆகியன ஆடி மகிழும் கழுமல நகரின் கண் உள்ளது.

| | |
|---|---|
| 1385. அலங்கன்ம– வானவருந் தானவரு<br>மலைகடலைக் கடையப்பூதங்<br>கலங்கவெழு கடுவிடமுண் டிருண்டமணி<br>கண்டத்தோன் கருதுங்கோயில்<br>விலங்கலமர் புயன்மறந்து மீன்சனிபுக்<br>கூன்ச–க்குங் காலத்தானுங்<br>கலங்க–லா மனப்பெருவண் கையுடைய<br>மெய்யர்வாழ் கழுமலமே. | மலர்மாலை அணிந்த தேவர்களும் அசுரர்களும் கூடி அலைகள் பொருந்திய திருப்பாற்கடலைக் கடைந்தபோது பூதங்களும் கலங்குமாறு எழுந்த கொடிய நஞ்சை, அவர்களைக் காத்தற் பொருட்டுத் தான் உண்டு, கரிய மணி போன்ற மிடற்றினன் ஆகிய சிவபிரான் தனது உறைவிடம் என்று மகிழ்வோடு நினையும் கோயில்; மலைகள் மீது தங்கி மழை பொழியும் மேகங்கள் மழை பொழிவதை மறத்தற்குரியதான மகர ராசியில் சனி புகுந்து உணவு கிடைக்காமல் மக்கள் உடல் இளைக்கும் பஞ்ச காலத்தில் மனம் கலங்காது பெரிய வள்ளன்மையோடு மக்களைக் காக்கும் உண்மையாளர் வாழும் கழுமலத்தின்கண் உள்ளது. |
| 1386. பாரிதனை ந–ந்தமரர் பயமெய்தச்<br>சயமெய்தும் பரிசுவெம்மைப்<br>போரிசையும் புரமூன்றும் பொன்றவொரு<br>சிலைவளைத்தோன் பொருந்துங்கோயில்<br>வாரிசைமென் முலைமடவார் மாளிகையின்<br>சூளிகைமேன் மகப்பாராட்டக்<br>காரிசையும் விசும்பியங்குங் கணங்கேட்டு<br>மகிழ்வெய்துங் கழுமலமே. | மண்ணுலக மக்களை வருத்தியும், தேவர்களை அஞ்சுமாறு செய்தும், வெற்றி பெறும் இயல்பினராய்க் கொடிய போரை நிகழ்த்தும் அவுணர்களின் முப்புரங்களும் அழிய ஒப்பற்ற வில்லை வளைத்த சிவபிரான் உறையும் கோயில்; கச்சணிந்த மென்மையான தனங்களை உடைய மகளிர் மாடவீடுகளின் உச்சியில் நின்று தம் குழந்தைகளைப் பாடிப் பாராட்டும் இசையை மேகங்கள் உலாவும் வானவெளியில் உலாவும் கந்தருவர்கள் கேட்டு மகிழும் கழுமல நகரில் உள்ளதாகும். |
| 1387. ஊர்கின்ற வரவமொளி விடுதிங்க<br>ளொடுவன்னி மத்தமன்னும்<br>நீர்நின்ற கங்கை நகு வெண்டலைசேர்<br>செஞ்சடையா னிகழுங் கோயில்<br>ஏர்தங்கி மலர்நிலவி யிசைவெள்ளி<br>மலையென்ன நிலவிநின்ற<br>கார்வண்டின் கணங்களாற் கவின்பெருகு<br>சுதைமாடக் கழுமலமே. | ஊர்ந்து செல்லும் அரவு, ஒளிவிடும் திங்கள், வன்னி, ஊமத்த மலர், நீர்வடிவான கங்கை, நகும் வெண்டலை ஆகியன சேர்ந்த செஞ்சடையை உடைய சிவபிரான் எழுந்தருளியுள்ள கோயில்; அழகு பொருந்திய வெள்ளி மலைகள் போல விளங்கி நிற்பனவும் மலர்களால் அலங்கரிக்கப் பெற்று அவற்றை மொய்க்கும் கரிய வண்டுகளின் கணங்களால் சூழப்பெற்றுக் கவின் மிகுவனவுமாய் வெண்மையான சுதையால் அமைந்த மாட வீடுகள் நிறைந்த கழுமல நகரில் |
| 1388. தருஞ்சரதந் தந்தருளென் றடிநினைந்து<br>தழலணைந்து தவங்கள்செய்த<br>பெருஞ்சதுரர் பெயலர்க்கும் பீடார்தோ<br>ழமையளித்த பெருமான்கோவில்<br>அரிந்தவய லரவிந்த மதுவுகுப்ப<br>வதுகுடித்துக் களித்துவாளை<br>கருஞ்சகட மிளகவளர் கரும்பிரிய<br>வகம்பாயுங் கழுமலமே. | மெஞ்ஞானியர்க்குத் தரும் உண்மை ஞானத்தை எங்கட்கும் தந்தருள் என்று திருவடிகளை நினைந்து, தீ நடுவில் நின்று தவம் செய்யும் பெரிய சதுரப்பாடு உடையவர்கட்கும் மழை நீரில் நின்று தவமியற்றுபவர்கட்கும் பெருமை மிக்க தோழமையை வழங்கியருளும் சிவபிரான் உறையும் கோயில்; நெல்லறுவடை செய்த வய–ல் முளைத்த தாமரை மலர்கள் தேனைச் சொரிய, அதனைக் குடித்துக் களித்த வாளை மீன்கள் வயற்கரைகளில் நிற்கும் பெரிய வண்டிகள் நிலைபெயரவும் கரும்புகள் ஒடியவும் துள்ளிப்பாயும் கழுமல |
| 1389. புவிமுதலைம் பூதமாய்ப் புலனைந்தாய்<br>நிலனைந்தாய்க் கரண நான்காய்<br>அவையவைசேர் பயனுருவா யல்லவுரு<br>வாய்நின்றா னமருங்கோயில் | மண், புனல் முத–ய பூதங்கள் ஐந்து. சுவை ஒளி முத–ய புலன்கள் ஐந்து. அவற்றுக்கு இடமாகிய மெய், வாய் முத–ய பொறிகள் ஐந்து. வாக்கு பாதம் முத–ய செய் கருவிகள் ஐந்து. மனம், புத்தி முத–ய உட்கருவிகள் நான்கு ஆகிய ஆன்ம தத்துவங்களாகவும், அவற்றின் பயனாகவும், உருவமாகவும் அருவமாகவும் நிற்கின்ற சிவபிரான் எழுந்தருளிய கோயில், |

| | | |
|---|---|---|
| | தவமுயல்வோர் மலர்பறிப்பத் தாழவிடு<br>கொம்புதைப்பக் கொக்கின்காய்கள்<br>கவணெறிகற் போற்சுனையிற் கரைசேரப்<br>புள்ளிரியுங் கழுமலமே. | தவம் செய்ய முயல்வோர் இறைவனை அருச்சிக்க மரங்களில் பூத்த மலர்களைப் பறித்துக் கொண்டு விடுத்த கொம்புகள் நிமிர்ந்து தாக்குதலால் மாமரத்தில் காய்த்த காய்கள் விண்டு கவணி–ருந்து வீசப்பட்ட கல்போல சுனைகளில் வீழ ஆங்குறைந்த பறவைகள் அஞ்சி அகலும் வளமான கழுமல வளநகரில் உள்ளதாகும். |
| 1390. | அடல்வந்த வானவரை யழித்துலகு<br>தெழித்துழலு மரக்கர்கோமான்<br>மிடல்வந்த விருபதுதோ ணெரியவிரற்<br>பணிகொண்டோன் மேவுங்கோயில்<br>நடவந்த வுழவரிது நடவொணா<br>வகைபரலாய்த் தென்றுதுன்று<br>கடல்வந்த சங்கீன்ற முத்துவயற்<br>கரைகுவிக்குங் கழுமலமே. | வ–மை பொருந்திய தேவர்கள் பலரை அழித்து உலகை அச்சுறுத்தித் திரிந்த அரக்கர் தலைவனாகிய இராவணனின் வ–மைமிக்க இருபது தோள்களையும் கால் விரலால் நெரிய ஊன்றி அவனைப் பணிகொண்ட சிவபிரான் எழுந்தருளியுள்ள கோயிலை உடையது, நாற்று நடவந்த உழவர்கள் இவை நாற்று நடுவதற்கு இடையூறாய்ப் பரற்கற்கள் போலத் தோன்றுகின்றனவே என்று கூறுமாறு கட–ன்கண் இருந்துவந்த சங்குகள் முத்துக்களை வயல்களில் ஈன்று குவிக்கும் கழுமலமாகும். |
| 1391. | பூமகள்தன் கோனயனும் புள்ளினொடு<br>கேழலுரு வாகிப்புக்கிட்<br>டாமளவுஞ் சென்றுமுடி யடிகாணா<br>வகைநின்றா னமருங்கோயில்<br>பாமருவுங் கலைப்புலவோர் பன்மலர்கள்<br>கொண்டணிந்து பரிசினாலே<br>காமனைகள் பூரித்துக் களிகூர்ந்து<br>நின்றேத்துங் கழுமலமே. | திருமகளின் கேள்வனாகிய திருமாலும், நான்முகனும் பன்றி உருவம் எடுத்தும், அன்னப்பறவை வடிவ மெடுத்தும், தேடப் புகுந்து தம்மால் ஆமளவு சென்று அடிமுடி காணாதவராய்த் தோற்று நிற்க, அழலுருவாய் ஓங்கி நின்ற சிவபிரான் எழுந்தருளிய கோயிலையுடையது. பல்வகைப் பாக்களில் அமைந்துள்ள அருங்கலைகளை அறிந்த புலவர்கள் பல மலர்களைக் கொண்டு அருச்சித்து முறையோடு விருப்பங்கள் நிறைவேறக்கண்டு களிகூர்ந்து போற்றும் கழுமல நகராகும். |
| 1392. | குணமின்றிப் புத்தர்களும் பொய்த்தவத்தை<br>மெய்த்தவமாய் நின்றுகையில்<br>உணன்மருவுஞ் சமணர்களு முணராத<br>வகைநின்றா னுறையுங்கோயில்<br>மணமருவும் வதுவையொ– விழவினொ–<br>யிவையிசைய மண்மேற்றேவர்<br>கணமருவு மறையினொ– கீழ்ப்படுக்க<br>மேற்படுக்குங் கழுமலமே. | நற்குணங்கள் இல்லாத புத்தர்களும், பொய்த் தவத்தை மெய்த்தவமாய் எண்ணிக் கையில் உணவேற்று உண்டு வாழும் சமணர்களும், அறிய முடியாதவாறு நின்ற சிவபிரான் உறையும் கோயிலை உடையது. ஆடவர் பெண்டிரை மணக்கும் திருமணத்தில் எழும் ஆரவாரமும், திருவிழாக்களின் ஓசையும், பூசுரர்களாகிய அந்தணர்கள் ஓதும் வேத ஒ–யை அடங்குமாறு செய்து மிகுந்து ஒ–க்கும் கழுமல நகராகும். |
| 1393. | கற்றவர்கள் பணிந்தேத்துங் கழுமலத்து<br>ளீசன்றன்கழன்மேனல்லோர்<br>நற்றுணையாம் பெருந்தன்மை ஞானசம்<br>பந்தன்றா னயந்துசொன்ன<br>சொற்றுணையோ ரைந்தினொடைந் திவைவல்லார்<br>தூமலராள் துணைவராகி<br>முற்றுலக மதுவாண்டு முக்கணா<br>னடிசேர முயல்கின்றாரே. | கற்றவர்களாலே பணிந்து வழிபடப்பெறும் கழுமலத்துள் விளங்கும் இறைவருடைய திருவடிகளின் மேல், நல்லோர்க்கு நற்றுணையாகும் பெருந்தன்மையையுடைய ஞானசம்பந்தன் விரும்பிப் போற்றிப் பாடிய, ஓதுவார்களுக்குத் துணையாய் அமைந்த சொற்களையுடைய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் வல்லவர், திருமகள் கேள்வராய் இவ்வுலகம் முழுவதையும் அரசாண்டு சிவனடி கூடும் முயற்சியைச் செய்கின்றவராவர். |

## 130. திருவையாறு

**பண் : மேகராகக்குறிஞ்சி** | **முதல் திருமுறை பதிக எண் : 130**

1394. புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக வஞ்சேலென்
றருள்செய்வா னமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகிர்பார்க்கும் திருவையாறே.

ஐம்புலன்களும் தத்தம் பொறிகளை விட்டு வழிமாறி அறிவழிந்து, கபம் மேற்பட மனம் சுழன்ற வருந்தும் இறுதிக் காலத்து, 'அஞ்சேல்' என்றுரைத்து அருள் செய்பவனாகிய சிவபிரான் அமரும் கோயிலை உடையது, நடனக்கலையில் வெற்றியுற்ற பெண்கள் நடனம் ஆட, அவ்வாடலுக்கேற்ற கூத்தொ–களை எழுப்பும் முழவுகள் அதிர, அவற்றைக் கண்டு அஞ்சிய சிலமந்திகள் வானத்தில் கேட்கும் இடியோசை என்றஞ்சி மனம் சுழன்று மரங்களில் ஏறி மேகங்களைப் பார்க்கும் திருவையாறாகும்.

---

1395. விடலேறு படநாக மரைக்கசைத்து
வெற்பரையன் பாவையோடும்
அடலேறொன் றதுவேறி யஞ்சொலீர்
ப–யென்னு மடிகள்கோயில்
கடலேறித் திரைமோதிக் காவிரியி
னுடன்வந்து கங்குல்வைகித்
திடலேறிச் சுரிசங்கஞ் செழுமுத்தங்
கீன்றலைக்குந் திருவையாறே.

கொல்லுதலாகிய குற்றம் பொருந்திய படத்தினையுடைய நாகத்தை இடையிற் கட்டி, மலையரையன் மகளாகிய பார்வதிதேவியோடு வ–மை பொருந்திய விடையேற்றின் மேல் ஏறி, அழகிய சொற்களைப் பேசும் மகளிரே! பிச்சையிடுங்கள் என்று கேட்டுச் சென்ற சிவபிரானது கோயிலையுடையது, வளைந்த மூக்கினையுடைய கடற்சங்குகள் கட–னின்றும் அலை வழியாக அதில் பாயும் காவிரியோடு வந்து இரவின்கண் திட–ல் ஏறித் தங்கிச் செழுமையான முத்துக்களை ஈன்று சஞ்சரிக்கும் திருவையாறாகும்.

---

1396. கங்காளர் கயிலாய மலையாளர்
கானப்பே ராளர்மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங்கோயில்
கொங்காளப் பொழினுழைந்து கூர்வாயா
–றகுலர்த்திக் கூதனீங்கிச்
செங்கானல் வெண்குருகு பைங்கான
–ரைதேருந் திருவையாறே.

சிறந்த பிரமன், திருமால் ஆகியோரின் முழு எலும்புக்கூட்டை அணிந்தவரும், கயிலாய மலையில் உறைபவரும், கானப்பேர் என்னும் தலத்தில் எழுந்தருளியவரும், மங்கை பங்கரும் முத்தலைச் சூலப்படை ஏந்தியவரும், விடை ஊர்தியை உடையவரும் ஆகிய சிவபிரானார் எழுந்தருளிய கோயிலை உடையது, சிவந்த கால்களையுடைய வெண்ணிறக் குருகுகள் தேன் நிறைந்த சோலைகளில் நுழைந்து கூரிய தம் அலகுகளால் தம் இறகுகளைக் கோதிக் குளிர் நீங்கிப் பசுமையான சோலைகளில் தமக்கு வேண்டும் இரைகளைத் தேடும் திருவையாறாகும்.

| | | |
|---|---|---|
| 1397. | ஊன்பாயு முடைதலைகொண் டூரூரின்<br>பலிக்குழல்வா ருமையாள்பங்கர்<br>தான்பாயும் விடையேறுஞ் சங்கரனார்<br>தழலுருவர் தங்குங்கோயில்<br>மான்பாய வயலருகே மரமேறி<br>மந்திபாய் மடுக்கள்தோறும்<br>தேன்பாய மீன்பாயச் செழுங்கமல<br>மொட்டலருந் திருவையாறே. | புலால் பொருந்தியதாய், முடைநாற்றமுடைத்தாய் உள்ள தலையோட்டைக் கையில் ஏந்தி, ஊர்கள்தோறும் பலியேற்று உழல்பவரும், உமை பாகரும், பாய்ந்து செல்லும் விடையேற்றை உடையவரும், நன்மைகளைச் செய்வதால் சங்கரன் என்ற பெயரை உடையவரும், தழல் உருவினருமாகிய சிவபிரான் எழுந்தருளிய கோயிலையுடையது, மான் துள்ளித் திரிய, வயலருகே உள்ள மரங்களில் ஏறி மந்திகள் பாய்வதால் மடுக்களில் தேன்பாய, அதனால் மீன்கள் துள்ளவும் செழுமையான தாமரை மொட்டுக்கள் அலரவும், விளங்குவதாகிய திருவையாறாகும். |
| 1398. | நீரோடு கூவிளமு நிலாமதியும்<br>வெள்ளெருக்கு நிறைந்தகொன்றைத்<br>தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த<br>தத்துவனார் தங்குங்கோயில்<br>காரோடி விசும்பளந்து கடிநாறும்<br>பொழிலணைந்த கமழ்தார்வீதித்<br>தேரோடு மரங்கேறிச் சேயிழையார்<br>நடம்பயிலுந் திருவையாறே. | கங்கைநதி, வில்வம், பிறைமதி, வெள்ளெருக்கு, கொன்றை மலர் நிறைந்த மாலை, குளிர்ந்த கரந்தை ஆகியவற்றைச் சடையின்கண் அணிந்த தத்துவனாகிய சிவபிரான் தங்கியுள்ள கோயிலையுடையது, மேகமண்டலம் வரை உயர்ந்து சென்று வானத்தை அளந்து மணம் பரப்பும் பொழில்கள் சூழ்ந்ததும், மணம் வீசும் வீடுகளை உடைய தேரோடும் வீதிகளில் அரங்குகளில் ஏறி அணிகலன்கள் புனைந்த இளம் பெண்கள் நடனம் ஆடுவதுமாகிய திருவையாறாகும். |
| 1399. | வேந்தாகி விண்ணவர்க்கு மண்ணவர்க்கு<br>நெறிகாட்டும் விகிர்தனாகிப்<br>பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த<br>புண்ணியனார் நண்ணுங்கோயில்<br>காந்தார மிசையமைத்துக் காரிகையார்<br>பண்பாடக் கவினார்வீதிக்<br>தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்<br>நடமாடுந் திருவையாறே. | அனைத்துலகங்களுக்கும் வேந்தனாய், விண்ணவர்களுக்கும், மண்ணவர்களுக்கும் வழி காட்டும் வள்ளலாய், மணங்கமழும் கொன்றை மாலையைச் சடையின்மிசை அணிந்தவனாய் புண்ணிய வடிவினனாய் விளங்கும் சிவபிரான் எழுந்தருளிய கோயிலையுடையது, மகளிர் காந்தாரப் பண்ணமைத்து இசைபாட அழகிய வீதிகளில் அமைந்த அரங்கங்களில் ஏறி அணிகலன்கள் பூண்ட இளம் பெண்கள் தேம், தாம் என்ற ஒலிக் குறிப்போடு நடனம் ஆடும் திருவையாறாகும். |
| 1400. | நின்றுலா நெடுவிசும்பு னெருக்கிவரு<br>புரமூன்று நீள்வாயம்பு<br>சென்றுலாம் படிதொட்ட சிலையாளி<br>மலையாளி சேருங்கோயில்<br>குன்றெலாங் குயில்கூவக் கொழும்பிரச<br>மலர்பாய்ந்து வாசமல்கு<br>தென்றலா ரடிவருடச் செழுங்கரும்பு<br>கண்வளருந் திருவையாறே. | நீண்ட வானவெளியில் நின்று உலவி, தேவர்கள் வாழ்விடங்களை அழித்துவந்த முப்புரங்களையும், நீண்ட கூரிய அம்பு சென்று உலவும்படி கணை தொடுத்த வில்லாளியும், கயிலைமலை ஆளியுமாகிய சிவபிரான் சேர்ந்துறையும் கோயிலையுடையது, சிறுமலைகளில் குயில்கள் கூவவும், செழுமையான தேன் நிறைந்த மலர்களைத் தீண்டி மணம் மிகுந்து வருவதாகிய தென்றல் காற்று அடிவருடவும், அவற்றால் செழுமையான கரும்புகள் கண் வளரும் வளமுடைய திருவையாறாகும். |

| | | |
|---|---|---|
| 1401. | அஞ்சாதே கயிலாய மலையெடுத்த<br>வரக்கர்கோன் றலைகள்பத்தும்<br>மஞ்சாடு தோணெரிய வடர்த்தவனுக்<br>கருள்புரிந்த மைந்தர்கோயில்<br>இஞ்சாய –ளந்தெங்கின் பழம்வீழ<br>விளமேதி யிரிந்தங்கோடிச்<br>செஞ்சா–க் கதிருழக்கிச் செழுங்கமல<br>வயல்படியுந் திருவையாறே. | அஞ்சாமல் கயிலை மலையை எடுத்த அரக்கர் தலைவனாகிய இராவணனின் தலைகள் பத்தையும் வ–மை பொருந்திய அவன் தோள்களோடு நெரியுமாறு அடர்த்துப் பின் அவனுக்கு அருள்புரிந்த சிவபிரான் எழுந்தருளிய கோயிலை உடையது. இனிய தோற்றத்தையுடைய இளந்தென்னையில் காய்ந்த நெற்று விழ, அதனைக் கண்டு அஞ்சிய எருமை இளங்கன்று அஞ்சி ஓடி செந்நெற்கதிர்களைக் காலால் மிதித்துச் செழுமையான தாமரைகள் களையாகப் பூத்த வயல்களில் படியும் திருவையாறாகும். |
| 1402. | மேலோடி விசும்பணவி வியனிலத்தை<br>மிகவகழ்ந்து மிக்குநாடும்<br>மாலோடு நான்முகனு மறியாத<br>வகைநின்றான் மன்னுங்கோயில்<br>கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்<br>குவிமுலையார் முகத்தினின்று<br>சேலோடச் சிலையாடச் சேயிழையார்<br>நடமாடுந் திருவையாறே. | அன்னமாய் மேலே பறந்து சென்று வானத்தைக் கலந்தும், அகன்ற நிலத்தை ஆழமாக அகழ்ந்தும் முயற்சியோடு தேடிய நான்முகன், திருமால் ஆகியோர் அறிய முடியாதவாறு ஓங்கி நின்ற சிவபிரான் உறையும் கோயிலையுடையது. கூத்தர்கள் கையில் வைத்து ஆட்டும் அபிநயக் கோலுடன் திரண்ட வளையல்களை அணிந்த மகளிர் கூத்தாட, திரண்ட தனங்களையுடைய அச்சேயிழையார் முகத்தில் கண்களாகிய சேல் மீன்கள் பிறழவும், வில் போன்ற புருவங்கள் மேலும் கீழும் செல்லவும், நடனமாடும் திருவையாறாகும். |
| 1403. | குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு<br>சாக்கியருங் குணமொன்றில்லா<br>மிண்டாடு மிண்டருரை கேளாதே<br>யாளாமின் மேவித்தொண்டீர்<br>எண்டோளர் முக்கண்ண ரெம்மீச<br>ரிறைவரினி தமருங்கோயில்<br>செண்டாடு புனற்பொன்னிச் செழுமணிகள்<br>வந்தலைக்குந் திருவையாறே. | இழிசெயல்களில் ஈடுபடுவோராய்ச் சிறிய ஆடையினராய்த் திரியும் சமணர்களும், சாக்கியர்களும் கூறும் நன்மை பயவாத சொற்களையும், வஞ்சனை பொருந்திய உரைகளையும், கேளாமல், தொண்டர்களே! நீவிர் சிவபிரானை அடைந்து அவருக்கு ஆட்படுவீர் களாக. எட்டுத் தோள்களையும், முக்குணங் களையும் உடைய எம் ஈசனாகிய இறைவன் இனிதாக எழுந்தருளியிருக்கும் கோயிலை யுடையது. பூக்களைச் செண்டுகள் போல் உருட்டி ஆட்டிக் கொண்டு வரும் நீர் நிறைந்த காவிரி செழுமையான மணிகளைக் கரையில் கொண்டு வந்து சேர்க்கும் திருவையாறு என்னும் தலமாகும். |
| 1404. | அன்னம– பொழில்புடைசூ ழையாற்றெம்<br>பெருமானை யந்தண்காழி<br>மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான<br>சம்பந்தன் மருவுபாடல்<br>இன்னிசையா –வைபத்து மிசையுங்கா<br>லீசனடி யேத்துவார்கள்<br>தன்னிசையோ டமருலகிற் றவநெறிசென்<br>றெய்துவார் தாழாதன்றே. | அன்னப் பறவைகள் நிறைந்த பொழில்கள் புடை சூழ்ந்து விளங்கும் திருவையாற்றுப் பெருமானை, அழகிய தன்மையான சீகாழிப் பதியில் வாழும் சிறப்புமிக்க, வேதங்கள் பயிலும் நாவினன் ஆகிய புகழ் வளரும் ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய பாடல்களாகிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதி, ஈசனடியை ஏத்துபவர்கள் புகழோடு தவநெறியின் பயனாக விளங்கும் அமரர் உலகத்தைத் தாழாமல் பெறுவர். |

# 131. திருமுதுகுன்றம்

பண் : மேகராகக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 131

| | |
|---|---|
| 1405. மெய்த்தாறு சுவையுமே ழிசையுமெண்<br>குணங்களும் விரும்புநால்வே<br>தத்தாலு மறிவொண்ணா நடைதெளியப்<br>பளிங்கேபோ லரிவைபாகம்<br>ஒத்தாறு சமயங்கட் கொருதலைவன்<br>கருதுமூ ருலவுதெண்ணீர்<br>முத்தாறு வெதிருதிர நித்திலம்வா<br>ரிக்கொழிக்கு முதுகுன்றமே. | மெய்யினால் அறியத்தக்கராகிய ஆறு சுவைகள் ஏழிசைகள், எண் குணங்கள், எல்லோராலும் விரும்பப் பெறும் நான்கு வேதங்கள் ஆகியவற்றால் அறிய ஒண்ணாதவனும், அன்போடு நடத்தலால் தெளியப் பெறுபவனும், பளிங்கு போன்றவனும், உமையம்மையை ஒரு பாகமாக உடையவனும், ஆறு சமயங்களாலும் மாறுபாடின்றி ஏற்றுக் கொள்ளப் பெறும் ஒரே தலைவனும் ஆகிய சிவபிரான் விரும்பும் ஊர், தெளிந்த நீர் நிறைந்த மணிமுத்தாறு மலையின்கண் உள்ள மூங்கில்கள் உதிர்க்கும் முத்துக்களை வாரிக் கொணர்ந்து கரையிற் கொரிக்கும் திருமுதுகுன்றமாகும். |
| 1406. வேரிமிகு குழ–யொடு வேடுவனாய்<br>வெங்கானில் விசயன்மேவு<br>போரின்மிகு பொறையளந்து பாசுபதம்<br>புரிந்தளித்த புராணர்கோயில்<br>காரின்ம– கடிபொழில்கள் கனிகள்பல<br>மலருதிர்த்துக் கயமுயங்கி<br>மூரிவளங் கிளர்தென்றல் திருமுன்றிற்<br>புகுந்துலவு முதுகுன்றமே. | தேன் மணம் மிகும் கூந்தலையுடைய உமையம்மையோடு வேட்டுவர் உருவந்தாங்கி அருச்சுனன் தவம் புரியும் கொடிய கானகத்திற்குச் சென்று அவனோடு போர் உடற்றி அவன் பொறுமையை அளந்து அவனுக்குப் பாசுபதக் கணையை விரும்பி அளித்த பழையோனாகிய சிவபிரான் உறையும் கோயில், மழையால் செழித்த மணமுடைய சோலைகளில் கனிகளையும் பல மலர்களையும் உதிர்த்து, நீர் நிலைகளைப் பொருந்தி வ–ய வளமுடைய தென்றல் காற்று அழகிய வீடுகள் தோறும் புகுந்து உலவும் திருமுதுகுன்றமாகும். |
| 1407. தக்கனது பெருவேள்விச் சந்திரனிந்<br>திரனெச்ச னருக்கனங்கி<br>மிக்கவிதா தாவினொடும் விதிவழியே<br>தண்டித்த விமலர்கோயில்<br>கொக்கினிய கொழும்வருக்கை கத–கமு<br>குயர்தெங்கின் குலைகொள்சோலை<br>முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா<br>நீள்வயல்சூழ் முதுகுன்றமே. | தக்கன் செய்த பெருவேள்வியில் சந்திரன், இந்திரன், எச்சன், சூரியன், அனலோன், பிரமன் முத–யவர்களை வீரபத்திரனைக் கொண்டு தண்டித்த விமலனாகிய சிவபெருமான் உறையும் கோயில், இனிய மாங்கனிகள், வளமான பலாக்கனிகள், வாழைக் கனிகள் ஆகிய முக்கனிகளின் சாறு ஒழுகிச் சேறு உலராத நீண்ட வயல்களும் குலைகளையுடைய கமுகு, தென்னை ஆகிய மரங்கள் நிறைந்த சோலைகளும் சூழ்ந்த திருமுதுகுன்றமாகும். |
| 1408. வெம்மைமிகு புரவாணர் மிகைசெய்ய<br>விறலழிந்து விண்ணுளோர்கள்<br>செம்மலரோ னிந்திரன்மால் சென்றிரப்பத்<br>தேவர்களே தேரதாக<br>மைம்மருவு மேருவிலு மாசுணநா<br>ணரியெரிகால் வாளியாக<br>மும்மதிலு நொடியளவிற் பொடிசெய்த<br>முதல்வனிட முதுகுன்றமே. | கொடுமை மிகுந்து முப்புரங்களில் வாழும் அவுணர்கள் தீங்கு செய்ய அதனால் தங்கள் வ–மை அழிந்து தேவர்களும், பிரமனும், இந்திரனும், திருமாலும் சென்று தங்களைக் காத்தருளுமாறு வேண்ட, தேவர்களைத் தேராகவும், மேகங்கள் தவழும் உயர்ச்சியையுடைய மேருமலையை வில்லாகவும், வாசுகி என்னும் பாம்பை நாணாகவும், திருமால், அனலோன், வாயுவாகிய முத்தேவர்களையும் அம்பாகவும் கொண்டு அவுணர்களின் மும்மதில்களையும் ஒரு நொடிப் பொழுதில் பொடி செய்த தலைவனாகிய சிவபிரானது இடம், திருமுதுகுன்றமாகும். |

| | | |
|---|---|---|
| 1409. | இழைமேவு கலையல்கு லேந்திழையா<br>ளொருபாலா ளொருபாலெள்கா<br>துழைமேவு முரியுடுத்த வொருவனிருப்<br>பிடமென்ப ரும்பரோங்கு<br>கழைமேவு மடமந்தி மழைகண்டு<br>மகவினொடும் புகவொண்கல்–ன்<br>முழைமேவு மால்யானை யிரைதேரும்<br>வளர்சாரன் முதுகுன்றமே. | மேகலை என்னும் அணிகலன் பொருந்திய அல்குலையும், அழகிய முத்துவடம் முத–யன அணிந்த மேனியையும் உடையவளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு தனக்குரியதான ஒரு பாகத்தே மான்தோலை இகழாது உடுத்த ஒப்பற்றவனாகிய சிவபிரானது இருப்பிடம், ஊரின் நடுவே உயர்ந்த மூங்கில்மேல் ஏறி அமர்ந்த மடமந்தி, மழை வருதலைக் கண்டு அஞ்சித் தன் குட்டியோடும், ஒ– சிறந்த மலக்குகைகளில் ஒடுங்குவதும், பெரிய யானைகள் இரை தேர்ந்து திரிவதும் நிகழும் நீண்ட சாரலையுடைய திருமுதுகுன்றமாகும். |
| 1410. | நகையார்வெண் டலைமாலை முடிக்கணிந்த<br>நாதனிடம் நன்முத்தாறு<br>வகையாரும் வரைப்பண்டங் கொண்டிரண்டு<br>கரையருகு மறியமோதித்<br>தகையாரும் வரம்பிடறிச் சா–கழு<br>நீர்குவளை சாயப்பாய்ந்து<br>முகையார்செந் தாமரைகண் முகமலர<br>வயல்தழுவு முதுகுன்றமே. | சிரித்தலைப் பொருந்திய வெண்மையான தலை மாலையை முடியில் அணிந்துள்ள நாதனாகிய சிவபிரானது இடம், நல்ல மணிமுத்தாறு வகை வகையான மலைபடு பொருள்களைக் கொண்டு நெல், கழுநீர், குவளை ஆகியன சாயுமாறு பாய்ந்து வந்து, தாமரை மொட்டுக்கள் முகம் மலரும்படி வயலைச் சென்றடையும் திருமுதுகுன்றமாகும். |
| 1411. | அறங்கிளரு நால்வேத மா–ன்கீ<br>ழிருந்தருளி யமரர்வேண்ட<br>நிறங்கிளர்செந் தாமரையோன் சிரமைந்தி<br>னொன்றறுத்த நிமலர்கோயில்<br>திறங்கொண்மணித் தரளங்கள் வரத்திரண்டங்<br>கெழிற்குறவர் சிறுமிமார்கள்<br>முறங்களினாற் கொழித்துமணி செலவிலக்கி<br>முத்துலைப்பெய் முதுகுன்றமே. | அறநெறி விளங்கித் தோன்றும் நான்கு வேதங்களை ஆ–ன்கீழ் இருந்து சனகாதியர்க்கு அருளி, தேவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி, செந்நிறம் விளங்கும் தாமரையில் எழுந்தருளிய பிரமனின் ஐந்து தலைகளில் ஒன்றைக் கொய்த நிமலனாகிய சிவபிரானது கோயில், முற்றிய மாணிக்கங்கள், முத்துக்கள் ஆகியன ஆற்றில் வருதலைக் கண்டு அழகிய குறவர் குடிப் பெண்கள் திரண்டு சென்று அவற்றை முறங்களால் வாரி மணிகளை விலக்கிப் புடைத்து முத்துக்களை அரிசியாக உலையில் பெய்து சிற்றில் இழைத்து விளையாடி மகிழும் திருமுதுகுன்றமாகும். |
| 1412. | கதிரொளிய நெடுமுடிபத் துடையகட<br>–லங்கையர்கோன் கண்ணும்வாயும்<br>பிதிரொளிய கனல்பிறங்கப் பெருங்கயிலை<br>மலையைநிலை பெயர்த்தஞான்று<br>மதிலளகைக் கிறைமுரல மலரடியொன்<br>றூன்றிமறை பாடவாங்கே<br>முதிரொளிய சுடர்நெடுவாண் முன்னீந்தான்<br>வாய்ந்தபதி முதுகுன்றமே. | கதிரவன் போன்ற ஒளியுடைய நீண்ட மகுடங்களைச் சூடிய பத்துத் தலைகளையுடைய இராவணன் கண்களும், வாயும், ஒளிபரவும் தீ வெளிப்படச் சினங்கொண்டு பெரிய கயிலாய மலையை நிலைபெயர்த்த காலத்து, மதில்கள் சூழ்ந்த அளகாபுரிக்கு இறைவனாகிய குபேரன் மகிழுமாறு, மலர்போன்ற தன் திருவடி ஒன்றை ஊன்றி அவ் இராவணனைத் தண்டித்துப் பின் அவன் மறைபாடித் துதித்த அளவில் அவனுக்கு மிக்க ஒளியுள்ள நீண்ட வாளை முற்படத் தக்க சிவபிரான் எழுந்தருளிய பதி திருமுது குன்றமாகும். |

| | | |
|---|---|---|
| 1413. | பூவார்பொற் றவிசின்மிசை யிருந்தவனும்<br>பூந்துழாய் புனைந்தமாலும்<br>ஓவாது கழுகேன மாயுயர்ந்தாழ்ந்<br>துறநாடி யுண்மைகாணாத்<br>தேவாருந் திருவுருவன் சேருமலை<br>செழுநிலத்தை மூடவந்த<br>மூவாத முழங்கொ—நீர் கீழ்தாழ<br>மேலுயர்ந்த முதுகுன்றமே. | தாமரை மலராகிய அழகிய தவிசின்மிசை விளங்கும் பிரமனும், அழகிய துளசிமாலை அணிந்த திருமாலும், அன்னமாகவும், பன்றியாகவும் உருமாறி வானில் பறந்தும், நிலத்தை அகழ்ந்தும் இடைவிடாது தேடியும் உண்மை காண இயலாத தெய்வ ஒளி பொருந்திய திருவுருவை உடையவனாகிய சிவபிரான் எழுந்தருளிய மலை, ஊழிக் காலத்து உலகத்தை மூடுமாறு முழங்கி வந்த கடல்நீர் கீழ்ப்படத் தான் மேல் உயர்ந்து தோன்றும் திருமுதுகுன்றமாகும். |
| 1414. | மேனியிற்சீ வரத்தாரும் விரிதருகாட்<br>டுடையாரும் விரவலாகா<br>ஊனிகளா யுள்ளார்சொற் கொள்ளாது<br>முள்ளுணர்ந்தங் குய்மின்றொண்டீர்<br>ஞானிகளா யுள்ளார்க ணான்மறையை<br>முழுதுணர்ந்தைம் புலன்கள்செற்று<br>மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து<br>தவம்புரியு முதுகுன்றமே. | உடம்பில் துவராடை புனைந்த புத்த மதத்தினரும், விரிந்த ஓலைத் தடுக்கை உடையாகப் பூண்ட சமணர்களும், நட்புச் செய்து கோடற்கு ஏலாதவராய்த் தங்கள் உடல் வளர்த்தலையே குறிக்கோளாக உடைய ஊனிகளாவர். அவர்கள் சொற்களைக் கேளாது ஞானிகளாக உள்ளவர் களும், நான்மறைகளை உணர்ந்தவர்களும், ஐம்புலன்களை வென்ற மௌனிகளும், முனிவர்களாகிய செல்வர்களும், தனித்திருந்து தவம் புரியும் திருமுதுகுன்றை உள்ளத்தால் உணர்ந்து, தொண்டர்களே! உய்வீர்களாக. |
| 1415. | முழங்கொ—நீர் முத்தாறு வலஞ்செய்யு<br>முதுகுன்றத் திறையைமூவாப்<br>பழங்கிழமைப் பன்னிருபேர் படைத்துடைய<br>கழுமலமே பதியாக்கொண்டு<br>தழங்கெரிமூன் றோம்புதொழிற் றமிழ்ஞான<br>சம்பந்தன் சமைத்தபாடல்<br>வழங்குமிசை கூடும்வகை பாடுமவர்<br>நீடுலக மாள்வார்தாமே. | ஆரவாரத்தோடு நிறைந்துவரும் மணிமுத்தாறு வலஞ்செய்து இறைஞ்சும் திருமுதுகுன்றத்து இறைவனை, முதுமையுறாததாய்ப் பழமையாகவே பன்னிரு பெயர்களைக் கொண்டுள்ள கழுமலப் பதியில் முத்தீ வேட்கும் தொழிலையுடைய தமிழ் ஞானசம்பந்தன் இயற்றிய இப்பதிகப் பாடல்களைப் பொருந்தும் இசையோடு இயன்ற அளவில் பாடி வழிபடுபவர் உலகத்தை நெடுங்காலம் ஆள்வர். |

## 132. திருவீழிமிழலை

**பண் : மேகராகக்குறிஞ்சி** **முதல் திருமுறை பதிக எண் : 132**

| | | |
|---|---|---|
| 1416. | ஏரிசையும் வடவா—ன் கீழிருந்தாங்<br>கீரிருவர்க் கிரங்கிநின்று<br>நேரியநான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர்<br>நெறியளித்தோ னின்றகோயில்<br>பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்<br>பயின்றோது மோசைகேட்டு<br>வேரிம— பொழிற்கிள்ளை வேதங்கள்<br>பொருட்சொல்லு மிழலையாமே. | அழகிய வடவால மரத்தின்கீழ் வீற்றிருந்து சனகாதி முனிவர்களுக்குக் கருணையோடு நேரிய நால்வேதங்களின் உண்மைப் பொருளை உரைத்து அவர்கட்குச் சிவஞானநெறி காட்டியருளிய சிவபிரானது கோயில், நிலவுலகில் வாழும் வேதப் புலவர்கள் பல நாள்களும் தம்மிடம் பயிலும் மாணவர்களுக்கு வேதம் பயிற்றுவிப்பதைக் கேட்டுத் தேன் நிறைந்த பொழில்களில் வாழும் கிளிகள் நாள்தோறும் வேதங்களுக்குப் பொருள் சொல்லும் சிறப்பினதாய திருவீழிமிழலை ஆகும். |

| | | |
|---|---|---|
| 1417. | பொறியரவ மதுசுற்றிப் பொருப்பேமத்<br>தாகப்புத் தேளிர்கூடி<br>மறிகடலைக் கடைந்திட்ட விடமுண்ட<br>கண்டத்தோன் மன்னுங்கோயில்<br>செறியிதழ்த்தா மரைத்தவிசிற் றிகழ்ந்தோங்கு<br>மிலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்<br>வெறிகதிர்ச்சா மரையிரட்ட விளவன்னம்<br>வீற்றிருக்கும் மிழலையாமே. | தேவர்கள் அனைவரும் கூடி மந்தரமலையை மத்தாக நாட்டி உட–ல் புள்ளிகளை உடைய வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகச் சுற்றிச் சுருண்டு விழும் அலைகளை உடைய கடலைக் கடைந்த காலத்து எழுந்த நஞ்சினை உண்ட கண்டத்தை உடையவனாகிய சிவபிரான் உறையும் கோயில், செறிந்த இதழ்களை உடைய தாமரை மலராகிய இருக்கையில் விளங்கும், தாமரை இலையாகிய குடையின்கீழ் உள்ள இள அன்னம், வய–ல் விளையும் செந்நெற் கதிர்களாகிய சாமரம் வீச வீற்றிருக்கும் திருவீழிமிழலையாகும். |
| 1418. | எழுந்துலகை ந–ந்துழலு மவுணர்கடம்<br>புரமூன்று மெழிற்கணாடி<br>உழுந்துருளு மளவையினொள் ளெரிகொளவெஞ்<br>சிலைவளைத்தோ னுறையுங்கோயில்<br>கொழுந்தரளம் நகைகாட்டக் கோகநகம<br>முகங்காட்டக் குதித்துநீர்மேல்<br>விழுந்தகயல் விழிகாட்ட விற்பவளம்<br>வாய்காட்டும் மிழலையாமே. | வானத்திற் பறந்து திரிந்து உலக மக்களை ந–வு செய்து உழன்ற அசுரர்களின் முப்புரங்களையும் அழகிய கண்ணாடியில், உளுந்து உருளக்கூடிய கால அளவிற்குள் ஒளி பொருந்திய தீப்பற்றி எரியுமாறு கொடிய வில்லை வளைத்தவனாகிய சிவபிரான் உறையும் கோயில், செழுமையான முத்துக்கள் மகளிரின் பற்களையும், தாமரைகள் முகங்களையும் துள்ளிக்குதித்து நீர்மேல் விழும் கயல்கள் கண்களையும் ஒளி பொருந்திய பவளங்கள் வாய்களையும் காட்டும் திருவீழிமிழலையாகும். |
| 1419. | உரைசேரு மெண்பத்து நான்குநூ<br>றாயிரமாம் யோனிபேதம்<br>நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா<br>யங்கங்கே நின்றான்கோயில்<br>வரைசேரு முகின்முழவ மயில்கள்பல<br>நடமாட வண்டுபாட<br>விரைசேர்பொன் னிதழிதர மென்காந்தள்<br>கையேற்கு மிழலையாமே. | நூல்களில் உரைக்கப் பெறும் எண்பத்துநான்கு லட்சம் பிறப்பு வேறுபாடுகளையும் முறையாகப் படைத்து, அவ்வவற்றின் உயிர்கட்கு உயிராய் அங்கங்கே விளங்கி நிற்போனாகிய சிவபிரான் உறையும் கோயில், மலைகளில் தங்கியுள்ள மேகங்கள் எழுந்து வந்து முழவுபோல ஒ–க்க, ஆண்மயில்கள் பல நடனமாட, வண்டுகள் பாட, பரிசிலாகக் கொன்றை மரங்கள் மணம் பொருந்திய மலர் இதழ்களாகிய பொன்னைத் தர மெல்–ய காந்தள் மலர்கள் கை போல விரிந்து அதனை ஏற்கும் திருவீழிமிழலையாகும். |
| 1420. | காணுமா றரியபெரு மானாகிக்<br>காலமாய்க் குணங்கண்மூன்றாய்ப்<br>பேணுமூன் றுருவாகிப் பேருலகம்<br>படைத்தளிக்கும் பெருமான்கோயில்<br>தாணுவாய் நின்றபர தத்துவனை<br>யுத்தமனை யிறைஞ்சீரென்று<br>வேணுவார் கொடிவிண்ணோர் தமைவிளிப்ப<br>போலோங்கு மிழலையாமே. | காண்டற்கரிய கடவுளாய், மூன்று காலங்களாய், மூன்று குணங்களாய் எல்லோராலும் போற்றப் பெறும் அரி, அயன், அரன் ஆகிய மும்மூர்த்திகளாய், பெரிதாகிய இவ்வுலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைப் புரியும் சிவபிரான் உறையும் கோயில், மூங்கில்களிற் கட்டிய நெடிய கொடிகள் நிலை பேறு உடையனவாய் நிற்கும் மேலான சிவபிரானாகிய, உத்தமனை, வந்து வழிபடுவீர்களாக என்று தேவர்களை அழைப்பன போல, அசைந்து ஓங்கி விளங்கும் திருவீழிமிழலையாகும். மூன்று உருவுக்கு ஏற்ப அழித்தல் வருவிக்கப்பட்டது. |

| | | |
|---|---|---|
| 1421. | அகனமர்ந்த வன்பினரா யறுபகைசெற்<br>றைம்புலனு மடக்கிஞானம்<br>புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்<br>துள்ளிருக்கும் புராணர்கோயில்<br>தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க்<br>கந்திகழச் சலசத்தீயுள்<br>மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட<br>மணஞ்செய்யு மிழலையாமே. | உள்ளத்தில் பொருந்திய அன்புடையவராய், காமம் முத–ய அறுபகைகளையும் கடிந்து, சுவை ஒளி முத–ய ஐம்புலன்களை அடக்கிச் சிவஞானத்தில் திளைத்திருப்பவர்களாகிய துறவிகளின் இதயத் தாமரையில் எழுந்தருளி விளங்கும் பழையோனாகிய சிவபிரான் உறையும் கோயில், மணிகளும் சங்கினங்களும் விளங்கும் தூயதான நீர் நிலைகளில் முளைத்த தாமரை மலராகிய தீயில் மிகுதியாக வளர்ந்த புன்க மரங்கள் பொரி போல மலர்களைத் தூவி, திருமண நிகழ்ச்சியை நினைவுறுத்திக் கொண்டிருப்பதாகிய திருவீழிமிழலையாகும். |
| 1422. | ஆறாடு சடைமுடிய னனலாடு<br>மலர்க்கைய னிமயப்பாவை<br>கூறாடு திருவுருவன் கூத்தாடுங்<br>குணமுடையோன் குளிருங்கோயில்<br>சேறாடு செங்கழுநீர்த் தாதாடி<br>மதுவுண்டு சிவந்தவண்டு<br>வேறாய வுருவாகிச் செவ்வழிநற்<br>பண்பாடும் மிழலையாமே. | கங்கையணிந்த சடைமுடியை உடையவனும், மலர் போன்ற கரத்தில் அனலை ஏந்தியவனும், இமவான் மகளாகிய பார்வதிதேவி தன் ஒரு கூறாக விளங்கத் திகழும் திருமேனியை உடையவனும், கூத்தாடும் குணமுடையவனும் ஆகிய சிவபிரான் மனங் குளிர்ந்து எழுந்துதருளியிருக்கும் கோயில், சேற்றில் முளைத்த செங்கழுநீர் மலர்களின் மகரந்தங்களில் படிந்து தேனையுண்டு, தன் இயல்பான நிறம் மாறிச் சிவந்த நிறம் உடையதாய்த் தோன்றும் வண்டு செவ்வழிப் பண்ணைப் பாடிக் களிக்கும் திருவீழிமிழலையாகும். |
| 1423. | கருப்பமிகு முடலடர்த்துக் காலூன்றிக்<br>கைமறித்துக் கயிலையென்னும்<br>பொருப்பெடுக்க லுறுமரக்கன் பொன்முடிதோள்<br>நெரித்தவிரற் புனிதர்கோயில்<br>தருப்பமிகு சலந்தரன்றா னுடல்தடிந்த<br>சக்கரத்தை வேண்டியீண்டு<br>விருப்பொடுமால் வழிபாடு செய்யவிழி<br>விமானஞ்சேர் மிழலையாமே. | கர்வம் மிகுந்த உடலை வருத்தி நெருங்கிச் சென்று காலை ஊன்றிக் கைகளை வளைத்துக் கயிலை என்னும் மலையைப் பெயர்த்தெடுக்க முற்பட்ட அரக்கனாகிய இராவணனின் பொன்முடி தரித்த தலைகளையும் தோள்களையும் நெரித்து அடர்த்த கால் விரலையுடைய தூயவராகிய சிவபிரானார் உறையும் கோயில், செருக்கு மிக்க சலந்தரன் என்னும் அவுணனது உடலைத் தடிந்த சக்கராயுதத்தைப் பெற விரும்பிப் பெரு விருப்போடு இவ்வுலகில் திருமால் வழிபாடு செய்ததும், வானி–ருந்து இழிந்த விமானத்தை உடையதுமாகிய திருவீழிமிழலையாகும். |
| 1424. | செந்தளிர்மா மலரோனுந் திருமாலும்<br>ஏனமோ டன்னமாகி<br>அந்தமடி காணாதே யவரேத்த<br>வெளிப்பட்டோ னமருங்கோயில்<br>புந்தியினான் மறைவழியே புற்பரப்பி<br>நெய்சமிதை கையிற்கொண்டு<br>வெந்தழ–ன் வேட்டுலகின் மிகவளிப்போர்<br>சேரூமூர் மிழலையாமே. | சிவந்த இதழ்களையுடைய பெரிய தாமரை மலரின்மேல் உறையும் பிரமனும், திருமாலும் அன்னமாகியும் பன்றியாகியும் முடியடிகளைக் காணாது தம் செருக்கழிந்து வழிபட அவர்கட்குக் காட்சி அளித்தோனாகிய சிவபிரான் அமரும் கோயில், தாங்கள் பெற்ற அறிவால் வேத விதிப்படி தருப்பைப் புற்களைப் பரப்பி நெய், சமித்து ஆகியவற்றைக் கையில் கொண்டு அழல் வளர்த்து வேள்வி செய்து உலகைக் காப்பவர்களாகிய அந்தணர்கள் சேரும் ஊராகிய திருவீழிமிழலையாகும். |

| | |
|---|---|
| 1425. எண்ணிறந்த வமணர்களு மிழிதொழில்சேர்<br>சாக்கியரு மென்றுந்தன்னை<br>நண்ணரிய வகைமயக்கித் தன்னடியார்க்<br>கருள்புரியு நாதன்கோயில்<br>பண்ணமரு மென்மொழியார் பாலகரைப்<br>பாராட்டு மோசைகேட்டு<br>விண்ணவர்கள் வியப்பெய்தி விமானத்தோ<br>டும்மிழியும் மிழலையாமே. | எண்ணற்ற சமணர்களும், இழிதொழில் புரியும் சாக்கியர்களும், எக்காலத்தும் தன்னை நெருங்க இயலாதவாறு அவர்கள் அறிவை மயக்கித் தன் அடியவர்களுக்கு அருள் புரியும் சிவபிரான் எழுந்தருளிய கோயில், பண்ணிசை போலும் மென்மொழி பேசும் மகளிர் தாங்கள் பெற்ற புதல்வர்களைப் பாராட்டும் தாலாட்டு ஓசை கேட்டு வியந்து, தேவர்கள் விமானங்களோடு வந்து இறங்கும் திருவீழிமிழலையாகும். |
| 1426. மின்னியலு மணிமாட மிடைவீழி<br>மிழலையான் விரையார்பாதம்<br>சென்னிமிசைக் கொண்டொழுகுஞ் சிவபுரக்கோன்<br>செழுமறைகள் பயிலுநாவன்<br>பன்னியசீர் மிகுஞான சம்பந்தன்<br>பரிந்துரைத்த பத்துமேத்தி<br>இன்னிசையாற் பாடவல்லா ரிருநிலத்தி<br>லீசனெனு மியல்பினோரே. | மின்னல் போலும் ஒளியுடைய மணிகள் இழைத்த மாட வீடுகள் செறிந்த திருவீழிமிழலை இறைவனின் மணம் கமழ்கின்ற திருவடிகளைச் சென்னிமிசைக் கொண்டு ஒழுகும் இயல்புடைய சிரபுர நகரின் தலைவனும், செழுமறை பயின்ற நாவினனும் பலர் போற்றும் சிறப்பு மிக்கவனுமாகிய ஞானசம்பந்தன் அன்பு கொண்டு பாடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் போற்றி இன்னிசையோடு பாட வல்லவர்கள் பெரிதான இந்நிலவுலகில் ஈசன் என்று போற்றும் இயல்புடையோராவர். |

## 133. திருக்கச்சியேகம்பம்

பண் : மேகராகக்குறிஞ்சி — முதல் திருமுறை பதிக எண் : 133

| | |
|---|---|
| 1427. வெந்தவெண் பொடிப்பூசு மார்பின்விரி<br>நூலொருபால் பொருந்தக்<br>கந்தமல்கு குழ–யோடுங் கடிபொழிற்<br>கச்சி தன்னுள்<br>அந்தமில் குணத்தா ரவர்போற்ற<br>வணங்கினொ டாடல்புரி<br>எந்தை மேவிய வேகம்பந்<br>தொழுதேத்த விடர்கெடுமே. | அன–டை நன்றாக வெந்த வெண்மையான திருநீற்றைப் பூசியுள்ள மார்பின்கண் விரிந்த பூணூல் ஒருபால் விளங்கித் தோன்ற, மணங்கமழும் கூந்த–னையுடைய உமையம்மை யோடும், விளங்கும் பொழில்களால் சூழப்பட்ட கச்சி என்னும் தலத்துள் எல்லையற்ற குணங்களையுடைய அடியவர்கள் போற்ற நடனம் செய்யும் எந்தையாகிய சிவபெருமான் எழுந்தருளிய ஏகம்பம் என்னும் திருக்கோயிலைத் தொழுது போற்ற நம் இடர் கெடும். |
| 1428. வரந்திகழு மவுணர் மாநகர்மூன்<br>றுடன்மாய்ந் தவியச்<br>சரந்துரந் தெரிசெய்த தாழ்சடைச்<br>சங்கரன் மேயவிடம்<br>குருந்த மல்–கை கோங்குமா<br>தவிநல்ல குராமரவம்<br>திருந்துபைம் பொழிற்கச்சி யேகம்பஞ்<br>சேர விடர்கெடுமே. | வரம்பெற்ற அவுணர்களின் பெருநகராக விளங்கிய முப்புரங்களும் ஒருசேர மாய்ந்து கெடுமாறு கணை எய்து எரித்தழித்த, தாழ்ந்து தொங்கும் சடைகளையுடைய சங்கரன் எழுந்தருளிய இடமாகிய குருந்தம், மல்–கை, கோங்கு, மாதவி, நல்லகுரா, கடம்பமரம் ஆகியவற்றால் சிறந்து விளங்கும் பசுமையான பொழில் சூழ்ந்த கச்சிமாநகரிலுள்ள திருஏகம்பத்தை அடைந்து தொழ, நம் இடர் கெடும். |

| | | |
|---|---|---|
| 1429. | வண்ணவெண் பொடிப்பூசு மார்பின்<br>வரியர வம்புனைந்து<br>பெண்ணமர்ந் தெரியாடல் பேணிய<br>பிஞ்ஞுகன் மேயவிடம்<br>விண்ணமர் நெடுமாட மோங்கி<br>விளங்கிய கச்சிதன்னுள்<br>திண்ணமாம் பொழில்சூழ்ந்த வேகம்பஞ்<br>சேர விடர்கெடுமே. | வெண்மைநிறம் அமைந்த திருநீறு பூசிய மார்பின்கண் உட–ல் வரிகளையுடைய பாம்பை அணிந்து, உமையம்மையை விரும்பியேற்று, சுடுகாட்டில் எரியாடல் புரியும் தலைக்கோலம் உடையவனாகிய சிவபிரான் மேவிய இடமாகிய விண்ணளாவிய நீண்ட மாட வீடுகள் ஓங்கி விளங்குவதும், என்றும் நிலைபெற்ற பொழில்களால் சூழப்பட்டதுமாகிய கச்சிமாநகரில் உள்ளதுமாகிய திருஏகம்பத்தைச் சென்று வணங்க நம் இடர் கெடும். |
| 1430. | தோலுநூ லுந்துதைந்த வரைமார்பிற்<br>சுடலைவெண் ணீறணிந்து<br>காலன்மாள் வுறக்காலாற் காய்ந்த<br>கடவுள் கருதுமிடம்<br>மாலைவெண் மதிதோயு மாமதிற்<br>கச்சி மாநகருள்<br>ஏலநாறிய சோலைசூ ழேகம்ப<br>மேத்த விடர்கெடுமே. | மான்தோலும் பூணூலும் பொருந்திய மலை போன்ற மார்பின்கண் சுடலையில் எடுத்த வெண்மையான திருநீற்றை அணிந்து மார்க்கண்டேயர்க்காகக் காலன் மாயும்படி காலால் அவனை உதைத்தருளிய கடவுளாகிய சிவபிரான் விரும்புமிடமாகிய, மாலைக் காலத்தில் தோன்றிய வெண்மையான மதி தோயுமாறு உயர்ந்த பெரிய மதில்களை உடைய பெரிய காஞ்சிபுர நகரில் மணம் வீசும் சோலைகளால் சூழப்பட்ட ஏகம்பம் என்னும் திருக்கோயிலை ஏத்த, நம் இடர் கெடும். |
| 1431. | தோடணிம் மலர்க்கொன்றை சேர்சடைத்<br>தூமதி யம்புனைந்து<br>பாடனான் மறையாகப் பல்கணப்<br>பேய்க ளவைசூழ<br>வாடல்வெண் டலையோ டனலேந்தி<br>மகிழ்ந்துட னாடல்புரி<br>சேடல்சேர் க–க்கச்சி யேகம்பஞ்<br>சேர விடர்கெடுமே. | அழகிய இதழ்களோடு கூடிய கொன்றை மலர் மாலை சூடிய சடையின்மேல் தூய பிறை மதியை அணிந்து நான்மறைகளைப் பாடல்களாகக் கொண்டு பேய்க் கணங்கள் பல சூழப் புலால் வற்றிய வெண்தலையோட்டையும், அனலையும் கையிலேந்தி மகிழ்வோடு உமையம்மையுடன் ஆடல் புரிகின்ற பெரியோனாகிய சிவபிரான் எழுந்தருளிய ஆரவாரமுடைய கச்சியில் விளங்கும் திருஏகம்பத்தை நினைக்க, நம் இடர் கெடும். |
| 1432. | சாகம்பொன் வரையாகத் தானவர்<br>மும்மதில் சாயவெய்து<br>ஆகம்பெண் ணொருபாக மாக<br>வரவொடு நூலணிந்து<br>மாகந்தோய் மணிமாட மாமதிற்<br>கச்சி மாநகருள்<br>ஏகம்பத் துறையீசன் சேவடி<br>யேத்த விடர்கெடுமே. | மேரு மலையை வில்லாகக் கொண்டு அசுரர்களின் முப்புரங்களை அழியுமாறு கணை தொடுத்துத் தன் திருமேனியில் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு மார்பில் பாம்பையும், முப்புரி நூலையும் அணிந்து விண்ணளாவிய அழகிய மாடங்களையும், பெரிய மதிலையும் உடைய கச்சிமாநகரில் விளங்கும் திருஏகம்பத்தில் உறையும் ஈசன் திருவடிகளை ஏத்த நம் இடர் கெடும். |

| | | |
|---|---|---|
| 1433. | வாணிலா மதிபுல்கு செஞ்சடை<br>வாளர வம்மணிந்து<br>நாணிடத் தினில்வாழ்க்கை பேணி<br>நகுதலையிற் ப–தேர்ந்<br>தேணிலா வரக்கன்ற னீண்முடி<br>பத்து மிறுத்தவனூர்<br>சேணுலாம் பொழிற்கச்சி யேகம்பஞ்<br>சேர விடர்கெடுமே. | ஒளிவிளங்கும் பிறைமதி பொருந்திய செஞ்சடையில் ஒளி பொருந்திய பாம்பினை அணிந்து இடப்பாகத்தே நாணோடு கூடிய வளாகிய இல்வாழ்க்கைக்குரிய உமையம்மையை விரும்பியேற்றுச் சிரிக்கும் தலையோட்டில் ப–யேற்று, மன உறுதி படைத்தவனாகிய இராவணனின் நீண்ட முடிகள் பத்தையும் நெரித்தவனாகிய சிவபிரானது, வானளாவிய பொழில்களையுடைய கச்சிமா நகரிலுள்ள திருஏகம்பத்தை அடைந்து தொழ நம் இடர் கெடும். |
| 1434. | பிரமனுந் திருமாலுங் கைதொழப்<br>பேரழ லாயபெம்மான்<br>அரவஞ் சேர்சடை யந்தண<br>னணங்கினொ டமருமிடம்<br>கரவில்வண் கையினார்கள் வாழ்க–க்<br>கச்சி மாநகருள்<br>மரவஞ்சூழ் பொழிலேகம் பந்தொழ<br>வல்வினை மாய்ந்தறுமே. | பிரமனும், திருமாலும் தம் கைகளால் தொழுது வணங்கப் பெரிய அனலுருவாகி நின்ற பெருமானும், பாம்பணிந்த சடையையுடைய அந்தணனும் ஆகிய சிவபிரான் தன் தேவியோடு அமரும் இடமாகிய, வஞ்சகம் இல்லாத வள்ளன்மை பொருந்திய கையினை உடையவர்கள் வாழ்கின்ற ஆரவாரமுடைய கச்சி மாநகரில் குங்கும மரங்கள் பொருந்திய சோலைகளால் சூழப்பட்டு விளங்கும் திருஏகம்பத்தைத் தொழ நம் வல்வினைகள் மாய்ந்து கெடும். |
| 1435. | குண்டுபட் டமணா யவரொடுங்<br>கூறைதம் மெய்போர்க்கும்<br>மிண்டர் கட்டிய கட்டுரை<br>யவைகொண்டு விரும்பேன்மின்<br>விண்டவர் புரமூன்றும் வெங்கணை<br>யொன்றினா லவியக்<br>கண்டவன் க–க்கச்சி யேகம்பங்<br>காண விடர்கெடுமே. | பருமையான உடலோடு ஆடையின்றித் திரியும் சமணர்களோடு ஆடையைத் தம் உட–ல் போர்த்து வ–யவராய்த் திரியும் புத்தர்களும் புனைந்து கூறும் உரைகளைப் பொருளுரையாகக் கருதி விரும்பாதீர்கள். பகைவர்களாகிய அவுணர்களின் மூன்று புரங்களையும் கொடிய கணை ஒன்றை எய்து எரித்தழித்தவனாகிய சிவபிரான் எழுந்தருளிய கச்சியின்கண் உள்ள திருஏகம்பத்தைச் சென்று காண, நம் இடர் கெடும். |
| 1436. | ஏரினார் பொழில்சூழ்ந்த கச்சி<br>யேகம்ப மேயவனைக்<br>காரினார் மணிமாட மோங்கு<br>கழுமல நன்னகருள்<br>பாரினார் தமிழ்ஞான சம்பந்தன்<br>பரவிய பத்தும்வல்லார்<br>சீரினார் புகழோங்கி விண்ணவ<br>ரோடுஞ் சேர்பவரே. | அழகு நிறைந்த பொழில்கள் சூழ்ந்த கச்சியேகம்பத்துள் விளங்கும் இறைவனை மேகங்கள் தவழும் அழகிய மாடங்கள் ஓங்கும் கழுமல நன்னகருள் தோன்றிய தமிழ்வல்ல ஞானசம்பந்தன் பரவிப் போற்றிப் பத்துப் பாடல்களையும் ஓத வல்லவர் இவ்வுலகின்கண் சிறந்து புகழால் ஒங்கி விளங்கிப் பின் விண்ணவர்களோடும் சேர்ந்து வாழும் நிலையைப் பெறுவர். |

## 134. திருப்பறியலூர்வீரட்டம்

பண் : மேகராகக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 134

1437. கருத்தன் கடவுள் கனலேந் தியாடும்
நிருத்தன் சடைமே னிரம்பா மதியன்
திருத்த முடையார் திருப்பறி யலூரில்
விருத்த னெனத்தகும் வீரட்டத் தானே.

திருந்திய மனமுடையவர்கள் வாழும் திருப்பறியலூரில் தொன்மையானவனாய் விளங்கும் வீரட்டானத்து இறைவன் அனைத் துலகங்களுக்கும் தலைவனும், கடவுளுமாக இருப்பவன். கையில் கனலேந்தி நடனம் புரிபவன். சடைமுடி மீது இளம்பிறை அணிந்தவன்.

1438. மருந்த னமுதன் மயானத்துண் மைந்தன்
பெருந்தண் புனற்சென்னி வைத்த பெருமான்
திருந்து மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்த மலர்ச்சோலை வீரட்டத் தானே.

ஒழுக்கத்திற் சிறந்த அந்தணர்கள் வாழும் விரிந்த மலர்ச் சோலைகளையுடைய திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து இறைவன், பிணி தீர்க்கும் மருந்தாவான். உயிர் காக்கும் அமுதமாவான். மயானத்துள் நின்றாடும் வ–யோனாவான். மிகப் பெரியதாகப் பரந்து வந்த குளிர்ந்த கங்கையைத் தன் சென்னியில் தாங்கி வைத்துள்ள பெருமானாவான்.

1439. குளிர்ந்தார் சடையன் கொடுஞ்சிலை விற்காமன்
விளிந்தா னடங்க வீந்தெய்தச் செற்றான்
தெளிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
மிளிர்ந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே.

அறிவில் தெளிந்த மறையோர்கள் வாழும் மலர்ச்சோலைகளால் சூழப்பட்ட திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து இறைவன் குளிர்ந்த சடைமுடியை உடையவன். கொடிய வில்லை வளைத்து மலர்க்கணை தொடுத்த மன்மதனை எரித்து இறக்குமாறு செய்து, இரதி தேவி வேண்ட அவனைத் தோற்றுவித்தவன்.

1440. பிறப்பாதி யில்லான் பிறப்பார் பிறப்புச்
செறப்பாதி யந்தஞ் செலச்செய்யுந் தேசன்
சிறப்பா டுடையார் திருப்பறி யலூரில்
விறற்பா ரிடஞ்சூழ வீரட்டத் தானே.

சிறப்புடையவர்கள் வாழ்கின்ற திருப்பறியலூரில் வ–மை பொருந்திய பூதகணங்கள் தன்னைச் சூழ விளங்கும் வீரட்டானத்து இறைவன், பிறப்பும் இறப்பும் இல்லாதவன். இவ்வுலகில் பிறவி எடுக்கும் உயிர்கள் அடையும் பிறப்புக்கும், சிறப்புக்கும் முதலும் முடிவும் காணச் செய்யும் ஒளி வடிவினன்.

1441. கரிந்தா ரிடுகாட்டி லாடுங்க பா–
புரிந்தார் படுதம் புறங்காட்டி லாடும்
தெரிந்தார் மறையோர் திருப்பறிய லூரில்
விரிந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே.

நான்கு வேதங்களையும் ஆராய்ந்தறிந்த மறையவர்கள் வாழும் விரிந்த மலர்ச்சோலை களையுடைய திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து இறைவர், இறந்தவர்களைக் கரிந்தவர்களாக எரிக்கும் சுடுகாட்டில் ஆடும் கபா–.

1442. அரவுற்ற நாணா வனலம்ப தாகச்
செருவுற் றவர்புரந் தீயெழச் செற்றான்
தெருவிற் கொடிசூழ் திருப்பறி யலூரில்
வெருவுற் றவர்தொழும் வீரட்டத் தானே.

தெருக்களில் நடப்பட்ட கொடிகளால் சூழப்பெற்ற திருப்பறியலூரில், பிறவிப் பிணிக்கு அஞ்சுபவர்களாய் தொழப்படும் வீரட்டானத்து இறைவன், வாசுகி என்னும் பாம்பை மேருவில்–ல் நாணாக இணைத்து அனலை அம்பாகக் கொண்டு தன்னோடு போரிட்டவரின் முப்புரங்களைத் தீ எழுமாறு செய்து அழித்தவன்.

| | |
|---|---|
| 1443. நரையார் விடையா னலங்கொள் பெருமான்<br>அரையா ரரவம் மழகா வசைத்தான்<br>திரையார் புனல்சூழ் திருப்பறி யலூரில்<br>விரையார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. | அலைகளையுடைய நீர்க்கால்களால் சூழப்பட்டதும், மணம் பொருந்திய மலர்ச் சோலைகளை உடையதுமான திருப்பறியலூர் வீரட்டத்தில் விளங்கும் இறைவன், வெண்மை நிறம் பொருந்திய விடையேற்றை உடையவன். நன்மைகளைக் கொண்டுள்ள தலைவன். இடையில் பாம்பினைக் கச்சாக அழகுறக் கட்டியவன். |
| 1444. வளைக்கும் மெயிற்றின் னரக்கன் வரைக்கீழ்<br>இளைக்கும் படிதா னிருந்தேழை யன்னம்<br>திளைக்கும் படுகர்த் திருப்பறி யலூரில்<br>விளைக்கும் வயல்சூழ்ந்த வீரட்டத் தானே. | பெண் அன்னங்கள் ஆண் அன்னங்களோடு கூடித்திளைக்கும் ஆழமான மடுக்களை உடையதும், மிகுதியான நெல் விளைவைத் தரும் வயல்களால் சூழப்பட்டதுமான திருப்பறியலூர் வீரட்டானத்து இறைவன், வளைந்த பற்களையுடைய இராவணனைக் கயிலைமலையின்கண் அகப்படுத்தி அவனை வ–மை குன்றியவனாகும்படி கால்விரலால் அடர்த்து எழுந்தருளி இருப்பவனாவான். |
| 1445. விளங்கொண் மலர்மே லயனோத வண்ணன்<br>துளங்கும் மனத்தார் தொழத்தழ லாய்நின்றான்<br>இளங்கொம் பனாளோ டிணைந்தும் பிணைந்தும்<br>விளங்குந் திருப்பறியல் வீரட்டத் தானே. | இளைய பூங்கொம்பு போன்றவளாகிய உமையம்மையோடு இணைந்தும், இடப்பாகமாக அவ்வம்மையைக் கொண்டும் விளங்குபவனாகிய திருப்பறியல் வீரட்டத்து இறைவன், ஒளி விளங்கும் தாமரை மலர்மேல் உறையும் பிரமனும் கடல்வண்ணனாகிய திருமாலும் அச்சத்தால் நடுங்கிய மனத்தையுடையவராய்த் தன்னைத் தொழத் தழல் உருவாய் நின்றவனாவான். |
| 1446. சடையன் பிறையன் சமண்சாக் கியரோ<br>டடையன் பிலாதா னடியார் பெருமான்<br>உடையன் பு–யி னுரிதோ லரைமேல்<br>விடையன் றிருப்பறியல் வீரட்டத் தானே. | திருப்பறியல் வீரட்டத்தில் உறையும் இறைவன், சடையில் பிறை அணிந்தவன். சமணர், புத்தர் ஆகியோர்க்கு அருள்புரிதற்கு உரிய அன்பிலாதவன். பு–யின் தோலை இடைமேல் ஆடையாக உடுத்தவன். விடையேற்றினை உடையவன். |
| 1447. நறுநீ ருகுங்காழி ஞானசம் பந்தன்<br>வெறிநீர்த் திருப்பறியல் வீரட்டத் தானைப்<br>பொறிநீ டரவன் புனைபாடல் வல்லார்க்<br>கறுநீ டவல மறும்பிறப் புத்தானே. | நல்ல நீர் பாயும் சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், மணங்கமழும் நீர்வளமுடைய திருப்பறியல் வீரட்டானத்து உறையும் புள்ளிகளையுடைய நீண்ட பாம்பினை அணிந்த இறைவனைப் புனைந்து போற்றிய இப்பதிகப் பாடல்களை வல்லவர்கட்குப் பெரிய துன்பங்களும் பிறப்பும் நீங்கும். |

## 135. திருப்பராய்த்துறை

பண் : மேகராகக்குறிஞ்சி

முதல் திருமுறை பதிக எண் : 135

| | |
|---|---|
| 1448. நீறுசேர்வதொர் மேனியர்நேரிழை<br>கூறுசேர்வதொர் கோலமாய்ப்<br>பாறுசேர்தலைக் கையர்பராய்த்துறை<br>ஆறுசேர்சடை யண்ணலே. | திருப்பாராய்த்துறையில், கங்கையை அணிந்த சடையினராய் விளங்கும் இறைவர், திருநீறு அணிந்த திருமேனியை உடையவர். அணிகலன்கள் பல புனைந்த உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்ட கோலத்தினர். பருந்துகள் தொடரத் தக்கதாய்ப் புலால் நாற்றம் கூடிய பிரமனது தலையோட்டைக் கையில் கொண்டவர். |

| | |
|---|---|
| 1449. கந்தமாமலர்க் கொன்றைகமழ்சடை<br>வந்தபூம்புனல் வைத்தவர்<br>பைந்தண்மாதவி சூழ்ந்தபராய்த்துறை<br>அந்தமில்ல வடிகளே. | பசுமையான குளிர்ந்த குருக்கத்திக் கொடிகள் சூழ்ந்த திருப்பராய்த்துறையில் விளங்கும் அழிவற்றவராகிய இறைவர், மணங்கமழும் சிறந்த மலர்களும், கொன்றையும் மணக்கும் சடைமுடியின்மேல் பெருக்கெடுத்து வந்த கங்கை நதியை வைத்துள்ளவர். |
| 1450. வேதர்வேதமெல் லாமுறையால்விரித்<br>தோதநின்ற வொருவனார்<br>பாதிபெண்ணுரு வாவர்பராய்த்துறை<br>ஆதியாய வடிகளே. | திருப்பராய்த்துறையில் எல்லா உலகங்களுக்கும் ஆதியாக விளங்குபவராய் எழுந்தருளியுள்ள இறைவர், வேதங்களை அருளிச் செய்தவர். எல்லா வேதங்களையும் முறையாக விரித்துப் பொருள் விளக்கம் அருளிய ஒப்பற்றவர். தம் திருமேனியில் பாதிப் பெண்ணுருவாக விளங்குபவர். |
| 1451. தோலுந்தம்மரை யாடைசுடர்விடு<br>நூலுந்தாமணி மார்பினர்<br>பாலுநெய்பயின் றாடுபராய்த்துறை<br>ஆலநீழ லடிகளே. | திருப்பாராய்த்துறையில் ஆலநீழ–ல் எழுந்தருளிப் பால், நெய் முத–யவற்றை விரும்பி ஆடும் இறைவர், பு–த்தோலைத் தம் இடையிலே ஆடையாக உடுத்தவர். ஒளி பொருந்திய பூணூல் அணிந்த மார்பினை உடையவர். |
| 1452. விரவிநீறுமெய் பூசுவர்மேனிமேல்<br>இரவினின்றெரி யாடுவர்<br>பரவினாரவர் வேதம்பராய்த்துறை<br>அரவமார்த்த வடிகளே. | திருப்பராய்த்துறையில் பாம்பை இடையில் கட்டியவராய் விளங்கும் பரமர், திருநீற்றைத் தம் மேனிமேல் விரவப் பூசியவர். நள்ளிரவில் சுடுகாட்டுள் நின்று எரி ஆடுபவர். வேதங்களால் பரவப் பெற்றவர். |
| 1453. மறையுமோதுவர் மான்மறிக்கையினர்<br>கறைகொள்கண்ட முடையவர்<br>பறையுஞ்சங்கு மொ–செய்பராய்த்துறை<br>அறையநின்ற வடிகளே. | பறை, சங்கு முத–யன முழங்கும் திருவிழாக்கள் நிகழும் திருப்பராய்த்துறையில் எல்லோரும் புகழ்ந்து போற்ற எழுந்தருளிய இறைவர், வேதங்களை ஓதுபவர். மான் கன்றைக் கையின்கண் உடையவர், விடக்கறை கொண்ட கண்டத்தையுடையவர். |
| 1454. விடையுமேறுவர் வெண்பொடிப்பூசுவர்<br>சடையிற்கங்கை தரித்தவர்<br>படைகொள்வெண்மழு வாளர்பராய்த்துறை<br>அடையநின்ற வடிகளே. | திருப்பராய்த்துறையிற் பொருந்தி விளங்கும் இறைவர், விடையேற்றினை ஊர்ந்து வருபவர். வெண்மையான திருநீற்றைப் பூசுபவர். சடையின்மேல் கங்கையைத் தரித்தவர். வெண்மையான மழுவைப் படைக்கருவியாகக் கொண்டவர். |
| 1455. தருக்கின்மிக்க தசக்கிரிவன்றனை<br>நெருக்கினார்விர லொன்றினால்<br>பருக்கினாரவர் போலும்பராய்த்துறை<br>அருக்கன்றன்னை யடிகளே. | திருப்பராய்த்துறையில் எழுந்தருளிய இறைவர், வ–மைமிக்க பத்துத் தலைகளை உடைய இராவணனைத் தம் கால் விரல் ஒன்றினால் நெரித்தவர். தக்கன் வேள்வியில் கதிரவனின் பற்களைத் தவர்த்தவர். |

| | |
|---|---|
| 1456. நாற்றமாமல ரானொடுமாலுமாய்த்<br>தோற்றமும்மறி யாதவர்<br>பாற்றினார்வினை யானபராய்த்துறை<br>ஆற்றன்மிக்க வடிகளே. | திருப்பராய்த்துறையில் ஆற்றல் மிக்கவராய் விளங்கும் அடிகள், மணம் பொருந்திய தாமரை மலரில் விளங்கும் பிரமன், திருமால் ஆகியோரால் அடிமுடி அறியப் பெறாத தோற்றத்தினை உடையவர். தம்மை வழிபடுபவர்களின் வினைகளைப் போக்குபவர். |
| 1457. திருவி—ச்சில தேரமணாதர்கள்<br>உருவிலாவுரை கொள்ளேலும்<br>பருவிலாலெயி லெய்துபராய்த்துறை<br>மருவினான்றனை வாழ்த்துமே. | புண்ணியமில்லாத சிலராகிய புத்தர்களும், சமணர்களாகிய கீழ்மக்களும், கூறும் பொருளற்ற அறவுரைகளைக் கேளாதீர். பெரிய மேலுமலையாகிய வில்லால் முப்புரங்களை எய்தழித்து உலகைக் காத்துத் திருப்பராய்த் துறையில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வாழ்த்துவீர்களாக. |
| 1458. செல்வமல்கிய செல்வர்பராய்த்துறைச்<br>செல்வர்மேற்சிதை யாதன<br>செல்வன்ஞானசம் பந்தனசெந்தமிழ்<br>செல்வமாமிவை செப்பவே. | பொருட் செல்வங்களால் நிறைந்து விளங்கும் சிவஞானச் செல்வர்கள் வாழும் திருப்பராய்த் துறையில் எழுந்தருளிய, வீடுபேறாகிய செல்வத்தையுடைய இறைவன்மீது, அருட்செல்வனாக விளங்கும் ஞானசம்பந்தன் அருளிய, அழிவற்ற இச்செந்தமிழ்ப் பாடல்களை ஓதினால், ஓதின அவர்கட்கு எல்லாச் செல்வங்களும் உண்டாகும். |

## யாழ்மூரி

யாழ்மூரி என்று மேலே குறிப்பிட்ட பண் பற்றிய ஆய்வு இன்னும் முடிந்தபாடில்லை. சிலர் இது பண்ணன்று என்று சொல்லவும் கேட்கிறோம். இதை எந்த இராகத்தில் பாடுவது என்பது இன்னும் விவாதிக்கப்பட்டு வருகிறது. நீலாம்பரியில் சிலரும் அடாணாவில் சிலரும் பாடுவதுண்டு. இது இயலிலும் இசையிலும் அடங்காமல் வருவது பற்றி இதன்பெயர் யாழ்மூரி என்பர். இதுபோலவே மற்றொரு பதிகம் திருத்தாளச்சதி என்ற பெயரில் வியாழக்குறிஞ்சி என்ற பண்ணில் தாள வின்னியாசங்கள் அமைய இவர் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

## 136. திருத்தருமபுரம்

பண் : யாழ்மூரி

முதல் திருமுறை பதிக எண் : 136

1459. மாதர்ம டப்பிடியும் மடவன்னமு மன்னதோர்
நடை யுடைம் மலைமக டுணையென மகிழ்வர்
பூதவி னப்படைநின் றிசைபாடவு மாடுவ
ரவர்படர் சடைந்நெடு முடியதொர் புனலர்
வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொரு துவிம்மிநின் றயலே
தாதவிழ் புன்னை தயங் கும லர்ச்சிறைவண்டறை
யெழில் பொழில் குயில் பயில்தருமபு ரம்பதியே.

விரும்பத்தக்க இளம்பிடியையும், இள அன்னத்தையும் போன்ற நடையினை உடையவளாகிய பார்வதி தேவியைத் தம் துணைவியாகக் கொண்டு மகிழ்பவரும், பூதப்படைகள் நின்ற இசை பாட ஆடுபவரும், விரிந்த சடைகளையுடைய நீண்ட முடிமீது கங்கையை அணிந்தவரும் வேதங்களையும், ஏழிசைகளையும் பாடுபவரும் ஆகிய இறைவர்தம் இடமாக விளங்குவது ஆழ்ந்த கட–ன் வெண்மையான அலைகள் ஆரவாரித்து நுரைகளோடு கரையைப் பொருது விளங்கவும், அதன் அய–ல் புன்னை மரங்களில் பூத்த மகரந்தம் பொருந்திய மலர்களில் வண்டுகள் ஒ–க்கவும் அழகிய பொழில்களில் குயில்கள் பாடவும் விளங்கும் திருத்தருமபுரம் என்னும் நகராகும்.

| | |
|---|---|
| 1460. பொங்குந டைப்புக–ல் விடை யாமவ ரூர்திவெண்<br>பொடி யணிதடங் கொண்மார் பூணூல் புரள<br>மங்கு– யடைத்தவழும் மதி சூடுவ ராடுவர்<br>வளங் கிளர் புனலர வம்வைகிய சடையர்<br>சங்குக டற்றிரையா லுதை யுண்டுச ரிந்திரிந்<br>தொசிந் தசைந் திசைந் துசே ரும்வெண்மணற்<br>குவைமேல்<br>தங்குக திர்ம்மணிநித் தில மெல்–ரு ளொல்கநின்<br>றிலங் கொளிந் நலங் கெழிற் றருமபு ரம்பதியே. | சினம் பொங்கிய நடையினை உடையதாய், உவமை சொல்லுதற்கு வேறொன்று இல்லாததாய் விளங்கும் விடையை ஊர்தியாகக் கொண்டவரும், திருநீறு அணிந்த அகன்ற மார்பின்கண் பூணூல் புரள வானத்தில் தவழும் பிறைமதியைச் சூடி ஆடுபவரும், வளமைகளைத் தருவதாகிய கங்கை, அரவம் ஆகியன தங்கிய சடையினருமாகிய சிவபிரானது இடம், கடல் அலைகளால் அலைக்கப் பெற்ற சங்குகள் சரிந்து இரிந்து, ஒசிந்து, அசைந்து, இசைந்து வெண்மணற் குவிய–ன் மேல் ஏறித் தங்கி ஈனும் ஒளி பொருந்திய முத்துமணிகளால் மெல்–ய இருள் விலகி ஒளி சிறந்து தோன்றும் அழகிய திருத்தருமபுரமாகிய நகரமாகும். |
| 1461. விண்ணுறு மால்வரைபோல் விடை யேறுவ ராறுசூ<br>டுவர் விரி சுரியொளி கொடோடுநின் றிலங்கக்<br>கண்ணுற நின்றொளிருங் கதிர் வெண்மதிக் கண்ணியர்<br>கழிந் தவ ரிழிந் திடும் முடைதலை கலனாப்<br>பெண்ணுற நின்றவர் தம் முரு வம்மயன் மாறொழவ்<br>வரி வையைப் பிணைந் திணைந் தணைந்ததும்<br>பிரியார்<br>தண்ணிதழ் முல்லையொடெண் ணிதழ் மௌவன்ம<br>ருங்கலர்<br>கருங் கழிந் நெருங் குநற் றருமபு ரம்பதியே. | வானளாவிய பெரிய மலை போன்ற விடையின் மேல் ஏறி வருபவரும், கங்கையை அணிந்தவரும், விரிந்து சுருண்டு ஒளிதரும் தோடு விளங்கக் கண்ணைக் கவரும் ஒளிதரும் பிறைமதியாகிய கண்ணியை முடியிற் சூடியவரும், முடைநாறும் தலையோட்டை உண்கலனாகக் கொண்டவரும், உமையம்மையைக் கூடிப் பிணைந்து இணைந்து அணைத்துத் தம் திருமேனியில் ஒரு பாதியாகக் கொண்டவரும், தமது உருவத்தை அயனும் மாலும் தொழ நின்றவருமாகிய சிவபிரானாரது இடம், குளிர்ந்த இதழ்களையுடைய முல்லை மலர்களோடு எட்டு இதழ்களையுடைய காட்டு மல்–கை மலர்கள் மலர்ந்து மணம் வீசுவதும், கரிய உப்பங்கழிகள் நிறைந்ததுமாகிய திருத்தருமபுரம் என்னும் நன்னகராகும். |
| 1462. வாருறு மென்முலைநன் னுத லேழையொ டாடுவர்<br>வளங் கிளர்விளங் குதிங் கள்வைகிய சடையர்<br>காருற நின்றலரும் மலர்க் கொன்றையங் கண்ணியர்<br>கடுவ் விடை கொடி வெடி கொள்காடுறை பதியர்<br>பாருற விண்ணுலகம் பர வப்படு வோரவர்<br>படு தலைப் ப– கொளல் பரிபவந் நினையார்<br>தாருறு நல்லரவம் மலர் துன்னிய தாதுதிர்<br>தழை பொழின் மழைந் நுழை தருமபு ரம்பதியே. | கச்சணிந்த மென்மையான தனங்களையுடைய உமையம்மையோடு கூடி நடனம் ஆடுபவரும், உலகிற்கு வளம் சேர்க்கும் நிலவொளியைத் தரும் மதி சூடிய சடையினரும், கார்காலத்தே மலரும் கொன்றை மாலையைச் சூடியவரும், விரைந்து செல்லும் விடையைக் கொடியாகக் கொண்டவரும், அச்சந்தரும் சுடுகாட்டைத் தமக்குரிய இடமாகக் கொண்டவரும், மண்ணுலகத்தினர், விண்ணுலகத்தினர்களால் போற்றப்படுபவரும், அவமானம் எனக் கருதாது அழிந்துபட்ட தலையோட்டில் ப–கொள்பவரும், பாம்பை மாலையாக அணிந்தவரும் ஆகிய சிவபிரானார் எழுந்தருளிய பதி, மகரந்தங்களை உதிர்க்கும் மலர்கள் நிறைந்த, தழைகள் செறிந்த, மேகங்கள் தவழும் பொழில்கள் சூழ்ந்த திருத்தருமபுரம் என்னும் நகரமாகும். |

| | |
|---|---|
| **1463.** நேருமவர்க்குணரப் புகி –ல்லைநெ டுஞ்சடைக்<br>கடும் புனல் படர்ந் திடம் படுவ்வதொர் நிலையர்<br>பேருமவர்க்கெனையா யிர முன்னைப்பி றப்பிறப்<br>பிலா தவ ருடற் றடர்த் தபெற்றியா ரறிவார்<br>ஆரமவர்க்கழல்வா யதொர் நாகம ழஃகுறவ்<br>வெழுஃகொழும் மலர் கொள்பொன் னிதழிநல்<br>லலங்கல்<br>தாரமவர்க்கிமவான் மக ளூர்வது போர்விடை<br>கடிபடு செடி பொழிற் றருமபு ரம்பதியே. | ஆராயுமிடத்து அவருக்கு உவமையாகச் சொல்லத்தக்கவர் யாரும் இல்லை. கடிதாக வந்த கங்கைக்குத் தம் நீண்ட சடையை இடமாகக் கொடுத்த நிலையினர் அவர். அவருக்குப் பெயர்களோ பல ஆயிரம். முன்தொட்டு அவருக்குப் பிறப்பு இறப்பு இல்லை. தம்மை எதிர்த்தவர்களோடு சினந்து அவர்களைக் கொன்ற அவரது பெருவ–யை யார் அறிவார்? தீயின் தன்மையுடைய நஞ்சினைக் கொண்ட நாகம் அவருக்கு ஆரம். செழுமையான பொன் போன்ற கொன்றை மலர், அவருக்கு மாலையாகும். இமவான் மகளாகிய பார்வதி அவருக்கு மனைவி. அவர் ஊர்ந்து செல்வது போர்ப் பயிற்றி உடைய இடபம். அவர் தங்கியுள்ள இடம் மணம் பொருந்திய ஒளிகளையுடைய பொழில்களால் சூழப்பட்ட தருமபுரம் என்னும் பதியாகும். |
| **1464.** கூழையங் கோதைகுலா யவ டம்பிணை புல்கமல்<br>குமென் முலைப் பொறி கொள்பொற் கொடியிடைத்<br>துவர்வாய்<br>மாழையொண் கண்மடவா ளையொர் பாகம கிழ்ந்தவர்<br>வலம் ம–படை விடை கொடிகொடும் மழுவ்வாள்<br>யாழையும் மெள்கிடவே ழிசை வண்டுமு ரன்றினந்<br>துவன் றிமென் சிறஃகறை யுறந்நறவ்வி ரியுந்நல்<br>தாழையு ஞாழலுந்நீ டிய கான– னள்ள–<br>சைபுள்ளினந் துயில் பயி றருமபு ரம்பதியே. | மலர்மாலை சூடிய கூந்தலையும், தன் கணவரால் தழுவப்பெறும் மெல்–ய தனங்களையும், தேமல்களோடு கூடிய மேனியையும், கொடி போன்ற இடையையும், பவளம் போன்ற வாயையும், மாவடு போன்ற ஒளி விளங்கும் கண்களையும் உடைய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டு மகிழ்ந்தவரும், வெற்றியைத் தரும் படைக்கலனாக மழுவாளைக் கொண்டவரும் விடையைக் கொடியாகக் கொண்டவரும் ஆகிய சிவபிரான் உறையும் பதி, யாழிசையையும் வெல்லுமாறு வண்டுகள் ஏழிசை முரன்று மெல்–ய சிறகுகளால் ஒ–த்துச் சூழும் தேன் நிறைந்த நல்ல தாழை மரங்களும், பு–நகக் கொன்றையும் நிறந்த கடற்கரைச் சோலைகளிலுள்ள சேற்று நிலங்களில் இசைபாடும் பறவையினங்கள் துயில்கொள்ளும் தலமாகிய தருமபுரமாகும். |
| **1465.** தேமரு வார்குழலன் னந டைப்பெடை மான்விழித்<br>திருந் திழை பொருந் துமே னிசெங்கதிர் விரியத்<br>தூமரு செஞ்சடையிற் றுதை வெண்மதி துன்றுகொன்<br>றைதொல்புனல் சிரங் கரந் துரித்தோ லுடையர்<br>காமரு தண்கழிநீ டிய கானல கண்டகங்<br>கடல் லடை கழி யிழி யமுண்டகத் தயலே<br>தாமரை சேர்குவளைப் படு கிற்கழு நீர்மலர்<br>வெறி கமழ் செறிவ் வயற் றருமபு ரம்பதியே. | இனிமையும், மணமும் பொருந்திய நீண்ட கூந்தல், அன்னம் போன்ற நடை, பெண்மான் போன்ற விழி இவற்றை உடையவரும் திருத்தம் பெற்ற அணிகலன்கள் பூண்டவரும் ஆகிய உமையம்மை ஒருபாலாகப் பொருந்திய மேனியனும், செவ்வொளி விரியும் தூய செஞ்சடையில் வெண்மையான பிறைமதி, நிறைந்த கொன்றை மலர், பழமையான கங்கை நீர், தலைமாலை ஆகியவற்றை மறைத்துச் சூடி, உரித்து உடுத்த தோல்களை உடையாகக் கொண்டவனும் ஆகிய இறைவனது பதி அழகிய குளிர்ந்த உப்பங் கழிகளை அடுத்துள்ள கடற்கரைச் சோலைகளில் தாழை மரங்களும், கட–னிடத்திருந்து பெருகிவரும் உப்பங் கழிகளிடத்து நீர்முள்ளிகளும், நீர் நிலைகளில் தாமரை, குவளை, செங்கழுநீர் ஆகியவற்றின் மலர்களும் மணம் வீசுவதும், வயல்கள் செறிந்ததுமாகிய தருமபுரமாகும். |

| | |
|---|---|
| 1466. தூவண நிறகலம் பொ– யவ்விரை புல்கமல்<br>குமென் மலர் வரை புரை திரள்புயம் மணிவர்<br>கோவண மும்முழையின் னத ளும்முடை யாடையர்<br>கொலைம் ம– படை யொர்சூ லமேந்திய குழகர்<br>பாவண மாவலறத் தலை பத்துடை யவ்வரக்<br>கனவ் வ– யொர்கவ் வைசெய் தருள்புரி தலைவர்<br>தாவண வேறுடையெம் மடி கட்கிடம் வன்றடங்<br>கடல் –டுந் தடங் கரைத் தருமபு ரம்பதியே. | தூய வெண்ணிறம் பொருந்திய திருநீறு மார்பின் கண் விளங்க, மலை போலத் திரண்ட தோள்களில் மணம் நிறைந்து செறிந்த மென்மையான மலர்மாலையை அணிவர். கோவணத்தையும் மான் தோலையும் ஆடைகளாக உடையவர். கொல்லும் தொழி–ல் வல்ல ஆயுதமாக ஓர் சூலத்தை ஏந்திய இளையர். பத்துத் தலைகளை உடைய அரக்கனாகிய இராவணன், பாடல்கள் பாடி அலறுமாறு அவனது வ–மையைச் செற்றுப் பின் அருள் புரிந்த தலைவர். தாவிச் செல்லும் இயல்புடைய ஆனேற்றைத் தம் ஊர்தியாகக் கொண்டவர். அவ் அடிகட்கு இடம், வ–ய பெரிய கட–ன் அலைகள் சேர்ந்த பெரிய மணற்கரையில் விளங்கும் தருமபுரம் என்னும் பதியாகும். |
| 1467. வார்ம– மென்முலைமா தொரு பாகம தாகுவர்<br>வளங் கிளர் மதி யர வம்வைகிய சடையர்<br>கூர்ம– சூலமும்வெண் மழு வும்மவர் வெல்படை<br>குனி சிலைதனிம் மலை யதேந்திய குழகர்<br>ஆர்ம– யாழிகொள்செல் வனு மல்–கொ டாமரைம்<br>மிசை யவன் னடிம் முடி யளவுதா மறியார்<br>தார்ம– கொன்றையலங் கலு கந்தவர் தங்கிடந்<br>தடங் கடல் –டுந் திரைத் தருமபு ரம்பதியே. | கச்சணிந்த மென்மையான தனங்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவர். பிறைமதி, பாம்பு ஆகியவை தங்கும் சடையினர். கூரிய சூலமும், வெண்ணிறமான மழுவும் அவர் வெற்றி கொள்ளுதற்குரிய படைக்கலங்களாகும். ஒப்பற்ற மேரு மலையை வளைத்து வில்லாக ஏந்திய இளைஞர். ஆரக்கால் பொருந்திய சக்கராயுதத்தைக் கொண்ட திருமாலும், அகஇதழ்களை உடைய தாமரை மலரில் உறையும் பிரமனம் தம்முடைய அடிமுடிகளின் அளவுகளைத் தாம் அறியாவாறு அயரும்படி செய்தவர் அவர். கொத்தாகப் பூக்கும் கொன்றை மலரால் தொடுத்த மாலையை விரும்புபவர். அப்பெருமானார் தங்கியுள்ள இடம், பெரிய கட–ன் அலைகள் வந்து தழுவிச் செல்லும் தருமபுரம் என்னும் பதியாகும். |
| 1468. புத்தர்க டத்துவர்மொய்த் துறி புல்கிய கையர்பொய்ம்<br>மொழிந் தழி வில்பெற் றியுற் றநற்றவர் புலவோர்<br>பத்தர்க ளத்தவமெய்ப் பயனாக வுகந்தவர்<br>நிகழ்ந் தவர் சிவந் தவர் சுடலைப்பொடி யணிவர்<br>முத்தன வெண்ணகையொண் மலை மாதுமை பொன்னணி<br>புணர்ம் முலை யிணை தணை யணைவதும் பிரியார்<br>தத்தரு வித்திரளுந் திய மால்கட லோதம்வந்<br>தடர்ந் திடுந் தடம்பொழிற் றருமபு ரம்பதியே. | புத்தர்களாகிய தத்துவாதிகளும், உறிகளை ஏந்திய கையினராய்த் திரியும் சமணர்களும் கூறும் பொய் மொழிகளினின்று நீங்கிய நல்ல தவத்தை உடையவர்களும், புலவர்கள் பக்தர்கள் ஆகியோரின் தவத்தை மெய்ப் பயனாக உகந்தவரும், அன்புக்கு நெகிழ்பவரும், வன்புக்குச் சினப்பவரும் சுடலைப் பொடி அணிபவரும், முத்துப் போன்ற வெண்மையான பற்களை உடைய ஒளி பொருந்திய மலை மாதாகிய பார்வதி தேவியாரின் ஒன்றோடு ஒன்று செறிந்த தனங்கள் இரண்டையும் துணையாக் கொண்டு அவற்றைப் பிரியாதவரும் ஆகிய சிவபிரானாரது பதி, தவழும் அலைகளை உடைய பெரிய கட–ன் ஓதநீர் வந்து பொருந்தும் தருமபுரம் ஆகும். |

| | |
|---|---|
| 1469. பொன்னெடு நன்மணிமா ளிகை சூழ்விழ வம்மலீ<br>பொரூஉம் புன நிரூஉ வமர் புகல்–யென் றுலகில்<br>தன்னொடு நேர்பிறவில் பதிஞானசம் பந்தனஃ<br>துசெந் தமிழ்த் தடங் கடற் றருமபுரம் பதியைப்<br>பின்னெடு வார்சடையிற் பிறை யும்மர வும்முடை<br>யவன் பிணை துணை கழல் கள்பேணுத லுரியார்<br>இன்னொடு நன்னுலகெய் துவ ரெய்திய போகமும்<br>முறு வர்கள் எிடர் பிணி துயரணைவ் விலரே. | பொன்னால் இயன்ற நெடிய நல்ல மணிகள் இழைத்த மாளிகைகள் சூழ்ந்ததும், திருவிழாக்கள் ம–ந்ததும், கரைகளை மோதும் நிறைந்த நீர்வளம் உடையதும், திருமகள் உறைவதுமான புக– என்னும், தனக்கு உவமை சொல்ல இயலாத பதியின் மன்னனாகிய ஞானசம்பந்தனுடைய பரந்து விரிந்து கடல் போன்ற செந்தமிழாகிய பாமாலைகளால், ஒன்றோடு ஒன்று பின்னி நீண்டுள்ள சடைமுடியில் பிறையையும், பாம்பையும் அணிந்துள்ளவனாகிய சிவபிரானுடைய பிணைந்துள்ள இரண்டு திருவடிகளையும் போற்றி அன்பு செய்பவர், இனிய பெரிய நல்லுலகை எய்துவர். அடையத் தக்கனவாய் போகங்களையும் பெறுவர். இடர் செய்யும் பிணி துயர் முத–யன நீங்கி என்றும் இன்பம் உறுவர். |

*திருச்சிற்றம்பலம்*

முதல் திருமுறை

# பாட்டு முதற் குறிப்பகராதி

# தல அட்டவணை

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் | பக்கம் |
|---|---|---|---|---|
| 1. | அச்சிறுபாக்கம் | 77 | பொன்றிரண் | |
| 2. | அண்ணாமலை | 10 | உண்ணாமுலை | |
| 3. | ,, | 69 | பூவார்மலர் | |
| 4. | அதிகை வீரட்டம் | 46 | குண்டைக்குறள் | |
| 5. | அம்பர்மாகாளம் | 83 | அடையார்புரம் | |
| 6. | அன்பிலாலந்துறை | 33 | கணைநீடெரி | |
| 7. | அன்னியூர் | 96 | மன்றியூரிறை | |
| 8. | ஆப்பனூர் | 88 | முற்றும்சடை | |
| 9. | ஆரூர் | 91 | சித்தந்தெளி | |
| 10. | ,, | 105 | பாடலனான் | |
| 11. | ஆலங்காடு | 45 | துஞ்சவரு | |
| 12. | ஆலவாய் | 94 | நீலமாமிடற் | |
| 13. | ஆவூர்ப்பசுபதீச்சரம் | 8 | புண்ணியர் | |
| 14. | இடும்பாவனம் | 17 | மனமார்தரு | |
| 15. | இடைச்சுரம் | 78 | வரிவளர் அவிர் | |
| 16. | இடைமருதூர் | 32 | ஓடேகலனுண் | |
| 17. | ,, | 95 | தோடொர்கா | |
| 18. | ,, | 110 | மருந்தவன் | |
| 19. | ,, | 121 | நடைமருதிரி | |
| 20. | ,, | 122 | விரிதருபு- | |
| 21. | இராமனதீச்சரம் | 115 | சங்கொளிர் | |
| 22. | இலம்பையங்கோட்டூர் | 76 | மலையினார் | |
| 23. | ஈங்கோய்மலை | 70 | வானத்துயர் | |
| 24. | ஊறல் | 106 | மாறிலவுணர் | |
| 25. | எருக்கத்தம்பு-யூர் | 89 | படையார்தரு | |
| 26. | ஐயாறு | 36 | கலையார்மதி | |
| 27. | ,, | 120 | பணிந்தவ ரரு | |
| 28. | ,, | 130 | புலனைந்தும் | |
| 29. | ஓத்தூர் | 54 | பூத்தேர்ந் தாயன | |
| 30. | கச்சி ஏகம்பம் | 133 | வெந்தவெண் | |
| 31. | கடைமுடி | 111 | அருத்தனை | |
| 32. | கண்ணார்கோயில் | 101 | தண்ணார்திங்க | |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் | பக்கம் |
|---|---|---|---|---|
| 33. | கயிலாயம் | 68 | பொடிகொள் | |
| 34. | கரவீரம் | 58 | அரியு நம் | |
| 35. | கழுக்குன்றம் | 103 | தோடுடையான் | |
| 36. | கள்ளில் | 119 | முள்ளின்மேல் | |
| 37. | கற்குடி | 43 | வடந்திகழ் | |
| 38. | காட்டுப்பள்ளி (கீழை) | 5 | செய்யருகே | |
| 39. | காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் | 65 | அடையார்தம் | |
| 40. | காழி (திருப்பிரமபுரம்) | 1 | தோடுடைய | |
| 41. | ,, | 63 | எரியார் மழு | |
| 42. | ,, | 90 | அரனையுள் | |
| 43. | ,, | 117 | காடதணி | |
| 44. | ,, | 127 | பிரமபுரத் | |
| 45. | ,, | 128 | ஓருருவாயினை | |
| 46. | காழி (வேணுபுரம்) | 9 | வண்டார்குழல் | |
| 47. | ,, (புக-) | 30 | விதியாய்விளை | |
| 48. | ,, ,, | 4 | மைம்மரு | |
| 49. | ,, ,, | 104 | ஆடலரவசை | |
| 50. | ,, (வெங்குரு) | 75 | காலைநன் | |
| 51. | ,, (தோணிபுரம்) | 60 | வன்டரங்க | |
| 52. | ,, (சிரபுரம்) | 47 | பல்லடைந்த | |
| 53. | ,, ,, | 109 | வாருறுவன | |
| 54. | ,, (புறவம்) | 74 | நரவநிறை | |
| 55. | ,, ,, | 97 | எய்யாவென் | |
| 56. | ,, (சண்பை) | 66 | பங்கமேறு | |
| 57. | ,, (சீகாழி) | 24 | பூவார்கொன்றை | |
| 58. | ,, ,, | 34 | அடலேறமரும் | |
| 59. | ,, ,, | 81 | நல்லார்தீ | |
| 60. | ,, ,, | 102 | உரவார்கலை | |
| 61. | ,, (கழுமலம்) | 19 | பிறையணிபடர் | |
| 62. | ,, ,, | 79 | அயிலுறு | |
| 63. | ,, ,, | 126 | பந்தத்தால் | |
| 64. | ,, ,, | 129 | சேவுயரும் | |
| 65. | கானூர் | 73 | வானார்சோதி | |
| 66. | குடந்தைக்காரோணம் | 72 | வாரார்கொங்கை | |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் | பக்கம் |
|---|---|---|---|---|
| 67. | குரங்கணில்முட்டம் | 31 | விழுநீர் | |
| 68. | குற்றாலம் | 99 | வம்பார்குன்றம் | |
| 69. | கொடிமாடச்செங்குன்றூர் | 107 | வெந்தவெண் | |
| 70. | கொடுங்குன்றம் | 14 | வானிற்பொ- | |
| 71. | கோயில் | 80 | கற்றாங்கெரி | |
| 72. | கோலக்கா | 23 | மடையில்வாளை | |
| 73. | கோளி- | 62 | நாளாய போகாமே | |
| 74. | சிராப்பள்ளி | 98 | நன்றுடையானை | |
| 75. | சிவபுரம் | 21 | புவம்வளி | |
| 76. | ,, | 112 | இன்குர-சை | |
| 77. | ,, | 125 | கலைம-யகல் | |
| 78. | செங்காட்டங்குடி | 61 | நறைகொண்ட | |
| 79. | செம்பொன்பள்ளி | 25 | மருவார்குழ- | |
| 80. | சேய்ஞலூர் | 48 | நூலடைந்த | |
| 81. | சோபுரம் | 51 | வெங்கணா | |
| 82. | சோற்றுத்துறை | 28 | செப்ப நெஞ்சே | |
| 83. | தருமபுரம் | 136 | மாதர்மடப்பிடி | |
| 84. | தூங்கானைமாடம் | 59 | ஒடுங்கும் பிணி | |
| 85. | நல்லம் | 85 | கல்லானிழல் | |
| 86. | நல்லூர் | 86 | கொட்டும்பறை | |
| 87. | நள்ளாறு | 7 | பாடக மெல்லடி | |
| 88. | ,, | 49 | போகமார்த்த | |
| 89. | நறையூர்ச்சித்தீச்சரம் | 29 | ஊருலாவு | |
| 90. | ,, | 71 | பிறைகொள் | |
| 91. | நாகைக்காரோணம் | 84 | புனையும்விரி | |
| 92. | நின்றியூர் | 18 | சூலம்படை | |
| 93. | நெடுங்களம் | 52 | மறையுடையாய் | |
| 94. | நெய்த்தானம் | 15 | மையாடிய | |
| 95. | பரங்குன்றம் | 100 | நீடலர்சோதி | |
| 96. | பராய்த்துறை | 135 | நீறுசேர்வதோர் | |
| 97. | பருப்பதம் | 118 | சுடுமணியுமிழ் | |
| 98. | பழனம் | 67 | வேதமோதி | |
| 99. | பறியலூர் | 134 | கருத்தன் கடவுள் | |
| 100. | பனையூர் | 37 | அரவச்சடை | |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் | பக்கம் |
|---|---|---|---|---|
| 101. | பாச்சிலாச்சிராமம் | 44 | துணிவளர் | |
| 102. | பாதாளீச்சரம் | 108 | மின்னியல் | |
| 103. | பாம்புரம் | 41 | சீரணிதிகழ் | |
| 104. | பாற்றுறை | 56 | காரார்கொன்றை | |
| 105. | புகலூர் | 2 | குறிகலந்த | |
| 106. | புத்தூர் | 26 | வெங்கள்விம்மு | |
| 107. | புள்ளமங்கை | 16 | பாலுந்துறு | |
| 108. | புன்கூர் | 27 | முந்திநின்ற | |
| 109. | பூவணம் | 64 | அறையார் | |
| 110. | பேணுபெருந்துறை | 42 | பைம்மா நாகம் | |
| 111. | மயிலாடுதுறை | 38 | கரவின்றி | |
| 112. | மருகல் | 6 | அங்கமும் | |
| 113. | மறைக்காடு | 22 | சிலைதனை | |
| 114. | மாற்பேறு | 55 | ஊறியார் | |
| 115. | மாற்பேறு | 114 | குருந்தவன் | |
| 116. | முதுகுன்றம் | 12 | மத்தாவரை | |
| 117. | ,, | 53 | தேவராயும் | |
| 118. | ,, | 93 | நின்றுமலர் | |
| 119. | ,, | 131 | மெய்த்தாறு | |
| 120. | வடுகூர் | 87 | சுடுகூரெரி | |
| 121. | வ-தாயம் | 3 | பத்தரோடு | |
| 122. | வ-வலம் | 50 | ஒல்லையாறி | |
| 123. | ,, | 123 | பூவியல்புரி | |
| 124. | வல்லம் | 113 | எரித்தவன் | |
| 125. | வாழ்கொளிபுத்தூர் | 40 | பொடியுடை | |
| 126. | வியலூர் | 13 | குரவங்கமழ் | |
| 127. | வீழிமிழலை | 11 | சடையார்புனல் | |
| 128. | ,, | 20 | தடநில | |
| 129. | ,, | 35 | அரையார்விரி | |
| 130. | ,, | 82 | இரும்பொன் | |
| 131. | ,, | 92 | வாசி தீரவே | |
| 132. | ,, | 124 | அலர்மகள் | |
| 133. | ,, | 132 | ஏரிசையும் | |
| 134. | வேடகளம் | 39 | அந்தமுமாதி | |
| 135. | வேற்காடு | 57 | ஒள்ளிதுள் | |
| 136. | பொது | 116 | அவ்வினைக் | |

